# பாபாசாகேப்

# டாக்டர் அம்பேத்கர்

நூல் தொகுப்பு :

தொகுதி 29



டாக்டர் பாபாசாகேப்

# அம்பேத்கர்:

## பேச்சும் எழுத்தும்

நூல் தொகுப்பு:

## தொகுதி 29



டாக்டர் பாபாசாகேப் அம்பேத்கர்

தோற்றம்: ஏப்ரல் 14, 1891 பரிநிர்வாணம் : டிசம்பர் 6, 1956

கத்தியவார் கிராமத்தின் ஒரு தீண்டத்தகாதவரான பள்ளி ஆசிரியருக்கு நேர்ந்த சோக நிகழ்ச்சி இது. அண்மையில் பிரசவித்த தன் மனைவிக்குச் சிகிச்சை அளிக்க ஓர் இந்து மருத்துவரைச் சம்மதிக்க வைப்பதில் அவருக்கு நேர்ந்த இன்னல்களையும், மருத்துவ உதவியின்றி எப்படி மனைவியும் குழந்தையும் இறந்தனர் என்பதையும் அவர் பின்வருமாறு கூறுகிறார்:

இந்த மாதம் 5ம் தேதி எனக்கு ஒரு குழந்தை பிறந்தது. 7ம் தேதி அது நோய்வாய்ப்பட்டு வயிற்றுப் போக்கால் அவதிப்பட்டது. அதனுடைய நாடித் துடிப்பு குறைந்தது. நெஞ்சும் வீக்கமடைந்தது. மூச்சு விடுவதும் கடினமாகி விலா எலும்புகளிலும் வலி எடுக்க ஆரம்பித்தது. நான் ஒரு மருத்துவரை அழைக்கச் சென்றேன். ஆனால் அவர் ஒரு ஹரிஜன் வீட்டுக்கு வரவோ, குழந்தையைப் பரிசோதனை செய்யவோ தயாரில்லை என்று கூறிவிட்டார். பிறகு நான் நகர்சேத் மற்றும் கெராசியாவிடம் சென்று எனக்கு உதவுமாறு கெஞ்சிக் கேட்டுக் கொண்டேன். நான் மருத்துவருக்குக் கொடுக்க வேண்டிய அவரது கட்டணமான இரண்டு ரூபாய்க்கு நகர்சேத் உத்தரவாதம் அளித்தார். ஹரிஜனக் குடியிருப்புக்கு வெளியிலேதான் அவர்களை மருத்துவப் பரிசோதனை செய்ய முடியும் என்ற நிபந்தனையின்பேரில் மருத்துவர் வந்தார். என் மனைவியைப் பிறந்த குழந்தையுடன் குடியிருப்புக்கு வெளியே கொண்டு சென்றேன். பிறகு மருத்துவர் ஒரு வெப்பமானியை ஒரு முஸ்லீமிடம் கொடுக்க, அவர் அதை என்னிடம் கொடுத்தார். நான் அதை என் மனைவியிடம் கொடுத்தேன். அதை உபயோகித்த பிறகு அதேமுறையில் அது திரும்பக் கொடுக்கப்பட்டது. அப்பொழுது இரவு சுமார் 8 மணி. விளக்கு வெளிச்சத்தில் வெப்பமானியைப் பார்த்துவிட்டு நோயாளிக்கு நிமோனியா ஜுரம் என்று மருத்துவர் கூறினார். பிறகு அவர் போய்விட்டார். மருந்துகளை அனுப்பினார். கடையிலிருந்து கொஞ்சம் ஆளிவிதைகளைக் கொண்டு வந்து நோயாளிக்குப் பூசினேன். நான் மருத்துவருக்கு இரண்டு ரூபாய் கட்டணத்தைக் கொடுத்திருந்தும் அதற்குப் பிறகு அவர் அவளைப் பார்க்க மறுத்துவிட்டார். நோய் ஆபத்தானது. கடவுள் மட்டுமே எங்களைக் காப்பாற்ற முடியும்.

எனது வாழ்க்கையின் ஒளி மறைந்துவிட்டது. இன்று மதியம் இரண்டு மணிக்கு அவள் இறந்துவிட்டாள்...

— **டாக்டர் பாபாசாகேப் அம்பேத்கர்**
**"விசாவுக்காகக் காத்திருத்தல்".**

This Volume XXIX in Tamil forms the Second part of the English Edition Volume 13 Part II of **Dr. Babasaheb Ambedkar - Writings and Speeches - Published by the Education Department, Government of Maharashtra,** 1992.

முதற் பதிப்பு: மார்ச், 2002
விஷு ஆண்டு, பங்குனி



**விலை** : ரூ. 40/-

**நூலகப் பதிப்பு :** ரூ. 115-

**வெளியீட்டாளர்:**
டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன்
சமூக நீதி மற்றும் உரிமையளிப்பு அமைச்சகம்,
இந்திய அரசு,
15, ஜன்பத் சாலை,
புதுடில்லி.

**விற்பனை நிலையம்:**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிமிடெட்.,
41B, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை - 98.

அச்சிட்டோர்:
**பாவை பிரிண்டர்ஸ் (பி) லிமிடெட்.,**
142, ஜானி ஜான் கான் ரோடு,
ராயப்பேட்டை, சென்னை - 600 014.
தொலைபேசி: 8532441, 8532973

# ஆலோசனைக்குழு

**மாண்புமிகு டாக்டர் சத்தியநாராயண ஜாட்டியா,**
*சமூக நீதி மற்றும் உரிமையளிப்புத்துறை அமைச்சர்,*
*இந்திய அரசு*

**டாக்டர் பிந்தேஸ்வர் பாதக்,** பிஎச்.டி., டி.லிட்.,
செயல் துணைத்தலைவர்,
டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன்,
புதுடில்லி.

**திரு. சத் பால்**
இயக்குநர்,
டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன்,
புதுடில்லி.

*நிர்வாக ஆசிரியர் (தமிழ்):*
*ரா. ரங்கசாமி (மாஜினி)*
சென்னை, தமிழ்நாடு.

ஆங்கில நூல் வெளியீடு:

*கல்வித்துறை,*
*மகாராஷ்டிர மாநில அரசு, 1992.*

ஆங்கில நூல் தொகுப்பாளர்:

**திரு. வஸந்த் மூன்**
*மும்பை*

தமிழ் நூல் நிர்வாக ஆசிரியர்:

*ரா. ரங்கசாமி (மாஜினி)*

மொழிபெயர்ப்பாளர்:

**திரு. தியாகு**

ஒப்புநோக்கியோர்:

*திரு. ரா. ரங்கசாமி (மாஜினி)*

பிழைதிருத்த உதவி:

**திரு. வி. இராதாகிருஷ்ணன்**

# அணிந்துரை

நமது இந்திய நாட்டின் அரசியல் சாசனம் உலகின் தலை சிறந்த அரசியல் சாசனங்களில் ஒன்றாகத் திகழ்கிறது. இத்தகைய சிறப்புமிக்க அரசியல் சாசனத்தை உருவாக்கி, செழுமைப் படுத்தி, வடிவமைத்துத் தந்த பெருமை பிரதானமாக பாரத ரத்னா பாபா சாகேப் டாக்டர் அம்பேத்கரையும், அரசியல் சாசன வரைவுக் குழுவையும் சேரும். அரசியல் நிர்ணய சபையின் பரிசீலனைக்கு அவர் சமர்ப்பித்த இந்திய அரசியல் சாசனத்தின், இந்திய அரசமைப்பின் முன்வரைவு இந்தத் தொகுதியில் அப்படியே வெளியிடப்பட்டுள்ளது.

மேலும், இந்த முன்வரைவு குறித்து அரசியல் நிர்ணய சபையில் நடைபெற்ற காரசாரமான, கருத்தாழமும் செறிவுமிக்க விவாதங்களும், அந்த முன்வரைவுக்குச் சமர்ப்பிக்கப்பட்ட திருத்தங்களும் இத்தொகுதியில் இடம்பெற்றுள்ளன. விவாதங் களின்போது எழுப்பப்பட்ட பல்வேறு பிரச்சினைகளுக்கும், ஐயங்களுக்கும், கேள்விகளுக்கும், சர்ச்சைகளுக்கும் டாக்டர் அம்பேத்கர் ஆணித்தரமாகவும், அழுத்தம் திருத்தமாகவும், அசைக்க மறுக்க முடியாத ஆதாரங்களுடனும் பதிலளித்து அனைவரது பாராட்டையும் பெற்றிருப்பதையும் காண்கிறோம்.

டாக்டர் அம்பேத்கர் நமது பாரதத் திருநாட்டின் ஈடு இணையற்ற சட்ட மேதைகளில் ஒருவர் என்பதை மெய்ப்பித்துக் காட்டியுள்ளார். டாக்டர் அம்பேத்கர் நூல்களின் தமிழாக்கம் வாசகர்கள் பல்வேறு பயனுள்ள விஷயங்களைப் பற்றித் தெரிந்து புரிந்து கொள்வதற்கும், எல்லோரும் எல்லாமும் பெற்று இன்புற்று வாழும் புதியதோர் சமுதாயம் உருவாகும் திசை வழியில் நாடு முன்னேறுவதற்கும் உதவும் என்றும் நம்புகிறோம்.

நல்வாழ்த்துக்கள்!

(ஒப்பம்) **டாக்டர் சத்திய நாராயண ஜாட்டியா**
சமூக நீதி மற்றும்
உரிமையளிப்புத்துறை அமைச்சர்,
இந்திய அரசு.

புதுடில்லி

# பதிப்புரை

மகாராஷ்டிர மாநில அரசு ஆங்கில மொழியில் வெளியிட்டு வரும் டாக்டர் பாபாசாகேப் அம்பேத்கர் அவர்களின் நூல் தொகுதிகளை இந்தியிலும் தமிழ் உட்பட ஏனைய இந்திய மொழிகளிலும் மொழிபெயர்த்து வெளியிடும் பணியை இந்திய அரசின் நல அமைச்சகத்தைச் சார்ந்த டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன் மேற்கொண்டு நிறைவேற்றி வருகின்றது. இந்தப் பணி மக்களிடையே மிகுந்த வரவேற்பைப் பெற்றிருப்பது மகிழ்ச்சி அளிப்ப தாகும்.

டாக்டர் அம்பேத்கர் அவர்களின் நூல் தொகுப்பு வரிசை யில் 29-வது தொகுதியை நாட்டு மக்களுக்கு அளிப்பதில் பெருமகிழ்ச்சி கொள்கிறோம். உயர்ந்ததொரு இலட்சியத்தை நோக்கி நம் நாடு செல்லும் பயணத்தில் டாக்டர் அம்பேத்கர் அவர்களின் நூல்கள் வழிகாட்டியாகவும் உறுதுணையாகவும் பயன்படும் என்பதில் ஐயமில்லை.

ஆங்கில நூல்களை தமிழ் உட்பட இந்திய மொழிகளில் அளிப்பதில் முனைந்து பணியாற்றும் நிர்வாக ஆசிரியர்கள், மொழிபெயர்ப்பாளர்கள், ஒப்புநோக்குவோர், அச்சகத்தார் ஆகிய அனைவரும் நமது பாராட்டுதலுக்கு உரியவர்கள். இந்த அரிய பணியில் ஒத்துழைப்பு நல்கும் அனைவர்க்கும் நன்றி யைத் தெரிவிக்கின்றோம்.

ஏனைய தொகுதிகளைப் போலவே இந்தத் தொகுதியை யும் மக்கள் வரவேற்று ஆதரிப்பார்கள் என நம்புகின்றோம்.

**சத்பால்**
**இயக்குநர்**
டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன்

புதுடில்லி

# தமிழ் நூல் நிர்வாக ஆசிரியர் உரை

பாரத ரத்னா டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் ஒரு சகலகலா வல்லவர்; பல அரிய திறமைகளின் பெட்டகமாகத் திகழ்ந்தவர்; சீரிய பண்புகளின் சுரங்கமாக விளங்கியவர்; நேரிய செயற்பாடு களின் கருவூலமாக மிளிர்ந்தவர். சுருங்கச் சொன்னால் அவரை ஒரு நடமாடும் பல்கலைக் கழகம் என்று கூறினால் அது மிகை யாகாது.

இவையெல்லாவற்றையும் விட முக்கியமாக டாக்டர் அம்பேத்கரை இந்திய அரசியல் சாசனத்தின், அரசமைப்புச் சட்டத்தின் பிதாமகர் எனக் கூறலாம். அவரது அற்புத சட்டப் புலமையை, உலகிலுள்ள பல்வேறு அரசியல் சாசனங்கள் குறித்து அவருக்கிருந்த ஆழ்ந்த, தேர்ந்த, தெளிந்த ஞானத்தை இது விகசிதமாகப் புலப்படுத்துகிறது. மகாராஷ்டிர மாநில அரசு ஆங்கிலத்தில் வெளியிட்டுள்ள டாக்டர் பாபாசாகேப் அம்பேத்கர் பேச்சும் எழுத்தும் தொகுப்பு வரிசை 13 ஆவது தொகுதி தமிழில் 26, 27, 28, 29, 30 ஆவது தொகுதிகளாக வெளியிடப்படுகிறது. இவை அனைத்தும் டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் அரசியல் நிர்ணயசபையில் சமர்ப்பித்த அரசமைப்புச் சட்ட முன்வரைவு குறித்த விவாதங்களாகும். இந்த விவாதங் களுக்கு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் அளித்த பதில்கள் படிப்போர் உள்ளத்தைப் பிணைத்து ஈர்ப்பதாக உள்ளன. எத்தகைய சிக்கலான விஷயமாக இருந்தாலும் புள்ளிவிவர ஆதாரங்களோடு, தகுந்த விவரங்களோடு, அலசி ஆராய்ந்து, அசைக்க மறுக்க முடியாதபடி அவர் பதிலளித்திருப்பதைக் காணலாம்.

இந்த ஐந்து தொகுதிகளும் பலரால் மொழிபெயர்க்கப் பட்டிருப்பதால் மொழி நடையும், சொல்லாக்கமும், பதப் பிரயோகங்களும் வேறுபட்டிருப்பது தவிர்க்க முடியாததாகி விட்டன. இதனை வாசகர்கள் பொறுத்தருள்வார்கள் என்று நம்புகிறோம்.

இதுவரை வெளிவந்துள்ள தொர்குதிகளுக்குப் பேராதரவு அளித்து வந்துள்ளதைப் போன்றே இந்த ஐந்து தொகுதிகளும் வாசகர்களால் பெரிதும் வரவேற்கப்படும் என்று நம்புகிறோம்.

**தமிழ் நூல் நிர்வாக ஆசிரியர்**

# பகுதி ஆறு

## பாகம் II

## விதிவாரியாக விவாதம்

### 1949 ஜுலை 30 முதல் 1949 செப்டம்பர் 16 வரை

### பொருளடக்கம்

## புதிய உறுப்பு 79 - A

[1]*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் (பம்பாய் - பொது) : ஐயா, நான் முன்மொழிவது:*

*திருத்தங்களுக்கான திருத்தங்கள் பட்டியல் 1 (முதல் வாரம்) திருத்தம் எண் 1-இல் முன்மொழியப்பட்டுள்ள புதிய உறுப்பு 79 - A க்குப் பதிலாகப் பின் வருமாறு இடம்பெறச் செய்யலாம்:-*

*நாடாளுமன்றச் செயலகம் "79 - A (1) நாடாளுமன்ற அவைகள் ஒவ்வொன்றுக்கும் தனித்தனியே செயலகப் பணியாளர்கள் இருப்பார்கள்:*

*ஆனால் இக்கூறில் அடங்கியுள்ள எதுவும் ஈரவைகளுக்கும் பொதுவான பதவிகள் உண்டாக்கப்படுவதைத் தடுப்பதாகக் கொள்ளப்படாது.*

*(2) நாடாளுமன்றத்தின் ஈரவைகளில் எந்தவொன்றுக்குமான செயலகப் பணியாளர்களாக அமர்த்தப்படுவோரின் ஆட்சேர்ப்பு மற்றும் பணி நிலைமைகளை நாடாளுமன்றம் சட்டம் கொண்டு ஒழுங்குமுறைக்குட்படுத்தலாம்.*

*(3) இந்த உறுப்பின் கூறு (2)இன் படி நாடாளுமன்றம் வழிவகை செய்யும் வரை குடியரசுத் தலைவர் மக்களவைத் தலைவருடன் அல்லது மாநிலங்களவைத் தலைவருடன் கலந்தாலோசித்த பிறகு மக்களவை அல்லது மாநிலங்களவை இரண்டில் எதற்கும் செயலகப் பணியாளர்களாக அமர்த்தப்படுவோரின் ஆட்சேர்ப்பு மற்றும் பணி நிலைமைகளை முறைப்படுத்தும் விதிகளை வகுக்கலாம். இவ்வாறு வகுக்கப்படும் விதிகள் எதுவும் மேற்சொன்ன கூறின் படி இயற்றப்படக்கூடிய சட்டத்தின் வழிவகைகளுக்குட்பட்டுச் செயல்படும்."*

இது அரசமைப்புச் சட்டத்தில் நாம் சேர்க்க விரும்பும் ஒரு புதிய உறுப்பென்பதை அவையினர் காண்பர். இது போன்ற ஓர் உறுப்பைச் சேர்ப்பது அவசியமென வரைவுக் குழு கருதியதற்குப் பல்வேறு மாகாணங்களின் பேரவைத் தலைவர்கள் அண்மையில் நடத்திய மாநாடே காரணம். இம்மாநாட்டில் இது போன்ற ஒரு வழிவகையை அரசமைப்புச் சட்டத்தில் சேர்க்க வேண்டுமெனக் கூறப்பட்டது.

பேரவையில் தலைவரின் இருக்கையில் அமரும்படி காலஞ் சென்ற வித்தல்பாய் படேல் அழைக்கப்பட்டது முதலே அரசின் நிர்வாகத்துறைக்கும் பேரவைத் தலைவருக்கும் இடையில் இது ஒரு

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 ஜூலை 30, பக்கம் 2-3.

விவாதப்பொருளாக இருந்து வருவதை அநேகமாக இந்த அவையில் உள்ள அனைவரும் அறிவர். அரசின் நிர்வாகத் துறைக்கும் பேரவைத் தலைவருக்கும் இடையே பூசல் தொடர்ந்த வண்ணமிருந்தது. பேரவைச் செயலகம் நிர்வாகத் துறையைச் சாராமல் சுயேச்சை யானதாக இருக்க வேண்டுமென பேரவைத் தலைவர் வாதிட்டார். மறுபுறம் பேரவைத் தலைவரின் விருப்பங்களுக்கும் கட்டுப்பாட் டிற்கும் அப்பாற்பட்டு சட்டப் பேரவைக்குத் தேவையான ஆட் களையும் பணியாளர்களையும் நியமிக்கும் உரிமை உண்டென அப்போதைய நிர்வாகத் துறை வாதிட்டது. இறுதியாக 1928 அல்லது 1929இல் நிர்வாகத் துறை விட்டுக் கொடுத்து அப்போதைய பேரவைத் தலைவரின் வாதத்தை ஏற்றுக் கொண்டு பேரவைக்கு ஒரு சுயேச்சை யான செயலகத்தை ஏற்படுத்தியது. ஆகவே, இது வரை மத்தியப் பேரவையைப் பொறுத்த வரை அரசமைப்புச் சட்டத்தின் புதிய உறுப்பு 79-A என்பதால் உண்மையில் எவ்வித மாற்றமும் இல்லை. ஏனெனில் உறுப்பு 79-Aஇன் கூறு (1)இல் எதற்கு வழிவகை செய்யப்படுகிறதோ அது முன்னரே நடப்பில் இருப்பதுதான்.

1928 அல்லது 1929இலேயே மத்தியச் சட்டமன்றத்தில் கைக்கொள்ளப்பட்ட இந்த நடைமுறை பல்வேறு மாகாண சட்டப் பேரவைகளால் பின்பற்றப்படவில்லையென சுட்டிக்காட்டப்பட்டது. சில மாகாணங்களில் சட்டமன்றத் துறையின் ஒழுங்குக் கட்டுப்பாட்டு மேலுரிமைக்குட்பட்ட யாரேனும் ஓர் அதிகாரி சட்டப்பேரவையின் செயலராகச் செயல்படுவதற்கு நியமிக்கப்படும் வழக்கம் இன்றள வும் தொடர்கிறது. இதன் விளைவாக அந்த அதிகாரி ஒருவிதமான இரட்டைக் கட்டுப்பாட்டுக்கு உள்ளாகிறார் - அவர் அதிகாரியாக உள்ள துறை செலுத்தும் கட்டுப்பாடு ஒரு பக்கம், அப்போதைக்கு அவரது சேவையைப் பெற்றுக் கொள்ளும் அவைத் தலைவர் செலுத்தும் கட்டுப்பாடு மறு பக்கம். இது பேரவைத் தலைவரின் கண்ணியத்திற்கும் சட்டப் பேரவையின் சுயேச்சைக்கும் இழுக்காகு மென வாதிடப் படுகின்றது.

பேரவைத் தலைவர்கள் மாநாடு அசரமைப்புச் சட்டத்தில் இந்த வழிவகையை சேர்ப்பதோடு, பணியாளர்களின் தொகை, பணி யமர்த்தம், பணி நிலைமைகள் இன்ன பிறவற்றையும் முறைப் படுத்தும் பொருட்டு வேறுபல வழிவகைகளையும் அரசமைப்புச் சட்டத்தில் சேர்க்க வேண்டுமென வலியுறுத்தும் பல்வேறு தீர்மானங் களை நிறைவேற்றியது. பேரவைத் தலைவர்கள் மாநாடு எழுப்பிய

ஏனைய வாதங்களை ஏற்றுக் கொள்ள வரைவுக் குழு அணியமாய் இல்லை. நாடாளுமன்றத்திற்கென்று தனியாகச் செயலகப் பணியாளர்கள் இருக்க வேண்டும் என்றோர் எளிய கூறு அரசமைப்புச் சட்டத்தில் இடம்பெற்று, எஞ்சியவற்றை நாடாளுமன்றமே முறைப் படுத்திக் கொள்ளட்டும் என்று விட்டுவிட்டால் அதுவே போதுமானதாயிருக்குமென்று அவர்கள் நினைத்தனர். நாடாளுமன்றம் வழிவகை ஏதும் செய்யும் வரை குடியரசுத் தலைவர் மக்களவைத் தலைவருடன் அல்லது மாநிலங்களவைத் தலைவருடன் கலந்தாலோசித்து ஆட் சேர்ப்புக்கும், பணி நிலைமைகளுக்குமான விதிகள் வகுக்கலாமென கூறு (3) வழிவகை செய்கிறது. நாடாளுமன்றம் ஒரு சட்டத்தை இயற்றும்போது அச்சட்டம், மக்களவைத் தலைவருடன் கலந்தாலோசித்து குடியரசுத் தலைவர் தற்காலிகமாக வகுக்கும் விதிகளைப் புறந்தள்ளி விடும். நாம் செய்துள்ள வழிவகையே பேரவைத் தலைவர்களின் மாநாடு சுட்டிக்காட்டிய முக்கிய இடர்ப்பாட்டை சமாளிப்பதற்குப் போதுமென நான் கருதுகிறேன். இந்தப் புதிய உறுப்பை ஏற்றுக் கொள்வதில் அவைக்கு சிரமமேதும் இருக்காதென நம்புகிறேன்.

*(பட்டியல் IIஇன் (முதல் வாரம்) திருத்தங்கள் 43, 44 ஆகியவை முன்மொழியப்படவில்லை.)*

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** விடை சொல்ல வேண்டிய அளவுக்கு ஏதும் கூறப்படவில்லையெனக் கருதுகிறேன்.

*(எட்டு திருத்தங்களுமே மறுதலிக்கப்பட்டன. மேற்கூறிய வடிவில் டாக்டர் அம்பேத்காரின் முன்மொழிவு ஏற்றுக் கொள்ளப் பட்டது.)*

*புதிய உறுப்பு 79 - A அரசமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.*

## உறுப்பு 104

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐய்யா, நான் முன்மொழிவது:

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 ஜுலை 30, பக்கம் 9.
2. மேற்படி அதே நூல், பக். 10.

*உறுப்பு 104க்குப் பதிலாகப் பின்வரும் உறுப்பை இடம் பெறச்செய்யலாம்:-*

*நீதிபதிகளின் சம்பளம் இன்னபிற*

*104. (1) உச்ச நீதிமன்ற நீதிபதிகளுக்கு இரண்டாம் அட்டவணையில் குறித்துரைத்துள்ளபடி சம்பளம் தரப்படும்.*

*(2) நாடாளுமன்றத்தினால் அல்லது நாடாளுமன்றம் இயற்றிய சட்டத்தின் படி அவ்வப்போது நிர்ணயிக்கும் படியான தனிச் சலுகைகள் மற்றும் படிகளுக்கும் விடுப்பு மற்றும் ஓய்வூதியம் தொடர்பான உரிமைகளுக்கும் ஒவ்வொரு நீதிபதியும் உரியவராவார். இவ்வாறு நிர்ணயிக்கப்படும்வரை இரண்டாம் அட்டவணையில் குறித்துரைக்கப்பட்டுள்ள தனிச்சலுகைகளுக்கும் படிகளுக்கும் உரிமைகளுக்கும் அவர் உரியவ ராவார்.*

*ஆனால், ஒரு நீதிபதியின் தனிச்சலுகைகளோ படிகளோ அல்லது விடுப்பு, ஓய்வூதியம் ஆகியவை தொடர்பான உரிமைகளோ அவரது பதவியமர்த்த லுக்குப் பின் அவரைப் பாதிக்கும் வகையில் மாற்றப்பட மாட்டா.*

ஐயா, நான் சொல்ல வேண்டியதெல்லாம் இவ்வளவுதான், மூல வாசகத்தில் இடம்பெறாத 'தனிச் சலுகைகள்' என்ற சொல் நுழைக்கப்பட்டிருப்பது தவிர இந்த உறுப்பும் மூல உறுப்பும் ஒன்று தான். அந்தத் தனிச் சலுகைகள் என்ன என்பது பற்றி இப்போது நான் பேசப் போவதில்லை. இரண்டாம் அட்டவணையை எடுத்துக் கொள்ளும்போது அவற்றை விவாதிப்போம். அங்கே அவற்றில் சிலவற்றைத் திட்டவட்டமாகக் குறிப்பிடலாம்.

★ ★ ★

[1]**திரு. ஆர்.கே. சித்வா:** ..... ஐயா, திருத்தப்பட்ட தீர் மானத்தை கணக்கில் கொண்டு இந்த அட்டவணையின் மொழி நடையைத் திருத்தா விட்டால் இந்த உறுப்பு சற்றே குழம்பிய நிலை யில்தான் இருக்கும் என்று நினைக்கிறேன். இந்த உறுப்புக்கு டாக்டர் அம்பேத்கர் முன்மொழிந்த திருத்தத்திற்குப் பிறகு ஏற்படக் கூடிய விளைவுகள் என்னவென்று அறிய விரும்புகிறேன். அவர் இந்த அட்டவணையைக் குறிப்பிடவே இல்லை என்பதைப் பார்க்கிறேன். அவர் இனிமேலாவது இந்த அட்டவணையைக் குறிப்பிடப் போகிறாரா என்பது எனக்குத் தெரியாது. ஏனெனில் அது பிரச்சினை யைச் சிக்கலாக்குகிறது. இதை நாடாளுமன்றத்தின் முடிவுக்கு விட்டு விட்டால் நோக்கம் சிதைந்துவிடும். நாடாளுமன்றமானது தலைமை நீதிபதிக்கு அனைத்து வசதிகளுடன் கூடிய ஒரு வீட்டைத் தரலா மென்று அவையின் விருப்பங்களுக்கு மாறாக ஆணையிட முடியும்.

---

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 ஜூலை 30, பக்கம் 12.

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** துணைத் தலைவர் அவர்களே, மாண்புமிகு பண்டித குன்ஸ்ரு முன்மொழிந்த திருத்தத்தை ஏற்றுக்கொள்ள இயலாமைக்கு வருந்துகிறேன். அவரின் திருத்தத்தை மறுதலிப்பதற்காக இரண்டு ஏற்கத்தக்க மறுப்புரைகள் அவையின் முன் வைக்கப்படலாம் எனக் கருதுகிறேன். முதலாவதாக ஒரு நீதிபதி அமர்த்தப்பட்ட பிறகு சம்பளத்திற்கும், ஓய்வூதியத்திற்குமான அவரது உரிமைகளை அந்தக் குறிப்பிட்ட செய்தி தொடர்பாக நாடாளு மன்றம் இயற்ற விரும்பும் படியான எந்தவொரு சட்டத்தினாலும் மாற்றக்கூடிய நிலை இருக்கலாகாது என்ற கோட்பாட்டிற்காகவே நண்பர் குன்ஸ்ரு போராடுகிறார். நான் முன்மொழிந்துள்ள புதிய உறுப்பைப் பொறுத்த வரை அந்தச் செய்தியை நாடாளுமன்றத்தின் மேலுரிமைக்கப்பால் வைத்திருப்பதாகவே நினைக்கிறேன். படிகள், ஓய்வூதியங்கள் முதலியவற்றை மாற்றுவதற்காக அவ்வப்போது சட்டங்களை இயற்றும் அதிகாரம் நாடாளுமன்றத்திற்கே அளிக்கப் பட்டுள்ளதென்பதில் சந்தேகமில்லை. ஆனால் முன்னரே சேர்ந்து விட்ட உரிமைகளுக்கெதிராக அது இருக்குமானால் புதிய நீதிபதி களுக்குப் பொருந்துமே தவிர பழைய நீதிபதிகளைப் பாதிக்காது என்றும் இந்த உறுப்பில் வழிவகை செய்யப்பட்டுள்ளது. அவர் எதற்காகப் போராடுகிறாரோ அந்தக் கோட்பாடு முன்னரே இந்த உறுப்பில் இடம்பெற்றுள்ளது.

மற்றொரு கோணத்திலும் அவரது திருத்தம் மறுப்புக்குரிய தாகவே தோன்றுகிறது. இதற்கான காரணம் பின்வருவதாகும்: ஒரு நீதிபதியின் சம்பளம், அவர் பணியாற்றியுள்ள ஆண்டுகளின் எண் ணிக்கை ஆகியவற்றுக்கும் ஓய்வூதியத்துக்கும் ஒரு திட்டவட்டமான விகித உறவு உண்டு என்பதை அனைவரும் அறிவர். கூட்டாட்சி நீதிமன்றத்தின் நீதிபதிகளுக்குப் பொருந்தக் கூடிய விகிதங்களின்படி தங்களில் ஒவ்வொருவருக்கும் உரிமைப்படி கிடைக்க வேண்டிய தற்குக் குறையாத ஓய்வூதியத்தை பெற வேண்டும் என்று என் மாண்புமிகு நண்பர் பண்டித குன்ஸ்ரு சொல்லி வருவது போல் தெரி கிறது. இப்படிச் சொல்கிறவர்கள் கூட்டாட்சி நீதிமன்றத்தின் நீதிபதி உச்ச நீதிமன்றத்தின் நீதிபதியாகப் பணியமர்த்தம் செய்யப்பட்டால் அவர் இப்போது பெற்று வரும் அதே சம்பளத்தையே தொடர்ந்து பெறுவார் என்று ஊகித்துக் கொள்வதாகத் தோன்றுகிறது. அவ்வாறு இல்லாவிட்டால் ஓய்வூதியம் என்பது ஒருவரின் சம்பளம், அவர்

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 ஜூலை 30, பக்கம் 12-13.

பணியாற்றியுள்ள ஆண்டுகளின் எண்ணிக்கை ஆகியவற்றைப் பொறுத்தது என்ற கோட்பாட்டை மீறுவதாகி விடும். கூட்டாட்சி நீதிமன்றத்தின் நீதிபதிகள் உச்ச நீதிமன்றத்திற்குப் பணியமர்த்தம் செய்யப்படும் போது அவர்களுக்குக் கிடைத்துவரும் அதே சம்பளம் தொடர்ந்து அவர்களுக்குக் கிடைக்க வேண்டுமா என்பது குறித்து எந்த முடிவிற்கும் நாம் இது வரை வரவில்லை. இதுகுறித்து முடிவு செய்யப்படவில்லையென முன்பே சொன்னேன். இப்போதுள்ள நீதிபதிகளுக்கும் புதிய நீதிபதிகளுக்கும் இடையே சம்பளத்தில் வேறுபாடு காட்டுமாறு எடுத்துரைக்க இயலுமா என்பதில் எனக்குப் பெரிதும் சந்தேகமுள்ளது (இதை நான் வருமுன்கூறலாகச் சொல்லி வைக்கலாம்). ஆகவே இத்திருத்தம் உரிய காலத்திற்கு முன்னதாகவே கொண்டுவரப்பட்டுள்ளது. கூட்டாட்சி நீதிமன்ற நீதிபதிகள் தொடர்ந்து அதே சம்பளம் பெற வேண்டுமென என் மாண்புமிகு நண்பர் பண்டித குன்ஸ்ரு எடுத்துரைக்கும் வாதத்தை இந்த அவை ஏற்றுக் கொண்டால் அவர் முன்மொழிந்துள்ள இந்த வகையான திருத்தத்தை ஏற்பதற்கு ஓரளவு காரணம் இருக்கக்கூடும். தற்சமயத்திற்கு அது அவசியமற்றதே என்றும் அதை ஏற்றுக் கொள்ள இயலாது என்றும் பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன். ஏனென்றால் இப்போதைய சம்பளமே தொடர்ந்து தரப்படும் என்ற அடிப்படையில் ஓய்வூதியத்தை நிர்ணயிக்க அது முனைகிறது. ஆனால் இந்த அடிப்படை இதுவரை அவையினால் ஏற்றுக்கொள்ளப்படாத ஒரு கருத்தாகும்.

**திரு. ஆர்.கே. சித்வா:** தலைமை நீதிபதிக்கு அனைத்து வசதிகளுடன் கூடிய வீட்டை அளிக்க நாடாளுமன்றத்திற்கு எவ்வாறு அருகதை உள்ளது என்ற என் வினாவிற்கு டாக்டர் அம்பேத்கர் விடையளிக்கவில்லை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நாம் அதை மறுதலிக்கவில்லை. அனைத்து வசதிகளுடன் கூடிய வீட்டைப் பற்றி ஏதும் சொல்லப்படவில்லை. நாம் அதனை விவாதிப்போம்.

***(பண்டித குன்ஸ்ருவின் திருத்தம் மறுதலிக்கப்பட்டது. டாக்டர் அம்பேத்கரின் முன்மொழிவு முன்காட்டிய வடிவில் ஏற்றுக்கொள்ளப்பட்டது. திருத்தப்பட்ட வடிவில் உறுப்பு 104 அரசமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.)***

## புதிய உறுப்பு 148 - A

[1]மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஐயா, நான் முன்மொழிவது :

மாநிலங்களுக்கான சட்டமன்ற மேலவை களை நீக்கம் செய்தல் அல்லது ஏற்படுத்தல்

உறுப்பு 148க்குப் பின்னர் பின்வரும் புதிய உறுப்பை நுழைக்கலாம்:-

''148-A (1) இந்த அரசமைப்புச் சட்டத்தின் உறுப்பு 148இல் என்ன கூறப்பட்டிருந்த போதிலும் சட்டமன்ற மேலவை உள்ள ஒரு மாநிலத்தின் சட்டமன்ற மேலவையை நீக்கம் செய்வதற்கோ அல்லது சட்டமன்ற மேலவை இல்லாத ஒரு மாநிலத்தில் சட்டமன்ற மேலவையைத் தோற்றுவிப்பதற்கோ நாடாளுமன்றம் சட்டம் கொண்டு வழிவகை செய்யலாம். இதற்கு அம்மாநிலத்தின் சட்டமன்றப் பேரவையின் மொத்த உறுப்பினர்களில் பெரும்பான்மை வழியாகவும் அல்லது கலந்து கொண்டு வாக்களிக்கும் பேரவை உறுப்பினர்களில் மூன்றில் இரண்டு பங்கிற்குக் குறையாத பெரும்பான்மை வழியாகவும் ஒரு தீர்மானம் இயற்ற வேண்டும்.

(2) இந்த உறுப்பின் கூறு (1)இல் குறிக்கப்பெற்ற எந்தவொரு சட்டமும் அச்சட்டத்தின் வழிவகைகளைச் செயலாக்குவதற்கு அவசியமாகக் கூடிய வகையில் இந்த அரசமைப்புச் சட்டத்தைத் திருத்துவதற்கான வழிவகைகளைக் கொண்டிருக்கும்; நாடாளுமன்றம் அவசியமென கருதக்கூடிய இடைநிகழ்வாகவும் தொடர்விளைவாகவும் அமையக் கூடிய வழிவகைகளையும் அது கொண்டிருக்கலாம்.

(3) மேற்கூறியது போன்ற எந்தச் சட்டமும் இந்த அரசமைப்புச் சட்டத்தின் உறுப்பு 304இன் நோக்கங்களுக்கு அரசமைப்புச் சட்டத் திருத்தமாகக் கருதப் படாது.

மாண்புமிகு உறுப்பினர்கள் அறிவது போன்று இந்தப் புதிய U ¬ ¢ ɪ 148&A இரு நிகழ்வுகளுக்கு வழிவகை செய்கிறது:

(i) அரசமைப்புச் சட்டம் செயல்படத் தொடங்கும் போது இரண்டாவது அவை உள்ள அந்த மாகாணங்களில் இரண்டாவது அவையை நீக்கம் செய்தல்; (ii) அரசமைப்புச் சட்டம் செயல்படத் தொடங்கும் போது சட்டமன்ற மேலவை வேண்டாமென முடிவு செய்துவிட்ட போதும் பிற்பாடு அது வேண்டுமென முடிவு செய்யக் கூடிய மாகாணத்தில் சட்டமன்ற மேலவையை உருவாக்குதல்.

இந்த உறுப்பின் வழிவகைகள், இந்திய அரசாங்கச் சட்டத்தில் சட்டமன்ற மேலவையைத் தோற்றுவிப்பதற்கான பிரிவு 60,

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 ஜூலை 30, பக்கம் 13-14.

அதை நீக்கம் செய்வதற்கான பிரிவு 308 ஆகியவற்றில் அடங்கிய வழிவகைகளைப் பெரிதும் ஒட்டியமைந்துள்ளன. இங்கு ஏற்றுக் கொள்ளப்பட்ட நடைமுறை என்னவென்றால் இது உண்மையில் கீழவையின் முடிவுக்கு விடப்படுகிறது. கீழவையானது ஒரு தீர்மானத்தின் வாயிலாக இரண்டில் ஒரு வழியை மேற்கொள்வதற்குப் பரிந்துரை செய்யலாம். இரண்டாவது அவையை நீக்கம் செய்வதிலோ, தோற்றுவிப்பதிலோ செய்யப்படும் எந்த மாற்றத்தையும் எளிதாக்கும் பொருட்டு இத்தகைய ஒரு சட்டம் அரசமைப்புச் சட்டத் திருத்தமாக கருதப்படாது என்று வழிவகை செய்யப்படுகிறது. அரசமைப்புச் சட்டத்தைத் திருத்துவதற்கு வரைவு அரசமைப்புச் சட்டத்தில் வழிவகை செய்யப்பட்டுள்ள கடினமான நடைமுறையைத் தவிர்ப்பதே நோக்கம்.

நான் இந்த உறுப்பை அவைக்குப் பரிந்துரைக்கிறேன்.

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** பதிலளிக்க வேண்டிய தேவை இருப்பதாக நான் கருதவில்லை.

**திரு. அவைத் தலைவர் :** நான் இப்போது திருத்தங்களை வாக்கெடுப்புக்கு விடுகிறேன். பேராசிரியர் சாக்சேனாவின் திருத்தத்தை முதலில் எடுத்துக் கொள்கிறேன். அதனை இரண்டு பகுதிகளாக வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

***(3 திருத்தங்கள் மறுதலிக்கப்பட்டன, ஒரு திருத்தம் விலக்கிக் கொள்ளப்பட்டது, மேலே குறிப்பிட்ட வடிவில் டாக்டர் அம்பேத்கரின் தீர்மானம் ஏற்றுக் கொள்ளப்பட்டது. புதிய உறுப்பு 148-A அரசமைப்புச் சட்டத்தில் சேர்க்கப் பட்டது.)***

## உறுப்பு 150

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் முன்மொழிவது:

உறுப்பு 150க்குப் பதிலாகப் பின்வருமாறு இடம்பெறச் செய்யலாம்:-

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 ஜூலை 30, பக்கம் 20.
2. மேற்படி அதே நூல், பக். 21-22

சட்ட மேலவைகளின் இயைபு

"150 (1) மேலவையுள்ள ஒரு மாநிலத்தின் சட்ட மேலவையிலான உறுப்பினர்களின் மொத்தத் தொகை அம்மாநில சட்டப் பேரவையிலான உறுப்பினர்களின் மொத்தத் தொகையில் 25 விழுக்காட்டுக்கு மேற்படாது.

ஆனால், ஒரு மாநிலத்தின் சட்ட மேலவையிலான உறுப்பினர்களின் மொத்தத் தொகை எந்நிலையிலும் 40க்குக் குறையாது.

(2) ஒரு மாநிலத்தின் சட்ட மேலவையிலான இடங்கள் ஒதுக்குதல், அந்த இடங்களில் அமர்வதற்கான ஆட்களைத் தேர்வு செய்யும் முறை, அவ்வாறு தேர்வு செய்யப்படுவதற்குப் பெற்றிருக்க வேண்டிய தகுதிகள், இந்த ஆட்களைத் தேர்வுசெய்வதில் வாக்களிக்க உரிமை பெறுவதற்கான தகுதி ஆகியவற்றை நாடாளுமன்றம் சட்டம் கொண்டு குறித்துரைக்கலாம்.

மூல வடிவில் இவ்வுறுப்பானது வரைவுக் குழுவின் முதல் வரைவின் உறுப்பு 60ஐப் பகுதியளவுக்கு முன்மாதிரியாகக் கொண்டு அமைக்கப்பட்டது. இப்போது மூலவரைவின் உறுப்பு 60 ஆனது மத்தியில் மேலவையின் இயைபு தொடர்பானது என்பது அவைக்கு நினைவிருக்கும். சில காரணங்களினால் இந்த அவை பழைய உறுப்பு 60இல் உருப்பெற்றுள்ள கோட்பாட்டை ஏற்றுக் கொள்ளவில்லை; இக்கட்டத்தில் நான் அக்காரணங்களை விவரிக்க தேவையில்லை. இந்நிலையில் மாகாணங்களுக்கான மேலவையின் இயைபில் முன்னரே கைவிடப்பட்ட கோட்பாட்டைத் தக்க வைத்துக் கொள்வது முன்னுக்குப் பின் முரணாகி விடும் என வரைவுக் குழு கருதியது. எனவே மாற்று வழி காட்டும் பொருட்டு பிரச்சினை வரைவுக் குழுவிடம் விடப்பட்டது. மேலவையின் இயைபு தொடர்பாக வரைவுக் குழுவால் திட்டவட்டமான எந்த முடிவுக்கும் வர இயலவில்லையென்பதை இப்போது நான் சொல்லத்தான் வேண்டும். ஆகவேதான் அவர்கள் இந்தச் சிக்கலை நாடாளுமன்றத்திடம் விட்டு விட முடிவு செய்தனர் - இடர்ப்பாட்டை தள்ளிப்போடவே அவர்கள் முடிவு செய்தனர் என்று நீங்கள் கூறலாம். இந்த அவை ஏற்றுக் கொள்வதற்குத் திட்டவட்டமான முன்மொழிவு எதனையும் வரைவுக் குழு தெரிவிக்கக்கூடும் என்று நான் கருதவில்லை. ஆகவே அவர்கள் உறுப்பு 150இன் உட்கூறு (2)ஐ முன்மொழிந்துள்ளார்கள். இதைக் குறைந்தபட்சமாக எதிர்ப்புக் காட்டும் வழி எனலாம். நான் முன்பே கூறியது போல இது ஒரு முரண்பாட்டையும் தோற்றுவிக்கிறது. அதாவது அரசமைப்புச் சட்டம் உறுப்பு 148-Aஇல் உள்ளபடி குறிப்பிட்ட மாகாணங்களுக்கு இரண்டாவது அவை இருக்குமென்று குறித்துரைக்கிறது. ஆனால் அதன் இயைபைத் தீர்மானிக்கும் வேலையை நாடாளுமன்றத்திடமே விட்டுவிடுகிறது.

இவை முரண்பாடுகளே. இந்த முரண்பாடுகளைத் தீர்த்து வைக்க உடனே வழியொன்றுமில்லை. ஆகவே நான் முன்மொழிந்த உறுப்பு 150இல் அடங்கியுள்ள வரைவுக் குழுவின் முன்மொழிவு களை இப்போதைக்கு ஏற்றுக்கொள்ள அவையை வேண்டுகிறேன்.

(பட்டியல் IIIஇன் (முதல் வாரம்) திருத்தம் எண் 90 முன் மொழியப்படவில்லை.)

**திரு. எச்.வி. காமத்:** ஐயா, நான் முன்மொழிவது:

''திருத்தங்களுக்கான திருத்தங்கள் பட்டியல் Iஇன் (முதல் வாரம்) திருத்தம் எண் 5இல் முன்மொழியப்பட்ட உறுப்பு 150இன் கூறு (2)இல் உள்ள 'தேர்வு செய்யப்படுவதற்குப் பெற்றிருக்க வேண்டிய தகுதிகள்' என்ற சொற்களுக்குப் பதிலாக மேலவையின் 'உறுப்பினர் பதவிக்கான தகுதிகள் மற்றும் தகுதி நீக்கங்கள்' என்ற சொற்களை இடம்பெறச் செய்யலாம்.''

முன்னொரு சந்தர்ப்பத்தில் மாநிலச் சட்டமன்றத்துக்கு உறுப் பினர்களைத் தேர்ந்தெடுப்பது தொடர்பாக உரிய பகுதிகளில் பல்வேறு உறுப்புகள் ஏற்றுக்கொள்ளப்பட்டதை இந்த அவை அறியும். எடுத்துக்காட்டாக மாநிலச் சட்டமன்றப் பேரவையின் உறுப்பினர் பதவிக்கு மேலே கூறிய தகுதிகளோடு கூடுதலாகத் தகுதி நீக்கங்களை யும் விதிக்கிற உறுப்பு 167ஐ அவையின் கவனத்திற்குக் கொண்டு வர விரும்புகிறேன். மேலவையில் பிரதிநிதித்துவம் தருவதற்கும் அதற்கு உறுப்பினர்களைத் தேர்ந்தெடுப்பதற்கும் வழிவகை செய்யும் போது இந்த அவையானது மேலவைக்குத் தேர்வு பெற வேண்டிய உறுப்பினர்களின் தகுதிகளை மட்டுமல்லாமல் நீக்கங்களாக இருக்க வேண்டியவற்றையும் விதிப்பது அதே அளவுக்குச் செல்லத்தக்க தாகவும், காரணத்தோடு கூடியதாகவும், வலுவுள்ளதாகவும் இருக்கு மெனக் கருதுகிறேன். பல்வேறு நிலைமைகளில் ஒரு மாநிலத்தின் சட்ட மன்றப் பேரவை அல்லது மேலவையில் உறுப்பினராகத் தேர்ந் தெடுக்கப்பட இருப்பதற்கு ஒருவர் எவ்வாறு தகுதியற்றவராகிறார் என்பதை உறுப்பு 167 வகுத்துரைக்கிறது. ஆகவே, டாக்டர் அம் பேத்கர் முன்மொழிந்த உறுப்பு 150இல் இதையே வெளிப்படை யாகக் கூறாமல் இருப்பதற்குக் காரணம் ஏதுமிருப்பதாக நான் கருத வில்லை.

இவ்வுறுப்பு குறித்து மேலும் ஒன்றைச் சொல்ல வேண்டி யிருக்கிறது. மேலவையின் உறுப்பினர் தொகை கீழவையின் மொத்த

உறுப்பினர் தொகையில் 1/4 பங்கு அல்லது 25 விழுக்காட்டுக்கு மேல் இருக்கக் கூடாதென புதிய திருத்தம் விதிக்கிறது. ஒரு துணை விதியில் பின்வருமாறும் விதிக்கிறது: ''ஆனால் ஒரு மாநிலத்தின் சட்டமன்ற மேலவையிலான உறுப்பினர்களின் மொத்தத் தொகை எந்நிலையிலும் 40க்கு குறையாது." இந்த இரண்டையும் குறிப்பான நேர்வுகளில் எவ்வாறு இணக்கப்படுத்த முடியும் என்பது எனக்குப் புரியவில்லை. உதாரணமாக நாம் உறுப்பு 148ஐ ஏற்றுள்ளோம்....

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** உறுப்பு 167ஐ மீண்டும் படித்துப் பார்க்கும்படி மாண்புமிகு உறுப்பினரைக் கேட்டுக் கொள்கிறேன்.

**திரு. எச்.வி. காமத் :** நான் அடுத்த கூறு குறித்துப் பேசிக் கொண்டிருக்கிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** முதல் கூறு என்ன வாயிற்று? அதை நீங்கள் ஆதரிக்கிறீர்களா?

**திரு. எச்.வி. காமத் :** நான் அதை ஆதரிக்கவில்லை. உறுப்பு 167 தகுதி நீக்கங்களை விதிப்பதாக டாக்டர் அம்பேத்கர் கூறுகிறார்......

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** மாநிலங்களின் சட்ட மன்றப் பேரவை, சட்ட மன்ற மேலவை ஆகிய இரண்டிற்குமே.

★ ★ ★

[1]**திரு நசிருதீன் அகமது** (மேற்கு வங்காளம்: முஸ்லீம்): ... இந்த உறுப்பு மிக எளிமையானதாகவும் தீங்கற்றதாகவும் தோன்றியது. சட்டமன்ற மேலவை உறுப்பினர் தொகை 25 விழுக்காட்டுக்கு மேல் இருக்காது என்பதே இதன் பொருள்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** ஐயா, நான் ஒழுங்கு பிரச்சினை எழுப்புகிறேன். என் நண்பர் அவையின் முன் இல்லாத ஒரு வரைவை விமர்சனம் செய்கிறார்.

**திரு. நசிருதீன் அகமது:** இன்றைய திருத்தங்களில் இந்த

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 ஆகஸ்டு 30, பக். 27.

வருத்தத்திற்குரிய நிலைமை எவ்வாறு தோன்றியதென்பதைக் காட்டவே நான் முயன்றேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அது உறுப்பினர்களின் பார்வையில் இல்லை.

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, இரண்டு விமர்சனக் கூறுகளுக்கு மட்டுமே விடையளிக்க வேண்டுமெனக் கருதுகிறேன். முதல் கூறு திரு காமத், என் நண்பர் திரு நசிருதீன் ஆகிய இருவராலும் எழுப்பப்பட்டதாகும். அதாவது அவையின் முன் இப்போது வைக்கப்பட்ட முன்மொழிவின்படி சில மாகாணங்களில் மேலவை உறுப்பினர் தொகைக்கும் கீழவை உறுப்பினர் தொகைக்கும் இடையே ஓரளவிற்கு விகிதப் பொருத்தமின்மை உள்ளது என்பதாகும். அவர் கூறியதை நான் சரியாகக் கேட்டிருப்பேனானால் ஒரிசா மாகாணத்தை எடுத்துக் காட்டினார். அங்கே அரசமைப்புச் சட்டத்தின் உறுப்பு 149இல் நாம் விதித்துள்ள கோட்பாடுகளின் அடிப்படையில் கீழவை உறுப்பினர் தொகை கிட்டத்தட்ட 60 இருக்கும்; மேலவைக்கான குறைந்தபட்சத்தொகை 40 என்றால் ஒரிசாவில் மேலவை கீழவைக்கு விகிதப் பொருத்தமற்றதாக இருக்கும். நண்பர் நசிருதீன் இடைக்காலத்தில் உருவான நிலைமைகளைக் கருத்தில் கொள்ளவில்லை என்று நினைக்கிறேன். எடுத்துக்காட்டாக ஒருகாலத்தில் ஒரிசாவைச் சாராதிருந்த சமஸ்தானங்கள் இணைக்கப்பட்டு விட்டதால் அது இப்போது பெரிய மாகாணமாகி விட்டது என்பதை அவர் அறவே மறந்து விட்டார். ஒரிசாவின் எல்லைக்குள் சேர்க்கப்படவுள்ள சமஸ்தானங்களின் பரப்பையும் மக்கள்தொகையையும் கணக்கில் கொண்டால் கீழவை அனேகமாய் 150 உறுப்பினர்களைக் கொண்டதாயிருக்கும் என்று நான் புரிந்து கொள்கிறேன். எனவே அவர் சுட்டிக் காட்டியது போன்ற ஏறுமாறான நிலைக்கு இப்போது வாய்ப்பே இல்லை. மேலவைக்கும் கீழவைக்கும் கருத்து வேறுபாடு என்ற சிக்கலை ஒழுங்கு செய்கிற உறுப்பு 172 முன்மொழியப்படுவதை இந்த அவை நிறைவேற்றுமானால் கீழவைக்கும் மேலவைக்கும் இடையே கோட்பாடுகளில் ஏறுமாறான நிலை என்னும் இந்தச் சிக்கல் அறவே முக்கியத்துவம் இழந்து விடுகிறது என்பதை இக்கட்டத்தில் நான் குறிப்

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 ஆகஸ்டு 30, பக். 27.

பிடலாம். உறுப்பு 172இன் படி நாம் மத்தியிலான ஈரவைகளின் தொடர்பாக ஏற்கப்பெற்ற அதே நடைமுறையை, அதாவது கூட்டமர்வு என்னும் நடைமுறையை ஏற்கும்படி இப்போது முன்மொழியவில்லை. நமது முன்மொழிவு என்னவென்றால் குறிப்பிட்ட சில நிலைமைகளில் மேலவையின் கருத்தைக் கீழவையின் கருத்து விஞ்சி நிற்க வழி செய்ய வேண்டும். எனவே இந்த அரசியல் வண்ண வேறுபாட்டின் காரணத்தால் மேலவையானது கீழவையிலான பெரும்பான்மையின் அல்லது பெரிய பெரும்பான்மையின் முடிவைக் கவிழ்க்கும் வாய்ப்பே இல்லை. என் மாண்புமிகு நண்பர் திரு. நசிருதீன் அகமது தொடுத்த விமர்சனத்துக்கு இது முழுமையாகத் தீர்வு சொல்கிறது எனக் கருதுகிறேன்.

என் மாண்புமிகு நண்பர் பண்டித லட்சுமிகாந்த மைத்ராவினால் வன்மையாக எழுப்பப்பட்ட இரண்டாவது பிரச்சினைக்கு வருகிறேன். அவரது வாதம் என்னவென்றால், நீங்கள் இதை ஏன் நாடாளுமன்றத்திடம் விடவேண்டும்? இது எவ்வாறு நாடாளுமன்றத்திடம் விடப்படலாம்? என்பதே. அவருக்கு நான் அளிக்கக்கூடிய பதிலானது, எப்படியும் என்னைப் பொறுத்த வரை, மன நிறைவு அளிக்கக் கூடியதே எனக் கருதுகிறேன். முதலாவதாக, வரைவுக் குழு எந்தக் கட்டத்திலும் அரசமைப்புச் சட்டத்திலேயே மேலவையின் இயைபுக்காக ஆக்க வழிப்பட்ட ஒரு முன்மொழிதலையும் செய்யவில்லை என்று அனுமானம் செய்து கொள்ளலாகாது என்பதை அவருக்குச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். என் மாண்புமிகு நண்பருக்கு நினைவிருக்குமானால், என் பெயரிலும் என் நண்பர் திரு டி.டி. கிருஷ்ணமாச்சாரி பெயரிலும் ஒரு திருத்தம் முன்மொழியப்பட்டுள்ளது; திருத்தங்களுக்கான திருத்தங்களின் தொகுப்புப் பட்டியல் சுற்றுக்கு விடப்பட்டுள்ளது அல்லவா, அந்தப் பட்டியலில் இது திருத்தம் எண் 139 ஆகும். மேலவையின் இயைபுக்கு நாங்கள் ஆக்க வழிப்பட்ட யோசனை தெரிவித்திருப்பதை அங்கே அவர் காண்பார். மற்றோர் இடத்தில் இந்த யோசனை ஏற்றுக்கொள்ளப்படவில்லை என்பது வருத்தத்திற்குரியதே. ஆகவே அந்தக் குறிப்பிட்ட திருத்தத்தைத் தொடர்ந்து வலியுறுத்துவது விவேகமென நாங்கள் கருதவில்லை. ஆகவே இந்தச் சிக்கலைத் தீர்க்க எந்த முயற்சியும் செய்யவில்லையென்று வரைவுக் குழுவினர் மீது பழி சுமத்தலாகாது என்பதை அவர் காண்பார். அவர்கள் முயலவே செய்தார்கள் என்றாலும் வெற்றியடையவில்லை. இப்பொருள் குறித்து மொத்தத்தில் 28 திருத்தங்கள் வரைவுக் குழுவின் முன் வைக்கப்பட்டன என்பதையும் என் மாண்புமிகு நண்பர் உணர்ந்து கொள்வார்.

அவை இங்கே இந்தப் பட்டியலில் 123 முதல் 148 முடிய உள்ளன. அவர் இந்தத் திருத்தங்களைக் கவனமாகவும் விவரமாகவும் படித்துப் பார்ப்பாரானால் குழப்பி நிலைதடுமாறச் செய்யும் பற்பல யோசனைகளையும், முரண்பட்டு மோதுகின்ற கண்ணோட்டங்களை யும் கண்ணுறுவார். பல்வேறு திருத்தங்களை முன்மொழிந்தவர்கள் தங்களது நிலையிலிருந்து இறங்கி வந்து ஒரு வகைப் பொது முடிவுக்கு வர விரும்பவில்லை என்பதைக் காண்பார். இந்த இடர்ப் பாடான நிலைமையின் காரணத்தினால்தான் வரைவுக் குழுவானது பெரும்பான்மையினர் ஏற்றுக்கொள்ளும் வாய்ப்பில்லாத யோசனையை அவையின் முன்வைப்பதைக் காட்டிலும் நாடாளு மன்றத்திடமே விட்டுவிடலாமெனக் கருதியது.

**திரு. எச்.வி. காமத்:** நாடாளுமன்றத்திடம் இவ்வளவு அதிக மான யோசனைகள் முன்வைக்கப்படமாட்டா என்று டாக்டர் அம்பேத்கர் உறுதியாக நம்புகிறாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** என் மதிப்பிற்குரிய நண்பர் நேரம் கொடுத்தால் அதற்கும் பதிலளிப்பேன்.

மதிப்பிற்குரிய என் நண்பர் பண்டித மைத்ரா கூறினார்: மேலவை போன்ற ஒரு முக்கிய நிறுவனத்தின் அமைப்பில் ஒரு பகுதியை நாடாளுமன்றம் முடிவு செய்யட்டும் என்று விட்டுவிடுவதையும், அதற்கு அரசமைப்புச் சட்டத்தில் வழிவகை செய்யாமல் விடுவதையும் எவ்வாறு எண்ணிப் பார்க்கத் தகும்? மாகாணங்கள் அல்லது மாநிலங் களிலும் சரி, மத்தியிலும் சரி, கீழவை தொடர்பாக நாம் என்ன செய்து கொண்டிருக்கிறோம் என்பதை என் மதிப்பிற்குரிய நண்பர் பண்டித மைத்ரா உணர்ந்து கொள்வார் எனக் கருதுகிறேன், நானும் அதனையே அவருக்குத் திட்டவட்டமாகச் சுட்டிக்காட்டவும் விரும்புகிறேன். நாம் முன்னரே நிறைவேற்றியுள்ள உறுப்பு 149ஐ அவர் எடுத்துப் பார்க்கட்டும்: தொகுதிகளை எல்லை வரையறை செய்வதற்குக் குறிப்பிட்ட சில கோட்பாடுகள் இருக்கும் என்றும் ஒரு தொகுதியில் இத்தனைப் பேருக்குக் குறையாமலும் இத்தனைப் பேருக்கு மிகாம லும் இருப்பார்கள் என்றும் நாம் கூறியிருப்பதோடு சரி. ஆனால் உள்ளபடியே தொகுதிகளை வரையறை செய்யும் பணி நாடாளு மன்றத்திடமே விடப்படுகிறது. மத்தியில் கீழவைக்குப் பல்வேறு தொகுதிகளையும் எல்லை வரையறை செய்கின்ற ஒரு சட்டத்தை நாடாளுமன்றம் நிறைவேற்றா விட்டால் கீழவையை அமைப்பது சாத்தியமற்றதாகி விடும்.

*பண்டித லட்சுமி காந்த மைத்ரா:* அது தவிர்க்க முடியாத தாகும்.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :* மற்றோர் எடுத்துக் காட்டை, அதாவது இடங்கள் ஒதுக்கீடு செய்யப்படுவதை எடுத்துக் கொள்வோம். இப்போதைக்கு உள்ளபடியான ஒதுக்கீட்டை நாடாளு மன்றம் சட்டம் கொண்டு செய்ய வேண்டியிருக்கும். ஆகவே நுணுக்கம் தொடர்பான இத்தகைய முக்கியத்துவம் வாய்ந்த செய்திகள் சட்டம் கொண்டு தீர்மானிக்கப்படுவதற்காக நாடாளுமன்றத்திடம் விடப்பட முடியும் என்றால், மேலவையின் இயைபு தொடர்பான ஒரு செய்தியையும் நாடாளுமன்றத்திடம் விட்டுவிடுவதற்கு என்ன பெரிய மறுப்புரை இருக்க முடியும் என்று எனக்குத் தெரியவில்லை. மறுப் புரைக்கு இடமே இல்லை என்பது என் கருத்து. இரண்டாவதாக அவையின் முன் உள்ள 28 திருத்தங்களிலும் தெரிவிக்கப்பட்டுள்ள முரண்பாடான கண்ணோட்டங்களைக் கருத்தில் கொண்டால் நாடாளு மன்றமே இந்தப் பொறுப்பை எடுத்துக் கொள்வதுதான் மிகச் சிறப் பானதாயிருக்குமென்பது என் சொந்தக் கருத்து. ஏனெனில் வரைவுக் குழுவிற்குக் கிடைத்ததைக் காட்டிலும் நாடாளுமன்றத்திற்குக் கூடுதல் கால அவகாசம் கிடைக்கும் என்பது உறுதி; இந்த முன்மொழிவை ஆய்ந்து மதிப்பிடுவதற்கு நாடாளுமன்றத்திடம் கூடுதல் தகவல் இருக்கும். ஏனென்றால் அப்போது நாடாளுமன்றம் பல்வேறு மாகாண அரசாங்கங்களுடன் தொடர்பு வைத்து அவற்றின் இடர்ப்பாடுகளைக் கண்டறிந்து அவற்றின் கண்ணோட்டங்களையும், முன்மொழிவு களையும் தெரிந்து கொண்டு, ஏதேனும் பொது இடைவழியை அடைந்து, அதனைச் சட்டமாக்கக் கூடிய நிலையில் இருக்கும். ஆகவே இந்த முன்மொழிவை முன்வைப்பதில் நாம் முன்னரே ஏற்றுக் கொண்ட கோட்பாடுகளிலிருந்து பெரிதாக விலகிச் சென்றிடவில்லை எனக் கருதுகிறேன். என் மதிப்பிற்குரிய நண்பர் டி.டி. கிருஷ்ணமாச்சாரி கூறியது போல் இவையனைத்தையும் கருத்தில் கொண்டால் வரைவுக் குழு வருத்தப்படுவதற்கு ஒன்றுமில்லை, அது இந்த முன்மொழிவைப் பரிந்துரை செய்கிறது.

★ ★ ★

[1]*பண்டித கோவிந்த மாளவியா (ஐக்கிய மாகாணங்கள் : பொது):* ஐயா, இந்த உறுப்பு குறித்த பரிசீலனையை நிறுத்திவைத்துக் கொள்ளும்படி நான் முன்மொழிகிறேன்.

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 ஜுலை 30, பக்கம் 37.

*திரு. பிரஜேஷ்வர் பிரசாத்:* இதை நான் பணிந்து வழிமொழிகிறேன்.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :* எனக்கு மறுப்பு ஒன்றுமில்லை. நாம் அதனை இன்னொரு முறை பார்க்கலாம்.

*திரு. அவைத் தலைவர் :* அப்படியானால் இந்த உறுப்பை நிறுத்தி வைத்துக்கொள்ள வேண்டுமென உறுப்பினர்கள் உடன்படுவதாகக் கருதிக்கொள்கிறேன்.

*மாண்புமிகு உறுப்பினர்கள் :* ஆம்.

## [1]புதிய உறுப்பு 163-A

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* ஐயா, நான் பணிந்து முன்மொழிவது :

> ''திருத்தங்களுக்கான திருத்தங்கள் பட்டியல் Iஇல் (முதல் வாரம்) திருத்தம் எண் 12இல், முன்மொழியப்பட்ட புதிய உறுப்பு 163-Aக்குப் பதிலாகப் பின்வருமாறு இடம்பெறச் செய்யலாம்:
>
> 163-A. (1) ஒரு மாநிலத்தின் சட்டமன்ற அவை அல்லது சட்டமன்ற அவைகள் ஒவ்வொன்றுக்கும் தனித்தனியே செயலகப் பணியாளர்கள் இருப்பார்கள்.
>
> ஆனால் இக்கூறில் அடங்கியுள்ள எதுவும், சட்டமன்ற மேலவையைப் பெற்றிருக்கிற ஒரு மாநிலத்தின் சட்டமன்றப் பேரவையைப் பொறுத்தவரை இந்தச் சட்டமன்றத்தின் ஈரவைகளுக்கும் பொதுவான பதவிகள் உண்டாக்கப்படுவதைத் தடுப்பதாகக் கொள்ளப்படாது.
>
> (2) மாநிலச் சட்ட மன்றத்தின் ஈரவைகளில் எந்தவொன்றுக்குமான செயலகப் பணியாளர்களாக அமர்த்தப்படுவோரின் ஆட்சேர்ப்பு மற்றும் பணி நிலைமைகளை அம்மாநிலத்தின் சட்டமன்றப் பேரவை சட்டம் கொண்டு ஒழுங்கு முறைக்குட்படுத்தலாம்.
>
> (3) இந்த உறுப்பின் கூறு (2)இன்படி மாநிலத்தின் சட்டமன்றப் பேரவை வழிவகை செய்யும் வரை ஆளுநரே சட்டமன்றப் பேரவைத் தலைவர் அல்லது சட்டமன்ற மேலவைத் தலைவருடன் கலந்தாலோசித்த பிறகு பேரவை அல்லது மேலவைக்குப் பணியாளர்களாக அமர்த்தப்படுவோரின் ஆள் சேர்ப்பு, பணி நிலைமைகள் ஆகியவற்றை முறைப்படுத்தும் விதிகளை வகுக்கலாம். இவ்வாறு வகுக்கப்படும் விதிகள் எதுவும் மேற்சொன்ன கூறின்படி இயற்றப்படக்கூடிய சட்டத்தின் வழிவகைகளுக்குட்பட்டுச் செயல்படும்.''

---

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுப்பு IX, 1949 ஜூலை 30, பக்கம் 37.

இந்த உறுப்பு நாம் இன்று காலை பரிசீலித்த உறுப்பு 79-A இன் மறுவடிவமே ஆகும்.

★ ★ ★

[1]**திரு. எச்.வி. காமத் :** அவைத் தலைவர் அவர்களே, உறுப்புகள் 79-A, 148-A ஆகியவற்றில் என் மதிப்பிற்குரிய நண்பர் பேராசிரியர் சிபன்லால் சாக்சேனாவும் நானும் முன்மொழிந்த பல்வேறு திருத் தங்கள் சாரமுள்ள வாதக் கூறுகளை எழுப்பின. ஆனால் டாக்டர் அம்பேத்கர் தான் பேசும் முறை வரும் போது பெரிய மனதுடனும் விவேகத்துடனும் கூறியதெல்லாம் எதுவும் சொல்ல விரும்பவில்லை என்பதே.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** விடை சொல்லத் தேவையில்லை என்றுதான் கூறினேன்.

**திரு. எச்.வி. காமத்:** அது அவரது கணிப்பிற்கே விடப்படு கிறது. ஆனால் சாரமுள்ள சில வாதக் கூறுகள் எழுப்பப்படும் போது அவற்றுக்கு ஏதேனும் ஒரு வகையில் விடை சொல்லித்தான் ஆக வேண்டும். அவர் 'ஆமாம்' என்று சொல்லும் போது அவை தன் னுடன் சேர்ந்து கொள்ளும் என்பதை முன்கூட்டியே அறிந்து வைத் திருப்பதால் அவரது நிலைக்கு உறுதியும் உரமும் சேர்கின்றன என்பதில் ஐயமில்லை. எதற்கு விடையளிப்பது, எதற்கு விடையளிக்க மறுப்பது என்பதை அவர்தான் முடிவு செய்ய வேண்டும். ஆனால் அவரது கருத்தைக் கேட்டறியும் உரிமை இந்த அவைக்கு உண்டு. அவர் களைத்துச் சோர்ந்து போயிருப்பாரானால் தன் அறிவார்ந்த கூட்டாளிகளில் ஒருவரிடம் சொல்லி....

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** வாதக்கூறுகளில் சாரம் இருக்கிறதா என்பதைத் தீர்மானிப்பது யார்? ஒரு வாதக் கூறு சாரமுள்ளதே என்று அவைத் தலைவர் தீர்ப்பு வழங்கினால் விடை யளிப்பேன். திரு காமத் அவர்களே தீர்மானிக்கட்டும் என்று என்னால் விட முடியாது.

★ ★ ★

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுப்பு IX, 1949 ஜூலை 30, பக்கம் 38.

[1]**திரு. அவைத் தலைவர்:** உறுப்பினர் எவரேனும் ஏதேனும் கூற விரும்புகிறீர்களா?

(உறுப்பினர் எவரும் எழுந்து பேசவில்லை.)

டாக்டர் அம்பேத்கர் ஏதேனும் கூற விரும்புகிறீர்களா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** இல்லை.

**திரு. அவைத் தலைவர் :** அப்படியானால், திருத்தங்களை வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

*(8 திருத்தங்களுமே மறுதலிக்கப்பட்டன, டாக்டர் அம்பேத்கர் முன் மொழிந்த வடிவத்தில் உறுப்பு 163-A வாக்கெடுப்புக்கு விடப்பட்டு ஏற்றுக் கொள்ளப்பட்டது. புதிய உறுப்பு 163-A அரசமைப்புச் சட்டத்தில் சேர்க்கப் பட்டது.)*

## உறுப்பு 175

[2]**திரு. அவைத் தலைவர்:** இப்போது 172ஐ எடுத்துக் கொள் வோமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** இப்போதைக்கு அதனை நிறுத்தி வைத்துக் கொள்வோம்.

**திரு. அவைத் தலைவர் :** எண் 175ஐ எடுத்துக் கெள்வோமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** சரி, எடுத்துக் கொள்வோம்.

**திரு. எச்.வி. காமத் :** 127-A என்னவாயிற்று?

**திரு. அவைத் தலைவர் :** அது 210 உடன் சேர்ந்து வரும். நாம் புதிய உறுப்பு 175ஐ எடுத்துக் கொள்வோம். அதற்குச் சில திருத்தங்கள் உள்ளன.

1. அரசமைப்புப் பேரவை நடவடிக்கைகள், தொகுப்பு IX, 1949 ஜூலை 30, பக்கம் 40.
2. மேற்படி அதே நூல், பக். 41-42.

*(திருத்தங்கள் எண் 16, 17 ஆகியவை முன்மொழியப்பட வில்லை.)*

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** அவைத் தலைவர் அவர்களே, நான் பணிந்து முன்மொழிவது:

> *''உறுப்பு 175க்கான துணைவிதிக்குப் பதிலாகப் பின்வரும் துணைவிதியை இடம்பெறச் செய்யலாம்:-*
>
> *''ஆனால், ஆளுநர் தமது ஒப்புதலுக்காகச் சட்டமுன்வடிவு அளிக்கப்பட்ட பின்னர் அது பணம் தொடர்பான சட்டமுன்வடிவு அல்லவென்றால் அந்தச் சட்டமுன்வடிவை அல்லது அதன் குறிப்பிட்ட வழிவகைகளை அவை அல்லது அவைகள் மறுபரிசீலனை செய்யும்படி கேட்டுக்கொள்ளும் செய்தியுடன் சேர்த்துக் கூடுமான விரைவில் திருப்பியனுப்பலாம். குறிப்பாகச் சொன்னால் ஆளுநர் தன் செய்தியில் பரிந்துரைக்கக் கூடிய திருத்தங்கள் ஏதுமிருக்குமானால் அவற்றைக் கொண்டுவருவது விரும்பத் தக்கதா என்பதைப் பரிசீலிக்கும்படி அவை அல்லது அவைகளை அவர் கேட்டுக் கொள்வார். இவ்வாறு ஒரு சட்டமுன்வடிவு திருப்பியனுப்பப்படும் போது அவை அல்லது அவைகள் சட்டமுன்வடிவை உரியவாறு மறுபரிசீலனை செய்யும். சட்ட முன்வடிவு திருத்தத்துடன் அல்லது திருத்தமில்லாமல் அவை அல்லது அவைகளால் நிறைவேற்றப்பட்டு ஒப்புதலுக்காக ஆளுநரிடம் அளிக்கப்படுமானால் ஆளுநர் அதற்கு ஒப்புதல் அளித்திட மறுக்க மாட்டார்.''*

ஐயா, இது பழைய துணைவிதிக்குப் பதிலியாகும். பழைய துணைவிதி மூன்று முக்கிய வழிவகைகளைக் கொண்டிருந்தது. முதலாவது என்னவென்றால் ஒப்புதலளிப்பதற்கு முன்பாக சட்ட முன்வடிவைச் சட்டமன்றப் பேரவைக்குத் திருப்பியனுப்பி சில குறிப் பிட்ட கூறுகளைப் பரிசீலிக்கும்படி பரிந்துரைத்திட அது ஆளுநருக்கு அதிகாரம் அளித்தது. அப்போது இருந்த வடிவத்தில் இந்தத் துணை விதி சட்டமுன்வடிவைத் திருப்பி அனுப்புவது தொடர்பான முடிவை ஆளுநரின் விருப்புரிமைக்கே விட்டுவிட்டது. இரண்டாவதாகப் பரிந்துரையுடன் சட்ட முன்வடிவைத் திருப்பியனுப்பும் உரிமை யானது பணம் தொடர்பான சட்டமுன்வடிவுகள் உட்பட அனைத்து சட்டமுன்வடிவுகளுக்கும் பொருந்தக் கூடியதாயிருந்தது. மூன்றாவ தாக ஒரு மாகாணத்தின் சட்டமன்றம் ஓரவை கொண்டதாக இருக்கும் நேர்வுகளில் மட்டுமே சட்டமுன்வடிவைத் திருப்பி அனுப்பிட ஆளுநருக்கு உரிமை தரப்பட்டது. பொறுப்பாட்சி முறையில் ஆளுநர் விருப்புரிமையின் பேரில் செயல்படுவதற்கு இடமிருக்க முடியாது என்று உணரப்பட்டது. புதிய துணைவிதியானது அவரது விருப்புரிமை

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுப்பு IX, 1949 ஜூலை 30, பக்கம் 41-42.

என்ற சொற்றொடரை நீக்கிவிடுகிறது. புதிய துணைவிதியானது அதேபோல் சட்டமுன்வடிவைத் திருப்பியனுப்புகிற இந்த உரிமையைப் பணம் தொடர்பான சட்டமுன்வடிவுக்கு பொருந்தச் செய்யலாகாது என்று கருதப்படுகிறது. ஆகவே 'அது பணம் தொடர்பான ஒரு சட்டமுன்வடிவு அல்லவென்றால்' என்ற சொற்கள் சேர்க்கப்படுகின்றன. சட்டமுன்வடிவைச் சட்டமன்றத்திற்குத் திருப்பியனுப்ப ஆளுநருக்குள்ள இந்த உரிமையை ஒரு மாகாணச் சட்டமன்றம் ஓரவை கொண்டதாயிருக்கும் நேர்வுகளுக்கு மட்டும் பொருந்தும்படி குறிக்க வேண்டிய தேவை இல்லை எனவும் கருதப்படுகிறது. இது ஒரு நல்ல வழிவகை. இதனை அனைத்து நேர்வுகளிலும் பயன்படுத்திக் கொள்ளலாம்; மாகாணச் சட்டமன்றம் ஈரவை கொண்டதாயிருக்குமிடத்தே கூட பயன்படுத்திக் கொள்ளலாம். இந்த மூன்று மாற்றங்களுக்கும் வழிவகை செய்வதற்காகவே பழைய துணைவிதிக்குப் பதில் புதிய துணைவிதியை இடம்பெறச் செய்ய முயல்கிறோம். இந்த அவை இதனை ஏற்றுக்கொள்ளுமென நம்புகிறேன்.

**திரு. அவைத் தலைவர்:** துணைப் பட்டியலில் அச்சிடப்பட்டுள்ள சில திருத்தங்கள் குறித்து எனக்கு அறிவிக்கப்பட்டுள்ளது. உறுப்பினர் எவரேனும் திருத்தங்களில் எதையேனும் முன்மொழிய விரும்புகிறாரா? அத்திருத்தங்கள் திரு. சதீஷ் சந்த்ரா, திரு. பி.எம். குப்தே, பேராசிரியர் சிபன்லால் சக்சேனா ஆகியோர் பெயரில் உள்ளன.

(திருத்தங்கள் முன்மொழியப்படவில்லை.)

* * *

[1]**திரு. அவைத் தலைவர் :** நேற்றைக்கு முன்தினம் மன்ற அமர்வு முடிவுற்று நாம் கிளம்புவதற்கு முன் உறுப்பு 175 தொடர்பாக விவாதம் செய்து கொண்டிருந்தோம். இப்போது உறுப்பு 175 மீதான விவாதத்தை தொடருவோம்.

**திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி** (சென்னை : பொது): அந்த உறுப்புக்கும் 172க்கும் பெரிய தொடர்பேதும் இல்லை எனத் தெரிவித்துக் கொள்கிறேன்.... உறுப்பு 172இலிருந்து வேறாக உறுப்பு 175 பரிசீலிக்கப்பட வேண்டுமென்பது என் கருத்து.

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 ஆகஸ்டு 1, பக்கம் 43.

**திரு. அவைத் தலைவர்:** முதலில் 172ஐ முடித்துக் கொண்டால் நன்றாயிருக்குமல்லவா?

**திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி:** அது முழுக்க முழுக்க உங்கள் விருப்புரிமையின்படி முடிவு செய்யப்பட வேண்டியது. முதலில் 172ஐ எடுத்துக் கொள்ளலாம். பிறகு 175 மீது வாக்கெடுப்பு நடத்தலாம்.

**திரு. அவைத் தலைவர்:** உங்களுக்கு ஏதேனும் மறுப்புள்ளதா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்** (பம்பாய் : பொது) : எனக்கு மறுப்பேதுமில்லை. ஐயா, நான் முழுக்க முழுக்க உங்கள் கையில் இருக்கிறேன்.

**திரு. அவைத் தலைவர் :** அப்படியானால் முதலில் 172ஐ முடித்து விட்டுப் பின்னர் 175க்குச் செல்வோம்.

## உறுப்பு 172

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அவைத் தலைவர் அவர்களே, நான் முன்மொழிவது:

''உறுப்பு 172க்குப் பதிலாக பின்வரும் உறுப்பை இடம்பெறச் செய்யலாம்:-

பணம் தொடர்பான சட்டமுன்வடிவுகள் அல்லாத சட்டமுன் வடிவைப் பொறுத்து சட்டமன்ற மேலவையின் அதிகாரங்களைக் கட்டுப்படுத்தல்

'172. (1) சட்டமன்ற மேலவை உள்ள ஒரு மாநிலத்தின் சட்டமன்றப் பேரவையினால் ஒரு சட்ட முன்வடிவு நிறைவேற்றப்பட்டு அது சட்டமன்ற மேலவைக்கு அனுப்பி வைக்கப்பட்ட பின்னர்....

(அ) மேலவை அந்தச் சட்டமுன்வடிவை நிராகரிக்குமானால், அல்லது

(ஆ) சட்டமன்ற மேலவை தன் முன் வைக்கப்பட்ட நாளிலிருந்து இரண்டு மாதங்களுக்கு மேல் கழிந்துவிட்ட போதிலும் அதனை நிறைவேற்றாதிருக்குமானால், அல்லது

(இ) சட்டமன்ற மேலவை அந்தச் சட்டமுன்வடிவைத் திருத்தங்களுடன் நிறைவேற்றி அத்திருத்தங்களைச்சட்டமன்றப் பேரவை ஏற்க மறுக்குமானால்,

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 ஆகஸ்டு 1, பக்கம் 43-44.

*சட்டமன்றப் பேரவையானது சட்டமன்ற மேலவையால் செய்யப்பட்ட, யோசனையாகத் தெரிவிக்கப்பட்ட அல்லது ஏற்றுக்கொள்ளப்பட்ட திருத்தங்களுடனோ திருத்தங்கள் இல்லாமலோ சட்டமுன்வடிவை அதே அமர்வில் அல்லது அடுத்துவரும் ஏதேனும் அமர்வில் மீண்டும் நிறைவேற்றி, இவ்விதம் நிறைவேற்றப்பட்ட சட்ட முன்வடிவைப் பிறகு சட்டமன்ற மேலவைக்கு அனுப்பி வைக்கலாம்.*

*(2) இவ்வாறு சட்டமன்றப் பேரவையால் இரண்டாவது முறை நிறைவேற்றப் பட்டுச் சட்டமன்ற மேலவைக்கு அனுப்பி வைக்கப்பட்ட பிறகு*

*(அ) மேலவை அந்தச் சட்ட முன்வடிவை நிராகரிக்குமானால்; அல்லது*

*(ஆ) சட்ட முன்வடிவு மேலவையின் முன்வைக்கப்பட்ட நாளிலிருந்து ஒரு மாதத்திற்கு மேல் கழிந்துவிட்ட போதிலும் மேலவை அதனை நிறைவேற்றா திருக்குமானால்; அல்லது*

*(இ) சட்டமன்ற மேலவை அந்தச் சட்ட முன்வடிவைத் திருத்தங்களுடன் நிறைவேற்றி அத்திருத்தங்களைச் சட்டமன்றப் பேரவை ஏற்க மறுக்குமானால்*

*அந்தச் சட்டமுன்வடிவானது சட்டமன்றப் பேரவை ஏற்றுக் கொண்டிருக்கக் கூடிய திருத்தங்கள் ஏதுமிருப்பின் அவற்றுடன் அப்பேரவையால் நிறை வேற்றப்பட்ட வடிவில் சட்டமன்றத்தின் அவைகளால் நிறைவேற்றப்பட்ட தாக கருதப்படும்.*

*(3) இந்த உறுப்பிலுள்ள ஏதும் பணம் தொடர்பான சட்ட முன்வடிவுக்குப் பொருந்தாது.*

இந்த அவைக்கு நினைவிருக்கும், மாநிலங்களவைக்கும் மக்களவைக்கும் இடையிலான வேறுபாடுகளுக்குத் தீர்வுகாணும் சிக்கல் குறித்து நாம் விவாதித்தபோது இத்தகைய வேறுபாடுகளைத் தீர்ப்பதற்கான பல்வேறு வழிமுறைகள் பற்றியும் பேசினோம். மையச் சட்டமன்றத்தின் கூட்டாட்சித் தன்மையைக் கருத்தில் கொண்டு இரு அவைகளுக்குமிடையிலான வேறுபாடுகளை இதற்கென்று குடியரசுத் தலைவரின் அழைப்பின்பேரில் கூடுகின்ற ஈரவைக் கூட்டு அமர்வு தீர்த்துவைப்பதே முறையாக இருக்கும் என்ற முடிவுக்கு வந்தோம். அப்போது சொல்லப்பட்ட ஒரு யோசனை என்னவென்றால், கூட்டு அமர்வு என்ற நடைமுறையை மேற்கொள்வதற்குப் பதிலாக 1911ஆம் ஆண்டின் நாடாளுமன்றச் சட்டத்தில் அடங்கியுள்ள நடைமுறையை நாம் மேற்கொள்ள வேண்டுமென்பதாகும். இதன்படி பிரிட்டனில் பணம் தொடர்பான சட்டமுன்வடிவு அல்லாத குறிப்பிட்ட எந்தச் சட்ட முன்வடிவு தொடர்பாகவும் காமன்ஸ் சபையினால் எடுத்துரைக் கப்பட்ட திருத்தத்தை குறிப்பிட்ட காலம் கடந்த பிறகும் பிரபுக்கள் சபை

ஏற்கத் தவறினால், அல்லது ஏற்க மறுத்தால் காமன்ஸ் சபையின் முடிவே இறுதியாக வெல்லும். இதுகுறித்துப் பரிசீலித்தபோது, சட்ட மன்றத்தின் ஈரவைகளுக்குமிடையிலான வேறுபாடுகளைத் தீர்ப் பதற்கு நாடாளுமன்றச் சட்டத்தில் வகுத்தளிக்கப்பட்ட நடைமுறை யானது மாகாணங்களில் அமைக்கப்படும் ஈரவைகளுக்கும் இடை யிலான வேறுபாடுகளைத் தீர்ப்பதற்கு அதிகம் பொருத்தமானதா யிருக்கும் எனக் கருதப்பட்டது. இதனால் நாம் மூல உறுப்பிலிருந்து விலகிச் சென்று இந்தப் புதிய உறுப்பைச் சேர்க்கிறோம். ஈரவை களாலும் ஒன்றுக்கொன்று உடன்பட்டு ஒரு கருத்து வேறுபாட்டுக்கு இணக்கமான தீர்வு காண முடியாதபோது, அனைத்து மக்களையும் பிரதிநிதித்துவப்படுத்தும் மக்களவையின் முடிவே விஞ்சி நின்றாக வேண்டும் என்ற முன்மொழிவுக்கு இது உருவம் கொடுக்கிறது.

ஐயா, நான் முன்மொழிகிறேன்.

★ ★ ★

[1]**பண்டித ஹிருதய்நாத் குன்ஸ்ரு:** வரைவுக் குழுவே அவ்வப் போது செய்துள்ள மாற்றங்களைப் பரிசீலனை செய்ததில் அது எவ்விதக் கோட்பாடுமின்றிச் செயல்படுவதாக நான் கருதுகிறேன். ஒரு மிகச் சிறந்த கோட்பாடு இருக்கிறதென என் மாண்புமிகு நண்பர் டாக்டர் அம்பேத்கர் கூறுகிறார்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** எவ்விதக் கோட் பாடும் இல்லையென்கிறேன்.

**பண்டித ஹிருதய்நாத் குன்ஸ்ரு :** என் மாண்புமிகு நண்பர் இந்த அவைக்கு எடுத்துரைத்துள்ள திருத்தத்திற்கு அடிநாதமான கோட்பாடு ஏதுமில்லையென்பதை அவரே ஒப்புக் கொள்வது எனக்கு மகிழ்ச்சியளிக்கிறது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** சூழலின் தேவைக் கும் நடைமுறை வாய்ப்புக்கும் எது பொருந்தும் என்று பார்க்க வேண்டும்.

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 ஆகஸ்டு 1, பக்கம் 52.

**பண்டித ஹிருதய்நாத் குன்ஸ்ரு :** சூழலின் தேவையையும் நடைமுறை வாய்ப்பையும்தான் கருதிப் பார்க்க வேண்டுமென்று அவர் ஒப்புக்கொள்கிறார்....

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** அவைத் தலைவர் அவர்களே, விவாதத்தை நான் செவிமடுத்ததிலிருந்து அதில் பங்கேற்ற பல்வேறு பேச்சாளர்களும் குறிப்பான சில பிரச்சினைகளை எழுப்பி யுள்ளதை அறிந்துள்ளேன். முதலாவதை என் நண்பர் சந்தானம் எழுப்பினார். அதனை முடித்த பிறகே ஏனையவற்றின் பக்கம் திரும்ப விரும்புகிறேன். ஒரு சட்ட முன்வடிவைச் சட்டமன்றப் பேரவை நிறைவேற்றிய வடிவத்தில் மேலவை நிறைவேற்றாத ஒரு நேர்வுக்கு இந்த உறுப்பின் கூறு (1)இல் வழிவகை செய்யப்பட்டாக வேண்டு மென்று திரு. சந்தானம் கூறினார். அவர் மேற்கொண்டு பரிசீலனை செய்து பார்ப்பாரானால், உட்கூறு (இ)இல் வேறுவிதமாகச் சொல்லப்பட்டுள்ளதென்ற போதிலும் அவரது யோசனை உள்ள படியே இக்கூறில் அடங்கியிருக்கக் காண்பார் என்று நினைக்கிறேன். கீழவை சொந்த அதிகாரத்தின் அடிப்படையில் செயல்படுவதற்கு மேலுரிமை எடுத்துக் கொள்ளும்படியான மூன்று நேர்வுகளுக்கு உள்ளபடியே வழிவகை செய்துள்ளோம். அம்மூன்று நேர்வுகளாவன: முதலாவதாக, சட்ட முன்வடிவு பரிசீலிக்கப்பட்ட போதிலும் அறவே நிராகரிக்கப்படுதல்; இரண்டாவதாக, மேலவை சட்டமுன்வடிவை முடக்கி வைத்துக்கொண்டு எவ்வித நடவடிக்கையும் எடுக்காம லிருத்தல், அல்லது நடவடிக்கை எடுத்த போதிலும் அதனைப் பரி சீலிப்பதற்கு அனுமதிக்கப்படும் காலம் கடந்து தாமதப்படுத்திவிடுதல்; மூன்றாவதாக, சட்ட முன்வடிவைச் சட்டமன்றப் பேரவை நிறை வேற்றியுள்ள அதே வடிவில் நிறைவேற்றுவதற்கு மேலவை ஒப்புக் கொள்ளாதிருத்தல். என் நண்பர் சந்தானம் எடுத்துக்காட்டும் நேர்வைத் தான் நடைமுறையளவில் இது குறிக்கிறது. ஆகவே உறுப்பின் இந்தப் பகுதியைத் திருத்த வேண்டிய தேவை ஏதும் இருப்பதாக நான் கருத வில்லை. இடையிலேயே நான் ஒன்றைச் சொல்லி வைக்கலாம், கீழவை தன் சொந்த அதிகாரத்தின் அடிப்படையில் செயல்படுவதற்கு மேலுரிமை பெறக் கூடியதான நேர்வுகள் குறித்த மூன்று வகையினங் கள் அல்லது நிலைமைகளை வகுத்தளிப்பதில் ஆஸ்திரேலிய அர சமைப்புச் சட்டத்தின் உறுப்பு 57இலிருந்து சொற்கள் நெருக்கமாக எடுத்தாளப்பட்டுள்ளன.

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 ஜூலை 30, பக்கம் 57-59.

எழுப்பப்பட்டுள்ள பொதுவான பிரச்சினைகளுக்கு இப்போது வருகிறேன். இதுகுறித்து விவாதிக்கையில் மூவேறு வினாக்கள் பரிசீலனைக்கு வருவதாக எனக்குத் தோன்றுகிறது. கீழவையின் சித்தம் மேலோங்கி நிற்பதற்கு முன் சட்டமுன்வடிவு எத்தனைப் பயணங்கள் மேற்கொள்ள வேண்டும் என்பது முதல் வினா. ஒரு பயணமா, இரு பயணங்களா, அல்லது இரண்டிற்கு மேற்பட்ட பயணங்களா? இது ஒரு வினா. இரண்டாவது என்னவென்றால் சட்ட முன்வடிவு போகவும் வரவும் ஒவ்வொரு பயணத்திற்கும் மேலவைக்கு எவ்வளவு காலம் ஒதுக்கப்பட வேண்டும்? மூன்றாவது வினா என்னவென்றால், எக் காலத்திற்குள் மேலவை செயல்பட வேண்டும் என்பது எவ்வாறு கணக்கிடப்படும்? காலவரம்புச் சட்டம் அறிந்தவர்களுக்குப் பழக்கமான சொல்லாட்சியைப் பயன்படுத்துவதானால் தொடக்கப் புள்ளியாக இருக்க வேண்டியது எது? இந்தத் திருத்தத்தைப் பொறுத்தவரை சட்ட முன்வடிவு இரு பயணங்கள் மேற்கொள்ள வேண்டுமென முன்மொழியப்படுகிறது. அது முதலில் போகிறது, திரும்பி வருகிறது, மீண்டும் போகிறது. இரண்டிற்கு மேற்பட்ட பயணங்கள் அனுமதிக்கப்பட வேண்டுமென வாதிடக் கூடும். நான் முன்பே சொன்னேன், இது நடைமுறை அரசியல் பற்றிய பிரச்சினையாகும். நாம் ஏதேனும் ஒரு முடிவைக் கண்டாக வேண்டும், அதைத் தாண்டிச் செல்வதற்கு வழியிருக்கக் கூடாது. அப்படி ஒரு கட்டத்தில் கீழவையின் அதிகாரம் மேலோங்கி நிற்பதற்கு நாம் அனுமதித்திட வேண்டும். இந்த நோக்கத்துடன் மேலவை மறுஆய்வு செய்யும் மன்றமாகச் செயல்பட இரு பயணங்களே போதுமானவை என வரைவுக் குழு கருதியது.

நிற்க, இந்தப் பயணங்களின் போது சட்ட முன்வடிவைப் பரிசீலிக்க மேலவை இரு மாத காலம் எடுத்துக் கொள்ள அனுமதிக்கலாம் என்பது வரைவுக் குழுவின் முன்மொழிதலாகும். என் நண்பர் டி.டி. கிருஷ்ணமாச்சாரியால் முன்மொழியப்பட்ட திருத்தத்தை நான் ஏற்றுக் கொள்வதால், இந்தக் காலம் முதல் நேர்வில் மூன்று மாதங்களாக இருக்கலாம், இரண்டாவது நேர்வில் அது ஒரு மாதமாக இருக்கும்.

வரைவுக் குழுவிற்கு நிலையான சிந்தனை ஒன்றுமில்லை என்றும், அது நிமிடத்திற்கு நிமிடம் மாறிக் கொண்டேயிருக்கிறது என்றும், அது உறுதியற்றதாக உள்ளதென்றும் என் நண்பர் பண்டித குன்ஸ்ரு கூறினார். வரைவு அரசமைப்புச் சட்டத்தில் எடுத்துரைக்கப் படும் மூலவரைவு 6 மாதங்கள் என்று விதித்திருப்பதை அவர் சுட்டிக்காட்டினார். ஒவ்வொரு அவைக்கும் அனுமதிக்கப்படும் காலம்

எவ்விதத்தும் கோட்பாடு குறித்த ஒன்றல்ல என்று இங்கேயும் நான் அவருக்குச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். இது நடைமுறை அரசியல் பற்றியதே ஆகும். 6 மாதம் என்பது மிக நீண்ட காலம் என்ற முடிவிற்கு வரைவுக் குழு வந்தது. உண்மையில் மூன்று மாதம் என்பதும் கூட மிக நீண்ட காலம் என்றுதான் வரைவுக் குழு கருதியது. ஆனால் ஏராளமான கூறுகளைத் தன்னகத்தே கொண்ட ஜமீன்தாரி சட்டமுன்வடிவு போன்ற ஒன்று கீழவையிலிருந்து வெளிப்பட்டுப் பரிசீலனைக்காக மேலவைக்கு அனுப்பப்படலாம் என்பது எண்ணிப் பார்க்க முடியாத நிலையன்று. ஆனால் இத்தகைய விதிவிலக்கான நேர்வுகளை நீக்கிப் பார்த்தால் ஏனைய சட்டங்கள் இதே அளவு கொண்டதாகவோ, இதே சாரம் கொண்டதாகவோ இருக்க மாட்டா என்பதை என் நண்பர் ஏற்றுக்கொள்வாரென நினைக்கிறேன். எனவே சட்டமுன்வடிவு தன்னுடைய முதல் பயணத்தில் செல்லும் நேர்வில் மூன்று மாதமானது மேலவைக்கு அனுமதிக்கப்படும் நியாயமான கால அளவே ஆகும் என்று நாங்கள் எண்ணினோம். ஏனெனில், கடைசியாகப் பார்த்தால் மேலவை அப்படி என்னதான் செய்யப் போகிறது? மேலவையானது கீழவையால் தனக்கு அனுப்பி வைக்கப் பட்ட சட்ட முன்வடிவு குறித்துச் செயலாற்றுகையில் அனைத்தையும் முழுமையாக மறுவரைவு செய்யப் போவதில்லை. ஒவ்வொரு கூறாக மாற்றியமைக்கப் போவதில்லை. குறிப்பிட்ட கூறுகளை மட்டுமே அது பொது முக்கியத்துவம் வாய்ந்தவையாகக் கருதிப் பரிசீலனைக்கு எடுக்க விரும்பும். வரையறைக்குட்பட்ட இவ்வகையான சட்டமன்ற நடவடிக்கைக்கு முதலில் மேலவைக்கு அனுமதிக்கப் படும் மூன்று மாத காலம் என்பது தாராளமாகவே போதுமானது என்றும், நிச்சயமாக இரண்டாவது அவையின் செயற்பாட்டைக் குறுக்கிவிடாது என்றும் கருதியிருப்பேன். இரண்டாம் நேர்வில் கீழவை மேலவையால் எடுத்துரைக்கப்பட்ட திருத்தங்களை ஏற்றுக் கொள்வதில் எந்த எல்லை வரை தன்னால் செல்ல முடியும் என்பதை அம்மேலவைக்குத் தெரிவித்துவிட்ட நிலையில் இரண்டாவது பயணத்திற்கு ஒரு மாதமே போதும் என்று கருதினோம். ஆகவே நான் முன்பே சொன்னது போல் இந்தப் பிரச்சினை நடைமுறை அரசியல் பற்றியதே தவிர கோட்பாடு பற்றியதல்ல என்பதால் மூன்று மாதமும் ஒரு மாதமும் போதுமானது என்று கருதினோம்.

இப்போது கடைசி வினாவிற்கு வருகிறேன். அதாவது மூன்று மாதம் அல்லது ஒரு மாதத்தைக் கணக்கிடுவதற்கான தொடக்கப் புள்ளியாக இருக்க வேண்டியது எது? திரு. குன்ஸ்ரு வரைவுக் குழுவால்

செய்யப்பட்ட மாற்றங்களின் முக்கியத்துவத்தை மதித்துப் போற்றத் தவறி விட்டார் என்று கூறுவதற்காக என்னை அவர் மன்னிப்பாரென நம்புகிறேன். இப்போதுள்ளபடி வரைவு உறுப்பு 172இல் இந்த வழி வகை இல்லாது போயிருக்குமானால் மேலவையின் அதிகாரங்கள் அடியோடு மறுதலித்து மழுங்கடிக்கப்பட்டிருக்கும் என்பதில் எனக்குச் சந்தேகமில்லை, வரைவுக் குழுவிற்கும் சந்தேகமில்லை. இதற்கு நான் விளக்கமளிப்பேன், ஆனால் அதற்கு முன்னதாகக் காலவரம்பின் தொடக்கப் புள்ளியென்று நான் குறிப்பிடுவதை நிர்ணயிக்கும் சாத்தியப்பாடுகளை உரைப்பேன். அனைத்துக்கும் முதலாவதாக, கீழவை சட்டமுன்வடிவை நிறைவேற்றியதிலிருந்து ஒரு குறிப்பிட்ட காலத்திற்குள் மேலவை அதனை நிறைவேற்றியாக வேண்டுமென்று சொல்வது சாத்தியமே. இரண்டாவதாக சட்ட முன்வடிவு வரப்பெற்ற தேதியிலிருந்து குறிப்பிட்ட காலத்தில் அதனை நிறைவேற்ற வேண்டுமென்று சொல்வதும் சாத்தியமே. இவ்விரு சாத்தியப்பாடுகளில் ஏதேனும் ஒன்றை நாம் ஏற்றுக் கொண்டிருந்தால் அதன் விளைவுகள் மேலவைக்குப் பேரழிவாக அமைந்திருக்கும். மேலவையைக் கூட்டுவது முழுக்க முழுக்க நிர்வாகத் துறையின் கையில் உள்ளது - நிர்வாகத் துறை விரும்புகிற போது கூட்டவும், விரும்பாத போது கூட்டாதிருக்கவும் செய்யலாம் என்பதை நினைவிற் கொண்டால், நேர்மையற்ற நிர்வாகத் துறையினர் எவ்வகையி லாவது இந்தக் கூறினைத் தமக்கு சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டு அறவே கூட்ட மறுப்பதும் சாத்தியமே. அல்லது சட்டமுன்வடிவு வரப் பெறுவதைத் தொடக்கப் புள்ளியாக நாம் ஏற்றுக் கொண்டிருந்தால் அவர்கள் சட்ட முன்வடிவை நிகழ்ச்சி நிரலில் சேர்க்காமலிருப் பதன் மூலமும், இவ்விதம் மேலவை அதனைப் பரிசீலனை செய்யும் வாய்ப்பை வழங்காதிருப்பதின் மூலமும் அம்மேலவையை வஞ்சிக்க முடிந்திருக்கும். இவ்வகையான நடைமுறை சரியில்லை என்று நினைத்தோம். இது மேலவையை அது செய்யாத குற்றத்திற்காகத் தண்டிப்பதில் போய் முடியும். மேலவை கூட்டப்படா விட்டால் அதனால் சட்டமுன்வடிவைப் பரிசீலனை செய்ய முடியாது என்பது உறுதி. இப்படிப்பட்ட சட்டமுன்வடிவைச் சட்ட மேலவை பரி சீலனை செய்து முடித்து விட்டதாகக் கருதுவதற்கில்லை. ஆகவே மேலவையைப் பாதுகாக்கும் பொருட்டு வரைவுக் குழுவானது தொடக்கப் புள்ளியை நிர்ணயிக்கும் இந்த இரு சாத்தியப்பாடுகளை யும் நிராகரித்தது. அதாவது சட்டமுன்வடிவு நிறைவேற்றப்படு வதையோ, அது மேலவைக்கு வந்து சேர்வதையோ தொடக்கப் புள்ளியாகக் கருதும் நிலையை - இப்போதுள்ளபடி வரைவு உறுப்பில்

தங்களால் சேர்க்கப்பட்ட முன்மொழிவை - வரைவுக் குழுவினர் நிராகரித்தனர். இப்போது முன்மொழியப்பட்டுள்ள புதிய உறுப்பில் அடங்கிய வழிவகைகளை அவர்கள் வேண்டுமென்றேதான் ஏற்றுக் கொண்டார்கள். அதாவது, சட்ட முன்வடிவு பரிசீலனைக்காக வைக்கப் பட்டிருக்கும்போது இந்தக் கூறு நிர்ணயிக்கிற குறிப்பிட்ட காலத் திற்குள் மேலவை தன் பரிசீலனையை முடிக்கா விட்டால், அதனை ஆராய்ந்து பார்க்க மேலவைக்குள்ள உரிமை அது தன் கடமையை செய்யத் தவறுவதாலேயே பறிபோகிறது என்பது கண்கூடு.

**பண்டித ஹிருதயநாத் குன்ஸ்ரு:** இந்தச் சிறுபிள்ளைத்தன மான விளக்கம் மாண்புமிகு உறுப்பினருக்கே மனநிறைவு அளிக் கிறதா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** மாண்புமிகு நண்பர் இதை சிறுபிள்ளைத்தனம் எனச் சொல்ல விரும்பினால் சொல்லட் டும். ஆனால் இப்போதுள்ள கூறுடன் ஒப்பிடுகையில் புதிய கூறு பெரிய முன்னேற்றம் என்பதில் எனக்கு ஐயமில்லை. பண்டித குன்ஸ்ரு மனநிறைவு கொள்ளா விட்டால் நான் வருந்துகிறேன். ஆனால் அவர் எடுத்துக்காட்டி நான் விளக்கம் தராத கூறு எதுவுமில்லை.

**திரு. அவைத் தலைவர்:** பிரச்சினை இதுதான்:

> ''முன்மொழியப்படும் உறுப்பு 172இன் கூறு (1)இன் உட்கூறு (ஆ) என்பதில் 'இரண்டு மாதம்' என்ற சொற்களுக்குப் பதிலாக 'மூன்று மாதம்' என்ற சொற்களை இடம்பெறச் செய்யலாம்.''

திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

முன்மொழிந்து திருத்தப்பட்ட வடிவில் உறுப்பு 172 அரசமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.

## உறுப்பு 176

[1]**திரு. அவைத் தலைவர்:** அடுத்து உறுப்பு 176ஐ எடுத்துக் கொள்வோம்.

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 ஆகஸ்டு 1, பக்கம் 62.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** 83-A-ஐ எடுத்துக் கொண்டு முடிவு காண்பது நன்றென்பது என் கருத்து.

**திரு. அவைத் தலைவர்:** உறுப்பு 176இல் அதிகமாய் ஒன்று மில்லையெனக் கருதுகிறேன். இப்பொழுதே எடுத்துக் கொள்ள லாம். அனேகமாய்த் திருத்தம் ஏதுமில்லை.

(இந்த உறுப்புக்குத் திருத்தம் ஏதுமில்லை, உறுப்பு 176 ஏற்றுக் கொள்ளப்பட்டு அரசமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.)

## உறுப்பு 83-A

[1]**திரு. அவைத் தலைவர்:** இப்பொழுது நாம் உறுப்பு 83ஐ எடுத்துக் கொள்வோமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அவைத் தலைவர் அவர்களே, நான் முன்மொழிவது:

''உறுப்பு 83க்குப் பின்னர் பின்வரும் புதிய உறுப்பை நுழைக்கலாம்:

உறுப்பினர்களின் தகுதி நீக்கம் என்னும் பிரச்சினை பற்றிய முடிவு

'83.A (1) நாடாளுமன்றத்தின் ஈரவைகளில் ஒன்றின் உறுப்பினர் கடைசியாக முன்சென்ற உறுப்பின் முடிவில் கூறு (1)இல் குறிப் பிடப்பட்ட தகுதி நீக்கங்களில் ஏதேனும் ஒன்றுக்கு ஆட்பட் டுள்ளாரா என்ற கேள்வி எழுந்தால் அப்பிரச்சினை குடியரசுத் தலைவரின் முடிவுக்கு அனுப்பி வைக்கப்படும். அவரது முடிவே இறுதி யானதாகும்.

(2) இப்படிப்பட்ட எந்தப் பிரச்சினை குறித்தும் முடிவு சொல்வ தற்கு முன்னதாகக் குடியரசுத் தலைவர் தேர்தல் ஆணையத்தின் கருத்தைக் கோரிப் பெற்று அதற்கேற்பச் செயல்படுவார்.''

இந்த உறுப்பானது மாகாணங்களில் இதே போன்ற நேர்வு களுக்கென அண்மையில் நாம் இயற்றிய உறுப்பு 167இன் மறு வடிவமே. ஆகவே இதற்கு மேல் விளக்கம் ஏதும் தேவைப்படும் என நான் கருதவில்லை.

(புதிய உறுப்பு 83-A ஏற்றுக்கொள்ளப்பட்டு அரசமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.)

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 ஆகஸ்டு 1, பக்கம் 62.

## உறுப்பு 127-A

[1]**திரு. அவைத் தலைவர்:** உறுப்புகள் 210, 211 ஆகியவற்றை எடுத்துக் கொள்வது நன்றென நினைக்கிறேன். அதன் பிறகு உறுப்பு 127-A-க்கு வருவோம்.

**திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி:** இரண்டில் எதைச் செய்தாலும் ஒன்றுதான். ஏனெனில் இதை ஏற்றுக் கொண்டால் உறுப்பு 210, 211 ஆகியவை தாமாகவே விட்டுப் போகும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அவைத் தலைவர் அவர்களே, நான் முன்மொழிவது:

ஒரு மாநிலத்தின் கணக்குப் பதிவுகள் தொடர்பான தணிக்கை அறிக்கைகள்

''உறுப்பு 127க்குப் பின்னர் பின்வரும் புதிய உறுப்பை நுழைக்கலாம்:

'127-A. ஒரு மாநிலத்தின் வரவு-செலவுக் கணக்குப் பதிவுகள் தொடர்பாகத் தலைமைக் கணக்குத் தணிக்கையாளரின் அறிக்கைகள் ஆளுநரிடம் அல்லது ஆட்சியாளரிடம் பணிந்தளிக்கப்படும். மாநிலச் சட்டமன்றத்தின் முன் ஆளுநர் அல்லது ஆட்சியாளர் அவற்றை வைக்கச் செய்வார்.''

கணக்குத் தணிக்கையும் கணக்குப் பதிவும் தலைமைக் கணக்குத் தணிக்கையாளரின் அதிகாரத்திற்குட்பட்ட ஒரே நிறுவனமாவதற்கு வழி செய்யக்கூடிய உறுப்புகளை இப்பொழுது நாம் ஏற்றுக் கொண்டிருப்பதை இந்த அவை நினைவில் கொள்ளும். ஆகவே குறிப்பிட்ட ஒரு மாநிலத்தின் கணக்குத் தணிக்கை மற்றும் கணக்குப் பதிவுகள் தொடர்பான அறிக்கைகள் சட்டமன்றத்தின் பரிசீலனைக்காக ஆளுநர் அல்லது ஆட்சியாளரால் பணிந்தளிக்கப்படுவதற்கு ஏதேனும் வழி வகை செய்வது அவசியமாகிறது. அதற்குத்தான் இந்த உறுப்பு வழிவகை செய்கிறது.

**திரு. அவைத் தலைவர்:** உறுப்பினர் எவரேனும் இந்த உறுப்பு குறித்து ஏதேனும் சொல்ல விரும்புகிறீர்களா?

**மாண்புமிகு உறுப்பினர்கள்:** இல்லை.

புதிய உறுப்பு 127-A அரசமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.

---

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 ஆகஸ்டு 1, பக்கம் 62.

## உறுப்பு 197

[1]**திரு. அவைத் தலைவர்:** உறுப்பு 212ஐ எடுத்துக் கொள்வோமா?

**திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி:** உறுப்பு 188ஐ எடுத்துக் கொள்ளலாம். அதனை நீக்க வேண்டியுள்ளது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** உறுப்புகள் 188, 278 ஆகியவற்றை ஒன்றாக எடுத்துக் கொள்ளலாம் என்ற கருத்தைச் சொன்னேன். முழுவதற்கும் விளக்கமளித்தால் நன்றாயிருக்கும்.

**திரு. அவைத் தலைவர்:** அப்படியானால், உறுப்பு 197ஐ எடுத்துக் கொள்வோம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் முன்மொழிகிறேன்:

நீதிபதிகள் சம்பளம் இன்னபிற

''உறுப்பு 197க்குப் பதிலாக பின்வரும் உறுப்பை இடம்பெறச் செய்யலாம்:

''197 (1) உயர்நீதிமன்றம் ஒவ்வொன்றையும் சேர்ந்த நீதிபதிகளுக்கு இரண்டாவது அட்டவணையில் குறித்துரைத்தபடி சம்பளம் தரப்படும்:

(2) நாடாளுமன்றத்தினால் அல்லது நாடாளுமன்றம் இயற்றிய சட்டத்தின் படி அவ்வப்போது நிர்ணயிக்கப்படும் படிகளுக்கும் விடுப்பு மற்றும் ஓய்வூதியம் தொடர்பான உரிமைகளுக்கும் ஒவ்வொரு நீதிபதியும் உரியவராவார். இவ்வாறு நிர்ணயிக்கப்படும் வரை இரண்டாவது அட்டவணையில் குறித்துரைக்கப்படும் படிகளுக்கும் உரிமைகளுக்கும் அவர் உரியவராவார்:

ஆனால் ஒரு நீதிபதியின் படிகளோ அல்லது விடுப்பு மற்றும் ஓய்வூதியம் தொடர்பான உரிமைகளோ அவரது பதவியமர்த்தத்துக்குப் பின் அவரைப் பாதிக்கும் வகையில் மாற்றப்படாது.''

இந்தப் பிரிவு உச்ச நீதிமன்ற நீதிபதிகள் தொடர்பான வேறோர் உறுப்பினை ஒத்திருக்கிறது.

**திரு. அவைத் தலைவர்:** பண்டித குன்ஸ்ருவின் திருத்தம் ஒன்றுள்ளது.

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 1 1949, பக்கம் 64

*(பட்டியல் I-இன் (இரண்டாம் வாரம்) திருத்தங்கள் 20, 21, 22 ஆகியவை முன்மொழியப்படவில்லை.)*

***திரு. அவைத் தலைவர்:*** *இதற்கு முன்மொழியப்பட்ட திருத்தம் ஒன்றுமில்லை. டாக்டர் அம்பேத்கரால் முன்மொழியப் பட்டுள்ளவாறு இந்த உறுப்பை வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.*

*முன்மொழிவு ஏற்றுக்கொள்ளப்பட்டது.*

*திருத்தப்பட்ட வடிவில் உறுப்பு 197 அரசமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.*

## உறுப்பு 212 முதல் 214 முடிய

[1]***திரு. அவைத் தலைவர்:*** *உறுப்பு 212ஐ எடுத்துக் கொள் வோமா?*

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** *ஐயா, 212 முதல் 214 முடிய உள்ள உறுப்புகளை நிறுத்தி வைத்துக் கொள்ளலாம் என விரும்புகிறேன். உறுப்பு 275ஐ எடுத்துக் கொள்ளலாமெனக் கருது கிறேன்.*

***திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி*** *(சென்னை-பொது): ஐயா, 212 முதல் 214 முடிய உள்ள உறுப்புகளை நிறுத்தி வைத்துக் கொள்ள வேண்டுமென்கிறார்கள். அவற்றை நிறுத்தி வைத்துக் கொள்வது ஏன் என்பது குறித்து விளக்கம் பெற இந்த அவை விரும்பும் எனக் கருதுகிறேன்.*

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** *விளக்கம் இது தான்: குடியேற்றங்களில் சில இந்தியாவுடன் வந்து இணைவதற்கான ஒரு நல்வாய்ப்புள்ளது. சந்திரநாகூர் போன்ற இடங்களை உதா ரணமாய் குறிப்பிடலாம். அவற்றிற்கு ஏதேனும் வழிவகை செய்ய வேண்டியவர்களாயிருக்கிறோம். இதுவே அப்படிச் செய்வதற்கு ஏற்ற இடமாக இருக்கக் கூடும். இந்த வழிவகையை இன்னும் கூட முறையாகச் சேர்க்கலாம் என்றும் இன்ன பிறவாறும் கருதப்படு வதாக சற்று முன்னர்தான் சொல்லப்பட்டது. ஆகவே இந்தப் பிரச்சினையைப் பரிசீலனை செய்வதற்கு நமக்குச் சிறிதளவாவது*

---

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 ஆகஸ்டு 1, பக்கம் 65.

கால அவகாசம் தேவை. ஒருவேளை இன்றே கூட இந்த உறுப்புகளை எடுத்துக் கொள்ளும் நிலையில் நாமிருக்கலாம்.

**திரு. அவைத் தலைவர்:** அப்படியானால் உறுப்பு 188ஐயும், அது தொடர்பாக, நெருக்கடி நிலை குறித்த ஏனைய வழிவகைகளை யும் எடுத்துக் கொள்ளலாம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நெருக்கடிநிலை குறித்த வழிவகையாகவும் உள்ள உறுப்பு 275ஐயும் எடுத்துக் கொள்ள லாம்.

**திரு. அவைத் தலைவர்:** உறுப்பு 275ஐ எடுத்துக் கொள்வோம்.

**திரு. நசிருதீன் அகமது:** ஐயா, நான் ஒழுங்குப் பிரச்சினை ஒன்று எழுப்பலாமா?

இந்த அவையினால் மேற்கொள்ளப்படும் நடைமுறையைப் பின்பற்றுவது சில உறுப்பினர்களுக்குப் பெரிதும் சங்கடமாக இருக் கிறது. இன்றைய நமது நிகழ்ச்சி நிரலில் சில உறுப்புகள் வகை வகை யாகப் பிரிக்கப்பட்டுள்ளன. வரிசை அறிக்கையில் சொல்லப்பட் டிருக்கும் வரிசையில் உறுப்புகள் ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்படும் என்று சென்ற முறை புரிந்துகொள்ளப்பட்டது. செய்நுட்ப முறை யில் எவ்வித மறுப்பும் சொல்ல நான் விரும்பவில்லை. ஆனால் இடர்ப்பாடு என்னவெனில் உறுப்பினர்கள் விவாதத்தில் அறிவார்ந்த முறையில் பங்கெடுப்பதற்கு அணியமாய் வர வேண்டியுள்ளது. நமது விடுமுறைக்குப் பின்னரும் கூட ஒழுங்கானதொரு நடைமுறையைக் கடைப் பிடிக்காமல் உறுப்புக்கு உறுப்பு முன்னும் பின்னுமாகத் தாவித் தாவிச் செல்ல வேண்டுமென எதிர்பார்க்கப்படுகிறது. இதனால் ஓரளவு சங்கடம் ஏற்படுகிறது என்பதையும், இந்த அவை ஏதேனும் ஒழுங்குமுறையான வரிசையில் செயல்படுமாறு கேட்டுக்கொள்ளப் பட்ட வேண்டுமென்பதையும் பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன். இல்லையெனில் அறிவார்ந்த விவாதம் எதுவும் நடைபெறாது.

**திரு. அவைத் தலைவர்:** உறுப்பு 212இலிருந்து உறுப்பு 275க்குத் தாவிச் செல்வது உறுப்பினர்களுக்கு சங்கடமானதென்று திரு. நசிருதீன் சொல்வது எனக்கும் ஏற்புடையதுபோல் உள்ளது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** உறுப்பு 212ஐ எடுத்துக் கொண்டு மேற்செல்ல அணியமாயிருக்கிறேன்.

**திரு. அவைத் தலைவர்:** அது நன்றெனக் கருதுகிறேன். சந்திர நாகூரைப் பொறுத்தவரை ஏதேனும் நிகழுமாயின் பிற்பாடு அதற்கு வழிவகை செய்யலாம். உறுப்பு 212ஐ எடுத்துக் கொள்வோம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் முன்மொழிவது:

> ''திருத்தங்கள் பட்டியலில் உள்ள திருத்தம் எண் 2713 தொடர்பாக, உறுப்பு 212இன் கூறு (2)ஐ விட்டு விடலாம்.''

இத்திருத்தம் முன்மொழியப்படுவதற்கான காரணம் என்னவென்றால், பகுதி IIIஇல் குறித்துரைக்கப்பட்ட மாநிலங்கள் தொடர்பான எல்லா வழிவகைகளும் ஒரு தனி அட்டவணையில் தனியாகச் செய்யப்படுகின்றன. ஆகவே இங்கு கூறு (2)ஐத் தக்க வைத்துக் கொள்ளத் தேவையில்லை.

மேலும் நான் முன்மொழிவது:

> ''உறுப்பு 212இன் கூறு (1)இலும் கூறு (1)க்கான துணைவிதியிலும், 'ஆளுநர் அல்லது ஆட்சியாளர்' என்ற சொற்கள் வரும் இடங்களிலொம் அவற்றிற்கு பதிலாக 'அரசாங்கம்' என்ற சொல்லை இடம்பெறச் செய்யலாம்.''

**திரு. அவைத் தலைவர்:** இந்த உறுப்புக்குப் பற்பல திருத்தங்கள் கொண்டுவர நமக்கு அறிவிப்பு தரப்பட்டுள்ளது. அவற்றை ஒவ்வொன்றாக எடுத்துக் கொள்கிறேன்.

★ ★ ★

*(பல்வேறு திருத்தங்கள் மீதும் நடைபெற்ற விவாதத்திற்குப் பின்னர் டாக்டர் அம்பேத்கர் முன்மொழிந்த திருத்தத்துடன் உறுப்பு 212 ஏற்றுக்கொள்ளப் பட்டு அரசமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.)*

## உறுப்பு 213

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் முன்மொழிவது:

---

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 ஆகஸ்டு 1, பக்கம் 73.

வட்டாரச் சட்ட மன்றங்கள் அல்லது ஆலோசகர் மன்றம் அல்லது அமைச்சரவை உண்டாக்குதல் அல்லது தொடரச் செய்தல்

''திருத்தங்கள் பட்டியலின் திருத்தம் எண் 2722 தொடர்பாக உறுப்பு213க்குப் பதிலாகப் பின்வரும் உறுப்பை இடம்பெறச் செய்யலாம்:

'213. (1) இந்த அரசமைப்புச் சட்டத்தில் என்ன கூறப்பட்டிருப்பினும் இப்போதைக்கு முதல் அட்டவணையின் பகுதி IIஇல் குறித்துரைக்கப்படுவதும், தலைமை ஆணையாளர் அல்லது துணைநிலை ஆளுநர் வாயிலாக நிர்ணயிக்கப்படுவதுமான எந்தவொரு மாநிலத்திற்கும் நாடாளுமன்றம் சட்டம் கொண்டு பின்வருவதை உண்டாக்கலாம் அல்லது தொடரச் செய்யலாம்:

(அ) மாநிலத்திற்கு ஒரு சட்டமன்றமாகச் செயல்படுவதற்கு ஓர் அமைப்பு, நியமனம் செய்யப்பட்டதாகவோ தேர்ந்தெடுக்கப்பட்டதாகவோ அல்லது பகுதி நியமனம் செய்யப்பட்டுப் பகுதி தேர்ந்தெடுக்கப்பட்டதாகவோ இருக்கலாம்;

(ஆ) ஆலோசகர் மன்றம் அல்லது அமைச்சரவை அல்லது இரண்டும் - இவை ஒவ்வொன்றின் அமைப்பும் அதிகாரங்களும் பணிகளும் சட்டத்தில் குறித்துரைக்கப்பட்டவாறு இருக்கலாம்;

(2) இந்த உறுப்பின் கூறு (1)இல் சுட்டப்பெற்றுள்ள எந்தவொரு சட்டமும் அரசமைப்புச் சட்டத்தைத் திருத்தும்படியான அல்லது திருத்தும் விளைவைக் கொடுக்கும்படியான வழிவகை ஏதும் கொண்டதாக இருந்தாலும் கூட உறுப்பு 304இன் நோக்கங்களுக்கு அரசமைப்புச் சட்டத்திற்கான திருத்தமாகக் கருதப்படாது.

ஐயா, இந்தத் திருத்தத்தின் விளைவாக ஏற்படக்கூடிய தலையாய மாற்றம் இதுவே. மூல வரைவில், நியமன வழிப்பட்டதென்றாலும், தேர்ந்தெடுத்தல் வழிப்பட்டதென்றாலும் பிரதிநிதித்துவ நோக்கங்களுக்கான ஓர் அமைப்பையும், ஆலோசகர்கள் மன்றம் அல்லது அமைச்சரவையையும் ஏற்படுத்தும் அதிகாரம் குடியரசுத் தலைவருக்கு விடப்பட்டது. புதிய வரைவு இந்த அதிகாரத்தைக் குடியரசுத் தலைவருக்கு வழங்காமல் நாடாளுமன்றத்துக்கு வழங்குகிறது. இந்தப் புதிய உறுப்பின் விளைவாக ஏற்பட்டுள்ள சாரமான மாற்றம் இதுவே.

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்** (பம்பாய்: பொது): அவைத் தலைவர் அவர்களே, என் நண்பர் லாலா தேஷ்பந்த் குப்தா முன்மொழிந்த திருத்தத்தைப் பொறுத்தவரை, முறையாகப் பார்த்தால் அதற்குரிய இடம் இதுவல்ல என்பதில் எனக்குச் சந்தேகமில்லை.

---

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 ஆகஸ்டு 2 , பக்கம் 100-01.

இத்திருத்தம் ஒரு கோட்பாட்டுப் பிரச்சினையையும் எழுப்புகிறது. அதாவது குறிப்பிட்ட சில பகுதிகளுக்குப் பிரதிநிதித்துவ வகையில் தனி மதிப்பு தருவதற்கு இந்த உறுப்பு வழிவகை செய்கிறது. பிரதி நிதித்துவத்தில் தனி மதிப்பு என்னும் இந்தப் பிரச்சினை ஒரு கட்டத் தில் விரிவாக விவாதிக்கப்பட்டது என்பது இந்த அவைக்கு நினை விருக்கும். தனி மதிப்பு அனுமதிக்கப்படக்கூடாது என்ற கோட்பாட்டை அவை ஏற்றுக்கொண்டது. குறிப்பிட்ட சில கோட்பாடுகளை விதிக்கிற உறுப்பு 67இன் காரணத்தால் இந்தியாவின் சில ஆட்சிப் பரப்புகள் ஒரே ஒரு பிரதிநிதி கூட பெற இயலாமல் போகும் சாத்தியப்பாடு இருப்பதைக் கணக்கில் கொண்டு நாம் ஏதேனும் தனி வழிவகை செய்ய வேண்டியிருக்கும் என்பேன். எந்தவோர் ஆட்சிப் பரப்பும் அரசியல் பிரதிநிதித்துவம் பெறும் வாய்ப்பு ஒரு கணித விதியின் காரணத்தால் தட்டிப் பறிக்கப்படுவதை அனுமதிக்க முடியாது. இதன் பொருட்டு இந்தப் பொருள் குறித்துப் பரிசீலிக்க வேண்டியிருக்கலாம். இந்தக் கட்டத்தில் நான் சொல்லக் கூடியதெல்லாம் இதுதான்: இத்தகைய ஆட்சிப் பரப்புகள் தோற்றுவிக்கப்பட்டு அவற்றின் பிரதி நிதித்துவம் தொடர்பாகச் சில வழிவகைகளைச் செய்யும்படி வரைவுக் குழு கோரப்படும்போது அனைத்தையும் முழுமையாக ஆய்வு செய்யலாம். ஒரு புதிய உறுப்பைச் சேர்த்துக் கொள்ளலாம். உறுப்பு 67க்குப் பிறகு அது வரலாம். அதை உறுப்பு 67-A என்று சொல்லலாம். இதற்கு மேல் இந்தக் கட்டத்தில் என்னால் எதுவும் சொல்ல முடியாது.

**திரு. அவைத் தலைவர்:** திருத்தத்தை இப்போது வாக்கெடுப் புக்கு விடுகிறேன்.

***(பேராசிரியர் சிபன்லால் சக்சேனாவின் திருத்தத்தினால் திருத்தப்பட்ட வடிவில் உறுப்பு 213 ஏற்றுக்கொள்ளப்பட்டு அரசமைப்புச் சட்டத்தில் சேர்க்கப் பட்டது.)***

## உறுப்பு 213-A

[1]**திரு. அவைத் தலைவர்:** அடுத்து உறுப்பு 213-Aஐ எடுத்துக் கொள்வோம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் முன்மொழிவது:

"உறுப்பு 213க்குப் பின்னர் பின்வரும் புதிய உறுப்பை நுழைக்கலாம்:

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 ஆகஸ்டு 2, பக்கம் 102.

முதல் அட்டவணையின் பகுதி II இல் உள்ள மாநிலங்களுக்கான உயர் நீதிமன்றங்கள்

'213. (1) நாடாளுமன்றமானது இப்போதைக்கு முதல் அட்டவணையின் பகுதி II இல் குறித்துரைக்கப்படும் மாநிலத்திற்கு ஓர் உயர்நீதிமன்றத்தை சட்டம் கொண்டு அமைக்கலாம் அல்லது இத்தகைய எந்தவொரு மாநிலத்திலும் இடம்பெற்றுள்ள எந்தவொரு நீதிமன்றத் தையும் இந்த அரசமைப்புச் சட்டத்தின் நோக்கங்களுக்கு ஓர் உயர் நீதிமன்றமாக அறிவித்திடலாம்.

(2) இந்த அரசமைப்புச் சட்டத்தின் பகுதி VIஇன் அத்தியாயம் VIIஇல் அடங்கிய வழிவகைகள் இந்த அரசமைப்புச் சட்டத்தின் உறுப்பு 191இல் சுட்டப்பெறும் உயர் நீதிமன்றம் தொடர்பாகப் பொருந்துவது போலவே, நாடாளுமன்றம் சட்டம் கொண்டு வழிவகை செய்யக்கூடிய மாற்றங்கள் அல்லது விதிவிலக்குகளுக்கு உட்பட்டு, இந்த உறுப்பின் கூறு (1)இல் சுட்டப் பெறும் ஒவ்வோர் உயர் நீதிமன்றம் தொடர்பாகவும் பொருந்தும்.

(3) இந்த அரசமைப்புச் சட்டத்தின் வழிவகைகளுக்கும், இந்த அரசமைப்புச் சட்டத்தினால் அல்லது இதன்படி உரிய நீதிமன்றத்திற்கு வழங்கப்படும் அதிகாரங்களின் பயனாய் அச்சட்டமன்றம் இயற்றக்கூடிய வழிவகைகளுக்கும் உட்பட்டு இப்போதைக்கு முதல் அட்டவணையின் பகுதி IIஇல் குறித்துரைக்கப்படும் எந்தவொரு மாநிலம் அல்லது அம்மாநிலத்தில் அடங்கிய எந்தவொரு பகுதி தொடர்பாகவும் இந்த அரசமைப்புச் சட்டம் தொடங்க விருந்தபோது மேலுரிமை வகித்துவந்த ஒவ்வொரு நீதிமன்றமும் அது தொடங்கிய பின்னரும் அந்த மாநிலம் அல்லது பகுதி தொடர்பாக மேலுரிமை வகித்துவரும்.

(4) இப்போதைக்கு முதல் அட்டவணையின் பகுதி Iஇல் அல்லது பகுதி IIIஇல் குறித்துரைக்கப்படும் எந்தவொரு மாநிலத்திலும் இடம்பெற்றுள்ள உயர் நீதிமன்றத்தின் மேலுரிமையை அந்த அட்டவணையின் பகுதி IIஇல் குறித்துரைக்கப்படும் எந்தவொரு மாநிலத்துக்கும் அல்லது அம்மாநிலத் திற்குட்பட்ட எந்தப் பகுதிக்கும் நீட்டுவதற்கு, அல்லது அம்மாநிலம் அல்லது பகுதியிலிருந்து விலக்கி வைப்பதற்கு நாடாளுமன்றம் பெற்றுள்ள அதிகாரத்தை இந்த உறுப்பில் இடம்பெற்றுள்ள எதுவும் குறைப்பதாகாது.''

ஐயா, பகுதி Iஇல் கூறப்பட்டுள்ள மாநிலங்களின் அமைப்பு குறித்து விவாதித்த போது ஒவ்வொரு மாநிலத்திற்கும் ஓர் உயர் நீதிமன்றம் இருக்க வேண்டும் என முடிவு செய்தது நினைவிருக்கலாம். பகுதி IIஇல் கூறப்பட்டுள்ள மாநிலங்களும் மாநிலங்களே. இதன் விளைவாக பகுதி Iஇல் கூறப்பட்டுள்ள மாநிலங்களுக்குப் பொருந்தக் கூடிய வழிவகை, அதாவது ஒவ்வொரு மாநிலத்திலும் ஒரு சுயேச்சையான உயர்நீதிமன்றம் இருக்க வேண்டுமென்பது பகுதி IIஇல் கூறப் பட்டுள்ள மாநிலங்களுக்கும் பொருந்தத்தான் வேண்டும். இந்த வழிவகை இப்பொழுதிருக்கும் வடிவத்தில் அரசமைப்புச் சட்ட வரைவில் இல்லாதது வருத்தத்திற்குரியதே. இதன் விளைவாகத்தான்

பிரிவு IIஇல் சேர்க்கப்பட்டுள்ள மாநிலங்களிலும் கூட ஓர் உயர் நீதிமன்றம் இருக்கும் அல்லது ஓர் உயர்நீதிமன்றம் இருந்தால் அது ஓர் உயர்நீதிமன்றமாகக் கருதப்படும் என்று வழிவகை செய்யும் பொருட்டே இந்த உறுப்பு 213-A என்பதைக் கொண்டுவர வேண்டியதாயிற்று. உயர் நீதிமன்றம் ஏதும் இல்லையென்றால், பகுதி IIஇல் கூறப்பட்டுள்ள மாநிலங்களுக்குட்பட்ட குறிப்பான ஏதேனும் ஒரு பகுதிக்கென்று தனியாக ஓர் உயர் நீதிமன்றத்தை ஏற்படுத்தும் சாத்தியம் இல்லையென்றால், அடுத்துள்ள ஏதேனும் ஒரு பகுதியில் அமைந்துள்ள குறிப்பிட்ட வேறு ஒரு நீதிமன்றத்தை அந்தக் குறிப்பான பகுதியின் நோக்கங்களுக்கு ஓர் உயர் நீதிமன்றமாகக் கருதலாம் என்று அறிவிக்க நாடாளுமன்றத்திற்கு உரிமை இருக்கும் என்றும் கூறு (8) இல் வழிவகை செய்யப்படுகிறது. இந்த உறுப்பின் நோக்கம் இதுவே.

**திரு. அவைத் தலைவர்:** இந்த உறுப்புக்குத் திருத்தம் ஒன்றுமில்லை. எவராவது ஏதேனும் கூற விரும்புகிறீர்களா? அடுத்து இதை வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

பிரச்சினை இதுதான்:

''புதிய உறுப்பு 213-A அரசமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்படுகிறது.''

முன்மொழிவு ஏற்றுக்கொள்ளப்பட்டது.

உறுப்பு 213-A அரசமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.

★ ★ ★

## உறுப்பு 214

[1]**திரு. அவைத் தலைவர்:** அடுத்து, நாம் டாக்டர் அம்பேத்கரின் பெயரிலுள்ள திருத்தத்தை எடுத்துக் கொள்வோம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் முன்மொழிவது:

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 ஆகஸ்டு 2, பக்கம் 103.

''திருத்தங்கள் பட்டியலின் திருத்தம் எண் 2728 தொடர்பாக, உறுப்பு 214க்குப் பதிலாகப் பின்வரும் உறுப்பை இடம்பெறச்செய்யலாம்:

''214. (1) நாடாளுமன்றம் சட்டம் கொண்டு வேறுவிதமாக வழிவகை செய்யும் வரை கூர்க் சட்ட மேலவையின் அமைப்பு, அதிகாரங்கள், செயல்பாடுகள் ஆகியவை இந்த அரசமைப்புச் சட்டம் தொடங்கவிருந்தபோது இருந்த அதே நிலையில் இப்போதும் இருந்துவரும்.

(2) கூர்க்கில் தண்டப் பெறும் வருவாய்களுக்கென்றும் கூர்க் தொடர்பான செலவிற்கென்றும் செய்யப்பட்டுள்ள ஏற்பாடுகள் குடியரசுத் தலைவர் இதற்காக ஆணை கொண்டு வேறு வழிவகை செய்யும் வரை மாற்றமின்றித் தொடரும்.''

இந்த இரு பகுதிகளும் மூல உறுப்பில் ஒன்றாய்ச் சேர்க்கப் பட்டிருக்க இந்த உறுப்பில் தனித்தனியாக உள்ளன என்பதைத் தவிர புதியது ஒன்றுமில்லை.

(உறுப்பு 214 அரசமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.)

★ ★ ★

## உறுப்பு 275

[1]**திரு. அவைத் தலைவர்:** அடுத்து உறுப்பு 275ஐ எடுத்துக் கொள்வோம். திருத்தம் எண் 111, டாக்டர் அம்பேத்கர்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் முன்மொழிவது:

நெருக்கடி நிலைப் பிரகடனம்

''உறுப்பு 275க்குப் பதிலாக பின்வரும் உறுப்பைஇடம்பெறச்செய்யலாம்:

'275 (1) இந்தியாவின் பாதுகாப்பு அல்லது அதன் ஆட்சிப் பரப்பில் ஏதேனும் ஒரு பகுதியின் பாதுகாப்பு போரினாலோ அல்லது அயல் ஆக்ரமிப்பினாலோ உள்நாட்டுக் கலவரத்தினாலோ ஆபத்திற்குள்ளாகும்படியான கடுமையான நெருக்கடிநிலை நிலவுவதாகக் குடியரசுத் தலைவர் மனநிறைவு கொண்டால் அவர் ஒரு பிரகடனம் கொண்டு அப்படி அறிவிப்புச் செய்யலாம்.

(2) இந்த உறுப்பின் கூறு (1)இன்படி வெளியிடப்படும் பிரகடனம் (இந்த அரசமைப்புச் சட்டத்தில் ஒரு 'நெருக்கடிநிலை பிரகடனம்' என்று குறிப்பிடப்படுவது) -

(அ) அடுத்து ஒரு பிரகடனத்தினால் நீக்கம் செய்யப்படலாம்;

(ஆ) நாடாளுமன்ற அவைகள் ஒவ்வொன்றின் முன்னும் வைக்கப்படும்;

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 2 1949, பக்கம் 103-04.

*(இ) இரு மாத காலம் கழிந்து முடிவதற்கு முன் நாடாளுமன்றத்தின் ஈரவைக் கும் இயற்றக்கூடிய தீர்மானங்களினால் ஏற்றுக்கொள்ளப்படா விட்டால் அக் காலம் கழிந்து முடியும் போது செயலற்றுப் போகும்.*

*ஆனால் இத்தகைய பிரகடனம் ஏதும் மக்களவை கலைக்கப்பட்டிருக்கும் போது வெளியிடப்பட்டால் அல்லது இந்தக் கூறின் உட்கூறு (இ)இல் சுட்டப் பெறும் இரு மாத காலத்தில் மக்களவையின் கலைப்பு நிகழ்ந்து அந்தக் காலம் கழிந்து முடிவதற்கு முன் இந்தப் பிரகடனம் மக்களவைத் தீர்மானத்தினால் ஏற்கப்படவில்லையென்றால் மக்களவை மீண்டும் அமைக்கப்பட்ட பிறகு அதன் முதல் அமர்வு நாளிலிருந்து 30 நாட்கள் கழிந்து முடிவதற்கு முன் இந்தப் பிரகடனத்தை ஏற்றுக்கொண்டு நாடாளுமன்றத்தின் ஈரவைகளும் தீர்மானங் கள் இயற்ற வேண்டும். இல்லாவிட்டால் 30 நாள் கழித்து முடியும் போது பிரகடனம் செயலற்றுப்போகும்.*

*(3) இந்தியாவின் பாதுகாப்பு அல்லது அதன் ஆட்சிப் பரப்பில் ஏதேனும் ஒரு பகுதியின் பாதுகாப்பு போரினாலோ அல்லது அயல்நாட்டு ஆக்கிரமிப் பினாலோ அல்லது உள்நாட்டுக் கலவரத்தினாலோ ஆபத்திற்குள்ளாகியிருக் கிறது என்று அறிவிப்பதே நெருக்கடி நிலைப் பிரகடனமாகும். இந்தப் போர் அல்லது ஆக்கிரமிப்பு அல்லது கலவரம் ஏற்படக்கூடிய உடனடி ஆபத்திருப் பதாகக் குடியரசுத் தலைவர் மனநிறைவு கொண்டால் இந்தப் போர் அல்லது ஆக்கிரமிப்பு அல்லது கலவரம் உள்ளபடி நிகழ்வதற்கு முன்பே மேற்கூறிய வாறு நெருக்கடி நிலைப் பிரகடனம் செய்யலாம்.*

பெரும்பாலும் இந்த உறுப்பானது வரைவு அரசமைப்புச் சட்டத்தில் இடம்பெற்றுள்ள பழைய உறுப்பு 275தான். இத்திருத்தத் தினால் செய்யப்படவுள்ள மாற்றங்கள் மிகச் சிலவே. முதல் மாற்றம் கூறு (1)இல் செய்யப்படுகிறது. ''போர் அல்லது உள்நாட்டு வன்முறை'' என்பவை மூலத்திலிருந்த சொற்கள். திருத்தப்பட்ட வடிவில் இப் போதைய கூறு ''போர் அல்லது அயல் ஆக்ரமிப்பு அல்லது உள் நாட்டுக் கலவரம்'' என்று குறிப்பிடும். உள்நாட்டு வன்முறை என்று சொல்வதைக் காட்டிலும் இந்தச் சொற்களை பயன்படுத்துவது நன்றாக இருக்கும் என்று கருதப்பட்டது. ஏனெனில் உள்நாட்டு வன்முறை என்பதில் அயல் ஆக்கிரமிப்பு அடங்காதிருக்கலாம். இந்த ஆக்கிர மிப்பு உள்ளபடி போர் அல்ல, போருக்குக் குறைவான ஒன்றே.

இரண்டாவது மாற்றம் கூறு (2)இன் உட்கூறு (இ)இல் நுழைக் கப்படுகிறது. மூல வரைவில் ஆறு மாதங்கள் கழிந்து முடியும் போது பிரகடனம் செயலற்றுப் போகும் என்று வழிவகை செய்யப்பட்டது. இப்போது, இரண்டு மாதங்கள் கழிந்து முடியும்போது அது செய லற்றுப் போகுமென முன்மொழியப்படுகிறது. ஆறு மாதங்கள் என்பது மிக நீண்ட காலமெனக் கருதப்பட்டது.

துணைவிதியும் கூட புதியதே. மக்களவை கலைக்கப்படும் போது அல்லது கலைக்கப்பட்டிருக்கும்போது பிரகடனம் வெளியிடப்படும் நேர்வுக்கு இது வழிவகை செய்கிறது. புதிய துணை விதியில் அடங்கியுள்ள வழிவகை என்னவென்றால், மக்களவை கலைக்கப்பட்டிருக்கும்போது அல்லது பழைய அவை கலைக்கப்பட்டதற்கும் புதிய அவை தேர்ந்தெடுக்கப்படுவதற்கும் இடைப்பட்ட காலத்தில் பிரகடனம் வெளியிடப்பட்டால் புதிய அவை 30 நாட்களுக்குள் அதனை ஏற்று உறுதி செய்யலாம் என்பதே.

கடைசிக் கூறுக்கான விளக்கம் அதிலேயே அடங்கியுள்ளது. இது கூறு (1)இன் நோக்கத்திற்கே வழிவகை செய்வதாக நான் கருதுகிறேன். அதாவது போர் முதலானவை உள்ளபடியே நடைபெறாவிட்டாலும் கூட நடைபெறப்போகும் உடனடி ஆபத்திருப்பதாகக் குடியரசுத் தலைவர் கருதினால் இந்த உறுப்பின் வழிவகைகளின்படி செயல்படலாம்.

★ ★ ★

[1]**திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி:** ஆகவே, இந்த வழிவகைக்கு எதிராக எழுப்பப்பட்டுள்ள வாதக் கூறுகளில் பெரும்பாலானவை பொருளற்றவையே என்பேன். ஏனென்றால் நாடாளுமன்ற அதிகாரங்கள் பாதுகாக்கப்படுகின்றன. நான் இந்த விவாதத்தில் தலையிட்டுச் சொல்ல விரும்பியதெல்லாம், அரசமைப்புச் சட்டத்தில் இந்த வழிவகையைச் சேர்ப்பதில் யாருக்கும் மகிழ்ச்சியிருக்காது. ஆனால் அதே போது எதிர்காலத்தில் நாட்டின் தலைவிதியைக் கையில் வைத்திருப்பவர்கள் அரசமைப்புச் சட்டத்தைக் காப்பாற்றுவதற்கான வழிவகைகளை நாம் சேர்க்கவில்லை என்றால் நமக்குள்ள கடமையைச் செய்யத் தவறியவர்களாவோம். ஆகவே இந்த நெருக்கடி நிலை வழிவகைகளை ஒரு தவிர்க்க முடியாத தீமையாகச் சகித்துக் கொள்ளத் தான் வேண்டுமென்பதை இந்த அவையிலும் வெளியிலும் இருப்பவர்கள் புரிந்து கொள்வார்கள். இந்த வழிவகை இல்லையென்றால் அரசமைப்புச் சட்டத்தை உருவாக்கும் நமது முயற்சிகள் எல்லாம் முடிவில் தோற்றுப் போகலாம் என்பது சாத்தியமே. அரசமைப்புச் சட்டத்தைப் பாதுகாத்திட நிர்வாகத் துறைக்குப் போதிய ஆதாரங்கள் தரப்படாவிட்டால் அரசமைப்பே ஆபத்துக்குள்ளாகக் கூடும். ஐயா, மாண்புமிகு டாக்டர் அம்பேத்கர் முன்மொழிந்த திருத்தத்தை நான் ஆதரிக்கிறேன்.

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 2 1949, பக்கம் 125-26.

**திரு. எச்.வி. காமத்:** மதிப்பிற்குரிய என் நண்பர் டி.டி. கிருஷ்ண மாச்சாரிக்கு நான் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்: வைமர் அர சமைப்பின் உறுப்பு 48 தொடர்பாக நான் எடுத்துக்காட்டும் செய்தி, இட்லர் தனது சர்வாதிகாரத்தை நிலைநாட்ட அதே வழிவகைகளைப் பயன்படுத்தினார் என்பதாகும்.

**திரு. அவைத் தலைவர்:** டாக்டர் அம்பேத்கர் பேச விரும்பக் கூடும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** எனக்குத் தெரியாது; விவாதத்தில் இவ்வளவு நேரம் எடுத்துக் கொள்ளப்பட்டு விட்டது. விவாதத்தில் பங்கேற்ற உறுப்பினர்கள் நான் ஏதேனும் கூற வேண்டு மென விரும்பினால், பேசுவதில் எனக்கு மகிழ்ச்சிதான். அதுவும் கூட நாளைக்குத்தான் பேச முடியும்.

**திரு. அவைத் தலைவர்:** எழுப்பப்பட்ட எல்லா வாதக் கூறு களுக்கும் திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி விளக்கமளித்திருப்பதாக நினைக்கிறேன். உறுப்பினர்கள் எழுப்பியுள்ள வாதக் கூறுகளுக்கு நீங்கள் பதிலளிக்க வேண்டிய அவசியம் இல்லாது போகலாம்.

**பண்டித தாகூர் தாஸ் பார்கவா:** வேறு எந்தப் பதிலும் எங்களுக்குத் தேவையில்லை.

**திரு. அவைத் தலைவர்:** நீங்கள் பதிலளிக்கவில்லை என்றால் தத்தமது கருத்துகளைத் தெரிவித்துள்ள உறுப்பினர்களுக்கு எவ்வகை யிலும் அவமரியாதையாகிவிடும் என்று நான் கருதவில்லை. ஆனால் நீங்கள் பதிலளிக்க விரும்பினால் அதைத் தடுக்க முடியாது என்பது உறுதி. நீங்கள் பதிலளிக்க அதிக நேரம் எடுத்துக் கொள்வீர்களா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் சிறிது நேரம் எடுத்துக் கொள்வேன். எழுப்பப்பட்ட வாதக் கூறுகளுக்கு ஏற்கெனவே திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி பதிலளித்து விட்டதால் பதிலேதும் சொல்லத் தேவையில்லை என்று நினைத்தேன்.

**பேராசிரியர் சிபன்லால் சக்சேனா:** நாளை அவர் பேசக் கேட்போம். எப்படியாயினும் அவர் கூறுவதைக் கேட்க விரும்பு கிறோம்.

**திரு. அவைத் தலைவர்:** நான் நேரத்தைப் பற்றி மட்டுமே யோசிக்கிறேன். பதிலேதும் குறிப்பாகத் தேவைப்படுகிறது என்று நான் கருதவில்லை. திருத்தங்களை இப்போது வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

***(4 திருத்தங்களுமே மறுதலிக்கப்பட்டன. டாக்டர் அம்பேத்கர் முன் மொழிந்தவாறு உறுப்பு 276 ஏற்றுக்கொள்ளப்பட்டு அரசமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.)***

## உறுப்பு 276

* * *

[1]**திரு. நசிருதீன் அகமது** *(மேற்கு வங்காளம்: முஸ்லீம்)*: 3003 ஒரு வரைவுத் திருத்தமென நான் சுட்டிக்காட்டலாமா? அது ஒரு சில சொற்களை ஓர் இடத்திலிருந்து பிறிதோர் இடத்திற்குப் பெயர்க்க மட்டுமே செய்கிறது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்** *(பம்பாய்: பொது)*: அவ்வாறு இருந்தால் நான் ஏற்றுக்கொள்கிறேன்.

*(எண் 3004, 3005 ஆகிய திருத்தங்கள் முன்மொழியப்படவில்லை.)*

**திரு. அவைத் தலைவர்:** சரிநுட்பமாகப் பார்த்தால் எண் 3006 வரைவுத் தன்மை கொண்டதல்ல. 3003க்குத் தொடர் விளைவாகவே 3006 உள்ளது. ஆகவே இரண்டையும் முன்மொழிவது நன்று.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் பணிந்து முன்மொழிவது:

> ''உறுப்பு 276 இல் பிறகு என்ற சொல்லை அடுத்துவரும் 'இந்த அரசமைப்புச் சட்டத்தில் என்ன கூறப்பட்டிருப்பினும்' என்ற சொற்களை நீக்கிவிட்டு அதே உறுப்பின் கூறு (அ) என்பதின் தொடக்கத்தில் 'இந்த அரசமைப்பு சட்டத்தில் என்ன கூறப்பட்டிருப்பினும்' என்ற சொற்களை நுழைக்கலாம்.

நான் மேலும் முன்மொழிவது:

> ''உறுப்பு 276இன் கூறு (ஆ)இல் 'ஒன்றியப் பட்டியலில் சேர்க்கப்படாத ஒன்று என்றபோதிலும்' என்ற வார்த்தைகளை முடிவில் சேர்க்கலாம்.''

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 3 1949, பக்கம் 129.

*(துணைப் பட்டியலின் திருத்தம் எண் 119 முன்மொழியப்படவில்லை.)*

**திரு. அவைத் தலைவர்:** வேறு திருத்தம் ஏதுமில்லை.

★ ★ ★

[1]**திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி** (சென்னை: பொது): அவைத் தலைவர் அவர்களே, இந்திய அரசாங்கச் சட்டப் பிரிவு 126ஐ நண்பர் திரு. நசிருதீன் அகமது கவனித்துப் பார்ப்பாரானால் டாக்டர் அம்பேத்கரின் திருத்தம் ஏன் தேவைப்படுகிறது என்பதைக் காண்பார் எனக் கருதுகிறேன். ஏனென்றால் நெருக்கடி நிலைக் காலங்களில், அதாவது நெருக்கடி நிலை அறிவிக்கப்பட்டிருக்கும்போது உறுப்பு 276 (ஆ) ஒன்றியத்திற்கு நிர்வாக அதிகாரம் வழங்குகிறது. விதியின் பொருளைத் தெள்ளத் தெளிவாக்கும் பொருட்டு இச்சொற்கள் அவசியமே. இந்திய அரசாங்கச் சட்டம் பிரிவு 126-Aஇல் பயன்படுத்தப்பட்ட மொழியின் நடை வாயிலாகச் செய்தி தெளிவுபடுத்தப்பட்டுள்ளது. அவர் மீண்டும் ஒருமுறை இப்பிரிவைப் படித்துப் பார்த்தால் இந்த உறுப்பில் இச்சொற்களைச் சேர்க்க மறுப்பேதும் இல்லையென்பதைக் காண்பார்.

**திரு. அவைத் தலைவர்:** டாக்டர் அம்பேத்கர், நீங்கள் ஒன்றும் சொல்ல விரும்பவில்லையா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இல்லை ஐயா, நான் எதுவும் சொல்லத் தேவையில்லை.

**திரு. அவைத் தலைவர்:** அப்படியானால் இப்போது திருத்தங்களை வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

*(டாக்டர் அம்பேத்கரின் திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது. திருத்தப்பட்ட வடிவில் உறுப்பு 276 அரசமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.)*

## உறுப்புகள் 188, 277-A, 278, 278-A

[2]**திரு. அவைத் தலைவர்:** அடுத்து உறுப்பு 277ஐ எடுத்துக் கொள்வோம்.

---

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 ஆகஸ்டு 3, பக்கம் 130.
2. மேற்படி அதே நூல், பக். 130-35.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இப்போதைக்கு உறுப்பு 277ஐ நிறுத்தி வைத்துக் கொள்ள விரும்புகிறேன்.

**திரு. அவைத் தலைவர்:** அப்படியானால், உறுப்பு 277-A-ஐ எடுத்துக் கொள்வோமா? உறுப்பு 277 இப்போதைக்கு நிறுத்தி வைத்துக் கொள்ளப்படுகிறது. உறுப்பு 277-A-ஐ இப்போது எடுத்துக் கொள்வோம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, உறுப்பு 188ஐக் கைவிடுவதற்கான திருத்தம், புதிய உறுப்பு 277-Aஐச் சேர்த்தல், பழைய உறுப்பு 278க்குப் பதிலாக 278, 278-A ஆகிய இரு புதிய உறுப்புகளை இடம்பெறச் செய்தல் ஆகிய மூன்று திருத்தங்களுமே ஒரே அடிப்படையிலிருந்து விளைவதால் அவற்றை ஒன்றாக எடுத்துக் கொண்டால் நன்றாயிருக்கும் என்று நினைக்கிறேன். அவற்றைத் தனித்தனியாக வாக்கெடுப்புக்கு விடலாம்; ஆனால், விவாதத்திற்கு அவற்றை ஒன்றாகவே எடுத்துக் கொள்ளலாம் என்று கருதுகிறேன்.

**திரு. அவைத் தலைவர்:** உறுப்புகள் 188, 278, 278-A ஆகியவற்றை ஒன்றாகச் சேர்த்தே எடுத்துக் கொள்வோம். ஏனெனில் அவை ஒரே அடிப்படையிலிருந்து விளையும் செய்திகள் தொடர்பானவை ஆகும். அவற்றை வாக்கெடுப்புக்குத் தனித்தனியாக வைக்கவுள்ள போதிலும் இந்த உறுப்புகளனைத்தும் குறித்த விவாதத்தை ஒன்றாகச் சேர்த்து எடுத்துக் கொண்டால் நன்றாக இருக்கும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் முன்மொழிவது:

"உறுப்பு 188ஐ நீக்கிவிடலாம்."

ஐயா, நான் முன்மொழிவது:

மாநிலத்தை அயல் ஆக்கிரமிப்புக்கும் உள்நாட்டுக் கலவரத்துக்கும் எதிராகப் பாதுகாத்திட ஒன்றியத்துக்குள்ள கடமை

"உறுப்பு 277க்குப் பிறகு பின்வரும் புதிய உறுப்பை நுழைக்கலாம்:

277-A. அயல் ஆக்கிரமிப்புக்கும் உள்நாட்டுக் கலவரத்துக்கும் எதிராக ஒவ்வொரு மாநிலத்தையும் பாதுகாப்பதும் இந்த அரசமைப்புச் சட்டத்தின் வழிவகைகளுக்கேற்ப ஒவ்வொரு மாநில அரசாங்கமும் தொடர்ந்து செயல்படுவதை உறுதி செய்வதும் ஒன்றியத்தின்கடமையாகும்.

மேலும், ஐயா பட்டியல் IIஇன் திருத்தம் எண் 160ஐ முன்மொழி கிறேன். அதாவது,

*''உறுப்பு 278க்குப் பதிலாகப் பின்வரும் உறுப்புகளை இடம்பெறச் செய்ய லாம்:*

*மாநிலத்தில் அரசமைப்புச் சட்ட இயந்திரம் செயலற்றுப் போகும் நேர்விற் கான வழிவகைகள்:*

*278. (1) இந்த அரசமைப்புச் சட்டத்தின் வழிவகைகளுக்கேற்ப ஒரு மாநிலத் தின் அரசாங்கத்தைத் தொடர்ந்து நடத்திச் செல்ல முடியாது என்று ஆளுநர் அல்லது ஆட்சியாளரிடமிருந்து அறிக்கை பெற்றோ, பெறாமலோ குடியரசுத் தலைவர் மனநிறைவு கொள்வாரானால், பிரகடனம் கொண்டு அவர் -*

*(அ) அம்மாநில அரசாங்கத்தின் பணிகளில் அனைத்தையும் அல்லது எதனை யும் நேர்வைப் பொறுத்து ஆளுநர் அல்லது ஆட்சியாளருக்கு வழங்கப்பட் டுள்ள அல்லது அவரால் செலுத்தப்படக் கூடிய அல்லது மாநிலத்தின் சட்ட மன்றம் அல்லாத அம்மாநிலத்திலுள்ள வேறு எந்த அமைப்பு அல்லது ஆணையத்திடமும் வழங்கப்பட்டுள்ள அல்லது அதனால் செலுத்தப்படக்கூடிய அதிகாரங்களில் அனைத்தையும் அல்லது எதனையும் தமக்கென்று எடுத்துக் கொள்ளலாம்.*

*(ஆ) அம்மாநிலத்தின் சட்டமன்றத்தின் அதிகாரங்கள் நாடாளுமன்றத்தால் அல்லது நாடாளுமன்றத்தின் ஆணையுரிமைப்படி செலுத்தப்படக் கூடியதா யிருக்கும் என்று அறிவிக்கலாம்;*

*(இ) பிரகடனத்தின் நோக்கங்களைச் செயலாக்குவதற்குத் தேவையானவை அல்லது விரும்பத்தக்கவை என குடியரசுத் தலைவருக்குத் தோன்றக்கூடிய இடைநிகழ்வான மற்றும் தொடர்விளைவான வழிவகைகளை உருவாக் கலாம்; மாநிலத்திலுள்ள எந்தவோர் அமைப்பு அல்லது ஆணையம் தொடர் பாகவும் இந்த அரசமைப்புச் சட்டத்தின் வழிவகைகளில் எதன் செயற்பாட்டை யும் முழுமையாகவோ அல்லது பகுதியாகவோ நிறுத்தம் செய்வதற்கான வழிவகைகளும் இவற்றில் அடங்கும்.*

*ஆனால் இந்தக் கூறில் அடங்கியுள்ள எதுவும், ஓர் உயர்நீதிமன்றத்திடம் வழங்கப்பட்டுள்ள அல்லது அதனால் செலுத்தப்படக்கூடிய அதிகாரங்களில் எதனையும் தனக்கென்று எடுத்துக் கொள்வதற்கோ அல்லது உயர்நீதிமன்றங் கள் தொடர்பாக இந்த அரசமைப்புச் சட்டத்திலுள்ள வழிவகைகளில் எதன் செயற்பாட்டையும் முழுமையாகவோ, பகுதியாகவோ இடைநிறுத்தம் செய் வதற்கோ குடியரசுத் தலைவருக்கு அதிகாரமளிப்பதாகாது.*

*(2) இவ்வகையான எந்தவொரு பிரகடனத்தையும் அடுத்து ஒரு பிரகடனத் தைக் கொண்டு விலக்கிக் கொள்ளலாம் அல்லது மாற்றியமைக்கலாம்.*

*(3) இந்த உறுப்பின்படியான ஒவ்வொரு பிரகடனமும் நாடாளுமன்ற அவைகள் ஒவ்வொன்றின் முன்னும் வைக்கப்படும்; அது முந்தைய பிரகடனத்தை விலக்கிக் கொள்ளும் பிரகடனமாக இருக்கும் நேர்வைத் தவிர்த்துப் பார்த்தால் இரண்டு மாத காலம் கழிந்து முடிவதற்கு முன் நாடாளுமன்றத்தின் ஈரவை களும் தீர்மானம் கொண்டு அதற்கு ஒப்புதல் அளிக்காவிட்டால் இரண்டு மாத கால முடிவில் அது செயலற்றுப் போகும்.*

ஆனால் இவ்வகையான பிரகடனம் ஏதும் மக்களவை கலைக்கப்பட்டிருக்கும் போது வெளியிடப்பட்டால் அல்லது இந்தக் கூறில் சுட்டப்பெறும் இரண்டு மாத காலத்தின்போது மக்களவைக் கலைப்பு நிகழ்ந்து அந்தக் காலம் முடிவதற்கு முன் இப்பிரகடனத்திற்கு ஒப்புதல் அளிக்கும் தீர்மானத்தை மக்களவை இயற்றவில்லை என்றால் மக்களவை மீண்டும் அமைக்கப்பட்ட பிறகு அதன் முதல் அமர்வு நாளிலிருந்து முப்பது நாள் கழிந்து முடிவதற்கு முன் இந்தப் பிரகடனத்தை ஏற்றுக்கொண்டு நாடாளுமன்றத்தின் ஈரவைகளும் தீர்மானங் கள் இயற்ற வேண்டும். இல்லாவிட்டால் முப்பது நாள் கழிந்து முடியும்போது பிரகடனம் செயலற்றுப்போகும்.

ஆனால், இவ்வகையான ஒரு பிரகடனம் விலக்கிக் கொள்ளப்படவில்லை என்றால், அது தொடர்ந்து செயலில் இருப்பதற்கு ஒப்புதலளிக்கும் தீர் மானத்தை நாடாளுமன்றத்தின் ஈரவைகளும் நிறைவேற்றுமானால் எவ்வளவு காலத்திற்கு ஒருமுறை நிறைவேற்றுகிறது என்பதைப் பொறுத்து இந்தக் கூறின் படி, மற்றவாறு அது செயல்படாமல் போயிருக்கக்கூடிய நாளிலிருந்து மேலும் ஆறு மாத காலத்திற்குத் தொடர்ந்து செயல்பட்டுவரும்; ஆனால் எந்நிலை யிலும் இவ்வகையான ஒரு பிரகடனம் மூன்றாண்டிற்கு மேல் செயலில் இருந்து வராது.

ஆனால், மேற்சொன்ன ஆறு மாத காலங்களில் ஏதேனும் ஒன்றின்போது மக்களவை கலைப்பு நிகழ்ந்து, இவ்வகையான பிரகடனம் தொடர்ந்து செயலிலிருப்பதற்கு ஒப்புதலளிக்கும் தீர்மானத்தை மக்களவை நிறைவேற்ற வில்லை என்றால் மக்களவை மீண்டும் அமைக்கப்பட்ட பிறகு அதன் முதல் அமர்வு நாளிலிருந்து 30 நாள் கழிந்து முடிவதற்கு முன் பிரகடனத்திற்கு ஒப்புதல் அளிக்கும் தீர்மானங்களை நாடாளுமன்றத்தின் ஈரவைகளும் நிறைவேற்றாவிட்டால் அந்த முப்பது நாள்கால முடிவில் பிரகடனம் செயலற்றுப் போகும்.

''278-A. (1) இந்த அரசமைப்புச் சட்டத்தின் உறுப்பு 278இன் கூறு (1)இன்படி வெளியிடப்படும் ஒரு பிரகடனத்தைக் கொண்டு அம்மாநிலச் சட்டமன்றத் தின் அதிகாரங்கள் நாடாளுமன்றத்தினால் அல்லது நாடாளுமன்றத்தின் ஆணையுரிமைப்படி செலுத்தப்படக் கூடியவையாக இருக்கும் என்று அறிவிக் கப்பட்டிருக்கும் இடத்தே, பின்வரும் நடவடிக்கைகளை மேற்கொள்ள அருகதை இருக்கும்

(அ) நாடாளுமன்றமானது மாநிலத்திற்குச் சட்டங்கள் இயற்றும் அதிகாரத் தைக் குடியரசுத் தலைவரிடமோ, இதற்கென்று அவரால் குறித்துரைக்கப்படும் வேறோர் ஆணையத்திடமோ ஒப்படைக்கலாம்;

(ஆ) நாடாளுமன்றமோ, குடியரசுத் தலைவரோ, இந்தக் கூறின் உட்கூறு (அ)இன்படி சட்டங்கள் செய்யும் அதிகாரம் ஒப்படைக்கப்பெறும் வேறு ஆணையமோ இந்திய அரசாங்கத்திற்கு அல்லது அதன் அதிகாரிகளுக்கும் ஆணையங்களுக்கும் அதிகாரங்கள் வழங்குவதற்கும் கடமைகள் விதிப்பதற் கும் சட்டங்கள் செய்யலாம், அல்லது இப்படியெல்லாம் செய்திட அதிகார மளிப்பதற்குச் சட்டங்கள் செய்யலாம்;

(இ) மக்களவை அமர்வில் இல்லாதபோது மாநிலத்தின் தொகுப்பு நிதி யிலிருந்து செலவு செய்வதற்கு நாடாளுமன்றம் அனுமதி வழங்குவதற்கிடை யில் குடியரசுத் தலைவர் அதிகாரமளிக்கலாம்;

*(ஈ) நாடாளுமன்றத்தின் ஈரவைகளும் அமர்வில் உள்ள காலம் தவிர குடியரசுத் தலைவர் இந்த அரசமைப்புச் சட்டத்தின் உறுப்பு 102இன்படி அவசரச் சட்டங்கள் பிறப்பிக்கலாம்.*

*(2)நாடாளுமன்றத்தால் அல்லது நாடாளுமன்றத்தின் ஆணையுரிமைப்படி செய்யப்படும் எந்தவொரு சட்டமும், இந்த அரசமைப்புச் சட்டத்தின் உறுப்பு 275இன்படி ஒரு பிரகடனம் வெளியிடப்பட்டிருக்காவிட்டால் நாடாளுமன்றத் திற்கோ குடியரசுத் தலைவருக்கோ அல்லது இந்த உறுப்பின் கூறு (1)இன் உட்கூறு (அ)இல் சுட்டப்பெறும் வேறு ஆணையத்திற்கோ இச்சட்டத்தைச் செய்யும் அருகதை இருந்திருக்காது என்ற நிலையில், இப்பிரகடனம் செய லற்றுப் போன பிறகு ஓராண்டு கால முடிவில் அருகதையின்மையின் அளவைப் பொறுத்துச் செயலற்று போகும்; மேற்சொன்ன காலம் முடிவதற்கு முன் செய்யப்பட்ட அல்லது செய்யாமல் விடப்பட்ட செய்திகள் தொடர்பாக மட்டும் இது பொருந்தாது; இவ்வாறு செயலற்றுப் போகக் கூடிய வழிவகை கள் மாநிலச் சட்டமன்றத்தின் சட்டம் கொண்டு விரைவில் நீக்கம் செய்யப் பட்டால் அல்லது திருத்தத்துடனோ திருத்தமில்லாமலோ மறுபடியும் சட்டமாக்கப்பட்டால் மட்டுமே அது செயலற்று போகாமல் இருந்துவரும்.*

**திரு. எச்.வி. காமத்** (மத்திய மாகாணம் மற்றும் பேரார்: பொது): உறுப்பு 188 கூடவா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** 188 நீக்கப்படு மெனச் சொல்லியுள்ளேன். உண்மையில் இத்திருத்தத்தை முன் மொழியத் தேவையில்லை. ஆனால் அவைக்கு ஒரு முழுமையான படப்பிடிப்பைத் தர வேண்டுமென்பதற்காக நாங்கள் உறுப்பு 188ஐ நீக்க எண்ணியிருப்பதாகச் சொல்லியுள்ளேன்.

ஐயா, அநேகமாக இந்த உறுப்பு குறித்து முழு அளவிலான விவாதம் நடைபெறும் எனவும் இப்போது எழுப்பப்படக்கூடிய விமர்சனக் கூறுகளுக்கு விளக்கமளிக்க ஒரு கட்டத்தில் நான் அழைக் கப்படலாம் எனவும் எதிர்பார்க்கிறேன். ஆகவே புதிய திட்டத் திலிருந்து எழக்கூடிய பல்வேறு கூறுகளையும் விரிவாக அலசி ஆராய்கின்ற வேளையில் நான் இறங்காமலிருப்பதே சரியாக இருக்கு மென நினைக்கிறேன். உறுப்பு 188ஐக் கைவிடுவதன் மூலமும், உறுப்பு 277-Aஐச் சேர்ப்பதன் மூலமும் பழைய உறுப்பு 278க்குப் பதிலாக 278, 278-A என்னும் புதிய உறுப்புகளை இடம்பெறச் செய் வதன் மூலமும் நாங்கள் ஏற்படுத்திக் கொடுக்கிற அமைப்பின் உரு வரைவையை வழங்குவது மட்டுமே தொடக்கத்தில் என் கருத்தாகும்.

அரசமைப்புச் சட்டத்தின் பொதுவான கோட்பாடுகள் குறித்து நாம் பரிசீலனை செய்து கொண்டிருந்தபோது அரசமைப்புச் சட்டத்தின்

நிலை குலைவிற்காக அச்சட்டம் ஏதேனும் ஓர் இயந்திரத்தை ஏற்படுத்திக் கொடுக்க வேண்டுமென்று இந்த அவை ஏற்றுக் கொண்டிருப்பதைத் தொடக்கத்திலேயே நினைவுபடுத்துவது நன்றெனக் கருதுகிறேன். வேறு சொற்களில் சொன்னால் 1935 ஆம் ஆண்டின் இந்திய அரசாங்கச் சட்டத்தின் பிரிவு 93இல் அடங்கியுள்ள வழிவகைகளை ஓரளவு ஒத்திருக்கக்கூடிய ஏதேனும் ஒரு வழிவகையை அரசமைப்புச் சட்டத்தில் சேர்க்க வேண்டும். இந்தக் கோட்பாடு அவையால் ஏற்றுக்கொள்ளப்பட்ட கட்டத்தில் பின்வரும் யோசனை தெரிவிக்கப்பட்டது. மாகாணத்தின் விவகாரங்களை நிர்வாகம் செய்வதற்காக இந்த அரசமைப்புச் சட்டத்தினால் ஏற்படுத்தப்பட்ட இயந்திரம் நிலைகுலைவதாக அம்மாகாணத்தின் ஆளுநர் கருதினால், இரு வார காலத்திற்கு அம்மாகாணத்தின் நிர்வாகத்தைப் பிரகடனம் கொண்டு தாமே எடுத்துக் கொள்ளும் அதிகாரம் அவருக்கு இருக்க வேண்டும். அதன் பிறகு அவர் இயந்திரம் நிலைகுலைந்து விட்டதாகவும், தாம் ஒரு பிரகடனத்தை வெளியிட்டுள்ளதாகவும், தாமே நிர்வாகத்தை எடுத்துக் கொண்டு விட்டதாகவும் இந்திய ஒன்றியத்தின் குடியரசுத் தலைவருக்குச் செய்தி அனுப்ப வேண்டும். மூலவரைவின் உறுப்பு 188இன்படி ஆளுநரால் அளிக்கப்பட்ட அறிக்கையின் அடிப்படையில் உறுப்பு 278இன்படி குடியரசுத் தலைவர் செயல்படலாம். இதுவே மூல வரைவின் திட்டமாகும்.

இப்போது என்ன நினைக்கிறோம் என்றால்: குடியரசுத் தலைவர் நடவடிக்கை எடுத்தாக வேண்டிய அளவிற்கு உண்மையான நெருக்கடி நிலை ஏற்பட்டால் முதலில் அரசமைப்புச் சட்டத்தை இரு வாரத்திற்கு மட்டும் நிறுத்தி வைக்கும் அதிகாரத்தை ஆளுநருக்கு வழங்குவது உருப்படியான எந்த நோக்கத்திற்கும் பயன்படாமற் போகலாம். இந்த அரசமைப்புச் சட்டத்தில் உருக்கொடுக்கப்பட்டுள்ள அரசமைப்பை நிலைநிறுத்தும் பொருட்டு குடியரசுத் தலைவர் தாம் இறுதியில் மாகாணக் களத்தில் இறங்கும் பொறுப்பை ஏற்க வேண்டும் என்றால் அவர் ஆரம்பத்திலேயே களத்தில் இறங்குவதே சாலச்சிறந்தது. நிலைமைக்கேற்ற சரியான அணுகுமுறை இதுதான் என்ற அடிப்படையில், அதாவது பொறுப்பு குடியரசுத் தலைவரையே சாருமென்றால் அவர் தொடக்கத்திலிருந்தே களத்திற்கு வரவேண்டும் என்ற அடிப்படையில் உறுப்பு 188 பயனற்றதும் கொஞ்சங்கூட தேவையற்றதுமாகும் என்பது கண்கூடு. இதனால் உறுப்பு 188ஐ நீக்கலாம் என முன்மொழிந்துள்ளேன்.

இப்போது உறுப்பு 277-A-க்கு வருகிறேன். உறுப்பு 277-A ஒரு பக்திசிரத்தையுள்ள பிரகடனமே எனவும், அதற்கு இடமளிக்கத் தேவையில்லை எனவும் சிலர் கருதக்கூடும். வரைவுக்குழு இதை வேறுவிதமாகப் பார்க்கிறது. ஆகவே, உறுப்பு 277-A-க்கு இடமளித் தாக வேண்டும் என்று வரைவுக்குழு கருதுவதேன் என்று விளக்க மளிக்க விரும்புகிறேன். மாகாணங்கள் மீது சவாரி செய்யும் அதி காரங்களை மைய அரசுக்கு வழங்கும்படியான பல வழிவகைகளைத் தன்னகத்தே கொண்டுள்ள போதிலும் நமது அரசமைப்புச் சட்டம் ஒரு கூட்டாட்சி அரசமைப்புச் சட்டமாகும் என்பது ஏற்றுக்கொள்ளப் பட்டிருப்பதாக நினைக்கிறேன். இப்படி நாம் சொல்லும்போது மைய அரசு அரசமைப்புச் சட்டத்தால் அதற்கு ஒதுக்கப்படும் துறையில் இறைமை வாய்ந்ததாக இருப்பது போலவே மாகாணங்களும் அவற் றுக்கு ஒதுக்கப்படும் துறையில் அதே அளவு இறைமை வாய்ந்தவை யாகும் என்பதே இதன் பொருள். வேறுவிதமாக சொன்னால் மாகா ணங்கள் நிறைவேற்றக்கூடிய சட்டம் எதனையும் ஒதுக்கித் தள்ளு வதற்கு மைய அரசாங்கத்தை அனுமதிக்கும் வழிவகைகளைத் தவிர்த்து, மாகாணங்களின் அமைதி, ஒழுங்கு, நல்லாட்சி ஆகியவற் றுக்காக எந்தவொரு சட்டமும் இயற்றிட முழுநிறை ஆணையுரிமை மாகாணங்களுக்குள்ளது. அரசமைப்புச் சட்டம் மாகாணங்களை இறைமை வாய்ந்தவையாக்கி மாகாணத்தின் அமைதி, ஒழுங்கு, நல்லாட்சி ஆகியவற்றுக்காக எந்தவொரு சட்டமும் இயற்றிட முழு நிறை அதிகாரங்களை அவற்றுக்கு வழங்கியிருக்கும் நிலையில், உண்மையாகச் சொன்னால் மைய அரசோ, வேறு ஆணையம் எதுவுமோ தலையிடுவதற்குத் தடை விதிக்கப்பட்டிருப்பதாகவே கருத வேண்டும். ஏனெனில் இப்படிப்பட்ட தலையீடு மாகாணத்தின் இறைமை வாய்ந்த ஆணையுரிமை மீதான படையெடுப்பாகவே இருக்கும். இது ஓர் அடிப்படைக் கொள்கை. நமக்கு ஒரு கூட்டாட்சி அரசமைப்புச் சட்டம் உள்ளதென்ற உண்மையின் காரணமாக நாம் இதை ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும் எனக் கருதுகிறேன். இது இவ்வாறு இருக்க, உறுப்புகள் 278, 278-A ஆகியவற்றின் தகுதியின் அடிப்படையில் மைய அரசுக்கு நாம் அதிகாரமளிக்க எண்ணியுள்ள படி மாகாணத் துறைகளின் நிர்வாகத்தில் மைய அரசு குறுக்கிட வேண்டுமானால், அரசமைப்புச் சட்டம் மைய அரசுக்கு விதிக்கிற ஏதேனும் ஒரு கடப்பாட்டைக் கொண்டும், அக்கடப்பாட்டின்படி யுமே அது நடைபெற வேண்டும். இந்தப் படையெடுப்பானது வேண்டுமென்றே, தற்போக்காக, சட்டத்தின் அதிகாரமில்லாமல் நடத்தப்படுகிற படையெடுப்பாக இருக்கக்கூடாது. ஆகவே 278,

278-A ஆகிய உறுப்புகளை மாகாணத்தின் ஆணையுரிமை மீது மைய அரசு வேண்டுமென்றே நடத்தும் படையெடுப்பாகக் கருதக்கூடா தென்பதைத் தெள்ளத் தெளிவாக்கும் பொருட்டு 277-A என்ற உறுப்பைக் கொண்டுவர எண்ணியுள்ளோம். ஒவ்வோர் அலகையும் பாதுகாப்பதும், மேலும் அரசமைப்புச் சட்டத்தை நிலைநிறுத்துவதும் ஒன்றியத்தின் கடமையாகும் என்று 277-A கூறுவதை உறுப்பினர்கள் காண்பார்கள். இத்தகைய கடப்பாட்டைப் பொறுத்தவரை நமது அரசமைப்புச் சட்டம் ஒன்றுதான் இந்தக் கடமையையும், கடப்பாட் டையும் தோற்றுவிக்கப் போகிறது என்பதில்லை. இதேபோன்ற கூறுகள் அமெரிக்க அரசமைப்புச் சட்டத்தில் காணப்படுகின்றன, ஆஸ்திரேலிய அரசமைப்புச் சட்டத்திலும் இடம்பெற்றுள்ளன. அங்கே அயல் ஆக்ரமிப்பு அல்லது உள்நாட்டுக் குழப்பத்திலிருந்து அலகுகள் அல்லது மாநிலங்களைப் பாதுகாப்பது மைய அரசின் கடமையாகும் என்று அரசமைப்புச் சட்டம் நேரடியாகவே வழிவகை செய்கிறது. நாம் செய்ய எண்ணியிருப்பதெல்லாம், அமெரிக்க, ஆஸ்திரேலிய அர சமைப்புச் சட்டங்களில் தெளிந்துரைக்கப்பட்டுள்ள கோட்பாடுடன் கூடுதலாகக் கூறு ஒன்றைச் சேர்ப்பதே. அதாவது இச்சட்டம் விதித் துள்ளபடி மாகாணங்களில் அரசமைப்புச் சட்டத்தை நிலைநிறுத் துவது ஒன்றியத்தின் கடமையாகவும் இருக்கும் என்பதே. இதில் புதிய தாக ஏதுமில்லை, நான் முன்பே சொன்னதுதான், நாம் மாகாணங் களுக்கு முழுநிறை அதிகாரங்களை வழங்கி அவற்றை அவற்றிற்குரிய துறைக்குள் இறைமை வாய்ந்தவையாக்குகிறோம் என்பதைக் கருத் தில் கொண்டால், மைய அரசு மாகாணத் துறையில் படையெடுப்பு ஏதும் நிகழ்த்தினால் அதற்கு இந்தக் கடப்பாடே அடிப்படை என்று வழி வகை செய்வது அவசியம். கடமையையும் கடப்பாட்டையும் நிறை வேற்றுகிற ஒரு செயலாகவே அது இருக்கும். அரசமைப்புச் சட் டத்தைப் பொறுத்தவரை, வேண்டுமென்றே மனம் போனபோக்கில் அதிகாரமின்றிச் செய்த செயலாக அதைக் கருத முடியாது. இதனால் தான் நாம் 277-A என்னும் உறுப்பை அறிமுகம் செய்துள்ளோம்.

உறுப்புகள் 278, 278-A ஆகியவை தனித்தனியான இரு கூறு களாகத் தோன்றிய போதிலும் அவை மூல உறுப்பு 278-இன் பிரிவு களே. உறுப்பு 278 ஏழு கூறுகளைக் கொண்டுள்ளது எனலாம். முதல் நான்கு கூறுகள் புதிய உறுப்பு 278 இல் சேர்க்கப்படுகின்றன. கூறு (4)க்கு மேல் உறுப்பு 278-A-இல் இடம்பெறுகின்றன. இவ்வாறு பிரித்திரா விட்டால் முழு உறுப்பாகிய 278 மிக நீண்டதாக அமைந்திருக்கும், அதில் அடங்கிய பல்வேறு வழிவகைகளை விளங்கிக் கொள்வது

உறுப்பினர்களுக்குக் கடினமாய் இருந்திருக்கக்கூடும் என்பதே பிரிப்பதற்கான காரணம். இந்த இடர்ப்பாட்டைக் களைவதற்காகவே இவ்விதம் பிரிக்கப்பட்டது.

உறுப்பு 278ஐப் பொறுத்தவரை, குறிப்பிட்டுச் சொல்ல வேண்டிய முதல் மாற்றம் ஆளுநரிடமிருந்து அறிக்கை பெற்றோ பெறாமலோ குடியரசுத் தலைவர் நடவடிக்கை எடுக்க வேண்டும் என்பதாகும். ஆளுநர் அளிக்கும் அறிக்கையின் அடிப்படையில் குடியரசுத் தலைவர் செயல்பட வேண்டும் என்று மட்டுமே மூல உறுப்பு 188 வழிவகை செய்தது. ''பெறாமல்'' என்ற சொல் அதில் இடம் பெறவில்லை. இப்போது உறுப்பு 278க்கு முன்னால் வரும் உறுப்பு 277-A ஆனது மைய அரசுக்கு ஒரு கடமையையும் கடப்பாட்டையும் விதிக்கிறது என்ற உண்மையைக் கருத்தில் கொண்டால், கடமையை நிறைவேற்றும் விதத்தில் குடியரசுத் தலைவர் சந்தேகமில்லாமல் உறுதியாக எடுக்கப் போகிற நடவடிக்கையை மாகாண ஆளுநர் அளிக்கும் அறிக்கை என்ற அளவோடு மட்டும் குறுக்கிக் கட்டுப்படுத்துவது முறையாகாது என்று கருதப்படுகிறது. ஆளுநர் அறிக்கை அளிக்காத நிலையும் ஏற்படலாம், எனினும் குடியரசுத் தலைவர் தமது தலையீடு அவசர அவசியம் என்று கருதும்படியான உண்மைகளும் உள்ளன. உறுப்பு 277-Aஐக் கொண்டு வருவதன் அவசியத்தின் தொடர் விளைவாக, ஆளுநரிடமிருந்து அறிக்கை ஏதும் இல்லாத போதுங்கூட குடியரசுத் தலைவர் தாமே சில உண்மைகளை அறிந்து கொண்டு அவற்றின் அடிப்படையில் தமது கடமையை நிறைவேற்றுவதற்குச் செயல்பட்டாக வேண்டும் என்று கருதும்போதும் நடவடிக்கை எடுக்கும் சுதந்திரத்தை அவருக்கு நாம் அளித்தாக வேண்டும்.

உறுப்பு 278 செய்யும் இரண்டாவது மாற்றம் இதுவே: சட்டப் பேரவையின் ஆணையுரிமையும் அதிகாரங்களும் நாடாளுமன்றத்தால் மட்டுமே செலுத்தப்படக் கூடியவையென மூல வரைவில் உள்ளது. நாடாளுமன்றத்தால் அதன் ஆணையுரிமை வழங்கப் பெறக்கூடிய எவரும் இந்த ஆணையுரிமையைச் செலுத்தலாமென்று இப்போது வழிவகை செய்யப்படுகிறது. இடைநீக்கம் செய்யப்படக் கூடிய மாகாணச் சட்டமன்றங்களின் சட்டமியற்றும் அதிகாரங்களை உண்மையிலும் மெய்ந்நடப்பிலும் தன் வசம் எடுத்துக் கொள்வது நாடாளுமன்றத்துக்கு அதிகப்படியான சுமையாகிவிடலாம். ஏனெனில் நாடாளுமன்றத்துக்கு ஏற்கெனவே அதிக வேலை இருக்கலாம்.

பிரகடனத்தின்படி இடைநீக்கம் செய்யப்பட்ட சட்டமன்றத்திற் குரிய மாகாணங்களுக்கு அவசியமான சட்டமியற்றும் பணியைக் கையாளுவது அதற்கு முடியாமற் போகலாம். ஆகவே சட்டமியற் றும் பணியை எளிதாக்கும் பொருட்டு நாடாளுமன்றம் தானே அந்தப் பணியைச் செய்யலாம்; அல்லது குறிப்பிட்ட சில நிபந் தனைகளுக்கும் வரைமுறைகளுக்கும் கட்டுப்பாடுகளுக்கும் உட்பட்டு சட்டமியற்றும் பணியைச் செய்வதற்கு ஏதேனும் ஓர் ஆணையத் திற்கு அதிகாரமளிக்கலாம் என்று இப்போது வழிவகை செய்யப் படுகிறது.

மற்றொரு முக்கிய மாற்றம் என்னவென்றால், பிரகடனம் மேலும் நீடிப்பதற்கு நாடாளுமன்றம் இரு மாத காலம் முடிவதற்குள் தீர்மானம் இயற்றி ஒப்புதல் அளிக்காவிட்டால் இரு மாத கால முடிவில் அது செயலற்றுப்போகும். நாடாளுமன்றம் பிரகடனத்தை நீட்டிக்கவில்லை என்றால் அது ஆறு மாதங்களுக்குத் தொடர்ந்து செயல்படுமென மூல வரைவில் வழிவகை இருந்தது. நிகழ் வரைவில் இந்தக் கால வரையறை இரண்டு மாதங்கள் மட்டுமே என்று சுருக்கப் படுகிறது. அதன் பிறகு பிரகடனத்தை நீட்டிக்க வேண்டுமென்றால் நாடாளுமன்றம் தீர்மானம் இயற்றி அதற்கு ஒப்புதல் அளித்தாக வேண்டும்.

இரண்டாவது மாற்றம் என்னவென்றால், நாடாளுமன்றம் பிரகடனத்திற்கு ஒருமுறை ஒப்புதல் அளித்துவிட்டால் அந்தப் பிரக டனம் மேற்கொண்டு ஒப்புதல் பெறாமலே பன்னிரண்டு மாதங் களுக்குத் தானாகவே செயல்பட முடியும் என்று மூல உறுப்பில் கூறப்பட்டது. இந்த நிலையும் மாற்றப்பட்டுள்ளது. இந்தப் பன்னி ரண்டு மாத காலமும் இப்போது ஆறு, ஆறு மாதங்கள் என இரு கால வரைகளாகப் பிரிக்கப்படுகிறது. முதல் ஒப்புதலுக்குப் பின்னர் பிரகடனம் ஆறு மாதங்களுக்குச் செயல்பட முடியும். அதன் பின் நாடாளுமன்றம் மீண்டும் அதற்கு ஒப்புதல் அளிக்க வேண்டியிருக் கும். நாடாளுமன்றம் ஒப்புதல் அளித்த பிறகு அது மீண்டும் ஆறு மாதங்களுக்கு மட்டுமே செயல்படும். இதற்கு மேலும் நாடாளுமன்றம் அதற்கு ஒப்புதல் அளிக்கலாம். ஆக நாடாளுமன்றம் ஒப்புதல் அளித்த ஒரு பிரகடனத்திற்கு அனுமதிக்கப்பட்ட காலம் ஆறு மாதங்களாகும். மேலும் நீடிக்க மேலும் ஒப்புதல் பெற வேண்டியிருக்கும்; அதிகபட்ச வரம்பாக மூன்றாண்டுகளைக் குறித்துரைத்துள்ளோம். மூன்றாண்டு கால முடிவில் நாடாளுமன்றமோ குடியரசுத் தலைவரோ அம்மாநிலத்

திற்கு இந்தப் பிரகடனத்துக்கு வழிவகுத்த நிலவரத்தைத் தொடரச் செய்ய முடியாது.

அடுத்து நான் உறுப்பு 278-A-க்கு வருகிறேன். இதன் உட்கூறு (அ) மாநிலத்திற்காகச் சட்டங்கள் இயற்றும் அதிகாரத்தை குடியரசுத் தலைவருக்கோ இதற்கென்று அவரால் குறித்துரைக்கப்படும் ஏதேனும் ஓர் ஆணையத்துக்கோ நாடாளுமன்றம் அளிப்பதற்கு வழிவகை செய்கிறது; இது ஒரு புதிய கூறாகும்.

உட்கூறு (ஆ) என்பது உறுப்பு 278-A கூறு (1) உட்கூறு (அ) என்பதன் தொடர் விளைவாக எழும் மாற்றமே தவிர வேறல்ல. நாடாளுமன்றமோ, இதற்கென்று நாடாளுமன்றத்தால் நியமிக்கப் படும் ஏதேனும் ஒரு முகமையோ இயற்றக்கூடிய எந்தவொரு சட் டத்தையும் செயலாக்குவதற்கு எவர் ஒருவருக்கும், இந்திய அரசாங்க அதிகாரிகளுக்கு அல்லது மாகாண அரசாங்கங்களைச் சேர்ந்த அதிகாரி களுக்கும் கூட ஆணையுரிமை வழங்கலாம் என்று இந்த உட்கூறு சொல்கிறது.

உறுப்பு 278-A கூறு (1) உட்கூறு (இ) புதிய கூறாகும். இது நிதிநிலை அறிக்கைக்கு அனுமதி வழங்குவதற்கு வழிவகை செய் கிறது. உறுப்பு 278 இன் மூல வரைவில் இடைநீக்கம் செய்யப்பட்ட சட்டமன்றத்துக்குரிய ஒரு மாகாணத்தின் நிதிநிலை அறிக்கையை அனுமதிப்பதும் தயாரிப்பதும் எப்படி என்பதற்கு வழிவகை ஏதும் செய்யப்படவில்லை. உறுப்பு 278-A உடன் கூறு (1) உட்கூறு (இ) சேர்க்கப்பட்டதன் மூலம் இந்தப் பிரச்சினை இப்போது தீர்க்கப் பட்டு விட்டது. மக்களவை அமர்வில் இல்லாதபோது மாநிலத்தின் தொகுப்பு நிதியிலிருந்து எடுத்துச் செலவு செய்வதற்கு நாடாளு மன்றம் அனுமதி வழங்குவதற்கிடையில் குடியரசுத் தலைவர் இவ்வகைச் செலவீட்டுக்கு அதிகாரமளிக்கலாம் என்று இந்த உட்கூறு தெளிவாக வழிவகை செய்கிறது.

ஈரவைகளும் அமர்வில் இல்லாதபோது பொறுப்பில் எடுத்துக் கொள்ளப்பட்ட ஏதேனும் ஒரு குறிப்பான மாகாணத்தின் நிர்வாகத்தை நடத்தி செல்வது தொடர்பாகக் குடியரசுத் தலைவர் அவசரச் சட் டங்கள் பிறப்பிக்க உறுப்பு 102 வழங்கும் அதிகாரங்களையும் செலுத் தலாம் என்று உட்கூறு (ஈ) - அநேகமாய் இது அந்த உறுப்பில் உட் கிடையாக உள்ளதுதான் - தெள்ளத் தெளிவாக்குகிறது. மூல உறுப்பு 102

மைய அரசு தொடர்பாகப் பிறப்பிக்க வேண்டிய அவசரச் சட்டங்கள் என்ற அளவோடு நிறுத்திக் கொண்டது. பொறுப்பில் எடுத்துக் கொள்ளப்பட்ட ஒரு மாகாணத்தின் நிர்வாகத்தை நடத்தி செல்வதற் கென்று பிறப்பிக்கப்பட வேண்டிய எந்த அவசரச் சட்டம் தொடர் பாகவும் இந்த அதிகாரத்தைக் குடியரசுத் தலைவர் செலுத்துவார் என்று உட்கூறு (ஈ) வாயிலாகத் தெளிவுபடுத்துகிறோம்.

★ ★ ★

[1]**திரு. அவைத் தலைவர்:** வேறு சிலரும் பேச வேண்டியுள் ளது என்றும், ஏற்கெனவே இவ்விவாதத்திற்கு அவை ஐந்து மணி நேரம் எடுத்துக் கொண்டுள்ளது என்றும் அறிகிறேன். நாம் இப்போது விவாதத்தை முடித்துக் கொள்ள வேண்டுமெனவும் கருதுகிறேன். புதிய வாதங்கள் ஏதும் முன்வைக்கப்படும் என்று நான் நினைக்க வில்லை. இதுவரை முன்வைக்கப்பட்ட வாதுரைகளைக் கேட்ட பிறகும் மாண்புமிகு உறுப்பினர்கள் ஒரு முடிவிற்கு வரவில்லை என்றால் மேலும் ஒரு சில உரைகளைக் கேட்ட பிறகு அவர்கள் முடிவிற்கு வருவார்கள் என்பதற்கு அதிக வாய்ப்பில்லை. அவை விவாதத்தை முடித்துக் கொள்ள விரும்புகிறதா என்பதை அறிய விரும்புகிறேன்.

**மாண்புமிகு உறுப்பினர்கள் பலரும்:** பிரச்சினையை முன் வையுங்கள், பிரச்சினையை முன் வையுங்கள்.

**திரு. அவைத் தலைவர்:** டாக்டர் அம்பேத்கர்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் (பொது):** ஐயா, இந்த உறுப்புகள் குறித்த விவாதம் ஐந்து மணி நேரம் நீடித்து நடை பெற்ற போதிலும் இந்த உறுப்புகளில் உருக்கொடுக்கப்பட்டுள்ள கோட்பாடுகளின்பால் எனது போக்கை மாற்றிக் கொள்ள வேண்டும் என்னும் அளவிற்கு இவ்விவாதத்திலிருந்து எதுவும் வெளிப்பட்டு விட்டதாக நான் கருதவில்லை. ஆகவே நான் எவ்வகையிலும் விவர மாக விடையளித்து அவையை அதிக நேரம் நிறுத்தி வைக்கப் போவதில்லை.

அனைத்துக்கும் முதலாவதாக, நண்பர் திரு. காமத் உறுப்பு 277-A-க்கு முன்மொழிந்த திருத்தத்துக்காக ஒரு நிமிடம் எடுத்துக்

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 4, 1949, பக்கம் 175.

கொள்ள விரும்புகிறேன். ''மற்றும்'' என்ற சொல்லுக்குப் பதிலாக ''அல்லது'' என்ற சொல்லை இடம் பெறச் செய்ய வேண்டுமென்பது அவரது திருத்தம். அது அவசியம் என்று நான் கருதவில்லை. ஏனெனில் ''மற்றும்'' என்ற சொல் அது இடம்பெற்றுள்ள சூழ்நிலையில் இணைப்புச் சொல், பிரிப்புச் சொல் இரண்டாகவும் உள்ளது. ''மற்றும்'' என்றோ ''அல்லது'' என்றோ சந்தர்ப்பத்தின் தேவையைப் பொறுத்து இரு வழிகளிலும் அதைப் புரிந்துகொள்ள முடியும். ஆகவே இந்தத் திருத்தத்தை முன்வைப்பதில் அவருக்குள்ள நோக்கத்தை நான் மதித்தபோதிலும் அதை ஏற்றுக்கொள்வது அவசியம் என்று நான் கருதவில்லை.

நான் எடுத்துக்காட்ட விரும்புகிற இரண்டாவது திருத்தம் நண்பர் சாக்சேனாவினால் முன்மொழியப்பட்டதாகும். இத்திருத்தத்தில் பிரகடனத்தின்படி குடியரசுத் தலைவர் செய்யக்கூடியவற்றில் ஒன்று சட்டமன்றத்தைக் கலைப்பதாகுமென்று அவர் முன்மொழிந்திருக்கிறார். இதுதான் அவரது திருத்தத்தின் சாரம் எனக் கருதுகிறேன். வழிவகை செய்யப்பட வேண்டியவற்றில் இதுவும் ஒன்று என்பதை முழுமையாக ஏற்றுக்கொள்கிறேன். ஏனெனில் மாகாண மக்கள் சட்டமன்றத்தை அணுகுவதன் மூலம் நிலைமையைச் சரிசெய்வதற்கான ஒரு வாய்ப்பு வழங்கப்பட வேண்டும். ஆனால் இது ஏற்கெனவே உறுப்பு 278இன் கூறு (1)இன் உட்கூறு (அ)இல் அடங்கியிருக்கக் காண்கிறேன். ஏனெனில் உட்கூறு (அ) ஆனது ஆளுநர் அல்லது ஆட்சியாளர் செயல்படுத்தக்கூடிய அதிகாரங்களைக் குடியரசுத் தலைவர் தமக்கே எடுத்துக் கொள்ளலாம் என்று முன்மொழிகிறது. ஆளுநரிடம் ஒப்படைக்கப்பட்டு, அவரால் செலுத்தப்படக்கூடிய அதிகாரங்களில் ஒன்று அவையைக் கலைப்பதாகும். இதன் விளைவாகக் குடியரசுத் தலைவர் ஒரு பிரகடனத்தை வெளியிட்டு உட்கூறு (அ)இன்படி இந்த அதிகாரங்களை எடுத்துக் கொள்ளும்போது சட்டமன்றத்தைக் கலைத்துவிட்டுப் புதிய தேர்தல் நடத்தும் அதிகாரம் தானாகவே குடியரசுத் தலைவருக்கு மாற்றப்பட்டுவிடும். இந்த அதிகாரங்களைக் குடியரசுத் தலைவர் தம் அமைச்சர்களின் அறிவுரையின் பேரில் செலுத்துவார் என்பதில் சந்தேகம் இல்லை. ஆகவே நான் பணிந்து தெரிவிக்க விரும்புவது என்னவென்றால், நண்பர் பேராசிரியர் சாக்சேனா விளக்கிச் சொன்ன கருத்து ஏற்கெனவே உட்கூறு (அ)இல் அடங்கியுள்ளது, அதில் உட்கிடையாக உள்ளது. ஆகவே அந்தத் தன்மையில் வெளிப்படையான வழிவகை ஏதும் செய்யத் தேவையில்லை.

நான் இப்போது நண்பர் பண்டித குன்ஸ்ரு தெரிவித்த கருத்துரைகளுக்கு வருகிறேன். எனக்குச் சரியாக நினைவிருக்குமானால் அவர் எழுப்பிய முதல் வாதக்கூறு, அரசமைப்புச் சட்ட இயந்திரம் நிலைகுலைந்து போகும்போது நிர்வாகத்தை எடுத்துக் கொள்ளும் அதிகாரம் எந்த அரசமைப்பிலும் காணக்கிடைக்காத புதிய செய்தி ஆகும் என்பதே. மெத்தப் பணிவுடன் அவரோடு வேறுபடுகிறேன். அமெரிக்க அரசமைப்புச் சட்டத்தின் குடியரசு வடிவத்தை நிலைபெறச் செய்வது அமெரிக்க ஐக்கிய அரசுகளின் கடமை என்று திட்டவட்டமாகத் தெரிவிக்கின்ற உறுப்பு அந்த அரசமைப்புச் சட்டத்தில் அடங்கியிருப்பதன்பால் அவரது கவனத்தை ஈர்க்க விரும்புகிறேன். இந்த அரசமைப்புச் சட்டத்தில் அடங்கியுள்ள வழிவகைகளுக்கேற்ப அரசமைப்பு நிலைநிறுத்தப்பட வேண்டுமென்று நாம் சொல்லும் போது நடைமுறையளவில் அமெரிக்க அரசமைப்புச் சட்டம் சொல்வதைத்தான் நாமும் சொல்கிறோம். அதாவது இந்த அரசமைப்புச் சட்டத்தில் குறித்துரைக்கப்படும் அரசமைப்பு வடிவம் நிலைநிறுத்தப்பட வேண்டுமென்கிறோம். ஆகவே இந்த வாதக்கூறினைப் பொறுத்தவரை நிலைபெற்ற கோட்பாட்டிலிருந்து வரைவுக் குழு எவ்வகையிலும் விலகிச் சென்றுவிட்டதாக நாம் கருதவில்லை.

மற்றொரு விமர்சனக் கூறு என்னவென்றால், ஏற்கெனவே அரசமைப்புச் சட்டத்தில் 275, 276 ஆகிய உறுப்புகள் இருப்பதால் 278, 278-A ஆகிய உறுப்புகள் தேவையற்றவை என்பதே. பண்டித குன்ஸ்ருவை நான் மதித்த போதிலும், உறுப்பு 275-இலும், இப்போதைய உறுப்பு 278இலும் பொதிந்துள்ள நோக்கங்களையும், எண்ணங்களையும் அவர் அறவே தவறாகப் புரிந்து கொண்டுள்ளார் என்பதைப் பணிவுடன் நான் சொல்லத்தான் வேண்டும். அவரது வாதம் என்னவென்றால், கடைசியில் உங்களுக்கு வேண்டிய மாகாண அதிகாரப் பொருட்கள் குறித்து சட்டமியற்றும் அந்த உரிமை உறுப்பு 276ஐக் கொண்டு கிடைக்கிறது. ஏனென்றால் பிரகடனம் வெளியிடப்பட்டதுமே பட்டியல் IIஇல் குறிப்பிடப்படும் அனைத்துப் பொருட்கள் குறித்தும் சட்டமியற்றும் அதிகாரத்தை அந்த உறுப்பின்படி மைய அரசு பெறுகிறது. இது உறுப்புகள் 275, 276 ஆகியவற்றிலோ, உறுப்புகள் 278, 278-A ஆகியவற்றிலோ அடங்கியுள்ள வழிவகைகள் குறித்தான மிகவும் வரம்புக்குட்பட்ட புரிதலே ஆகுமெனக் கருதுகிறேன்.

முதலாவதாக, உறுப்புகளின் இவ்விரு தொகுதிகளும் செயலுக்கு வரக்கூடிய சந்தர்ப்பங்கள் அறவே வெவ்வேறானவை என்ற உண்மையை அவையின் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். உள்நாட்டிலோ அயல்நாட்டிலிருந்தோ போர் அல்லது ஆக்கிரமிப்பு நிகழக்கூடிய நிலவரம் என்ற அளவோடு மைய அரசின் தலையீட்டை வரம்புக்கு உட்படுத்துவதே உறுப்பு 275. ஆதலால், நான் முன்பே சொன்னதுபோல், செயற்பாட்டுக் கூறுகளும் அறவே வெவ்வேறானவை. எடுத்துக்காட்டாக, உறுப்பு 275இன்படி போர்ப் பிரகடனம் செய்யப்பட்டிருக்கும்போது மாகாண அரசமைப்பை இடைநீக்கம் செய்வதற்கு அதிகாரம் ஏதுமில்லை. மாகாண அரசமைப்பு தொடர்ந்து செயல்பட்டுவரும், சட்டமன்றம் தொடர்ந்து செயல்படும். அரசமைப்புச் சட்டத்தால் தனக்கு அளிக்கப்படும் அதிகாரங்களைப் பெற்றிருக்கும் நிர்வாகத்துறை தனது நிர்வாக அதிகாரத்தைத் தக்கவைத்துக் கொண்டு, மாகாணத்தை மாகாணத்தின் சட்டத்திற்கிணங்கத் தொடர்ந்து நிர்வாகம் செய்யும். உறுப்பு 276இன்படி நிகழ்வதெல்லாம் சட்டமியற்றும் இணை அதிகாரத்தையும், நிர்வாகம் செய்யும் இணை அதிகாரத்தையும் மைய அரசு பெறுகிறது என்பதே. உறுப்பு 276இன்படி நடைபெறுவது இதுவேதான். ஆனால் உறுப்பு 278 செயலுக்கு வரும்போது நிலைமை அடியோடு மாறுபட்டதாயிருக்கும். மாகாணத்தில் சட்டமன்றம் ஏதுமிருக்காது. ஏனென்றால் சட்டமன்றம் இடைநீக்கம் செய்யப்பட்டிருக்கும். குடியரசுத் தலைவரின் பிரகடனத்தால் அல்லது நாடாளுமன்றத்தால் அல்லது ஆளுநரால் நிர்வாக அதிகாரம் ஏதும் மிச்சம் வைக்கப்படாவிட்டால் மாகாணத்தில் நடைமுறையளவில் நிர்வாக அதிகாரம் ஏதுமிருக்காது. இரண்டு நிலைமைகளும் அடியோடு வெவ்வேறானவை. உறுப்புகள் 275, 278 ஆகியவற்றில் அடங்கிய சொற்களைக் கொண்டு நாம் வரைந்துள்ள எல்லைக்கோட்டைக் காத்துக் கொள்வது இன்றியமையாத் தேவை எனக் கருதுகிறேன். இரண்டையும் கலந்துவிடுவது பெருமளவிலான குழப்பத்தைத் தோற்றுவிக்கும்.

**பண்டித ஹிருதய் நாத் குன்ஸ்ரு** (ஐக்கிய மாகாணங்கள்: பொது): என் மாண்புமிகு நண்பர் ஒரு செய்தியைத் தெளிவாக்கும்படி நான் வேண்டிக் கொள்ளலாமா? மாகாணங்களில் நல்லாட்சி நடைபெறும் பொருட்டு மாகாண விவகாரங்களில் மைய அரசு தலையிடுவதற்குத் துணை செய்வதுதான் உறுப்புகள் 278, 278-A ஆகியவற்றின் நோக்கமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இல்லை, இல்லை. மைய அரசுக்கு அந்த அதிகாரம் அளிக்கப்படவில்லை.

**பண்டித ஹிருதய்நாத் குன்ஸ்ரு:** அல்லது பொது அமைதிக்கு ஆபத்து உண்டாக்கும்படி மாகாணத்தில் மோசமான ஆட்சி நடை பெறும்போது மட்டும்தானா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** மாகாணங்களின் அரசமைப்புச் சட்டப்படி ஆளுவதற்கு விதிக்கப்பட்ட வழிவகை களுக்கு இணங்க அரசாங்கம் நடைபெறாதபோது மட்டும்தான். மாகாணத்தில் நடைபெறுவது நல்லாட்சியா அல்லவா என்பதை மைய அரசுதான் தீர்மானிக்க வேண்டும். இதுகுறித்து நான் தெள்ளத் தெளிவாக உள்ளேன்.

**பண்டித ஹிருதய்நாத் குன்ஸ்ரு:** முழுமையாக எடுத்துக் கொண்டால் அரசமைப்புச் சட்டத்தின் வழிவகைகள் என்பதன் சரியான பொருள் என்ன? ''அரசமைப்புச் சட்டத்தின் வழிவகை களுக்கேற்ப'' என்ற சொற்றொடரின் பொருள் குறித்து மாண்புமிகு உறுப்பினர் என்ன கருதுகிறார் என்பதை அவரிடமிருந்து அறிந்து கொள்ளும் உரிமை அவைக்கு உண்டு.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** முழுவதையும் விவரமாக ஆராய்ந்து, உறுப்பு ஒவ்வொன்றையும் எடுத்துக் காட்டி அதில் நிறுவப்பட்டுள்ள கோட்பாடு இதுவே என்றும், ஒரு மாகா ணத்தின் அரசாங்கமோ, சட்டமன்றமோ இதற்கேற்பச் செயல்படா விட்டால் அது அரசமைப்புச் சட்ட இயந்திரம் நிலைகுலைந்து போனதைக் குறிக்கும் என்றும் சொல்லிக் கொண்டே போவதானால் இப்போது எனக்கு மிக நீண்ட நேரம் பிடிக்கும். ''அரசமைப்புச் சட்ட இயந்திரம் நிலைகுலைந்து போதல்'' என்ற தொடர் 1935 ஆம் வருடத்திய இந்திய அரசாங்கச் சட்டத்தில் பயன்படுத்தப்பட்டிருக்கக் காண்கிறேன். ஆகவே மெய்ந்நடப்பு வகையிலும் சட்ட வகையிலும் அதன் பொருளை ஒவ்வொருவரும் நன்கு அறிந்திருக்க வேண்டும். இதற்கு மேல்விளக்கம் தேவைப்படுவதாக நான் கருதவில்லை.

**திரு. எச்.வி. காமத்** (மத்திய மாகாணங்கள் மற்றும் பேரார் பொது): நானும் பேராசிரியர் சாக்சேனாவும் முன்மொழிந்த மற்றத்

திருத்தங்கள் என்னவாயின? அவற்றிற்கு டாக்டர் அம்பேத்கர் விடையளிக்க வில்லையா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் அவற்றை ஏற்றுக் கொள்ளவில்லை. திருத்தங்களில் சாரம் ஏதுமிருப்பதாக நான் கருதினால் மட்டுமே அவற்றிற்கு விடையளிக்கிறேன், அல்லது அவற்றை சுட்டிக்காட்டிப் பேசுகிறேன். முன்மொழியப்பட்ட ஒவ்வொரு திருத்தம் குறித்தும் நான் தொடர்ந்து விவாதித்துக் கொண்டே போக முடியாது.

**திரு. எச்.வி. காமத்:** டாக்டர் அம்பேத்கர் வாய்மொழியான திருத்தங்களுக்கு மட்டுமே விடையளிக்கிறார். முன்மொழியப்பட்ட திருத்தங்கள் அனைத்திற்கும் அவர் விடையளிக்கக்கூடாதா?

**திரு. அவைத் தலைவர்:** குறிப்பிட்ட எந்தவொரு வழியிலும் விடையளிக்கும்படி நான் டாக்டர் அம்பேத்கரைக் கட்டாயப்படுத்த முடியாது. தனக்குரிய வழியில் விடையளிக்க அவருக்கு உரிமையுண்டு.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இங்கு நடைபெற்ற பொது விவாதத்தில் இந்த உறுப்புகள் தவறாக பயன்படுத்தப்படும் வாய்ப்புள்ளது என்று தெரிவிக்கப்பட்டது. இந்த உறுப்புகள் தவறாகப் பயன்படுத்தப்படுகிற அல்லது அரசியல் நோக்கங்களுக்காக ஈடுபடுத்தப்படுகிற சாத்தியப்பாடு உள்ளதென்பதை நான் அறவே மறுக்கவில்லை. ஆனால் இந்த மறுப்புரையானது மாகாணங்களை விஞ்சிச் செயல்பட மைய அரசுக்கு அதிகாரமளிக்கிற ஒவ்வோர் அரசமைப்புச் சட்டப் பகுதிக்கும் பொருந்தும். இவ்வகை உறுப்புகள் ஒருபோதும் செயலுக்கு அழைக்கப்பட மாட்டா என்பதும், அவை உயிரற்ற எழுத்தாகவே இருந்துவரும் என்பதும் நாம் எதிர்பார்க்க வேண்டிய சரியான நிலைமையாகும் என்று என் மதிப்பிற்குரிய நண்பர் திரு. குப்தே வெளிப்படுத்திய உணர்வுகளை உண்மையில் நானும் பகிர்ந்து கொள்கிறேன். எவ்வகையிலேனும் இவ்வுறுப்புகள் செயலுக்குக் கொண்டு வரப்படுமானால், இந்த அதிகாரங்களைப் பெற்றுள்ள குடியரசுத் தலைவர் உள்ளபடியே மாகாணங்களின் நிர்வாகத்தை இடைநீக்கம் செய்வதற்கு முன் சரியான முன்னெச்சரிக்கைகளை எடுத்துக் கொள்வாரென நம்புகிறேன். அவர் செய்யக்கூடிய முதல் காரியம் அரசமைப்புச் சட்டத்தில் விரும்பிய வழியில் காரியங்கள் நடைபெற்றுக்

கொண்டிருக்கவில்லை என்று தவறிழைத்த ஒரு மாகாணத்திற்கு வெறும் எச்சரிக்கை விடுவதாகவே இருக்கும் என்று நான் நம்பு கிறேன். எச்சரிக்கை பலிக்கவில்லை என்றால் அவர் செய்யக்கூடிய இரண்டாவது காரியம் தேர்தலுக்கு உத்தரவிடுவதன் மூலம் மாகாண மக்கள் தாங்களாகவே தீர்வு காண்பதற்கு இடமளிப்பதாயிருக்கும். இந்த இரு பரிகாரங்களும் தோற்று விடும்போதுதான் குடியரசுத் தலைவர் இந்த உறுப்பின் துணையை நாடுவார். அந்த நிலையில்தான் அவர் இந்த உறுப்பின் துணையை நாடுவார். அப்போது இந்த உறுப்பு கள் வீணாகத் திணிக்கப்பட்டன என்றோ, குடியரசுத் தலைவர் வேண்டுமென்றே செயல்பட்டு விட்டார் என்றோ சொல்ல முடியு மென்று நான் நினைக்கவில்லை.

**திரு. எச்.வி. காமத்:** உறுப்பு 143 இப்போது தக்க முறையில் திருத்தப்படும் என்று அவைக்கு உறுதியளிக்க டாக்டர் அம்பேத்கரால் முடியுமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** முடியும் என்று சொல்லியிருக்கிறேன். வரைவுக்குழு இரண்டாம் வாசிப்பிற்குப் பிறகு கூடும்போது வழிவகைகளை முழுமையாக எடுத்துப் பரிசீலனை செய்யும், அவசியப்பட்டால் உறுப்பு 143க்குத் தக்க முறையில் திருத்தம் செய்யப்படும் என்று இப்போது சொல்கிறேன்.

**திரு. அவைத் தலைவர்:** இப்போது திருத்தங்களை ஒன்றன் பின் ஒன்றாக வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

பிரச்சினை இதுதான்:

"உறுப்பு 188 நீக்கப்படலாம்."

முன்மொழிதல் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

அரசமைப்புச் சட்டத்திலிருந்து உறுப்பு 188 நீக்கப்பட்டது.

## உறுப்பு 279

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அவைத் தலைவர் அவர்களே, எழுப்பப்பட்டுள்ள வாதக் கூறுகளில் இரண்டிற்கு மட்டுமே

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 4, 1949, பக்கம் 185.

பதிலளிக்க வேண்டிய அவசியமுள்ளதெனக் கருதுகிறேன். என் நண்பர் பேராசிரியர் சாக்சேனா முன்மொழிந்த திருத்தத்தின் பொருள் என்னவென்றால், நெருக்கடி காலத்தில் அடிப்படை உரிமையில் எந்த மாற்றத்தையும் நாடாளுமன்றம் செய்ய வேண்டுமே தவிர மாநிலம் செய்யக்கூடாது என்பதே. இப்போது என் நண்பர் உறுப்பு 13இன் வழிவகைகளை எடுத்துப் பார்த்தால், அடிப்படை உரிமைகளைப் பாதிக்கும்படியான மாற்றங்கள் எதையும் செய்திட மைய அரசு, மாநில அரசு இரண்டையுமே அனுமதித்துள்ளோம் என்பதை அவரே காண்பார் - ஆனால் இந்த மாற்றங்கள் அறிவுக்குகந்தவையாக இருக்க வேண்டும். ஆகவே இயல்பான சூழ்நிலைமைகளில் அடிப்படை உரிமைகளைப் பாதிக்கும்படியான சட்டங்களை இயற்றும் அதிகாரம் இரண்டிடமும் ஒப்படைக்கப்பட்டுள்ளது. எடுத்துக்காட்டாக, மாநிலம் பெற்றுள்ள இந்த இயல்பான உரிமையை நெருக்கடி நிலைக் காலத்தில் பறித்துக் கொள்வதற்குக் காரணம் ஏதுமில்லை.

**பேராசிரியர் சிபன்லால் சாக்சேனா:** ஆனால் அடிப்படை உரிமைகள் நெருக்கடி நிலைக் காலத்தில் நிறுத்தி வைக்கப்படும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நிறுத்தி வைத்தல் என்பது மற்றோர் உறுப்பில் வருகிறது. உறுப்பு 13இல் என்ன கூறப்பட்டிருப்பினும் அரசு - நாடாளுமன்றம், மாகாணங்கள் ஆகிய இரண்டுமே - அதிகாரம் செலுத்தலாம் என்று மட்டுமே இந்த உறுப்பு சொல்கிறது.

**பேராசிரியர் சிபன்லால் சாக்சேனா:** நெருக்கடி நிலைக் காலத்தில்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஆம். ஏனெனில் பிற நேர்வுகளில் கூட அது இயல்பான அதிகாரமே ஆகும். நெருக்கடி நிலை ஏதும் இல்லாதபோது இப்பொருள் குறித்துச் சட்டமியற்றும் அதிகாரம் இரண்டுக்கும் உள்ளது. ஆகவேதான் நெருக்கடி நிலைக் காலத்தில் இந்த அதிகாரத்தைப் பறித்துக் கொள்ள வேண்டிய காரணம் ஏதுமிருப்பதாக எனக்குத் தெரியவில்லை. நெருக்கடி நிலை என்பது இத்தகையதோர் அதிகாரம் அரசுக்குத் தரப்படுவதற்கான காரணங்களில் ஒன்று என்று நான் எண்ணியிருக்க வேண்டும்.

அடுத்து, என் நண்பர் திரு. காமத் இந்த நோக்கத்திற்கு 280 என்னும் அடுத்த உறுப்பே போதுமானது என்றார், இந்த விமர்சனத்தைப் பொறுத்தவரை, இது நிலைமை முழுவதையும் தவறாகப் புரிந்து கொள்வதாகும் என்று நினைக்கிறேன். ஏனென்றால் மாற்றியமைப்பதற்கு அதிகாரம் தரப்படா விட்டால், இடைநிறுத்தத்தால் எந்த விளைவும் ஏற்படாது. ஆகவே, உறுப்பு 280 அறவே வேறு பொருள் குறித்தது. அதற்கும் இந்த உறுப்புக்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை. இந்த உறுப்பை முன்மொழிந்துள்ள வடிவில் ஏற்றுக் கொள்ள வேண்டும்.

**திரு. அவைத் தலைவர்:** திருத்தங்களை வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

***(மூன்று திருத்தங்கள் மறுதலிக்கப்பட்டன. உறுப்பு 279 அரசமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.)***

## உறுப்பு 280

[1]**திரு. அவைத் தலைவர்:** அடுத்து உறுப்பு 280ஐ எடுத்துக் கொள்வோம். திருத்தம் எண் 3028 - டாக்டர் அம்பேத்கர்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் முன்மொழிவது:

> ''இருக்கிற உறுப்பு 280க்குப் பதிலாக பின்வரும் உறுப்பை இடம்பெறச் செய்யலாம்:
>
> 'நெருக்கடி நிலை செயல்பட்டுக் கொண்டிருக்கும் இடத்தே குடியரசுத் தலைவர் ஆணை கொண்டு இப்படி அறிவித்திடலாம்: இந்த அரசமைப்பின் பகுதி III வழங்கும் உரிமைகளைச் செயலாக்குவதற்கு நீதிமன்றம் எதனையும் அணுகுவதற்கான உரிமையும், இவ்விதம் வழங்கப்பட்ட உரிமையின் செயலாக்கத்திற்காக நீதிமன்றம் எதனினும் முடியாதுள்ள எல்லாச் சட்ட நடவடிக்கைகளும் அப்பிரகடனம் செயலில் இருக்கும் காலத்திற்கு அல்லது ஆணையில் குறித்துரைக்கப்படும்படியான இன்னும் குறைந்த காலத்திற்கு நிறுத்தி வைக்கப்படும் என்று அறிவித்திடலாம்.''

மூல உறுப்பு 280 உடன் ஒப்பிடுகையில் இந்த உறுப்பு 280 உண்மையில் ஒரு முன்னேற்றமே என்பதை அவை காணலாம். உறுப்பு 25இன் செயல்பாட்டை நிறுத்திவைக்கும் குடியரசுத் தலைவரின் ஆணை, பிரகடனம் செயலற்றுப் போனபிறகு மேலும் ஆறு மாத காலத்திற்கு நீடிக்குமென்று மூல உறுப்பு 280 வழிவகை செய்தது.

அதாவது இடைநிறுத்தத்திற்கான தேவை ஒழிந்துபோய் விட்ட போதிலும் கூட ஆட்கொணர்வு (habeas corpus) நீதிப் பேராணைகள் போன்ற உத்தரவாதம் தொடர்ந்து நிறுத்திவைக்கப்பட்டிருக்கும். நிலைமைகளின் தேவைகளைக் கடந்து உத்தரவாதத்தின் இடை நிறுத்தம் தொடருவதற்குக் காரணம் ஏதுமில்லை என்று கருதப்பட்டுள்ளது. உண்மையில் பிரகடனம் செயலற்றுப் போகவில்லை என்றாலும் கூட உத்தரவாதங்கள் செயல்படும் நிலைக்கு வரலாம் என்னும் அளவிற்கு நிலைமை முன்னேற்றம் அடையக்கூடும். ஆகவே பிரகடனம் முடிந்த பிறகும் இடைநிறுத்த ஆணை தொடரக்கூடாது என்பதற்கும், பிரகடனத்தின் காலம் முடிவதற்கு முன்பே கூட இடைநிறுத்த ஆணை முடிவுக்கு வந்துவிடக் கூடும் என்பதற்கும் வழிவகை செய்யும் பொருட்டு இந்தப் புதிய வரைவு இந்தப் பேரவையின் முன் வைக்கப் பட்டுள்ளது. இதை ஏற்றுக் கொள்வதில் பேரவைக்கு இடர்ப்பாடு ஏதுமிருக்காது என நம்புகிறேன்.

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் ஒரு வார்த்தை கூறலாமா? சட்ட நடவடிக்கைகளின் இடைநிறுத்தம் குடியரசுத் தலைவரின் ஆணை கொண்டு நடைபெற வேண்டுமா என்ற பிரச்சினை எழுப்பப்பட்டது. குடியரசுத் தலைவரின் ஆணை என்றால் நிர்வாகத் துறையின் அறிவுரைப்படி என்றே பொருள்படும். மேலும் நிர்வாகத் துறை சட்டமன்றத்தின் நம்பிக்கையைப் பெற்றிருப்பதையும் இது குறித்திடுகிறது. ஆகவே இடைநிறுத்தம் என்பது நிர்வாகத் துறையின் செயல்மூலம் நடைபெற வேண்டுமா, அல்லது நாடாளு மன்றத்தால் இயற்றப்படும் சட்டத்தின் மூலம் நடைபெற வேண்டுமா என்பது தொடர்பாக ஒரு கருத்து வேறுபாடு உள்ளதென்பதில் சந்தேகம் ஏதுமில்லை. ஆகவே இப்பொருளைப் பரிசீலனை செய்திட வரைவுக் குழுவிற்கு வாய்ப்பு வழங்கும் பொருட்டு இந்த உறுப்பை நிறுத்தி வைத்துக் கொள்ள விரும்புகிறேன். ஏனைய உறுப்புகளை நாம் எடுத்துக் கொள்ளலாம்.

**திரு. அவைத் தலைவர்:** இந்த உறுப்பை நிறுத்திவைத்துக் கொள்ளலாம். அடுத்து நாம் உறுப்பு 247ஐ எடுத்துக் கொள்வோம்.

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 4, 1949, பக்கம் 198.

## உறுப்பு 247

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் முன்மொழிவது:

"உறுப்பு 247இல் தொடங்கும் உறுப்புகளுக்குள்ள தலைப்புக்குப் பதிலாகப் பின்வரும் தலைப்பை இடம்பெறச்செய்யலாம்:

"பொது"

**திரு. அவைத் தலைவர்:** இதுகுறித்து விவாதம் ஏதும் அவசிய மில்லை எனக் கருதுகிறேன்.

பிரச்சினை இதுதான்:

"உறுப்பு 247இல் தொடங்கும் உறுப்புகளுக்குள்ள தலைப்புக்குப் பதிலாகப் பின்வரும் தலைப்பை இடம்பெறச் செய்யலாம்:

"பொது"

முன்மொழிவு ஏற்றுக்கொள்ளப்பட்டது.

★ ★ ★

**திரு. அவைத் தலைவர்:** யாரேனும் பேச விரும்புகிறீர்களா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் சொல்ல வேண்டியதெல்லாம், அந்தச் சொற்கள் அதிகப்படியான முன்னெச் சரிக்கை என்ற முறையில் சேர்க்கப்படுகின்றன. அவை தேவையற் றவையாகவே இருக்கலாம், அவை தேவை என்று கருதும் நிலை வரலாம். நாம் அச்சொற்களைத் தக்க வைத்துக் கொள்ள வேண்டு மென விரும்புகிறேன்.

உறுப்பு 247 அரசமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.

★ ★ ★

## உறுப்பு 248

[2]**திரு. அவைத் தலைவர்:** அடுத்து உறுப்பு 248ஐ எடுத்துக் கொள்வோம்.

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 4, 1949, பக்கம் 198-99
2. மேற்படி அதே நூல், பக். 199

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் முன்மொழிவது:

*சட்ட அதிகாரம் கொண்டல்லாமல் வரிகள் விதிக்கப் படலாகாது.*

*''உறுப்பு 248க்குப் பதிலாகப் பின்வரும் உறுப்புகளை இடம்பெறச்செய்யலாம்:*

*''248. சட்டத்தின் அதிகாரம் கொண்டல்லாமல் வரியேதும் விதிக்கவோ தண்டவோ கூடாது.*

*248-A (1) குறிப்பிட்ட சில வரிகள், தீர்வைகள் ஆகியவற்றின் நிகர வரவை முழுமையாகவோ பகுதியாகவோ மாநிலங்களுக்கு ஒதுக்கித் தருவது தொடர் பாக இந்த அத்தியாயத்தில் கண்ட வழிவகைகளுக்கு உட்பட்டு, இந்திய அரசாங்கத்தினால் திரட்டப்படும் அல்லது பெறப்படும் வருவாய்கள் அல்லது பொதுப்பணம் அனைத்தும் ஒரு தொகுப்பு நிதியாக அமையும், அதற்கு இந்தியத் தொகுப்பு நிதி என்று பெயரிடப்படும். மாநில அரசாங்கத்தினால் திரட்டப்படும் அல்லது பெறப்படும் வருவாய்கள் அல்லது பொதுப்பணம் அனைத்தும் ஒரு தொகுப்பு நிதியாக அமையும். அதற்கு மாநிலத் தொகுப்பு நிதி என்று பெயரிடப்படும்.*

*இந்தியத் தொகுப்பு நிதியிலிருந்தோ மாநிலத் தொகுப்பு நிதியிலிருந்தோ, பணம் எடுத்துப் பயன்படுத்துவதானால் சட்டப்படியும் இந்த அரசமைப்புச் சட்டத்தில் வழிவகை செய்யப்பட்டுள்ள நோக்கங்களுக்காகவும், வழிவகை செய்யப்பட்டுள்ள முறையிலும் அல்லாமல் வேறு வழியில் அதைச் செய்ய லாகாது.*

*நாம் முன்னரே ஏற்றுக் கொண்டவற்றின் தொடர் விளைவாகவே இந்தத் திருத்தங்கள் உள்ளன.*

*(இந்த உறுப்பு மேற்குறிப்பிட்ட திருத்தத்தினால் திருத்தப் பட்ட வடிவத்தில் ஏற்றுக்கொள்ளப்பட்டு, அரசமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.)*

★ ★ ★

## உறுப்பு 249

[1]**திரு. அவைத் தலைவர்:** வேறு எவரேனும் பேச விரும்பு கிறீர்களா? *(உறுப்பினர்கள் எவரும் எழவில்லை.)*

நீங்கள் ஏதேனும் கூற விரும்புகிறீர்களா, டாக்டர் அம்பேத்கர்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்** *(பம்பாய்: பொது):* சொல்வதற்கு ஏதுமில்லை.

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 4 1949, பக்கம் 208.

**திரு. அவைத் தலைவர்:** திருத்தங்களை இப்போது வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

பிரச்சினை இதுதான்:

*''உறுப்பு 249இன் கூறு (2)இல் 'அந்த ஆண்டில்' என்ற சொற்கள் நீக்கப் படலாம்.''*

திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

**திரு. அவைத் தலைவர்:** பிரச்சினை இதுதான்:

*''உறுப்பு 249இன் கூறு (1)இல் 'இத்தகைய முத்திரைக் கட்டணங்கள்' என்ற சொற்களுக்கு முன்னால் நாடாளுமன்றம் இயற்றும் ஏதேனும் ஒரு சட்டத்தின் படி விதிக்கப்படுகிற' என்ற சொற்களை நுழைக்கலாம்.*

திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

**திரு. அவைத் தலைவர்:** பிரச்சினை இதுதான்:

*''உறுப்பு 249இன் கூறு (2)இல் 'இந்தியாவின் வருவாய்கள்' என்ற சொற்களுக்குப் பதிலாக 'இந்தியத் தொகுப்பு நிதி' என்ற சொற்களை இடம்பெறச் செய்யலாம்.''*

திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

**திரு. அவைத் தலைவர்:** பிரச்சினை இதுதான்:

*''உறுப்பு 249 திருத்தப்பட்ட வடிவத்தில் அரசமைப்புச் சட்டத்தின் பகுதியாக உள்ளது.''*

முன்மொழிவு ஏற்றுக்கொள்ளப்பட்டது.

(திருத்தப்பட்ட வடிவத்தில் உறுப்பு 249 அரசமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.)

## உறுப்பு 250

[1]திரு. அவைத் தலைவர்: முன்மொழிதல் இதுதான்:

''உறுப்பு 250 அரசமைப்புச் சட்டத்தின் பகுதியாகிறது.''

(திருத்தங்கள் எண் 2842 முதல் 2850 முடிய முன்மொழியப் படவில்லை.)

திரு. ஆர்.கே. சித்வா (மத்திய மாகாணங்கள் மற்றும் பேரார்: பொது): அவைத் தலைவர் அவர்களே, நான் முன்மொழிவது:

''உறுப்பு 250இன் இறுதியில் பின்வருவதைச் சேர்க்கலாம் :

மேற்கூறிய பங்கீட்டின் வரவுகள் மாநில அரசுகளால் மேலுரிமை கொண்ட வட்டார ஆணையங்களுக்கு ஒதுக்கித் தரப்படும்.''

***(திரு. சித்வா மற்றொரு திருத்தத்தை முன்மொழிந்தார்; அதைத் தொடர்ந்து உரை நிகழ்த்தினார்.)***

★ ★ ★

[2]மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: நான் மிகவும் வருந்துகிறேன், ஐயா! இந்த உறுப்பை நிறுத்தி வைத்துக் கொள்ள அனுமதிக்கும்படி ஆரம்பத்திலேயே உங்களை நான் கேட்டுக் கொண்டிருக்க வேண்டும்.

திரு. அவைத் தலைவர்: இந்த உறுப்பை நிறுத்தி வைத்துக் கொள்ளலாமென்று யோசனை தெரிவிக்கப்படுகிறது.

★ ★ ★

## உறுப்பு 251

[3]மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஐயா, நான் பணிந்து முன்மொழிவது:

''உறுப்பு 251இன் கூறு (2)இல் 'இந்திய வருவாய்கள்' என்ற சொற்களுக்குப் பதிலாக 'இந்தியத் தொகுப்பு நிதி' என்ற சொற்களை இடம்பெறச் செய்யலாம்.

★ ★ ★

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 4 1949, பக்கம் 208.
2. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 5 1949, பக்கம் 209.
3. அதே நூல், பக். 211.

[1]மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஐயா இதுகுறித்து என்னால் இப்போது விளக்கமளிக்க முடியும். அப்படிச் செய்வதற்கு முன், மற்றத் திருத்தங்களை எடுத்துக் கொள்கிறேன்.

திரு. பர்மனின் திருத்தம் ஒன்றும், பேராசிரியர் சக்சேனாவின் மற்றொரு திருத்தமும் உள்ளன. இவ்விரண்டில் எதனையும் என்னால் ஏற்றுக்கொள்ள முடியாது என்பதை வருத்தத்துடன் சொல்லிக் கொள் கிறேன்.

வருமான வரி என்ற வகையில் தண்டப்படும் வருவாயின் விழுக்காடு 60 என்றோ அல்லது வேறு ஏதேனும் ஒரு விழுக்காடு என்றோ அரசமைப்புச் சட்டத்திலேயே குறித்துரைக்கப்பட வேண்டுமா அல்லது குடியரசுத் தலைவரின் முடிவுக்கே விடப்பட வேண்டுமா என்ற இந்தப் பிரச்சினை குறித்து விவாதிப்பதற்காக அண்மையில் ஒரு நாள் நடைபெற்ற மாநாட்டில், மைய அரசும் சரி, மாகாண அரசு களும் சரி, இதில் குறிப்பிடத்தக்க அளவிற்குச் சிந்தனை செலுத்தி யுள்ளன. பிரச்சினைக்குரிய தீர்வைக் குடியரசுத் தலைவரே குறித் துரைக்கட்டும் என்று விட்டுவிடுவதே மிகவும் நல்லது என்றும், அரசமைப்புச் சட்டத்திலேயே எந்த விகிதமும் நிர்ணயிக்கப்பட லாகாது என்றும் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

'குறித்துரைக்கப்பட' என்ற சொல்லுக்குப் பதிலாக 'நாடாளு மன்றத்தால் குறித்துரைக்கப்பட' என்றிருக்க வேண்டும் என்று பேரா சிரியர் சக்சேனா எழுப்பிய அந்த மற்றொரு பிரச்சினையைப் பொறுத்தவரை, இந்தத் திருத்தத்தையும் என்னால் ஏற்றுக்கொள்ள முடியாமைக்கு மறுபடியும் வருந்துகிறேன். முதலாவதாகக் குடியரசுத் தலைவரே விகித அளவைக் குறித்துரைக்க அனுமதிப்பதும், இரண் டாவதாக நிதி ஆணைக் குழுவின் பரிந்துரைகளைப் பரிசீலித்த பிறகு அப்படிச் செய்ய அனுமதிப்பதும் நம் திட்டங்களாகும். இதில் நாடாளு மன்றத்தைத் தொடர்புபடுத்தும் எண்ணம் நமக்கில்லை. ஏனென்றால் அப்படிச் செய்கையில் பல்வேறு மாகாணங்களின் பிரதிநிதிகளுக் கிடையே பெரும் பூசல் ஏற்படும். குறிப்பிட்ட சில மாகாணங்களுக்கு நாடாளுமன்றத்தில் மிக அதிகப் பெரும்பான்மை இருக்கலாம்; வேறு சில மாகாணங்களுக்குச் சிறிய அளவிலான பிரதிநிதித்துவமே இருக் கலாம் என்ற உண்மையின் காரணத்தால் பெரும் அநீதி இழைக்கப்

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 5 1949, பக்கம் 221-23.

படலாம். ஆகவே பிரச்சினையை நாடாளுமன்றத்திடமே விட்டு விடுதல் என்பதன் நடைமுறைப் பொருள், மையத்தில் கூடுதல் பிரதிநிதித்துவம் பெற்றிருக்கக் கூடிய மாகாணங்களின் குரல் வலிமைக்கு அதனை விட்டு விடுவதாகவே இருக்கும். இது பல்வேறு மாகாணங்களுக்கும் நீங்கள் செய்ய விரும்பும் நீதியை வேரறுப்பதாக இருக்கும் என கருதுகிறேன்.

ஐயா, நீங்கள் எழுப்பியுள்ள சிக்கலுக்கு இப்போது வருகிறேன். அந்த ஆண்டில் எந்த மாநிலங்களுக்குள் வரி விதிக்கலாமோ அந்த மாநிலங்கள் என்ற சொற்கள் அவசியமே. இவை 1935 ஆம் ஆண்டின் இந்திய அரசாங்கச் சட்டத்தில் காணப்படுகின்றன. அப்போது இந்தச் சொற்கள் சேர்க்கப்பட்டதற்கான காரணம் என்னவென்றால், இந்திய ஒன்றியத்திற்குள் இணைய இருந்த இந்திய சமஸ்தானங்களில் வருமான வரி விதிக்கப்படக் கூடாது என்பதே. வருமான வரிக்கு மாற்றாக, இந்திய சமஸ்தானங்கள் குறிப்பிட்ட சில பங்களிப்புகள் செய்ய வேண்டும். ஆகவே சமஸ்தானத்தில் வரி விதிக்கப்படலாகாது என்றால் அதில் ஒரு பங்கு பெறுவதற்கான உரிமை அந்த சமஸ்தானத்துக்கு இருக்காது. இந்த அரசமைப்புச் சட்டத்தின்படி நடைமுறை என்னவாக இருக்கப் போகிறது என்று நமக்கு தெரியாது. இந்திய சமஸ்தானங்களின் நிதிநிலை குறித்து ஆராய்வதற்காக நியமிக்கப்பட்டுள்ள ஒரு குழுவினால் இப்பிரச்சினை பரிசீலிக்கப்பட்டுக் கொண்டிருக்கிறது. முதலில் இந்திய மாகாணங்களாக இருந்தவை என்றாலும் சரி, இந்திய சமஸ்தானங்களாக இருந்தவை என்றாலும் சரி, எல்லா மாநிலங்களிலும் வருமான வரி விதித்தாக வேண்டும் என்பது அந்தக் குழுவின் பரிந்துரையாக இருக்குமானால், இயல்பாகவே அப்போது இந்தச் சொற்களை மாற்ற வேண்டியிருக்கும். அக்குழுவின் அறிக்கை நம்முன் வரும்போது இவ்வகையில் ஏதேனும் திருத்தம் செய்யுமாறு ஆலோசனை கூறிட வரைவுக் குழுவிற்குள்ள உரிமையைக் கைவிட்டு விடாமலே இந்த உறுப்பை முன்மொழிகிறேன். இந்தச் சொற்கள் இங்கு இடம் பெறுவதற்கான காரணம் இதுவே.

**திரு. அவைத் தலைவர்:** இன்னும் ஒன்றே ஒன்றுதான். பிரித்தானிய இந்தியாவாக இருந்து வந்த பகுதிக்குட்பட்ட நேர்வுகளை அளாவுவது நோக்கமன்று என நான் எடுத்துக் கொள்ளலாமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இல்லை, இல்லை; பகுதி IIIஇல் உள்ள மாநிலங்களை சொல்கிறோம்.

**திரு. பி. தாஸ்:** மாகாணங்களின் தலைமை அமைச்சர்கள் மற்றும் வரைவுக் குழுவினரின் மாநாட்டில் எடுக்கப்பட்ட முடிவு களை டாக்டர் அம்பேத்கர் சுட்டிப் பேசியுள்ளார். அவர்களுக்கிடை யில் என்ன பேசப்பட்டது என்பது குறித்தும், அவர்களது விவாதங் களின் முடிவு என்ன என்பது குறித்தும் இந்த அவைக்கு எதுவும் தெரியாது. இந்த விவாதங்களின் நிகழ்ச்சிப் பதிவேடு ஒரு குறிப் பின் வடிவத்திலோ அல்லது வேறுவிதமாகவோ அவையில் முன் வைக்கப்படா விட்டால் வரைவுக்குழுவின் செயல் குறித்து எந்த முடிவிற்கும் நம்மால் வரமுடியாது.

**திரு. அவைத் தலைவர்:** மாகாணங்களின் தலைமை அமைச் சர்களில் எவரேனும் கேள்வி ஏதேனும் கேட்டிருந்தால், அவர்கள் வரைவுடன் உடன்படாவிட்டால் அக்கேள்விகளை இங்கு எழுப்பு வார்கள் என நான் புரிந்து கொள்கிறேன். ஆகவே அவையின் முன் இப்போது வைக்கப்பட்டுள்ள வடிவத்திலுள்ள வரைவுக்கு தலைமை அமைச்சர்களின் இணக்கம் அல்லது ஒப்புதல் இருப்பதாக எடுத்துக் கொள்கிறேன்.

**திரு. பி. தாஸ்:** தலைமை அமைச்சர்களும், நிதி அமைச்சர் களும் இந்த அவைக்கு வெளியே செய்தது இந்த அவையைக் கட்டுப் படுத்தாது. முடிவு ஏதும் எடுக்கப்பட்டிருக்குமானால் இந்த ஆவணங் களின் படிகளை பெற்றிட இந்த அவை தனியுரிமை படைத்தது.

**திரு. அவைத் தலைவர்:** தலைமை அமைச்சர்களும் வரைவுக் குழுவினரும் எடுத்த எந்த முடிவுக்கும் இங்கு யாரும் கட்டுப்பட்ட வரல்ல. அவை தான் விரும்புகின்ற எந்த வழியிலும் வாக்களிக்க உரிமையுடையதாகும்.

**பண்டித லட்சுமி காந்த மைத்ரா:** ஒரு பிரச்சினை குறித்து டாக்டர் அம்பேத்கரிடம் விளக்கம் கேட்க விரும்புகிறேன். பிரச் சினை இதுதான்: குறித்துரைக்கப்படக்கூடிய விதத்திலும், குறித் துரைக்கப்படக்கூடிய நேரத்திலிருந்தும் வருவாய் மாநிலங்களுக் கிடையே பகிர்ந்தளிக்கப்படும் என்று இந்த உறுப்பு வழிவகை செய் கிறது... இடைக்கால ஒதுக்கீடு நிதிக் குழுவின் பரிந்துரைகளின்படி முடிவு செய்யப்படுமா? அரசமைப்புச் சட்டம் செயலுக்கு வருவதை உடனடியாகத் தொடர்ந்து வருவதும், அடுத்துவரும் காலத்தில் எதிர்ப் பார்க்கப்படும் ஆணைக்குழு நியமிக்கப்படுவதற்கு முற்பட்டதுமான

காலக்கட்டத்தைப் பொறுத்தவரை என்ன நிகழப் போகிறது என்ற தெளிவு இல்லை.

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, விளக்கம் மிக எளியது. குடியரசுத் தலைவர் ஒதுக்கீடு குறித்து ஆணை பிறப் பிப்பதற்கு முன் இடைக்கால விசாரணை ஏதும் கூடாது என்று நாம் விரும்பியிருந்தால் ஆணைக்குழுவின் பரிந்துரையின் பேரில் குடியரசுத் தலைவர் ஒதுக்கீடு குறித்து மீண்டும் முடிவெடுக்கும் வரையில் இந்த அரசமைப்புச் சட்டம் செயல்படத் தொடங்குவதற்கு முன்பிருந்த ஒதுக்கீடே தொடரும் என்று மட்டுமே நாம் விரும்பியிருந்தால் ஆணைக் குழுவின் பரிந்துரையின் பேரில் குடியரசுத் தலைவர் ஒதுக்கீடு குறித்து மீண்டும் முடிவெடுக்கும் வரையில் இந்த அரசமைப்புச் சட்டம் செயல்படத் தொடங்குவதற்கு முன்பிருந்த ஒதுக்கீடே தொடரும் என்று மட்டுமே நாம் சொல்லியிருப்போம். நாம் அப்படிச் சொல்ல வில்லை. வேண்டுமென்றேதான் நாம் அப்படிச் சொல்லவில்லை. ஏனெனில், விசாரணை நடத்தப்பட வேண்டுமென்றும், விசாரணை யின் அடிப்படையில் குடியரசுத் தலைவர் ஆணை கொண்டு குறித் துரைக்கப்படலாம் என்றும் விரும்புகிறோம். மொழிநடையிலான வேறுபாட்டுக்கு இதுவே காரணம்.

**பண்டித லட்சுமிகாந்த மைத்ரா:** அதாவது, இடைக்கால ஆணைக்குழு இப்போதே நியமிக்கப்பட்டு, அந்த ஆணைக்குழுவின் பரிந்துரையின் பேரில் குடியரசுத் தலைவர் ஆணை கொண்டு குறித் துரைப்பாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஆம், அப்படி யெனில் குடியரசுத் தலைவர் புதிய ஆணை பிறப்பிக்கும் வரையில் இப்போதுள்ள ஒதுக்கீடே தொடரும் என்று மட்டுமே சொல்லியிருப் போம்.

**திரு. அவைத் தலைவர்:** நான் இப்போது பல்வேறு திருத்தங் களையும் வாக்கெடுப்புக்கு விடுகிறேன். திரு. உபேந்திரநாத் பர்மன் முன்மொழிந்த திருத்தம் எண் 2858ஐ முதலில் வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 5 1949, பக்கம் 222-23.

**திரு. உபேந்திரநாத் பர்மன்:** ஐயா, டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் உரைத்ததைக் கருத்தில் கொண்டு என் திருத்தத்தை விலக்கிக் கொள்ள விரும்புகிறேன்.

பேரவையின் அனுமதி கொண்டு திருத்தம் விலக்கிக் கொள்ளப் பட்டது.

**திரு. அவைத் தலைவர்:** அடுத்து டாக்டர் அம்பேத்கர் முன் மொழிந்த திருத்தம் எண் 76ஐ வாக்கெடுப்புக்கு விடுகிறேன். இது ஒரு சொல்வகைத் திருத்தம் ஆகும்.

பிரச்சினை இதுதான்:

உறுப்பு 251இன் கூறு (2)இல் ''இந்தியாவின் வருவாய்கள்' என்ற சொற் களுக்குப் பதிலாக 'இந்தியாவின் தொகுப்பு நிதி' என்ற சொற்களை இடம் பெறச் செய்யலாம்.''

திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

**திரு. அவைத் தலைவர்:** அடுத்து திரு. டி.டி. கிருஷ்ணமாச் சாரியின் திருத்தம் உள்ளது.

பிரச்சினை இதுதான்:

''உறுப்பு 251இன் கூறு (4)இன் உட்கூறு (இ) இல் 'இந்தியாவின் வருவாய் கள்' என்ற சொற்களுக்குப் பதிலாக 'இந்தியாவின் தொகுப்பு நிதி' என்ற சொற்களை இடம்பெறச் செய்யலாம்.

திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

* * *

*(பேராசிரியர் சாக்சேனாவின் திருத்தம் மறுதலிக்கப்பட்டது.)*

உறுப்பு 251 அரசமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.

## உறுப்பு 253

[1]**திரு. அவைத் தலைவர்:** அடுத்து உறுப்பு 253ஐ எடுத்துக் கொள்ளலாம்.

---

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 5 1949, பக்கம் 224.

(திருத்தங்கள் எண் 2883, 2884 ஆகியவை முன்மொழியப் படவில்லை.)

**திரு. அவைத் தலைவர்:** திருத்தம் எண் 2885 என்னவாயிற்று? டாக்டர் அம்பேத்கர் அவர்களே, நீங்கள் அதனை முன்மொழிய விரும்புகிறீர்களா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இல்லை. திரு. தியாகி தமது திருத்தத்தை முன்மொழிவார்.

(திருத்தங்கள் எண் 2886 முதல் 2896 முடிய முன்மொழியப் படவில்லை.)

**திரு. அவைத் தலைவர்:** திரு. பர்தோலாய் அவர்களே, உங்கள் திருத்தம் எண் 2897ஐ முன்மொழிகின்றீர்களா?

**மாண்புமிகு திரு. கோபிநாத் பர்தோலாய்** (அசாம் - பொது): திருத்தத்தை முன்மொழிய எனக்கு விருப்பமில்லை. ஆனால் இவ் வுறுப்பு குறித்துப் பேச விரும்புகிறேன்.

(திருத்தம் எண் 2898 முதல் 2902 முடிய முன்மொழியப்பட வில்லை.)

**திரு. மகாவீர் தியாகி** (ஐக்கிய மாகாணங்கள்: பொது): ஐயா, நான் ஒரு திருத்தம் சொல்லியிருந்தேன்.

**திரு. அவைத் தலைவர்:** நாம் எல்லாத் திருத்தங்களையும் முடித்து விடவில்லை. அவற்றை வரிசையாக எடுத்துக் கொள்கிறேன். உங்களது திருத்தத்தைப் பின்னர் எடுத்துக் கொள்வேன். திருத்தம் எண் 81.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் முன்மொழிவது:

> ''உறுப்பு 253இன் கூறு (2)இல் 'இந்தியாவின் வருவாய்கள்' என்ற சொற்களுக்குப் பதிலாக 'இந்தியாவின் தொகுப்பு நிதி' என்ற சொற்களை இடம் பெறச் செய்யலாம்.''

**திரு. அவைத் தலைவர்:** அடுத்து, திரு. மகாவீர் தியாகியின் பெயரிலுள்ள திருத்தம் எண் 214.

**திரு. மகாவீர் தியாகி:** ஐயா, நான் முன்மொழிவது:

''திருத்தங்கள் பட்டியலில் உள்ள திருத்தம் எண் 2886 தொடர்பாக உறுப்பு 253 இன்கூறு (1)ஐ நீக்கிவிடலாம்.''

★ ★ ★

[1]**திரு. அவைத் தலைவர்:** டாக்டர் அம்பேத்கர், நீங்கள் ஏதேனும் கூற விரும்புகிறீர்களா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, திரு. தியாகி முன்மொழிந்த திருத்தத்தை ஏற்றுக்கொள்ள நான் அணியமாய் உள்ளேன். வரைவுக்குழு இந்தத் திருத்தத்தை ஏற்றுக்கொள்ள எண்ணி யுள்ளது ஏன் என்பது தொடர்பாக, அக்குழுவின் சார்பில் நான் சற்றே விளக்கமளிக்க வேண்டியது அவசியமெனக் கருதுகிறேன்.

திருத்தம் ஏற்றுக்கொள்ளப்படுவதை நியாயப்படுத்தும் முக்கிய கூறுகளிலிருந்து நான் தொடங்க வேண்டும். அதற்கு முன்னதாக என் நண்பர் பேராசிரியர் சாக்சேனா வரைவுக் குழுவிற்கு எதிராகச் சுமத்தி யுள்ள குற்ற விமர்சனக் கருத்துக்கு விடையளிக்க விரும்புகிறேன்.

வரைவுக் குழு மூலவரைவில் இந்த உறுப்பில் கூறு (1)ஐ வைத் துள்ளதும், ஆனால் இப்போது திரு. தியாகி முன்மொழிந்த திருத் தத்தை ஏற்றுக்கொள்ள அணியமாயிருப்பதும் முறையல்ல எனப் பேரா சிரியர் சாக்சேனா கூறினார். வரைவுக்குழு முன்வைத்த கூறு (1) ஆனது வரைவுக்குழுவிற்குள்ளேயே நடைபெற்ற கலந்துரையாடல்களி லிருந்து பிறந்ததன்று என்பதை நான் குறிப்பிட விரும்புகிறேன். என் நினைவு சரியாக இருக்குமானால், ஒன்றிய அதிகாரங்கள் குழுவின் அறிக்கையில் யோசனையாகத் தெரிவிக்கப்பட்டதுதான் இந்தக் கூறு. இந்தக் குழுவில்தான் உப்பு வரி ஏதும் விதிக்கக்கூடாது என்று முடிவு எடுக்கப்பட்டது. ஒன்றிய அதிகாரங்கள் குழுவின் அறிக்கையில் அடங்கியுள்ள கட்டளைகளுக்கும் கொள்கைகளுக்கும் வரைவுக் குழு வினர் கட்டுப்பட்டவர்கள் ஆதலால் இது குறித்தான உறுப்பில் இந்த யோசனையைச் சேர்ப்பதைத் தவிர அவர்களுக்கு வேறு வழியில்லை. ஆகவே வரைவுக் குழுவின் தரப்பில் உண்மையில் ஊசலாட்டம் என்ற பிரச்சினைக்கு இடமே இல்லை.

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 5 1949, பக்கம் 228-39.

இந்தக் கூறு நீக்காமல் வைத்துக் கொள்ளப்பட்டால் எழக் கூடிய நடைமுறை இடர்ப்பாடுகளுக்கு இப்போது வருகிறேன். பட்டியல் Iஇல் இரு பதிவுகள் இருப்பதை நினைவுகூரலாம். பதிவு 86 மைய அரசு சரக்குத் தீர்வை விதிப்பதற்கு அனுமதி வழங்குகிறது. மேலும் பதிவு 85 உள்ளது. இது சுங்க வரி விதிப்பதற்கு அனுமதி வழங்குகிறது.

இப்போது உறுப்பு 253 உட்கூறு (1) ஆனது அரசமைப்புச் சட்டத்தின் ஒரு பகுதியாகத் தொடர்ந்திருந்தால், உப்புக்குத் தீர்வையோ சுங்க வரியோ விதிப்பதற்காக பதிவு 86ஐயோ பதிவு 85ஐயோ பயன்படுத்த மைய அரசுக்கு உரிமையிருக்காது என்பது கண்கூடு. இது தெளிவானதாகும். ஏனெனில் கூறு (1), உப்பு வரியைப் பொறுத்தவரை சட்டமியற்றும் அதிகாரத்தைப் பறித்துக் கொள் கிறது. மற்றபடி பதிவு 86 அல்லது பதிவு 85ஆல் விதிக்கப்பட்ட வரி யாகும் இது. இப்போது, சரக்குத் தீர்வை விதிக்கப் பதிவு 86இன்படி அளிக்கப்பட்ட அதிகாரங்களைப் பயன்படுத்தாமலிருப்பதால் நாட் டிற்கு அதிக இடர்ப்பாடு நேரிடாது போகலாம் என்னும் அதே சமயத்தில், பதிவு 85இன்படி சுங்க வரி விதிப்பதற்கு அளிக்கப்பட்ட அதிகாரங்களைப் பயன்படுத்துவதன் மீதான தடையின் காரணத்தால் பெருமளவில் இடர்ப்பாடு ஏற்படக்கூடும் என்று எடுத்துரைக்கப் பட்டது. ஏனெனில் இந்தியாவின் உப்புத் தொழிலை நடைமுறையில் அழித்துவிடக் கூடிய உப்பு இறக்குமதியை நிறுத்துவதற்கு எந்த வகையிலும் சட்டப் பரிகாரம் காணும் நிலையில் இந்திய அரசாங்கம் இல்லாததால் இந்தியாவிற்குள் அயல்நாட்டு உப்பு கொண்டு வரு வதற்கு அனுமதியளிப்பதாகப் பதிவு 85 இருக்கும். ஆகவே, தடை யுத்தரவை நீக்கிவிட்டு, குறிப்பிட்ட எத்தருணத்திலும் எழக்கூடிய நிலைமைகளுக்கேற்பச் செயலாற்ற, இப்பிரச்சினையை எதிர்காலத் தில் அமையவுள்ள நாடாளுமன்றத்திடமே விட்டு விடுவதே நன்றெனக் கருதப்பட்டது. இதன் காரணமாகத்தான், வரைவுக்குழு என் நண்பர் திரு. தியாகி முன்மொழிந்த திருத்தத்தை ஏற்றுக்கொள்ள அணியமாயுள்ளது.

**திரு. ஆர்.கே. சித்வா:** மதுவிலக்கு என்ற அம்சம் திசை காட்டும் கொள்கையில் சேர்க்கப்பட்டதேன் என்று நான் அறிந்து கொள்ளலாமா? இந்த உறுப்பின் கூறு (1) நீக்கம் செய்யப்பட வேண்டுமென்றால் மதுவிலக்கு தொடர்பான அம்சம் அரசாங்கத்தின் திசை காட்டும் கோட்பாடுகளில் நுழைக்கப்பட்டது ஏன் என்று

நான் அறிந்து கொள்ளலாமா? கிர்ப்பான் அணிவதும் அடிப்படை உரிமைகளில் சேர்க்கப்பட்டது ஏன் என்று நான் அறிந்து கொள்ள லாமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஓ, அறிந்து கொள்ளலாமே! கிர்ப்பான் என்பதன் அடிப்படையே வேறு.

★ ★ ★

[1]**மாண்புமிகு உறுப்பினர்கள் பலர்:** இப்போது யாரும் பேச வேண்டாம்.

**திரு. அவைத் தலைவர்:** பேச வேண்டாம். உறுப்பினர்கள் விரும்பினால், மேற்கொண்டு பரிசீலனை செய்வதற்காக இந்த உறுப்பை நிறுத்தி வைத்துக்கொள்ள நான் அனுமதிக்கலாம்.

**மாண்புமிகு திரு. கே. சந்தானம்:** இந்த உறுப்பை நிறுத்தி வைத்துக் கொள்ளலாம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இந்த உறுப்பை நிறுத்தி வைத்துக் கொள்ளலாம்.

**திரு. மகாவீர் தியாகி:** இந்த உறுப்பை நிறுத்தி வைத்துக் கொள் ளலாம்.

**திரு. அவைத் தலைவர்:** இந்த உறுப்பு தள்ளி வைக்கப்படும்.

★ ★ ★

## உறுப்பு 253 (தொடர்ச்சி)

[2]**திரு. அவைத் தலைவர்:** முதலில் நாம் உறுப்பு 254ஐப் பரி சீலனைக்கு எடுத்துக் கொள்வோம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் (பம்பாய்: பொது):** ஐயா, நாம் உறுப்பு 254 மீதான விவாதத்தைத் தொடங்குவதற்கு

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 5 1949, பக்கம் 240.
2. மேற்படி அதே நூல் பக். 241.

முன்பாக, உறுப்பு 253க்கான திரு. தியாகியின் திருத்தம் குறித்துப் பரிசீலனை செய்ய அனுமதிக்கும்படி தங்களைக் கேட்டுக் கொள்கிறேன். ஏனெனில் தலைமை அமைச்சர் இது குறித்துப் பேச விரும்புகிறார். விவாதம் முடிவடைந்துவிட்ட போதிலும் நீங்கள் திருத்தத்தை வாக்கெடுப்புக்கு விடுமுன் தலைமை அமைச்சரை உரையாற்ற அனுமதிக்கும்படி கேட்டுக் கொள்கிறேன்.

**திரு. அவைத் தலைவர்:** சரி, மாண்புமிகு பண்டித ஜவஹர்லால் நேரு.

★ ★ ★

***(டாக்டர் அம்பேத்கரின் திருத்தத்தினால் திருத்தப்பட்ட வடிவில் உறுப்பு 253 அரசமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.)***

## உறுப்பு 254

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அவைத் தலைவர் அவர்களே, நான் முன்மொழிவது:

''உறுப்பு 254க்குப் பதிலாகப் பின்வருவதை இடம்பெறச் செய்யலாம்:

*சணல் மற்றும் சணல் பொருட்கள் மீதான ஏற்றுமதி வரிக்கு மாற்றாக மானியங்கள்*

254. (1) ஒவ்வோர் ஆண்டிலும் சணல் மற்றும் சணல் பண்டங்கள் மீதான ஏற்றுமதி வரியின் நிகர வரவில் வங்காளம், பீகார், அசாம், ஒரிசா ஆகிய மாநிலங்களுக்குப் பங்கேதும் ஒதுக்குவதற்குப் பதிலாக அந்தந்த ஆண்டிலும் இந்த மாநிலங்களின் வருவாய்களின் மானிய உதவித் தொகையாக இந்தியத் தொகுப்பு நிதியிலிருந்து குடியரசுத் தலைவர் குறித்துரைக்கக்கூடிய தொகைகள் எடுத்தளிக்கப்படும்.

(2) சணல் அல்லது சணல் பண்டங்கள் மீதான ஏற்றுமதி வரி இந்திய அரசினால் தொடர்ந்து விதிக்கப்படுகிற வரை, அல்லது பத்தாண்டு கழிந்து முடியும் வரை, இவ்வாண்டில் எது முந்திக் கொள்கிறதோ அதுவரை மேற்சொன்ன வாறு குறித்துரைக்கப்பட்ட தொகைகள் இந்தியத் தொகுப்பு நிதியிலிருந்து தொடர்ந்து எடுத்தளிக்கப்படும்.

(3) குறித்துரைக்கப்படுதல் என்ற சொல் இந்த அரசமைப்புச் சட்டத்தின் உறுப்பு 251இல் என்ன பொருளைக் கொண்டிருந்ததோ, அதே பொருளைத் தான் இந்த உறுப்பிலும் கொண்டிருக்கிறது.

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 5 1949, பக்கம் 242-43.

ஐயா, இந்தத் திருத்தம் சணல் மற்றும் சணல் பண்டங்கள் மீதான ஏற்றுமதி வரியைப் பங்கிட்டுக் கொள்ள இப்போதுள்ள ஏற்பாட்டில் ஒரு முக்கிய மாற்றத்தைச் செய்கிறது. இந்திய அரசாங்கச் சட்டத்தில் செய்யப்பட்ட வழிவகை என்னவென்றால், இந்த உறுப்பில் குறிப்பிடப்பட்டுள்ள சில மாகாணங்களின் பொருளாதாரத்தில் சணல் ஒரு மிக முக்கியச் சரக்காக அமைவதன் காரணமாக சணல் மற்றும் சணல் பண்டங்கள் மீதான ஏற்றுமதி வரியின் வருவாயில் ஒரு குறிப்பிட்ட பங்கைப் பெற்றிட அம்மாகாணங்களுக்கு உரிமையிருக்க வேண்டுமென்பதே. சணல் மற்றும் சணல் பண்டங்கள் மீதான ஏற்றுமதி வரியில் ஒரு பங்கினைப் பெற்றிட சில மாகாணங்களுக்குள்ள இந்த உரிமையை ஒழித்துவிட வேண்டும் என்பதே திருத்தப்பட்ட உறுப்பில் காணப்படும் முன்மொழிவாகும். காரணம் மிக எளிய ஒன்றே எனலாம். சாதாரணமாக ஏற்றுமதி இறக்குமதி வரிகள் அனைத்தும் மைய அரசுக்கே சொந்தம். நான் சொன்னது போல், எந்த ஒரு குறிப்பிட்ட மாகாணத்தின் பொருளாதாரத்திலும் ஒரு முக்கியச் சரக்காக அமைய நேரிடுகின்ற எந்த ஒரு குறிப்பிட்ட சரக்கின் மீதும் விதிக்கப்படும் ஏற்றுமதி வரியில் பங்குபெற அம்மாகாணத்திற்கு உரிமை ஏதும் இல்லை. ஆயினும், குறிப்பாக வங்காளத்தின் நிதி நிலைமைகளை ஏற்றுமதி வரியில் ஒரு பங்கில்லாமல் சமன் செய்ய முடியாதென்ற உண்மையைக் கருத்தில் கொண்டு 1935 ஆம் ஆண்டின் இந்திய அரசாங்கச் சட்டத்தில் ஒரு விதிவிலக்கு ஏற்படுத்தப்பட்டது. இந்த விதிவிலக்கின் மூலமாக வங்காள அரசுக்கும் ஏனைய அரசுகளுக்கும் ஏற்றுமதி வரியில் ஒரு பங்கு பெற்றிட வரையறுத்த உரிமைகள் வழங்கப்பட்டன எனலாம். இது, நான் முன்பே கூறியதுபோல், ஏற்றுமதி இறக்குமதி வரிகள் மைய அரசுக்கே சொந்தம் என்ற பொதுக் கொள்கைக்கு மாறானது. 1935 ஆம் ஆண்டின் இந்திய அரசாங்கச் சட்டத்தில் தரப்பட்ட இந்த விதிவிலக்கு இனிமேலும் தொடர அனுமதிக்கக்கூடாது என இப்போது கருதப்படுகிறது. இந்த நச்சுக் கொள்கைக்கு இப்போதே முற்றுப்புள்ளி வைத்தாக வேண்டுமெனக் கருதப்படுவதற்குக் காரணம் என்னவென்றால், குறிப்பிட்ட சில சரக்குகளைத் தங்கள் பகுதியில் விளைவித்து, வெளியிடங்களுக்கு ஏற்றுமதி செய்கிற மற்ற மாகாணங்களும் கூட, அந்தப் பண்டங்களுக்கு இந்திய அரசு தண்டுகிற ஏற்றுமதி வரியில் ஒரு பங்கு பெற்றிட உரிமை கோரலாம் என்று கற்பனை செய்து பார்ப்பதில் தவறில்லை. இந்தப் போக்கு வளருமேயானால், இந்திய அரசுக்கு மிக இடர்ப்பாடான ஒரு நிலைமை ஏற்படும். இதனால்தான் இந்தக் கொள்கையை இப்போது திட்டவட்டமாக ஒழித்துக்கட்டிவிட வேண்டு

மென்று முடிவு செய்யப்பட்டுள்ளது. ஆனால் ஏற்றுமதி வரியில் பங்களிக்கும் அந்தக் கொள்கையைத் திடீரென விலக்கிக் கொண்டால், அவ்வாறு இப்போது வரை அந்தப் பங்கினை நம்பியிருந்த பல மாகாணங்களின் நிதிநிலைகளைச் சமன் செய்வதில் ஓர் இடர்ப்பாட்டை ஏற்படுத்தக்கூடும் என்பது அதே அளவிற்குத் தெளிவானதே. ஆகவே குறிப்பாக ஏற்றுமதி வரியில் பங்கெடுப்பதற்குப் பதிலாக, ஏற்றுமதி வரி தொடர்ந்து விதிக்கப்படும் காலத்திற்கு, அல்லது பத்தாண்டு கழிந்து முடியும் வரை இரண்டில் எது முந்துகிறதோ அதுவரை, அந்த மாகாணங்களுக்கு ஒரு சமதைத் தொகை அல்லது குடியரசுத் தலைவர் நிர்ணயிக்கக் கூடிய வேறு தொகை வழங்கப்படலாம் அல்லது ஒதுக்கப்படலாம் என்று வழிவகை செய்யப்படுகிறது. அந்த மாகாணங்கள், இந்த உறுப்பில் கூறப்பட்ட காலத்திற்கு பிறகு தங்கள் நிதிநிலையைச் சமன்செய்யக்கூடிய நிலையில் இருக்கும் விதத்தில் தங்கள் செல்வாதாரங்களை வளர்த்துக் கொள்ளப் போதிய கால அவகாசம் பெறுவதற்குத் துணை செய்வதற்காகவே இந்த வழிவகை அறிமுகம் செய்யப்படுகிறது.

ஐயா, இந்தத் திருத்தப்பட்ட உறுப்பு 254இல் இப்போது உருவம் பெற்றுள்ள இந்தப் போற்றத்தக்க கொள்கை அவைக்கு ஏற்புடையதாக இருக்கும் என்று நம்புகிறேன்.

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அவைத் தலைவர் அவர்களே, விவாதத்திற்கு நான் விடையளிக்கிறேன். ஆனால் வெவ்வேறு மாகாணங்களைச் சேர்ந்த உறுப்பினர்கள் இந்த அவையில் பாடினார்களே பல சோகப் பாடல்கள், அவை குறித்து நான் பேசக் கருதவில்லை. 1935 ஆம் ஆண்டின் இந்திய அரசாங்கச் சட்டத்தின்படி ஆணையிட்டவாறு வருவாய்கள் பகிர்வு செய்யப்படுவதால் தாங்கள் மோசமாக நடத்தப்பட்டுள்ளோம் என்பது இவர்களின் கருத்தாகும். சற்றே தூலமாக எடுத்துரைக்கப்பட்ட அந்தச் சில வாதக் கூறுகளுக்கு மட்டுமே விடையளிக்க எண்ணியுள்ளேன்.

முதலாவதாக, என் நண்பர் பேராசிரியர் சிபன்லால் சாக்சேனா முன்மொழிந்த திருத்தம் தொடர்பாக, நான் ஒரு வார்த்தை சொல்ல விரும்புகிறேன். மானியங்களைக் குடியரசுத் தலைவர் நிர்ணயிப்

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 8 1949, பக்கம் 259-61.

பதற்குப் பதிலாக நாடாளுமன்றம் நிர்ணயிக்க வேண்டுமென்று அவர் விரும்பு கிறார். நிதி தொடர்பான ஏனைய உறுப்புகள் குறித்து சென்ற முறை நடைபெற்ற விவாதத்தின் போக்கில், பகிர்வுச் சிக்கலில் நாடாளுமன்றத்தை இழுத்துவிடும் நோக்கம் இல்லை என்று கூறி னேன். ஏனென்றால் வருவாய்ப் பகிர்வானது வெவ்வேறு மாகா ணங்கள் ஒன்றுக்கொன்று ஒத்தாசை செய்து கொள்வதற்கோ அல்லது வெவ்வேறு மாகாணங்களின் பிரதிநிதிகள் சண்டையிட்டுக் கொள் வதற்கோ அடிப்படையாகி விடுவதை நாம் விரும்பவில்லை. இதனைக் குடியரசுத் தலைவர் முடிவு செய்ய வேண்டும் அல்லது நிதி ஆணைக் குழுவின் அறிவுரையின் பேரில் குடியரசுத் தலைவர் முடிவு செய்ய வேண்டும் என்று நாம் விரும்புகிறோம். அதனால் தான் பேராசிரியர் சாக்சேனாவின் திருத்தத்தை ஏற்றுக்கொள்ள நான் அணியமாய் இல்லை.

அடுத்து, என் நண்பர் திரு. மைத்ரா எழுப்பிய வாதத்திற்கு வருகிறேன். அவரது முதல் வாதம் என்னவென்றால், மூல உறுப்பை மாற்றுவதற்காக வரைவுக்குழு இப்போது ஒரு திருத்தத்தைக் கொண்டு வருவதற்குக் காரணம் ஏதும் இருப்பதாக அவர் கருதவில்லை. நிதித் துறை குறித்த வல்லுநர் குழுவின் பரிந்துரைகளை அவர் எடுத்துப் பார்க்க மறந்துவிட்டார் என உறுதியாக நம்புகிறேன். அவர் அவற்றை எடுத்துப் பார்ப்பாரானால் சணல் மற்றும் சணல் பண்டங்கள் மீதான வரியை ஒதுக்கீடு செய்யும் ஏற்பாடு மாற்றப்பட வேண்டுமென்று வல்லுநர் குழுதான் பரிந்துரைத்தது என்பதை ஏற்றுக் கொள்வா ரெனக் கருதுகிறேன். ஆகவே, மூல உறுப்பில் ஒரு மாற்றம் செய்ய வரைவுக்குழு விரும்புவதாகவோ துணிவதாகவோ சொல்வதற் கில்லை.

**பண்டித லட்சுமிகாந்த மைத்ரா:** அவர்கள் இழப்பீடு குறித்தும் சொல்லியிருக்கிறார்கள்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அதற்கு வருவேன். வரைவுக்குழு ஒன்றே ஒன்றைத்தான் ஏற்றுக்கொள்ளவில்லை. அதாவது சணலுக்கான ஏற்றுமதி வரியில் தங்கள் பங்கினை இழக்கப் போகும் வெவ்வேறு மாகாணங்களுக்குத் தரப்பட வேண்டிய ஒதுக்கீடு குறித்து நிதித்துறை வல்லுநர் குழு தெரிவித்த யோசனையை மட்டும் அது ஏற்றுக் கொள்ளவில்லை. வல்லுநர் குழு யோசனையாகத் தெரிவித்த தொகைகள் குறித்து அநேகமாக மேலும் பரிசீலிக்க வேண்டிய

தேவையிருப்பதாக வரைவுக்குழு கருதியது. வல்லுநர் குழுவிற்கு மிகக் குறுகிய கால அவகாசமே கிடைத்தது என்பதைக் கருத்தில் கொண்டு அது யோசனையாகத் தெரிவித்த தொகைகளை மேற்கொண்டு பரிசீலனை இல்லாமல் ஏற்றுக் கொள்ள முடியும் என்று வரைவுக்குழு உறுதியாகக் கருதவில்லை. இந்த அச்சத்தினால்தான் வரைவுக் குழு வினர் வல்லுநர் குழுவால் யோசனையாகத் தெரிவிக்கப்பட்ட தொகை களை ஏற்றுக் கொள்வதற்குப் பதிலாகத் தாங்களே ஒரு சூத்திரத்தை வகுத்துக் கொண்டனர்; இந்தச் சூத்திரம் இப்போது புதிய உறுப்பில் இடம்பெறுகிறது. அதாவது சணல் வரியில் ஏற்படும் இழப்புக்கான ஈட்டுக்கு மாற்றாக வழங்கப்பட வேண்டிய மானிய உதவிகள் குடியரசுத் தலைவரால் குறித்தளிக்கப்படும். ஆகவே, இந்தக் குறிப்பான உறுப்பில் சொல்லப்பட்டுள்ள நான்கு மாகாணங்களிடமிருந்தும் ஒரு நியாயமான வருவாய் வழியைப் பறித்துக் கொள்ள வரைவுக்குழு விரும்பவில்லை. இந்த உறுப்பில் அம்மாகாணங்களுக்கு ஓர் ஒப் படைக்கப்பட்ட உரிமை இருப்பதாகச் சொல்லலாம். வல்லுநர் குழு யோசனையாகத் தெரிவித்த தொகைகளில் அடிப்படையான மாற்றங் கள் ஏதும் செய்திடவும் வரைவுக் குழு முயலவில்லை. வரைவுக் குழுவினர் செய்திருப்பது எல்லாம் இப்பிரச்சினையை குடியரசுத் தலைவரிடம் விட்டுவிடுவதுதான், அதற்கு மேல் ஒன்றுமில்லை.

அவையின் முன் இப்போதுள்ள உறுப்பில் ''குறித்தளித்தல்'' என்ற சொல்லுக்கான ஓர் இலக்கணத்தை வரைவுக்குழு நுழைப்பது தவறு என்று என் நண்பர் பண்டித ஹிருதய நாத் குன்ஸ்ரு சுட்டிக் காட்டினார். மேலும் கடைசியாக நாம் நிறைவேற்றிய உறுப்பு 260இல் கூட ''குறித்தளிக்கப்பட்ட'' என்ற சொல் இடம்பெற்றிருக்கக் கூடாது எனவும் கூறினார். இப்போது அவர் வலியுறுத்திய கருத்தின் நிறை குறைகள் என்னவாயினும் ''குறித்தளிக்கப்படுதல்'' என்ற சொல்லின் இலக்கணத்தைத் தவிர்ப்பது சற்றே கடினமென எனக்குத் தோன்று கிறது. மானிய உதவிகள் குறித்தளிக்கப்பட்டவாறு இருக்குமென்று உறுப்பு 254இன் முக்கியப் பகுதியில் நாம் கூறியிருக்கிறோம். இப்போது, ''குறித்தளிக்கப்படுதல்'' என்ற சொல்லின் பொருள் என்ன வென்று அறிந்து கொள்ள எந்த வழக்கறிஞரும் விரும்பக்கூடும். ஒன்று, உறுப்பு 254இன் வழிவகைகளால் குறுக்கப்படவோ வரை யறுக்கப்படவோ கூடிய ''குறித்தளிக்கப்படுதல்'' என்ற சொல்லுக் கான தனி இலக்கணத்தை நாம் வகுக்க வேண்டியிருக்கும், அல்லது ''குறித்தளிக்கப்படுதல்'' என்ற சொல்லுக்கு இலக்கணம் வகுத்துள்ள உறுப்பு 260இல் அடங்கிய வழிவகைகளை நாம் மாற்ற வேண்டி யிருக்கும்.

*திரு. அவைத் தலைவர்: நீங்கள் 251ஐச் சொல்கிறீர்கள் போலும்.*

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** *நான் வருந்து கிறேன், திருத்திக் கொள்கிறேன். அது 251தான். ஒதுக்கீட்டைக் குறித் தளிப்பதைப் பொறுத்தவரை வரைவுக் குழுவினர் ''குறித்தளிக்கப் படுதல்'' என்ற சொல்லுக்கு இருவேறு இலக்கணங்கள் தெரிவித்துள் ளனர். ''குறித்தளிக்கப்படுதல்'' என்பதற்கான ஓர் இலக்கணம் நிதி ஆணைக் குழுவின் பரிந்துரைகள் தம் முன் இல்லாதபோது குடியரசுத் தலைவரால் குறித்தளிக்கப்படுவதைக் குறிக்கும். குறித்தளிக்கப் படுதல் என்பதன் இரண்டாவது இலக்கணம் நிதி ஆணைக் குழுவின் பரிந்துரைகள் குடியரசுத் தலைவர் முன் இருக்கும்போது குறித் தளிக்கப்படுதல் ஆகும். குறித்தளிக்கப்படுதல் என்ற சொல்லுக்கு இரு வேறு இலக்கணங்கள் அல்லது பொருள் விளக்கங்களை வரைவுக்குழு தர வேண்டி ஏற்பட்டதற்கான காரணம் இதுவே. நடப்பிலுள்ள ஒதுக்கீடு - சணல் வரி ஒதுக்கீடு மட்டுமல்லாமல், அரசமைப்புச் சட்டத் தின் ஏனைய உறுப்புகளின்படி வழிவகை செய்யப்பட்டுள்ள ஏனைய வருவாய் வழிகளின் ஒதுக்கீடும் கூட - இப்போதுள்ளபடியே மாறாமல் இருந்துவிடக் கூடாது என்று மாகாணங்கள் விரும்புவது தெள்ளத் தெளிவாக தெரிகிறது. ஏனென்றால் தங்களுக்கு இப்போது அளிக்கப் படும் தொகைகள் போதுமானவையும் அல்ல, நியாயமானவையும் அல்ல என்பதும், ஒதுக்கீட்டில் ஏதேனும் மாற்றம் செய்வது அவசிய மாகும் என்பதும் அவற்றின் முறையீடாகும். ஒதுக்கீடு உடனடியாகச் செய்யப்பட்டு, அரசமைப்புச் சட்டம் தொடங்கியதும் புதிய ஒதுக் கீடும் தொடங்க வேண்டுமானால், நிதி ஆணைக்குழுவின் பரிந்துரை களுக்காகக் காத்திராமல் குடியரசுத் தலைவரால் மட்டுமே இவ்விதம் ஒதுக்கீடு செய்ய முடியும் என்பது கண்கூடு. ஏனெனில், மைய அரசு எவ்வளவு அவசரமாகச் செயல்பட அணியமாய் இருந்தாலும் சரி, அரசமைப்புச் சட்டம் தொடங்குவதற்கு முன் அது ஆணைக் குழுவை அமர்த்தி அறிக்கை வாங்குவது சாத்தியமாகாது, இதை நினைத்துப் பார்க்கவே முடியாது. இதன் விளைவாகத்தான் ''குறித்தளிக்கப் படுதல்'' என்ற சொல்லுக்கு இந்த இரட்டை இலக்கணத்தை நாம் வகுக்க வேண்டியிருந்தது. முதலாவதாக, குறித்தளித்தல் என்பது நிதி ஆணைக்குழுவின் பரிந்துரை இல்லாமல் குடியரசுத் தலைவரால் செய்யப்படும். ஐயம் வேண்டாம், குடியரசுத் தலைவர் தற்போக்காகச் செயல்படுவார் என்பதன்று இதன் பொருள். குடியரசுத் தலைவர் தமது அமைச்சரவை தரும் அறிவுரையின் பேரில் மட்டுமே செயல்படுவார்*

என்பதும் இதன் பொருளன்று. மாகாணங்களுடன் ஒப்பிடுகையில் மைய அரசின் நிலையைக் காப்பதிலும் உறுதி செய்வதிலுமே அந்த அமைச்சரவைக்கு அக்கறை இருக்கக் கூடும். மைய அரசு இதுபற்றி யோசித்துக் கொண்டிருப்பதாக நான் நினைக்கிறேன். இந்தச் செய்தியை நான் தெள்ளத் தெளிவாக உங்களுக்குச் சொல்ல விரும்பு கிறேன்: மைய அரசு ஏதேனும் ஒரு குழுவை அமர்த்தவே எண்ணி யிருக்கிறது. அது ஒரு வல்லுநர் குழுவாக இருக்கும், அல்லது வல்லுந ரான ஓர் அதிகாரியாக இருக்கலாம். இது இந்த அரசமைப்புச் சட் டத்தின் பொருளுக்குட்பட்ட ஆணைக் குழுவாக இருக்காதுதான். மாநிலத்துக்கும் மாநிலத்துக்கும் இடையிலும், மைய அரசுக்கும் மாநிலங்களுக்கும் இடையிலும் நீதி செய்திடும் வகையில், சணல் வரியும் சணல் பண்டங்கள் மீதான வரியும் இப்போது நடப்பிலுள்ள வாறு ஒதுக்கீடு செய்யப்படுவது மட்டுமல்லாமல், ஏனைய வருவாய் வழிகளின் ஏனைய ஒதுக்கீட்டுக்கும் கூட திருத்தி அமைக்கப்பட வேண்டுமா என்பதை ஆராய்ந்து கண்டறிவதே இக்குழுவின் நோக்க மாக இருக்கும். ஆகவே குடியரசுத் தலைவரின் முதல் ஆணை பிறப்பிக்கப்படும்போது நான் சொன்னதுபோல் அவரால் தற்போக் காகவோ அல்லது மைய அரசில் உள்ள நிர்வாகத் துறை தரும் அறிவுரையின் பேரில் மட்டுமோ அது பிறப்பிக்கப்படாது. ஆனால் எப்பக்கமும் சாராதவர்கள், வல்லுநர்கள் போன்றோரின் கருத்து அவருக்கு வழிகாட்டும். அதன் பிறகு, மேற்கொண்டு ஆணைகளை மறுஆய்வு செய்யும் பிரச்சினை எழும்போது குடியரசுத் தலைவர், நாடாளுமன்றத்தின் அறிவுரைப்படி செயல்பட வேண்டுமா? அல்லது தம் சொந்தக் கருத்தின்படி செயல்பட வேண்டுமா? அல்லது அர சமைப்புச் சட்டத்தின்படி நியமிக்கப்படவுள்ள நிதி ஆணைக்குழு வின் அறிவுரை மற்றும் பரிந்துரைப்படி செயல்பட வேண்டுமா? என்ற கேள்வி எழும். நான் முன்பே சொன்னதுபோல் நாம் கைக்கொள்ளக் கூடிய மூவேறு மாற்று வழிகள் உள்ளன. குடியரசுத் தலைவர் சார் பின்றிச் செயல்பட வேண்டுமெனவும், அவர் நிதி ஆணைக் குழுவின் பரிந்துரைகளால் வழிநடத்தப்படக் கூடாதெனவும் என் மாண்புமிகு நண்பர் பண்டித குன்ஸ்ரு நல்ல நோக்கத்துடனேயே யோசனை தெரிவிக்கிறார் என்பதை நான் அறிவேன். நாடாளுமன்றம் அனுமதி வழங்காவிட்டால் நிதி ஆணைக் குழுவின் பரிந்துரையின் பேரில் கூட குடியரசுத் தலைவர் எவ்வித ஒதுக்கீடும் செய்யக்கூடாதென்றும் என் மாண்புமிகு நண்பர் பேராசிரியர் சாக்சேனா உட்பட ஒரு பிரிவினர் கருதுகின்றனர். நான் முன்பே சொன்னதுபோல் இந்த இரண்டு நிலைப்பாடுகளிலும் குறைபாடுகள் உள்ளன. குடியரசுத் தலைவர்

ஒதுக்கீட்டுக்குப் பரிந்துரை செய்வதற்கான ஓர் ஆணைக்குழுவை நியமித்த பிறகு அந்தக் குழுவின் பரிந்துரைகளை அறவே புறக்கணித்து விட்டு, தம் சொந்தக் கண்ணோட்டத்தின்படி ஒதுக்கீடு செய்வது சரியாக இருக்குமென நான் கருதவில்லை. அது ஆணைக் குழுவை அவமதிப்பதாக இருக்குமெனக் கருதுகிறேன். நான் முன்பே சொன்னது போல் பிரச்சினையை நாடாளுமன்றத்திடம் விட்டுவிடுதல் என்ற மூன்றாவது வழி ஆபத்து நிறைந்தது என எனக்குத் தோன்றுகிறது. இதனால் மாகாண சர்ச்சைகளும், மாகாணப் பொறாமைகளும் தோன்றக்கூடும். ஆகவேதான் வரைவுக்குழு நடுவழியைக் கைக்கொண்டுள்ளது எனலாம். அதாவது இப்பிரச்சினையை நாடாளுமன்றத்தில் விவாதிக்கலாமென்ற போதிலும் குடியரசுத் தலைவர் நிதி ஆணைக் குழுவின் பரிந்துரைகளை வழிகாட்டியாகக் கொண்டு செயல்பட வேண்டுமே தவிரத் தற்போக்காகச் செயல்படக் கூடாது. அவை இதனை ஏற்றுக் கொள்ளுமென நம்புகிறேன். மூன்று வழி முறைகளையும் ஒத்துப்போகச் செய்கிற அறிவுக்குகந்த சமரசமும், இப்பிரச்சினையைக் கையாள்வதற்கு மிகச் சிறந்த வழியும் இதுவே.

முன்பே குறிப்பிட்டவாறு அம்பேத்கரின் திருத்தம் ஏற்றுக் கொள்ளப்பட்டது.

உறுப்பு 254 அரசமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.

## புதிய உறுப்பு 254 - A

[1]**திரு. அவைத் தலைவர்:** அடுத்து உறுப்பு 254-Aஐ எடுத்துக் கொள்வோம்.

**திரு. நசிருதீன் அகமது:** நான் ஒரு ஒழுங்குப் பிரச்சினை எழுப்புகிறேன். 254-A என்னும் புதிய உறுப்பைச் சேர்க்க முயலும் திருத்தம் எண் 82 புத்தம் புதிய செய்தியாகும் என்பதே ஒழுங்குப் பிரச்சினை. அரசமைப்புச் சட்டத்திற்கான திருத்தங்கள் குறிப்பிட்ட தேதிக்குள் முன்வைக்கப்பட வேண்டுமென நாம் ஏற்கெனவே இந்த அவையில் முடிவு செய்துள்ளோம். எமது திருத்தங்களை, முன்வைத்து விட்டோம். விதிகளின்படி, அரசமைப்புச் சட்டத்திற்கு மேலும் திருத்தங்கள் அனுமதிக்கப்படக் கூடாது. மூலத் திருத்தங்களுக்கான

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 8 1949, பக்கம் 261-64.

திருத்தங்களும், அதேபோன்று முறையான திருத்தங்களுக்கான திருத் தங்களும் மட்டுமே இன்று அனுமதிக்கத்தக்கவை. இப்போது நம்முன் உள்ள திருத்தம் எந்தத் திருத்தத்துடனும் எவ்வழியிலும் தொடர் புடையதல்ல என்பதைப் பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன். ''உறுப்பு 284க்குப் பிறகு பின்வரும் உறுப்பை இடம்பெறச் செய்ய லாம்'' என்று அது சொல்கிறது. இது எந்தத் திருத்தத்தோடும் சார்போ தொடர்போ இணைப்போ கொண்டதாய் இருப்பதற்கான முயற்சி எதையும் இங்கு காணோம். அப்படி ஒரு பாசாங்கு கூட இல்லை. ஐயா, இந்த உறுப்பை இந்த வழியில் நுழைக்க முடியாது என்று பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** என் மதிப்பிற்குரிய நண்பரால் எழுப்பப்பட்ட பிரச்சினை ஏற்புடையதே என்பதில் ஐய மில்லை. ஆனால் முக்கியத்துவம் வாய்ந்த ஒன்றாக இருக்குமானால் எந்தத் திருத்தத்தையும் அனுமதிக்கத் தங்களுக்கு எல்லையற்ற விருப் புரிமைகள் இருக்கிறது என்பதைப் பணிவுடன் தெரிவித்துக் கொள் கிறேன்.

**திரு. அவைத் தலைவர்:** இதற்கு முன்னாலும் கூட பல சந்தர்ப் பங்களில் புதிய உறுப்புகளை நுழைக்க அனுமதி வழங்கியுள்ளோம் என்று கருதுகிறேன்; இந்தப் புதிய உறுப்பை உறுப்பு 254க்குப் பிறகு நுழைக்க அனுமதி கோரப்படுகிறது.

**திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி:** வரைவுக் குழுவினர் செயல் பட நீங்கள் அனுமதி வழங்கியுள்ளபோது, வரைவு அரசமைப்புச் சட்டத்தைத் தொடர்ச்சியாகப் பரிசீலனை செய்வது அவர்களின் கடமையாகும். இடைவெளி இருப்பதாக அவர்கள் கண்டால் வரைவுக் குழு இருந்து வருகிறது என்பதால் அந்த இடைவெளியை நிரப்ப அவர்கள் நடவடிக்கைகள் எடுக்க வேண்டியிருக்கிறது. இந்தத் தேவை யிலிருந்துதான் இப்போது நம்முன் உள்ள திருத்தம் எழுகின்றது.

**திரு. அவைத் தலைவர்:** இதற்கு முன்னால் பல சந்தர்ப்பங் களில் புதிய உறுப்புகள் சேர்க்கப்பட அனுமதி வழங்கியுள்ளேன்; இந்தப் புதிய உறுப்பை உறுப்பு 254க்குப் பிறகு நுழைக்க அனுமதி கோரப்படுகிறது; ஆகவே இதனை அனுமதிக்கிறேன்.

டாக்டர் அம்பேத்கர், நீங்கள் திருத்தத்தை முன்மொழியலாம்.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஐயா, நான் முன்மொழிவது:

மாநிலங்களின் நலன்சம்பந்தப்பட்டுள்ள வரி விதிப்பைப் பார்க்கும்படியான சட்ட முன்வடிவுகளுக்கு குடியரசுத் தலைவரின் முன்-பரிந்துரை தேவை.

''உறுப்பு 254க்குப் பிறகு பின்வரும் உறுப்பை நுழைக்கலாம்:

254-A (1) ஒரு சட்ட முன்வடிவோ, அல்லது சட்டத் திருத்தமோ மாநிலங்களின் நலன் சம்பந்தப்பட்டுள்ள வரி அல்லது தீர்வை எதனையும் விதிப்பதாக அல்லது மாற்றுவதாக இருக்குமானால், அல்லது இந்திய வருமான வரித் தொடர்பான சட்டங்களின் நோக்கத்திற்கு வரையறுக்கப்பட்டவாறு 'வேளாண் வருமானம்' என்ற தொடரின் பொருளை மாற்றுவதாக இருக்குமானால், அல்லது ஒன்றியத்தின் நோக்கங்களுக்கு இந்த அத்தியாயத்தின் முன்சென்ற வழிவகைகளில் குறிப்பிடப்படுவது போன்ற மிகைக் கட்டணம் ஏதும் விதிப்பதாக இருக்குமானால், இத்தகைய சட்ட முன்வடிவு அல்லது சட்டத் திருத்தம் எதுவும் குடியரசுத் தலைவரின் பரிந்துரையின் பேரில் அல்லாமல் நாடாளுமன்றத்தின் ஈரவைகளில் எந்தவொன்றிலும் அறிமுகம் செய்யப்படாது, அல்லது முன்மொழியப்படாது.

(2) இந்த உறுப்பில் 'மாநிலங்களின் நலன் சம்பந்தப்பட்டுள்ள வரி அல்லது தீர்வை' என்ற தொடர்

(அ) ஒரு வரி அல்லது தீர்வையின் நிகர வரவுகளை முழுமையாகவோ பகுதியாகவோ எந்தவொரு மாநிலத்துக்கும் ஒதுக்கப்படுமானால் அந்த வரி அல்லது தீர்வையைக் குறிக்கும், அல்லது

(ஆ) ஒரு வரி அல்லது தீர்வையின் நிகர வரவுகளைச் சுட்டியுரைத்து இந்தியத் தொகுப்பு நிதியிலிருந்து குறிப்பிட்ட தொகைகள் அப்போதைக்கு எந்தவொரு மாநிலத்துக்கும் செலுத்தக்கூடிய நிலை இருக்குமானால் அந்த வரி அல்லது தீர்வையைக் குறிக்கும்.''

ஐயா, இந்தப் புதிய உறுப்பை அரசமைப்புச் சட்டத்தில் நுழைக்க நாங்கள் கருதியதற்கான ஓரிரு காரணங்களை நான் குறிப்பிடலாம். இதேபோன்ற ஒரு வழிவகை இந்திய அரசாங்கச் சட்டத்திலும் காணப்படுகின்றது. வரைவுக் குழுவினர் இதனைப் பரிசீலித்தனர். இந்த உறுப்பை எடுத்து அரசமைப்புச் சட்டத்தில் சேர்ப்பது அவசியம் என்று வரைவுக் குழுவினர் கருதவில்லை. ஆயினும் தலைமை அமைச்சர்கள் மாநாடு நடைபெற்றபோது இத்தகைய ஓர் உறுப்பு பயனுள்ளதாகவும், அனேகமாய் அவசியமாகவும் இருக்குமென்று யோசனை கூறப்பட்டது; ஏனெனில் மாகாணங்கள் மற்றும் மாநிலங்களுக்கு இடையே நாடாளுமன்றம் ஓர் ஒதுக்கீட்டைச் செய்து முடித்தபின், இந்த ஒதுக்கீட்டின் காரணமாக மாகாணங்களின் நலன் சம்மந்தப்பட்டதாகக் கூடிய செய்திகள் மாற்றம் செய்வதற்காக தனிப்பட்ட முறையிலான எந்த உறுப்பினரும் ஒரு சட்ட முன்வடிவைக்

கொண்டு வருவதற்குச் செய்யக்கூடிய எந்த முயற்சியினாலும் அந்த ஒதுக்கீடு குலைவுறக் கூடியதாய் இருக்கலாகாது. இந்த காரணத்தினால்தான் வரைவுக் குழுவினர் இப்போது இந்த திருத்தத்தைக் கொண்டு வந்துள்ளனர். ஒதுக்கீட்டு முறையில் மாற்றம் செய்வதற்கான சட்ட முன்வடிவு குடியரசுத் தலைவரால் பரிந்துரைக்கப்படவில்லை என்றால் அத்தகைய மாற்றம் எதுவும் செய்யப்படாது என்று மாகாணங்களுக்கு உறுதியளிப்பதே இதன் நோக்கம்.

**திரு. அவைத் தலைவர்:** இந்த உறுப்புக்குத் திருத்தம் ஒன்றுமில்லை.

★ ★ ★

**திரு. அவைத் தலைவர்:** டாக்டர் அம்பேத்கர், நீங்கள் பேச விரும்புகிறீர்களா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** விடை எதுவும் தேவைப்படுவதாக நான் கருதவில்லை.

உறுப்பு 254-A அரசமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.

★ ★ ★

## உறுப்பு 255

[1]**திரு. அவைத் தலைவர்:** உறுப்பு 255க்குச் செல்வோம். (திருத்தம் எண் 83 முன்மொழியப்படவில்லை.)

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் பணிந்து முன்மொழிவது:

> "உறுப்பு 255 இல் 'இந்தியாவின் வருவாய்கள்' என்ற சொற்கள் இடம் பெறும் இடங்களில் எல்லாம் அவற்றிற்குப் பதிலாக 'இந்தியாவின் தொகுப்பு நிதி' என்ற சொற்களை இடம்பெறச் செய்யலாம்.
>
> "உறுப்பு 255க்கான முதலாவது துணை விதியில் 'இப்போதைக்கு முதல் அட்டவணையின் பகுதி I இல் குறித்தளிக்கப்படும்' என்ற சொற்களை விட்டு விடலாம்.
>
> "உறுப்பு 255க்கான இரண்டாம் துணைவிதி கூறு (அ) என்பதில் 'மூன்று ஆண்டுகள்' என்ற சொற்களுக்குப் பதிலாக 'இரண்டு ஆண்டுகள்' என்ற சொற்களை இடம்பெறச் செய்யலாம்."

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 8 1949, பக்கம் 264 -65.

முதல் இரண்டு திருத்தங்களும் வடிவ அளவிலானவையே.

**திரு. நசிருதீன் அகமது:** ஓர் ஒழுங்குப் பிரச்சினை எழுப்பு கிறேன். எண் 86 புத்தம் புதியது; எதனுடனும் தொடர்புடையதன்று. அது வடிவ அளவிலான செய்தியன்று. அது மிகவும் முக்கியமான ஒன்று.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அதை விளக்கு வதற்குத்தான் நான் முயன்று கொண்டிருக்கிறேன்.

**திரு. நசிருதீன் அகமது:** இது திருத்தத்திற்கான திருத்தமன்று; அரசமைப்புச் சட்டத்திற்கான திருத்தமாகும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தலைவரின் அனுமதி யுடன் இதனை முன்மொழிகிறேன்.

**திரு. நசிருதீன் அகமது:** டாக்டர் அம்பேத்கர் இதனை முன் மொழிவதற்குத் தலைவரின் அனுமதியைப் பெறச் செய்ய வேண்டு மென விரும்பினேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அவரது அனுமதி யைப் பெற்றுவிட்டேன். அதனை முன்மொழிவதற்கு முன்போ பின்போ அவைத் தலைவர் அனுமதி அளிக்கலாம்.

இது மானியங்கள் தொடர்பானது. மூன்றாண்டுகளின் சராசரி அசாமுக்குச் செலுத்தப்பட வேண்டும் என்று மூல உறுப்பிலேயே வழிவகை செய்யப்பட்டது. மூன்றாண்டுகளின் சராசரியை எடுத்துக் கொண்டால், அசாம் அரசுக்கு அதிகமாக ஒன்றும் கிடைக்காது, ஏனெனில் முதல் ஆண்டில் அவர்கள் செலவு ஏதும் செய்யவில்லை என்றும், ஈராண்டு சராசரியை எடுத்துக் கொண்டால் அவர்களுக்கு இன்னும் அதிகமாகக் கிடைக்கும் என்றும் நம்மிடம் முறையிடப் பட்டது. இந்த இடர்ப்பாட்டை சமாளிப்பதற்காகவே வரைவுக் குழு வினர் மூன்று ஆண்டுகள் என்பதற்குப் பதிலாக ஈராண்டுகள் என்ற சொல்லைச் சேர்த்துள்ளனர்.

* * *

## உறுப்பு 255 (தொடர்ச்சி)

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்** (பம்பாய்: பொது): அவைத் தலைவர் அவர்களே, என் நண்பர் நிக்கோல்ஸ் ராய் முன் மொழிந்த திருத்தத்தை ஏற்றுக்கொள்ள அணியமாய் இருக்கிறேன் என்பதை இப்போதே என்னால் கூறமுடியும். வழங்கப்பட வேண்டிய மானியங்கள் என்ன என்பதை ஒவ்வோர் ஆண்டும் நாடாளுமன்றம் தீர்மானிக்கும் வரை அவ்வாறு முடிவு செய்திட குடியரசுத் தலைவ ருக்கு அதிகாரம் ஏதுமிருக்காது என்ற கருத்தை இந்த உறுப்பின் வரைவு அளிப்பதாகத் தோன்றத்தான் செய்கிறது. நிச்சயமாக வரைவுக் குழுவின் நோக்கம் இதுவன்று. இதுகுறித்து நாடாளுமன்றம் முடிவு ஏதும் எடுப்பதற்கு முன்பே கூட உறுப்பு 255இன்படி மானியங்கள் வழங்க குடியரசுத் தலைவர் தம் அதிகாரங்களைச் செலுத்துவதையே வரைவுக் குழு விரும்பும். இந்நிலையை தெள்ளத் தெளிவாக்கும் பொருட்டு திரு. நிக்கோல்ஸ் ராய் முன்மொழிந்த திருத்தத்தை ஏற்றுக் கொள்ள அணியமாய் இருக்கிறேன். ஆயினும் சரியாக எத்தகைய மொழிநடையில் அவர் தன் திருத்தத்தை முன்வைத்துள்ளார் என்பதைப் பரிசீலிக்க எனக்கு இன்னமும் போதிய அவகாசம் கிடைத்த பாடில்லை என்று இக்கூட்டத்தில் கூறிக்கொள்ள விரும்புகிறேன். ஆகவே, உறுப்பு 255இல் காணப்படும் வாசகத்திற்குப் பொருந்த வேண்டி மொழிநடையை மாற்றிட வரைவுக் குழுவிற்கு உரிமை இருக்கும் என்ற நிபந்தனைக்குட்பட்டு இந்தத் திருத்தத்தை ஏற்றுக் கொள்ள அணியமாய் இருக்கிறேன்.

**திரு. அவைத் தலைவர்:** இப்போது திருத்தங்களை வாக்கெடுப் புக்கு விடுகிறேன்.

(மேற்கண்டவாறு டாக்டர் அம்பேத்கரின் திருத்தங்கள் அனைத்தும் ஏற்றுக் கொள்ளப்பட்டன.)

**திரு. அவைத் தலைவர்:** அடுத்து, அருள்திரு நிக்கோல்ஸ் ராயின் திருத்தத்தை வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

பிரச்சினை இதுதான்:

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 8 1949, பக்கம் 293-94.

''உறுப்பு 255இல் -

(அ) 'நாடாளுமன்றம் சட்டம் கொண்டு வழிவகை செய்யலாம்' என்ற சொற்களுக்குப் பிறகு 'அல்லது நாடாளுமன்றம் இவ்வாறு வழிவகை செய்யும் வரை, குடியரசுத் தலைவரால் குறித்துரைக்கப்பட்டவாறு' என்ற சொற்களை நுழைக்கலாம்;

(ஆ) 'நாடாளுமன்றம் முடிவு செய்யலாம்' என்ற சொற்களுக்குப் பிறகு 'நாடாளுமன்றம் முடிவு செய்யும் வரை' 'குடியரசுத் தலைவர் முடிவு செய்யக் கூடியவாறு' என்ற சொற்களை நுழைக்கலாம்;

(இ) உறுப்பின் முடிவில் பின்வரும் விளக்கம் சேர்க்கப்படலாம்:

''விளக்கம்: ''குறித்துரைக்கப்படுதல்'' என்ற சொல் உறுப்பு 251 (4) (அ) என்பதில் கொண்டுள்ள அதே பொருளைக் கொண்டிருக்கும்.''

திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

***(திருத்தப்பட்ட வடிவத்தில் உறுப்பு 255 அரசமைப்புச் சட்டத்தில் சேர்க்கப் பட்டது.)***

## உறுப்பு 256

[1]**திரு. அவைத் தலைவர்:** உறுப்பு 256ஐ இப்போது எடுத்துக் கொள்வோம். அச்சிடப்பட்ட பட்டியலின் தொகுதி IIஇல் டாக்டர் அம்பேத்கரின் திருத்தம் எண் 2925.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் முன்மொழிவது:

''உறுப்பு 256இன் கூறு (1)க்குப் பதிலாகப் பின்வரும் கூறினை இடம்பெறச் செய்யலாம்:

'(1) இந்த அரசமைப்புச் சட்டத்தின் உறுப்பு 217இல் என்ன கூறப்பட்டிருப் பினும், மாநிலத்தின் அல்லது ஒரு நகராட்சி, மாவட்டக் கழகம் வட்டாரக் கழகம் அல்லது அதிலடங்கிய வேறு உள்ளாட்சி அமைப்பின் நன்மைக்கான வரிகள் தொடர்பாக ஒரு மாநிலச் சட்டமன்றத்தின் சட்டம் எதுவும், வாழ்க்கைத் தொழில்கள், கைத் தொழில்கள், வேலைகள் அல்லது பணிகளைப் பொறுத்த வரை அச்சட்டம் வருமானத்துக்கான வரி தொடர்பானது எனும் காரணத்தால் செல்லாமற் போகாது.''

ஐயா, வாழ்க்கைத் தொழில்கள், கைத் தொழில்கள், வேலைகள் மற்றும் பணிகள் ஆகியவற்றிற்கு ஒரு குறிப்பிட்ட எல்லை வரை சில

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 9 1949, பக்கம் 301.

வரிகளை விதிக்க உள்ளாட்சி அமைப்புகளை அனுமதிக்க அடுத்து வரும் உறுப்பு ஒன்றில் முன்மொழியப்படுகிறது. இப்படியொரு வரி மாநிலத்தினால் விதிக்கப்பட்டால் அது வருமானத்துக்கான வரியாகிறது, அது மைய அரசின் தனிச் சிறப்பான அதிகாரத்திற்குட்பட்டதாயிருக்கிறது என்ற அடிப்படையில் கேள்விக்குள்ளாக்கப்படலாம் என்று அஞ்சப்படுகிறது. உட்கூறு (1)இல் குறிப்பிடப்பட்ட நோக்கங்களுக்காக இயற்றப்படும் சட்டம் எதற்கும் இவ்வாறு வரக்கூடிய எதிர்ப்பு எதையும் தடுத்து நிறுத்த இந்த வழிவகை பெரிதும் தேவைப்படுவதாக வரைவுக்குழு கருதியது; ஆகவே இந்தத் திருத்தத்தை முன்மொழிகிறேன்.

★ ★ ★

**திரு. அவைத் தலைவர்:** அடுத்து பி.டி. ஹிமத்சிங்காவின் பெயரிலுள்ள எண் 89, 90 ஆகியவற்றை எடுத்துக் கொள்வோம். அவர் அவற்றை முன்மொழியவில்லை. டாக்டர் அம்பேத்கரின் பெயரிலுள்ள எண் 91ஐ எடுத்துக் கொள்வோம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் அதனை முன்மொழிய விரும்பவில்லை.

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** விவரமான விடையேதும் தேவைப்படுவதாக நான் கருதவில்லை. நிலைமை இதுதான்: ஒவ்வோர் அரசமைப்பிலும் ஒரு மாநிலத்தின் வரிச் செல்வாதாரங்கள் பொதுவாக மைய அரசுக்கும் மாநிலங்களுக்கும் இடையில் பகிர்ந்தளிக்கப்படுகின்றன. மாநில அரசுகளுக்கும் உள்ளாட்சி அமைப்புகளுக்கும் இடையில் செல்வாதாரங்களைப் பகிர்ந்தளிக்கின்ற பிரச்சினையை மாநில அரசு இயற்றும் சட்டம் தீர்க்கட்டும் என விடப்படுகின்றது, ஏனென்றால் உள்ளாட்சி அமைப்பு என்பது முழுக்க மாநில அரசின் படைப்பே ஆகும். அதற்கென்று முழு நிறை மேலுரிமை ஏதுமில்லை; குறிப்பிட்ட சில நோக்கங்களுக்காக அது படைக்கப்படுகிறது. அந்நோக்கங்கள் சரிவர நிறைவேற்றப்படாவிட்டால் அதனை மாநில அரசு கலைத்து விட முடியும். நான் முன்மொழிகின்ற இந்த உறுப்பானது, மாநில அரசுக்குப் கீழ்ப்பட்டுள்ள

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 9 1949, பக்கம் 301.

உள்ளாட்சி அமைப்புகள் என்றழைக்கப்படுகிறவற்றின் செல்வாதாரங்கள் தொடர்பான வழிவகை ஏதும் அரசமைப்புச் சட்டத்தில் இருக்க வேண்டியதில்லை என்ற பொதுவான விதிக்கு விலகக்கூடும் என்பதே மெய். ஆனால் இப்போது சில உள்ளாட்சி அமைப்புகள் உள்ளன. அவற்றின் நிர்வாகம் அவை விதித்துவரும் குறிப்பிட்ட சில வரிகளை சார்ந்துள்ளது என்ற உண்மையை வரைவுக்குழு கருத்தில் கொண்டது. அவ்வரிகள் வருமானச் சட்டத்தின் மெய்ப்பொருளுக்கு மாறானதாக இருந்துள்ளன என்றபோதிலும் நிலவுகின்ற சூழ்நிலைமைகளைக் கணக்கில் எடுத்த வரைவுக்குழு இப்போதுள்ள நிலவரமே தொடரும்படி அனுமதிக்க அணியமாய் உள்ளது.

உண்மையில், வல்லுநர் குழு நிர்ணயித்த 250 ரூபாய் வரம்புக்குத்தான் எதிர்ப்பு தெரிவிக்கப்பட்டது. இதனை 150 ரூபாயாக குறைக்கப்பட வேண்டும் என்பதே முன்மொழிவு. இப்படிச் செய்யத் தேவையில்லை என்றும், இப்போதுள்ள நிலவரமே வரம்பு வரையிலும், இன்று அது வகிக்கும் வீச்செல்லைக்குள்ளும் தொடரப்படலாம் என்றும் மறுபரிசீலனைக்குப் பின் வரைவுக்குழு முடிவு செய்தது. ஆகவே இது ஒரு துப்புரவான விதிவிலக்கே என்கிறேன். கொள்கையளவில் அதனைத் திட்டவட்டமாக எதிர்க்கிறேன். ஆகவே தான் மாண்புமிகு நண்பர் எவரும் முன்மொழிந்திருக்கக்கூடிய திருத்தம் எதனையும் ஏற்றுக்கொள்ள நான் அணியமாய் இல்லை.

***(முன்பு சொல்லப்பட்ட வடிவத்தில் டாக்டர் அம்பேத்கரின் திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது. திருத்தப்பட்ட வடிவத்தில் உறுப்பு 256 அரசமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.)***

## உறுப்பு 257

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் முன்மொழிவது:

> ''உறுப்பு 257இன் முடிவில் 'சட்டம் கொண்டு' என்ற சொற்கள் சேர்க்கப்படலாம்.''

இது கவனக்குறைவால் நேரிட்ட சிறு விடுபாடாகும்.

**திரு. அவைத் தலைவர்:** வேறு திருத்தங்களும் உள்ளன. டாக்டர் அம்பேத்கரின் திருத்தத்திற்குப் பிறகு இவை தேவைப்படவில்லை.

மேற்கண்ட வடிவத்தில் திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

திருத்தப்பட்ட வடிவத்தில் உறுப்பு 257 அரசமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.

★ ★ ★

## உறுப்பு 259

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் முன்மொழிவது:

> ''உறுப்பு 259இன் கூறு (1)இல் தலைமைத் தணிக்கையாளர் என்ற சொல்லுக்குப் பதிலாக 'தலைமைக் கணக்குத் தணிக்கையாளர்' என்ற சொற்களை இடம்பெறச் செய்யலாம்.''

இந்தப் பேரவை நிறைவேற்றியுள்ள முந்தைய உறுப்பில் இந்த அதிகாரிக்கு அளிக்கப்பட்ட அதேபெயரை உறுப்பு 259இலும் கொண்டு வரும் பொருட்டு இது செய்யப்படுகிறது.

திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

திருத்தப்பட்ட வடிவத்தில் உறுப்பு 259 அரசமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.

★ ★ ★

## உறுப்பு 260

[1]**திரு. அவைத் தலைவர்:** அடுத்து, உறுப்பு 260க்குச் செல்வோம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் முன்மொழிவது:

> ''திருத்தங்கள் பட்டியலின் திருத்தம் எண் 2943க்குப் பதிலாகப் பின்வருவதை இடம்பெறச் செய்யலாம்:
>
> ''உறுப்பு 260இன் கூறு (1)க்குப் பதிலாக பின்வரும் கூறினை இடம்பெறச் செய்யலாம்:

---

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 9 1949, பக்கம் 302.
2. அதே நூல், பக். 303.

'(1) குடியரசுத் தலைவர் இந்த அரசமைப்புச் சட்டம் தொடங்கியதிலிருந்து ஈராண்டுக்குள், அதன் பிறகு ஒவ்வோர் ஐந்து ஆண்டு கால முடிவிலும் அவர் அவசியமெனக் கருதினால் இன்னுங்கூட முன்னதாகவும் ஆணை கொண்டு ஒரு நிதி ஆணைக் குழுவை அமைப்பார். இக்குழுவில் குடியரசுத் தலைவரால் அமர்த்தப்படும் தலைவரும் வேறு நான்கு உறுப்பினர்களும் இருப்பார்கள்.''

ஐயா, இந்தத் திருத்தத்தின் முக்கியச் செய்தி இதுதான்: நிதி ஆணைக்குழு ஐந்தாண்டு கால முடிவில் அமர்த்தப்படும் என்று இந்த உறுப்பின் மூல வரைவு கூறியது. இன்னும் வெகு முன்னதாகவே நிதி ஆணைக்குழுவை அமர்த்தக் குடியரசுத் தலைவரை அனுமதிப்பது அவசியம் என்ற கருதப்படுகிறது. ஆகவேதான் அரசமைப்புச் சட்டம் தொடங்கியதிலிருந்து ஈராண்டு காலத்திற்குள் அக்குழு அமர்த்தப் பட வேண்டும் என்று நாம் இப்போது வழிவகை செய்கிறோம்.

**திரு. அவைத் தலைவர்:** திருத்தம் எண் 96ஐயும் நீங்கள் முன் மொழியலாம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் முன் மொழிவது:

''உறுப்பு 260இன் கூறு (3)இன் உட்கூறு (ஆ) என்பதில் 'இந்தியாவின் வருவாய்கள்' என்ற சொற்களுக்குப் பதிலாக 'இந்தியத் தொகுப்பு நிதி' என்ற சொற்களை இடம்பெறச் செய்யலாம்.''

இது வடிவ அளவிலான ஒன்றே.

**திரு. அவைத் தலைவர்:** இந்த உறுப்புக்குத் திருத்தங்கள் உள்ளன. இவை புத்தகத்தில் அச்சிடப்பட்டுள்ளன.

★ ★ ★

**பண்டித ஹிருதய்நாத் குன்ஸ்ரு:** ... இந்த உறுப்பின் வழி வகைகளின்படி.... அரசமைப்புச் சட்டத்தை வரைந்தவர்கள் கருது வதை இந்த உறுப்பு வெளிப்படுத்துகிறது...

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இன்னமும் அது நிறைவேற்றப்படவில்லை.

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 9 1949, பக்கம் 311.

**பண்டித ஹிருதய்நாத் குன்ஸ்ரு:** அதனால்தான் நான் அதனைச் சுட்டிப் பேசுகிறேன். மற்றபடி அதனைச் சுட்டிப் பேசுவதில் பொருள் ஏதும் இருந்திருக்காது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அதனை விலக்கிக் கொள்ள எனக்கு உரிமையுண்டு.

**பண்டித ஹிருதய் நாத் குன்ஸ்ரு:** அதனை விலக்கிக் கொள்ளத் தமக்கு உரிமை இருப்பதாக டாக்டர் அம்பேத்கர் சொல்கிறார். விவேகத்துடன் அவர் அதனை விலக்கிக் கொள்வாரென நம்பு கிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இல்லை. அது திருத்தியமைக்கப்படலாம்.

* * *

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, என் மதிப் பிற்குரிய நண்பர் டாக்டர் குன்ஸ்ருவின் திருத்தம், நிதி ஆணைக்குழு வின் பணிகளை விதிக்கிற உறுப்பு 260இன் கூறு (3)ஐ பற்றியதாகும் என்பதை அவை உணர்ந்து கொண்டிருக்க வேண்டும். ஆனால் அவர் முன்மொழிந்துள்ள திருத்தங்களின் சரியான முக்கியத்துவத்தைப் புரிந்து கொள்ள வேண்டுமானால், நாம் ஏற்கெனவே நிறைவேற்றி யுள்ள 251, 253 ஆகிய இரு உறுப்புகளிலும் முன்னரே வழிவகை செய்யப்பட்ட வருவாய்களை ஒதுக்கீடு செய்யும் வழிமுறையை அறிந்து கொள்வது விரும்பத்தக்கது என்று நான் தனிப்பட்ட முறை யில் கருதுகிறேன். வரைவு அரசமைப்புச் சட்டமானது வருமான வரியின் பகிர்வு மற்றும் ஒதுக்கீட்டை மைய அரசின் சரக்குத் தீர்வை யின் பகிர்வு மற்றும் ஒதுக்கீட்டிலிருந்து வேறுபடுத்துகிறது என்பது உணரப்படும். வருமான வரியைப் பொறுத்தவரை வரவைப் பகிர் வதும் ஒதுக்கீடு செய்வதும் குடியரசுத் தலைவரின் முடிவுக்கு விடப் படுகிறது. உறுப்பு 251 (2) என்பதைக் கூறு (4) (ஆ) (i), (ii) உடன்சேர்த்து வாசிக்கையில் இது விளங்கும். மறுபுறம் மையச் சரக்குத் தீர்வை களின் வடிவைப் பகிர்ந்தளிப்பதையும் செய்வதையும் பொறுத்த வரை, நாடாளுமன்றம் இயற்றும் சட்டமே முழுக்க முழுக்கத் தீர் மானிக்கும்படி விடப்படுகிறது. உறுப்பு 253இல் இது தெளிவாகச் சொல்லப்பட்டிருக்கக் காணலாம்.

மணி ஒன்று ஆகிவிட்டதால், நாளை தொடர்ந்து பேசுவேன்.

இதனையடுத்து, 1949 ஆகஸ்டு 10 புதன்கிழமை 9 மணிவரை பேரவை ஒத்திவைக்கப்பட்டது.

★ ★ ★

## உறுப்பு 260 (தொடர்ச்சி)

[1]திரு. அவைத் தலைவர்: டாக்டர் அம்பேத்கர்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்** (பம்பாய்: பொது): ஐயா, நேற்றைய அமர்வின் இறுதியில் என் நண்பர் பண்டித குன்ஸ்ரு தமது திருத்தத்திற்கு ஆதரவாக முன்வைத்த வாதம் குறித்துப் பேசிக் கொண்டிருந்தேன். உறுப்பு 251(2), 253 ஆகியவற்றில் அடங்கிய வழிவகையை அவையின் கவனத்திற்குக் கொண்டுவருவது விரும்பத் தக்கதாகும் என்று கூறித் தொடங்கினேன். இவ்வாறு தொடங்குவ தானது பண்டித குன்ஸ்ரு தமது திருத்தத்தின் வாயிலாகச் சரியாக என்ன செய்ய விரும்புகிறார் என்பதை மாண்புமிகு உறுப்பினர்கள் புரிந்துகொள்ள வாய்ப்பளிக்கும் ஒருவகையான பின்னணியாகும்.

நேற்று நான் சொன்னதை இப்போது சுருக்கமாகத் தொகுத்துச் சொல்கிறேன். நிலை என்னவென்றால், வருமான வரியைப் பொறுத்த வரை வரவுத் தொகையின் பகிர்வும் ஒதுக்கீடும் குடியரசுத் தலைவரின் முடிவுக்கு விடப்படுகின்றன. அதேசமயத்தில் மையச் சரக்குத் தீர்வை களின் பகிர்வும் ஒதுக்கீடும் நாடாளுமன்றம் இயற்றும் சட்டம் கொண்டு முடிவு செய்யப்பட விடப்படுகிறது.

அடுத்தாற்போல் நிதி ஆணைக் குழு தொடர்பாக உறுப்பு 260இல் அடங்கிய வழிவகைகளை மனத்தில் இருத்த வேண்டும். உறுப்பு 260 கூறு (3)இன்படி நாடாளுமன்றத்தால் இயற்றப்படும் சட்டம் கொண்டு பகிர்ந்தளிக்கத்தக்கவையாக்கப்படும் வரிகளின் பகிர்வு மற்றும் ஒதுக்கீடு தொடர்பாக மட்டுமல்லாமல் வருமான வரியின் பகிர்வு மற்றும் ஒதுக்கீடு தொடர்பாகவும் கூட நிதி ஆணைக் குழு அறிவுரை கூறவும் பரிந்துரைகள் செய்யவும் வேண்டும் என்று வழிவகை செய்யப்படுகிறது. என் நண்பர் பண்டித குன்ஸ்ரு

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 10 1949, பக்கம் 313-15.

சொன்னதை நான் சரியாகப் புரிந்து கொண்டிருந்தால், அவர் இப்போது என்ன செய்ய விரும்புகிறார் என்றால், வருமான வரியைத் தண்டுதல், ஒதுக்கீடு செய்தல், பகிர்ந்தளித்தல் ஆகியவற்றை நிதி ஆணைக் குழு வின் அதிகார எல்லையிலிருந்து அகற்றிட விரும்புகிறார் என்றே சொல்லலாம். அவருடைய வாதம் இதுதான்: குடியரசுத் தலைவர் மையச் சரக்குத் தீர்வைகளை ஒதுக்கீடு செய்கையில் நிதி ஆணைக் குழுவின் அறிவுரையைத் தாராளமாகப் பெற்றுக் கொள்ளலாம் என்னும் அதேசமயத்தில், வருமான வரியைப் பொறுத்தவரை, அவர் நிதி ஆணைக் குழுவைச் சார்ந்திராத நிலை ஏற்படுத்தப்பட வேண்டு மாம். இந்த நிலைப்பாட்டில் அவர் வலியுறுத்த விரும்புகின்ற ஒரே ஒரு மாற்றம் இதுதான்: வருமான வரியின் தொடக்கப் பகிர்வைப் பொறுத்தவரை, குடியரசுத் தலைவர் நிதி ஆணைக்குழுவைத் தாராள மாகக் கலந்து பேசி, அக்குழுவின் பரிந்துரைக்கேற்ப அல்லது அவற்றைப் பரிசீலனைக்கு எடுத்துக் கொண்ட பிறகு செயல்படலாமாம். ஆனால் அதையடுத்து வருமான வரி ஒதுக்கீட்டில் செய்யக்கூடிய எந்த மாறுதலும் நிதி ஆணைக்குழு செய்யக் கூடிய எந்தப் பரிந்துரை களையும் சாராமல் குடியரசுத் தலைவரால் சுயேச்சையாகச் செய்யப் பட விட்டுவிடலாமாம். அவர் தன் திருத்தத்தைக் கொண்டு என்ன செய்ய விரும்புகிறார் என்பதை நான் சரியாகவே விளக்கப்படுத்தி யிருப்பதாகக் கருதுகிறேன். ஆகவே கேள்வி மிகவும் எளியது, சிறியது. குடியரசுத் தலைவர் மாகாணங்களுக்கும் மைய அரசுக்கும் இடை யிலான வருமான வரிப் பகிர்வையும், இவ்விதம் கிடைக்கிற வருமான வரி வரவுத் தொகைகளை வெவ்வேறு மாகாணங்களுக்கிடையே ஒதுக்கீடு செய்வதையும் மாற்றுகையில் குடியரசுத் தலைவர் ஆணைக் குழுவின் பரிந்துரைகள் எதனையும் சாராமல் முற்றிலும் சுயேச்சை யாகச் செயல்படுவதற்கு விட்டுவிட வேண்டுமா? வரைவு வருமான வரியின் பகிர்வு மற்றும் ஒதுக்கீடு தொடர்பாகக் குடியரசுத் தலைவர் செய்ய விரும்பக்கூடிய மாற்றங்கள் எதையும் செய்கையில் அவர் நிதி ஆணைக்குழுவின் பரிந்துரைகளைக் கருத்தில் கொள்வார் என்று நான் முன்மொழிந்துள்ள வரைவுத் திருத்தம் வழிவகை செய்கிறது. நிதி ஆணைக்குழுவின் பரிந்துரைகளின் பேரில் குடியரசுத் தலைவர் இதனை முடிவு செய்யட்டும் என்று விட்டுவிட்டால், அவரின் கைகள் கட்டப்படலாம் என்றும் இதனால் அவர் நிதி ஆணைக்குழு வின் பரிந்துரைகளுக்கோ மாகாணங்களின் கூக்குரலுக்கோ பணிந்து போக நேரிடலாம் என்றும், இதன் விளைவாக அவர் வேறு வழி யின்றி மைய நிதி நிலைக்குத் தீங்கிழைக்க நேரிடலாம் என்றும் பண்டித குன்ஸ்ரு தெரிவித்துள்ள கருத்தைப் பெரிதும் மதிக்கிறேன். நிதி

வகையில் எவ்வளவு முடியுமோ அவ்வளவுக்கு மைய அரசைச் சுயேச்சையானதாக்க வேண்டும் என்ற அவரது உணர்வுகளை நானும் பகிர்ந்து கொள்கிறேன்; ஏனென்றால் மைய அரசின் அரசியல் வாழ்வுக்கோ நிதி வாழ்வுக்கோ தீங்கிழைக்கக் கூடிய எதனையும் நாம் அரசமைப்புச் சட்டத்தில் செய்துவிடக் கூடாது என்பது குறித்து என் உள்ளத்தில் எவ்வித ஐயப்பாட்டுக்கும் இடமில்லை. ஆனால் இதற்கு மறுபக்கமும் உள்ளது, அதாவது மாகாணங்களுக்குக் கூடுதல் வருவாய் ஒதுக்கும்படி அனைத்து மாகாணங்களும் குடியரசுத் தலைவரை வலியுறுத்திக் கூக்குரலிடுவதாக வைத்துக் கொண்டால் - இவ்வாறு கற்பனை செய்வது சாத்தியமே, ஏனெனில் இது மாகாணங் களின் பொதுவான நலனாகும் - இது குடியரசுத் தலைவரை மாகா ணங்களின் தயவில் இருக்கும்படி செய்வதாகாதா? மறுபுறம் மைய அரசு மாகாணங்களுக்கு வருமான வரியில் கூடுதல் வருவாய் தரக் கூடாது என்ற பரிந்துரைகளுடன் கூடிய ஓர் அறிக்கையை நிதி ஆணைக் குழு அளிக்குமானால் அது மாகாணங்களின் இத்தகைய கூக்குரலுக்கு இணங்க மறுப்பதில் குடியரசுத் தலைவரின் கையை வலுப்படுத்தும் என்பது என் கணிப்பு. இந்திய அரசாங்கச் சட்டத்தில் நமக்கு இப்போது பழக்கமாகியுள்ள மொழிநடையை நான் பயன்படுத்தக் கூடுமானால் இப்போதுள்ள வரைவு உறுப்புக்கும், முன்மொழியப்பட்ட திருத்தத் திற்கும் இடையிலான வேறுபாடு இதுதான்; குடியரசுத் தலைவர் தமது விருப்புரிமைப்படி செயல்பட சுதந்திரம் வேண்டும் என்று பண்டித குன்ஸ்ரு சொல்கிறார்; அதேசமயத்தில் என்னால் முன் மொழியப்பட்டுள்ள வரைவு குடியரசுத் தலைவர் தமது சொந்தக் கணிப்பின்படி செயல்பட வேண்டும் என்று சொல்கிறது. இதன் பொருள் என்னவென்றால்...

**பண்டித ஹிருதய்நாத் குன்ஸ்ரு** (ஐக்கிய மாகாணங்கள்: பொது): அநேகமாக மாண்புமிகு உறுப்பினர் நான் சொன்னதை முழுமையாகப் புரிந்துகொள்ளவில்லை என்று நான் கருதுவதால் என் கருத்தைத் தெளிவுபடுத்த அவர் என்னை அனுமதிப்பாரா? நான் சொன்னதை ஓரிரு வாக்கியங்களில் தெளிவுபடுத்துவேன். உறுப்பு 260 கூறு (3)ன்படி குடியரசுத் தலைவர் விரும்பும் எச்செய்தியையும் நிதி ஆணைக்குழுவின் கருத்திற்காக அதன் பார்வைக்கு அனுப்பி வைக்கலாம். ஆகவே குடியரசுத் தலைவர் விரும்புகின்ற எப்பிரச் சினையிலும் அவர் நிதி ஆணைக்குழுவுடன் கலந்தாலோசிப்பதைத் தடுக்க நான் விரும்பவில்லை. மைய அரசுக்கும் மாகாணங்களுக் கும் இடையே வருமான வரியின் நிகர வரவுத் தொகையை ஒதுக்கீடு

செய்வது எப்படி இருக்க வேண்டுமோ அப்படி இல்லை என்றும் தன்னால் பரிந்துரைக்கப்படும் புதிய விழுக்காடுகள் நிர்ணயிக்கப்பட வேண்டும் என்றும் சொல்லும் அதிகாரம் குடியரசுத் தலைவரிட மிருந்து பார்வைக் குறிப்பு ஏதுமில்லாமலே நிதி ஆணைக்குழுவுக்கு இருக்க வேண்டும் என்பதைத்தான் நான் எதிர்த்துப் பேசிக் கொண் டிருக்கிறேன். நேற்று நான் சொன்னதெல்லாம் இதுவே.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இதனால் நிலைமை இன்னுங்கூட வெகு சிக்கலாகி விடுகிறது என்றுதான் சொல்ல வேண்டும். ஏனெனில் செய்தி நிதி ஆணைக்குழுவின் பார்வைக்கு அனுப்பி வைக்கப்படவோ அல்லது பார்வைக்கூறுகளில் சேர்க்கப் படவோ இல்லை என்றால் அக்குழுவினால் எவ்வாறு பரிந்துரை ஏதும் செய்ய முடியும் என்று எனக்குத் தெரியவில்லை.

**பண்டித ஹிருதய்நாத் குன்ஸ்ரு:** உறுப்பு 260 கூறு (3) உட்கூறு (அ)இன்படி நிதி ஆணைக்குழு தானே முன்முயற்சி எடுத்து அது குறித்துப் பரிந்துரைகள் செய்யலாம். இதன் பொருளைப் புரிந்து கொள்ள என் நண்பர் உட்கூறினை வாசிக்கட்டும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ''நிறைவான நிதி நிலையின் நலனுக்காகக் குடியரசுத் தலைவரால் நிதி ஆணைக்குழு வின் பார்வைக்கு அனுப்பி வைக்கப்படும் வேறு எந்தச் செய்தியும்.''

**பண்டித ஹிருதய்நாத் குன்ஸ்ரு:** அது (ஈ) ஆகும். நாம் விவாதித்துக் கொண்டிருக்கிற உறுப்பு 260ஐ குறிப்பாக நேற்று நான் குறிப்பிட்டுப் பேசிய உறுப்புடன் தொடர்புபடுத்தி மாண்புமிகு உறுப் பினர் படித்துப் பார்ப்பாரா?

உறுப்பு 260 கூறு (3) உட்கூறு (அ) கூறுகிறது -

> ''ஒன்றியத்திற்கும் மாகாணங்களுக்கும் இடையில் பிரிக்கப்பட வேண்டிய அல்லது பிரிக்கப்படக்கூடிய வரிகளின் நிகர வரவுத் தொகைகளை அவற் றுக்கிடையில் பகிர்ந்தளிப்பது தொடர்பாகக் குடியரசுத் தலைவருக்குப் பரிந்துரைகள் செய்வது நிதி ஆணைக்குழுவின் கடமையாகும்...''

இதைத்தான் நான் எதிர்த்துக் கொண்டிருக்கிறேன். எனது திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டால், கூறு (3)இன் உட்கூறு (ஈ)இன்படி குடியரசுத் தலைவர் தாம் விரும்புகிற வேறு எந்தச் செய்தியையும்

நிதி ஆணைக்குழுவின் பார்வைக்கு அனுப்பி வைக்கும் அதிகாரம் பாதிக்கப்படாது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** எனக்குத் தெரியாது. வருமான வரியைப் பொறுத்து, குடியரசுத் தலைவர் தாம் விரும்புகிற ஒதுக்கீடு எதனையும் தமது முழு விருப்புரிமைப்படி செய்ய விட்டு விட வேண்டுமா? அல்லது நிதி ஆணைக்குழு செய்யும் பரிந்துரை களை அவர் வழிகாட்டியாகக் கொள்ள வேண்டுமா? என்பது குறித்துத் தெள்ளத் தெளிவான நிலை உள்ளது. நிதி ஆணைக்குழு செய்யும் பரிந்துரைகளை ஒரு நியாயப்படுத்தும் காரணியாகக் குடியரசு தலைவரால் பார்த்துக் கொள்ள முடியுமானால் குடியரசுத் தலைவரின் நிலை கணிசமாக வலுப்படும் என்று எனக்குத் தோன்றுகிறது. குடியரசுத் தலைவருக்கும், வருமான வரியிலிருந்து கூடுதல் வருவாய் கோரிக் கூக்குரலிடக் கூடிய மாகாணங்களுக்கும் இடையில் நிதி ஆணைக்குழு முட்டுத்தாங்கியாகச் செயல்படும் என்று எனக்குத் தோன்றுகிறது. ஆகவே என் நண்பர் திரு. குன்ஸ்ரு முன்மொழிந்த திருத்தத்தை ஏற்றுக் கொள்வதற்கு காரணம் ஏதுமிருப்பதாக நான் கருதவில்லை.

**திரு. அவைத் தலைவர்:** இரு திருத்தங்களையும் இப்போது வாக்கெடுப்புக்கு விட வேண்டியிருக்கிறது. முதலில் டாக்டர் அம் பேத்கர் முன்மொழிந்த திருத்தம் எண் 95.

*(டாக்டர் அம்பேத்கரின் திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது. திருத்தப் பட்ட வடிவத்தில் உறுப்பு 260 அரசமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.)*

★ ★ ★

## உறுப்பு 261

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் முன் மொழிவது:

> ''உறுப்பு 261இல் 'நாடாளுமன்றம்' என்ற சொல்லுக்குப் பதிலாக 'நாடாளு மன்ற அவை ஒவ்வொன்றும்' என்ற சொற்களை இடம்பெறச் செய்யலாம்.''

★ ★ ★

---

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 10 1949, பக்கம் 315.

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அவைத் தலைவர் அவர்களே, இந்த உறுப்புக்கு முன்மொழியப்பட்ட திருத்தங்களை ஏற்றுக்கொள்ள முடியாமைக்கு வருந்துகிறேன். உறுப்பு 261இல் அடங்கிய வழிவகைகளை முற்றிலும் தவறாகப் புரிந்து கொண்டிருப் பதே திருத்தங்களுக்கான அடிப்படை என்று எனக்குத் தோன்றுகிறது; திருத்தம் ஏதும் எவ்வகையிலும் தேவையில்லை என்று கருதுகிறேன். உறுப்பு 261இன் பொருள் என்ன என்பதைத் துல்லியமாகப் புரிந்து கொள்ளும் பொருட்டு, வருமான வரியைப் பகிர்ந்தளிப்பது குறித்தும், மைய அரசால் தண்டப்பட்ட சரக்குத் தீர்வைகளின் நிகர வரவுத் தொகைகளைப் பகிர்ந்தளிப்பது குறித்தும் சொல்கின்ற முந்தைய உறுப்புகளுக்குத் திரும்பிச் சென்றாக வேண்டும். வருமான வரியைப் பகிர்ந்தளிப்பது தொடர்பாக நாம் இதுவரை நிறைவேற்றியுள்ள உறுப்புகள் நிதி ஆணைக்குழுவின் பரிந்துரைகளின் பேரில் செயல் படும் குடியரசுத் தலைவரிடமே அதனை முழுக்க முழுக்க விட்டு விடுகின்றன என்பது கண்கூடு. இது இவ்வாறு இருக்க, வருமான வரியைப் பகிர்ந்தளிப்பது தொடர்பான பரிந்துரைகளைப் பொறுத்த வரை அதனை நாடாளுமன்றத்திடம் விட்டுவிடலாம் என்று திருத்தம் கொண்டு செல்வதற்கு இப்போது வாய்ப்பிருக்காது. நான் பணிந்து சொல்லிக் கொள்வது என்னவென்றால், அந்தச் சிக்கல் இப்போது முடிந்துவிட்டது. ஏனென்றால், தொடக்கக் கட்டத்திலோ, அடுத்து வரும் மாற்றங்களிலோ வருமான வரியின் ஒதுக்கீடு மற்றும் பகிர்வைக் குடியரசுத் தலைவரிடம் விட்டுவிடுகின்ற ஓர் உறுப்பை நாம் நிறை வேற்றியுள்ளோம்.

இப்போது உறுப்பு 261இல் அடங்கிய மற்றொரு செய்தி மைய அரசால் விதிக்கப்படும் சரக்குத் தீர்வைகளிலிருந்து தண்டப்படும் வருவாயைப் பகிர்ந்தளிப்பது பற்றியதாகும். இந்தப் பிரச்சினை நாடாளுமன்றம் இயற்றும் சட்டத்தினால் ஆளப்படும் என்றும் நாம் நிறைவேற்றியுள்ள உறுப்பிலிருந்து தெளிவாகத் தெரிகிறது. குடியரசுத் தலைவர் தாமே அதனைச் செய்ய முடியாது. ஆகவே, 'எடுத்துள்ள நடவடிக்கையை எடுத்துரைக்கும் குறிப்பு ஒன்றை நாடாளுமன்றத்தின் முன் வைப்பார்' என்ற சொற்களின் பொருள் இதுதான்: சரக்குத் தீர்வைகளின் வரவுத் தொகைகளையும் அவை ஒதுக்கீடு செய்யப்பட வேண்டிய விதத்தையும் ஒழுங்குபடுத்துவதற்கு அல்லது அனுமதிப் பதற்கு ஒரு சட்ட முன்வடிவு நாடாளுமன்றத்தில் அறிமுகப்படுத்தப் படும் என்று குடியரசுத் தலைவர் சொல்வார், அப்படித்தான் அவர் சொல்லியாக வேண்டும். ஆகவே, நாம் நிறைவேற்றியுள்ள மற்ற

உறுப்புகளுடன் தொடர்புபடுத்தி உறுப்பு 261ஐ என் நண்பர் பேரா சிரியர் சிபன்லால் சாக்சேனா வாசிப்பாரானால் சரக்குத் தீர்வை களின் பகிர்வைப் பொறுத்தவரை இதன் விளைவும் அவர் தமது திருத்தம் கொண்டு ஏற்படுத்த எண்ணியிருப்பதும் ஒன்றாகவே இருக் கும் என்பதை உணர்ந்து கொள்வார். ஆகவே அவரது திருத்தத்திற்கு அவசியமே இல்லை என்று கருதுகிறேன்.

**திரு. அவைத் தலைவர்:** திருத்தங்களை இப்போது வாக் கெடுப்புக்கு விடுகிறேன்.

*(டாக்டர் அம்பேத்கரின் திருத்தம் கொண்டு திருத்தப்பட்ட வடிவத்தில் உறுப்பு 261 ஏற்றுக்கொள்ளப்பட்டு, அரசமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.)*

## உறுப்பு 263

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் முன்மொழிவது:

"உறுப்பு 263க்குப் பதிலாகப் பின்வருவதை இடம்பெறச் செய்யலாம்:

இந்தியத் தொகுப்பு நிதியைப் பாதுகாத்தல், இந்நிதிக்குப் பணம் செலுத்துதல், பணம் எடுத்தல்.

'263. (1) இந்தியத் தொகுப்பு நிதியைப் பாதுகாக்கும் பொறுப்பு, இந்நிதிக்குப் பணம் செலுத்துதல், அதிலிருந்து பணம் எடுத்தல் ஆகியவையும் மேற்சொன்ன வற்றுக்குத் தொடர்புடைய அல்லது துணையான ஏனைய அனைத்தும் நாடாளுமன்றம் இயற்றும் சட்டம் கொண்டு முறைப்படுத்தப் படும்; நாடாளு மன்றம் இப்படி இதற்கான வழிவகை செய்யும் வரை குடியரசுத் தலைவர் இயற்றும் விதிகளைக் கொண்டு முறைப்படுத்தப்படும்.

(2) மாநிலத் தொகுப்பு நிதியைப் பாதுகாக்கும் பொறுப்பு அந்நிதிக்குப் பணம் செலுத்துதல், அதிலிருந்து பணம் எடுத்தல் ஆகியவையும், மேற் சொன்னவற்றுக்குத் தொடர்புடைய அல்லது துணையான ஏனைய அனைத் தும் மாநிலச் சட்டமன்றம் இயற்றும் சட்டம் கொண்டு முறைப்படுத்தப்படும்; சட்டமன்றம் இப்படி இதற்கான வழிவகை செய்யும் வரை மாநிலத்தின் ஆளுநர் இயற்றும் விதிகளைக் கொண்டு முறைப்படுத்தப்படும் விளக்கத்திற் கான தேவை எதுவும் இருப்பதாக நான் கருதவில்லை.

**பண்டித ஹிருதய்நாத் குன்ஸ்ரு:** அவைத் தலைவர் அவர் களே, நான் முன்மொழிவது:

"டாக்டர் அம்பேத்கரால் சற்று முன் முன்மொழியப்பட்ட திருத்தத்தில் 'தொகுப்பு நிதி' என்ற சொற்கள் இடம்பெறும் இடங்களில் எல்லாம் அச் சொற்களுக்குப் பிறகு மற்றும் 'அவசர' என்ற சொற்களை நுழைக்கலாம்;

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 10 1949, பக்கம் 330.

மற்றும் 'இத்தகைய நிதி' என்ற சொற்கள் இடம்பெறும் இடங்களில் எல்லாம் அச்சொற்களுக்குப் பதிலாக 'இத்தகைய நிதிகள்' என்ற சொற்களை இடம் பெறச் செய்யலாம்.

ஓர் அவசர நிதியை ஏற்படுத்துவதற்கு அவை முன்னரே ஒப்புக் கொண்டிருக்கிறது. ஆகவே அவசர நிதிக்குப் பணம் செலுத்துகிற முறைக்கும் அதிலிருந்து பணம் எடுக்கிற முறைக்கும் வழிவகை செய்வது அவசியம். இது வடிவ அளவிலான திருத்தம் மட்டுமே. அவை இதனை ஏற்றுக்கொள்ளும் என்று நம்புகிறேன்.

**திரு. அவைத் தலைவர்:** பண்டித குன்ஸ்ருவின் திருத்தத்தை டாக்டர் அம்பேத்கர் ஏற்றுக்கொள்வார் என நம்புகிறேன்.

**திரு. மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** திருத்தத்தை ஏற்றுக்கொள்கிறேன்.

★ ★ ★

## உறுப்பு 267

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் முன்மொழிவது:

"உறுப்பு 267இல்-

(i) 'இந்தியாவில் முடியரசு' என்ற சொற்களுக்குப் பிறகு 'அல்லது ஒன்றியத்தின் அல்லது ஒரு மாநிலத்தின் விவகாரங்கள் தொடர்பான இத்தகைய தொடக்கத்திற்குப் பிறகு' என்ற சொற்களை நுழைக்கலாம்;

(ii) இந்திய வருவாய்கள் என்ற சொற்கள் இடம்பெறும் இடங்களில் எல்லாம் அச்சொற்களுக்குப் பதிலாக 'இந்தியத் தொகுப்பு நிதி' என்ற சொற்களை இடம் பெறச் செய்யலாம்;

(iii) 'மாநில வருவாய்கள்' என்ற சொற்கள் இடம்பெறும் இடங்களில் எல்லாம் அச்சொற்களுக்குப் பதிலாக 'மாநிலத் தொகுப்பு நிதி' என்ற சொற்களை இடம் பெறச்செய்யலாம்;

(iv) 'முதல் அட்டவணையின் பகுதி Iஇல் இப்போதைக்குக் குறித்துரைக்கப் படும்' என்ற சொற்களையும் எண்ணையும் விட்டு விடலாம்;

(v) 'சமஸ்தானங்களின் வருவாய்கள்' என்ற சொற்களுக்குப் பதிலாக 'சமஸ் தானங்களின் தொகுப்பு நிதி' என்ற சொற்களை இடம்பெறச் செய்யலாம்."

இது தொடர் விளைவானது மட்டுமே.

★ ★ ★

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, எந்த திருத்தத்தையும் நான் ஏற்றுக்கொள்ளவில்லை.

**திரு. அவைத் தலைவர்:** திருத்தங்களை வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

*(டாக்டர் அம்பேத்கரின் திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது. பேராசிரியர் எஸ்.எல். சாக்சேனா, எச்.வி. காமத், டாக்டர் பி.எஸ். தேஷ்முக் ஆகியோரால் முன்மொழியப்பட்ட ஏனைய எல்லாத் திருத்தங்களும் நிராகரிக்கப்பட்டன. திருத்தப்பட்ட வடிவத்தில் உறுப்பு 267 அரசமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.)*

★ ★ ★

## உறுப்பு 268

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, என் நண்பர் பேராசிரியர் கே.டி. ஷா கடைசியாக உரை நிகழ்த்துகையில் கடன்களுக்கு அனுமதி வழங்கும் நாடாளுமன்றத்தின் அதிகாரத்திற்கு வரம்பு கட்டுகின்ற கூறு ஒன்றை நாம் சேர்க்க வேண்டும் என்று யோசனை தெரிவித்தார். இந்த உரையைத் தவிர, உறுப்பு 268ல் அடங்கிய வழிவகை தொடர்பாக மற்றப் பேச்சாளர்கள் தெரிவித்திருக்கும் கருத்து மாறுபாட்டை என்னால் உண்மையில் புரிந்து கொள்ளவே முடியவில்லை. கடன் வாங்குகிற நோக்கங்களுக்காக நாட்டின் கடன் மதிப்புக்கு நிர்வாகத் துறையால் மட்டுமே உறுதியளிக்க முடியும் என்று ஒப்புக்கொள்ளப்படுகிறது; ஏனெனில் கடன் வாங்குவது அதன் ஒரு தன்மையில் நிர்வாக நடவடிக்கையாகும்; ஆனால் இந்த உறுப்பில் கடன் வாங்க நிர்வாகத் துறைக்குள்ள அதிகாரம், நாடாளுமன்றம் இயற்றும் எச்சட்டத்தினாலும் கட்டுப்படுத்தப்படாது என்று முன்மொழியப்படவில்லை. கடன் வாங்கும் நிர்வாக அதிகாரம், நாடாளுமன்றம் சட்டம் கொண்டு குறித்துரைக்கக் கூடிய வரம்புகளுக்கு உட்பட்டிருக்கும் என்று இந்த உறுப்பு திட்டவட்டமாக சொல்கிறது. நாடாளுமன்றம் ஒரு சட்டத்தை இயற்றாவிட்டால் நிச்சயமாக அது நாடாளுமன்றத்தின் குற்றமே. எதிர்கால நாடாளுமன்றம் ஏதும் இந்தச் சிக்கல் குறித்து போதுமான கவனம் செலுத்தி ஒரு சட்டமியற்றாது என்று எண்ணிப் பார்ப்பது மிகக் கடினம் என்றே நான் கருதியிருக்க வேண்டும். உறுப்பு 268இன்படி நிர்வாகத் துறை அந்த வருடத்திற்குள் எவ்வளவு கடன் வாங்கலாம் என்பது தொடர்பாக

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 10 1949, பக்கம் 330 -34

அதன் அதிகாரத்தைக் குறித்துரைத்து அல்லது வரம்புக்குட்படுத்தி நாடாளுமன்றம் இயற்றிய வருடாந்திரக் கடன் சட்டம் என்ற ஒன்று இருக்கலாம் என்பதைக் கூட நான் ஒப்புக்கொள்கிறேன். உறுப்பு 268இன் வழிவகைகளுக்குத் தங்களது கருத்து மாறுபாட்டைத் தெரிவித்துள்ளவர்கள் இதற்கு மேலும் என்ன விரும்புகிறார்கள் என்று எனக்குத் தெரியவில்லை. நாட்டின் கடன் மதிப்புக்கு உறுதியளித்திட நாடாளுமன்றத்திற்குள்ள அதிகாரத்தை வரம்புக்குட்படுத்த மேலும் ஒரு வழிவகை நமக்கு வேண்டுமா என்பது பரிசீலனைக்குரிய வேறு செய்தியாகும் என்பதில் ஐயமில்லை. இதனையும் கூட நாடாளுமன்றத்திடம் விட்டுவிடலாம் என்று எனக்குத் தோன்றுகிறது; ஏனெனில் நாட்டின் குறிப்பிட்ட சில செல்வாதாரங்களை ஈடு வைத்துக் கடன் வாங்கப்படாது என்று சொல்ல நாடாளுமன்றத்திற்கு உரிமையிருக்கும். இந்தக் கடன்களை உறுதி செய்வதற்காக நாடாளுமன்றம் தரக்கூடிய உத்தரவாதங்கள் தொடர்பாக நாடாளுமன்றம் தனக்குத் தானே வரம்புகள் விதித்துக் கொள்ளவிடாமல் இந்த உறுப்பு எவ்வாறு தடுக்கிறது என்று எனக்குத் தெரியவில்லை. ஆகவே எந்தக் கோணத்திலிருந்து பார்த்தாலும் இப்போதுள்ள வடிவில் இந்த உறுப்பு 268 எல்லா நிகழ்வுகளையும் உள்ளடக்குவதற்குப் போதுமானது என்று எண்ணுகிறேன். எனக்குச் சந்தேகமே இல்லை, என் நண்பர் திரு. அனந்தசயனம் ஐயங்கார் சொன்னதுபோல் நாடாளுமன்றம் இப்பிரச்சினையை அக்கறையுடன் எடுத்துக் கொள்ளும் என்றும் கடன் வாங்குகின்ற ஒன்றியத்தின் அதிகாரத்தை வரம்புக்குட்படுத்துவதற்காகத் தொடர்ந்து சட்டங்கள் இயற்றிவரும் என்றும் நம்புகிறோம் - மேலும் சொல்கிறேன், நாடாளுமன்றம் இந்த உறுப்பின்படி கடமைகளை நிறைவேற்றும் என்று நான் நம்புவது மட்டுமல்லாமல், எதிர்பார்க்கவும் செய்கிறேன்.

**திரு. எச்.வி. காமத்:** ''ஏதேனும் இருந்தால்'' என்ற சொற்களை நீக்குவதை டாக்டர் அம்பேத்கர் ஒப்புக்கொள்ளவில்லையா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அதனை நான் பரிசீலித்து வருகிறேன். ஆனால் இதனால் முன்னேற்றம் ஏற்படும் என்று நான் நினைக்கவில்லை. ஏனென்றால், ''அவ்வப்போது உள்ளவாறு'' என்ற சொற்கள் இருக்கின்றன.

**திரு. அவைத் தலைவர்:** வேறொன்றுக்குப் பதிலாக ''இந்தியத் தொகுப்பு நிதி'' என்ற சொற்களை இடம்பெறச் செய்கிற திருத்தம் ஏற்றுக்கொள்ளப்படுவதாக எடுத்துக் கொள்கிறேன்.

திருத்தப்பட்ட வடிவத்தில் உறுப்பு 268 அரசமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.

★ ★ ★

## உறுப்பு 269

[1]**திரு. அவைத் தலைவர்:** அச்சிடப்பட்ட திருத்தங்களின் தொகுதி II இல் பக்கம் 313 இல் சில திருத்தங்கள் அச்சிடப்பட்டுள்ளன.

அடுத்து டாக்டர் அம்பேத்கரின் திருத்தம் எண் 107ஐ எடுத்துக் கொள்வோம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் முன்மொழிவது:

> ''உறுப்பு 269 கூறு (1)இல் 'முதல் அட்டவணை பகுதி Iஇல் 'இப்போதைக்குக் குறித்துரைக்கப்படும்' என்ற சொற்களையும் எண்களையும் விட்டுவிடலாம்.''
>
> ''உறுப்பு 269 கூறு (1)இல் 'மாநில வருவாய்கள்' என்ற சொற்களுக்குப் பதிலாக 'மாநிலத் தொகுப்பு நிதி' என்ற சொற்களை இடம்பெறச் செய்யலாம்.''
>
> ''திருத்தங்கள் பட்டியலிலுள்ள திருத்தம் எண் 2972 தொடர்பாக, உறுப்பு 269 கூறு (2)க்குப் பதிலாகப் பின்வரும் கூறினை இடம்பெறச் செய்யலாம்:
>
> 'நாடாளுமன்றத்தினால் அல்லது நாடாளுமன்றம் இயற்றிய எந்தவொரு சட்டத்தின்படியும் விதிக்கப்படக்கூடிய நிபந்தனைகளுக்குட்பட்டு இந்திய அரசு எந்தவொரு மாநிலத்திற்கும் கடன்கள் வழங்கலாம்; அல்லது இந்த அரசமைப்புச் சட்டத்தின் உறுப்பு 268இன்படி நிர்ணயிக்கப்பட்ட வரம்புகள் ஏதும் விஞ்சப்படாத வரை எந்தவொரு மாநிலத்தினாலும் திரட்டப்படும் கடன்களுக்காக உத்தரவாதங்கள் வழங்கலாம்; இத்தகைய கடன்களை வழங்குவதற்குத் தேவைப்படும் பணத் தொகைகள் இந்தியத் தொகுப்பு நிதியிலிருந்து எடுத்துக்கொள்ளப்படும்.''

மூல வரைவில் இந்திய அரசுக்கு இந்தப் பிரச்சினையில் விருப்பம் போல் செயல்படும் சுதந்திரம் தரப்பட்டது; இப்போது நாடாளுமன்றத்தினால் அல்லது நாடாளுமன்றம் இயற்றிய எந்தவொரு சட்டத்தின்படியும் விதிக்கப்படக்கூடிய நிபந்தனைகளுக்கு இந்திய அரசின் நடவடிக்கை உட்பட்டதாகிறது- இதுவே எனது திருத்தம் எண் 107 செய்யும் முக்கிய மாற்றம்.

ஐயா, நான் முன்மொழிவது:

''உறுப்பு 269 கூறு (3)இல் 'முதல் அட்டவணையின் பகுதி (1)இல் அல்லது பகுதி (3)இல் இப்போதைக்குக் குறித்துரைக்கப்படும்' என்ற சொற்களையும், எண்களையும் விட்டுவிடலாம்.''

★ ★ ★

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, விடையேதும் தேவைப்படுவதாக நான் கருதவில்லை.

**(டாக்டர் அம்பேத்கரின் திருத்தம் கொண்டு திருத்தப்பட்ட வடிவத்தில் உறுப்பு 269 ஏற்றுக்கொள்ளப்பட்டு, அரசமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.)**

★ ★ ★

## உறுப்புகள் 5, 6

[1]**திரு. அவைத் தலைவர்:** மூல வரைவின் உறுப்பு 5ஐயும், 6ஐயும் இப்போது எடுத்துக் கொள்ள வேண்டும். திருத்தங்கள் 130 அல்லது 140 போன்று இந்த இரு உறுப்புகளுக்கும் திருத்தங்கள் ஏராளமாய் வந்து குவிந்துள்ளன. அனேகமாக 130, 140 திருத்தங்கள் இருக்கலாம். இந்த உறுப்புகளை டாக்டர் அம்பேத்கர் இறுதியாக அமைத்துள்ள வடிவில் முன்மொழிவதே மிகச் சிறந்த வழியாக இருக்கும் என்பது என் யோசனை. பிறகு நான் இந்த திருத்திய வரைவுக்கான திருத்தங்களை எடுத்துக் கொள்வேன். இந்த 5, 6 ஆகிய இரு உறுப்புகளும் இணைந்து செல்வதாகக் கருதுகிறேன், டாக்டர் அம்பேத்கர்.

**பேராசிரியர் கே.டி. ஷா:** அச்சிட்ட பட்டியலில் இருக்கும் திருத்தங்கள் என்னவாயின என்பதை நான் தெரிந்து கொள்ளலாமா? அவையனைத்தும் மூல வரைவுக்கான திருத்தங்களாக முன்வைக்கப் பட்டிருக்கின்றன. திருத்தங்களை இப்போது எடுத்துக் கொள்ளக் கூடிய வழிமுறை தொடர்பான உங்களது யோசனை எனக்கு அவ்வளவாகப் புரியவில்லை.

**திரு. அவைத் தலைவர்:** சாரமுள்ளதாகவும் வரைவுக் குழுவினால் முன்மொழியப்படும் திருத்திய வரைவுகள் எதையேனும் தொடுவதாகவும் திருத்தம் ஏதும் கிடைக்குமானால் நிச்சயமாக நான் அதனை எடுத்துக் கொள்வேன்; ஆனால் உறுப்பினர்கள் குறிப்பாக எந்தத் திருத்தத்தை தாங்கள் முன்மொழிய விரும்புகிறோம் என்பதை எனக்குச் சுட்டிக்காட்டும்படி அந்தப் பொறுப்பை அவர்களிடமே விட்டுவிடுகிறேன்.

---

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 10 1949, பக்கம் 334-44.

**டாக்டர் பி.எஸ். தேஷ்முக்:** மூலவரைவு முன்மொழியப்படா விட்டால், அந்த வரைவுக்கு முன்மொழியப்பட்ட எல்லாத் திருத்தங் களும் காற்றில் பறந்துவிடும்.

**திரு. அவைத் தலைவர்:** மூல வரைவை நாம் முன்மொழிய வில்லை. ஆனால் அது முன்மொழியப்பட்டதாகக் கொள்ளப்படும்; அடுத்து மற்றத் திருத்தங்கள் வருகின்றன.

உறுப்பினர்கள் தங்களுக்குச் சுற்றுக்கு விடப்பட்டுள்ள சில திருத்தங்கள் குறித்து டாக்டர் அம்பேத்கர் அறிவிப்புக் கொடுத்திருக்கக் காண்பார்கள். பட்டியல் I இல் எண் 1, இவற்றில் முதலாவதாகும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் பார்வைக் குறிப்புகளைத் தரலாமா? குடியுரிமைக் கூறு குறித்து அறிவிப்பு தரப்பட்டுள்ள திருத்தங்கள் பல்வேறு பட்டியல்களில் பரவிக் கிடக்கின்றன. தொடக்கத்தில் பல்வேறு பட்டியல்களுக்கான பார்வைக் குறிப்புகளை உறுப்பினர்களுக்குத் தர எண்ணுகிறேன். அடுத்து, பட்டியல் IV இன் திருத்தங்கள் எண் 128, 129, 130, 131, 132, 133 ஆகியவை வருகின்றன. இவை இந்த உறுப்பு தொடர்பாக வரைவுக் குழுவின் பல்வேறு முன்மொழிவுகளாகும். இந்தத் திருத் தங்கள் துண்டு துண்டாக தனித்தனியே முன்மொழியப்பட்டால் ஒரு தெளிவான, முழுமையான கருத்தை இந்த அவை பெற முடியாது போகலாம். ஆகவே நான் செய்ய எண்ணியுள்ளது இதுதான்: திருத் தங்கள் எண் 1, 28, 129, 130, 133 ஆகியவற்றை உள்ளடக்கி நான் தயாரித் துள்ள ஒரு தொகுப்புத் திருத்தத்தை முன்மொழிவேன். அடுத்தபடி யாகப் பட்டியல் IVஇல் எண் 131, 132 ஆகிய மற்ற இரு திருத்தங்களை என் நண்பர் திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி முன்மொழிவார். திருத்தம் எண் 129 இல் முன்மொழியப்பட்ட உறுப்பு 5 என்பதற்குப் பதிலாக முன்மொழியப்பட்ட உறுப்பு 5A என்று இருக்க வேண்டும். இது அச்சுப்பிழை. இந்த முன்னோட்டக் குறிப்புகளோடு எனது திருத் தத்தை முன்மொழிகிறேன்:

''உறுப்புகள் 5, 6 ஆகியவற்றிற்குப் பதிலாகப் பின்வரும் உறுப்பு களை இடம்பெறச் செய்யலாம்:

இந்திய அரசமைப்புச் சட்டம் தொடங்கும் நாளில் குடியுரிமை

''5. இந்த அரசமைப்புச் சட்டம் தொடங்கும் நாளில் இந்திய ஆட்சிப் பரப்பில் வசிப்பிடம் கொண்டிருக்கிற, அல்லது

(அ) இந்திய ஆட்சிப் பரப்பில் பிறந்த, அல்லது

(ஆ) பெற்றோரில் ஒருவர் அல்லது இந்திய ஆட்சிப் பரப்பில் பிறந்திருக்கிற, அல்லது

(இ) அரசமைப்புச் சட்டம் தொடங்கும் நாள் வரை ஐந்தாண்டுகளுக்குக் குறையாமல் இந்திய ஆட்சிப் பரப்பில் சாதாரணமாகக் குடியிருந்திருக்கிற ஒவ்வொருவரும் இந்திய குடிமகனாவார். ஆனால் எந்த அயல் அரசின் குடியுரிமையையும் அவர்தாமாக விரும்பிப் பெற்றிருக்கலாகாது.

பாகிஸ்தானிலிருந்து இந்தியாவிற்கு புலம் பெயர்ந்துள்ள சில ஆட்களின் குடியுரிமைகள்

5A. இந்த அரசமைப்புச் சட்டத்தின் உறுப்பு 5இல் என்ன கூறப்பட்டிருப்பினும், இப்போது பாகிஸ்தானில் சேர்க்கப் பட்ட அதன் ஆட்சிப் பரப்பிலிருந்து இந்திய ஆட்சிப் பரப் புக்குப் புலம் பெயர்ந்துள்ள ஓர் ஆள் இந்த அரசமைப்புச் சட்டம் தொடங்கும் நாளில் இந்தியக் குடிமகனாகக் கருதப்பட வேண்டுமானால் -

(அ) 1935 ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டத்தில் வரையறுக்கப்பட்ட வாறு அவரோ, அவருடைய பெற்றோரில் யாரேனும் ஒருவரோ, அவரது பாட்டிகள், பாட்டனார்கள் ஆகியோரில் யாரேனும் ஒருவரோ இந்தியாவில் பிறந்திருக்க வேண்டும்;

(ஆ) (i) 'இத்தகைய ஆள் 1948 ஜூலை 19க்கு முன் இப்படிப் புலம் பெயர்ந் துள்ள நேர்வில் அவர் புலம் பெயர்ந்த நாளிலிருந்து இந்திய ஆட்சிப் பரப் பிற்குள் சாதாரணமாகக் குடியிருந்து கொண்டிருக்க வேண்டும்;

(ii) இத்தகைய ஆள் 1948 ஆம் ஆண்டு ஜூலை 19 ஆம் நாள் அன்றோ அதன் பிறகோ இப்படிப் புலம்பெயர்ந்துள்ள நேர்வில் இந்நோக்கத்திற்காக இந்தியத் தன்னாட்சிக் குடியேற்ற அரசு குறித்துரைக்கப்பட்ட படிவத்தில் இதற்காக அவ்வரசு அமர்த்திய ஓர் அதிகாரியிடம் விண்ணப்பித்திருக்க வேண்டும்;

இந்த அரசமைப்புச் சட்டம் தொடங்கும் தேதிக்கு முன்பாக அந்த ஆள் அளிக்கிற விண்ணப்பத்தின் பேரில் அந்த அதிகாரியினால் இந்தியக் குடிமக னால் பதிவு செய்யப்பட்டிருக்க வேண்டும்;

ஆனால், விண்ணப்பம் அளிக்கின்றவர் விண்ணப்ப நாளுக்கு முன்பு குறைந்தது ஆறு மாத காலம் இந்திய ஆட்சிப் பரப்பில் வசித்திருக்கவில்லை என்றால் இதுபோன்ற பதிவு எதுவும் செய்யப்படாது.

பாகிஸ்தானுக்குப் புலம்பெயர்ந்துள்ள சிலரின் குடியுரிமைகள்

5-AA. இந்த அரசமைப்புச் சட்டத்தின் உறுப்புகள் 5, 5-A ஆகியவற்றில் என்ன கூறப்பட்டிருப்பினும், 1947 மார்ச்சு முதல் நாளுக்குப் பிறகு இந்திய ஆட்சிப் பரப்பிலிருந்து இப்போது பாகிஸ்தானில் சேர்க்கப்பட்டுள்ள ஆட்சிப் பரப்புக்குப் புலம் பெயர்ந்துள்ள ஒருவர் இந்தியக் குடிமகனாகக் கருதப்பட மாட்டார்.

ஆனால், இப்போது பாகிஸ்தானில் சேர்க்கப்பட்டுள்ள ஆட்சிப் பரப்புக்கு இப்படிப் புலம் பெயர்ந்த பிறகு எந்த ஒரு சட்டத்தினதும் ஆணையுரிமை யாலோ ஆணையுரிமைப்படியோ மறுகுடியேற்றத்திற்காக அல்லது நிரந்தர மாய்த் திரும்பி வருவதற்காகப் பிறப்பிக்கப்பட்ட ஓர் இசைவாணையின்படி இந்திய ஆட்சிப் பரப்புக்குத் திரும்பி வந்துள்ள ஒருவருக்கு இந்த உறுப்பில் கூறப்பட்டுள்ள எதுவும் பொருந்தாது. இப்படிப்பட்ட ஒவ்வொருவரும் இந்த அரசமைப்புச் சட்டத்தின் உறுப்பு 5-A கூறு (ஆ)இன் நோக்கங்களுக்கு 1948 ஜூலை 19 ஆம் நாளுக்குப் பிறகு இந்திய ஆட்சிப் பரப்பிற்குப் புலம் பெயர்ந் தவராகக் கருதப்படுவார்.

**திரு. ஜஸ்பத் ராய் கபூர்** (ஐக்கிய மாகாணம்: பொது): திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரியால் இது முன்மொழியப்படும் என்று நீங்கள் சொல்லியிருந்தீர்கள்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அவர் முன்மொழியப் போகிற திருத்தத்தை ஏற்றுக் கொள்ள நான் எண்ணிக் கொண்டிருப் பதால் ஒட்டுமொத்த உறுப்பில் அதனைச் சேர்த்திருக்கிறேன்.

*இந்தியாவில் பிறந்து இந்தியாவுக்கு வெளியே வசிக்கிற ஒரு சிலரின் குடியுரிமைகள்*

5-B. இந்த அரசமைப்புச் சட்டத்தின் உறுப்புகள் 5, 5A ஆகியவற்றில் என்ன கூறப்பட்டிருப்பினும், எவர் ஒருவரும் அல்லது அவருடைய பெற்றோர் இருவரில் எவர் ஒருவரும் அல்லது அவருடைய பாட்டினார் பாட்டியாரில் எவர் ஒருவரும் (மூலத்தில் இயற்றப் பட்டவாறு) 1935 ஆம் ஆண்டின் இந்திய அரசாங்கச் சட்டத்தில் வரையறுக்கப்பட்டவாறு இந்தியாவில் பிறந்தவராயிருக்க, அவர் சாதாரணமாக இந்த வரையரைப்படி இந்தியாவுக்கு வெளியே வசித்துவரும் நிலையில் அவர் அப்போதைக்கு வசித்துவரும் நாட்டில் உள்ள இந்தியாவின் அரசாண்மை அல்லது தூதாண்மைப் பிரதிநிதியால் இந்தியக் குடிமகனாகப் பதிவுசெய்யப்பட்டிருந் தால், இந்தியக் குடிமகனாகக் கருதப்படுவார்; இவ்விதம் அவர் பதிவு செய்யப் படுவதற்கு இந்தியத் தன்னாட்சிக் குடியேற்ற அரசினாலோ, இந்திய அரசினாலோ இதற்கென்று குறித்தளிக்கப் பட்ட படிவத்தில் இந்த அரசமைப்புச் சட்டம் தொடங்கு வதற்கு முன்போ பின்போ மேற்சொன்ன அரசாண்மை அல்லது தூதாண்மைப் பிரதிநிதியிடம் விண்ணப்பிக்க வேண்டும்.

*குடியுரிமைத் தொடருதல்*

5-C. இந்தப் பகுதியில் முன்சென்ற வழிவகைகளில் எந்தவொன் றின் படியும் இந்தியக் குடிமகனாக இருக்கிற ஒவ்வொருவரும் நாடாளு மன்றத்தால் இயற்றப்படக்கூடிய எந்தவொரு சட்டத்தின் வழி வகைக்கும் உட்பட்டுத் தொடர்ந்து இந்தியக் குடிமகனாகவே இருப்பார்.

*நாடாளுமன்றம் சட்டம் கொண்டு குடியுரிமையை முறைப்படுத்தும்*

6. குடியுரிமைகள் பெறுதல், நீக்குதல் தொடர்பாகவும் குடியுரிமை பற்றிய ஏனைய அனைத்துப் பிரச்சினைகள் தொடர்பாகவும் எந்த வழிவகையும் செய்திட நாடாளுமன்றத்திற்குள்ள அதிகாரத்தை இந்தப் பகுதியில் முன்சென்ற வழிவகைகளில் கூறப்பட்டுள்ள எதுவும் குறைத்திடாது.''

ஐயா, எனது வரைவுக்கான திருத்தங்களை திரு. டி.டி. கிருஷ்ண மாச்சாரி முன்மொழிந்த பிறகு நான் சொல்ல வேண்டியவற்றைச் சொல்வேன். அப்போது இது முழுமைப் பெறும்.

★ ★ ★

[1]***திரு. அவைத் தலைவர்:*** மற்ற அனைத்துத் திருத்தங்களையும் எடுத்துக் கொள்வோமானால் அவற்றிற்கு முடிவேதும் இருக்காது என்று கருதுகிறேன். முதலில் டாக்டர் அம்பேத்கர் தமது முன்மொழிவை விளக்கட்டும். பிறகு ஏனைய திருத்தங்கள் முன்மொழியப் படலாம்.

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** அவைத் தலைவர் அவர்களே, வரைவு அரசமைப்புச் சட்டத்தில் உள்ள வேறோர் உறுப்பை நீக்கிப் பார்த்தால், குறிப்பிட்ட இந்த உறுப்பைப் போல் வேறு எந்த உறுப்பும் வரைவுக் குழுவுக்கு இப்படித் தலைவலி கொடுத்திருப்பதாக நான் கருதவில்லை. தேவையானவை என்றும் விரும்பத்தக்கவை என்றும் எல்லா நேர்வுகளையும் உட்படுத்துவதற்காக எத்தனை வரைவுகள் தயாரிக்கப்பட்டன, போதாக்குறையானவை என்று எத்தனை வரைவுகள் அழிக்கப்பட்டன என்பதை யானறியேன். நான் முன்மொழிந்த வரைவை வரைவுக்குழு இறுதியாக ஏற்றுக்கொண்டிருப்பது அதற்கொரு நற்பேறு எனக் கருதுகிறேன். ஏனென்றால் அனைவரையும் இல்லாவிட்டாலும் பெரும்பாலானவர்களை மனநிறைவு கொள்ளச் செய்கின்ற வரைவு இதுதான் என்று எண்ணுகிறேன்.

***மாண்புமிகு உறுப்பினர் ஒருவர்:*** ஒரு கேள்வி.

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** ஐயா, இந்த உறுப்பானது இந்த அரசமைப்புச் சட்டம் தொடங்கும் நாளில் குடியுரிமை என்பதைப் பற்றியதே தவிர எந்தப் பொதுவான அர்த்தத்திலும் குடியுரிமை என்பதைப் பற்றியதல்ல. இந்த நாட்டுக்கு ஒரு நிரந்தரமான குடியுரிமைச் சட்டத்தை விதித்தளிப்பது இந்தக் குறிப்பிட்ட உறுப்பின் நோக்கமன்று. ஒரு நிரந்தரமான குடியுரிமைச் சட்டத்தை விதித்தளிக்கும் பணி நாடாளுமன்றத்திடம் விடப்பட்டுள்ளது. நான் முன்மொழிந்த உறுப்பு 6இன் சொல்லமைப்பிலிருந்து உறுப்பினர்கள் இதைக் காண்பார்கள். குடியுரிமை தொடர்பான பிரச்சினை முழுவதும், நாடாளுமன்றத்திடம் விடப்பட்டுள்ளது. அது பொருத்தம் எனக் கருதக்கூடிய எந்தவொரு சட்டத்தைக் கொண்டும் குடியுரிமையை நிர்ணயிக்கலாம்; இந்த உறுப்பு கூறுகிறது -

> ''குடியுரிமை பெறுதல், நீக்குதல் தொடர்பாகவும் குடியுரிமை பற்றிய ஏனைய அனைத்துப் பிரச்சினைகள் தொடர்பாகவும் எந்த வழிவகையும் செய்திட நாடாளுமன்றத்திற்குள்ள அதிகாரத்தை இந்தப் பகுதியில் முன்சென்ற வழிவகைகளில் கூறப்பட்டுள்ள எதுவும் குறைத்திடாது.''

---

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 10 1949, பக்கம் 346 -49.

உறுப்பு 6இன் விளைவு இதுதான்: உறுப்பு 5இன் வழிவகைகளின்படியும் அடுத்துவரும் வழிவகைகளின்படியும் இந்த அரசமைப்புச் சட்டம் தொடங்கும் நாளில் குடிமக்களாக அறிவிக்கப்படுகிறவர்களிடமிருந்து நாடாளுமன்றத்தால் குடியுரிமையைப் பறிக்க இயலாது என்பது மட்டுமல்லாமல், புதிய கோட்பாடுகளை உள்ளடக்கிய புத்தம் புதியதொரு சட்டத்தையும் அது உருவாக்கக் கூடும். இந்த உறுப்புகள் மீதான விவாதத்தில் பங்கெடுக்கப் போகிறவர்கள் நினைவில் கொள்ள வேண்டிய முதல் கருத்து இதுதான். இந்த அரசமைப்புச் சட்டத்தின் தொடக்க நாளில் குடியுரிமை என்பதற்கு நாம் செய்யும் வழிவகைகள் நிரந்தரமானவையாகவோ மாற்ற முடியாதவையாகவோ இருக்கப் போவதாக அவர்கள் புரிந்து கொள்ள கூடாது. நாம் செய்து கொண்டிருப்பது எல்லாம் இடைக் கால அடிப்படையில் இப்போதைக்கு முடிவு எடுப்பதுதான்.

இது இவ்வாறு இருக்க, நான் ஓர் உண்மையின்பால் உறுப்பினர்களின் கவனத்தை ஈர்க்க விரும்புகிறேன்: இந்த அரசமைப்புச் சட்டம் தொடங்கும் நாளில் குடியுரிமை வழங்குவதைப் பொறுத்த வரை வரைவுக்குழு ஐவேறு வகையினருக்கு வழிவகை செய்துள்ளது. இவர்கள் இந்த உறுப்பில் விதித்தளிக்கப்பட்டுள்ள வரையறைகளையும் நிபந்தனைகளையும் நிறைவு செய்வார்களானால் அரசமைப்புச் சட்டம் தொடங்கும் நாளில் குடிமக்களாக முடியும்.

இந்த ஐந்து வகையினர் பின்வருமாறு:

1) இந்தியாவில் பிறந்து இந்தியாவையே வாழ்விடமாகக் கொண்டவர்கள்: வேறு வார்த்தைகளில் சொன்னால் இந்த அரசமைப்புச் சட்டத்தினால் வரையறுக்கப்பட்டவாறு இந்திய மக்கள் தொகையில் பெரும் பகுதியாக அமைந்திருப்பவர்கள்;

2) இந்தியாவை வாழ்விடமாகக் கொண்டவர்கள் என்றாலும் இந்தியாவில் பிறக்காமல் இந்தியாவில் வசித்திருப்பவர்கள், எடுத்துக்காட்டாக இந்தியாவிலுள்ள போர்த்துக்கீசிய குடியேற்றங்களின் குடிகளாயிருப்பவர்கள், அல்லது சந்திரநாகூர், புதுச்சேரி போன்று இந்தியாவிலுள்ள பிரெஞ்சுக் குடியேற்றங்களில் இருப்பவர்கள், அல்லது இதேபோல் பாரசீகத்திலிருந்து வந்துள்ள ஈரானியர்கள், இந்தியாவில் பிறக்கவில்லை என்றாலும் இவர்கள் நீண்டகாலமாக இந்தியாவில் வசித்து வருகின்றனர். இவர்களுக்குக் குடிமக்களாகும் விருப்பம் இருப்பதில் சந்தேகமில்லை.

வரைவுக்குழு இந்த உறுப்பின் வீச்சுக்குள் கொண்டுவர எண்ணியுள்ள இதர மூன்று வகையினர் பின்வருமாறு:

3) இந்தியாவில் வசிப்பவர்கள் என்றாலும் பாகிஸ்தானுக்கு புலம்பெயர்ந்திருப்பவர்கள்;

*4) பாகிஸ்தானில் வசிப்பவர்கள் என்றாலும் இந்தியாவிற்குப் புலம்பெயர்ந் திருப்பவர்கள்;*

*5) பிறந்த இவர்களோ இவர்களின் பெற்றோர்களோ இந்தியாவில் பிறந்த வர்கள் என்றாலும் இந்தியாவிற்கு வெளியே வசித்துக் கொண்டிருப்பவர்கள்.*

*இவர்களே இந்த உறுப்பின் வழிவகைகளுக்குட்பட்ட ஐந்து வகையினர் ஆவர். இப்போது முதல் வகையினர், அதாவது இந்திய ஆட்சிப் பரப்பில் பிறந்து இந்திய ஆட்சிப் பரப்பில் குடியிருப் பவர்கள் அல்லது இவர்களின் பெற்றோர் இந்திய ஆட்சிப் பரப்பில் பிறந்தவர்கள் - இந்த வகையினர் குறித்து உறுப்பு 5 கூறுகள் (அ), (ஆ) ஆகியவற்றில் சொல்லப்படுகிறது. இவர்கள் அந்த வழிவகைகளில் விதிக்கப்பட்ட நிபந்தனைகளை நிறைவு செய்தால் அவற்றின்படி குடிமக்கள் ஆவார்கள்.*

*நான் சுட்டிய இரண்டாவது வகையினர் அதாவது இந்தியா வில் வசித்திருப்பவர்கள் என்றாலும் இந்தியாவில் பிறக்காதவர்கள், இந்த அரசமைப்புச் சட்டத்தின் தொடக்க நாள் முடிய ஐந்தாண்டு களுக்குக் குறையாமல் சாதாரணமாக இந்திய ஆட்சிப் பரப்பில் வசித்திருப்பவர்கள் - இந்த வகையினர் பற்றி உறுப்பு 5 கூறு (இ) இல் சொல்லப்படுகிறது. ஐந்தாண்டுகள் காலம் இந்தியாவில் வசித்திருக்க வேண்டும் என்பதே நிபந்தனை. இந்த கூறுகள் எல்லாம் ஒரு பொது வரம்புக்கு உட்பட்டவை. அதாவது அவர்கள் எந்தவோர் அயல் அரசின் குடியுரிமையையும் தன்னார்வமாகப் பெற்றிருக்கக் கூடாது.*

*கடைசி வகையினர், அதாவது அயல்நாட்டில் வசிப்பவர்கள் என்றாலும் இவர்களோ இவர்களின் பெற்றோர்களோ இந்தியாவில் பிறந்தவர்கள். இந்த வகையினரைப் பற்றி எனது உறுப்பு 5-Bஇல் சொல்லப்படுகிறது. 1935 ஆம் ஆண்டின் இந்திய அரசாங்கச் சட்டத் தில் வரையறுக்கப்பட்டவாறு இவர்கள் அல்லது இவர்களின் பெற்றோர் அல்லது பாட்டனார் பாட்டியார் இந்தியாவில் பிறந்த வர்கள் என்றாலும் சாதாரணமாக இந்தியாவுக்கு வெளியே ஏதேனும் ஓர் ஆட்சிப் பரப்பில் வசிப்பவர்கள் - அயல்நாட்டிலுள்ள இந்தியர்கள் என்று அழைக்கப்படும் இவர்களை இந்த உறுப்பு சுட்டுகிறது. இவர் களுக்கு விதிக்கப்பட்டுள்ள ஒரே வரம்பு இதுதான்: இந்த அரசமைப்புச் சட்டம் தொடங்கு முன் அவர்கள் இந்தியக் குடிமக்களாக விரும்பி னால் இந்நோக்கத்திற்காக இந்திய அரசினால் குறித்தளிக்கப்பட்ட படிவத்தில் இந்திய அரசாங்கத்தின் தூதாண்மை அலுவலர் அல்லது அரசாண்மைப் பிரதிநிதியிடம் ஒரு விண்ணப்பம் அளிக்க வேண்டும்; இவர்கள் குடிமக்களாகப் பதிவு செய்யப்பட வேண்டும்; இவர்*

களுக்கு இரு நிபந்தனைகள் விதிக்கப்படுகின்றன. ஒன்று விண்ணப் பித்தல்; இரண்டாவது அவர் தங்கியிருக்கிற நாட்டிலுள்ள இந்தியா வின் தூதாண்மை அல்லது அரசாண்மைப் பிரதிநிதியினால் இப்படிப் பட்ட ஒரு விண்ணப்பதாரர் பதிவு செய்யப்படுதல். நான் முன்பே சொன்னதுபோல் இவை மிக எளிய செய்திகளே.

இந்தியாவில் வசித்துவிட்டு பாகிஸ்தானுக்குப் புலம்பெயர்ந் துள்ளவர்கள், பாகிஸ்தானில் வசித்துவிட்டு இந்தியாவிற்குப் புலம் பெயர்ந்துள்ளவர்கள் ஆகிய இரு வகையினருக்கு இப்போது வரு கிறோம். பாகிஸ்தானிலிருந்து இந்தியாவிற்குப் புலம் பெயர்ந் துள்ளவர்கள் குறித்து எனது உறுப்பு 5-Aஇல் சொல்லப்படுகிறது. உறுப்பு 5-Aன் வழிவகைகள் இவையே -

பாகிஸ்தானிலிருந்து இந்தியாவிற்கு வந்துள்ளவர்கள் இரு வகைகளாகப் பிரிக்கப்படுகின்றனர் -

(அ) 1948 ஜூலை 19க்கு முன்பு வந்திருப்பவர்கள்;

(ஆ) 1948 ஜூலை 19க்கு பின்பு பாகிஸ்தானிலிருந்து இந்தியா விற்கு வந்திருப்பவர்கள்.

1948 ஜூலை 19க்கு முன்பு வந்திருப்பவர்கள் - தாமாகவே இந்தியக் குடிமக்களாவார்கள்.

1948 ஜூலை 19க்குப் பின்பு வந்திருப்பவர்களைப் பொறுத்த வரை இந்த அரசமைப்புச் சட்டம் தொடங்கும் நாளில் அவர்களும் குடியுரிமைக்கு உரிமை படைத்தவர்களாக இருப்பார்கள். ஆனால் இதற்குக் குறிப்பிட்ட நடைமுறை பின்பற்றப்படுகிறது, அதாவது இத்தகைய ஒருவர் இந்திய தன்னாட்சி குடியேற்ற (டொமினியன்) அரசாங்கத்தினால் அமர்த்தப்பட்ட ஓர் அதிகாரியிடம் திரும்பவும் ஒரு விண்ணப்பம் அளிக்கும்படி கோரப்படுவார். அவ்வாறு அளிக்கப் பட்ட விண்ணப்பத்தின் பேரில் அவர் அந்த அதிகாரியினால் பதிவு செய்யப்பட வேண்டும்.

பாகிஸ்தானிலிருந்து இந்தியாவுக்கு வருகிறவர்கள் அரசமைப்புச் சட்டம் தொடங்கும் நாளில் குடியுரிமை பெறுவதைப் பொறுத்தவரை இரு வகையினராகப் பிரிக்கப்படுகின்றனர் - 1948 ஜூலை 19க்கு

முன்பு வந்தவர்கள், அதன் பிறகு வந்தவர்கள். 1948 ஜூலை 19க்கு முன்பு வந்தவர்களைப் பொறுத்தவரை குடியுரிமை தானாக வருவதாகும். அவர்கள் தொடர்பாக நிபந்தனைகளோ, நடைமுறையோ யாதொன்றும் விதிக்கப்படுவதில்லை. அதன் பிறகு வந்துள்ளவர்களைப் பொறுத்தவரை குறிப்பிட்ட சில நடைமுறைக்குரிய நிபந்தனைகள் விதிக்கப்படுகின்றன; இந்த நிபந்தனைகள் நிறைவு செய்யப்படும்போது நான் இப்போது முன்மொழிகிற உறுப்பின்படி அவர்களும் குடியுரிமைக்கு உரிமை படைத்தவர்கள் ஆவார்கள்.

அடுத்து பாகிஸ்தானுக்குப் புலம்பெயர்ந்த போதிலும் அங்கு சென்ற பிறகு இந்தியாவிற்குத் திரும்பி வந்துள்ளவர்களிடம் வருகிறேன். அங்கு நிலை இதுதான். அனேகமாக இந்தப் பிரச்சினை குறித்துத் தொடர்புடைய அமைச்சர்கள் அறிந்துள்ள அளவிற்கு நான் முழுமையாக அறிந்திருக்கவில்லை. ஆனால் நாம் முன்வைத்துள்ள முன்மொழிவு இதுதான்: பாகிஸ்தானுக்குப் புலம் பெயர்ந்திருப்பவர் அங்கு சென்ற பிறகு இந்தியாவில் நுழைவதற்கு மட்டுமல்லாமல், மறுகுடியேற்றத்துக்கோ நிரந்தரமாகத் திரும்பி வருவதற்கோ அவருக்கு உரிமை அளிக்கும் வகையிலும் இந்திய அரசாங்கத்தினால் வழங்கப்பட்ட இசைவாணையின் அடிப்படையில் இந்தியாவுக்குத் திரும்பியிருந்தால் இப்படிப்பட்டவர் மட்டுமே இந்த அரசமைப்புச் சட்டம் தொடங்கும் நாளில் இந்தியக் குடிமகனாவதற்கு உரிமை படைத்தவராக இருப்பார். இந்த வழிவகையைக் கொண்டுவர வேண்டிய காரணம் என்னவென்றால், இந்தியாவை விட்டு பாகிஸ்தானிற்குச் சென்று, பிறகு பாகிஸ்தானிலிருந்து இந்தியாவிற்குத் திரும்பியவர்கள் தொடர்பாக இந்திய அரசாங்கம் இசைவாணை முறை என்று அழைக்கப்பட்ட ஒரு முறையின்படி அவர்கள் வரவும், நிரந்தரமாகக் குடியமரவும் அனுமதித்தது. இந்த இசைவாணை முறை 1948 ஜூலை 19ஆம் நாளிலிருந்து அறிமுகப்படுத்தப்பட்டது. ஆகவே, உறுப்பு 5-Bஇல் அடங்கிய வழிவகை பாகிஸ்தானிலிருந்து வந்த பிறகு பாகிஸ்தானுக்குச் சென்று இந்தியாவிற்குத் திரும்பி வந்தவர்களின் குடியுரிமைப் பற்றிச் சொல்கிறது. மறு குடியேற்றத்திற்கோ நிரந்தரமாகத் திரும்பி வருவதற்கோ தனக்கு வழங்கப்பட்ட இசை வாணையின் அடிப்படையில் வந்திருந்தால் அவர் மட்டுமே இந்த அரசமைப்புச் சட்டம் தொடங்கும் நாளில் குடிமகனாவதற்கு உரிமை படைத்தவராய் இருப்பார்.

ஐயா, ஒரு வரம்புக்குட்பட்ட நோக்கத்திற்காக, அதாவது அரசமைப்புச் சட்டம் தொடங்கும் நாளில் குடியுரிமை வழங்கும் நோக்கத்திற்காக ஒவ்வொரு வகை நேர்வையும் உட்படுத்துவது முடியாத காரியம் என்று நான் குறிப்பிடலாம். இந்தத் திருத்தத்தில் அடங்கிய வழிவகைகளில் எந்த வகையினரேனும் விடப்பட்டிருந் தால் அடுத்து அவர்களுக்கு வழிவகை செய்ய நாம் நாடாளுமன்றத் திற்கு அதிகாரம் வழங்கியுள்ளோம். நான் முன்மொழிந்துள்ள திருத் தங்கள் நோக்கத்திற்கும் தருணத்திற்கும் போதுமானவை என்று அவைக்கு தெரிவித்துக் கொள்கிறேன். இத்திருத்தங்களை அவை யினால் ஏற்றுக்கொள்ள இயலும் என்று நம்புகிறேன்.

**திரு. பி.எம். குப்தா (பம்பாய்: பொது):** இந்த இசைவாணை முறை 1948 ஜூலை 19 ஆம் நாள் கொண்டுவரப்பட்டதா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஆம். இசைவாணை பெற்றிருக்கா விட்டால் எவர் ஒருவரும் வரலாகாது என்ற ஓர் அவசரச் சட்டம் 1948 ஜூலை 19 ஆம் நாள் பிறப்பிக்கப்பட்டது. அதன்படி 1948 ஜூலை 19ஆம் நாள் இந்திய அரசாங்கத்தினால் சில விதிகள் வகுத்தளிக்கப்பட்டன. இந்த விதிகள் மூலம்தான் உள்ளே வர உரிமை யிருப்பதாகத் திட்டவட்டமாய்க் கூறி பாகிஸ்தானிலிருந்து இந்தியா விற்கு வருகின்ற எவர் ஒருவருக்கும் இசைவாணை வழங்கப்பட லாம் என்ற இந்திய அரசாங்கம் சொல்லியது. இசைவாணைகளில் மூன்று வகைகள் உள்ளன. அவை:

தற்காலிக இசைவாணை, நிரந்தர இசைவாணை, மறுகுடி யேற்றத்துக்கான அல்லது நிரந்தரமாகத் திரும்புவதற்கான இசை வாணை. கடைசி வகையினர் மட்டுமே மறுகுடியேற்றத்தையும், நிரந்தரமாகத் திரும்புவதையும் வெளிப்படையான நோக்கமாகக் கொண்டு திரும்பிவர அனுமதிக்கப்பட்டுள்ளார்கள். இந்த உறுப்பில் சேர்க்க எண்ணியிருப்பது இவர்களை மட்டும்தானே தவிர, வேறு எவரையும் அல்ல.

[1]**திரு. அவைத் தலைவர்:** திருத்தங்களை நாளை எடுத்துக் கொள்ளலாம் என்று கருதுகிறேன்.

★ ★ ★

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 12, 1949, பக்கம் 422 -24.

**திரு. அவைத் தலைவர்:** இதற்கு மேல் உரைகள் நிகழ்த்துவதால் எந்தப் பயனுள்ள நோக்கமும் நிறைவேறும் என்று நான் கருதவில்லை. திருத்தங்கள் அனைத்தும் உறுப்பினர்களின் முன் உள்ளன. அவர்கள் விரும்பும் எந்தவொரு திருத்தத்துக்கும் ஆதரவாக வாக்களிக்க அவர்களுக்கு உரிமை உள்ளது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்** (பம்பாய்: பொது): அவைத்தலைவர் அவர்களே, நான் முன்மொழிந்துள்ள வரைவு உறுப்புகளை விமர்சித்துள்ளவர்கள் எழுப்பியுள்ள வாதக்கூறுகள் ஒவ்வொன்றையும் குறித்துக் கொள்ள என்னால் இயலவில்லை. ஒவ்வொரு குற்ற விமர்சனத்தையும் தேடிப்பிடித்து விடை சொல்வது அவசியம் என்று நான் கருதவில்லை. சாரமான கூறுகளை எடுத்துக் கொண்டு நான் அவற்றிற்குப் பதிலளித்தாலே போதும்.

வரைவு உறுப்புகளைக் கொண்டு நாம் நமது குடியுரிமையை மிகவும் மலிவான ஒன்றாக்கி விட்டதாக என் நண்பர் டாக்டர் தேஷ்முக் சொன்னார். அவர் கூறியதை நான் ஏற்றுக்கொள்ள வேண்டியிருப்பினும், குடியுரிமைச் சட்டத்தை ஆளும் விதிகளை அவர் அறிந்திருந்தால், ஏனைய நாடுகள் விதித்துள்ள சட்டங்களைக் கொண்டு மலிவாக்கப்படக் கூடியதை விடவும் நமது குடியுரிமை எவ்வகையிலும் மலிவானதன்று என்பதை உணர்ந்திருப்பார் எனக் கருதுகிறேன்.

உறுப்பு 6இன்படி சட்டமியற்ற நாடாளுமன்றத்திற்குள்ள அதிகாரத்தை வரம்புக்குட்படுத்துகிற இந்த உறுப்புகளில், எந்த நாடுகள் அங்கு வசிக்கும் இந்தியர்களுக்குக் குடியுரிமை மறுக்கின்றனவோ அந்த நாடுகளில் வசிப்பவர்களுக்குக் குடியுரிமை தராதிருக்க நேர்வகைத் தடை இருக்க வேண்டும் என்று என் நண்பர் பேராசிரியர் கே.டி. ஷா எழுப்பிய வாதத்தைப் பொறுத்தவரை, அவ்வப்போது எழக்கூடிய நிலைமைகளுக்கேற்ப நாடாளுமன்றமே முடிவு செய்யட்டும் என்று விட்டுவிடுவதே நன்றெனக் கருதுகிறேன்.

இந்த உறுப்புகளில் சில பகுதிகள் பாகிஸ்தானிலிருந்து இந்தியாவிற்கு வந்து குடியேறியவர்கள் பற்றியும், இந்தியாவிலிருந்து பாகிஸ்தானிற்குச் சென்று குடியேறியவர்கள் பற்றியும் அமைந்துள்ளனவே, அந்தப் பகுதிகளுக்கெதிராகத் தொடுக்கப்பட்டுள்ள விமர்சனக்

கூறுகள் குறித்தே நான் பெரிதும் கவலைப்படுகிறேன். பாகிஸ்தானி லிருந்து இந்தியாவிற்கு வருகிற குடியேற்றக்காரர்கள் குறித்துச் சொல் கின்ற வழிவகைகளின் முதல் பகுதியைப் பொறுத்தவரை, முக்கிய மாக அசாம் பிரதிநிதிகளிடமிருந்து விமர்சனம் வந்துள்ளது. குறிப்பாக என் நண்பர் ரோகிணிகுமார் சௌத்ரி இவ்விதம் விமர்சனக்குரல் கொடுத்துள்ளார். அவர் சொன்னதை நான் சரியாகப் புரிந்து கொண் டிருந்தால், பாகிஸ்தானிலிருந்து இந்தியாவுக்கு வந்து குடியேறிய வர்கள் குறித்துச் சொல்கின்ற இந்த உறுப்புகள், கிழக்கு வங்காளத் திலிருந்து வங்காளிகள், முஸ்லீம்கள் ஆகிய இருசாராரும் அசாமிற்குள் வருவதற்கும் அசாமியர்களின் பொருளாதாரத்தையோ அம்மாகாணத் தில் வகுப்பு விகிதங்களின் சமநிலையையோ சீர்குலைப்பதற்கு மடை திறந்துவிட்டுள்ளன என்பதே அவரது வாதம். ஐயா, பாகிஸ்தானி லிருந்து இந்தியாவுக்கு வந்து குடியேறியவர்கள் குறித்துச் சொல் கின்ற உறுப்புகளின் உட்கருத்தை அவர் அறவே தவறாகப் புரிந்து கொண்டுள்ளார் என்று நான் கருதுகிறேன்.

அவர் வழிவகைகளை மீண்டும் படித்துப் பார்ப்பாரானால், 1948 ஜூலை 19க்கு முன் அசாமிற்குள் நுழைந்தவர்களைப் பொறுத்த வரை மட்டுமே, அவர்கள் இந்திய ஆட்சிப் பரப்பிற்குள் வசித்திருந் தால் தாமாகவே அசாமின் குடிமக்களாக அறிவிக்கப்பட்டுள்ளனர் என்பதைக் காண்பார்.

ஆனால் இந்து வங்காளிகள் என்றாலும் சரி, முஸ்லீம் வங்காளிகள் என்றாலும் சரி, 1948 ஜூலை 19க்குப் பிறகு அசாமிற்குள் நுழைந்திருப்பவர்களைப் பொறுத்தவரை குடியுரிமை என்பது எவ் வகையிலும் தானாக வருவது இல்லை என்பதை அவர் காண்பார். 1948 ஜூலை 19க்குப் பிறகு அசாமிற்குள் நுழைந்திருப்பவர்களுக்கு மூன்று நிபந்தனைகள் விதிக்கப்படுகின்றன. இத்தகைய ஒருவர் குடியுரிமைக்காக விண்ணப்பம் அளிக்க வேண்டும் என்பது முதல் நிபந்தனை. ஆறு மாதங்களாக அசாமில் வசித்து வருவதை அவர் மெய்ப்பிக்க வேண்டும். மூன்றாவதாக மிகக் கடுமையான ஒரு நிபந்தனை உள்ளது. அதாவது இந்தியத் தன்னாட்சிக் குடியேற்ற (டொமினியன்) அரசினால் அமர்த்தப்பட்ட ஓர் அதிகாரியால் அவர் பதிவு செய்யப்பட வேண்டும். பதிவு செய்வதற்கான இந்த அதிகாரம் முழுநிறை அதிகாரமாகும் என்பதை திட்டவட்டமாகச் சொல்ல விரும்புகிறேன். ஒருவர் ஒரு விண்ணப்பம் அளித்துள்ளார் என்பதே,

அவர் ஆறு மாதங்களாக அசாமில் வசித்து வருகிறார் என்பதை பதிவு அதிகாரி அவரைப் பதிவு செய்தாக வேண்டும் என்ற பொறுப்பு அல்லது கடமை அல்லது கடப்பாடு எதையும் குறித்திடாது. ஒரு விண்ணப்பம் கொடுத்துள்ளபோதிலும், அவர் ஆறு மாத காலம் வசித்துள்ள போதிலும் அவரைப் பதிவு செய்ய வேண்டுமா, கூடாதா என்பதை முடிவு செய்திடப் பதிவு அதிகாரிக்குப் போதிய விருப்புரிமை விடப் பட்டிருக்கும். வேறு வார்த்தைகளில் சொன்னால், அவர் வந்திருப் பதற்கான நோக்கத்தை, நிரந்தர இந்தியக் குடிமகனாகும் நேர்மை யான நோக்கத்துடன் வந்திருக்கிறாரா அல்லது வேறு ஏதேனும் நோக்கத்துடன் வந்திருக்கிறாரா என்பதைத் தம்மிடம் இருக்கக்கூடிய சான்றுகளின் அடிப்படையில் பரிசீலனை செய்திடப் பதிவு அதிகாரிக்கு உரிமையிருக்கும். 1948 ஜூலை 19க்குப் பின்னர் அசாமிற்குள் நுழை கிறவர்களுக்குப் பொருந்தும்படிச் செய்யப்படுகிற இந்த மூன்று வரம்பிடும் நிபந்தனைகளையும் கவனத்தில் கொண்டால் மடைதிறந்த வெள்ளம் போல், வங்காளிகளோ, முஸ்லீம்களோ அசாமிய மக்களை மூழ்கடித்துவிடுவார்கள் என்று என் நண்பர் திரு. ரோகிணி குமார் சௌத்ரி தெரிவித்திருப்பது போன்ற எவ்வித அச்சமும் கொஞ்சங் கூட ஆதாரமற்றதாகவே எனக்குத் தோன்றுகிறது. 1948 ஜூலை 19க்கு முன்பாக வங்காளத்திற்குள் நுழைந்திருப்பவர்கள் குறித்து அவர் மறுப்பு ஏதும் கொண்டிருந்தால் - இந்நேர்வில் ஒருவர் இந்தியாவில் வசித்திருப்பதாகக் காட்டினால் குடியுரிமை தானாக வரும் - இந்தப் பிரச்சினை உறுப்பு 6இன்படி இயற்றப்படக்கூடிய ஏதேனும் ஒரு சட்டத்தின்படி நாடாளுமன்றத்தினால் முடிவு செய்யப்படும் என்பதில் ஐயமில்லை. அசாமைச் சேர்ந்த என் நண்பர்கள் 1948 ஜூலை 19க்கு முன் அசாமிற்குள் நுழைந்திருப்பவர்கள் தகுதி நீக்கம் செய்யப்பட வேண்டும் என்று நாடாளுமன்றத்தை நம்பவைக்க இயலுமானால் - இதற்கான காரணத்தை அவர்கள் மனத்தில் வைத்திருக்கலாம் அல்லது நாடாளுமன்றத்தில் முன்வைக்க விரும் பலாம் - நாடாளுமன்றம் இந்தப் பிரச்சினையைக் கருத்தில் எடுத்துக் கொள்ளும் என்பதில் எனக்கு ஐயமில்லை. ஆகவே பாகிஸ்தானி லிருந்து அசாமிற்குள் வந்து குடியேறியவர்கள் தொடர்பான இந்த உறுப்புகளின் மீதான குற்ற விமர்சனத்தைப் பொறுத்தவரை இதற்கு கொஞ்சங்கூட ஆதாரமில்லை என்பதைப் பணிந்து சொல்லிக் கொள்கிறேன்.

அடுத்து, இந்தியாவிலிருந்து பாகிஸ்தானுக்குச் சென்று குடியேறியவர்கள் தொடர்பான வழிவகைகளின் மீது தொடுக்கப்பட்டிருக்கிற விமர்சனத்திற்கு வருகிறேன். இந்த உறுப்புகளைக் குறை கூறியிருப்பவர்களும் சரியாக என்ன செய்ய எண்ணப்பட்டுள்ளது என்பதைத் தெளிவாகப் புரிந்து கொள்ளவில்லை எனக் கருதுகிறேன். ஆகவே இந்த உறுப்புகள் சொல்வதை நான் மீண்டும் எடுத்துரைக்க விரும்புகிறேன். இந்தியாவிலிருந்து பாகிஸ்தானுக்குச் சென்று குடியேறியவர்கள் தொடர்பான வழிவகைகளின்படி 1947 மார்ச்சு முதல் நாளுக்குப் பிறகு இந்தியாவை விட்டுச் சென்றுள்ள எவரும் ஒரு சிறிய விதிவிலக்கு நீங்கலாக - இந்திய குடிமக்கள் அல்லவென்று அறிவிக்கப்பட்டுள்ளனர். இதனை மிகக் கவனமாகப் புரிந்து கொள்ள வேண்டியிருக்கிறது என்று கருதுகிறேன். நாம் தெளிந்துரைத்திருப்பது பொதுவான அனைத்தளாவிய கொள்கையாகும். இந்தக் கொள்கையைத் தெளிந்துரைக்க வேண்டியிருப்பது ஏனென்றால், பிறப்பு வாழ்விட உரிமையை அளிக்கிறது என்ற சர்வதேசச் சட்டத்தின் பேரில், ஒருவர் விண்ணப்பிப்பதன் வாயிலாகவோ, வேறு ஏதேனும் ஒரு வழிமுறையைக் கொண்டோ, ஒருவகையான அருட்பேரினாலோ எவ்வகைத் தனி முயற்சியினாலும் பிறப்பிடத்தின் வாழ்விட உரிமை என்பதை ஈட்ட வேண்டியதில்லை. வாழ்விட உரிமையின் அடிப்படை பிறப்பைச் சார்ந்தது. இந்தியாவில் பிறந்தாலும், இந்தியாவை விட்டு வெளியேறியவர்கள் பாகிஸ்தானிற்குச் சென்றிருப்பினும் சர்வதேசச் சட்டத்தின் அடிப்படையில் தங்கள் பிறப்பிடத்தின் வாழ்விட உரிமை அப்படியே இருப்பதாக இப்போதும் கூறிக்கொள்ளக்கூடும் என்று கருதப்பட்டது. இப்படி வாதிடும் வாய்ப்பேதும் அவர்களுக்கிருக்கக் கூடாது என்பதன் பொருட்டு மார்ச் முதல் நாளுக்குப் பிறகு பாகிஸ்தானுக்கு சென்றுள்ள எவரும் இந்தியாவில் தன் குடியுரிமையை! இழந்துவிடுகிறார் என்பதைத் தெட்டத் தெளிவாக்கிவிடுவது விவேகம் என்று கருதப்படுகிறது - மார்ச்சு முதல் நாளை நாம் வேண்டுமென்றேதான் எடுத்துக் கொண்டிருக்கிறோம் என்பதை நீங்கள் அனைவரும் அறிவீர்கள். ஏனென்றால் அந்த நாளில் தான் கலவரங்கள் தொடங்கின. மக்கள் வெளியேற்றம் ஆரம்பமாயிற்று. இக்கலவரங்களின் விளைவாக பாகிஸ்தானில் நிரந்தரமாக வசிக்கும் நோக்கத்துடன் அங்கு சென்ற எவரும் இந்தியாவில் தனது குடியுரிமையை இழந்துவிடுகிறார் என்று நாம் அனுமானம்

செய்து கொண்டால் சர்வதேச நீதிக் கோட்பாடு எதையும் மீறிய தாகாது என்று கருதினோம். இந்த இரண்டுக்கும் வழிவகை செய்வதற் காகத்தான் இந்த இயல்பான அனுமானத்தை ஒரு சட்ட விதியாக மாற்றி, மார்ச்சு முதல் நாளுக்குப் பிறகு பாகிஸ்தானுக்குச் சென் றிருக்கிற எவரும் தனக்கு இந்தியாவில் இன்னமும் வாழ்விட உரிமை இருக்கிறது என்று கூற உரிமையிருக்காது என்று விதித்தோம். வாழ்விட உரிமை குடியுரிமையில் ஒரு முக்கிய அங்கமாக இருக்கிறது என்று சொல்கின்ற உறுப்பு 5இன்படி பாகிஸ்தானிற்குச் சென்றிருக் கின்றவர்கள் தங்களது வாழ்விட உரிமையையும் குடியுரிமையை யும் இழந்து விட்டனர்.

நான் இப்போது ஒரு விதிவிலக்குக்கு வருகிறேன். இந்தியாவை விட்டு பாகிஸ்தானுக்குச் சென்று, பிறகு இந்தியாவுக்குத் திரும்பி வந்திருப்பவர்களும் உண்டு. சரி, அவ்விடத்தும் கூட இந்தியாவுக்குத் திரும்பி வருகிற எவரும் சில குறிப்பிட்ட தனி நிலைமைகளை நிறைவு செய்யாவிட்டால் ஒரு குடிமகனாகக் கருதப்படுவதற்கில்லை என்பதுதான் நமது விதி. பாகிஸ்தானுக்குப் போவதும் இந்தியா வுக்குத் திரும்பி வருவதும் நாம் வகுத்துள்ள பொது விதியில், அதாவது இப்படிப்பட்டவர் ஒரு குடிமகனாக மாட்டார் என்பதில் எவ்வித மாற்றமும் செய்வதில்லை. விதி விலக்கு இதுதான்: என் மதிப்பிற் குரிய நண்பர் திரு. என். கோபாலசாமி அய்யங்கார் சொன்னது போல், இந்திய அரசுக்கும் பாகிஸ்தான் அரசுக்கும் இடையிலான பேச்சுவார்த்தைகளின்போது இரு அரசுகளும் ஒருவித ஏற்பாட் டுக்கு வந்தன. இதன்படி இந்திய அரசு இந்தியாவிலிருந்து பாகிஸ் தானுக்குச் சென்ற குறிப்பிட்ட சிலர் இந்தியா திரும்புவதற்கு இசைவுதர ஒப்புக்கொண்டது. தற்காலிகப் பயணிகளாகவோ வணிகர்களாகவோ அல்லது நோயுற்ற உறவினரை பார்க்க வருவது போன்ற வேறு ஏதேனும் தற்காலிக நோக்கத்திற்காகவோ திரும்பிவர அவர்களை அனுமதித்தது மட்டுமல்லாமல் இந்தியா விற்குத் திரும்பி வந்து நிரந்தரமாகக் குடியேறி நிரந்தரமாகவே இந்தியாவில் இருந்து வருவதற்கும் வெளிப்படையாக இசைவளித் தது. இப்படிப்பட்டவர்கள் இப்போதும் இந்தியாவில் இருக்கிறார்கள். ஆகவே கேள்வி இதுதான்: இந்த உறுப்பில் நாம் தெளிந்துரைத்திருப் பதாக நான் சொல்லியிருக்கும் விதிக்கு, அதாவது 1947 மார்ச்சு முதல்

நாளுக்குப் பிறகு இந்தியாவிலிருந்து பாகிஸ்தானுக்குச் சென்றிருக்கிற எவரையும் அனுமதிப்பதில்லை என்ற விதிக்கு ஒரு விலக்கு வேண்டுமா, கூடாதா? ஒருவர் தனது பழைய வாழ்விடத்திற்குத் திரும்புவதற்கும், அங்கேயே நிரந்தரமாகக் குடியமர்வதற்கும் இசைவளிப்பதாக அரசு உறுதி கொடுத்திருக்கும்போது குடிமகனாகும் உரிமைத்தகவை அவரிடமிருந்து பறித்துக் கொள்வது சரியல்ல என்று கருதப்பட்டது; என்னைப் பொறுத்தவரை அப்படிக் கருதியதுதான் சரி. என் நண்பர் திரு. கோபால்சாமி அய்யங்கார் சொல்லியிருப்பது போல் இந்த வகைப் பிரிவுக்கு உட்பட்டவர்களின் தொகை - இந்துக்களும் முஸ்லீம் களுமாக நமக்குள்ள மிகப் பெரிய மக்கள் தொகையைக் கவனத்தில் கொண்டால் மிகச் சிறியதே; இரண்டாயிரத்திற்கும் மூவாயிரத்திற்கும் இடையில்தான் இருக்கும். இவர்களைச் சரியாகவோ தவறாகவோ நமது அரசுதான் இங்கு நிரந்தரமாக வசிப்பதற்காகப் பாகிஸ்தானிலிருந்து வந்துவிட அனுமதித்தது என்ற நிலையில், இவர்கள் இந்தச் சிறப்புரிமையைப் பெற அனுமதிக்கக் கூடாது என்று நாம் இப்போது சொன்னால் அது பெரிதும் குரோதமாகத் தெரியும், நம்பிக்கை மீறலாகத் தெரியும் என்பது என் கணிப்பு. இசைவாணை முறையை இனிமேல் தொடர விடாமல் இந்திய அரசாங்கத்தைத் தடுப்பதற்கு ஒரு சட்ட முன்வடிவைக் கொண்டுவர இந்த அவைக்கு முழு உரிமையுண்டு. அது இந்த அவையின் உரிமைக்கும் அதிகாரத்திற்கும் உட்பட்டது. ஆனால் இங்கு இல்லம் அமைத்து வாழ்வதற்காக நமது அரசே கொடுத்த வாக்குறுதியின் பேரில் வந்திருக்கிற இவர்களுக்கு - நான் முன்பே கூறியதுபோல் சிறு தொகையினரான இவர்களுக்கு - குடியுரிமை மறுக்கப்பட வேண்டும் என்று இந்த அவை கூறுமானால், அது முறையாகவோ பொது மனசாட்சி என்று நான் குறிப்பிடுவதற்கு ஏற்பவோ செயல்படுவதாக இருக்குமென நான் கருதவில்லை. ஆகவே ஐயா, இந்த உறுப்புகளுக்கு எதிராக முன் வைக்கப்பட்ட குற்றவிமர்சனத்தில் சாரம் ஏதுமிருப்பதாக நான் கருதவில்லை. இவற்றை இப்போதுள்ளவாறே அவை ஏற்றுக்கொள்ளும் என்று நம்புகிறேன்.

## பிரிவு 291

## இந்திய அரசாங்கச் சட்டம், 1935 (திருத்தம்) சட்ட முன்வடிவு

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** துணைத் தலைவர் அவர்களே, குறிப்பிட்ட இந்தச் சட்ட முன்வடிவு, அதிலும் குறிப்பாக இதன் கூறு 4 செய்ய எண்ணுவது குறித்துப் பெருமளவில் தவறான புரிதலே காணப்படுகிறது என்பதை நான் இதுவரை செவிமடுத்த பேச்சுகளிலிருந்து அறிகிறேன். இது சரியாக என்ன செய்வதை நோக்கமாக கொண்டது என்பதை எடுத்த எடுப்பிலேயே அவைக்குச் சொல்வது விரும்பத்தக்கது என்று கருதுகிறேன்.

இந்த அவையைச் சரியான மனநிலைக்குக் கொண்டுவரும் பொருட்டு எவரையும் பொல்லாங்கு சொல்வதற்காக அல்ல - சுதந்திரச் சட்டத்தையொட்டி மாற்றி எழுதப்படுவதற்கு முன் செயல்பாட்டில் இருந்த இந்திய அரசாங்கச் சட்டத்தின் பிரிவு 291இன் சொல்லமைப்பை அவையின் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். அந்த பிரிவு 291இன் ஒரு சில வரிகளை மட்டுமே இப்போது படிக்கிறேன்.

> "இங்கு இனிமேல் குறிப்பிடப்படும் செய்திகள் தொடர்பாக இந்தச் சட்டத்தினால் வழிவகை செய்யப்படாத வரையில் மாட்சிமை தங்கிய மன்னர் (மாட்சிமை தங்கிய மன்னர் என்ற இந்தச் சொற்களுக்கு அழுத்தம் கொடுக்க விரும்புகிறேன்) அந்தச் செய்திகள் தொடர்பாக அல்லது அவற்றில் எந்தவொன்று தொடர்பாகவும் அவ்வப்போது வழிவகை செய்யலாம்..."

முதலில் அவையின் கவனத்திற்கு நான் கொண்டுவர விரும்புவது இதுதான்: இந்தச் சட்டமுன்வடிவின் கூறு 4இல் (அ) முதல் (ஒ) முடியப் பட்டியலிடப்பட்டுள்ள செய்திகள் சரியாகப் பழைய பிரிவு 291இல் பட்டியலிடப்பட்டுள்ள அதே செய்திகள்தாம். ஆகவே பழைய பிரிவு 291இல் அடங்கிய வழிவகைகளில் இந்த கூறு 4 எந்த அடிப்படையான மாற்றத்தையும் செய்யவில்லை என்பதை எடுத்த எடுப்பிலேயே புரிந்துகொள்ள வேண்டும். இந்தச் சட்ட முன்வடிவில் உருக்கொடுக்கப்பட்டவாறு புதிய பிரிவு 291இன் வழிவகைகள் ஆளுநருக்கு (கவர்னர்-ஜெனரல்) அளிக்கப்போகும் அதிகாரங்களும் பழைய பிரிவு 291 மாட்சிமை தங்கிய மன்னருக்கு அளித்த

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 18 1949, பக்கம் 465 -68.

அதிகாரங்களும் ஒன்றுதான். (மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர்: இல்லை.) ஒவ்வொருவருக்கும் இப்போது இது தெளிவாகியிருக்கும் என்று நான் நம்புகிறேன்; இதுகுறித்து ஐயம் ஏதுமிருக்க முடியும் என்று நான் கருதவில்லை; ஏனென்றால் இந்தச் சட்ட முன்வடிவிலும் பழைய பிரிவு 291இலும் இடம்பெற்றுள்ள வெவ்வேறு கூறுகளையும் ஒப்பு நோக்குகிற எவருக்கும் ஐயங்கள் அனைத்தும் விலகி ஓடிவிடும்.

ஆகவே, நாம் இப்போது தலைமை ஆளுநருக்கு அதிகார மளிப்பது ஏன் என்ற கேள்வி கேட்கப்படலாம். இடர்ப்பாடு என்று சொல்லக் கூடுமானால் இதுதான்: 1935 ஆம் ஆண்டின் இந்திய அர சாங்கச் சட்டம் சுதந்திரச் சட்டத்தையொட்டி மாற்றி எழுதப்பட்ட போது எப்படியோ ஒரு பிழை நேர்ந்துவிட்டது என்பது என் கருத் தாகும்; அந்தப் பிழை என்னவென்றால், முன்பு மாட்சிமை தங்கிய மன்னருக்கு அளிக்கப்பட்ட இந்த அதிகாரம், தர்க்க முறையாகச் சொன்னால், தலைமை ஆளுநருக்குக் கைமாற்றித் தரப்பட்டிருக்க வேண்டும். ஏனென்றால் தன்னாட்சிக் குடியேற்றச் சட்டத்தின்படி தலைமை ஆளுநரே மாட்சிமை தங்கிய மன்னரின் இடத்திற்கு வந்தார். ஆனால் நான் முன்பே சொன்னதுபோல் வாய்ப்புக்கேடாக என்ன நிகழ்ந்தது என்றால், இந்தப் பிரிவு 291ஐ மாற்றி எழுதுகையில் நாம் இப்போது தலைமை ஆளுநருக்கு அளிக்கின்ற அதிகாரம் வட்டாரச் சட்டமன்றத்திற்கு அளிக்கப்பட்டது; மாற்றி எழுதப்பட்ட அந்தப் பிரிவு 291ஐ படிக்கிறேன். இதன்மீது வாதம் பண்ணிக் கொண்டிருக் கிற என் நண்பர்கள் மாற்றி எழுதப்பட்ட இப்பிரிவைப் படிக்க வேண்டு மாய்க் கேட்டுக் கொள்கிறேன். அது இப்படிச் சொல்கிறது:

> "மாகாணச் சட்டமன்றம் தொடர்பான இந்தச் சட்டத்தில் இங்கு குறிப்பிடப் படும் செய்திகள் தொடர்பாக வழிவகை செய்யப்படாத வரையில், அந்தச் செய்திகள் தொடர்பாக அல்லது அவற்றில் எந்தவொன்றின் தொடர்பாகவும் அந்தச் சட்டமன்றத்தின்சட்டத்தினால் வழிவகை செய்யப்படலாம்..."

அது ஒரு பிழைதான் என்று இப்போது கண்டுபிடிக்கப் பட்டது. உண்மையாகக் கூறினால் அக்கட்டத்தில் இப்பிரிவு மாற்றி எழுதப்பட்டபோது அந்த அதிகாரங்கள் தலைமை ஆளுநருக்கு வழங்கப்பட்டிருக்க வேண்டும்; ஏனென்றால் பிரிவு 291இன் வழிவகைகளின்படி அந்த அதிகாரங்கள் மாட்சிமைதங்கிய மன்னரிடம் அளிக்கப்பட்டனவே தவிர வட்டாரச் சட்டமன்றம் எதனிடமும் அளிக்கப்படவில்லை. இந்தச் சட்ட முன்வடிவைக் கொண்டு நாம் செய்வது மாற்றி எழுதப்படாத பிரிவு 291இன்படி நிலவிய பழைய

*நிலையை மீட்டமைப்பதே தவிர வேறல்ல. ஆகவே அரசியல் நோக்கங்களுக்காக அரசமைப்பை நிலைகுலையச் செய்யும் பொருட்டு ஒரு வகையான ஆழ்ந்த சூழ்ச்சித் திட்டம் உள்ளது என்று இந்தப் பேரவையின் உறுப்பினர் எவரும் சுமத்தியுள்ள குற்ற விமர்சனம் எதுவும் எவ்வகையிலும் தேவையற்றது என்பதைப் பணிவுடன் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்: நாம் செய்ய முயலுவதெல்லாம் அப்போது நடந்துவிட்ட ஒரு பிழையைச் சரிசெய்வதே.*

*அடுத்த பிரச்சினைக்கு, அதாவது ''சட்டமன்ற அவை அல்லது அவைகளின் இயைபு'' என்ற சொற்களைச் சேர்ப்பது தொடர்பான பிரச்சினைக்கு வருகிறேன். நான் ஒப்புக்கொள்கிறேன்........*★

**டாக்டர் பி.எஸ். தேஷ்முக்:** ஐயா, நான் ஒரு கேள்வி கேட்க லாமா? ''இங்கு இனிமேல் குறிப்பிடப்படும் செய்திகள் தொடர்பாக இந்தச் சட்டத்தினால் வழிவகை செய்யப்படாத வரையில்'' என்ற சொற்களை மாற்றியமைப்பது இந்தச் சொற்களை விட்டுவிடுதல், இந்த வழிவகைகளைப் பொருந்தச் செய்தல்... இல்லையா........?

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** *அதேயேதான் நான் விளக்கி சொல்லிக் கொண்டிருக்கிறேன். நான் முன்பே சொன்னது போல் மாற்றி எழுதப்படாத பழைய உறுப்பு 291க்கும் முன்மொழியப் படும் புதிய கூறுக்கும் இடையில் இப்போது காணப்படும் ஒரே வேறுபாடு இதுதான்: சட்டமன்றத்தின் இயைபு தொடர்பான வழி வகைகளில் மாற்றம் செய்திடத் தலைமை ஆளுநருக்கு அதிகார மளிக்க இந்தப் புதிய உறுப்பைக் கொண்டு முன்மொழியப்படுகிறது. இது ஒரு மாற்றம் என்பதை நான் ஏற்றுக்கொள்கிறேன்.*

**டாக்டர் பி.எஸ். தேஷ்முக்:** இதில் 5, 6 ஆகிய அட்டவணை கள் அடங்கும்.

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** *ஆம், அப்படியே! அது உண்மைதான். ஒரு மாற்றம் செய்யப்படுவதை அட்டியின்றி ஒப்புக்கொள்கிறேன். நாம் அம்மாற்றத்தைச் செய்ய வேண்டியதேன் என்பதே இப்போது கேள்வி. இயைபை மாற்றுவதற்கே கூடத் தலைமை ஆளுநருக்கு அதிகாரம் வழங்கும் பொருட்டு நாம் மாற்றம் செய்ய*

---

★ புள்ளிகள் குறுக்கீட்டைக் காட்டுகின்றன.

வேண்டியிருப்பதன் காரணத்தை நம்மைச் சூழ்ந்திருக்க நிலைமை யிலிருந்து காணவேண்டும். பிரிவினையின் காரணமாக மக்கள் தொகையில் கணிசமான இடப்பெயர்ச்சி நிகழ்ந்துள்ளது என்பது மதிப்பிற்குரிய உறுப்பினர்களுக்கு நினைவிருக்கும். கிழக்கு பஞ்சாபின் மக்கள் தொகை அசையா நிலையில் இல்லை என்பது நிச்சயம். அகதி கள் வந்து கொண்டும் போய்க் கொண்டுமிருக்கிறார்கள். ஏப்ரல் முதல் நாளில் மக்கள் தொகை அவ்வளவு அதிகமாயிருந்தது. ஆறுமாதம் கழித்து அது அறவே வேறாய் இருக்கலாம். இதேபோல் மேற்கு வங்காளத்தையும் வேறு பல மாகாணங்களையும் பொறுத்தவரை அங்கெல்லாம் இந்திய அரசினர் தமது மறுவாழ்வுத் திட்டத்தின்படி அகதிகளை ஏற்றுக் கொண்டுள்ளனர், அல்லது அகதிகள் தாங்க ளாகவே விரும்பி ஒரு பகுதியிலிருந்து வேறு பகுதிக்குப் பயணம் செய் துள்ளனர். 5ஆவது, 6ஆவது அட்டவணைகளில் அப்போது குறித் துரைக்கப்பட்ட தொகைகளுக்கும் இப்போதைய மக்கள் தொகைக் கும் உண்மையில் எத்தொடர்பும் இல்லாமல் போய்விட்டது என்பதை நாம் அறிந்துள்ளபோது சட்டமன்றத்திலான எண்ணிக்கைகள் தொடர் பாக அந்த அட்டவணைகளில் அடங்கியுள்ள வழிவகைகள் இருந்த வாறே இருந்துவர அனுமதிக்க முடியாது என்பது கண்கூடு. ஆகவே மக்கள் தொகையின் இடப்பெயர்ச்சியைக் கணக்கில் கொள்ள வேண்டும் என்பதற்காகத்தான் சட்டமன்றத்தின் இயைபு குறித்துச் சொல்கின்ற அட்டவணைகளில் கூட மாற்றம் செய்திடத் தலைமை ஆளுநருக்கு அதிகாரம் அளிக்கப்படுகிறது.

அவை அல்லது அவைகளின் இயைபு தொடர்பாக ஆணை பிறப்பிக்கும் இந்தக் கூடுதல் அதிகாரத்தை வழங்குவதன் நோக்கத்தை என் மதிப்பிற்குரிய நண்பர்கள் இப்போது புரிந்து கொள்வார்கள் என்று நம்புகிறேன். பாதிக்கப்பட்ட மாகாணங்களில் வெவ்வேறு சட்டமன்றங்களின் வலிமையை அந்த மாகாணங்களிலுள்ள மக்கள் தொகைக்குப் பொருத்தமாக மாற்றியமைக்கும் ஆணை பிறப்பித்திட தலைமை ஆளுநரை அனுமதிப்பதே அந்நோக்கமாகும். தீயநோக்கம் ஏதுமில்லை.

**டாக்டர் பி.எஸ். தேஷ்முக்:** இந்த நிலையைத் திருத்தியமைக்க முழுமையாக ஈராண்டுகள் உங்களுக்கு இருந்தன.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அது வேறு செய்தி. இந்தப் புதிய கூறினைக் கொண்டு இந்த வழிவகைகள் அறிமுகம்

செய்யப்படுவது ஏன் என்பதை மட்டுமே நான் விளக்கிச் சொல்கிறேன்.

மற்ற வழிவகைகள் மூலப் பிரிவு 291இல் அடங்கியிருப்பனவற்றின் மறுவார்ப்புகளே தவிர வேறல்ல என்று நான் கூறியிருக்கிறேன். அடாவடியான நோக்கத்திற்காகவோ தேவையற்ற நோக்கத்திற்காகவோ இந்த அதிகாரம் எடுத்துக்கொள்ளப்படவில்லை; அல்லது இதனை உண்மையான நோக்கத்திற்காக அல்லாமல் வேறு எதற்காகவும் பயன்படுத்தும் எண்ணமுமில்லை. ஆகவே இந்த நிலைமைகளைக் கருத்தில் கொண்டு நான் பணிந்துரைப்பது என்னவென்றால், மூலப் பிரிவில் மாட்சிமை தங்கிய மன்னருக்கு அளிக்கப்பட்டிருந்த இந்த அதிகாரங்களை அவருக்கு வாரிசாக வரும் தலைமை ஆளுநருக்கு வழங்கிடும் கண்ணோட்டத்திலும் சரி, இயைபை மாற்றும் கூடுதல் அதிகாரத்தை அவருக்கு அளித்திடும் கண்ணோட்டத்திலும் சரி, கூறு 4 என்பது முழுக்க முழுக்க நியாயமானதொரு முன்மொழிவே ஆகும். ஏனென்றால் வெவ்வேறு மாகாணங்களிலும் எண்ணிக்கையின் அணிவகுப்பு 1947 ஆகஸ்டு 15 இலிருந்து மாறியுள்ளது. குறிக்கோள்களும் காரணங்களும் பற்றிய அறிக்கையில் ஒரு பிழை நேரிட்டிருப்பதாகவே உணருகிறேன். அங்கு மேற்கு வங்காளம் குறிப்பாக சுட்டப்பட்டிருப்பது வருத்தத்திற்குரியது. இந்தக் கூறு ஒரு பொது வழிவகையாகப் பயன்படும் நோக்கத்துடன் வகுக்கப்பட்டுள்ளது, இதனைத் தலைமை ஆளுநர் எந்தவொரு மாகாணம் தொடர்பாகவும், எந்தவொரு பிரச்சினையையும் சரிப்படுத்துவதற்குப் பயன்படுத்தலாம், குறிப்பாக மேற்கு வங்காளம் தொடர்பாகத்தான் என்றில்லை என்பதை அறுதியிட்டுரைக்க விரும்புவேன். நேரிட்டிருக்கக்கூடாத ஒரு பிழை எப்படியோ நேரிட்டு விட்டதாக நினைக்கிறேன். அவையின் உறுப்பினர்கள் மேற்கு வங்காளத்தைக் குறிப்பாக சுட்டுகிற அந்தக் குறிப்பிட்ட கூறின் அந்தக் குறிப்பிட்ட சொல்லமைப்பை எடுத்து வைத்துக் கொண்டு, அரசுக்குக் கெடுநோக்கு இருப்பதாகவும், மேற்கு வங்காளத்திலுள்ள சட்டமன்றத்தின்பால் ஒரு வகையான தீய உள்நோக்கம் கொண்டிருப்பதாகவும் அரசைக் குற்றஞ்சாட்டுகிறார்கள். முன்பே சொன்னேன், அப்படியெல்லாம் ஒன்றுமில்லை. இந்தக் கூறுகள் பொதுப்படையானவை; இவற்றை மேற்கு வங்காளத்தில் பயன்படுத்தும்படியான நிலைமை தோன்றினால் பயன்படுத்தலாம். எனது பம்பாய் மாகாணத்துக்கும் அவற்றைப் பயன்படுத்தலாம்; எப்படியும் அங்கு இன்று இத்தகைய நிலைமை ஏதும் காணப்படவில்லை எனலாம். ஆகவே வாய்ப்புக்

கேடான அந்த அறிக்கையிலிருந்து - அப்படி நான் அதனைக் குறிப் பிடலாம் என்றால் - இந்தக் கூறினைப் பொறுத்தவரை எவ்வித மறைமுகப் பேரமும் இருப்பதாக எந்த முடிவுக்கும் வந்துவிடக் கூடாது.

**திரு. சுரேஷ் சந்திர மஜூம்தார்** (மேற்கு வங்காளம்: பொது): ''மேற்கு வங்காளம்'' என்ற சொற்களை விட முடியாதா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** குறிக்கோள்களும் காரணங்களும் பற்றிய அறிக்கை சட்டத்தின் ஒரு பகுதியல்ல என்றும், ஆகவே குறிக்கோள்களும் காரணங்களும் பற்றிய அறிக்கையில் சொல் அல்லது கூறு அல்லது வாக்கியம் எந்தவொன்றையும் நீக்குவதற் காகத் திருத்தம் ஏதும் முன்மொழியப்பட முடியாது என்றும் நான் என் மதிப்பிற்குரிய நண்பர்களுக்குச் சொல்லியிருக்கிறேன். இச்சட்ட முன்வடிவு சட்டமான உடனே குறிக்கோள்களும் காரணங்களும் பற்றிய அந்த அறிக்கை குப்பைக் கூடையில் வீசப்படும். இது முகப் புரையிலிருந்து வேறுபட்டதாகும். அவையின் உறுப்பினர்கள் முகப் புரையில் கவனம் செலுத்த வேண்டுமென விரும்புகிறேன். அங்கே மேற்கு வங்காளம் தொடர்பான இத்தகைய குறிப்பேதுமில்லை. ஆகவே இந்தக் குறிப்பிட்ட கூறினில் சர்ச்சை செய்வதற்கு எதுவு மில்லை என்பது எனது பணிவான கருத்தாகும்.

முதலாவதாக 1935 ஆம் ஆண்டின் இந்திய அரசாங்கச் சட்டத் தில் இருந்தபடி, மாற்றியெழுதப்படாத நிலையில் பழைய வழி வகையை இது மீட்டமைக்கிறது. இரண்டாவதாக, மாகாணங்களில் மாறியிருக்கின்ற நிலையின் காரணத்தால் வழங்கத் தேவைப்படுகிற அதிகாரத்தை வழங்குவதற்கு முன்மொழிகிறது.

**மாண்புமிகு உறுப்பினர் ஒருவர்:** ஐயா, பிரச்சினையை இப்போது வாக்கெடுப்புக்கு விட நான் முன்மொழிகிறேன்.

**திரு. எச்.வி. காமத்:** ஐயா, ஓர் ஒழுங்குப் பிரச்சினை. டாக்டர் அம்பேத்கர் புதிய பிரச்சினைகளை எழுப்பியுள்ளார், நாங்கள் இவற்றை விவாதிக்க விரும்புகிறோம். நமது விதிகளில் 33 ஆவது விதியின்படி போதிய விவாதம் நடைபெறவில்லை என்று நீங்கள் முடிவு செய்யலாம்; ஆகவே முடித்து வைப்பதற்கான இந்த முன் மொழிவை நீங்கள் ஏற்க மறுக்கலாம்.

**டாக்டர் பி.எஸ். தேஷ்முக்:** ஆனால் டாக்டர் அம்பேத்கர் இத்துறைக்குப் பொறுப்பு வகிக்கும் அமைச்சரல்ல.

**திரு. அவைத் துணைத் தலைவர்:** ஆம், அது அப்படித்தான். இந்தக் கூறு குறித்துப் பேச மதிப்பிற்குரிய உறுப்பினர் காமத் அவர்களுக்கு போதிய வாய்ப்பு இருந்துள்ளது. ஆகவே முடித்து வைப்பதற்கான முன்மொழிவை ஏற்றுக் கொள்கிறேன்.

பிரச்சினை இதுதான்:

''பிரச்சினை இப்போது வாக்கெடுப்புக்கு விடப்படலாம்.''

முன்மொழிவு ஏற்றுக்கொள்ளப்பட்டது.

★ ★ ★

## உறுப்பு 150 (தொடர்ச்சி)

[1]**திரு. அவைத் துணைத் தலைவர்** (திரு. வி.டி. கிருஷ்ணமாச்சாரி): நாம் இன்று உறுப்பு 150இலிருந்து தொடங்குவோம். பழைய வடிவத்தில் இந்த உறுப்பு குறித்து ஒரு விவாதம் நடந்தது என்பதும் மூன்று திருத்தங்கள் முன்மொழியப்பட்ட பின்னர் மறு ஆய்விற்காக அது வரைவுக் குழுவிற்குத் திருப்பியனுப்பப்பட்டது என்பதும் அவைக்கு நினைவிருக்கும். ஒரு புதிய உறுப்பு குறித்து டாக்டர் அம்பேத்கர் இப்போது முன்னறிவிப்பு அளித்திருக்கிறார். அந்த உறுப்பை, பட்டியல் Iஇன் (நான்காவது வாரம்) திருத்தம் எண் 1ஐ முன்மொழியும்படி டாக்டர் அம்பேத்காரை நான் கேட்டுக் கொள்கிறேன்.

**திரு. நசிருதீன் அகமது** (மேற்கு வங்காளம்: முஸ்லீம்): ஐயா, நான் ஓர் ஒழுங்குப் பிரச்சினை எழுப்புகிறேன். நான் இதனை இப்போதே முன்மொழியட்டுமா, அல்லது திருத்தத்தை முன்மொழிந்த பின்னர் முன்மொழியட்டுமா?

**திரு. அவைத் துணைத் தலைவர்:** இப்பொழுதே நீங்கள் அதனை முன்மொழியலாம்.

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 19 1949, பக்கம் 473 -74.

**திரு. நசிருத்தீன் அகமது:** துணைத் தலைவர் அவர்களே, நான் சிறிது காலமாகக் கவனித்துக் கொண்டிருக்கின்ற வரை வரைவுக் குழுவினர் இந்த அவையின் உறுப்பினர்களுக்கு ஆச்சரியத்திற்கு மேல் ஆச்சரியமாகக் கொடுத்து வருகின்றனர். ஒவ்வொரு நாளும் விரிவான தன்மையில் புதிய திருத்தங்கள் வரைவுக் குழுவினால் அவைக்கு அனுப்பப்படுகின்றன. அவை விமானக் குண்டுவீச்சுகள் போல திடீரென்று வருகின்றன.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்** (பம்பாய்: பொது): இதில் ஒழுங்குப் பிரச்சினை எங்குள்ளது?

**திரு. துணைத் தலைவர்:** இந்த அவையில் அனைவரும் தெரிவித்த விருப்பத்திற்கு இணங்கவே டாக்டர் அம்பேத்கரும், வரைவுக் குழுவினரும் இந்தத் திருத்தத்தை அவையின் முன் கொண்டு வந்துள்ளனர் என்பதை மாண்புமிகு உறுப்பினருக்கு நான் நினை வூட்ட விரும்புகிறேன். இதன் காரணமாக இந்த ஒழுங்குப் பிரச் சினையை நான் நிராகரிக்கிறேன். இப்போது டாக்டர் அம்பேத்கர் தமது திருத்தத்தை முன்மொழியும்படி கேட்டுக் கொள்கிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** துணைத் தலைவர் அவர்களே, நான் முன்மொழிவது:

"உறுப்பு 10க்குப் பதிலாகப் பின்வருவதை இடம்பெறச்செய்யலாம்:

சட்டமன்ற மேலவையின் இயைபு

150. (1) சட்டமன்ற மேலவை பெற்றுள்ள ஒரு மாநிலத்தில் அம் மேலவை உறுப்பினர்களின் மொத்த எண்ணிக்கை அம்மாநிலத் தின் சட்டமன்றப் பேரவையில் உள்ள மொத்த உறுப்பினர் எண் ணிக்கையில் கால் பங்கிற்கு மேல் இருக்காது."

ஆனால் ஒரு மாநிலத்தின் சட்டமன்ற மேலவையில் மொத்த உறுப்பினர் எண்ணிக்கை எந்நேர்விலும் நாற்பதுக்குக் குறைவாக இருக்காது.

(2) நாடாளுமன்றம் சட்டம் கொண்டு மற்றபடி வழிவகை செய்யும் வரை ஒரு மாநிலத்தின் சட்டமன்ற மேலவையின் இயைபு இந்த உறுப்பின் கூறு (3)இல் வழிவகை செய்யப்பட்டுள்ளவாறு இருக்கும்.

(3) ஒரு மாநிலத்தின் சட்டமன்ற மேலவையில் உறுப்பினர்களின் மொத்த எண்ணிக்கையில் -

(அ) கூடுமானவரைக்கும் மூன்றில் ஒரு பங்கினர் நகராட்சிகளையும் மாவட்ட கழகங்களையும் நாடாளுமன்றம் சட்டம் கொண்டு குறித்துரைக்கக் கூடிய ஏனைய உள்ளாட்சி அமைப்புகளையும் சேர்ந்த உறுப்பினர்களைக் கொண்ட வாக்காளர் தொகுதிகளால் தேர்ந்தெடுக்கப்படுவர்.

*(ஆ) கூடுமான வரைக்கும் பன்னிரண்டில் ஒரு பங்கினர், மாநிலத்திலுள்ள ஒரு பல்கலைக்கழகத்தில் குறைந்தது மூன்று ஆண்டு காலம் பட்டதாரிகளாக இருந்துள்ளவர்களையும், இத்தகையதொரு பல்கலைக்கழகத்தின் பட்டதாரித் தகுதிக்கு நிகரானதென்று நாடாளுமன்றம் இயற்றிய எந்தச் சட்டத்தினாலும் அல்லது சட்டத்தின்படியும் குறித்துரைக்கப்பட்ட தகுதிக்கூறுகளைக் குறைந்தது மூன்று ஆண்டு காலம் உடையவர்களையும் கொண்ட வாக்காளர் தொகுதிகளால் தேர்ந்தெடுக்கப்படுவர்.*

*(இ) கூடுமானவரைக்கும் பன்னிரண்டில் ஒரு பங்கினர் உயர்நிலைப் பள்ளியின் தரத்திற்குக் குறையாமல் மாநிலத்திற்குள் இருப்பவையும் நாடாளுமன்றம் இயற்றிய எந்தச் சட்டத்தினாலும் அல்லது எந்தச் சட்டத்தின்படியும் குறித்துரைக்கப்படக் கூடியவையுமான கல்வி நிலையங்களில் குறைந்தது மூன்றாண்டு காலம் ஆசிரியப் பணியில் ஈடுபட்டிருப்பவர்களைக் கொண்ட வாக்காளர் தொகுதிகளால் தேர்ந்தெடுக்கப்படுவர்.*

*(ஈ) கூடுமான வரைக்கும் மூன்றில் ஒரு பங்கினர், மாநிலச் சட்டமன்றப் பேரவையின் உறுப்பினர்களால் பேரவை உறுப்பினர் அல்லாதவர்களிடையிலிருந்து தேர்ந்தெடுக்கப்படுவர்.*

*(உ) எஞ்சிய உறுப்பினர்கள் இந்த உறுப்பின் கூறு (5) இல் வழிவகை செய்யப்பட்டுள்ள முறையில் ஆளுநரால் நியமிக்கப்படுவார்கள்.*

*(4) இந்த உறுப்பின் கூறு (3)இன் உட்கூறுகள் (அ), (ஆ), (இ) ஆகியவற்றின்படி தேர்ந்தெடுக்கப்பட வேண்டிய உறுப்பினர்கள் நாடாளுமன்றம் இயற்றிய எந்தவொரு சட்டத்தினாலும் அல்லது சட்டத்தின்படியும் குறித்துரைக்கப்படக் கூடிய ஆட்சிப்பரப்பு சார்ந்த தொகுதிகளில் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். இந்த உட்கூறுகளின்படியும், உட்கூறு (ஈ)இன் படியுமான தேர்தல்கள் விகிதாசாரப் பிரதிநிதித்துவ முறையின்படி ஒற்றை மாற்று வாக்கினைக் கொண்டு நடைபெறும்.*

*(5) இந்த உறுப்பின்கூறு (3) உட்கூறு (2)இன் படி ஆளுநரால் நியமிக்கப்பட வேண்டிய உறுப்பினர்கள் பின்வருவன போன்றவற்றில் தனித்தன்மையான அறிவோ, நடைமுறை அனுபவமோ பெற்றவர்களாய் இருப்பார்கள்:*

*இலக்கியம், அறிவியல், கலை, கூட்டுறவு இயக்கம் மற்றும் சமூகப் பணிகள்.''*

ஐயா, நீங்கள் சொல்லியிருப்பது போல் இந்த உறுப்பு வேறொரு வடிவத்தில் சென்ற முறை அவையின் முன் இருந்தது. அப்போதிருந்த வடிவிலான உறுப்பானது மேலவையின் இயைபு நாடாளுமன்றம் இயற்றிய சட்டத்தினால் குறித்துரைக்கப்படக் கூடியவாறு இருக்கும் என்று மட்டுமே கூறியது. ஒரு மாகாணச் சட்டமன்றத்தின் அரசமைப்பு வழிப்பட்ட கட்டமைப்பின் முக்கியப் பகுதியை இப்படி அணுகுவது முறையாகாது என்றும், மேலவையின் அமைப்பு குறித்து ஏதாவது தூலமாகவும் குறிப்பாகவும் சொல்ல வேண்டும் என்றும் அவை கருதியது. இந்தக் கருத்தைக் கொண்டிருந்த அவை உறுப்பினர்களின் உணர்வுகளைத் தாமும் பகிர்ந்து கொள்வதாக

அரசமைப்புப் பேரவையின் தலைவர் கூறினார்; இப்படிக் குற்ற விமர்சனம் செய்த அந்த உறுப்பினர்களுக்கு இன்றும் கூட ஏற்புடைத்தாகக் கூடிய ஒரு வரைவை முன்வைக்கும் நோக்குடன் வரைவுக்குழு இந்தப் பிரச்சினையை மேலும் பரிசீலிக்கலாம் என்று அவர் யோசனை தெரிவித்தார். இங்கு முன்வைக்கப்பட்டுள்ள வரைவு இரு கண்ணோட்டங்களுக்கும் இடையிலான ஒரு சமரசமே என்பதை மாண்புமிகு உறுப்பினர்கள் பார்ப்பார்கள். இந்த வரைவு வெவ்வேறு மாகாணங்களிலும் மேலவையின் இயைபைத் தூலமாக எடுத்துரைக்கிறது. இது செய்யும் ஒரே ஒரு காரியம் இந்தப் புதிய உறுப்பு 150இல் விதித்தளிக்கப்படும் இயைபை நாடாளுமன்றம் எந்நேரமும் சட்டம் கொண்டு மாற்றலாம் என்றும் வழிவகை செய்வதே ஆகும். இந்த சமரசம் அவைக்கு ஏற்புடையதாயிருக்கும் என்றும் அவை இந்தத் திருத்தத்தை ஏற்றுக்கொள்ளும் நிலையில் இருக்கும் என்றும் நம்புகிறேன்.

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** துணைத் தலைவர் அவர்களே, முன்மொழியப்பட்டிருக்கின்ற திருத்தங்களில் திரு. சர்வதே முன்மொழிந்த திருத்தங்களை ஏற்றுக்கொள்ள அணியமாயிருக்கிறேன். இருக்கின்ற வடிவத்தில் வரைவில் உள்ள உண்மையானதோர் இடர்ப்பாட்டை அவர் சுட்டிக்காட்டியிருப்பதாக நான் கருதுகிறேன். வரைவு கூறுகிறது - 'மாநிலத்திலுள்ள பல்கலைக்கழகம்'. இப்போது பல்கலைக் கழகமே இல்லாத பல மாநிலங்கள் உண்டு என்பது கண்கூடு. என்றாலும் மற்றப் பல்கலைக் கழகங்களில் பட்டம் பெற்ற பட்டதாரிகள் அம்மாநிலத்தில் வசிக்கின்றனர். ஒரு மாநிலத்தில் வசிக்கின்ற ஒரு பட்டதாரி அந்தக் குறிப்பிட்ட மாநிலத்திலுள்ள ஒரு பல்கலைக்கழகத்தின் பட்டதாரியாக இருக்க நேரிடவில்லை என்ற காரணத்தினால் மட்டுமே மேலவைக்கான தேர்தல்களில் பங்கெடுப்பதற்கான அவரது உரிமையை பறித்துக் கொள்ளும் நோக்கம் நிச்சயமாக இல்லை. ஆகவே குறிப்பிட்ட மாநிலத்தில் வசிக்கும் பட்டதாரிகளுக்கு வழிவகுத்துக் கொடுக்கும் பொருட்டு இத்திருத்தம் தேவையானதாயிருக்கிறது என்று நான் கருதுகிறேன்; இதனை ஏற்றுக் கொள்ளும்படி முன்மொழிகிறேன். தகுதிக்கூறுகளையும், தகுதி நீக்கக் கூறுகளையும் விவரிக்க நமக்கு அதிகாரம் அளிக்கிற உறுப்பு 149இன் வழிவகைகளின்படி வசிப்பிடம் ஒரு தகுதிக் கூறாக வரையறுக்கப்படும்

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 19 1949, பக்கம் 490 -91.

என்பதால், 'வழக்கமாக' என்ற சொல் தேவையற்றுப் போகக் கூடும் என்று மட்டுமே நான் சொல்வேன்.

விமர்சனங்களின் மற்றக் கூறுகளைப் பொறுத்தவரை, குறிப் பிட்ட இந்த உறுப்பைச் செம்மந்த சொல்நடையில் குறை கூறியிருப் பவர்கள் தங்களுக்குத் தாங்களோ இந்த அவைக்கோ தொண்டு ஏதும் செய்துவிட்டதாக யானறியேன். இதுகுறித்து ஒருமுறைக்கு மேலாகவே விவாதிக்கப்பட்டிருக்கிறது. மாகாணத்தில் ஓர் இரண்டாம் அவை வேண்டுமா, கூடாதா என்பது விவாதிக்கப்பட்டுவிட்டது. இரண்டாம் அவை வேண்டுமென்ற மாகாணங்கள் அதை வைத்துக்கொள்ள அனுமதிக்கப்பட வேண்டும் என்ற கருத்து ஏற்றுக்கொள்ளப்பட்டு விட்டது. அந்தப் பிரச்சினை விவாதிக்கப்பட்ட நேரத்தில் அந்த உறுப் பினர்களால் கிளப்பப்பட்ட அதே வாதங்களைத் திருப்பி கூறுவதால் நற்பயன் ஏதும் விளைவதாக யானறியேன்.

அவையில் முன்வைக்கப்பட்டிருக்கும் யோசனையின் குறை நிறைகளைப் பொறுத்தவரை இரண்டாம் அவையின் மாற்று அமைப்பு என்னவாக இருக்க வேண்டும் என்பது குறித்து இந்த விவாதத்தில் பங்கெடுத்திருக்கும் எந்த உறுப்பினரிடமிருந்தும் ஆக்கவழிப்பட்ட யோசனை ஒன்றே ஒன்று கூட வரக் கண்டேனில்லை. இது ஒரு பய னுள்ள வழிவகை என்றோ அல்லது ஆபத்தான வழிவகை என்றோ சுட்டிக்காட்டுவதற்காக இங்கும் அங்குமாகத் துண்டு துணுக்கள் எடுத்தாளப்பட்டும், குறைகள் சொல்லப்பட்டுமுள்ளன. நன்று, இந்தப் பிரச்சினையில் இரு கருத்துகள் இருக்க முடியும் என்று கூற நான் அணியமாயிருக்கிறேன். நான் கொண்டிருக்கும் கருத்து அல்லது வரைவுக் குழுவின் கருத்து மட்டுமே இப்பிரச்சினையில் சரியானது என்று கூற நான் அணியமாயில்லை. ஏதேனும் ஒரு வகையான அமைப்புக்கு நாம் வழிவகை செய்ய வேண்டியிருக்கிறது. வழிவகை செய்யப்பட்டுள்ள அமைப்பைக் காட்டிலும் அறிவுக்குகந்ததாகவும் நடைமுறைக்கு ஏற்றதாகவும் வேறு ஒன்றை இப்போதைய நிலைமை களில் எண்ணிப் பார்த்திட முடியாது என்று குறிப்பிட நான் அணிய மாயிருக்கிறேன்.

அடுத்து எழுப்பப்பட்ட இரு வாதக் கூறுகள் இருக்கின்றன; அவற்றில் ஒன்று என் நண்பர் திரு. நாகப்பாவினுடையது. விவசாயத் தொழிலாளர்களின் பிரதிநிதித்துவத்திற்கு வழிவகை செய்யப்பட வேண்டுமென்று அவர் விரும்பினார். மேலவையில் விவசாயத்

தொழிலாளர்களின் பிரதிநிதித்துவத்திற்கு இப்படி எந்த வழிவகையும் தேவைப்படுவதாக எனக்குத் தெரியவில்லை; ஏனென்றால் வயது வந்தோர் வாக்குரிமையின் அடிப்படையில் கீழவை தேர்ந்தெடுக்கப்படும் என்பதைக் கருத்தில் கொண்டால் அந்த அவையில் விவசாயத் தொழிலாளர்களுக்கு மிகப்பெரும் பிரதிநிதித்துவம் இருக்கும் என்பது என் கணிப்பு. எனக்குத் தெரியவில்லை...

**திரு. எஸ். நாகப்பா:** அப்படித்தான் என்றால், நீங்கள் பிரதிநிதித்துவம் வழங்கப்போகும் மற்ற எல்லாப் பிரிவுகளும் கூட கீழவையிலும் பிரதிநிதித்துவம் பெறுமே!

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** மிகவும் வேறான காரணங்களுக்காக அவர்களுக்கு வழிவகை செய்யப்படுகிறது. ஆனால் விவசாயத் தொழிலாளர்களுக்குக் கீழவையில் போதுமான வழிவகை செய்யப்படும்.

மேலவையில் அட்டவணைச் சாதிகளுக்கு தனிப் பிரதிநிதித்துவம் இருக்க வேண்டும் என்ற பிரச்சினையை என் நண்பர் திரு. முனிசாமிப்பிள்ளை ஒரு திருத்தத்தின் வழியாகக் கிளப்பினார். இப்போது வரைவுக் குழுவைப் பொறுத்தவரை இந்தப் பிரச்சினையை ஆராய்ந்த ஆலோசனைக் குழுவின் அறிக்கையினால் வழிநடத்தப்படுகிறது என்பதை அவருக்குச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். 1947 ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதத்தில் அவையில் முன்வைக்கப்பட்ட ஆலோசனைக் குழுவின் அறிக்கையில் பின்வரும் வழிவகை இடம் பெறுகிறது:

> "(இ) முஸ்லீம்களின் மக்கள் தொகை அடிப்படையில் மைய மற்றும் மாகாணச் சட்டமன்றங்களின் கீழவையில் அவர்களுக்கு இட ஒதுக்கீடு இருக்கும்."
>
> "3. (அ) இந்துச் சமுதாயத்தில் அட்டவணைச் சாதி என்று சுட்டப் பெறுகிறவர்களும் 1935 ஆம் ஆண்டின் இந்திய அரசாங்கச் சட்டத்தில் அட்டவணைச் சாதி என்று வரையறுக்கப்படுபவர்களுமான பிரிவினருக்கும் இங்கு வழிவகை செய்யப்படும் அதே உரிமைகளும் நன்மைகளும் இருக்கும்..."

இதன் பொருள் என்னவென்றால், அட்டவணைச் சாதிகளுக்கான பிரதிநிதித்துவத்திற்கு மைய, மாகாணச் சட்டமன்றங்களின் கீழவைகளில் மட்டுமே உத்தரவாதமளிக்கப்படும்.

இது அரசமைப்புப் பேரவையின் முடிவு ஆதலால், வேறு எந்த முன்மொழிவையும் வரைவுக்குழு ஏற்கத்தகாது எனக் கருதுகிறேன். எவரது உணர்ச்சியையும் புண்படுத்த நான் விரும்பவில்லை என்றாலும், இந்த முடிவுக்கு ஆதரவாக யாரேனும் ஓங்கிக்குரல் கொடுத்தாரென்றால், அது என் நண்பர்

திரு. முனிசாமிப்பிள்ளைதான்; அவர் அப்போது இணங்கி நடக்க ஏற்றுக் கொண்டதுபடி இப்போது மனநிறைவு காணவேண்டும் என்று நினைக்கிறேன்.

**திரு. துணைத் தலைவர்:** டாக்டர் அம்பேத்கர், திருத்தம் எண் 2ஐ நீங்கள் முறையாக விலக்கிக் கொள்ள வேண்டும்.

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** ஆம், நான் அதனை விலக்கிக் கொள்ள வேண்டும்.

பேரவையின் அனுமதியுடன் திருத்தம் விலக்கிக் கொள்ளப் பட்டது.

***(ஆறு திருத்தங்கள் மறுதலிக்கப்பட்டன; டாக்டர் அம்பேத்கரின் திருத்தம் உள்பட 5 திருத்தங்கள் விலக்கிக் கொள்ளப்பட்டன.)***

★ ★ ★

[1]**திரு. துணைத் தலைவர்:** நான் இப்போது திரு. சர்வதேயின் திருத்தத்தை அவையில் வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

பிரச்சினை இதுதான்:

''முன்மொழியப்பட்ட உறுப்பு 150 கூறு (3) உட்கூறு (ஆ)இல் 'ஆட்களைக் கொண்ட' என்ற சொற்களுக்கு முன் 'மாநிலத்தில் வசிக்கின்ற' என்ற சொற்களை சேர்க்கலாம்; 'மாநிலத்தில்' என்ற சொற்களுக்குப் பதிலாக 'இந்திய ஆட்சிப் பரப்பில்' என்ற சொற்களை இடம்பெறச்செய்யலாம்.''

திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

***(திருத்தப்பட்ட வடிவத்தில் உறுப்பு 150 அரசமைப்புச் சட்டத்தில் சேர்க்கப் பட்டது.)***

## பகுதி VIII-A
## உறுப்பு 215-A

[2]***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** ஐயா, பட்டியல் 1, நான்காவது வாரம், எனது திருத்தம் எண் 6ஐ நான் முன்மொழிகிறேன்.

---

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 19 1949, பக்கம் 492.
2. மேற்படி அதே நூல், பக். 492-93.

''பகுதி VIIIக்குப் பிறகு பின்வரும் புதிய விதியை நுழைக்கலாம்:

''பகுதி VIII-A

அட்டவணைப் பரப்புகளும் பழங்குடிப் பரப்புகளும்

(அ) 'அட்டவணைப் பரப்புகள்' என்ற தொடர் மாநிலங்கள் தொடர்பான ஐந்தாம் அட்டவணையின் பத்தி 18க்குப் பின்னிணைப்பாக இலக்கமிட்டுள்ள பட்டியலின் I முதல் VII முடிய உள்ள பகுதிகளில் குறித்துரைக்கப்படும் பரப்புகளைக் குறிப்பதாகும்; அந்தப் பத்தியின் உள்பத்தி (2)இன்படி பிறப்பிக்கப்படும் எந்தவோர் ஆணைக்கும் உட்பட்டு மேற்சொன்ன பகுதிகள் முறையே எந்த மாநிலங்கள் தொடர்பானவையோ அந்த மாநிலங்களுக்கு இது பொருந்தும்.

(ஆ) 'பழங்குடிப் பரப்புகள்' என்ற தொடர் ஆறாம் அட்டவணையில் பத்தி 19க்குப் பின்னிணைப்பாகிய பட்டியலின் I, II ஆகிய பகுதிகளில் குறித்துரைக்கப்படும் பரப்புகளைக் குறிப்பதாகும்; இது அந்த அட்டவணையின் பத்தி 1 உள்பத்தி (3)ன் படி அல்லது பத்தி 17 உள்பத்தி (1) கூறு (ஆ) இன்படி பிறப்பிக்கப்படும் எந்தவோர் ஆணைக்கும் உட்பட்டதாகும்.

தாழ்த்தப்பட்ட மற்றும் பழங்குடியினப் பகுதிகளில் நிர்வாக நடைமுறை

215. B (1) அசாம் மாநிலம் தவிர இப்போதைக்கு முதல் அட்டவணையின் பகுதி I அல்லது பகுதி IIIஇல் குறித்துரைக்கப்படும் எந்தவொரு மாநிலத்திலும் அட்டவணைப் பரப்புகள் மற்றும் அட்டவணைப் பழங்குடிகளின் நிர்வாகத்துக்கும் கட்டுப்பாட்டுக்கும் ஐந்தாவது அட்டவணையின் வழிவகைகள் பொருந்தும்.

(2) ஆறாவது அட்டவணையின் வழிவகைகள் அசாம் மாநிலத்தில் பழங்குடிப் பரப்புகளின் நிர்வாகத்திற்குப் பொருந்தும்.

ஐயா, எனது திருத்தம் மூல உறுப்புகள் 189, 190 ஆகியவற்றை மாற்றீடு மட்டுமே செய்கிறது. நாம் செய்கிற ஒன்றே ஒன்று, உறுப்புகள் 189, 190 ஆகியவற்றில் அடங்கிய வழிவகைகளை வேறொரு தனித்த பகுதிக்கு மாற்றுவதே ஆகும். இடமாற்றத்தின் காரணத்தினால்தான், புதிய பகுதிக்குத் தேவையான தர்க்க வரிசையைப் பெறும் பொருட்டு இந்த உறுப்புகளை மாற்றி எண்ணிடுதல் அவசியமாகியுள்ளது. அற்ப மாற்றங்கள் நீங்கலாக, என்னால் முன்மொழியப்பட்ட 215A, 215B ஆகிய புதிய உறுப்புகளில் சாரமான மாற்றங்கள் எதுவுமில்லை.

* * *

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** பதிலுக்கு எதுவும் சொல்ல வேண்டியிருப்பதாக நான் கருதவில்லை.

---

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 19 1949, பக்கம் 495.

முன்மொழிவு ஏற்றுக்கொள்ளப்பட்டது.

*(பகுதி VIIIA, உறுப்புகள் 215 A, 215 B ஆகியவை அரசமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டன.)*

## உறுப்பு 250

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் முன்மொழிவது:

> "உறுப்பு 250 கூறு (1) உட்கூறு (இ)இல் 'இருப்புப்பாதை' என்ற சொல்லுக்குப் பிறகு ஒரு காற்புள்ளியையும் கடல் என்ற சொல்லையும் நுழைக்கலாம்."

ஐயா, எனது அடுத்தத் திருத்தத்தையும் நான் முன்மொழிகிறேன்:

> "உறுப்பு 250இன் கூறு (2)இல் 'இந்திய வருவாய்கள்' என்ற சொற்களுக்குப் பதிலாக 'இந்தியத் தொகுப்பு நிதி' என்ற சொற்களை இடம்பெறச் செய்யலாம்."

**திரு. நசிருத்தீன் அகமது:** ... சொத்துவரி விதிப்பதற்கான ஒரு சட்ட முன்வடிவு இப்போது சட்டமன்றத்தின் முன் இருக்கிறது. இங்கு நாம் நீண்ட காலமாகவே சட்டமியற்றிக் கொண்டிருக்கிறோம். ஆகவே சொத்து வரி, வாரிசு வரி ஆகிய இரண்டுமே நமக்கு வேண்டும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** 'சொத்துக்கான வாரிசு முறை தொடர்பான வரிகள்' என்று கூறுகின்ற (அ) வாரிசு வரியை உட்படுத்துகிறது. (ஆ) இல் அதை திருப்பி ஏன் சொல்ல வேண்டும்?

**திரு. நசிருத்தீன் அகமது:** இரண்டும் ஒன்று சேர்க்கப்பட்டிருக்கலாம்.

* * *

[2]**திரு. துணைத் தலைவர்:** ... இருக்கட்டும், டாக்டர் அம்பேத்கர் ஏதேனும் கூற விரும்புகிறாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் எதுவும் கூற விரும்பவில்லை.

---

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 19 1949, பக்கம் 499 -500.
2. மேற்படி அதே நூல், பக். 504.

**திரு. துணைத் தலைவர்:** நான் திருத்தங்களை அவையில் வாக்கெடுப்புக்கு விடப்போவதில்லை.

**(மேலே கூறப்பட்ட டாக்டர் அம்பேத்கரின் திருத்தங்கள் இரண்டும் ஏற்றுக்கொள்ளப்பட்டன. மற்றத் திருத்தங்கள் நிராகரிக்கப்பட்டன. திருத்தப் பட்ட வடிவத்தில் உறுப்பு 250 அரசமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.)**

## உறுப்பு 277

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் பணிந்து முன்மொழிவது:

> ''உறுப்பு 277 என்பது உறுப்பு 277இன் கூறு (1) என்று மறு எண்ணிடப்பட லாம், அவ்வாறு மறு எண்ணிடப்பட்ட உறுப்புடன் பின்வரும் கூறு சேர்க்கப் படலாம்:
>
> '(2) இந்த உறுப்பின் கூறு (1)இன்படி பிறப்பிக்கப்படும் ஒவ்வோர் ஆணை யும் அவ்வாறு பிறப்பிக்கப்பட்ட பின் கூடுமான விரைவில் நாடாளுமன்ற அவை ஒவ்வொன்றிலும் முன்வைக்கப்படலாம்.''

இந்த உறுப்பு 277 ஒரு தொடர்விளைவான உறுப்பாகும். குடியரசுத் தலைவர் நெருக்கடி நிலை அறிவிப்பு வெளியிடுவதன் தொடர்பான விளைவுகள் என்னவாக இருக்கும் என்று இது விதிக் கிறது. மாகாணங்களுக்கும் மைய அரசுக்கும் இடையிலான நிதி வழி ஏற்பாடுகள் தொடர்பான வழிவகைகள் நெருக்கடி நிலைக் காலத்தில் குடியரசுத் தலைவரால் ஆணை கொண்டு மாற்றியமைக்கப்பட லாம் என்று இவ்வுறுப்பின் கூறு (1) சொல்கிறது. மாகாணங்களுக் கும் மைய அரசுக்கும் இடையிலான நிதி வழி ஏற்பாடுகளை மாற்றி யமைத்திட வரைமுறையற்ற, முழுமுதலான இந்த அதிகாரத்தைக் குடியரசுத் தலைவருக்கு வழங்குவது சரியல்ல என்றும் நாடாளு மன்றத்திற்கும் இந்தப் பிரச்சினையில் ஒரு பங்கு இருக்க வேண்டும் என்றும் கருதப்பட்டது. ஆகவேதான் உறுப்பு 277 உடன் கூறு (2)ஐச் சேர்க்க இப்போது முன்மொழியப்படுகிறது: ஏற்பாடுகளை மாற்றிக் குடியரசுத் தலைவர் பிறப்பிக்கும் எந்தவோர் ஆணையும் நாடாளு மன்ற அவை ஒவ்வொன்றிலும் முன்வைக்கப்படும் என்று இதனால் வழிவகை செய்யப்படுகிறது. பிரச்சினை நாடாளுமன்றத்தின் முன் வைக்கப்பட்ட பின்னர், நாடாளுமன்றம் சரி என்று கருதக்கூடிய நடவடிக்கையை எடுக்கும்; இதனைக் குடியரசுத் தலைவர் நிறை வேற்றியாக வேண்டும்.

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்** *(பம்பாய்: பொது):* துணைத் தலைவர் அவர்களே, என் மதிப்பிற்குரிய நண்பர் பண்டித குன்ஸ்ரு முன்மொழிந்த திருத்தத்தில் கூடுமான வரை உன்னிப்பாகக் கவனம் செலுத்தியிருக்கிறேன். நான் அவரோடு முழுக்க உடன்பட வில்லை என்று கூறுவதற்காக வருந்துகிறேன். ஏனென்றால் அவரது திருத்தம் பெருமளவுக்குத் தேவையற்றதாகவே எனக்குத் தோன்று கிறது.

மைய அரசுக்கும் மாகாணங்களுக்கும் இடையிலான நிதி வழி உறவுகள் இயல்பு நிலையில் என்னவாக இருக்கப் போகின்றன என்பதை முதலில் தெரிவித்துக் கொள்வோம். இயல்பான போக்கில் மாகாணங்கள் மைய அரசிடமிருந்து பின்வரும் வகைகளில் பணம் பெற்றுவரும் என்பது நாம் ஏற்கனவே நிறைவேற்றியிருக்கிற உறுப்பு களிலிருந்து தெளிவாகிறது என்று நான் கருதுகிறேன்:

(1) உறுப்பு 251இன்படி வருமான வரியின் வரவுகள்;

(2) உறுப்பு 253இன்படி மைய அரசின் சரக்குத் தீர்வைகளில் ஒரு பங்கு;

(3) உறுப்பு 255இன்படி குறிப்பிட்ட சில மானியங்களும் உதவித் தொகைகளும்

சணல் வரி தனி வேறான தன்மையில் இருப்பதாலும், அதற்குச் சட்ட உத்தரவாதம் இருப்பதாலும் நான் அது பற்றிப் பேசவில்லை.

நான் முன்மொழிந்தபடியான உறுப்பின் நோக்கமென்ன என்பதையும் தெரிந்து கொள்வோம். இந்த உறுப்பின் நோக்கம் என்ன வென்றால், ஒரு நெருக்கடி நிலை அறிவிக்கப்பட்டிருக்கும்போது வருமான வரி வரவுகளையும் சரக்குத் தீர்வைகளையும் உறுப்பு 255இன் வழிவகைகளின்படி மைய அரசு வழங்கக்கூடிய மானியங்களை யும் மாற்றி ஒதுக்கீடு செய்திடக் குடியரசுத் தலைவருக்கு அதிகாரம் இருக்க வேண்டும். நான் முன்மொழிந்த வடிவத்தில் இவ்வுறுப்பு இந்த மூன்று வகைகளிலுமானபடி ஒதுக்கீடுகளை மாற்றியமைத்திடக் குடியரசுத் தலைவருக்கு விருப்புரிமை வழங்குகிறது. வரைவுக் குழுவினால் அவையின் முன் வைக்கப்பட்ட வடிவத்தில் வரைவு உறுப்பின் நிலை இதுவே.

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 19 1949, பக்கம் 520-23.

இப்போது என் நண்பர் பண்டித குன்ஸ்ரு தமது திருத்தத்தைக் கொண்டு என்ன செய்ய எண்ணுகிறார்? அவர் சொன்னதை நான் சரியாகப் புரிந்துகொண்டிருந்தால், நான் குறிப்பிட்டுள்ள மூன்று இனங்களில் இரண்டை மாற்றியமைக்க குடியரசுத் தலைவருக்கு முழுமையான விருப்புரிமை வழங்குவதில் அவர் வரைவுக் குழுவுடன் மாறுபடவில்லை, அதாவது சரக்குத் தீர்வையின் வரவுகளிலிருந்தும் உறுப்பு 255இன்படி மைய அரசு வழங்கும் மானியங்களிலிருந்தும் மாகாணங்களுக்கு மைய அரசு செய்யும் எந்த ஒதுக்கீட்டையும் மாற்றி யமைத்திட முழு நிறைவான விருப்புரிமை வழங்க அவர் அணிய மாய் இருக்கிறார். அவர் சொன்னதை நான் சரியாகப் புரிந்து கொண்டிருந்தால் சரக்குத் தீர்வைகளின் வரவுகளிலிருந்தும், மையம் வழங்கும் மானியங்களிலிருந்தும் இயல்பான காலத்தில் மைய அரசு மாகாணங்களுக்குக் கொடுத்தாக வேண்டிய எந்தப் பங்கையும், குடியரசுத் தலைவர் ஆணை கொண்டு அடியோடு ஒழித்துவிட்டால் பண்டித குன்ஸ்ருக்கு இடர்ப்பாடு ஒன்றுமில்லை.

**பண்டித ஹிருதய்நாத் குன்ஸ்ரு** (ஐக்கிய மாகாணங்கள்: பொது): இப்படி எதுவும் நான் சொல்லவே இல்லை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** உங்கள் திருத்தம் வருமான வரிக்கு மட்டுமே. அதைத்தான் நான் சுட்டிக்காட்ட முயன்று கொண்டிருக்கிறேன். சரக்குத் தீர்வைகளின் வரவுகளையோ உறுப்பு 255இன்படி மைய அரசினால் வழங்கப்படும் மானியங்களையோ வேறு எந்த வழிமுறையில் கையாள வேண்டும் என்பது குறித்து நீங்கள் உங்கள் திருத்தத்தின் மூலம் எந்த யோசனையும் தெரிவிக்கவில்லை.

**பண்டித ஹிருதய்நாத் குன்ஸ்ரு:** அந்த வடிவத்தில் எனது திருத்தத்தை நான் அமைத்ததற்கான காரணம் இதுதான்: எந்த வரி வரவுகளின் பகிர்வும் நாடாளுமன்றத்தினால் இயற்றப்பட்ட ஒரு சட்டத்தைச் சார்ந்துள்ள வரையில் அந்த அதிகாரத்தை நாடாளு மன்றத்திடமிருந்து பறிக்க முடியாது. ஆனால் அது குடியரசுத் தலை வருக்குச் சொந்தமில்லை என்றாலும் வருமான வரியைப் பொறுத்த வரை 1935 ஆம் ஆண்டின் இந்திய அரசாங்கச் சட்டம் மாகாணங் களின் முழுப் பங்கையும் ஒரு குறிப்பிட்ட காலத்திற்குள் அவற்றிற்கு மாற்றிக் கொடுக்கத் திட்டமிட்டது; ஒரு நெருக்கடி நிலை இருக்கும் நேர்வில் மாகாணங்களுக்கு மாற்றிக் கொடுப்பதைத் தாமதப்படுத் தவும் இவ்வாறு மாகாணங்கள் தமது முழுப் பங்கையும் பெற்றுக்

கொள்வதற்கான மொத்த கால அளவை நீட்டவும் தலைமை ஆளுநரை அனுமதித்தது. அது மட்டுமே காரணமாக இருந்தது; என் மாண்புமிகு நண்பர் இதிலிருந்து எடுத்துள்ள முடிவு கொஞ்சம் கூட நியாயமற்றதாகும்.

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** அவையில் வைக்கப் பட்டுள்ளவாறு இத்திருத்தத்திலிருந்து மிகவும் இயல்பாகப் பெறப் படும் முடிவை எடுக்க எனக்கு உரிமையுண்டு.

***பண்டித ஹிருதய் நாத் குன்ஸ்ரு:*** மாண்புமிகு உறுப்பினர் என்னை முழுக்க, முழுக்கத் தவறாகவே புரிந்து கொள்கிறார். எனது திருத்தத்தின்படி ஒன்றியச் சரக்குத் தீர்வைகளின் வரவுகளைப் பகிர்ந் தளிப்பதில் மாற்றம் செய்திடக் குடியரசுத் தலைவருக்கு அதிகாரம் ஒன்றும் இருக்காது.

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** மாண்புமிகு உறுப் பினர் தமது திருத்தத்தில் செய்தியைத் தெளிவுபடுத்தவில்லை என்று நான் வருந்துகிறேன். இப்போது அவர் ஒரு புதிய விளக்கம் தரவும் அடிப்படை மாற்றம் செய்யவும் விரும்பினால் அதன் நோக்கம் என்ன என்பது தொடர்பாக எனக்கு நிறைவான முன்னறிவிப்பு தரக்கூடியதாய்த் திருத்தம் இருந்திருக்க வேண்டும். உறுப்புகள் 253, 255 ஆகியவற்றின் வழிவகைகளில் மாற்றம் செய்ய மதிப்பிற்குரிய உறுப்பினர் விரும்புவதைக் காட்டும்படியாகத் திருத்தத்தில் ஏது மில்லை. அது ஒரு பின் யோசனையாக இருக்கலாம்; ஆனால் பின்யோசனைகள் குறித்து நான் சொல்ல முடியாது. அவையில் வைக்கப்பட்ட வடிவத்தில் திருத்தம் குறித்து நான் சொல்ல வேண்டி யிருக்கிறது. ஆகவே நான் திருத்தத்தைப் படிக்கையில் என் விளக்கம் மிகவும் இயல்பானதே ஆகும்.

***பண்டித ஹிருதயநாத் குன்ஸ்ரு:*** மாண்புமிகு உறுப்பினரிடம் நியாயமே இல்லை.

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** இது மதிப்பிற்குரிய உறுப்பினரின் கருத்தாகும். நான் சொல்வது இதுதான்: இப்போது ஏதோ புதிதாக முன்வைக்கப்படுகிறது என்பது என் கணிப்பு.

***பண்டித ஹிருதயநாத் குன்ஸ்ரு:*** மாண்புமிகு உறுப்பினர் நான் சொன்னதைத் திரித்துரைக்கிறார், தெரிந்தே இப்படிச் செய்கிறார்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** மதிப்பிற்குரிய உறுப்பினர் தாமே தமது சிந்தனைகளைத் திரித்துரைத்துக் கொண்டிருக்கிறார். ஆகவே அதனை நான் புரிந்து கொண்டுள்ளபடி சரக்குத் தீர்வையின் வரவுகளையும் மானியத்தையும் திருத்தியமைக்கின்ற அமைப்பு முறையில் என் மதிப்பிற்குரிய நண்பர் மாற்றம் எதனையும் முன்மொழியும் பிரச்சினைக்கே இடமில்லை. நெருக்கடிநிலைக் காலத்தில் வருமான வரி ஒதுக்கீட்டைத் திருத்தியமைக்கும் பிரச்சினையை மட்டுமே அவர் எழுப்பினார். அப்படியும்கூட நான் காண்பது என்ன? நான் மீண்டும் அவரது திருத்தத்தைச் சரியாகப் படித்தால், வருமான வரி ஒதுக்கீட்டை திருத்தியமைக்கும் பிரச்சினையில் குடியரசுத் தலைவருக்கு விடப்படும் விருப்புரிமையை அவர் அடியோடு பறிக்கச் சொல்லவில்லை. அவர் செய்யச் சொல்வதெல்லாம் முந்தைய ஆணையில் கூறப்பட்டவாறு வருமான வரி ஒதுக்கீடு செய்யப்படுதலில் குடியரசுத் தலைவர் ஒரு திருத்தம் செய்வதாக இருந்தால் அப்போது அவர் தம் திருத்தத்தில் சொல்லியுள்ள குறிப்பிட்ட முறையில் குடியரசுத் தலைவர் செயல்பட வேண்டுமாம். அதாவது நான் முன்வைத்த வரைவுக் கூறுக்கும் என் மதிப்பிற்குரிய நண்பர் பண்டித குன்ஸ்ருவின் திருத்தத்திற்கும் இடையிலான ஒரே வேறுபாடு இதுதான்: குடியரசுத் தலைவரின் விருப்புரிமையைப் பொறுத்தவரை அதனை ஒழுங்குமுறைக்கு உட்படுத்தாமல் விட்டு விடக் கூடாது என்பதும், அவர் யோசனை தெரிவிக்கின்ற முறையில் அதனை ஒழுங்குமுறைக்கு உட்படுத்த வேண்டும் என்பதுமே.

இதற்கு எனது விடை இதுதான்: வருமான வரிப் பகிர்வு தொடர்பான வழிவகைகளைத் திருத்தியமைக்கும் அதிகாரத்தைக் குடியரசுத் தலைவர் செலுத்துகையில் வருமான வரியின் வரவுகளை அப்படியே எடுத்துக் கொள்ளும் அளவுக்குத் தற்போக்காக அவர் செயல்படுவார் என்று நம்புவதற்கு காரணம் ஏது? என் மதிப்பிற்குரிய நண்பர் பண்டித குன்ஸ்ரு தமது திருத்தத்தில் தெரிவித்த யோசனையைக்கூட குடியரசுத் தலைவர் ஏற்றுக்கொள்ள மாட்டார் என்று நம்புவதற்கு ஆதாரம் ஏது? ஒதுக்கீட்டின்படி மாகாணங்கள் பெற உரிமையுள்ள மொத்த வரவுகளையும் குடியரசுத் தலைவர் அடியோடு ஒழித்து விடப் போகிறார் என்று அனுமானம் செய்து கொள்வதற்கோ, இப்படித் தற்போக்காகக் கருத்து தெரிவிப்பதற்கோ காரணம் ஒன்றுமில்லை. எப்படியும் குடியரசுத் தலைவர் நியாயமானவராகவே இருப்பார்; மிகக் கணிசமான அளவுக்கு வருமான வரியின் வரவுகள் மாகாணங்களின் வருவாய்களில் ஒரு பகுதியாக அமையவே செய்வதை

அவர் அறிவார். ஒரு நெருக்கடி நிலை இருப்பினும் மாகாணங்களைத் தொடர்ந்து இயங்கச் செய்வது எந்த அளவிற்கு அவசியமானதோ மைய அரசுக்குத் துணை செய்வதும் அதே அளவிற்கு அவசியமானது என்பதையும் அவர் அறிவார்.

ஆகவே, என் நண்பர் பண்டித குன்ஸ்ருவின் திருத்தம் யோசனை தெரிவித்துள்ளவாறு ஒரு குறிப்பிட்ட வழியில் செயல்படும்படி குடியரசுத் தலைவரின் கைகளைக் கட்டிப்போடத் தேவையில்லை என்பதே என் கருத்தாகும். குடியரசுத் தலைவர் மாகாணங்களுடன் கலந்தாலோசித்தோ நிதி ஆணைக்குழு அல்லது வேறு எந்தவொரு வல்லுநர் ஆணையத்துடனும் கலந்தாலோசித்தோ நெருக்கடி நிலைக் காலத்தில் வரி வரவுகளைக் கையாளுவதற்கு வேறு ஏதேனும் ஒரு வழிமுறையைக் கண்டறியக்கூடும். அப்போது அவர் தெரிவிக்கக்கூடிய யோசனை என் நண்பர் பண்டித குன்ஸ்ரு தெரிவிக்கும் யோசனையை விட மிகச் சிறப்பானதாக அமையக்கூடும். ஆகவே ஒரு குறிப்பிட்ட வழியில் செயல்படும்படி குடியரசுத் தலைவரின் கைகளைக் கட்டிப் போடுவதும், அவருக்கே தோன்றக்கூடிய வேறு பல வழிகளில் செயல் படுவதற்கான சுதந்திரம் அல்லது விருப்புரிமையை அவருக்குத் தர மறுப்பதும் பெரும் தவறாகிவிடும் என்று கருதுகிறேன். வரைவுக் குழு செய்ய எண்ணியுள்ளபடி வரைவை நீக்குப்போக்காக விட்டு வைப்பது விவேகமானதாக இருக்கும் என யோசனை சொல்கிறேன். என் நண்பர் பண்டித குன்ஸ்ருவின் திருத்தத்தை ஏற்றுக்கொள்வதால் எந்த நன்மையும் கிடைக்காது.

நான் முன்னரே சொன்னதுபோல், மூல வரைவில் மற்றொரு திருத்தம் செய்துள்ளேன். அது இப்பிரச்சினையை முற்ற முழுக்கக் குடியரசுத் தலைவரின் விருப்புரிமைக்கே விட்டுவிடுகிறது. நாடாளு மன்றம் இதில் எவ்விதப் பங்கும் வகிப்பதற்கில்லை. வருவாய்களின் ஒதுக்கீடு தொடர்பாகக் குடியரசத் தலைவர் பிறப்பிக்கக்கூடிய ஆணை எதனையும் இப்போது நாடாளுமன்றம் பரிசீலனை செய்யலாம் என்று புதிய திருத்தம் கொண்டுவர நான் முன்மொழிந்திருக்கிறேன்; ஆகவே மாகா ணங்களின் நலன்களுக்குப் பெரிதும் தீங்கு அல்லது கேடு பயக்கக்கூடிய எதையேனும் குடியரசுத் தலைவர் செய்வதாக இருந் தால் மாகாணங்களிலிருந்து வந்து நாடாளுமன்றத்தில் இடம்பெற்றி ருக்கக்கூடிய பல பிரதிநிதிகள் - இவர்கள் மாகாணங்களின் நலன்களை மறக்க மாட்டார்கள் என்பதில் ஐயமில்லை - நிலைமையைச் சரி செய்ய இயலும். ஆகவே மூலவரைவிலான ஏற்பாடு என் மதிப்பிற்குரிய

நண்பர் பண்டித குன்ஸ்ரு யோசனையாகத் தெரிவித்திருப்பதை விட மிக அதிக நெகிழ்வுத் தன்மையுடையதாக இருப்பதன் அடிப்படையில் அது அப்படியே நிலை நிறுத்தப்பட வேண்டும் என்று நான் கருதுகிறேன்.

*(டாக்டர் அம்பேத்கரின் திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது; பண்டித குன்ஸ்ருவின் திருத்தம் மறுதலிக்கப்பட்டது; திருத்தப்பட்ட வடிவத்தில் உறுப்பு 277 அரசமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.)*

## உறுப்பு 280

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் முன்மொழிவது:

அரசமைப்புச் சட்டத்தின் உறுப்பு 25 உத்தரவாதம் செய்யும் உரிமைகளை நெருக்கடி நிலைகளின்போது இடைநீக்கம் செய்தல்.

'280. (1) நெருக்கடி நிலை அறிவிப்பு செயல்பாட்டில் இருக்கும் இடத்தே, குடியரசுத் தலைவர் உரிமைகளை இடைநீக்கம் செய்து ஆணை பிறப்பிப்பதன் வாயிலாக, இந்த அரசமைப்புச் சட்டத்தின் பகுதி III வழங்கும் உரிமைகளில் அவ்வாணையில் குறிப்பிடப்படக் கூடியவற்றின் செயலாக்கத்திற்காக எந்தவொரு நீதிமன்றத்தையும் நாடுவதற்கான உரிமையையும், அவ்வாறு குறிப்பிடப்பட்ட உரிமைகளின் செயலாக்கத்திற்காக எந்தவொரு நீதிமன்றத்திலும் நிலுவையிருக்கிற எல்லாச் சட்ட நடவடிக்கைகளும் அறிவிப்பு செயல்பட்டு வரும் காலத்திற்கோ ஆணையில் குறித்துரைக்கப்படக்கூடிய இன்னும் குறைந்த காலத்திற்கோ இடைநீக்கம் செய்யப்பட்டிருக்கும் என்று பிரகடனம் செய்யலாம்.

(2) மேற்சொன்னவாறு பிறப்பிக்கப்படும் ஆணையை இந்தியாவின் ஆட்சிப் பரப்பு முழுவதற்குமோ அல்லது எந்தப் பகுதிக்குமோ பொருந்துமாறு செய்யலாம்.

(3) இந்த உறுப்பின் கூறு (1)இன்படி பிறப்பிக்கப்படும் ஒவ்வோர் ஆணையும் அது பிறப்பிக்கப்பட்ட பிறகு கூடுமான விரைவில் நாடாளுமன்ற அவைகள் ஒவ்வொன்றின் முன்னும் வைக்கப்படும்.''

ஐயா, கூறுகள் (2), (3) ஆகியவை பழைய உறுப்புடன் கூடுதலாகச் சேர்க்கப்படுபவையே என்பதை அவை உணரும். நெருக்கடி நிலை அறிவிப்பு செயலில் இருக்கையில் குடியரசுத் தலைவர் இந்தியா முழுக்க பகுதி IIIஇல் அடங்கிய உரிமைகளுக்கான வழிவகைகளை இடைநீக்கம் செய்யலாம் என்றொரு வழிவகை பழைய உறுப்பில்

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 19 1949, பக்கம் 523.

இருந்தது. இப்போது நெருக்கடி நிலை இருந்தாலும் பகுதி III வழங்கும் உரிமைகளின் செயலாக்கத்தைக் குறிப்பிட்ட சில பகுதிகளில் அப்படியே வைத்துக் கொள்வது சாத்தியமாகலாம் என்றும் நெருக்கடி நிலை அறிவிப்பின் காரணத்தினாலேயே இந்தியா முழுக்க அனைத்தளாவிய முறையில் இந்த உரிமைகள் இடைநீக்கம் செய்யப்படக் தேவையில்லை என்றும் இப்போது கூறப்படுகின்றது. ஆகவேதான் இந்த வழிவகையைச் செய்வதற்காக கூறு (2) வரைவு உறுப்பில் சேர்க்கப்பட்டிருக்கிறது.

மூன்றாவதாக, கூறு (1)இன்படி பிறப்பிக்கப்படும் எந்தவோர் ஆணை குறித்தும் நாடாளுமன்றம் பங்களிக்க அனுமதிக்கின்ற வழிவகை எதுவும் மூல உறுப்பில் இருக்கவில்லை. இடைநீக்க ஆணையைக் குடியரசுத் தலைவரின் கையில் எவ்விதக் கட்டுத்தளையுமின்றி விட்டுவிடக் கூடாது என்பது அவையின் விருப்பமாக இருந்தது. ஆகவேதான் இப்படிப்பட்ட ஆணை நாடாளுமன்றத்தின் முன் வைக்கப்பட வேண்டுமென்று இப்போது வழிவகை செய்யப்படுகின்றது. இதன் தொடர் விளைவாகவே நாடாளுமன்றம் அது விரும்புகிறவாறு நடவடிக்கை எடுக்க உரிமை இருக்கும் என்றும் வழிவகை செய்யப்படுகிறது.

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, இந்த உறுப்பின் மீதான விவாதத்தில் பங்கெடுத்துப் பேசியுள்ள சிலர் நான் முன்வைத்துள்ள கூறினில் அடங்கிய வழிவகைகளுக்கெதிராகத் தெரிவிக்கின்ற வன்மையான உணர்வுகள் குறித்து நான் சிறிதும் வியப்படையவில்லை. இந்த உறுப்பு அடிப்படைச் செய்திகள் பற்றியது, மக்களின் உரிமைகள் தொடர்பான உயிர்ச் செய்திகள் பற்றியது. ஆகவே, இந்த வகையான ஒரு செய்தியை நாம் எச்சரிக்கையோடு மட்டுமல்லாமல் ஓரளவு உணர்ச்சி வேகத்தோடும் அணுகுவது சரியானதே என்று கூற நானும் அணியமாய் உள்ளேன். குறிப்பிட்ட சில அடிப்படை உரிமைகளை முன்னரே நிறைவேற்றியிருக்கிறோம். அவற்றைக் குறைக்கவோ அல்லது இடைநீக்கம் செய்யவோ முயலும் போது அதற்கென்று நாம் மேற்கொள்ளும் வழிமுறைகள் தொடர்பாக மிகவும் கவனமாக இருக்க வேண்டும்.

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 19 1949, பக்கம் 548-51.

ஆகவே, இந்த உறுப்புக்கெதிராகப் பேசியிருக்கின்ற என் நண்பர்கள் அவர்கள் சொல்லியிருப்பதற்கு நான் எவ்வகையிலும் எதிரானவன் அல்ல என்பதைப் புரிந்து கொள்வார்கள் என்று நம்பு கிறேன். இருந்தபோதிலும் அவர்கள் முன்மொழிந்திருக்கின்ற திருத் தங்கள் அல்லது தெரிவித்திருக்கின்ற யோசனைகளில் எந்தவொன்றை யும் என்னால் ஏற்றுக்கொள்ள இயலவில்லை என்பதை வருத்தத் துடன் சொல்லிக் கொள்கிறேன். இவற்றால் என் நிலைப்பாட்டில் மாற்றமில்லை என்றுதான் சொல்ல வேண்டும். அதேசமயத்தில் அவர்களைப் போலவே நானும் அடிப்படை உரிமைகளை நேசிப் பவன்தான் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

விவாதத்திற்கு விடையளிக்கும்போது சில பொதுவான பிரச் சினைகள் குறித்து பேச எண்ணியுள்ளேன். பல்வேறு பேச்சாளர்களும் வலியுறுத்திய விவரமான வாதக் கூறுகள் அனைத்தையும் நான் அலசி ஆராய்வது சாத்தியமில்லைதான். முதல் கேள்வி என்னவென்றால், நெருக்கடி நிலையின்போது அடிப்படை உரிமைகள் இடைநீக்கம் செய்யப்பட வேண்டுமா? அல்லது இடைநீக்கம் என்பதே கூடாதா? அதாவது நம் அடிப்படை உரிமைகள் ஒருபோதும் மாற்றப்படவோ, இடைநீக்கம் செய்யப்படவோ, கைவிடப்படவோ கூடாத முழு முதல் உரிமைகளாக இருக்க வேண்டுமா? அல்லது, நம் அடிப்படை உரிமைகள் சில நெருக்கடி நிலைகளுக்கு உட்பட்டவையாக்கப் பட வேண்டுமா? நெருக்கடி நிலையின்போது, இந்த உரிமைகளை இடைநீக்கம் செய்கிற அவசியத்தை அவையில் மிகப் பெரும்பான்மை யினர் உணர்ந்து கொள்வதாக நான் கூறுவதில் தவறில்லை எனக் கருதுகிறேன். இடைநீக்கம் செய்யும் வழிமுறை மட்டுமே கேள்விக் குரியது.

இப்போது, நெருக்கடி நிலையின்போது இந்த உரிமைகளை இடைநீக்கம் செய்வதற்கு வழிவகை செய்வது தேவைதான் என்று ஒப்புக்கொள்ளப்படுமானால், நியாயமாகவே கருதிப் பார்க்க வேண்டிய அடுத்த கேள்வி இதுதான்: அவற்றை இடைநீக்கம் செய் வதற்கான அதிகாரம் முழுமுதலாகக் குடியரசுத் தலைவரிடமே அளிக்கப்பட வேண்டுமா? அல்லது அவற்றை நாடாளுமன்றமே தீர்மானிக்கட்டும் என்று விட்டுவிட வேண்டுமா? இப்போது மற்ற நாடுகளில் என்ன செய்யப்படுகிறது என்பதைக் கருத்தில் கொண் டால் - மற்ற நாடுகளின் அனுபவித்திலிருந்தும் அந்நாடுகளின் அர சமைப்புச் சட்டங்களில் அடங்கிய வழிவகைகளிலிருந்தும் நாம்

பயன்பெற்றாக வேண்டுமென்பதை அவையில் உள்ள ஒவ்வொரு வரும் ஏற்றுக்கொள்வார் என்பதில் எனக்கு ஐயமில்லை - நிலை இதுதான்: ஆட்கொணர்வு (ஹேபியஸ் கார்ப்பஸ்) என்று அழைக்கப் படும் உரிமையின் இடைநீக்கத்தைப் பொறுத்தவரை ஆங்கிலேயச் சட்டத்தின்படி பிரச்சினையைச் சட்ட வழியில் கையாள வேண்டும் என்பது மெய்தான். ஆட்கொணர்வு உரிமையை நிர்வாகத் துறையால் இடைநீக்கம் செய்ய முடியாது. மகா பிரிட்டனில் நிலைமை இதுவே. அடுத்து அமெரிக்க ஐக்கிய அரசுகளிலுள்ள நிலைமையைப் பார்த் தால் ஆட்கொணர்வுப் பேராணையின் இடைநீக்கம் உட்பட அர சமைப்புச் சட்ட உத்தரவாதங்கள் என்பவை தொடர்பான ஆதாரம் காங்கிரசுக்கு (அமெரிக்க நாடாளுமன்றம்) இருக்கிறது என்னும் அதே சமயத்தில் இது தொடர்பாகக் குடியரசுத் தலைவருக்கு அதிகாரமே இல்லாமல் போய்விடவில்லை எனக் காண்கிறோம். இந்தப் பிரச் சினையின் விவரமான வரலாற்றை எடுத்துப் பேச நான் விரும்ப வில்லை. ஆனால் அதிகாரம் காங்கிரசிடம் விடப்பட்டுள்ள போதே நீதிப் பேராணை உரிமையை இடைநீக்கம் செய்யும் இடைக்கால அதிகாரம் என்றழைக்கப்படக் கூடியது குடியரசுத் தலைவருக்கும் அளிக்கப்பட்டுள்ளது என்று சொல்வதில் தவறில்லை எனக் கருது கிறேன். என் நண்பர்கள் தலையசைத்து மறுக்கிறார்கள். ஆனால் 'குடியரசுத் தலைவர்' பற்றி நம்பகத்தரம் வாய்ந்த எழுத்தாளர் குரோ வின் எழுதிய நூலை அவர்கள் எடுத்துப் பார்ப்பார்களானால் நிலைமை இதுதான் எனக் காண்பார்கள்.

**பண்டித ஹிருதய்நாத் குன்ஸ்ரு:** ஐயா, நான் குறுக்கிட்டுப் பேச அனுமதிப்பீர்களா? ஓக் எழுதிய அமெரிக்க அரசாங்கம் என்ற நூலில் அவருக்குப் பரிச்சயம் இருக்கும் என்பதில் ஐயமில்லை. அநேக மாய் அவர் அந்த நூலை நம்பகத்தரம் வாய்ந்ததாக மதிக்கக்கூடும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஆம், இந்த ஒரு நூல் மட்டும் இல்லை. அமெரிக்க அரசமைப்புச் சட்டம் குறித்து ஒரு நூறு நூல்கள் இருக்கின்றன. அவற்றில் சற்றேறக்குறைய ஐம்பது நூல்களில் நிச்சயமாக எனக்குப் பரிச்சயமுண்டு.

**பண்டித ஹிருதயநாத் குன்ஸ்ரு:** ஆட்கொணர்வுப் பேராணைச் சிறப்புரிமையை இடைநீக்கம் செய்யும் உரிமை காங்கிரசிடம் உள்ளது என்பதும் ஆயுதப் படைகளின் தலைமைத் தளபதி என்ற முறையில் குடியரசுத் தலைவர் இராணுவ நடவடிக்கைகளின் பாதுகாப்புக்கு

அவசியம் என்று கருதினால் மட்டுமே அவ்வுரிமையைச் செலுத்த லாம் என்பதுமே மிகச் சிறந்த சட்டக் கருத்தாகும் என்று அங்கு சொல் கிறார்கள்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஆம், அமெரிக்க ஐக்கிய அரசகளில் காங்கிரசுக்கு அதிகாரம் இருக்கின்றபோதே அரசின் நிர்வாகத் துறையின் தலைவர் என்ற முறையில் குடியரசுத் தலைவருக்கும் இடைநீக்கம் செய்வதற்கான இடைக்கால அதிகாரம் இருக்கிறது என்பதே என் பணிவான கருத்தாகும்.

இப்போது, நமது அரசமைப்புச் சட்டத்தை வகுப்பதில் நாம் ஓரளவுக்கு அமெரிக்க முன்னுதாரணத்தைப் பின்பற்றியிருக்கிறோம். நான் முன்மொழிந்திருக்கும் திருத்தத்தைக் கொண்டு இந்தப் பிரச்சினை தொடபான அதிகாரம் இப்போது நாடாளுமன்றத்திற்கு வழங்கப் பட்டிருக்கிறது. நாமும்கூட அரசமைப்புச் சட்ட உத்தரவாதத்தைப் பொறுத்தவரை தேவை என்று கருதுவதுபோல் நடவடிக்கை எடுக்கும் இடைக்கால அதிகாரத்தைக் குடியரசுத் தலைவருக்கு வழங்கவே எண்ணுகிறோம்.

ஆகவே வரைவு உறுப்பையும், அமெரிக்க ஐக்கிய அரசு களில் நீங்கள் காணும்படியான நிலையையும் ஒப்புநோக்கின், இரண் டிற்கும் மிகப் பெரிய வேறுபாடு இல்லை என்பது உறுதி. இங்கும் கூட குடியரசுத் தலைவர் தமது சொந்தப் பொறுப்பில் நடவடிக்கை எடுப்பதில்லை. அமெரிக்க அரசமைப்புச் சட்டத்தில் இல்லாத கூடுத லான ஒரு காப்புக்கூறு நமக்குள்ளது; அதாவது நமது குடியரசுத் தலைவர் நிர்வாகத் துறையின் அறிவுரையால் வழிநடத்தப்படுவார்; நமது நிர்வாகத்துறை நாடாளுமன்றத்தின் ஆணையுரிமைக்கு உட் பட்டிருக்கும். ஆகவே உத்தரவாதங்களை இடைநீக்கம் செய்யும் அதிகாரம் அனைத்தையும் வழங்குகின்ற பிரச்சினையைப் பொறுத்த வரை, நான் பணிவுடன் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்: நமது முன்மொழிவு முற்ற முழுக்க நூதனமான ஒன்றல்ல, முன்னுதாரணம் எதற்கும் தொடர்பின்றி வரையப்பட்டதல்ல, அல்லது அடிப்படை உரிமைகளுக்கு என்ன நேரிடும் என்ற அக்கறையின்றிப் பொறுப்பற்ற முறையில் வரையப்பட்டதுமல்ல.

இப்போது இப்பிரச்சினை குறித்து விரிவாகப் பேசிவிட்ட நிலையில் திரு. பார்கவாவின் திருத்தம் எண் 74க்கு வருகிறேன். இது

ஒரு முக்கியப் பிரச்சினை என்று கருதுகிறேன். ஆகவே சரியாக எதுதான் வழிவகை என்பதை நான் விளக்கிச் சொல்ல வேண்டும். இதனை உறுப்பு 280க்கான திருத்தம் என்று அவர் கூறியுள்ள போதிலும் அது உண்மையில் உறுப்பு 279 தொடர்பானதே ஆகும். அவர் என்ன விரும்புகிறார் என்றால், அடிப்படை உரிமைகளை இடைநீக்கம் செய்திட நெருக்கடி நிலையின் வழிவகைகளால் அரசுக்கு வழங்கப் படும் ஆணையுரிமையின்படி அது எடுக்கும் எந்நடவடிக்கையும் நெருக்கடிநிலை அறிவிப்பின் நீக்கத்தோடு சேர்ந்து தானாகவே நீங்கிப் போய்விட வேண்டும் என்பதே. இந்தச் சட்டங்கள் எல்லாம் செயலற்றுப் போகும்; இந்த ஆறுமாத காலம் முடிவதற்குமுன் செய்தவை அல்லது செய்யாது விட்டவை தொடர்பான சட்டங்கள் மட்டும் இதற்கு விலக்காகும். இந்தக் கூறு உறுப்பு 279இல் இடம் பெறவில்லை. ஆகவே உறுப்பு 279இன் வழிவகைகளின்படி இயற்றப் படக்கூடிய எந்தச் சட்டமும் மறைந் தொழியும் என்பது மட்டுமல் லாமல் அந்தச் சட்டப்படி செய்யப்பட்ட எதுவும் செல்லுபடியற்ற தாகிவிடும். இவ்வாறாக உறுப்பு 279இன்படி இயற்றப்பட்ட எந்த வொரு சட்டத்தின் வழிவகைகளின்படியும் கைது செய்யப்பட்டவர் அச்சட்டம் செயலற்றுப் போய்விடும்போது - இந்த உறுப்பின்படி இயற்றப்பட்ட எந்தவொரு சட்டத்தின்படியும் இது செய்யப்பட்டிருப் பதினாலேயே - அதன் ஆளுகைக்கு உட்பட மாட்டார். இந்த உறுப்பு 279இன்படி சட்டம் ஒழிந்து போவதோடு அதன்படி, செய்யப்பட்ட செயலும் ஒழிந்துபோகிறது.

அடுத்து நான் உறுப்பு (8) கூறு (2)ஐக் கவனத்திற்குக் கொண்டு வருவேன். இதுவும் உறுப்பு 279 உடன் சேர்த்துப் படிக்க வேண்டிய முக்கிய உறுப்பாகும். உறுப்பு 8 என்பது இப்போது நடப்பிலுள்ள சட்டம் தொடர்ந்து செயல்பட்டு வரும் என்று இந்த அரசமைப்புச் சட்டத்தில் செய்யப்பட்டுள்ள பொதுவான வழிவகைகளுக்கு ஒரு விதிவிலக்காகும். இப்போது நடப்பிலிருக்கும் சட்டங்களில் அடிப் படை உரிமைகளில் எந்தவொன்றுக்கும் முரணாயிருக்கிற எந்தச் சட் டமும் செயலற்றுப் போகும். உறுப்பு 8 கூறு (1) இப்போது நடப் பிலிருக்கின்ற சட்டம் பற்றியது, கூறு (2) எதிர்காலச் சட்டங்கள் பற்றியது. இவ்வாறு உறுப்பு 279இன்படி இயற்றப்படும் எச்சட்டமும் எதிர்காலச் சட்டமாக இருக்கும். நெருக்கடி நிலை நீங்கும்போது உறுப்பு 279இன்படி இயற்றப்பட்ட எந்தச் சட்டமும் உறுப்பு 8 கூறு (2)க்கு உட்படும். ஆதலால், அடிப்படை உரிமைகளுக்கு முரணாகும் என்றால் தானாகவே நீங்கிவிடும்.

ஆகவே திருத்தம் 74ஐப் பொறுத்தவரை இங்கு தெரிவிக்கப் பட்ட அச்சங்களுக்கு ஆதாரமில்லை என்பது என் பணிவான கருத்து. என் மதிப்பிற்குரிய நண்பர் பண்டித தாகூர்தாஸ் பர்கவா மனத்தில் கொண்டிருக்கும் அனைத்து நேர்வுகளையும் அளாவுவதற்கு இப்போது நடப்பிலுள்ள சட்டத்திலேயே போதிய வழிவகை உள்ளது.

**பண்டித தாகூர்தாஸ் பர்கவா:** உறுப்பு 277 (2)இல் குறிக்கப் பெறுவது நாடாளுமன்றத்தினால் இயற்றப்படும் சட்டமாகும். நிர்வாகத் துறையினால் எடுக்கப்படும் எந்தவொரு நடவடிக்கையும் இதில் குறிக்கப் பெறவில்லை. இரண்டாவதாக இது நாடாளுமன்றத் தினால் இயற்றப்படும் சட்டம் பற்றியும் குறிப்பிடுகிறது. ஆனால் உறுப்பு 13இல் குறிக்கப்பெறுவது அதில் வரையறுக்கப்பட்டுள்ளபடி ஓர் அரசினால் இயற்றப்படும் சட்டமாகும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அங்கு அரசு என்பது இரண்டையும் குறிப்பதாகும். ஏனென்றால், அரசு என்ற சொல் பகுதி IIIஇல் பயன்படுத்தப்படும் அதே பொருளில் உறுப்பு 279இலும் பயன்படுத்தப்படுகிறது. அங்கு அது மைய அரசு, மாகா ணங்கள், ஏன், நகராட்சிகளையும் கூட குறிக்கிறது.

**பண்டித தாகூர்தாஸ் பர்கவா:** ஆனால் 277 (1)இல் நாடாளு மன்றம் மட்டுமே குறிக்கப்பெறுகிறது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அதையே நானும் சொல்கிறேன். உறுப்பு 279ம் உறுப்பு 8ஆல் ஆளப்படும். ஆகவே வழங் கப்பட்டுள்ள அடிப்படை உரிமைகளுக்கு முரணான எந்தச் சட்டமும் செயலற்றுப் போகும்.

இப்போது நான் பண்டித பர்கவாவின் திருத்தம் எண் 78 குறித்துச் சொல்வேன். இந்த அடிப்படை உரிமைகளில் எந்த ஒன்றின் வழிவகைகளையும் இடைநீக்கம் செய்து குடியரசுத் தலைவர் பிறப் பிக்கும் ஆணை வெளிப்படையாக உறுதி செய்யப்படும் என்று அந்தத் திருத்தத்தில் அவர் கூறியிருக்கிறார். குடியரசுத் தலைவர் பிறப்பிக்கும் ஆணையை நாடாளுமன்றம் வெளிப்படையாக உறுதி செய்ய வேண்டும் என்கிறார். நாடாளுமன்றம் நேர்வகையாகச் செயல்பட்டு குடியரசுத் தலைவரின் ஆணையை நீக்கம் செய்யாவிடில் அது உறுதி செய்துவிட்டதாகக் கொள்ளலாம் என்று வரைவுக் குழுவினால்

முன்மொழியப்பட்ட வரைவு உறுப்பு வழிவகை செய்கிறது. அவரது திருத்தத்திற்கும், நான் வரைந்துள்ள உறுப்பிற்கும் இடையிலான உண்மை வேறுபாடு இதுதான்.

**பண்டித தாகூர்தாஸ் பர்கவா:** ஆனால் இது மிக அடிப்படையான வேறுபாடாகும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அது மிகவும் அடிப்படையானதே. இது ஒரு பொருளில் அடிப்படையானது. மற்றொரு பொருளில் அடிப்படையானதன்று. ஏனென்றால் நெருக்கடி நிலை அறிவிப்பு நாடாளுமன்றத்தின் முன் வைக்கப்படும் என்று நாம் வழிவகை செய்திருக்கிறோம். இப்போது இக்கடப்பாட்டை நான் விதித்துள்ளேன். நாடாளுமன்றம் கூட்டப்பட்டு அதன் முன் அறிவிப்பு வைக்கப்படுவதாக இருந்தால் நாடாளுமன்றத்திற்கு வருகிறவர்கள் நேர்வகை நடவடிக்கை எடுக்காவிட்டால் மடத்தனமாக இருக்கும். இப்படிப்பட்ட ஒரு நாடாளுமன்றம் அவசியமற்றதாகவும் வேண்டப்படாததாகவும் இருக்கும்.

**பண்டித தாகூர்தாஸ் பர்கவா:** இந்தச் சட்டம் நெருக்கடி நிலைக் காலத்திற்கு மட்டுமே பொருந்துவதாயிருக்கும் என்றும் இன்னுங் குறுகிய காலத்திற்குப் பொருந்தாது என்றும் அறிவிப்புக்குப் பின்னர் ஆறு மாத காலத்திற்குப் பொருந்தாது என்றும் கூறத் தேவையில்லையா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் அதற்கும் வருகிறேன், ஆனால் இந்தக் கேள்வியைப் பொறுத்தவரை குடியரசுத் தலைவர் அதனை விலக்கிக் கொள்வதை அல்லது தொடர்ந்து நீடிக்கச் செய்வதை அல்லது திருத்தியமைக்கப்பட்ட வடிவத்தில் நீடிக்கச் செய்வதை நாம் விரும்புகிறோம் என்று நாடாளுமன்றம் ஒரு வெளிப்படையான தீர்மானத்தின் வாயிலாகச் சொல்ல வேண்டுமா என்பது வெறும் விவரம் தொடர்பான பிரச்சினை மட்டுமே. நாடாளுமன்றம் கூட்டப்பட்டு அது இந்தப் பிரச்சினையை எடுத்துக் கொண்டு விட்டால், இதனை நாடாளுமன்றத்திடம் விட்டுவிட வேண்டும் என்பதும், வேறுவிதமாக முடிவு செய்யாவிட்டால் அதன் ஒப்புதல் தரப்பட்டு விட்டதாக அனுமானம் செய்து கொள்ள வேண்டும் என்பதும் சரியானது இல்லையா? சிக்கல் எங்கே இருக்கிறது? திருத்தம் தொடர்பாகச் சிக்கல் ஏதுமிருப்பதாக நான் கருதவில்லை.

**மதிப்பிற்குரிய உறுப்பினர் ஒருவர்:** இப்போது மணி ஒன்று.

**திரு. துணைத் தலைவர்:** நாம் இந்த உறுப்பை முடிக்கப் போகிறோம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** திரு. குப்தே ஒரு திருத்தத்தை முன்மொழிந்திருக்கிறார்; இது பண்டித பர்கவாவின் திருத்தம் எண் 78க்கான திருத்தமாகும். ஒரு திட்டவட்டமான காலம் குறிப்பிடப்பட வேண்டும், நெருக்கடிநிலை அறிவிப்பு இரு மாத காலத்திற்குள் நாடாளுமன்றத்தின் முன் வைக்கப்பட வேண்டும் என்று அவர் கோருகின்றார். நான் தவறாகச் சொல்லவில்லை என்றால் பண்டித பர்கவாவின் திருத்தம் ஒரு மாதம் என்று நான் நினைக்கிறேன். எனது மூல முன்மொழிவு ''கூடுமான விரைவில்'' என்பதாகும். சரி, யாராவது இதனை உளச்சான்று தொடர்பானதாக்க விரும்புகிறாரா, இந்தப் பிரச்சினையில் உத்தரவாதமளிக்கப்படா விட்டால், சாகும்வரை உண்ணாவிரதம் இருக்கப் போகிறோமா என்பதை யானறியேன். ஒரு மாதத்திற்குள், இரு மாதங்களுக்குள், அல்லது ஏன், இரு வாரங்களுக்குள்ளும் கூட இப்பிரச்சினை நாடாளு மன்றத்தின் முன் வைக்கப்படலாம் என்கிற முறையில் ''கூடுமான விரைவில்'' என்பது செயல்படுத்தப்படலாம் என்று நான் கருது கிறேன். இது மிகவும் நீக்குப்போக்கான சொற்றொடர்; ஆகவே விரைவில் அடங்கியுள்ளவாறுள்ள வழிவகைதான் இந்தச் சூழ் நிலைமைகளுக்குட்பட்டு மிகச் சிறந்தது என்று பணிந்து தெரிவித்துக் கொள்கிறேன்; அவை இதனை ஏற்றுக்கொள்ளும் என்று நம்புகிறேன்.

**திரு. துணைத் தலைவர்:** நான் இப்போது திருத்தங்களை அவையின் முன் வைக்கிறேன்.

*(டாக்டர் அம்பேத்கரின் திருத்தம் தவிர ஏனைய எல்லாத் திருத்தங் களும் விலக்கிக் கொள்ளப்பட்டன அல்லது மறுதலிக்கப்பட்டன. திருத்தப்பட்ட வடிவத்தில் உறுப்பு 280 அரசமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.)*

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்** (பம்பாய்: பொது): ஐயா, நான் முன்மொழிவது:

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 22 1949, பக்கம் 555-56.

"உறுப்பு 254க்குப் பதிலாக பின்வரும் உறுப்பை இடம்பெறச் செய்யலாம்:

ஒன்றியத்துக்கும் மாநிலத்துக்குமான அரசுப் பணித் தேர் வாணையங்கள்

284 (1) இந்த உறுப்பின் வழிவகைகளுக்குட்பட்டு ஒன்றியத்திற்கு ஓர் அரசுப் பணித் தேர்வாணையமும், மாநிலம் ஒவ்வொன்றிற்கும் ஓர் அரசுப் பணித் தேர்வாணையமும் இருக்கும்.

(2) இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட மாநிலங்கள் அந்த மாநிலங்களின் குழுவிற்கான ஓர் அரசுப் பணித் தேர்வாணையம் இருக்கும் என்று உடன்படலாம். அம்மாநிலங்கள் ஒவ்வொன்றினதும் சட்டமன்ற அவையினால் அல்லது ஈரவைகள் இருக்கும் இடத்தே ஒவ்வோர் அவையினாலும் இப்படி ஒரு தீர்மானம் இயற்றப்பட்டால், நாடாளுமன்றம் அந்த மாநிலங்களின் தேவைகளுக்குப் பயன்படுத்துவதற்காக ஒரு கூட்டு அரசுப் பணித் தேர்வாணையத்தை (இந்த அத்தியாயத்தில் கூட்டு ஆணையம் என்று குறிப்பிடப்படுவது) அமர்த்துவதற்கு சட்டம் கொண்டு வழிவகை செய்யலாம்.

(2அ) மேலே சொன்னது போன்ற எந்தவொரு சட்டமும் இந்த உறுப்பின் கூறு (2)இன் நோக்கங்களைச் செயல்படுத்துவதற்குத் தேவையானவை அல்லது விரும்பத்தக்கவை என்று தோன்றக்கூடிய இடைநிகழ்வான மற்றும் தொடர் விளைவான வழிவகைகளைத் தன்னகத்தே கொண்டிருக்கலாம்.

(3) ஒரு மாநிலத்தின் ஆளுநரோ ஆட்சியாளரோ கேட்டுக்கொண்டால் ஒன்றியத்திற்கான அரசுப் பணித் தேர்வாணையம் குடியரசுத் தலைவரின் ஒப்புதலுடன் மாநிலத்தின் தேவைகள் அனைத்துக்கும் அல்லது அவற்றில் எந்தவொன்றிற்கும் பயன்பட இணங்கலாம்.

(4) ஒன்றிய அரசுப் பணித் தேர்வாணையம் அல்லது மாநில அரசுப் பணித் தேர்வாணையம் தொடர்பாக இந்த அரசமைப்புச் சட்டத்தில் காணப்படும் சுட்டுரைகள், சூழல் வேறு வகையாகக் கோரவில்லை என்றால், குறிப்பிட்ட பிரச்சினையைப் பொறுத்து ஒன்றியத்தின் தேவைகளுக்கு அல்லது நேர்வுக்கேற்ப மாநிலத்தின் தேவைகளுக்குப் பயன்படும் ஆணையம் தொடர்பான சுட்டுரைகளாகக் கருதப்படும்."

உறுப்பிலேயே அதற்கான விளக்கமும் இருக்கிறது; இந்த உறுப்பில் உள்ள எந்தக் கூறினையும் தெளிவுபடுத்துவதற்கு எதுவும் சொல்லத் தேவையிருப்பதாக நான் கருதவில்லை. ஆகவே குற்ற விமர்சனம் ஏதும் செய்யப்பட்டால் அதற்கு நான் விடையளிக்க வேண்டிய கட்டத்தில் சொல்ல வேண்டியவற்றைச் சொல்வேன்.

**திரு. லட்சுமி நாராயணசாகு** (ஒரிசா: பொது): ஐயா, நாடாளுமன்றம் இயற்றக்கூடிய இவ்வகைப்பட்ட சட்டம் தொடர்பான வழிவகை கொண்டு வரப்படுவது ஏன் என்பதையும், மேலும் இந்த வழிவகைகளில் ஆட்சியாளர் என்று குறிப்பிடப்பட்டிருப்பது ஏன் என்பதையும் நான் தெரிந்து கொள்ளலாமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** என் நண்பர் திரு. சாகு சொன்னதை நான் சரியாகப் புரிந்துகொண்டால், நாடாளு மன்றம் சட்டம் இயற்றுவதற்கான வழிவகையை நான் கொண்டு வந்திருப்பது ஏன் என்பதை அவர் தெரிந்து கொள்ள விரும்புகின்றார். ஒவ்வொரு மாநிலத்துக்கும் அதனதன் அரசுப் பணித் தேர்வாணையம் இருக்க வேண்டும் என்பது அடிப்படைக் கொள்கையாக இருப்பதை அவர் புரிந்து கொள்வார். ஆனால் நிர்வாகக் காரணங்களாலோ நிதி வகைக் காரணங்களாலோ ஒவ்வொரு மாநிலத்துக்கும் அதனதன் அரசுப் பணித் தேர்வாணையம் இருக்க முடியாது என்றால், இத் தகைய இரு மாநிலங்களின் தேவைகளுக்கும் பயன்படுத்துவதற்கெனக் கூட்டு வட்டார ஆணையம் அமைப்பதற்கு வழிவகை செய்திட ஒரு தீர்மானத்தின் வாயிலாக மைய அரசுக்கு அவ்விரு மாநிலங்களும் அதிகாரம் வழங்கலாம். இப்படிப்பட்ட அதிகாரம் மைய அரசுக்கு வழங்கப்படும்போது உண்மையில் இவ்வாறு வழங்கப்படும் அதிகாரம் நாடாளுமன்றம் இயற்றும் சட்டத்தினால் ஒழுங்குமுறைப்படுத்தப் பட வேண்டும் என்பதாகவும், நிர்வாக ஆணையை மட்டும் கொண்டு இரண்டு மாநிலங்களுக்குமான ஒரு கூட்டு ஆணையத்தை அமைப் பதற்குக் குடியரசுத் தலைவருக்கு வழியிருக்கக் கூடாது என்பதாகவும் இருக்க வேண்டும். இந்நோக்கத்திற்காகவே இரு மாநிலங்களுக்குப் பயன்படும்படியான எந்தவோர் ஆணையத்தின் இயைபையும் ஒழுங்கு முறைப்படுத்த நாடாளுமன்றத்திற்கு அதிகாரமளிக்கப்படுகின்றது.

**திரு. லட்சுமி நாராயணசாகு:** மற்றொரு கேள்வி: 'ஆட்சி யாளர்' என்று குறிப்பிட்டிருப்பது ஏன்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஏனென்றால் பகுதி IIIஇல் இடம்பெறும் ஒரே ஒரு மாநிலம் கூட தனக்காக ஒரு சுயேச்சை யான அரசுப் பணித் தேர்வாணையம் வைத்துக் கொள்ளத் தேவை யில்லை எனக் கருதக்கூடும். ஆகவே பகுதி IIIஇல் இடம்பெறும் ஒரு மாநிலம் பகுதி Iஇல் இடம்பெறும் எந்தவொரு மாநிலத்துடனும் சேர்ந்து ஒரு கூட்டு ஆணையம் அமைக்குமாறு குடியரசுத் தலை வருக்குக் கூட்டு வேண்டுகோள் விடுக்கப்படுமானால் அங்கேயும் கதவு அடைக்கப்பட்டுவிடக் கூடாது. இந்த உறுப்பின் வழிவகை களில் 'ஆட்சியாளர்' என்று சேர்க்கப்பட்டிருப்பதற்கான காரணம் இதுதான்.

**திரு. ஆர்.கே. சித்வா** (மத்திய மாகாணங்கள் மற்றும் பேரார்): எனக்கு ஒரு விளக்கம் வேண்டும். ''குடியரசுத் தலைவரின் ஒப்பு தலுடன் மாநிலத்தின் தேவைகள் அனைத்துக்கும் அல்லது அவற்றில் எந்தவொன்றிற்கும் பயன்பட இணங்கலாம்'' என்று கூறு (3)இல் கூறப் படுகின்றது. எந்தவோர் உள்ளாட்சி அமைப்பும் அரசுப் பணித் தேர் வாணையத்தின் சேவைகளைப் பயன்படுத்திக் கொள்ள விரும்பினால் அது அனுமதிக்கப்படுமா என்பதை நான் தெரிந்து கொள்ளலாமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஆம். ஓர் உள் ளாட்சி அமைப்பு தன் தேவைகளுக்கு அரசுப் பணித் தேர்வாணையம் பயன்பட வேண்டுமென விரும்பினால் நாடாளுமன்றம் இத்தகைய உள்ளாட்சி அமைப்பின் தேவைகளுக்கும் பயன்பட அரசுப் பணித் தேர்வாணையத்திற்கு ஆணையுரிமை வழங்க இயலும் என்பதற்குத் தனியோர் உறுப்பே உள்ளது.

*(திருத்தம் எண் 2 முன்மொழியப்படவில்லை.)*

* * *

[1]**திரு. அவைத் தலைவர்:** டாக்டர் அம்பேத்கர்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** எதுவும் சொல்லத் தேவையிருப்பதாக நான் கருதவில்லை.

***(டாக்டர் அம்பேத்கரின் திருத்தம் தவிர ஏனைய திருத்தங்களனைத்தும் நிராகரிக்கப்பட்டன. திருத்தப்பட்ட வடிவத்தில் உறுப்பு 284 அரசமைப்புச் சட்டத் தில் சேர்க்கப்பட்டது.)***

## உறுப்பு 285

[2]**திரு. நசிருதீன் அகமது:** ... இந்த மாற்றங்களைப் புரிந்து கொள்ள முயலுவது எவருக்கும் கடினமாக இருக்கும் என எண்ணு கிறேன். ஆகவே நான் மறுத்துரைப்பது இவை விதிகளை மீறக் கூடியவை என்ற அடிப்படையில் மட்டுமல்லாமல், உடனே விளங்கக் கூடிய வடிவத்தில் இல்லை என்ற அடிப்படையிலும், நான் எதிர்ப்பு தெரிவிக்கிறேன். இவற்றை அரசமைப்புச் சட்டத்திற்கே ஆன திருத் தங்களாகத் தெரிவித்திருக்க வேண்டும்.

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 22 1949, பக்கம் 571.
2. மேற்படி அதே நூல், பக். 572.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** என் நண்பர் ஒழுங்குப் பிரச்சினை எழுப்பியிருப்பது இது முதல் முறையன்று. நடைமுறை விதிகளின் செய்நுட்பங்களிலிருந்து விலகிச் செல்ல வரைவுக் குழுவை அன்புகூர்ந்து அனுமதித்திருக்கிறீர்கள். ஆகவே இப்போதும்கூட தொடர்ந்து மேற்செல்ல எங்களை தயவுசெய்து அனுமதிக்கும்படி வேண்டுகிறேன்.

[1]**திரு. அவைத் தலைவர்:** ...இந்தத் தனித்தனி உறுப்புகள் எப்படிப் பிறந்தன என்பது குறித்து டாக்டர் அம்பேத்கர் விளக்கமளிக் கலாம். அவற்றை நீங்கள் ஒன்றாகச் சேர்த்தே முன்மொழியுங்கள்; வாக்கெடுப்பின்போது நாம் அவற்றைத் தனித்தனியே எடுத்துக் கொள்ளலாம்.

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஆம், தனித்தனியே அவற்றை வாக்கெடுப்புக்கு விடலாம்.

ஐயா, நான் முன்மொழிவது:

''உறுப்பு 285க்குப் பதிலாகப் பின்வரும் உறுப்புகளை இடம்பெறச் செய்ய லாம்.

*உறுப்பினர்கள் பணியமர்த்தம் மற்றும் பதவிக் காலம்*

285. (1) அரசுப் பணித் தேர்வாணையத்தின் தலைவரும் உறுப்பினர்களும், ஒன்றியத் தேர்வாணையம் அல்லது கூட்டுத் தேர்வாணையத்தைப் பொறுத்தவரை குடியரசுத் தலைவராலும், ஒரு மாநிலத் தேர்வாணையத்தைப் பொறுத்த வரை அம்மாநிலத் தின் ஆளுநர் அல்லது ஆட்சியாளராலும் அமர்த்தப்படுவார்கள்.

ஆனால் ஒவ்வோர் அரசுப் பணித் தேர்வாணையத்தின் உறுப்பினர்களிலும் குறைந்தது பாதிப் பேர் முறையே அவரவரும் அமர்த்தப்படும் நாளில் இந்திய அரசின் கீழோ ஒரு மாநில அரசின் கீழோ குறைந்தது 10 ஆண்டு காலம் பதவி வகித்தவர்களாக இருப்பார்கள்; இந்தப் பத்தாண்டு காலத்தைக் கணக்கிடுகை யில், இந்த அரசமைப்புச் சட்டம் தொடங்குவதற்கு முன் ஒருவர் முடியரசின் கீழ் பதவி வகித்துள்ள எந்தவொரு கால அளவும் சேர்த்துக் கொள்ளப்படும்.

(2) அரசுப் பணித் தேர்வாணையத்தின் உறுப்பினர் பதவி ஏற்ற நாளிலிருந்து ஆறாண்டு காலத்திற்குப் பதவி வகிப்பார் அல்லது ஒன்றியத் தேர்வாணை யத்தைப் பொறுத்தவரை 65 வயது அடையும் வரையிலும் மாநிலத் தேர்வாணை யம் அல்லது கூட்டுத் தேர்வாணையத்தைப் பொறுத்தவரை 60 வயது அடை யும் வரையிலும் பதவி வகிப்பார். இவ்விரண்டில் எது முதலில் வருகிறதோ அதுவரை பதவி வகிப்பார்:

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 22 1949, பக்கம் 572.
2. மேற்படி அதே நூல், பக். 573-76.

*ஆனால் -*

*அரசுப் பணித் தேர்வாணையத்தின் உறுப்பினர் ஒன்றியத் தேர்வாணையம் அல்லது கூட்டுத் தேர்வாணையத்தைப் பொறுத்தவரை குடியரசுத் தலைவருக் கும், ஒரு மாநிலத் தேர்வாணையத்தைப் பொறுத்தவரை அம்மாநிலத்தின் ஆளுநர் அல்லது ஆட்சியாளருக்கும் ஒப்பமிட்டு எழுதுவதன் மூலம் பதவி விலகலாம்;*

*(ஆ) அரசுப் பணித் தேர்வாணையத்தின் உறுப்பினர் இந்த அரசமைப்புச் சட்டத்தின் உறுப்பு 285-A கூறு (1) அல்லது கூறு (3)இல் வழிவகை செய்யப் பட்ட முறையில் பதவியிலிருந்து நீக்கப்படலாம்.*

*(3) அரசுப் பணித் தேர்வாணையத்தின் உறுப்பினராகப் பதவி வகிக்கும் ஒருவர் அவரது பதவிக்காலம் கழிந்து முடிந்ததும் மீண்டும் அவர் அப்பதவியில் அமர்த்தப்படுவதற்கு உரிமைத்தகவு அற்றவராவார்.*

*285-A(1) ''இந்த உறுப்பின் கூறு (3)இன் வழிவகைகளுக்குட்பட்டு அரசுப் பணித் தேர்வாணையத்தின் தலைவர் அல்லது வேறு எந்த உறுப்பினரும் நெறி தவறி நடந்ததைக் காரணமாய்க் காட்டிக் குடியரசுத் தலைவரின் ஆணை கொண்டு மட்டுமே பதவியிலிருந்து நீக்கப்படுவார்; குடியரசுத் தலைவரால் அனுப்பி வைக்கப்பட்ட பார்வைக் குறிப்பின் பேரில் உச்சநீதிமன்றமானது இந்த அரசமைப்புச் சட்டத்தின் உறுப்பு 121இல் இதற்கென்று குறித்தளிக்கப் பட்ட நடைமுறைக்கேற்ப விசாரணை நடத்தி நேர்வைப் பொறுத்து தலைவர் அல்லது வேறு உறுப்பினர் இப்படிப்பட்ட ஏதேனும் ஒரு காரணத்திற்காக நீக்கப் பட வேண்டும் என்று அறிக்கை அளித்தப்பிறகே இவ்விதம் நீக்கப்படுவார்.*

*(2) 'அரசுப் பணித் தேர்வாணையத்தின் தலைவர் அல்லது வேறு உறுப்பினர் தொடர்பாக இந்த உறுப்பின் கூறு (1)இன்படி உச்சநீதிமன்றத்திற்கு அனுப்பப் பட்ட பார்வைக் குறிப்பின் பேரில் அந்நீதிமன்றத்தின் அறிக்கை வந்து சேர்ந்து குடியரசுத் தலைவர் ஆணை பிறப்பிக்கும் வரைக்கும், ஒன்றியத் தேர்வாணையம் அல்லது கூட்டுத் தேர்வாணையத்தைப் பொறுத்தவரை குடியரசுத் தலைவரும் ஒரு மாநிலத் தேர்வாணையத்தைப் பொறுத்தவரை ஆளுநர் அல்லது ஆட்சி யாளரும் அவரை இடைநீக்கம் செய்யலாம்.''*

*(3) இந்த உறுப்பின் கூறு (1)இல் என்ன கூறப்பட்டிருப்பினும் அரசுப் பணித் தேர்வாணையத்தின் தலைவர் அல்லது வேறு எந்த உறுப்பினரும் பின்வரும் நிலைமைகளில் ஒன்றுக்கு ஆளானால் அவரைக் குடியரசுத் தலைவர் ஆணை கொண்டு பதவியிலிருந்து நீக்கலாம்:*

*(அ) கடன் தீர்க்க இயலாதவர் என்று நீதிமன்றத்தால் தீர்மானிக்கப்படுதல்; அல்லது*

*(ஆ) தனது பதவிக் காலத்தில் பதவியின் கடமைகளுக்குப் புறத்தே ஊதியம் பெறும் எந்தப் பணியிலும் ஈடுபடுதல்;*

மேலும் இங்கே மூன்றாவதாக (இ) என்ற ஒன்றைச் சேர்க்க விரும்புகிறேன்:

*''(இ) குடியரசுத் தலைவரின் கருத்துப்படி உள்ளத்தால் அல்லது உடலால் நோயுற்ற காரணத்தால் பதவியில் நீடிக்கப் பொருத்தமற்றவராகி விடுதல்.*

(4) இந்த உறுப்பின் கூறு (1)இன் நோக்கங்களுக்கு அரசுப் பணித் தேர்வாணையத்தின்தலைவர்அல்லது வேறு எந்த உறுப்பினரும் இந்திய அரசினாலோ அவ்வரசின் சார்பாகவோ, மாநில அரசினாலோ அவ்வரசின் சார்பாகவோ செய்யப்படும் எந்தவோர் ஒப்பந்தம் அல்லது உடன்படிக்கையிலும் எவ்விதத்தும் தொடர்பு அல்லது நல அக்கறை கொண்டவராக இருந்தால் அல்லது மாறினால், அல்லது கூட்டுக் குழுமம் எதனிலும் ஓர் உறுப்பினர் என்ற முறையிலும், மற்ற உறுப்பினர்களுடன் பொதுவாகவும் அல்லாமல் வேறு வகையில் அதன் இலாபத்தில் அல்லது அதிலிருந்து விளையும் ஆதாயங்களிலிருந்து பெறப்படும் எந்த நன்மையிலும் எவ்விதத்தும் பங்கு பெற்றால் அவர் நெறி தவறி நடந்த குற்றம் புரிந்தவராகக் கருதப்படலாம்.

ஆணையத்தின் உறுப்பினர்கள், பணியாளர்கள் ஆகியோரின் பணி நிலைமைகள் தொடர்பாக ஒழுங்குமுறை விதிகளை இயற்றும் அதிகாரம்.

285 B. ஒன்றிய ஆணையம் அல்லது கூட்டு ஆணையத்தைப் பொறுத்தவரை குடியரசுத் தலைவரும், மாநில ஆணையத்தைப் பொறுத்தவரை மாநிலத்தின் ஆளுநர் அல்லது ஆட்சியாளரும் ஒழுங்குமுறை கொண்டு -

(அ) ஆணையத்தின் உறுப்பினர் தொகையையும் அவர்களின் பணி நிலைமைகளையும் தீர்மானிக்கலாம்;

(ஆ) ஆணையத்தின் பணியாளர் தொகை தொடர்பாகவும் அவர்களின் பணி நிலைமைகள் தொடர்பாகவும் வழிவகை செய்யலாம்:

ஆனால், அரசுப் பணித் தேர்வாணைய உறுப்பினரின் பணி நிலைமைகள் அவர் பணியமர்த்தம் செய்யப்பட்ட பிறகு அவருக்குப் பாதகமான வகையில் மாற்றப்படாது.

285-C. பதவி வகிப்பது முடிவுற்றதும் -

ஆணைய உறுப்பினர்களாக இருந்து முடித்தபின் பதவி வகிக்கத் தடை.

(அ) ஒன்றிய அரசுப் பணித் தேர்வாணையத்தின் தலைவர் இந்திய அரசின் கீழோ ஒரு மாநில அரசின் கீழோ மேற்கொண்டு வேலை பெறுவதற்கு உரிமைத் தகவு அற்றவராவார்;

(ஆ) ஒரு மாநில அரசுப் பணித் தேர்வாணையத்தின் தலைவர், ஒன்றிய அரசுப் பணித் தேர்வாணையத்தின் தலைவராக அல்லது வேறு எந்த உறுப்பினராகவும் அல்லது வேறு எந்த மாநில அரசுப் பணித் தேர்வாணையத்தின் தலைவராகவும் அமர்த்தப்படுவதற்கு உரிமைத் தகவு பெற்றவராவார்; ஆனால் இந்திய அரசின் கீழோ ஒரு மாநில அரசின் கீழோ வேறு எந்த வேலை பெறுவதற்கும் உரிமைத் தகவு அற்றவராவார்;

(இ) ஒன்றிய அரசுப் பணித் தேர்வாணையத்தின் தலைவர் அல்லாத வேறு உறுப்பினர் ஒன்றிய அரசுப் பணித் தேர்வாணையத்தின் தலைவராகவோ, ஒரு மாநில அரசுப் பணித் தேர்வாணையத்தின் தலைவராகவோ அமர்த்தப்படுவதற்கு உரிமைத் தகவு பெற்றவராவார்; ஆனால் இந்திய அரசின் கீழோ ஒரு மாநில அரசின் கீழோ வேறு எந்த வேலை பெறுவதற்கும் உரிமைத் தகவு அற்றவராவார்;

(ஈ) ஒரு மாநில அரசுப் பணித் தேர்வாணையத்தின் தலைவர் அல்லாத வேறு உறுப்பினர் ஒன்றிய அரசுப் பணித் தேர்வாணையத்தின் தலைவர் அல்லது வேறு எந்த உறுப்பினராகவும் அல்லது அந்த அல்லது வேறு எந்த மாநில அரசுப்

*பணித் தேர்வாணையத்தின் தலைவராகவும் அமர்த்தப்படுவதற்கு உரிமைத் தகவு பெற்றவராவார். ஆனால் இந்திய அரசின் கீழோ ஒரு மாநில அரசின் கீழோ எந்த வேறு வேலை பெறுவதற்கும் உரிமைத் தகவு அற்றவராவார்.*

ஐயா, அரசுப் பணித் தேர்வாணையங்கள், அவற்றின் பதவிக் காலம், தகுதிக் கூறுகளும் தகுதி நீக்கக் கூறுகளும், நீக்கமும் இடை நீக்கமும் ஆகியவை தொடர்பான கூறுகள் இவையே. இங்கே இந்த உறுப்புகளில் உருவம் பெற்றுள்ள செய்திகளை, முதன்மையான செய்தி களை அவைக்கு மிகச் சுருக்கமாக எடுத்தியம்ப விரும்புகிறேன்.

முதற் கூறு அரசுப் பணித் தேர்வாணையத்தின் பதவிக் காலம் தொடர்பானது. இதுபற்றி உறுப்பு 285இல் சொல்லப்படுகிறது. இந்த உறுப்பில் அடங்கிய வழிவகைகளின்படி அரசுப் பணித் தேர்வாணைய உறுப்பினரின் பதவிக் காலம் ஆறாண்டுகள் என்றும், ஒன்றியத் தேர் வாணையத்தைப் பொறுத்தவரை அவர் 65 வயது அடையும் வரை என்றும், ஒரு மாநிலத் தேர்வாணையத்தைப் பொறுத்தவரை அவர் 60 வயது அடையும்வரை என்றும் நிர்ணயிக்கப்படுகிறது. இது பதவிக் காலம் தொடர்பானது.

அடுத்து, அரசுப் பணித் தேர்வாணைய உறுப்பினர்களின் நீக்கம் பற்றிய பிரச்சினைக்கு வருகிறேன். இதுபற்றி உறுப்பு 285-Aஇல் சொல்லப்படுகிறது. இந்த உறுப்பின் வழிவகைகளின்படி அரசுப் பணித் தேர்வாணைய உறுப்பினர் நெறிதவறி நடந்து கொண்டதாக மெய்ப்பிக்கப்பட்டால் அவரை குடியரசுத் தலைவர் பதவியிலிருந்து நீக்கலாம். தானாகத் தகுதி இழப்பதன் காரணத்தினாலும் அவரை நீக்கலாம். இப்படித் தானாகத் தகுதி இழத்தல் மூன்று நேர்வுகளின் விளைவாக நிகழ முடியும். ஒன்று கடன் தீர்க்க இயலாமை; இரண் டாவது வேறு வேலை எதிலும் ஈடுபடுதல்; மூன்றாவது, அவர் உள்ளத் தால் அல்லது உடலால் நோயுறுதல். நெறி தவறுதல் தொடர்பான வழிவகை சற்றே தனித்தன்மையானது. உயர்நீதிமன்ற நீதிபதிகள் அல்லது உச்சநீதிமன்ற நீதிபதிகள் பதவி நீக்கத்தைப் பொறுத்தவரை அவர்கள் நெறி தவறாமல் நடக்கும்போது பதவி வகிக்கிறார்கள் என்றும் அவர்களைப் பதவி நீக்கம் செய்வதற்கான ஒரு தீர்மானத்தை நாடாளுமன்றத்தின் ஈரவைகளும் நிறைவேற்றும் வரை அவர்களை நீக்க இயலாது என்றும் நாம் முன்பே நிறைவேற்றியுள்ள உறுப்பு களில் வழிவகை செய்யப்பட்டிருப்பது மதிப்பிற்குரிய அவையினருக்கு நினைவிருக்கும். அரசுப் பணித் தேர்வாணையத்தின் உறுப்பினர்களை நீக்க இப்படிப்பட்ட விறைப்பும் கடுமையும் வாய்ந்த வழிவகையைச்

செய்வது அவசியமற்றது என்று கருதப்படுகிறது. ஆகவே, உயர் நீதிமன்ற நீதிபதிகள் பதவி நீக்கம் செய்வதற்கு இந்திய அரசாங்கச் சட்டத்தில் அடங்கிய வழிவகைகளே அரசுப் பணித் தேர்வாணையத் தின் உறுப்பினர்களுக்கு அதே அளவு இடர்காப்பும், அதே அளவுப் பாதுகாப்பும் வழங்கிட போதுமானவையாக இருக்கும் என்று இந்த உறுப்பில் வழிவகை செய்யப்பட்டுள்ளது. இந்திய அரசாங்கச் சட் டத்தில் அடங்கிய வழிவகையில் கூட்டரசு நீதிமன்ற நீதிபதியையோ, உயர்நீதிமன்ற நீதிபதியையோ அகற்றுவதற்குத் தேவைப்படுவது என்னவென்று அவைக்கு நினைவிருக்குமென்று கருதுகிறேன்: உயர் நீதிமன்ற நீதிபதிகளைப் பொறுத்தவரை கூட்டரசு நீதிமன்றமும் கூட்டரசு நீதிமன்ற நீதிபதிகளைப் பொறுத்தவரை அரச மன்றமும் (Privy Council) விசாரணை நடத்த வேண்டும்; கூட்டரசு நீதிமன்ற நீதிபதியோ உயர்நீதிமன்ற நீதிபதியோ நெறிதவறி நடந்திருப்பதாக அறிக்கை அளிக்கப்பட்டதும் அவரை தலைமை ஆளுநர் பதவி நீக்கம் செய்யலாம். நெறி தவறி நடந்திருப்பதாக அறிக்கை அளிக்கப்பட் டதும் அவரை பதவி நீக்கம் செய்யலாம். நெறி தவறி நடத்தல் நிகழு மிடத்தெல்லாம் அரசுப் பணித் தேர்வாணையத்தைப் பதவி நீக்கம் செய்வது தொடர்பாகவும் இதே வழிவகையை நாம் ஏற்றுக் கொண் டுள்ளோம்.

தானாக தகுதி இழக்கும் நிலைகளைப் பொறுத்தவரை எவ்விதப் பூசலும் எழக்கூடும் என நான் கருதவில்லை; ஏனென்றால் அரசுப் பணித் தேர்வாணையத்தின் உறுப்பினர் கடன் தீர்க்க இயலாத வராகி விட்டால் அவரது நேர்மையை முழுமையாக நம்பி ஏற்றுக் கொள்ள முடியாது என்பதும், ஆகவே இது ஒருவகையில் தானாகத் தகுதி இழக்கச் செய்யும் கூறாக செயல்பட வேண்டும் என்பதும் கண்கூடு. இதேபோல் அரசுப் பணித் தேர்வாணையத்தின் உறுப்பினர் - இவர் அரசின் முழு நேர அலுவலர் என்பதில் ஐயமில்லை - இயன்ற வரை முழுமையான அளவிற்குத் தன் கடமைகளை நிறைவேற்று வதற்கும், தன் நேரம் அனைத்தையும் செலவிடுவதற்கும் பதிலாக வேறு ஏதேனும் வேலையில் தன் நேரத்தில் ஒரு பகுதியைச் செலவிடு வாரானால் அதுவும் தானாகத் தகுதியிழக்கச் செய்திடும் காரணமாக அமைந்திடும். அதேபோல், மூன்றாம் தகுதி நீக்கக்கூறு அதாவது உடலாலும் உள்ளத்தாலும் நோயுறுதல் என்பதும் தானாகத் தகுதியிழப் பதற்கு ஒரு பொருத்தமான காரணமாகக் கருதப்படலாம் என்பதில் எவ்விதப் பூசலுமில்லை. உறுப்பு 285-Aஐ வாசிக்கையில் உச்சநீதி மன்றம் விசாரணை நடத்தும் காலத்தில் அரசுப் பணிகள் தேர்

வாணையத்தின் உறுப்பினரை இடைநீக்கம் செய்வதற்கு வழிவகை செயயப்பட்டிருப்பதும் அவை உறுப்பினர்களுக்கு நினைவிருக்கும். இந்த வழிவகை தேவையானதே என்று கருதுகிறேன். ஓர் உறுப்பினர் நெறி தவறி நடந்த குற்றம் புரிந்திருப்பதாகக் குடியரசுத் தலைவர் கருதும் இடத்தே உச்சநீதிமன்றம் அவருக்குச் சாதகமாக அறிக்கை அளித்து அவரது நல்லொழுக்கத்திற்குச் சான்றளிக்காவிட்டால் அரசுப் பணித் தேர்வாணையத்தின் உறுப்பினராகத் தொடர்ந்து செயல்படுவது விரும்பத்தக்கதன்று.

இப்போது, அரசுப் பணித் தேர்வாணையத்தில் - ஒன்றியத் தேர்வாணையம், மாநிலத் தேர்வாணையம் இரண்டிலும் - உறுப்பினர்களாய் இருப்பவர்களின் வேலை அல்லது வேலைக்கான உரிமைத்தகவு தொடர்பான மற்றொரு முக்கியப் பிரச்சினைக்கு வருகிறேன். உறுப்பு 285 கூறு (3)இன்படி மைய அரசுப் பணித் தேர் வாணையத்தின் தலைவரானாலும், உறுப்பினர்களானாலும் அதே போல் மாநில அரசுப் பணித் தேர்வாணையத்தின் தலைவரானாலும் உறுப்பினர்களானாலும் அதே பதவிகளில் மறுபடியும் அமர்த்தப் படுவதற்கு உரிமைத்தகவு அற்றவர்களாக்கி உள்ளோம் என்பதை அவை உறுப்பினர்கள் காண்பார்கள்; அதாவது, ஒரு தலைவர் அல்ல உறுப்பினரின் பதவிக்காலம் முடிந்து விட்டால், அவர் ஒன்றிய ஆணையத்தின் தலைவரானாலும் சரி, அல்லது மாநில ஆணையத்தின் தலைவரானாலும் சரி, மறுபடியும் அமர்த்தப்பட மாட்டார் என்று சொல்லியுள்ளோம். இது மெச்சத்தக்க வழிவகை என்று கருதுகிறேன்; ஏனெனில் மறுபடியும் அமர்த்தப்படலாம் அல்லது அதே பதவியில் நீடிக்கலாம் என்று நம்பிக்கை எதுவும் அளிக்கப்படுமானால் அது அவ்வுறுப்பினருக்கு ஒரு வகையில் ஆசை காட்டுவதாக அமையக் கூடும். தன் கடமைகளை நிறைவேற் றுகையில் அவரிடமிருந்து எதிர்பார்க்கப்படும் அதே நடுநிலை தவறாமையுடன் செயலாற்றா திருக்க இது அவரைத் தூண்டக்கூடும். ஆகவே வரைவு உறுப்பில் இப்படி ஓர் அடிப்படைத் தடைக்கு அடுத்து இரண்டாவதாகச் சொல்ல வேண்டியது என்னவென்றால், உறுப்பு 285-C-இன்படி இவர் களில் எவரும் வேறு எந்தப் பதவிகளிலும் வேலை செய்வதற்கு உரிமைத் தகவு அற்றவராவார் என்று ஒரு வழிவகையும் உள்ளது. ஆகவே இரட்டைத் தகுதி நீக்கக்கூறு உள்ளது. அவர்கள் தங்கள் பதவி யில் நீடிப்பதற்கு அனுமதியுமில்லை, வேறு எந்தப் பதவிகளிலும் அவர்களை அமர்த்துவதற்கு வழிவகையும் இல்லை. இப்போது விதிவிலக்குகள், அதாவது அவர்களை அமர்த்தக்கூடிய நேர்வுகள் பின்வருபவை மட்டுமே:

ஒரு மாநில அரசுப் பணித் தேர்வாணையத்தின் தலைவர் ஒன்றிய ஆணையத்தின் தலைவராகவோ, உறுப்பினராகவோ, வேறு ஒரு மாநில ஆணையத்தின் தலைவராகவோ முடியும்.

இரண்டாவதாக, ஒன்றிய ஆணையத்தின் உறுப்பினர்கள் ஒன்றிய ஆணையம், அல்லது வேறு ஒரு மாநில ஆணையத்தின் தலைவராக முடியும்.

மூன்றாவதாக, மாநில ஆணையத்தின் உறுப்பினர்கள் ஒன்றிய ஆணையத்தின் தலைவர் அல்லது உறுப்பினராக முடியும் அல்லது ஒரு மாநில ஆணையத்தின் தலைவராக முடியும்.

அதாவது விதிவிலக்குகளாவன: ஒன்றிய அரசுப் பணித் தேர்வாணையத்தின் உறுப்பினராயிருக்கும் ஒருவர் மாநில அரசுப் பணித் தேர்வாணையத்தின் தலைவராகலாம். மாநில அரசுப் பணித் தேர்வாணையத்தின் தலைவராக இருப்பவர் ஒன்றிய அரசுப் பணிகள் தேர்வாணையத்தின் தலைவராகலாம் அல்லது ஒன்றிய அரசுப் பணிகள் தேர்வாணையத்தின் உறுப்பினராகலாம். குறிப்பிடப்பட வேண்டிய முக்கிய செய்தி இதுதான்: ஒரு மாநில ஆணையத்தின் தலைவரோ, உறுப்பினரோ அதே அரசின் கீழ் வேலை பெற முடியாது. அவர் வேறொரு மாநிலத்தால் தேர்வாணையத் தலைவராக அமர்த்தப்படலாம், அல்லது மைய அரசினால் ஒன்றிய அரசுப் பணி தேர்வாணையத்தின் தலைவராகவோ அல்லது உறுப்பினராகவோ அமர்த்தப்படலாம். அதே பதவியில் அல்லது வேறொரு பதவியில் தொடர்ந்து வேலை கொடுப்பதன் வாயிலாக மாநில அரசு எவ்வகையிலும் ஆதரவு காட்டுவதற்கு இடமளிக்கக் கூடாதென்பதே நோக்கம். இந்த வழிவகைகளைக் கொண்டு ஆணைய உறுப்பினர்கள் எதிர்பார்க்கப்படும் அளவிற்கு சுயேச்சையானவர்களாக இருப்பார்கள் என்று நம்பப்படுகிறது.

விளக்கம் தேவைப்படுகின்ற வேறு செய்தி ஏதுமிருப்பதாக நான் நினைக்கவில்லை.

**திரு. லட்சுமி நாராயணசாகு:** கூட்டு ஆணையங்களின் உறுப்பினர்களின் நிலை என்ன?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** கூட்டு ஆணையம் என்பது மாநில ஆணையமே, உறுப்பு 284 இன் கூறு (4)இல் இது வரையறுக்கப்பட்டுள்ளது.

*டாக்டர் மனோமோகன்தாஸ் (மேற்கு வங்காளம்: பொது):* 285-A பற்றிய சில செய்திகளில் தெளிவுபெற விரும்புகிறேன். உச்ச நீதிமன்றமானது தன் பார்வைக்குக் குடியரசுத் தலைவர் அனுப்பி வைத்ததின் பேரில், அரசுப் பணித் தேர்வாணையத்தின் தலைவரையோ, வேறோர் உறுப்பினரையோ பதவி நீக்கம் செய்ய வேண்டும் என்று அறிக்கை அளித்தால், குடியரசுத் தலைவர் அவரை பதவி நீக்கம் செய்வது கட்டாயமாகுமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** உறுதியாக.

**திரு. நசிருதீன் அகமது:** புதிய வரைவுக்கும் மூல வரைவுக்கும் இடையிலான வேறுபாட்டை அவைக்கு விளக்கும்படி மாண்புமிகு உறுப்பினரை நீங்கள் கேட்டுள்ளீர்கள். உண்மையான மாற்றங்களைச் சரிவர மதிப்பீடு செய்வதற்கு அது துணைசெய்வதாக இருக்கும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** விவாதப் போக்கில் பிரச்சினை ஏதேனும் எழுப்பப்பட்டால் நான் விடையளிக்கையில் அதனை விளக்குவேன்.

**திரு. நசிருதீன் அகமது:** எதிர்ப்பதா, எதிர்க்காதிருப்பதா என்று எனக்கு தெரியவில்லை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இரு வரைவுகளையும் நீங்கள் படித்திருக்க வேண்டும். காற்புள்ளிகளையும், அரைப் புள்ளிகளையும் மட்டுமே நீங்கள் படிக்காமல் விட்டிருக்கக் கூடும்.

**திரு. அவைத் தலைவர்:** திருத்தங்கள் இப்போது எடுத்துக் கொள்வேன்.

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அவைத் தலைவர் அவர்களே, நான் அவையில் பணிந்து முன்வைத்துள்ள உறுப்புகள் மீது தெரிவிக்கப்பட்டுள்ள விமர்சனத்திற்கு விடையளிக்கையில் ஒரு சில கூறுகளைப் பற்றி மட்டுமே ஒரிரு வார்த்தை கூற விரும்புகிறேன்.

---

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 22 1949, பக்கம் 592-93.

முதல் விமர்சனம் அரசுப் பணித் தேர்வாணையத்தின் இயைபு தொடர்பானதாகும். அரசுப் பணித் தேர்வாணையத்தின் உறுப்பினர் களில் குறைந்தது பாதிப் பேர் (பிரித்தானிய) முடியரசின் பணியாளர் களாக இருந்திருக்க வேண்டும் என்று செய்யப்பட்ட இட ஒதுக்கீட்டுக்கு, இது உண்மையில் இந்திய சிவில் பணி (ICS) ஆட்களுக்காகத் தயா ரிக்கப்பட்ட சொர்க்கம் என்ற அடிப்படையில் எதிர்ப்பு தெரிவிக்கப் பட்டுள்ளது. இப்படிக் குறை கூறி இருப்பவர்கள் அரசுப் பணித் தேர் வாணையத்தின் நோக்கத்தையும் முக்கியத்துவத்தையும் பணிகளை யும் புரிந்து கொண்டிருப்பதாகத் தெரியவில்லை என்று சொல்ல வருத்தமாக இருக்கிறது. அரசுப் பணித் தேர்வாணையத்தின் பணி அரசுப் பணிக்குப் பொருத்தமான ஆட்களை தெரிந்தெடுப்பதாகும். பொருத்தப்பாடு பற்றிய பிரச்சினையில் முடிவுக்கு வரத் தேவைப் படும் கணிப்புத் திறனுக்கு, கணிக்கும்படி கேட்டுக் கொள்ளப்படு கிறவரின் தரப்பில் குறிப்பிட்ட அளவு அனுபவம் தேவைப்படுகிறது. ஏற்கெனவே முடியரசுப் பணியில் இருப்பவரைக் காட்டிலும் எவரும் இவ்வகையில் சிறந்த கணிப்புத் திறன் உடையவராய் இருக்க முடியாது என்பது கண்கூடு. ஆகவே பணியில் இருப்பவர்களுக்கு ஒரு குறிப் பிட்ட விகிதம் ஒதுக்கீடு செய்யப்படுவதற்குக் காரணம், தேவையான அனுபவம் வாய்ந்தவர்களும் முடிந்தவரை மிகச் சிறந்த முறையில் தங்கள் கடமைகளைச் செய்யும் திறன் கொண்டவர்களுமான ஆட் களையும் பெற விரும்புவதுதானே தவிர, ஏற்கெனவே முடியரசுப் பணியில் இருப்பவர்களுக்கு உதவும் விருப்பம் அல்லவே அல்ல. ஆயினும் என் நண்பர் திரு. கபூர் ஒரு திருத்தம் கொண்டுவர அணியமா யிருந்தால், நான் அதை ஏற்றுக்கொள்ள அணியமாயிருக்கிறேன்.

''ஆனால் குறைந்தது சரிபாதி'' என்று சொல்வதற்குப் பதிலாக ''ஆனால் ஏறத்தாழ சரிபாதி'' என்று சொல்ல அணியமாயுள்ளேன்.

**திரு. எச்.வி. காமத்:** ''பாதிக்கு மேற்படாமல்'' என்று ஏன் சொல்லக்கூடாது?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** கூடாது. என்னால் முடிந்த அளவுக்குச் சிறப்பாகச் செய்துள்ளேன்.

இரண்டாவது பிரச்சினையைப் பொறுத்தவரை அரசுப் பணித் தேர்வாணையத்தில் இருந்தவர்கள் அரசின்கீழ் கௌரவப் பதவி ஏற்றுக்கொள்ள அனுமதிக்கப்பட வேண்டும் என்ற யோசனையை

ஏற்றுக்கொள்வதில் இப்போது தனிப்பட்ட முறையில் எனக்கு நாட்ட மில்லை. எமது முழு நோக்கமும் அரசுப் பணித் தேர்வாணையத்தின் உறுப்பினர்களை நிர்வாகத் துறையைச் சாராமல் சுயேச்சையாக இருக்கச் செய்வதே. அவர்களை நிர்வாகத் துறையைச் சாராமல் இருக்கச் செய்யும் வழிகளில் ஒன்று அவர்களைத் தங்கள் கடமையி லிருந்து விலகச் செய்வதற்கு நிர்வாகத் துறை ஆசை காட்டப் பயன் படுத்தக் கூடிய பதவி எதனையும் அவர்களுக்கு இல்லாமற் செய்வ தாகும். ஆதாயமற்ற கௌரவ பதவிக்கு ஊதியம் இல்லை என்பது உண்மைதான். ஆனால் அனைவருக்கும் தெரிந்ததுதான், பதவியின் காரணமாகக் கிடைப்பது ஊதியம் மட்டுமே அல்ல. ''கொடுக்கல், பொறுக்கல், எடுக்கல்'' என்ற ஒன்றும் உள்ளது. ஆனால் இப்படி எதுவுமில்லை என்றாலும் கூட, பதவியில் ஒருவருக்குக் குறிப்பிட்ட அளவு செல்வாக்கு வந்து சேருகிறது. சம்பளம் இல்லை என்றாலும் ஓரளவு செல்வாக்குப் பெறும்படியான பதவியில் இத்தகைய ஒருவர் அமர்த்தப்படும் சாத்தியப்பாட்டுக்கே இடமில்லாமல் செய்து விடுவது விரும்பத்தக்கது என்று நான் கருதுகிறேன்.

இப்போது என் நண்பர் திரு. குன்ஸ்ருவின் திருத்தத்திற்கு வரு கிறேன். அரசுப் பணித் தேர்வாணையத்தின்கீழ் வேலைக்கு அமர்த்து வதற்கான பணிகளுக்கும் உயர்நீதிமன்றம், உச்சநீதிமன்றம் மற்றும் தலைமைக் கணக்குத் தணிக்கையாளரின் கீழ் வேலைக்கு அமர்த்து வதற்கான பணிகளுக்கும் இடையில் கண்கூடாகவே வேறுபாடு காட்டப்படுகிறது என்று அவர் சொல்வதை நான் அப்படியே ஏற்றுக் கொள்கிறேன். நாம் ஏன் இப்படி வேறுபாடு காட்டியுள்ளோம் என்ப தற்கு விளக்கமளிக்க விரும்புகிறேன். உயர்நீதிமன்ற, உச்சநீதிமன்றப் பணியாளர்களைப் பொறுத்தவரை, எப்படியும் உயர் பதவிகளை வகிப் பவர்களாவது குறிப்பிட்ட அளவுக்கு நீதியியல் விருப்புரிமையைச் செயல்படுத்த வேண்டியவர்களாவர். ஆகவே அவர்களின் சம்பளங் களும் ஓய்வூதியங்களும் குடியரசுத் தலைவரின் ஒப்புதலோடு தலைமை நீதிபதியால் நிர்ணயிக்கப்பட வேண்டும் என்று மட்டுமல்லாமல், அவர்களின் பணி நிலைமைகளையும் கூட தலைமை நீதிபதியே நிர்ண யிக்கட்டும் என்று விட்டுவிட வேண்டும் என்றும் கருதினோம். அரசுப் பணித் தேர்வாணையத்தைப் பொறுத்தவரை பணியாளர்களில் பலரும் - உண்மையில் அனைத்துப் பணியாளர்களுமே - ''அமைச்சுப் பணிகள்'' என்று நாம் குறிப்பிடக் கூடியவற்றில் மட்டுமே ஈடுபட் டிருப்பவர்கள்; இந்தக் கடமைகளில் ஆணையுரிமையோ விருப் புரிமையோ எதற்கும் இடம் இல்லை. அதனால்தான் நாம் இப்படி

வேறுபாடு காட்டியுள்ளோம். ஆனால் என் வாதுரை வலுவானதாகத் தோன்றினாலும் அனேகமாய் அப்படி இல்லை என்பது எனக்கே தெரிகிறது. ஆனாலும் பின்னொரு கட்டத்தில் மாற்றம் செய்ய வேண்டிய தேவை இருப்பதாக நான் கண்டால் தேவையான திருத் தத்தை அவையின் முன் கொண்டு வருவேன் என்ற உறுதிமொழியின் அடிப்படையில் உறுப்பு நிறைவேற அனுமதிக்கும்படி என் மதிப்பிற் குரிய நண்பர் பண்டித குன்ஸ்ருக்கு யோசனை சொல்வேன்.

ஐயா, உறுப்பு 285-Aக்கான என் திருத்தத்தின் உருட்டச்சுப் படியில் உட்கூறு 3 (ஆ)இல் 'ஊதிய வேலை எதனிலும்' என்றிருக்க வேண்டும் என்பது என் கவனத்திற்குக் கொண்டுவரப்பட்டுள்ளது. அங்கு 'எவரது வேலையிலும்' என்று தவறாக அச்சிடப்பட்டுள்ளது. தவறு சரி செய்யப் படும் என்று நம்புகிறேன்.

பண்டித குன்ஸ்ருவிடம் நான் முன்பே சொன்னது போல் வரைவுக் குழுவினர் இந்தப் பிரச்சினையைப் பரிசீலிப்பார்கள். மாற்றம் ஏதும் செய்வதற்கு காரணங்கள் இருப்பதாக அவர்கள் கருதி னால் நிலையைச் சரிசெய்யும் பொருட்டு அவையின் அனுமதியுடன் ஒரு திருத்தத்தை முன்வைப்பார்கள்.

**திரு. அவைத் தலைவர்:** இப்போது திருத்தங்களை முதலில் வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

பிரச்சினை இதுதான்:

> "மேற்கண்ட திருத்தம் எண் 3இல் முன்மொழியப்படும் உறுப்பு 285 கூறு (1)க் கான துணைவிதியில் 'சரிபாதி' என்ற சொல்லுக்குப் பதிலாக 'மூன்றில் ஒரு பங்கு' என்ற சொற்களை இடம்பெறச் செய்யலாம்.

**திரு. ஜஸ்பத்ராய் கபூர்:** இதனிடத்தில் 'ஏறத்தாழ சரிபாதி' என்று வைத்துக்கொள்ள டாக்டர் அம்பேத்கர் தெரிவித்த யோசனையை நான் ஏற்றுக்கொள்கிறேன்.

**திரு. அவைத் தலைவர்:** அப்படியானால் இதனை வாக்கெடுப் புக்கு விடுகிறேன். பிரச்சினை இதுதான்:

> "மேற்கண்ட திருத்தம் 3இல் முன்மொழியப்படும் உறுப்பு 285 கூறு (1)க்கான துணை விதியில் 'குறைந்தது சரிபாதி' என்ற சொற்களுக்குப் பதிலாக 'ஏறத்தாழ சரிபாதி' என்ற சொற்களை இடம்பெறச் செய்யலாம்.

*(திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது. திருத்தப்பட்ட வடிவத்தில் உறுப்பு 285 அரசமைப்புச்சட்டத்தில் சேர்க்கப்பட்டது.)*

★ ★ ★

## உறுப்புகள் 286 முதல் 288-A முடிய

[1]**திரு. அவைத் தலைவர்:** நாம் இப்போது உறுப்பு 286ஐயும் அடுத்துவரும் உறுப்புகளையும் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்வோம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் (பம்பாய்: பொது):** ஐயா, உங்கள் அனுமதியுடன் திருத்தங்கள் எண் 12, 16, 17, 19 ஆகியவற்றை ஒன்றாகச் சேர்த்து நான் முன்மொழியலாமா? இவை அனைத்தும் ஒரே பொருள் குறித்தவை. பொதுவான விவாதம் நடத்தலாம், அடுத்து நீங்கள் திருத்தம் ஒவ்வொன்றையும் தனித்தனியே வாக்கெடுப்புக்கு விடலாம்.

**திரு. அவைத் தலைவர்:** சரி, நான் உடன்படுகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் முன்மொழிவது:

"உறுப்பு 286க்குப் பதிலாகப் பின்வரும் உறுப்பை இடம்பெறச் செய்யலாம்:

அரசுப் பணித் தேர்வாணையத்தின் செயல்பாடுகள்

286. (1) முறையே ஒன்றியத்தின் பணிகளுக்கும் மாநிலத்தின் பணிகளுக்கும் ஆளமர்த்தங்களுக்குத் தேர்வுகள் நடத்துவது ஒன்றிய மற்றும் மாநில அரசுப் பணித் தேர்வாணையங்களின் கடமையாகும்.

(2) தனித் தகுதிகள் உடைய தேர்வர்கள் (Candidates) தேவைப்படுகிற பணிகள் எதற்கும் ஏதேனும் இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட மாநிலங்கள் கூட்டு ஆளெடுப்புத் திட்டங்களை வகுப்பதிலும் செயல்படுத்துவதிலும் தமக்கு உதவும்படி கேட்டுக்கொண்டால், அவ்வாறே அவற்றிற்கு உதவுவது ஒன்றிய அரசுப் பணித் தேர்வாணையத்தின் கடமையாகும்.

(3) நேர்வைப் பொறுத்து ஒன்றிய அரசுப் பணித் தேர்வாணையத்தையோ, மாநில அரசுப் பணித் தேர்வாணையத்தையோ பின்வருபவன குறித்துக் கலந்து கொள்ள வேண்டும்.

(அ) குடியியல் பணிகளுக்கும் குடியியல் பதவிகளுக்கும் ஆளெடுக்கும் வழிமுறைகள் தொடர்பான அனைத்துச் செய்திகளும்;

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 23 1949, பக்கம் 597-98.

(ஆ) குடியியல் பணிகளுக்கும் பதவிகளுக்கும் அமர்த்தங்கள் செய்வதிலும், பதவி உயர்வுகள் அளிப்பதிலும், ஒரு பணியிலிருந்து வேறொரு பணிக்கான மாற்றங்களிலும் கடைப்பிடிக்க வேண்டிய கொள்கைகள் மற்றும் இத்தகைய அமர்த்தங்கள், பதவி உயர்வுகள் அல்லது மாற்றல்களுக்கான தேர்வர்களின் பொருத்தப்பாடு;

(இ) இந்திய அரசு அல்லது ஒரு மாநில அரசின் கீழ் குடியியல் பொறுப்பில் பணிபுரிகிற ஒருவரைப் பாதிக்கும் ஒழுங்குக் கட்டுப்பாட்டுப் பிரச்சினை - இவற்றோடு தொடர்புள்ள சான்றுக் கோவைகள் அல்லது விண்ணப்பங்கள் உட்பட -

(ஈ) இந்திய அரசு அல்லது ஒரு மாநில அரசு அல்லது பிரித்தானிய முடியரசின் கீழ் குடியியல் பொறுப்பில் பணியாற்றிக் கொண்டிருக்கிற அல்லது பணியாற்றியுள்ள ஒருவர் தன் கடமையை நிறைவேற்றுகையில் செய்த அல்லது செய்ததாகக் கருதுகிற செயல்கள் தொடர்பாய்த் தனக்கெதிராகத் தொடுக்கப்பட்ட சட்ட நடவடிக்கைகளில் தன்னைக் காத்துக் கொள்வதற்காக ஏற்பட்டிருக்கக்கூடிய எவ்வித செலவினங்களையும் நேர்வைப் பொறுத்து இந்தியத் தொகுப்பு நிதியிலிருந்தோ மாநிலத் தொகுப்பு நிதியிலிருந்தோ எடுத்துக் கொடுக்க வேண்டும் என்று கேட்கிற அல்லது அவர் தொடர்பாகக் கேட்கப்படுகிற எந்தவோர் உரிமை கோரிக்கையும்;

(உ) இந்திய அரசு அல்லது ஒரு மாநில அரசு அல்லது பிரித்தானிய முடியரசின் கீழ் குடியியல் பொறுப்பில் பணியாற்றுகையில் ஒருவர் அடைந்த ஊறுகள் தொடர்பாகப் பரிவூதியம் வழங்குவதற்கான எந்தவோர் உரிமைக் கோரிக்கையும், இவ்வாறு வழங்கப்படும் தொகை தொடர்பான எந்தவொரு பிரச்சினையும்;

இவ்வாறு தங்கள் பார்வைக்கு அனுப்பப்படும் எப்பிரச்சினை குறித்தும், நேர்வைப் பொறுத்து குடியரசுத் தலைவரோ, மாநிலத்தின் ஆளுநரோ ஆட்சியாளரோ தங்கள் பார்வைக்கு அனுப்பக்கூடிய எந்தவொரு பிரச்சினை குறித்தும் அறிவுரை சொல்வது அரசுப் பணித் தேர்வாணையத்தின் கடமையாகும்:

ஆனால் அனைத்திந்தியப் பணிகள் தொடர்பாக, ஒன்றிய விவகாரங்களுடன் தொடர்புடைய மற்றப் பணிகள் மற்றும் பதவிகள் தொடர்பாகவும் கூட, குடியரசுத் தலைவரும், ஒரு மாநிலத்தின் விவகாரங்களுடன் தொடர்புடைய மற்றப் பணிகள் மற்றும் பதவிகள் தொடர்பாக, நேர்வைப் பொறுத்து, ஆளுநர் அல்லது ஆட்சியாளரும், பொதுவாக அல்லது குறிப்பிட்ட வகை நேர்வுகளில் அல்லது குறிப்பிட்ட நிலைமைகளில் எந்தெந்தப் பிரச்சினைகளில் அரசுப் பணித் தேர்வாணையத்தை கலந்துகொள்ள வேண்டியிருக்காது என்று குறித்துரைக்கும் விதிமுறைகளை வகுக்கலாம்;

(4) ஒன்றியத்தில் அல்லது ஒரு மாநிலத்தில் பிற்பட்ட வகுப்பைச் சேர்ந்த குடிமக்கள் எவருக்கும் ஆதரவாக ஆளமர்த்தங்கள் மற்றும் பதவிகளில் இட ஒதுக்கீடு செய்ய வேண்டிய விதம் குறித்து அரசுப் பணித் தேர்வாணையத்தைக் கலந்து கொள்ள வேண்டுமெனக் கோரும்படியான எதுவும் இந்த உறுப்பின் கூறு (3) இல் இல்லை;

(5) இந்த உறுப்பின் கூறு (3)க்கான துணை விதியின்படி குடியரசுத் தலைவராலோ, ஒரு மாநிலத்தின் ஆளுநர் அல்லது ஆட்சியாளராலோ வகுக்கப்படும் எல்லா விதிமுறைகளும், அவை வகுக்கப்பட்ட பின் கூடிய விரைவில்,

குறைந்தது பதினான்கு நாட்களுக்கு, நேர்வைப் பொறுத்து நாடாளுமன்ற அவைகள் ஒவ்வொன்றிலும் அல்லது மாநிலச் சட்டமன்றத்தின் அவை அல்லது அவைகள் ஒவ்வொன்றிலும் வைக்கப்படும்; இந்த விதிமுறைகள் இப்படி வைக்கப்படும் அமர்வின்போது நாடாளுமன்றத்தின் ஈரவைகளும், மாநிலச் சட்டமன்றத்தின் அவை அல்லது ஈரவைகளும் நீக்கம் என்ற வகையிலோ திருத்தம் என்ற வகையிலோ செய்யக்கூடிய மாற்றங்களுக்கு உட்பட்டவையாகும்.''

''உறுப்பு 287க்குப் பதிலாகப் பின்வருவதை இடம்பெறச்செய்யலாம்:

அரசுப் பணித் தேர்வாணையத்தின் செயல்பாடுகளை விரிவுபடுத்துவதற்கான அதிகாரம்

287. நாடாளுமன்றமோ, நேர்வைப் பொறுத்து ஒரு மாநிலச் சட்டமன்றமோ இயற்றக்கூடிய ஒரு சட்டமானது, ஒன்றியம் அல்லது மாநிலத்தின் பணிகள் தொடர்பாகவும் மற்றும் எந்தவோர் உள்ளாட்சி அமைப்பு அல்லது சட்டம் கொண்டு அமைக்கப்படும் வேறு கூட்டு அமைப்பு அல்லது பொது நிறுவனத்தின் பணிகள் தொடர்பாகவும் கூட ஒன்றிய அரசுப் பணித் தேர்வாணையம் அல்லது மாநில அரசுப் பணித் தேர்வாணையம் கூடுதல் செயல்பாடுகளை நிறைவேற்றுவதற்கு வழிவகை செய்திடலாம்.

''உறுப்பு 288க்குப் பதிலாகப் பின்வருவதை இடம்பெறச் செய்யலாம்:

அரசுப் பணித் தேர்வாணையங்களின் செலவினங்கள்

288. ஆணையத்தின் உறுப்பினர்கள் அல்லது பணியாளர்களுக்கு செலுத்தப்படக்கூடிய அல்லது அவர்கள் தொடர்பான சம்பளங்கள், படிகள், ஓய்வூதியங்கள் உட்பட ஒன்றிய அல்லது ஒரு மாநில அரசுப் பணித் தேர்வாணையத்தின் செலவினங்கள் இந்தியத் தொகுப்பு நிதியிலிருந்தோ, நேர்வைப் பொறுத்து மாநிலத் தொகுப்பு நிதியிலிருந்தோ எடுத்தளிக்கப்படும்.''

''திருத்தங்கள் பட்டியலின் திருத்தம் எண் 3075க்குப் பதிலாகப் பின்வருவதை இடம்பெறச் செய்யலாம்:

''உறுப்பு 288க்குப் பிறகு பின்வரும் புதிய உறுப்பு சேர்க்கப்படலாம்:

அரசுப் பணித் தேர்வாணையங்களின் அறிக்கைகள்

288-A. (1) ஒன்றிய ஆணையம் தான் செய்த வேலை தொடர்பாக ஆண்டுதோறும் குடியரசுத் தலைவருக்கு அறிக்கை அளிப்பது அதன் கடமையாகும்; இத்தகைய அறிக்கை வரப்பெற்றதும், குடியரசுத் தலைவர், ஆணையத்தின் அறிவுரை ஏற்கப்படாத நேர்வுகள் இருப்பின் அவை தொடர்பாக இந்த ஏற்பின்மைக்கான காரணங்களை விளக்குகிற ஒரு குறிப்புரையுடன் கூட, அவ்வறிக்கையின் படி ஒன்றினை நாடாளுமன்ற அவைகள் ஒவ்வொன்றிலும் முன்வைக்கச் செய்வார்;

(2) ஒரு மாநில ஆணையம் தான் செய்த வேலை தொடர்பாக ஆண்டுதோறும் மாநிலத்தின் ஆளுநருக்கோ, ஆட்சியாளருக்கோ அறிக்கை அளிப்பது அதன் கடமையாகும். ஒரு கூட்டு ஆணையம் எந்த மாநிலங்களின் தேவைகளுக்குப் பயன்பட்டதோ அந்த மாநிலங்கள் ஒவ்வொன்றின் ஆளுநர் அல்லது ஆட்சியாளரிடமும் தான் அந்த மாநிலம் தொடர்பாகச் செய்த வேலை குறித்து ஆண்டுதோறும் அறிக்கை அளிப்பது அந்தக் கூட்டு ஆணையத்தின் கடமையாகும். இவ்விரு நிலைகளிலுமே நேர்வைப் பொறுத்து ஆளுநரோ, ஆட்சியாளரோ

*இத்தகைய அறிக்கை வரப்பெற்றதும் ஆணையத்தின் அறிவுரை ஏற்கப்படாத நேர்வுகள் இருப்பின் அவை தொடர்பாக இந்த ஏற்பின்மைக்கான காரணங் களை விளக்குகிற ஒரு குறிப்புரையுடன் அவ்வறிக்கையின் படி ஒன்றினை மாநிலச் சட்டமன்றத்தில் முன்வைக்கச்செய்வார்.''*

உறுப்புகளுக்கான விளக்கங்கள் அவற்றிலேயே இருக்கின்றன. முக்கியக் கூறுகளில் எந்தவொன்றையும் தெளிவுபடுத்துவதற்காக இந்தக் கட்டத்தில் நான் எதுவும் சொல்லத் தேவையிருப்பதாகக் கருத வில்லை. ஏனென்றால் கூறுகள் எல்லாம் வெளிப்படையாகவே இருக் கின்றன. ஆகவே நான் சொல்ல வேண்டியவற்றை விவாத முடிவில் சொல்வேன். அநேகமாய் அப்போது விவாதத்தில் எழுப்பப்பட்ட கூறுகள் சிலவற்றிற்கு நான் ஏதேனும் விளக்கமளிப்பது அவசியமாக இருக்கலாம்.

ஐயா, நான் முன்மொழிகிறேன்.

★ ★ ★

[1]**திரு. அவைத் தலைவர்:** டாக்டர் அம்பேத்கர்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அவைத் தலைவர் அவர்களே, என் நண்பர்கள் திரு. அனந்தசயனம் ஐயங்கார், திரு. குன்ஸ்ரு ஆகியோர் நிகழ்த்திய உரைகளுக்குப் பிறகு, இங்கு எழுப் பப்பட்டுள்ள பல்வேறு வாதங்களுக்கு விடையளிக்க எனக்கு அதிக மாய் விட்டுவைக்கப்படவில்லை. கூறு (2) தேவையற்றது என்று ஜஸ்பத்ராய் கபூர் சொன்னார். அவர் சொன்னதில் எனக்கு உடன் பாடில்லை; ஏனென்றால் மூல உறுப்பு 284இல் பேசப்படும் செய்தி யிலிருந்து அறவே வேறுபட்ட ஒன்றைப் பற்றியதாகக் கூறு (2) உள்ளது. ஆகவே இரு உறுப்புகளையும் தக்கவைத்துக் கொள்வது அவசியம் என்று கருதுகிறேன்.

கொஞ்சமாவது நான் சொல்வதற்கு மிஞ்சியிருக்கிற ஒரே செய்தி அட்டவணைச் சாதிகள் மற்றும் பிற்பட்ட வகுப்புகள் குறித்து எழுப்பப்பட்ட பிரச்சினையே. அட்டவணைச் சாதிகள், அட்டவணைப் பழங்குடிகள் மற்றும் பிற்பட்ட வகுப்புகள் என்று அழைக்கப்படு பவனவற்றின் நலன்களைப் பாதுகாக்க உறுப்புகள் 296, 10 ஆகிய

1. *அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 23 1949, பக்கம் 629-630.*

இரண்டிலும் போதிய அளவிற்கு வழிவகை செய்யப்பட்டிருப்பதாகக் கூறலாமெனக் கருதுகிறேன். பின்னர் ஒரு கட்டத்தில் உறுப்பு 296ஐ நாம் பரிசீலிக்க வேண்டியிருக்கும். அட்டவணைச் சாதி அல்லது அட்டவணைப் பழங்குடி எனப்படுவதன் உறுப்பினர் ஒருவரை அல்லது பிற்பட்ட வகுப்புகளைச் சேர்ந்த உறுப்பினர் ஒருவரைக் குடியரசுத் தலைவர் அமர்த்துவதைக் கட்டாயமாக்க ஒரு வழிவகையைச் செய்வதால் பயன் ஏதும் விளையும் என நான் கருதவில்லை.

**திரு. ஏ.பி. தாக்கர் (சௌராஷ்டிரா):** ஏனையப் பிற்பட்ட வகுப்புகள்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அரசுப் பணித் தேர்வாணைய உறுப்பினரின் செயல்பாடு பொதுவான ஒன்றாகும். எந்தவொரு குறிப்பிட்ட வகுப்பின் நலன்களையும் பாதுகாப்பதற்காக அவர் அங்கு இருக்க முடியாது. ஒரு வேலையில் அமர்த்துவதற்கு மிகச் சிறந்த, மிகவும் திறன் வாய்ந்த தேர்வர் யார் என்பதைக் கண்டறியும் பொதுவான பிரச்சினையில் அவர் கருத்துச் செலுத்த வேண்டியிருக்கும். உண்மையான பாதுகாப்பு, உண்மையான பாதுகாப்பு முறை என்பது ஏற்றுக்கொள்ளப்பட்டு விட்டது; அதாவது இந்த வகுப்புகளைக் கொண்டு நிரப்புவதற்கான ஒரு குறிப்பிட்ட ஒதுக்கீட்டை நிர்ணயிக்க சட்டமன்றத்தை அனுமதிக்க வேண்டும். பிற்பட்ட வகுப்புகள் என்றால் என்ன என்பதை வரையறுக்கும்படியும் என்னைக் கேட்கிறார்கள். சரி, இந்த நாட்டைப் பொறுத்தவரை "பிற்பட்ட வகுப்புகள்" என்ற சொற்கள் அநேகமாய் ஆரம்பப் பாடம் என்றே நான் நினைக்கிறேன். "பிற்பட்ட வகுப்புகள்" என்பதைக் காட்டிலும் எளியதொரு சொல்லை என்னால் பயன்படுத்த முடியும் என்று நான் கருதவில்லை. பிற்பட்ட வகுப்பு என்றால் யார் என்பது மாகாணத்தில் ஒவ்வொருவருக்கும் தெரியும். ஆகவே சமூக நிலைமைகளை ஆராய்ந்து இந்த நாட்டில் பிற்பட்ட வகுப்புகளாகக் கருதப்பட வேண்டியவை எவை என்பதை அறிவதற்காக அமர்த்தப்பட இருக்கிற ஆணைக் குழுவிடம் இந்தப் பிரச்சினையை விட்டுவிடுவதே மேல் எனக் கருதுகிறேன். இந்த அரசமைப்புச் சட்டத்தில் இப்படித்தான் செய்யப்பட்டுள்ளது.

**திரு. ஏ.வி. தாக்கர்:** நான் கேட்க விரும்புகிறேன், இதனைச் செய்து முடிக்க பல்லாண்டுக் காலம் ஆகாதா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஆம், ஆனால் இடைக்காலத்தில் பிற்பட்ட வகுப்புகள் என்பனவற்றிற்காக எந்த மாகாண அரசும் வழிவகைகள் செய்வதற்குத் தடை ஏதுமில்லை. உறுப்பு 10இன்படி அவற்றிற்குத் தடையற்ற உரிமையுள்ளது. ஆகவே பணிகளுக்கு ஆள் சேர்ப்பதில் பிற்பட்ட வகுப்புகள் அல்லது அட்டவணைச் சாதிகளின் நலன்கள் புறக்கணிக்கப்படும் என்று அஞ்சுவதற்கு ஏதுமில்லை என்பதை பணிந்து தெரிவித்துக் கொள்கிறேன். என் நண்பர் பண்டித குன்ஸ்ரு சொன்னதுபோல் நான் அவையில் முன் வைத்துள்ள உறுப்புகள் வரைவு அரசமைப்புச் சட்டத்தில் முன்பிருந்தவற்றுடன் ஒப்பிடுகையில் நிச்சயமாக மிகப் பெரும் முன்னேற்றமே. என்னைப் பொறுத்தவரை சொல்வதென்றால், கனடா நாட்டுச் சட்டத்திலும் ஆஸ்திரேலியச் சட்டத்திலுமுள்ள வழிவகைகளை ஏராளமாகப் படித்துள்ளோம், ஒரு நடுவழியைக் கண்டறிவதில் நாம் வெற்றியடைந்துள்ளோம் என்பேன். இந்த நடுவழியை ஏற்றுக் கொள்வதில் எவ்வித இடர்ப்பாடும் அவைக்கு இருக்காது என்று நான் நம்புகிறேன்.

*(டாக்டர் அம்பேத்கர் முன்மொழிந்த வடிவத்தில் உறுப்பு 286 ஏற்றுக் கொள்ளப்பட்டு அரசமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.)*

## உறுப்பு 292

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் முன் மொழிவது:

''உறுப்பு 292க்குப் பதிலாகப் பின்வருவதை இடம்பெறச் செய்யலாம்:

292.(1) பின்வருவோர்க்கு மக்களவையில் இடங்கள் ஒதுக்கீடு செய்யப்படும்:

மக்களவையில் அட்டவணைச் சாதிகள் மற்றும் அட்டவணைப் பழங்குடிகளுக்கான ஒதுக்கீடு

(அ) அட்டவணைச் சாதிகள்:

(ஆ) அட்டவணைப் பழங்குடிகள், அசாமின் பழங்குடிப் பரப்புகளில் உள்ள அட்டவணைப் பழங்குடிகள் தவிர;

(இ) அசாமின் தன்னாட்சி மாவட்டங்களில் உள்ள அட்டவணைப் பழங்குடிகள்;

(2) இந்த உறுப்பின் கூறு (1)இன்படி எந்தவொரு மாநிலத்திலும் அட்டவணைச் சாதிகள் அல்லது அட்டவணைப் பழங்குடி

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 23 1949, பக்கம் 633.

களுக்காக ஒதுக்கீடு செய்யப்படும் இடங்களின் எண்ணிக்கைக்கும் மக்களவையில் அந்த மாநிலத்துக்கு ஒதுக்கப்படும் இடங்களின் மொத்த எண்ணிக்கைக்குமான விகிதமானது, நேர்வைப் பொறுத்து அம்மாநிலத்தில் உள்ள அட்டவணைச் சாதிகள் அல்லது அம் மாநிலத்திலோ அதன் ஒரு பகுதியிலோ உள்ள அட்டவணைப் பழங்குடிகளின் மக்கள் தொகைக்கும் அம்மாநிலத்தின் மொத்த மக்கள் தொகைக்குமான விகிதத்துக்குக் கூடுமானவரை நெருக்கமாய் இருக்கும்.''

இந்த உறுப்பு 292 என்பது இப்பிரச்சினையில் அறிவுரைக் குழு எடுத்த முடிவுகளின் துல்லியமான மறுபதிப்பே ஆகும். விளக்க மேதும் தேவைப்படுவதாக நான் கருதவில்லை.

**திரு. அவைத் தலைவர்:** நாம் இந்த அவையின் வேறோர் அமர்வில் அறிவுரைக் குழுவின் அறிக்கையைப் பரிசீலித்தபோது எடுக்கப்பட்ட முடிவை இது குறிக்கிறது. அப்போது எடுத்த முடிவுக்கு இது வடிவம் கொடுக்கிறது.

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்** (பம்பாய்: பொது): அருள்திரு நிக்கோல்ஸ்-ராயின் பெயரிலுள்ள திருத்தத்தைப் பொறுத்த வரை, அட்டவணைச் சாதிகளுக்கும் பழங்குடி மக்களுக்கும் வரை யறை தரவிருக்கும் பொருள் விளக்கக் கூறுக்கே கூடுதல் பொருத்த மானதாக இருக்கும் என்று சொல்ல வந்தேன். என் நண்பர் இத்திருத் தத்தை முன்மொழிவதில் குறியாக இருப்பாரானால் அரசமைப்புச் சட்டத்தின் அந்தப் பகுதிக்கு - உறுப்பு 303 - நாம் வரும் வரையில் காத்திருப்பதுதான் சரியெனக் கருதுகிறேன்.

**திரு. அவைத் தலைவர்:** டாக்டர் அம்பேத்கர் சொன்னதை நீங்கள் புரிந்து கொண்டீர்களா?

**மாண்புமிகு அருள்திரு ஜெ.ஜெ.எம். நிக்கோல்ஸ்-ராய்** (அசாம்: பொது): ஆம். நான் புரிந்துக் கொண்டிருக்கிறேன். எனது திருத்தம் திரு. தாக்கரால் முன்மொழியப்படப் போகிற திருத்தம் எண் 3108 என்பதை அடிப்படையாகக் கொண்டது. இப்போது அவர் முன்

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 24 1949, பக்கம் 643-44.

மொழியப் போகிற திருத்தம் (எண் 28) வேறு வடிவத்தில் இருக்கக் காண்கிறேன். ஆயினும் திரு. தாக்கர் இத்திருத்தத்தை முன்மொழியப் போவதில்லை என்றால், நானும் எனது திருத்தத்தை இப்போது முன்மொழிய மாட்டேன். ஆனால் உறுப்பு 303இன் கீழ் இப்பிரச்சினை விவாதிக்கப்படும் நேரத்தில் எனது திருத்தத்தை முன்மொழிய எனக்கு உரிமை இருக்கும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** திரு. தாக்கர் பெயரில் இருக்கிற திருத்தங்களை நிறுத்தி வைத்து உறுப்பு 303ஐ நாம் விவாதிக்கிற நேரத்தில் எடுத்துக் கொள்ளலாம் என்பதும் எனது யோசனை ஆகும்.

**மாண்புமிகு அருள்திரு ஜெ.ஜெ.எம். நிக்கோல்ஸ் ராய்:** திரு. தாக்கர் உடன்பட்டால் நானும் உடன்படுகிறேன்.

**திரு. தாக்கர் (சௌராஷ்டிரா):** முழுமையாக உடன்படு கிறேன்.

★ ★ ★

[1]**சர்தார் பூபேந்தர் சிங் மான் (கிழக்குப் பஞ்சாப்: சீக்கியர்):** பல திருத்தங்கள் முன்மொழியப்பட்டிப்பதால், அத்திருத்தங்களை எதிர்த்துப் பேச சற்றே நேரம் கொடுக்கலாம் என்று எனக்குத் தோன்று கிறது.

**திரு. அவைத் தலைவர்:** நான் முன்பே சொன்னதுபோல் முழுமையாக இரு நாட்கள் இந்த அவையில் இதே கருத்தைத்தான் விவாதித்திருக்கிறோம். பொதுவான கொள்கைகள் குறித்துக் கருத்துத் தெரிவிப்பதற்கு முழுமையான வாய்ப்பு அவையின் ஒவ்வொரு பிரிவுக்குமே இருந்தது. இப்போது அதே கோட்பாடுகளுக்குத்தான் டாக்டர் அம்பேத்கர் அவையில் முன் வைத்துள்ள தீர்மானம் உருக் கொடுக்க முயலுகிறது. இதற்கு மேலும் விவாதிப்பது உறுப்பினர் களுக்கு உதவும் என்று நான் கருதவில்லை. ஆகவே டாக்டர் அம்பேத் கரைப் பேச அழைக்கிறேன்.

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 24 1949, பக்கம் 657-58.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அவைத் தலைவர் அவர்களே, இந்த உறுப்பின் மீதான விவாதப் போக்கில் எழுப்பப் பட்ட வாதுரைகளில் மிகப் பலவும், பல்வேறு திருத்தங்களும் இந்த உறுப்பின் கருப் பொருளுக்குச் சிறிதும் பொருத்தமற்றவை என்பதே என் கருத்து. தேர்தல் சட்டங்கள் மற்றும் தொகுதிகள் வரையறை குறித்த விவாதத்திற்கு நாம் வரும்போது இவற்றைத் தாராளமாகக் கிளப்பலாம். ஆகவே இவை குறித்து இக்கட்டத்தில் நான் பேச நினைத்ததில்லை.

மூன்று கூறுகளுக்கு மட்டும் நான் விடையளிக்க வேண்டி யிருப்பதாகக் கருதுகிறேன். ஒரு கூறு திரு. லஸ்கர் தன் திருத்தம் கொண்டு எழுப்பியதாகும். அவரின் திருத்தம் ''அசாமில் உள்ள அட்ட வணைச் சாதிகளின் நேர்வில் தவிர'' என்ற சொற்களைச் சேர்ப்ப தாகும். அவர் இந்தச் சொற்களைச் சேர்ப்பதன் மூலம் என்ன செய்ய விரும்புகிறார் என்பதை அறவே புரிந்துகொள்ளத் தவறிவிட்டேன். இந்தச் சொற்கள் சேர்க்கப்படுமானால், இந்த உறுப்பு அசாமில் உள்ள அட்டவணைச் சாதியினருக்கு மைய நாடாளுமன்றத்தின் கீழவையில் தரக் கருதும் பிரதிநிதித்துவத்தை பெறுவதற்கான உரிமை அவர் களுக்கு இல்லாமற் போய்விடும் என்பதே இதன் பொருள் ஆகும். ஏனென்றால் ''அசாமில் உள்ள அட்டவணைச் சாதிகளின் நேர்வில் தவிர'' என்ற சொற்கள் வேறு எந்த வழிவகையின் துணையுமில் லாமல் இப்போதுள்ளவாறே இருக்குமானால் அசாமின் அட்ட வணைச் சாதிகளுக்கு அளிக்கப்பட்டிருக்கிற அவர்களின் பிரதிநிதித் துவ உரிமையை பறிப்பதைத் தவிர வேறு என்ன விளைவை அது ஏற்படுத்தும் என்பதை யானறியேன். அவர் சொன்னதை நான் சரியாகப் புரிந்து கொண்டிருந்தால், அவர் எழுப்பியிருக்கிற பிரச்சினை நியாயமாகப் பார்த்தால் முன்பே நிறைவேற்றப்பட்டுவிட்ட அர சமைப்புச் சட்ட உறுப்பு 67B பற்றியதாகும் எனக் கருதுகிறேன். சட்ட மன்றத்தில் பிரதிநிதித்துவ விகிதத்திற்கும் குறிப்பிட்ட மக்கள் தொகை விவரங்களுக்கும் ஒரு திட்டமான தொடர்பு இருக்க வேண்டும் என்று அந்த உறுப்பில் வழிவகை செய்யப்பட்டுள்ளது. மையக் கீழவை யிலான பிரதிநிதித்துவம் 7,50,000 மக்களுக்கு ஒரு பிரதிநிதி என்பத தற்குக் குறையக்கூடாது; அல்லது 5,00,000 மக்கள் தொகைக்கு ஒரு பிரதிநிதி என்பதற்கு மேல் இருக்கக் கூடாது என்ற விதித்தளிக்கப் படுகிறது. ஆனால் அவர் கூறியதை வைத்துப் பார்க்கையில் - அவர் சொன்ன எதையும் என்னால் கேட்க முடியவே இல்லை என்பதை ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும், ஆனால் அதன் உட்கருத்தை நான்

அறிந்து கொண்டேன் - சில்கெட் மாவட்டம் பிரிக்கப்பட்டதால் அசாமில் உள்ள அட்டவணைச் சாதிகளின் மக்கள் தொகை கணிச மாக குறைந்துவிட்டது என்றும், நாம் எடுத்துரைப்பதுபோல் 7,50,000 அல்லது 5,00,000 என்ற தொகை இருக்காது என்றும் அவர் எண்ணிக் கொண்டிருப்பதாகத் தோன்றுகிறது. இதன் விளைவாக அசாமின் அட்டவணைச் சாதிகளுக்கு எவ்விதப் பிரதிநிதித்துவமும் கிடைக் காமற் போய்விடும் என்று அவர் கருதுகிறார். ஆனால் உறுப்பு 67இன் (5) (ஆ)இல் உள்ள வழிவகை அட்டவணைச் சாதிகளுக்குப் பொருந்தாது என்று நான் அவருக்கு சொல்லிக் கொள்ள விரும்பு கிறேன். இது தொகுதிக்குத்தான் பொருந்தும். இதன் பொருள் என்ன வென்றால், ஒரு தொகுதி 7,50,000 மக்களைக் கொண்டதாயிருந்தால் அதற்கு ஓர் இடம் இருக்கும் என்பதாகும். அந்தத் தொகுதிக்குள் அட்டவணைச் சாதிகளின் மக்கள் தொகை இன்னும் கூட சிறிதாகவே இருக்கலாம்; ஆனால் அந்தக் குறிப்பிட்ட பகுதியில் அட்டவணைச் சாதிகளுக்கு ஓர் இடத்தை ஒதுக்கவிடாமல் வரையறைக் குழுவையோ நாடாளுமன்றத்தையோ அது தடுத்திடாது. ஆகவே, அவரது அச்சத் திற்கு அடிப்படையே இல்லை என்பது அடியேன் கருத்து.

அடுத்து சர்தார் ஹுக்கும் சிங் முன்மொழிந்த திருத்தத் திற்கு வருகிறேன். பொதுவாக அட்டவணைச் சாதிகளுக்கோ அட்ட வணைப் பழங்குடிகளுக்கோ ஒதுக்கீடு செய்யப்படாத இடங்களில் போட்டியிட அட்டவணைச் சாதிகளுக்கும் அட்டவணைப் பழங்குடி களுக்கும் உரிமை இருக்கும்படி வழிவகை செய்ய வேண்டும் என்பதே அவரது யோசனை. வரைவுக் குழு வேண்டுமென்றே இதை விட்டு விட்டதாக அவர் கூறினார். இது சரி என்று நான் கருதவில்லை. ஒதுக்கீடு செய்யப்படாத இடங்களில் போட்டியிட அட்டவணைச் சாதிகளுக்கும் அட்டவணைப் பழங்குடிகளுக்கும் உரிமை உண்டு என்று ஏற்றுக்கொள்ளப்படுகிறது. அவை முன்பே ஏற்றுக் கொண் டுள்ள அறிவுரைக் குழுவின் அறிக்கையில் இது அடங்கியுள்ளது. குறிப் பிட்ட இந்த வழிவகை உறுப்பு 292இல் சேர்க்கப்படாமைக்கான காரணம் அது இந்த இடத்திற்கு உகந்ததன்று என்பதே. இந்தக் கருத்து தேர்தல் தொடர்பான சட்டத்தில் உரியவாறு இடம்பெறும். இந்தப் பேரவை, அல்லது சட்டமியற்றும் பொறுப்பில் உள்ள பேரவை இதனை எடுத்தாள வேண்டியிருக்கும். ஆகவே அவர் இந்த அடிப்படையில் எவ்வித அச்சமும் கொள்ளத் தேவையில்லை.

இட ஒதுக்கீடு செய்வதற்கு அடிப்படையான மக்கள் தொகையை ஒரு புதிய கணக்கெடுப்பின் மூலம் மதிப்பீடு செய்ய வேண்டும் என்று என் நண்பர் திரு. பிள்ளை எழுப்பிய வாதத்தைப் பொறுத்தவரை மிகப் பல தருணங்களில் இப்பிரச்சினை இந்த அவையில் கிளறப்பட்டுள்ளது. அரசு புதியதாய்க் கணக்கெடுக்க ஒப்புக்கொள்ள வாய்ப்பில்லை என்று அப்போது சொன்னேன்; ஆனால் அரசு திறந்த மனத்துடனேயே இருக்கிறது. நடைமுறையில் சாத்தியம் என்றால் அட்டவணைச் சாதிகள் அல்லது அட்டவணைப் பழங்குடிகளுக்கு உறுப்பு 292இன் வழிவகைகளுக்கு இணங்க அவர்களுக்கு உரிமையுள்ள மொத்தப் பிரதிநிதித்துவத்தைக் கணக்கிடுவதற்காக அவர்களது மக்கள் தொகையை மதிப்பீடு செய்யும் பொருட்டு அரசு ஒரு புதிய கணக்கெடுப்பை மேற்கொள்ளலாம். எது எப்படியானாலும் ஒரு புதிய கணக்கெடுப்பை நடத்த வாய்ப்பில்லை என்றால் வாக்காளர் வலிமையின் அடிப்படையில் இந்த வகுப்புகளின் மக்கள் தொகையை மதிப்பிடுவோம் என்றும் அரசு கூறி வருகிறது. இப்படிச் செய்வோமானால் மக்கள் தொகை குறித்து ஒரு தோராயமான உடனடி மதிப்பீடு என்று அழைக்கப்படக் கூடியதை நம்மால் அடைய இயலும். இதற்கு மேல் சென்றிட என்னால் முடியுமென நான் கருதவில்லை. மற்றெல்லாத் திருத்தங்களையும் எதிர்க்கிறேன்.

*(டாக்டர் அம்பேத்கரின் தீர்மானத்தினால் திருத்தப்பட்ட வடிவத்தில் உறுப்பு 292 அரசமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.)*

★ ★ ★

## உறுப்பு 293

[1]**திரு. அவைத் தலைவர்:** டாக்டர் அம்பேத்கர்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஏதும் சொல்லத் தேவை இருப்பதாக நான் கருதவில்லை.

*(எந்தத் திருத்தமுமின்றி உறுப்பு 293 அரசமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.)*

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 24 1949, பக்கம் 662.

## உறுப்பு 294

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் முன் மொழிவது:

''உறுப்பு 294க்குப் பதிலாகப் பின்வருவதை இடம்பெறச் செய்யலாம்:

மாநிலங்களின் சட்டமன்றப் பேரவைகளில் சிறுபான்மையினருக்கான இட ஒதுக்கீடு

294. (1) இப்போதைக்கு முதல் அட்டவணையின் பகுதி I, அல்லது பகுதி IIIஇல் குறித்துரைக்கப்படும் ஒவ்வொரு மாநிலத்தின் சட்டமன்றப் பேரவையிலும் அட்டவணைச் சாதிகளுக்கும் - அசாமின் பழங்குடிப் பரப்புகளில் உள்ள அட்டவணைப் பழங்குடிகள் நீங்கலாக - அட்டவணைப் பழங்குடிகளுக்கும் இடங்கள் ஒதுக்கீடு செய்யப்படும்.

(2) அசாம் மாநிலத்தின் சட்டமன்றப் பேரவையில் தன்னாட்சி மாவட்டங்களுக்குக் கூட இடங்கள் ஒதுக்கீடு செய்யப்படும்.

(3) இந்த உறுப்பின் கூறு (1)இன்படி எந்தவொரு மாநிலத்தின் சட்டமன்றப் பேரவையிலும் அட்டவணைச் சாதிகள் அல்லது அட்டவணைப் பழங்குடிகளுக்காக ஒதுக்கீடு செய்யப்படும் இடங்களின் எண்ணிக்கைக்கும் சட்டமன்றப் பேரவையிலுள்ள இடங்களின் மொத்த எண்ணிக்கைக்குமான விகிதமானது, நேர்வைப் பொறுத்து அம்மாநிலத்திலுள்ள அட்டவணைச் சாதிகள் அல்லது அம்மாநிலத்திலோ அதன் ஒரு பகுதியிலோ உள்ள அட்டவணைப் பழங்குடிகளின் மக்கள் தொகைக்கும் அம்மாநிலத்தின் மொத்த மக்கள் தொகைக்குமான விகிதத்துக்குக் கூடுமான வரை நெருக்கமாய் இருக்கும்.

(4) அசாம் மாநிலத்தின் சட்டமன்றப் பேரவையில் ஒரு தன்னாட்சி மாவட்டத்துக்காக ஒதுக்கீடு செய்யப்படும் இடங்களின் எண்ணிக்கைக்கும் அந்தப் பேரவையிலுள்ள இடங்களின் மொத்த எண்ணிக்கைக்குமான விகிதமானது அந்த மாவட்டத்தின் மக்கள் தொகைக்கும் மாநிலத்தின் மொத்த மக்கள் தொகைக்குமான விகிதத்துக்குக் குறையாமல் இருக்கும்.

(5) அசாம் மாநிலத்தைச் சேர்ந்த எந்தவொரு தன்னாட்சி மாவட்டத்துக்காகவும் ஒதுக்கீடு செய்யப்படும் இடங்களுக்கான தொகுதிகள் - ஷில்லாங் இராணுவக் குடியிருப்பு மற்றும் நகராட்சியை உள்ளடக்கிய தொகுதி நீங்கலாக - அம் மாவட்டத்திற்கு வெளியில் உள்ள எந்தப் பரப்பையும் உட்கொண்டிருக்க மாட்டா.

(6) அசாம் மாநிலத்தின் எந்தவொரு தன்னாட்சி மாவட்டத்தையும் சேர்ந்த அட்டவணைப் பழங்குடியின் உறுப்பினரல்லாத எவரும் - ஷில்லாங் இராணுவக் குடியிருப்பு மற்றும் நகராட்சியை உள்ளடக்கிய தொகுதி நீங்கலாக - அந்த மாவட்டத்தின் எந்தவொரு தொகுதியிலிருந்தும் மாநிலச் சட்டமன்றப் பேரவைக்கு தேர்ந்தெடுக்கப்பட உரிமைத் தகவு அற்றவராவார்.''

இந்த உறுப்பும் வரைவு அரசமைப்புச் சட்டத்தில் இடம்பெற்ற மூல உறுப்பும் ஒன்றுதான். முஸ்லீம்களுக்கும், கிறித்தவர்களுக்கும்

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 24 1949, பக்கம் 663.

இடங்கள் ஒதுக்கீடு செய்வதற்கான வழிவகை உறுப்பு 294 கூறு (1)இலிருந்து விடப்பட்டுள்ளது என்பது ஒன்றைத் தவிர வேறு திருத்தம் இல்லை. இத்திருத்தம் இது தொடர்பாக இப்பேரவை எடுத்த முடிவிற் கிணங்கவே செய்யப்பட்டுள்ளது.

## உறுப்பு 295-A

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் முன்மொழிவது:

''உறுப்பு 295க்குப் பிறகு பின்வரும் புதிய உறுப்பை நுழைக்கலாம்:

அட்டவணைச் சாதிகள் மற்றும் அட்டவணைப் பழங்குடிகளுக்கான இட ஒதுக்கீடு இந்த அரசமைப் புச் சட்டம் தொடங்கு வதிலிருந்து பத்தாண்டு கழிந்தபிறகு செயலற்றுப் போதல்.

'295-A. இந்தப் பகுதியின் மேற்சொன்ன வழிகளில் என்ன கூறப்பட்டிருப்பினும், மக்களவையிலோ, ஒரு மாநிலத்தின் சட்டமன்றப் பேரவையிலோ அட்டவணைச் சாதிகள் மற்றும் அட்டவணைப் பழங்குடிகளுக்காக இட ஒதுக்கீடு செய்வது தொடர்பான இந்த அரசமைப்புச் சட்டத்தின் வழிவகைகள் இந்த அரசமைப்புச் சட்டம் தொடங்குவதிலிருந்து பத்தாண்டு காலம் கழிந்து முடியும்போது செயலற்றுப்போகும்.''

இது அவையின் முடிவுக்கும் இணக்கமாக உள்ளது. விளக்கம் ஏதும் தேவைப்படுவதாக நான் கருதவில்லை.

★ ★ ★

[2]**திரு. அவைத் தலைவர்:** டாக்டர் அம்பேத்கர்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் (பம்பாய்: பொது):** அவைத் தலைவர் அவர்களே, நான்கு திருத்தங்கள் தொடர்பாக மட்டுமே நான் ஒரு சில வார்த்தை சொல்ல விரும்புகிறேன். நான் முதலில் என் நண்பர் திரு. பர்கவாவின் திருத்தத்தை எடுத்துக் கொள் கிறேன். அவரது திருத்தத்தை நான் ஏற்றுக்கொள்ள அணியமாய் இருப்பதையும் சொல்லிக் கொள்கிறேன். ஏனென்றால் இந்த அவைக்கு அளிக்கப்பட்ட பொதுவான விளக்கவுரையில் ஆங்கிலோ இந்தியர்களுக்கு நியமன வழியில் பிரதிநிதித்துவம் வழங்குவதற்கான முன்மொழிவுக்குக் காலவரம்பு ஏதும் குறிப்பிடப்படவில்லை என்ற போதிலும், அடுத்து அவ்வறிக்கை குறித்து நடைபெற்ற விவாதத்தில்

---

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 24 1949, பக்கம் 674.
2. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 25 1949, பக்கம் 696-97.

என் நண்பர் பண்டித பர்கவா ஒரு திருத்தத்தை முன்மொழிந்தார் என்பதை அறிய முடிகிறது. அந்தத் திருத்தமும் அவர் இப்போது முன்மொழிந்துள்ள திருத்தமும் பெரும்பாலும் ஒரே அடிப்படையில் தான் அமைந்துள்ளன. அவரது அந்தத் திருத்தத்தை அவை ஏற்றுக் கொண்டிருக்கக் காண்கிறேன். ஆகவே அவர் இப்போது முன்மொழிந் துள்ள திருத்தத்தையும் நான் ஏற்றுக்கொள்ளத்தான் வேண்டும்.

அடுத்ததாக, திரு. நசிருதீன் அகமதால் எழுப்பப்பட்ட கேள்வி யைப் பொறுத்தவரை, அதன் ஒரு பகுதிக்கு என் நண்பர் திரு. கிருஷ்ண மாச்சாரியால் முன்மொழியப்பட்ட திருத்தம் விடையளித்திருப்ப தாகக் கருதுகிறேன். அதை நானும் ஏற்றுக்கொள்கிறேன். இக்கூறி லுள்ள சொற்கள் தரும் பொருளின்படி, கால வரம்பு அரசமைப்புச் சட்டம் தொடங்குவதிலிருந்து செயல்படத் தொடங்க வேண்டுமா, அல்லது புதிய நாடாளுமன்றத்திற்கான முதல் தேர்தல் தேதியிலிருந்து செயல்படத் தொடங்க வேண்டுமா என்பது பற்றி இன்றைய நிலை யில் என் உள்ளத்தில் துளியும் தெளிவில்லை. இந்நிலையில் நான் சொல்லக் கூடியதெல்லாம் என்னவென்றால் அந்தச் செய்தியை வரைவுக் குழு கவனத்தில் கொள்ளும். தேவைப்படுமானால் முதல் நாடாளுமன்றத்தின் முதல் கூட்ட தேதியிலிருந்து அக்காலக்கட்டம் தொடங்க வேண்டும் என்ற விருப்பத்தைச் செயல்படுத்த அவர்கள் ஏதேனும் ஒரு திருத்தம் கொண்டு வருவார்கள்.

திரு. முனிசாமிப்பிள்ளை, திரு. மனோமோகன்தாஸ் ஆகிய என் நண்பர்களால் பயன்படுத்தப்பட்டிருக்கிற மற்ற வாதங்களைப் பொறுத்தவரை அத்திருத்தத்தை ஏற்றுக்கொள்ள இயலாமைக்கு வருந்துகிறேன். அக்கூறினை அப்படியே இருக்கவிட அவர்கள் அணியமாய் இருக்கும் அதேபோது இன்னும் பத்தாண்டு காலத்திற்கு நீட்டிப்பதன் வாயிலாக இக்கூறினை மாற்றியமைக்கும் அதிகாரத்தை நாடாளுமன்றத்திடம் ஒப்படைப்பது அவர்களது முன்மொழிவாகும். இப்பொழுது, நான் சொன்னவாறு எல்லாவற்றுக்கும் முதலாவதாக நாம் இச்செய்தியை அரசமைப்புச் சட்டத்திலேயே அறிமுகப்படுத்தி யிருக்கிறோம். அரசமைப்பு சட்டத்தையே திருத்துவதன் வழியாக அல்லாமல் இதில் எந்த மாற்றமும் செய்யப்பட நாம் அனுமதிக்க லாகாது என நான் கருதுகிறேன்.

இவ்வுறுப்பால் விதிக்கப்படும் கால வரம்பைப் பற்றி சற்றே உணர்ச்சிகரமாகவும் சினங்கொண்டும் பேசியிருக்கும் அட்டவணைச்

சாதி உறுப்பினர்களின் கருத்துகள் மீது நான் ஓரிரு வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். உண்மையில் அவர்கள் குறை சொல்வதற்கு எவ்விதக் காரணமும் இல்லை என்பதை நான் சொல்லியாக வேண்டும். ஏனென்றால் அதற்குப் பத்தாண்டு காலவரம்பு விதிக்க வேண்டும் என்ற முடிவு உண்மையில் அவர்களின் இணக்கத்தோடு அடையப் பெற்றதுதான். தனிப்பட்ட முறையில் நான் இன்னமும் அதிகக் காலம் வேண்டுமென்று வற்புறுத்த அணியமாய் இருந்தேன். ஏனென்றால் அட்டவணைச் சாதியினரைப் பொறுத்தவரை அவர்கள் ஏனைய சிறுபான்மையினரைப் போல் அதே அடிப்படையில் நடத்தப்படுவ தில்லை என்பதை நான் உணரவே செய்கிறேன். எடுத்துக்காட்டாக, எனக்குத் தெரிந்தவரை இசுலாமியர்களுக்கான தனி ஒதுக்கீடு 1892 ஆம் ஆண்டில் தொடங்கியது. அதையே தொடக்கம் எனலாம். எனவே இசுலாமியர்கள் நடைமுறையில் இந்தத் தனியுரிமைகளை ஏறக் குறைய அறுபது ஆண்டுகளாக அனுபவித்திருந்தார்கள். இத்தனி யுரிமையைக் கிறித்தவர்கள் 1920 ஆம் ஆண்டின் அரசமைப்புச் சட்டத்தின்படிப் பெற்றார்கள். இதனை அவர்கள் 28 ஆண்டுகளாக அனுபவித்து வருகிறார்கள். இதனை அட்டவணைச் சாதியினர் 1935 ஆம் ஆண்டின் அரசமைப்புச் சட்டத்தில்தான் பெற்றார்கள். அச் சட்டம் செயலுக்கு வந்த 1937 ஆம் ஆண்டில்தான் தனி ஒதுக்கீடு எனும் இந்த நன்மை நடைமுறையில் கிடைக்கத் தொடங்கியது. வாய்ப்புக் கேடாக அவர்களுக்கு இதன் பலன் ஈராண்டுகளுக்கு மட்டுமே கிடைத்தது. எப்படியென்றால் 1939இலிருந்து நடைமுறை யில் இக்கணம் வரை அல்லது 1946 வரை அரசமைப்புச் சட்டம் நிறுத்தி வைக்கப்பட்டது. அட்டவணைச் சாதியினர் 1935 ஆம் ஆண்டின் சட்டத்தில் தங்களுக்கு வழங்கப்பட்டிருந்த தனியுரிமை களின் பலன்களை அனுபவிக்க இயலாதவர்களாயினர். இந்த ஒதுக் கீடுகளைப் பொறுத்தவரை அட்டவணைச் சாதியினருக்கு இன்னும் நீண்டகாலம் கொடுக்கப்பட்டிருந்தால் சரியானதாகவும், இந்த அவை யின் தரப்பில் பெருந்தன்மை காட்டுவதாகவும் இருந்திருக்கும் எனக் கருதுகிறேன். ஆனால் நான் முன்பே கூறியது போல் இதெல்லாம் இந்த அவையால் ஏற்றுக்கொள்ளப்பட்டது. திரு. நாகப்பா, திரு. முனிசாமிப்பிள்ளை ஆகியோரால் ஏற்றுக்கொள்ளப்பட்டது. இந்த உறுப்பினர்கள் எல்லாம் - நான் யாரையும் குறை சொல்லவில்லை - மறுபக்கத்தில் செயல்பட்டுக் கொண்டிருந்தார்கள்.

இந்த வழிவகைகள் குறித்து இப்போது பின்வாங்குவது சரி யில்லை என நினைக்கிறேன். பத்தாண்டுகளில் அட்டவணைச் சாதி

யினர் தங்கள் நிலைமை முன்னேறவில்லை எனக் காண்பார்களே யானால், அல்லது அவர்கள் இக்காலத்தை மேலும் நீட்டிக்க விரும்பு வார்களேயானால், இங்கு அவர்களுக்கு உறுதியளிக்கப்பட்டுள்ள அதே பாதுகாப்பைப் பெறுவதற்குப் புதிய வழிகளை கண்டுபிடிப்பது அவர்களின் ஆற்றலுக்கோ அறிவுத் திறனுக்கோ அப்பாற்பட்டதாக இருக்காது.

**திரு. ஏ.வி. தாக்கர்** *(சௌராஷ்ட்ரா)*: படி வரிசையில் இதை விடவும் கீழே நிற்கிற அட்டவணைப் பழங்குடியினரின் நிலை என்ன?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அட்டவணைப் பழங்குடியினருக்கு இன்னும் நீண்ட காலம் வழங்க நான் அணியமாய் உள்ளேன். ஆனால் தாழ்த்தப்பட்ட சாதிகளுக்கான அல்லது பழங்குடியினருக்கான ஒதுக்கீடுகள் பற்றிப் பேசியிருக்கும் எல்லோருமே இது பத்தாண்டுகளில் முடிந்துவிட வேண்டும் என்பதிலேயே குறியாக இருந்திருக்கின்றனர். அவர்களுக்கு நான் சொல்ல விரும்புவதெல்லாம் எட்மண்டு பர்க் கூறியது போல, பெரிய அரசுகளுக்கும் சிறிய உள்ளங்களுக்கும் பொருந்தி வராது.

**திரு. அவைத் தலைவர்:** நான் இப்பொழுது திருத்தங்களை ஒவ்வொன்றாக எடுத்துக் கொள்வேன்....

**திரு. யுதிஸ்திர் மிஸ்ரா** *(ஒரிசா சமஸ்தானங்கள்)*: நான் எனது திருத்தத்தை விலக்கிக் கொள்ள விழைகிறேன்.

*(திருத்தம் அவையின் அனுமதி கொண்டு விலக்கிக் கொள்ளப்பட்டது.)*

**திரு. அவைத் தலைவர்:** திருத்தம் எண் 40 (பட்டியல் I - ஐந்தாம் வாரம்)

**திரு. எஸ். நாகப்பா:** டாக்டர் அம்பேத்கர் தந்த விளக்கத்தைக் கருத்தில் கொண்டு எனது திருத்தத்தை வலியுறுத்த விரும்பவில்லை.

*(திருத்தம் அவையின் அனுமதி கொண்டு விலக்கிக் கொள்ளப்பட்டது).*

**திரு. அவைத் தலைவர்:** திருத்தம் எண் 99 (பட்டியல் III - ஐந்தாம் வாரம்).

**திரு. வி.ஐ. முனிசாமிப் பிள்ளை:** மே 25ஆம் நாள் சிறுபான்மையினர் குழுவின் இரண்டாம் அறிக்கை பரிசீலிக்கப்பட்டபொழுது நான் அவையில் இல்லை. ஆயினும் டாக்டர் அம்பேத்கர் சொன்னதைக் கருத்தில் கொண்டு எனது திருத்தத்தை விலக்கிக் கொள்ள விழைகிறேன்.

*(அவையின் அனுமதி கொண்டு விலக்கிக் கொள்ளப்பட்டது.)*

[1]**திரு. நசிருதீன் அகமது:** எனது திருத்தத்தின் கோட்பாட்டை திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரியின் திருத்தம் சாராம்சமாக ஏற்றுக் கொண்டுள்ளது. எனவே நான் எனது திருத்தத்தை விலக்கிக் கொள்ள விழைகிறேன்.

***(திருத்தம் அவையின் அனுமதி கொண்டு விலக்கிக் கொள்ளப்பட்டது.)***

**திரு. அவைத் தலைவர்:** அடுத்த திருத்தம் பண்டித தாகூர்தாஸ் பர்கவாவின் எண் 113. இது டாக்டர் அம்பேத்கரால் ஏற்றுக்கொள்ளப் பட்டிருக்கிறது.

பிரச்சினை இதுதான்:

''திருத்தங்களுக்கான திருத்தங்களின் பட்டியல் Iஇன் (ஐந்தாம் வாரம்) திருத்தம் எண் 38இல் முன்மொழியப்பட்ட புது உறுப்பு 295-Aஇல் 'அரசமைப்புச் சட்டம்' என்ற சொல்லுக்குப் பிறகு (அ) என்னும் அடைப்புக் குறிகளும் எழுத்தும் நுழைக்கப்படலாம். 'மாநிலம்' என்ற சொல்லுக்குப் பிறகு பின்வருவது நுழைக்கப்படலாம்:

(ஆ) நியமன முறை வழியாக மக்களவையிலோ அல்லது மாநிலங்களின் சட்டமன்றப் பேரவைகளிலோ ஆங்கிலோ-இந்தியச் சமூகத்தின் பிரதிநிதித்துவம் தொடர்பாக

திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

**திரு. அவைத் தலைவர்:** அடுத்த திருத்தம், வரைவுக் குழுவின் திருத்தம் எண் 114.

பிரச்சினை இதுதான்:

''திருத்தங்களுக்கான திருத்தங்களின் பட்டியல் Iஇன் (ஐந்தாம் வாரம்) திருத்தம் எண் 38இல் முன்மொழியப்பட்ட உறுப்பு 295-A உடன் பின்வரும் துணைவிதி சேர்க்கப்படலாம்:

'ஆனால் நேர்வைப் பொறுத்து அப்போதைய மக்களவை அல்லது மாநிலச் சட்டமன்றப் பேரவை கலைக்கப்படும் வரை அம்மக்களவையிலுள்ள

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 25 1949, பக்கம் 698.

அல்லது அச்சட்டமன்றப் பேரவையிலுள்ள பிரதிநிதித்துவத்தை இந்த உறுப்பில் கூறப்பட்டுள்ள எதுவும் பாதிக்காது.''

(திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது. திருத்தப்பட்ட வடிவில் உறுப்பு 295-A அரசமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.)

## உறுப்பு 296

★ ★ ★

[1]**திரு. நசிருதீன் அகமது:** ... என் கருத்து என்னவென்றால் செய்நுட்ப அடிப்படைகளிலும் சாராம்ச அடிப்படைகளிலும் இத் திருத்தம் மறுதலிக்கப்பட வேண்டும்.

**திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி** (சென்னை: பொது): ஐயா, நான் பணிந்து சொல்லிக் கொள்கிறேன். என் மாண்புமிகு நண்பர் இந்த ஒழுங்குப் பிரச்சினையை எழுப்புவதில் சிறிதும் ஒழுங்கில்லை. ஏனென்றால் இச்செய்தி இந்த அவையில் ஏற்றுக்கொள்ளப்பட்டுள் ளது. மதிப்பிற்குரிய உறுப்பினருக்கு இதுபற்றித் துப்புரவாக இரு நாட்கள் முன்னறிவிப்பு இருந்தது. இத்திருத்தத்தின் முக்கியத்துவத்தை அவரால் இரு நாட்களில் புரிந்துகொள்ள முடியவில்லை என்றால் இரு மாதங்களிலும் புரிந்துகொள்ள முடியாதென உறுதியாக நம்பு கிறேன்.

**திரு. அவைத் தலைவர்:** இட ஒதுக்கீடு குறித்து சென்ற முறை மீண்டும் கேள்வி எழுப்பப்பட்ட போது இதுவும் கருத்துகளுள் ஒன்றாகப் பரிசீலிக்கப்பட்டு அப்போது இக்கருத்தின் மீது ஒரு முடிவும் எடுக்கப்பட்டது என்று சொல்ல வருகிறீர்களா?

**திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி:** முஸ்லீம்களும் இந்தியக் கிறித்தவர்களும் இப்போது சிறுபான்மையினராக நடத்தப்படுவ தில்லை என்பதால் இப்பிரச்சினை எழவில்லை.

**திரு. நசிருதீன் அகமது:** இல்லவே இல்லை. சட்டமன்றத்தில் சிறுபான்மையினரின் பிரதிநிதித்துவம் குறித்த பிரச்சினைதான் பரி சீலிக்கப்பட்டது என்பதைப் பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன். ஆனால் இந்தப் புதிய உறுப்பு வேறொரு செய்தியோடு தொடர்

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 25 1949, பக்கம் 702.

புடையது. அதாவது தலைமைச் செயலகங்களிலும் மாவட்டங்களிலும் இன்ன பிறவற்றிலும் சிறு பணிகள் பெறுவதில் சிறுபான்மையினருக்குப் பாதுகாப்பு அளிப்பது தொடர்பானதாகும். சட்டமன்றத்தில் பிரதிநிதித்துவம் பற்றிய செய்தி குறித்து சர்தார் பட்டேல் அன்புள்ளத்தோடு எங்களுடன் கலந்தாலோசித்தார். நாங்களும் சட்டமன்றத்தில் ஒதுக்கீடேதும் வேண்டாமென்று ஒப்புக்கொண்டோம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்** (பம்பாய்: பொது): ஐயா, இதுதான் நிலைமை. எல்லாச் சிறுபான்மையினரும் இரு நன்மைகள் அல்லது தனியுரிமைகள், அதாவது சட்டமன்றங்களில் பிரதிநிதித்துவமும் பணிகளில் பிரதிநிதித்துவமும் பெறுவதற்குச் சிறுபான்மையினர் குழுவின் அறிக்கை வழிவகை செய்தது. இந்த அவையால் ஏற்றுக் கொள்ளப்பட்ட அறிக்கையின் பத்தி 9இல் இப்படி உள்ளது:

> "அனைத்திந்திய மாகாணப் பணிகளில் நிர்வாகத் திறன் என்ற பார்வைக்கு முரணற்ற விதத்தில் இந்தப் பணிகளுக்கு ஆளமர்த்துவதில் எல்லாச் சிறு பான்மையினரின் உரிமைக் கோரிக்கைகளும் கருத்தில் கொள்ளப்படும்."

அதுதான் இந்த அவையால் நிறைவேற்றப்பட்ட மூல முன்மொழிவு. இதையடுத்து, முஸ்லீம்கள், கிறித்துவர்கள் ஆகிய இரு சிறுபான்மை இனங்களையும் சிறுபான்மையினராக நடத்துவதில்லை என்று அவர்களின் ஒப்புதலோடு அறிவுரைக் குழு முடிவுக்கு வந்தது.

அட்டவணைச் சாதியினர், அட்டவணைப் பழங்குடியினர் ஆகிய சிறுபான்மை இனங்களுக்கு மட்டுமே இவ்விதம் வழிவகை செய்யப்பட வேண்டும் என்பதை அவை இப்போது ஏற்றுக்கொண்டு விட்ட நிலையில் வரைவுக்குழு இந்த அவையின் முடிவுக்குக் கட்டுப்பட்டு இம்முடிவின் அடிப்படையில் அவ்வுறுப்பை மாற்றியமைத்தாக வேண்டும் என்பது வெள்ளிடைமலை.

**திரு. அவைத் தலைவர்:** எடுத்துக் கொண்ட ஒழுங்குப் பிரச்சினை இதுதான்: சிறுபான்மையினர் தொடர்பான உறுப்புகள் மறுபரிசீலனை செய்யப்பட்டபோது எடுத்த முடிவு இடஒதுக்கீடு பற்றியதாக மட்டுமே இருந்தது. பணிகள் பற்றிய பிரச்சினை பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளப்படவில்லை. அதுபற்றி முடிவெடுக்கப்படவில்லை.

---

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 26 1949, பக்கம் 703.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** எனது புரிதலின் படி, அவர்கள் சிறுபான்மையினர் அல்லர் என்றும், ஆகவே இரு தனியுரிமைகளில் எந்த ஒன்றும் அவர்களுக்கு இல்லை என்றுமே முடிவெடுக்கப்பட்டது.

★ ★ ★

## உறுப்பு 299

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் பணிந்து முன்மொழிவது:

''உறுப்பு 299க்குப் பதிலாகப் பின்வரும் உறுப்பை இடம்பெறச்செய்யலாம்:

சிறுபான்மையினருக்கான தனி அதிகாரி

'299. (1) சிறுபான்மையினருக்கான ஒரு தனி அதிகாரி குடியரசுத் தலைவரால் அமர்த்தப்படுவார்.

(2) இந்த அரசமைப்புச் சட்டத்தில் சிறுபான்மையினருக்கு வழங்கப்பட்டுள்ள காப்புக் கூறுகள் தொடர்பான எல்லாச் சிக்கல்களையும் ஆய்வு செய்வதும் குடியரசுத் தலைவரின் கட்டளைப்படியான கால இடைவெளிகளில் காப்புக் கூறுகளின் செயல்பாடு பற்றி அவருக்கு அறிக்கையளிப்பதும் தனி அதிகாரியின் கடமையாக இருக்கும். குடியரசுத் தலைவர் இந்த அறிக்கைகள் அனைத்தையும் நாடாளுமன்றத்தின் ஒவ்வோர் அவை முன்பும் வைத்திடச் செய்வார்.''

மைய அரசிலும், மாகாணங்கள் ஒவ்வொன்றிலும் ஒரு சிறுபான்மை அதிகாரி இருக்க வேண்டும் என மூல உறுப்பு வழிவகை செய்தது. சிறுபான்மையினரின் எண்ணிக்கை கணிசமாகக் குறைந்திருக்கிறபடியால் ஒவ்வொரு மாகாணத்திலும் ஓர் அதிகாரியை அமர்த்துவதற்கான வழிவகை போன்ற ஒரு பெருஞ்சுமையை வைத்துக் கொண்டிருப்பது விரும்பத் தக்கதன்று என்பது இப்போது உணரப் படுகிறது. மைய அரசு ஓர் அதிகாரியை அமர்த்தி அவரைக் குடியரசுத் தலைவரிடம் அறிக்கையளிக்கச் செய்தால் மூல உறுப்பின் நோக்கம் நிறைவேற்றப்படும்.

★ ★ ★

## மூன்றாம் அட்டவணை

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் முன்மொழிவது:

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 26 1949, பக்கம் 703.
2. மேற்படி அதே நூல், பக். 706-07.

''மூன்றாம் அட்டவணையில் உறுதியுரைகளின் படிவம் i இல் 'உளமார உறுதியளிக்கிறேன் (அல்லது உறுதியேற்கிறேன்)' என்ற சொற்களுக்கும் அடைப்புக் குறிகளுக்கும் பதிலாகப் பின்வருவதை இடம்பெறச்செய்யலாம்:

'உளமார உறுதியளிக்கிறேன்

கடவுளின் பெயரால் உறுதியேற்கிறேன்''

ஐயா, மேலும் நான் முன்மொழிவது:

''மூன்றாம் அட்டவணையில் உறுதியுரைகளின் படிவம் ii இல் -

'உளமார உறுதியளிக்கிறேன் (அல்லது உறுதியேற்கிறேன்) என்ற சொற்களுக்கும் அடைப்புக் குறிகளுக்கும் பதிலாக பின்வருவதை இடம்பெறச்செய்யலாம்:

'உளமார உறுதியளிக்கிறேன்

கடவுளின் பெயரால் உறுதியேற்கிறேன்''

(அ) 'உறுதியுரை' என்ற சொல்லுக்குப் பதிலாக 'உறுதியளிப்பு அல்லது உறுதிமொழி' என்ற சொற்களை இடம்பெறச் செய்யலாம்;

(ஆ) 'உளமாரவும் உண்மையாகவும் உறுதிய்ளித்து உரைக்கிறேன்' என்ற சொற்களுக்குப் பதிலாகப் பின்வருவதை இடம்பெறச் செய்யலாம்:

'உளமார உறுதியளிக்கிறேன்.

கடவுளின் பெயரால் உறுதியேற்கிறேன்.''

''மூன்றாம் அட்டவணையில் உறுதியுரைகளின் படிவம் IV இல்

(அ) 'உறுதியுரை' என்ற சொல்லுக்குப் பதிலாக 'உறுதியளிப்பு அல்லது உறுதிமொழி' என்ற சொற்களை இடம்பெறச் செய்யலாம்;

(ஆ) 'உளமாரவும் உண்மையாகவும் உறுதியளித்து உரைக்கிறேன்' என்ற சொற்களுக்குப் பதிலாக பின்வருவதை இடம்பெறச்செய்யலாம்:

'உளமார உறுதியளிக்கிறேன்

கடவுளின் பெயரால் உறுதியேற்கிறேன்.''

''மூன்றாம் அட்டவணையில் உறுதியுரைகளின் படிவம் V இல்

(அ) 'இப்போதைக்கு முதல் அட்டவணையின் பகுதி I இல் குறித்துரைக்கப் பட்ட' என்ற சொற்களையும் எண்ணையும் விட்டுவிடலாம்;

(ஆ) 'உளமார உறுதியளிக்கிறேன் (அல்லது உறுதியேற்கிறேன்)' என்ற சொற்களுக்கும் அடைப்புக் குறிகளுக்கும் பதிலாகப் பின்வருவதை இடம்பெறச் செய்யலாம்:

'உளமார உறுதியளிக்கிறேன்

கடவுளின் பெயரால் உறுதியேற்கிறேன்''

''மூன்றாம் அட்டவணையில் உறுதியுரைகளின் படிவம் VII இல் -

(அ) 'உறுதியுரை' என்ற சொல்லுக்குப் பதிலாக 'உறுதியளிப்பு அல்லது உறுதிமொழி' என்ற சொற்களை இடம்பெறச் செய்யலாம்.

(ஆ) 'இப்போதைக்கு முதல் அட்டவணையின் பகுதி Iஇல் குறித்துரைக்கப் பட்ட' என்ற சொற்களையும் எண்ணையும் விட்டுவிடலாம்.

(இ) 'உளமாரவும் உண்மையாகவும் உறுதியளித்து உரைக்கிறேன்' என்ற சொற்களுக்குப் பதிலாகப் பின்வருவதை இடம்பெறச்செய்யலாம்:

'உளமார உறுதியளிக்கிறேன்

கடவுளின் பெயரால் உறுதியேற்கிறேன்'

''மூன்றாம் அட்டவணையில் உறுதியுரைகளின் படிவம் VIII இல் -

(அ) 'உறுதியுரை' என்ற சொல்லுக்குப் பதிலாக 'உறுதியளிப்பு அல்லது உறுதிமொழி' என்ற சொற்களை இடம்பெறச்செய்யலாம்;

(ஆ) 'உளமாரவும் உண்மையாகவும் உறுதியளித்து உரைக்கிறேன்' என்ற சொற்களுக்குப் பதிலாகப் பின்வருவதை இடம்பெறச்செய்யலாம்:

'உளமார உறுதியளிக்கிறேன்

கடவுளின் பெயரால் உறுதியேற்கிறேன்.''

ஐயா, மேலும் நான் முன்மொழிவது:

''மூன்றாம் அட்டவணையில் 'உறுதியுரைகளின் படிவங்கள்' என்ற தலைப் புக்குப் பதிலாக 'உறுதியளிப்புகள் அல்லது உறுதிமொழிகளின் படிவங்கள்' என்ற தலைப்பை இடம்பெறச் செய்யலாம்.''

**திரு. அவைத் தலைவர்:** தலைப்பு மாற்றப்படுவதற்கு மறுப்பு ஏதுமில்லை எனக் கொள்கிறேன்.

**திரு. நசிருதீன் அகமது:** ஐயா, மறுப்பு ஒன்றுமில்லை.

**திரு. அவைத் தலைவர்:** அப்படியானால், தலைப்பு மாற்றப் படுகிறது...

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் முன்மொழிவது:

''மூன்றாம் அட்டவணையில் உறுதியுரைகளின் படிவங்கள் என்பதன் படிவம் VI இல் 'அல்லது ஆளுநர் தமது விருப்புரிமைப்படி செய்ய வேண்டிய பணிகள் தொடர்பான எந்தச் சிக்கலிலும் தனி வகையில் அனுமதிக்கக் கூடிய வாறு' என்ற சொற்களை விட்டுவிடலாம்.''

இவை தேவையற்றவை, ஏனென்றால் ஆளுநருக்கு எந்த விருப் புரிமையையும் விட்டு வைக்கும் எண்ணமே நமக்கில்லை.

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 26 1949, பக்கம் 711 -12.

**திரு. எச்.வி. காமத்:** 143 இன்னும் திருத்தப்படவில்லை என்பதை டாக்டர் அம்பேத்கருக்கு நான் நினைவுபடுத்தட்டுமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஆமாம், எனக்கு நினைவிருக்கிறது.

★ ★ ★

**திரு. அவைத் தலைவர்:** நாம் விருப்புரிமை அனைத்தையும் ஒழித்துவிட்டோம்.

**திரு. நசிருதீன் அகமது:** படிவம் VIஇன் முடிவில் காணப் படுகிற சொல்லாட்சி தொடர்பாக இடர்ப்பாடு எழுகிறது.

★ ★ ★

**திரு. அவைத் தலைவர்:** அதனால்தான் டாக்டர் அம்பேத்கர் அதை நீக்கும்படி முன்மொழிந்திருக்கிறார்.

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இத்திருத்தத்தை முன்மொழிகையில் உறுப்பினர்கள் சிலரின் உணர்வுகளைப் புண் படுத்தும் எண்ணம் எனக்கு எள்ளளவுமில்லை. கடவுளைக் கோட்டின் கீழே வைத்திருப்பதாகச் சொல்லி வரைவுக்கெதிராக அவர்கள் பேசி யிருக்கிறார்கள். ஐயா, இப்பிரச்சினையில் நாம் உண்மையில் எந்த முரணற்ற கொள்கையையும் பின்பற்றியிருக்கவில்லை என்பதை நான் ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். எடுத்துக்காட்டாக, நிறைவேற்றப் பட்டுள்ள உறுப்பு 49இல் கடவுளைக் கோட்டின் மேலேயும் உறுதி யளிப்பை கோட்டின் கீழேயும் வைத்துள்ளோம் எனக் கருதுகிறேன். உறுப்பு 81இல், நாம் உறுதியளிப்பை முதலிலும் உறுதிமொழியை அதன் பிறகும் வைத்திருக்கிறோம். இந்த உறுப்புக்குத்தான் நாம் திருத்தங்களை முன்மொழிந்திருக்கிறோம். இதில் முதன்மைக் கூறின் சொல்லாட்சியை அப்படியே பின்பற்றியிருக்கிறோம். அது இப்படி உள்ளது: ''உறுதியளி அல்லது உறுதியேற்றுக் கொள்''. முதன்மைக் கூறின் மொழிநடை இவ்வாறிருக்க உறுதியளிப்பு கோட்டின் மேலே வைக்கப்படுவதும் உறுதிமொழி கீழே வைக்கப்படுவதுமே தர்க்க

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 26 1949, பக். 714-15.

வரிசையாகும். இது துப்புரவாகத் தர்க்க வழிப்பட்டதே. நிற்க, முதலில் உறுதியளிப்பையும் பிறகு உறுதிமொழியையும் வைப்பது உகந்ததென நாம் கருதியது ஏனென்றால் இந்நாட்டில் எந்நிலையிலும் இந்துவானவர் எந்நீதிமன்றத்தில் சாட்சியமளிக்க அழைக்கப்பட்டாலும் உறுதியளித்துத் தொடங்குவதுதான் வழக்கம். கிறித்தவர்களும் ஆங்கிலோ-இந்தியர்களும் இசுலாமியர்களும் மட்டும்தான் உறுதியேற்பார்கள். இந்துக்கள் கடவுளின் பெயரைச் சொல்ல விரும்பாதவர்கள். ஆக இப்படிப்பட்ட ஒரு சிக்கலில் பெரும்பான்மைச் சமூகத்தின் உணர்வுகளையும் நடைமுறையையும் நாம் மதித்தாக வேண்டும் என நான் கருதினேன். இதன் பயனாக உறுதியளிப்புக்கும் உறுதிமொழிக்குமான இடத்தை உரைத்ததன் வாயிலாக இக்குறிப்பிட்ட வழிமுறையை நாம் அறிமுகப்படுத்தியிருக்கிறோம். நான் முன்பே கூறியதுபோல் எனக்கு இந்தக் கருத்தும் இல்லை, அந்தக் கருத்தும் இல்லை. நான் அவையின் விருப்பங்களை அப்படியே செயல்படுத்த அட்டியின்றி அணியமாய் உள்ளேன். திரு. காமத்தின் திருத்தத்தை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று அவை கருதினால் - இந்துக்களைப் பொறுத்தவரை இந்நாட்டில் நிலவி வரும் நடைமுறைக்கு இது மாறாக இருக்குமென்பதைப் பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன் - என் யோசனை இதுதான்: இந்தக் கட்டத்தில் என் திருத்தங்களை அனுமதிக்கலாம். எல்லாவற்றையும் வழிக்குக் கொண்டு வரும் பொருட்டு, இதுவரை அரசமைப்புச் சட்டத்தில் இணைக்கப்பட்டிருக்கும் மற்றெல்லா உறுப்புகளையும் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்கிற உரிமை வரைவுக் குழுவுக்கு இருக்கும்.

இங்கு ஒரு மாற்றத்தைச் செய்துவிட்டு, மற்ற உறுப்புகளை அப்படியே விட்டுவிடுவது சரியாக இருக்காது.

**திரு. மகாவீர் தியாகி:** கடவுளின் வழியில் இலக்கணம் நிற்க வேண்டாமே!

**திரு. எச்.வி. காமத்:** உறுப்பு 81ஐப் பொறுத்தவரை அவையின் முன் திருத்தம் ஏதும் இருக்கவில்லை. நாடாளுமன்றத்தின் ஒவ்வோர் அவையிலும் ஒவ்வோர் உறுப்பினரும் மூன்றாம் அட்டவணையின்படி உறுதியேற்கவும் உறுதியளிக்கவும் வேண்டும் என அறிவிக்கப்பட்டது. குடியரசுத் தலைவருக்கும் ஆளுநர்களுக்கும் - உறுதியளித்தல் அல்லது உறுதியேற்றலை இந்த அவை ஏற்கனவே ஏற்றுக்கொண்டு

விட்டது. அது இன்று என் திருத்தத்தில் என்னால் எடுத்துரைக்கப் பட்ட வடிவில் அமைந்துள்ளது.

***திரு. அவைத் தலைவர்:*** இச்செய்தி பற்றி விவாதிக்க வேண்டிய தேவையில்லை. இது குறித்து நீங்கள் வாக்களிப்பதே நன்று. இப் பிரச்சினை குறித்து அதிகமாய் விவாதிப்பதற்கு இடமில்லை. டாக்டர் அம்பேத்கர் சொல்லியிருப்பது போல் அவருக்கு இப்பிரச்சினையில் எந்தக் குறிப்பிட்ட உணர்வும் இல்லை. ஒரு வகையில் அவை முடி வெடுத்ததென்றால் அவ்வடிவில் எல்லா உறுப்புகளையும் அமைக்க அவர் உரிமை கேட்பார். எனவே நான் திருத்தத்தை வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

***திரு. நசிருதீன் அகமது:*** என் திருத்தங்கள் டாக்டர் அம்பேத் கரால் தொடப்படவே இல்லை.

***திரு. அவைத் தலைவர்:*** அது வேறு.

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** ''உண்மையாக'' என்ற சொல்லுக்கும் பிறகா? ''உண்மையாக'' என்ற சொல்லுக்குப் பிறகு இன்னும் ஏதாவது சேர்க்க விரும்புகிறேன். இது போதுமான தாய் இருக்காது.

***திரு. அவைத் தலைவர்:*** அவர் ''பாசம்'' என்ற சொல்லை விட்டுவிட விரும்புகிறார்.

*(சிறிது நேர மௌனத்துக்குப் பின்)*

சரி, நான் திருத்தத்தை எடுத்துக் கொள்கிறேன்.

*(பின்வரும் திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.)*

''திருத்தங்களுக்கான திருத்தங்களின் பட்டியல் Iஇன்' (ஐந்தாம் வாரம்) திருத்தம் எண் 56 முதல் 63 முடிய உள்ளவற்றில் மூன்றாம் அட்டவணையில் உறுதிமொழி அல்லது உறுதியேற்பின் வடிவத்தில்,

'உளமார உறுதியளிக்கிறேன்
கடவுளின் பெயரால் உறுதியேற்கிறேன்'

என்ற சொற்களுக்குப் பதிலாகப் பின்வருவதை இடம்பெறச் செய்ய லாம் (என்று முன்மொழியப்படுகிறது):

'கடவுளின் பெயரால் உறுதியேற்கிறேன்

உளமார உறுதியளிக்கிறேன்.'

(திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.)

**திரு. அவைத் தலைவர்:** இதேபோன்ற தொடர்கள் இடம் பெறும் இடங்களிலெல்லாம் ஏனைய உறுப்புகளையும் இதே வரிசையில் அமைத்திட டாக்டர் அம்பேத்கருக்கு இந்த அவை இசைவளிப்பதாய் எடுத்துக் கொள்கிறேன்.

**மாண்புமிகு உறுப்பினர்கள்:** ஆமாம்.

**திரு. ஜஸ்பத் ராய் கபூர்:** ''உறுதியளிப்பு - அல்லது உறுதி மொழி'' என்ற சொற்கள் வரக்கூடிய இடங்களில் எல்லாம் முதலில் 'உறுதிமொழி'யும் பிறகு 'உறுதியளிப்பும்' வரலாம் என்பது என் யோசனை. இது அடிப்படைக் கூறிலும் இப்படித்தான் இருக்க வேண்டும்.

**திரு. அவைத் தலைவர்:** அப்படியே ஆகட்டும். இத்தொடர் வருமிடத்தெல்லாம் இதே வரிசையில் இருக்க வேண்டும்.

★ ★ ★

**திரு. அவைத் தலைவர்:** பிரச்சினை இதுதான்:

''திருத்தங்களுக்கான திருத்தங்களின் பட்டியல் I (ஐந்தாம் வாரம்) திருத்தம் எண் 56 தொடர்பாக உறுதியுரைகளின் படிவம் Iஇல் 'அனைத்துவிதமான ஆட்களும்' என்ற சொற்களுக்குப் பதிலாக 'அனைத்து ஆட்களும்' என்ற சொற்களை இடம்பெறச் செய்யலாம்.''

**திரு. நசிருதீன் அகமது:** இதனை வரைவுக்குழுவிடமே விட்டு விடலாம்.

**திரு. அவைத் தலைவர்:** இது வற்புறுத்தப்படவில்லை. எனவே இது கைவிடப்பட்டதாக எடுத்துக் கொள்கிறேன்.

★ ★ ★

**திரு. அவைத் தலைவர்:** பிரச்சினை இதுதான்:

''மூன்றாம் அட்டவணையில் உறுதியுரைப் படிவங்களின் படிவம் VIஇல், 'அல்லது ஆளுநர் தமது விருப்புரிமைப்படி தம்மால் நிறைவேற்றப்படும் செயல்பாடுகளோடு தொடர்புடைய எந்தச் செய்தியிலும் தனி வகையில் அனுமதிக்கக்கூடியவாறு' என்ற சொற்களை விட்டுவிடலாம்.''

(திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.)

**திரு. அவைத் தலைவர்:** ஏனையத் திருத்தங்களை வாக்கெடுப்புக்கு விடத் தேவையிருப்பதாக நான் கருதவில்லை. ஏனென்றால் வாக்கெடுப்பில் ஏனையத் திருத்தங்கள் தொடர்பாகக் காணப்பட்ட அதே நிலைதான் இதிலும் காணப்படும்.

**திரு. நசிருதீன் அகமது:** திருத்தங்களை முறைப்படி அவையில் வைத்து மறுதலிக்கலாம்.

★ ★ ★

[1]**திரு. அவைத் தலைவர்:** அடுத்து இந்த எல்லாப் படிவங்கள் தொடர்பாகவும் திரு. காமத்தின் திருத்தத்தாலும் டாக்டர் அம்பேத்கரே கொண்டுவந்த திருத்தத்தாலும் திருத்தப்பட்டவாறு டாக்டர் அம்பேத்கர் முன்மொழிந்த கருத்துரையை நான் வாக்கெடுப்புக்கு விடுகிறேன். அவற்றைத் தனித் தனியே வாசிக்கத் தேவையிருப்பதாக நான் கருதவில்லை.

(முன்மொழிவு ஏற்றுக்கொள்ளப்பட்டது.)

**திரு. அவைத் தலைவர்:** பிரச்சினை இதுதான்:

"திருத்தப்பட்ட வடிவில் மூன்றாம் அட்டவணை அரசமைப்புச் சட்டத்தின் பகுதியாக இருக்கலாம்."

முன்மொழிவு ஏற்றுக்கொள்ளப்பட்டது.

திருத்தப்பட்ட வடிவில் மூன்றாம் அட்டவணை அரசமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.

★ ★ ★

[2]**திரு. அவைத் தலைவர்:** ஏனைய உறுப்பினர்கள் திருத்தங்களைப் படிப்பதில்லை என உறுப்பினர் கற்பித்துக் கொள்ள எவ்வித நியாயமும் இருப்பதாக நான் கருதவில்லை.

---

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 26 1949, பக். 717.
2. மேற்படி அதே நூல், ஆகஸ்டு 29 1949, பக். 721.

**திரு. நசிருதீன் அகமது:** சிரத்தை மிக்க சில உறுப்பினர்கள் தாங்கள் திருத்தங்களைப் படிக்கவில்லை என என்னிடம் உறுதியாகக் கூறியுள்ளனர். ஆகையால் திருத்தங்களின் முக்கியத்துவம் கருதி அவற்றைப் பரிசீலிப்பதற்கு அவை நேரம் ஒதுக்க வேண்டுமெனச் சொல்கிறேன்...

**திரு. அவைத் தலைவர்:** எந்தக் குறிப்பிட்ட திருத்தம் அல்லது கூறு தொடர்பாகவும் கேள்வியேதும் எழுப்பப்பட்டால் மேலும் உறுப்பினர்களுக்கு நேரம் தேவைப்பட்டால் அப்போது இதை நாம் பரிசீலிப்போம். இப்பொழுது நாம் ஒவ்வொன்றாக எடுத்துக் கொள் வோம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்** (பம்பாய்: பொது): இத்திருத்தங்கள் நேற்று முன்தினம் சனிக்கிழமை சுற்றுக்கு விடப் பட்டன எனச் சொல்ல விரும்புகிறேன்.

**திரு. அவைத் தலைவர்:** அவை சனிக்கிழமையன்று சுற்றுக்கு விடப்பட்டனவா?

**மாண்புமிகு உறுப்பினர்கள் சிலர்:** ஆம் ஐயா.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** சனிக்கிழமை மாலை என நினைக்கிறேன். திரு. நசிருதீன் அகமதைப் பொறுத்தவரை அவர் பெயரில் ஏறத்தாழ நாற்பது திருத்தங்கள் உள்ளன.

**திரு. நசிருதீன் அகமது:** இருபதுதான்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அவை பட்டியல் I முழுவதையும் பற்றியவை. ஆக, தனிப்பட்ட முறையில் அவரைப் பொறுத்தவரை, அவருக்கு நேரம் கிடைக்கவில்லை என்ற முறை யீட்டை எள்முனையளவும் ஆதாரமற்றதாகவே கருத வேண்டும் என்பதைப் பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

## ஒன்றியப் பட்டியல்

### பதிவு 1

[1]**திரு. அவைத் தலைவர்:** நீங்கள் (டாக்டர் பி.எஸ். தேஷ்முக்) தொடக்கத்தில், முதல் நிலையிலும் கூட இத்திருத்தத்துக்கு அறிவிப்பு கொடுக்கவில்லை.

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 29 1949, பக். 722.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இது திருத்தத்துக்கான திருத்தமன்று.

**திரு. அவைத் தலைவர்:** இது புத்தம் புதிய திருத்தம்.

**டாக்டர் பி.எஸ். தேஷ்முக்:** சட்ட உறுப்புகளைப் பொறுத்தவரை டாக்டர் அம்பேத்கர் தன் திருத்தங்களை எந்தக் கொள்கையின் அடிப்படையில் முன்மொழிந்து வந்திருக்கிறாரோ அதே கொள்கையின் அடிப்படையில் நான் இந்தத் திருத்தத்தை முன்மொழிகிறேன்.

**திரு. அவைத் தலைவர்:** முன்னதாகப் பதிவு 1க்கான திருத்தத்துக்கு அறிவிப்பு ஏதுமில்லை. இப்பதிவுக்கு ஒரு திருத்தம் வந்திருப்பது இதுவே முதல் முறை.

**டாக்டர் பி.எஸ். தேஷ்முக்:** இது உண்மைதான். ஐயா, இந்தப் பதிவின் சொல்லமைப்பை அவசியம் என டாக்டர் அம்பேத்கர் கருதுவாரானால், இதனை ஏற்றுக்கொள்ளலாம்; இல்லையெனில், நான் இதை விலக்கிக் கொள்ள அணியமாய் உள்ளேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இது பதிவு 1க்கு வெறும் பொழிப்புரைதான். நாங்கள் ஒரு பதிவுக்கு ஐந்து மணித் துளிகளுக்கு மேல் செலவிடக் கூடாதெனப் பணித்துள்ளீர்கள். இப்போதே ஐந்து மணித் துளிகளுக்கு மேலாகிவிட்டது.

**திரு. அவைத் தலைவர்:** டாக்டர் அம்பேத்கர் சுட்டிக்காட்டியிருப்பது போல் இது பதிவுக்கான வெறும் பொழிப்புரைதான். அவரே இதைக் கருதிப் பார்க்கட்டும் என்று விட்டுவிடலாம். குறிப்பாகப் புதிய கருத்துகள் வெளிப்படாத நிலையில் இந்தச் செய்திகள் குறித்து அதிகமாய் விவாதிக்க வேண்டும் என நான் கருதவில்லை.

*(பதிவு 1 ஒன்றியப் பட்டியலில் சேர்க்கப்பட்டது.)*

★ ★ ★

## பதிவு 2

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் முன்மொழிவது:

> ''பட்டியல் I இன் பதிவு 2க்குப் பதிலாகப் பின்வரும் பதிவை இடம்பெறச் செய்யலாம்:

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 29 1949, பக். 724.

'2. மைய வேவு மற்றும் புலனாய்வுக் கழகம்'

''மற்றும் புலனாய்வு'' என்ற சொற்கள் மட்டுமே சேர்க்கப்பட்டுள்ளன. மற்றபடி பதிவானது வரைவில் இருப்பதேதான்.

**திரு. மகாவீர் தியாகி:** இப்படிச் சேர்ப்பதன் முக்கியத்துவம் என்ன? இச்சொற்களை ஏன் சேர்த்திருக்கிறீர்கள் என்பதை நீங்கள் தயவுசெய்து தெளிவுபடுத்துவீர்களா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இதன் கருத்து என்னவென்றால், ஒன்றிய அலுவலகத்தில் ஒருவிதமான கழகம் இருக்க வேண்டும். அது இந்திய ஆட்சிப் பரப்பெங்கும் ஆட்கள் செய்கிற எவ்வகைக் குற்றம் தொடர்பாகவும் தகவலனைத்தும் திரட்டும்; மேலும் தங்களுக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் தகவல் சரியானதா இல்லையா என்பதைப் புலனாய்வு செய்யும்; இவ்விதம் இந்தியாவின் வெவ்வேறு பகுதிகளிலும் என்ன நடந்து கொண்டிருக்கிறது என்பதை மாகாண அரசுகளுக்கு அதனால் தெரிவிக்க இயலும். ஆகவே மற்றபடி இத்தகைய தகவல் இல்லாதபோது அவ்வரசுகள் செய்யக்கூடியதைக் காட்டிலும் தமது காவல்துறை அதிகாரங்களைத் தாமாகவே மிகச் சிறந்த முறையில் அவை செலுத்த இயலும்.

* * *

[1]திரு. அவைத் தலைவர்: டாக்டர் அம்பேத்கர்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, என் நண்பர் திரு. நசிருதீன் அகமது முன்மொழிந்த திருத்தங்கள் எந்த ஒன்றையும் ஏற்றுக்கொள்ளும் நிலையில் நானில்லை. இத்திருத்தங்கள் குழம்பிய உள்ளத்தின் விளைவெனத் தோன்றுகிறது...

**திரு. அவைத் தலைவர்:** டாக்டர் அம்பேத்கர் கடுஞ்சொல் கூறத் தேவையில்லை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** திருத்தம் எண் 146 'மற்றும் புலனாய்வு' என்ற சொற்களை நீக்கச் சொல்கிறது. என் நண்பர் திரு. நசிருதீன் அகமதின் ஆலோசனைப்படி 'புலனாய்வு' என்ற

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 29 1949, பக். 726.

சொல்லை நீக்குவதற்கான அடிப்படை மைய அரசின் மேலுரிமைக் கும் மாகாணங்களுக்குமிடையே பிணக்கு ஏற்படும் என்பதே. நான் முன்மொழிந்துள்ளபடியான பதிவை அவர் இப்படித்தான் புரிந்து கொள்கிறார் என்றால் அவர் முன்மொழிந்திருக்கிற அடுத்தடுத்த திருத்தங்களில், அதாவது எண்கள் 147 மற்றும் 148இல் 'புலனாய்வு' என்ற சொல்லை மிச்சம் வைக்க அவரால் எப்படி இசைந்திட முடியும் என்றெனக்குப் புரியவே இல்லை.

**திரு. அவைத் தலைவர்:** 147 மட்டுமே.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அவரிடம் மற்றொன்றும் உள்ளது.

**திரு. அவைத் தலைவர்:** திருத்தம் எண் 148 முன்மொழியப் படவில்லை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** முக்கியச் செய்தி என்னவென்றால் இங்கு 'புலனாய்வு' என்ற சொல் ஒரு குற்றத்தைப் புலனாய்வு செய்ய அனுமதிக்கவில்லை, அனுமதிக்கவும் செய்யாது. ஏனென்றால் குற்ற நடைமுறைச் சட்டத்தின்படி இது தனிப்பட்ட காவல்துறை அதிகாரியிடமே விடப்படுகிறது. காவல்துறை என்பது தனிப்பட்ட மாநில அதிகாரமாகும்; ஒன்றியப் பட்டியலில் அதற்கு இடமேயில்லை. எனவே ''புலனாய்வு'' என்ற சொல்லின் நோக்கம் என்ன நடக்கிறது என்பதைக் கண்டறிவதற்கான பொது விசாரணை யைக் குறிப்பதே ஆகும். இந்தப் புலனாய்வு ஒரு குற்றவாளிக்கெதி ராக குற்றச்சாட்டு தாக்கல் செய்வதற்கு முன் தயாரிப்பான புலனாய் வன்று. குற்ற நடைமுறைச் சட்டத்தின்படி ஒரு காவல் துறை அதிகாரி யால் மட்டுமே அதனைச் செய்ய முடியும்.

***(டாக்டர் அம்பேத்கரின் திருத்தத்தால் திருத்தப்பட்ட வடிவில் பதிவு 2 ஒன்றியப் பட்டியலில் சேர்க்கப்பட்டது.)***

## பதிவு 3

* * *

[1]**டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் பணிந்து முன்மொழிவது:

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 29 1949, பக். 727.

''பட்டியல் Iஇன் பதிவு 3க்குப் பதிலாகப் பின்வரும் பதிவை இடம்பெறச் செய்யலாம்:

'3. பாதுகாப்பு, அயலுறவு அல்லது இந்திய இடர்காப்பு தொடர்பான காரணங்களுக்காக இந்திய ஆட்சிப் பரப்பில் தடுப்புக்காவல்;

இத்தகைய தடுப்புக்காவலுக்கு ''உள்ளாக்கப்படும் ஆட்கள்''

இந்தப் பதிவை வரைவு அரசமைப்புச் சட்டத்தில் காணப்படும் மூலப் பதிவுடன் ஒப்புநோக்கினால் இரண்டு மாற்றங்கள் மட்டுமே இருக்கக் காணலாம்: 'வெளியுறவு' என்ற சொல்லுக்குப் பதிலாக நாம் இப்பொழுது 'அயலுறவு' என்ற சொல்லைப் பயன்படுத்தியிருக்கிறோம். ''இத்தகைய தடுப்புக் காவலுக்கு உள்ளாக்கப்படும் ஆட்கள்'' என்று சேர்க்கப்பட்டுள்ளது; அது இப்போதுள்ளபடி பதிவு 3இல் இடம்பெறவில்லை. ஆனால் இதுவும்கூட முன்பே இந்திய அரசாங்கச் சட்டத்திற்கான திருத்தத்தில் இந்த அவையினால் நிறைவேற்றப்பட்டதுதான். ஆகவே சாரமாகப் பார்த்தால் நான் முன்மொழியும் திருத்தத்தில் எந்த மாற்றமும் இல்லை.

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** என் நண்பர் திரு. காமத் என்னைப் பார்த்துக் கேட்டுள்ள வினாவிற்கு விடையாக நான் அவருக்குச் சொல்ல விரும்புவது ஒரு குடிமகனை வெளியேற்றம் செய்வதற்கு வழிவகை ஏதும் இருக்க முடியாது. தடுப்புக் காவல் இருக்கலாமே தவிர வெளியேற்றம் இருக்க முடியாது. வெளியேற்றச் சட்டத்தை அயலாருக்கு மட்டுமே பயன்படுத்த முடியும். அயலார் தொடர்பாக நமது பட்டியலில் ஒரு பதிவு உள்ளது. அதன்படி அரசு ஓர் அயலாரை வெளியேற்ற விரும்பினால் அவரைக் கையாள அதனால் முடியும்.

**திரு. எச்.வி. காமத்:** பட்டியலில் இப்பதிவு எங்கே உள்ளது?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** பதிவு எண் 19. நிற்க, எனது நண்பர் டாக்டர் தேஷ்முக் என்னைப் பார்த்துக் கேட்ட வினாவைப் பொறுத்தவரை ''அரசு தொடர்பான காரணங்களுக்காக'' என்ற சொற்களை இடம்பெறச் செய்ய வேண்டுமென விரும்புகிறார். என் கருத்துப்படி அது வரம்பு கட்டும் பதிவாக இருக்கும்; நமது பதிவு

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 29 1949, பக். 727.

எந்த அதிகாரப் பொருள் தொடர்பாக தடுப்புக் காவலுக்கு ஆணை யிடலாம் என்பதைக் குறித்துரைப்பதால் அதை விடவும் மிகச் சிறந்த ஒன்றாகும்.

*அதற்கடுத்து திரு. பிராஜேஷ்வர் பிரசாத் பொதுஜனப் பாது காப்பைச் சேர்த்துக் கொள்ள விரும்புகிறார்.*

***திரு. பிரஜேஷ்வர் பிரசாத்:*** *நான் அதை விரும்பவில்லை. "பாதுகாப்பு... தொடர்பான காரணங்கள்" என்ற சொற்றொடரில் பொதுஜனப் பாதுகாப்பு அல்லது நலன் என்பதும் அடங்குமா என்று தெரிந்து கொள்ளத்தான் விரும்பினேன்.*

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** *ஆமாம், இந்திய இடர்காப்பு என்பது மிக விரிவானதொரு சொல்லாட்சியாகும்.*

***திரு. பிரஜேஷ்வர் பிரசாத்:*** *"இந்திய இடர்காப்பை"ச் சொல்ல வில்லை, "பொதுஜனப் பாதுகாப்பு அல்லது நலனை"யே சொல் கிறேன்.*

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** *நிற்க, திரு. நசிருதீன் அகமதின் கேள்வியைப் பொறுத்தவரை, "இத்தகைய தடுப்புக் காவ லுக்கு உள்ளாக்கப்படும் ஆட்கள்" என்ற சொற்கள் நீக்கப்பட வேண்டும் என விரும்புகிறார்.*

***திரு. அவைத் தலைவர்:*** *இல்லை, அவர் அந்தத் திருத்தத்தை முன்மொழியவில்லை. அவர் "அயல்" என்ற சொல்லுக்குப் பதிலாக "வெளி" என்ற சொல்லை இடம்பெறச் செய்ய வேண்டும் என மட்டுமே விரும்புகிறார்.*

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** *நாம் இதுவரை எல்லா இடங்களிலும் "அயல்" என்ற சொல்லைப் பயன்படுத்திக் கொண்டிருக்கிறோம். நாம் அதே சொல்லை வைத்துக் கொள்வது நல்லது என நினைக்கிறேன்.*

***திரு. எச்.வி. காமத்:*** *இந்தியாவின் இடர்காப்பும் அதன் ஏதேனும் ஒரு பகுதியின் இடர்காப்பும் ஒன்றுதானா? தவிர, இந்தப் பதிவு உறுப்பு 275க்கு இசைந்து செல்கிறதா?*

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஆமாம், ஐயமே இல்லை.

**திரு. அவைத் தலைவர்:** நான் திரு. நசிருதீன் அகமதின் திருத்தம் எண் 149ஐ வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

(திருத்தம் மறுதலிக்கப்பட்டது.)

**திரு. அவைத் தலைவர்:** அடுத்ததாக டாக்டர் தேஷ்முக்கின் திருத்தத்தை வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

(இந்தத் திருத்தமும் மறுதலிக்கப்பட்டது.)

**திரு. அவைத் தலைவர்:** அடுத்து டாக்டர் அம்பேத்கர் முன் மொழிந்தவாறு பதிவை வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

(திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.)

## ஒன்றியப் பட்டியல்

## பதிவு 4

[1]**அவைத் தலைவர்:** அடுத்து பதிவு 4க்கு வருகிறோம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் முன் மொழிவது:

> ''பட்டியல் Iஇன் பதிவு 4க்குப் பதிலாகப் பின்வரும் பதிவை இடம்பெறச் செய்யலாம்:
>
> '4. கடல், தரை, வான் படைகள், ஒன்றியத்தின் வேறு எந்த ஆயுதப் படை களும்'

இப்பதிவு மிகப் பெரியதாய் இருந்தது என்பதையும் அது இரு பகுதிகளைக் கொண்டிருந்தது என்பதையும் மாண்புமிகு உறுப் பினர்கள் காணலாம். பதிவின் முதல் பகுதி ஒன்றிய அரசுப் படை களை அமைப்பது தொடர்பானதாய் இருந்தது. இடண்டாம் பகுதி III இல் குறிப்பிடப்படும் மாநிலங்களின் படைகள் தொடர்பானதாய் இருந்தது. பகுதி IIIஇல் உள்ள மாநிலங்களை பகுதி Iஇல் உள்ள

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 29 1949, பக். 732.

மாநிலங்களுக்குரிய அதே அடிப்படையில் வைத்திட முடிவு எடுக்கப் பட்டிருப்பதைக் கருத்தில் கொண்டு இப்பதிவின் இரண்டாம் பகுதியை நீக்கிவிடுவது விரும்பத்தக்கது. இன்று மாநிலங்கள் ஏதும் படைகள் எதனையும் கொண்டுள்ள வரை, இதற்கு இந்த அரசமைப்புச் சட்டத் தின் தற்காலிக வழிவகைகள் பற்றிய பகுதியிலுள்ள ஒரு வழிவகை யால் வகை செய்யப்படும்.

பதிவின் முதல் பகுதியைப் பொறுத்தவரை அது வாய் கொள் ளாமல் இருப்பதாகவும் அதில் பல சொற்கள் தேவையற்றவை என்றும் இப்பொழுது முன்மொழியப்பட்டுள்ள சுருக்கமான சொல் லாட்சியே - கடல், தரை, வான் படைகள் என்பதே - தரை, கடல், வான் படை ஒன்றை வைத்துக் கொள்ளும் நோக்கங்களுக்குத் தேவைப் படும் எல்லா அதிகாரங்களையும் ஒன்றியத்திற்கு வழங்கப் போது மானதாய் இருக்கும் என்றும் கருதப்படுகிறது.

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ''ஒன்றியத்தின் வேறு எந்த ஆயுதப் படைகளும்'' என்ற சொற்களைத் தக்க வைத்துக் கொள்வது அவசியம். ஏனென்றால் முறையான இராணுவத்தைத் தவிர வேறு சில படைகளும் உள்ளன. இவையும் ஆயுதப் படைகள் என்ற தலைப்பில் அடங்கும். இவற்றையும் மைய அரசு வைத்துள் ளது. எல்லையைக் காக்க ''அசாம் சுழல் துப்பாக்கிப் படைவீரர்கள்'' என்றழைக்கப்படும் படைகள் உள்ளன. குறிப்பிட்ட சில இந்திய மாநிலங்களையும் பொறுத்தவரை மைய அரசு வைத்துள்ள குறிப் பிட்ட சில ஆயுதக் காவற் படைகளும் உள்ளன. ஆகவே இவற்றுக்கு ஒரு சட்ட அடிப்படையை வழங்குவதற்காக இவற்றையும் இந்தப் பதிவு 4இல் சேர்த்துக் கொள்வது விரும்பத்தக்கதாகும். இவை கடல், தரை, வான் படைகளிலிருந்து வேறாக 1935 ஆம் ஆண்டின் இந்திய அரசமைப்புச் சட்டத்தின் பதிவு 1இல் அடையாளப்படுத்தப்பட்டன என்பதையும் நான் குறிப்பிடலாம்.

**திரு. அவைத் தலைவர்:** அவையில் சர்தார் ஹுக்கும் சிங்கின் திருத்தத்தை வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

***(திருத்தம் மறுதலிக்கப்பட்டது.)***

---

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 29 1949, பக். 732.

**திரு. அவைத் தலைவர்:** அடுத்து டாக்டர் அம்பேத்கர் முன் மொழிந்த பதிவை வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது. திருத்தப்பட்ட வடிவில் பதிவு 4 ஒன்றியப் பட்டியலில் சேர்க்கப்பட்டது.)

## பதிவு 5

* * *

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, பதிவு எண் 5ஐ பதிவு எண் 64 உடன் சேர்த்துப் படிக்க வேண்டும். பொதுமக்களின் நலன்கருதி அவசியமானவை என்று நாடாளுமன்றம் அறிவித்துள்ள தொழில்களின் மீதான கட்டுப்பாடு பற்றியதாகும் பதிவு 64. இது, அதாவது பதிவு 5 பாதுகாப்புத் தேவைகளுக்காக அல்லது போர் நடத்துவதற்காகத் தொழில்களை எடுத்துக் கொள்வது தொடர்பான தாகும். இது முக்கிய வேறுபாடாய் இருக்க, பதிவு 5ஐப் பதிவு 64க்கு ஒத்ததாக்கினால் அது போர் முயற்சிக்குப் பெரிதும் ஊறு செய்யும் எனக் கருதுகிறேன். இரு நேர்வுகளிலுமே நாடாளுமன்றத்தின் அறிவிப்பு தேவைப்படும். ஆனால் பதிவு 5 பதிவு 64ஐக் காட்டிலும் பரந்தகன்ற வீச்சுடையது. நோக்கங்களில் வேறுபாடு இருப்பதைக் கருத்தில் கொண்டு பதிவு 64இலிருந்து பதிவு 5ஐ வேறுபடுத்திக் காட்ட முயல்கிறோம்.

(பதிவு 5 ஒன்றியப் பட்டியலில் சேர்க்கப்பட்டது.)

## பதிவு 6

**(பதிவு 6 ஒன்றியப் பட்டியலில் சேர்க்கப்பட்டது.)**

## பதிவு 7

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் முன்மொழிவது:

''பட்டியல் Iஇன் பதிவு 7க்குப் பதிலாகப் பின்வரும் பதிவை இடம்பெறச் செய்யலாம்:

''7. இராணுவக் குடியிருப்புப் பகுதிகளின் வரையறுப்பு, இத்தகையப் பகுதிகளில் வட்டாரத் தன்னாட்சி, இத்தகையப் பகுதிகளுக்குள் இராணுவக்

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 29 1949, பக். 735.

குடியிருப்பு ஆணையங்களின் அமைப்பு மற்றும் அதிகாரங்கள், இத்தகையப் பகுதிகளில் (வாடகைக் கட்டுப்பாடு உட்பட) வீட்டு வசதியை ஒழுங்குப் படுத்தல்.''

இதற்கொரு திருத்தம் என் மதிப்பிற்குரிய நண்பர் திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரியின் பெயரில் உள்ளது. இத்திருத்தத்தின் பொருள் ''வட்டாரத் தன்னாட்சி'' என்ற தொடரில் ''தன்'' என்ற சொல்லை விட்டுவிட வேண்டும் என்பதுதான். இதனால் அது ''உள்ளாட்சி'' என்றமையும்.

★ ★ ★

***திரு. மகாவீர் தியாகி:*** ஐயா, இப்பதிவை நிறுத்தி வைத்துக் கொள்ளலாம் என்பது என் யோசனை.

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** ஏன்? எனக்குப் புரியவில்லை. நீங்கள் ஏதும் கூற விரும்பினால் அதைக் கேட்டு விடையிறுக்க அணியமாகவே உள்ளோம்.

***திரு. மகாவீர் தியாகி:*** நாங்கள் எங்கள் திருத்தங்களை அவையின் முன் வைத்து வாதிடுவதற்கு முழு வாய்ப்பு வழங்கப்பட வேண்டும் அல்லது சர்ச்சைக்குரிய உறுப்புகள் நிறுத்தி வைக்கப்பட தயவு செய்து ஆணையிடலாம் எனக் கருதுகிறேன்.

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** திரு. சித்வாவின் இத்திருத்தம் ஜனவரி 26இலிருந்து காத்துக் கொண்டிருக்கிறது! எனது நண்பர் இப்பொழுதுதான் நிலைமையறிந்து விழித்திருக்கிறார். திருத்தம் கொடுக்க அவருக்கு நிறையவே நேரம் இருந்தது. அவர் தான் விரும்புவது போன்ற மாற்றங்களுக்காக வாதுரைக்கலாம் என்று இப்போதும் கூட சொல்ல அணியமாய் உள்ளேன். அவருக்கு மனநிறைவளிக்க அணியமாய் உள்ளேன்.

***திரு. மகாவீர் தியாகி:*** ஐயா, நாம் டாக்டர் அம்பேத்கரின் வேகத்தை ஏற்றுக் கொண்டிருக்கிறோம் - அவர் மிக விரைவாகச் சென்று கொண்டிருக்கிறார் - நாம் அதற்கு எந்த மறுப்பும் சொல்லவில்லை. ஆனால் இத்தகையக் கூறுகளில் அவர் ஒப்புக் கொள்ளலாம்...

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** நீங்கள் சொல்ல விரும்புவதைச் சொல்லாதது ஏன்?

**திரு. மகாவீர் தியாகி:** நான் பணிந்து சொல்லிக் கொள்கிறேன்: சில கூறுகள் குறித்து சர்ச்சைகள் இருக்குமானால், அல்லது அவை குறித்து மாண்புமிகு உறுப்பினர்கள் ஒரு முக்கியத் திருத்தத்தை முன்மொழிய விரும்புவதாகக் கூறவோ கருதவோ செய்வார்களானால், அந்தக் கூறுகளை தயவு செய்து நிறுத்திவைத்துக் கொள்ளலாம். இது வழியை சீராக்கும், பணியை முடுக்கிவிடும்.

**திரு. அவைத் தலைவர்:** அவை நாளை 9 மணி வரை ஒத்தி வைக்கப்படுகிறது. நாளை எல்லாத் திருத்தங்களையும் வரவர எடுத்துக் கொள்வோம். ஆனால் அதற்கு மேல் நேரம் தர மாட்டேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இந்தத் திருத்தத்தைப் பொறுத்தவரை நான் முழுக்க முழுக்க உங்கள் கையில் இருக்கிறேன். எனது நண்பர் திரு. தியாகிக்கு உள்ள மறுப்புகள் பற்றி என்னால் தெரிந்துகொள்ள முடியுமெனில் இந்த அவையில் இப்பொழுது அவரது வாதத்திற்கு விடையளிக்க அணியமாய் உள்ளேன்.

* * *

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் (பம்பாய்: பொது):** ஐயா, என் நண்பர் திரு. தியாகி முன்மொழிந்துள்ள திருத்தங்களுக்கு மட்டுமே விடையளிப்பதற்கான தேவை உள்ளது. அவருடைய திருத்தங்கள் மாற்று வடிவத்தில் உள்ளன. முதலாவதாக, வாடகைக் கட்டுப்பாடு உட்பட வீட்டு வசதியை ஒழுங்குபடுத்துவது தொடர்பான மொத்தப் பகுதியையும் நீக்க வேண்டுமென அவர் விரும்புகிறார். அவர் தனது மாற்றுத் திருத்தத்தில் வீட்டு வசதியைக் கட்டுப்படுத்துவதையும் ஒழுங்குபடுத்துவதையும் தக்கவைத்துக் கொள்ள அணியமாய் உள்ளார். ஆனால் 'வாடகைக் கட்டுப்பாடு' என்ற சொற்களை நீக்கிவிட விரும்புகிறார். எனக்கு இப்பிரச்சினை உண்மையில் நல்லறிவு தொடர்பான ஒன்றாய்த்தான் படுகிறது. ''வீட்டு வசதியை ஒழுங்குபடுத்துதல்'' என்ற சொற்களை நீக்காமல் வைத்துக் கொள்ள என் நண்பருக்கு மறுப்பேதும் இல்லை என்பது அவரது மாற்றுத் திருத்தத்திலிருந்து தெளிவாகிறது. அப்படியானால் வாடகைக் கட்டுப்பாடு என்பது வீட்டு வசதியை ஒழுங்குபடுத்துவதற்கு இடைநிகழ்வான ஒன்றாகவே எனக்குத் தோன்றுகிறது. இந்த அதிகாரத்தைப் பெற்றுள்ள ஆணையத்துக்கு வாடகைகளைக் கட்டுப்படுத்தும் அதிகாரம் இல்லையென்றால் வீட்டு வசதியை ஒழுங்குபடுத்துவதாகிய நோக்கதை நிறைவேற்ற இயலாமலே போகும். ஆக, வாடகை

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 29 1949, பக். 739.

களைக் கட்டுப்படுத்துவது வீட்டு வசதியை ஒழுங்குபடுத்துவதற்கு இடைநிகழ்வான ஒன்றே என்பதைப் பணிவுடன் கூறிக் கொள்கிறேன். வீட்டு வசதி தொடர்பான அதிகாரத்தைத் தக்கவைத்துக் கொள்ள திரு. தியாகிக்கு அடிப்படையான மறுப்பேதும் இல்லையெனில் கட்டுப்பாட்டை மாற்றிக் கொடுத்திடவும் அவருக்கு மறுப்பேதும் இருக்கக்கூடாது எனக் கருதுகிறேன்.

**திரு. அவைத் தலைவர்:** நான் இப்பொழுது திருத்தங்களை வாக்கெடுப்புக்கு விடுகிறேன். முதலாவது டாக்டர் தேஷ்முக்கின் திருத்தம்.

**டாக்டர் பி.எஸ். தேஷ்முக்:** வரைவுக்குழு இறுதி வரைவின் போது இதனைப் பரிசீலிக்க இசையுமானால் நான் நிறைவடைவேன்.

**திரு. அவைத் தலைவர்:** எனக்குத் தெரிந்தவரை இந்தப் பிரச்சினை வரைதல் தொடர்பானதே. ஆகவே நாம் இதனை வரைவுக் குழுவிடமே விட்டுவிடலாம்.

(திருத்தம் மறுதலிக்கப்பட்டது.)

*(டாக்டர் அம்பேத்கரின் திருத்தம் மட்டுமே ஏற்றுக்கொள்ளப்பட்டது. திருத்தப்பட்ட வடிவில் பதிவு 7 ஒன்றியப் பட்டியலில் சேர்க்கப்பட்டது.)*

## பதிவு 12

* * *

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, இத்திருத்தம் தொடர்பாகப் பல்வேறு பார்வைகள் எழுகின்றன. அயல் நாடுகள் தொடர்பான பதிவு இது மட்டுமன்று என்பதை என் மதிப்பிற்குரிய நண்பர் திரு. காமத் காண்பார். முதலாவதாக, அயல்துறை எனப்படும் ஒரு பதிவு உள்ளது. இந்நாடு எந்த ஒரு சர்வதேச அமைப்பிலும் உறுப்பினராக நிலைபெற விரும்பினால் அதற்கேற்றவாறு செயல் படுவதற்கு இத்துறை போதுமான அளவுக்கு விரிந்தகன்ற ஒன்று. இதைத் தொடர்ந்து வருவது - நாம் இப்பொழுது பரிசீலித்துக் கொண் டிருப்பது - சர்வதேச மாநாடு எதனிலும் அல்லது சர்வதேச அமைப்பு எதனிலும் பங்கேற்பது தொடர்பாகச் சட்டமியற்றுவதற்கு அனுமதி வழங்கும் பதிவு ஆகும். இதைக் கருத்தில் கொண்டு என் மாண்புமிகு நண்பர் திரு. காமத் முன்மொழிந்திருப்பது போன்ற திருத்தம் உண்மை யில் தேவையற்றது என்றே நான் கருதியிருப்பேன். இரண்டாவதாக,

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 29 1949, பக். 743.

இது வெறும் சட்டமியற்றும் பதிவுதான் என்பதை நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். இது பட்டியல் Iஇல் சேர்க்கப்பட்டுள்ள பதிவுகளில் எந்த ஒன்று தொடர்பாகவும் சட்டமியற்ற மாநிலத்திற்கு அதிகாரமளிக்கிறது. இப்பதிவுகளில் எந்த ஒன்றும் மாநிலத்துக்குத் தருகிற சட்டமியற்றும் அதிகாரத்தை வரம்புக்குட்படுத்தி வரைவு அரசமைப்புச் சட்டத்தின் உரையில் ஓர் உறுப்பு இருக்குமானால் என் மதிப்பிற்குரிய நண்பர் திரு. காமத் எழுப்பியிருப்பது போன்ற கேள்வி மிகப் பொருத்தமானதாக இருக்கும். இப்பதிவின்படி தரப்படுகிற சட்டமியற்றும் அதிகாரத்தை ஐக்கிய நாடுகள் அமைப்பின் உறுப்பாண்மையோடு கட்டுப்படுத்தி வரம்பு கட்டும் உறுப்பு ஏதும் அரசமைப்புச் சட்டத்தில் இருக்கக் காணோம். உறுப்பில் இத்தகைய தொரு பதிவே இல்லை. ஆகவே அரசினால் வேறு கூறுகளில் எந்த ஒன்றின்படியும் செயல்பட்டு வேறு எந்த சர்வதேச அமைப்பிலும் உறுப்பினராக முடியும். ஆனால் அவை இதில் குறியாக இருக்குமானால் திரு. காமத்தின் திருத்தம் ஏற்றுக்கொள்ளப்படுவதால் எந்தத் தீங்கும் நேரிடாது எனக் கருதுகிறேன். எனவே இப்பிரச்சினையை நான் அவையின் முடிவுக்கே விட்டுவிடுகிறேன்.

*(பதிவு எண் 12 ஒன்றியப் பட்டியலில் சேர்க்கப்பட்டது.)*

## புதிய பதிவு 9-A

[1]**திரு. அவைத் தலைவர்:** மேலும் ஒரு பதிவை சேர்க்க பேராசிரியர் ஷிபன்லால் சாக்சேனா ஒரு திருத்தத்துக்கு அறிவிப்புக் கொடுத்துள்ளார்: ''அண்ட ஆற்றல், அதன் உற்பத்திக்கும், வளர்ச்சிக்கும் அதன் பயன்பாட்டுக்குத் தேவையான அறிவியல், தொழிலியல் ஆராய்ச்சியும் ஏனைய செல்வாதாரங்களும்''.

ஷிபன்லால் சாக்சேனா அவர்களே, இதை நீங்கள் முன்மொழிய விரும்புகிறீர்களா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இதன் பொருள் என்னவென்று எனக்குத் தெரியவில்லை.

**திரு. அவைத் தலைவர்:** நம்மிடம் அணு ஆற்றல் உள்ளது; அவர் அண்ட ஆற்றலும் வேண்டும் என்கிறார்.

★ ★ ★

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 29 1949, பக். 744.

**பேராசிரியர் ஷிபன்லால் சாக்சேனா:** இந்தக் குறைபாட்டை நீக்க டாக்டர் அம்பேத்கர் ஆவன செய்வார் என நம்புகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, என்னால் சொல்ல முடிந்ததெல்லாம் இதுதான்: என் நண்பர் பேராசிரியர் ஷிபன்லால் சாக்சேனா முன்மொழிந்துள்ள திருத்தம் தேவைதான் என்றால் அதைக் கையாள்வதற்குப் பட்டியல் Iஇன் பதிவு எண் 91இன்படி நமக்குப் போதிய அதிகாரம் இருப்பதாகக் கருதுகிறேன்: ''பட்டியல் II அல்லது பட்டியல் III இல் குறிப்பிடப்படாத எதனிலும் குறிப்பிடப்படாத எந்த வரியும் உட்பட''. அச்செய்தியை இதுவே பார்த்துக் கொள்ளக்கூடும்.

**திரு. எச்.வி. காமத்:** அது பட்டியலிலேயே உள்ள பதிவுகளில் பலவற்றையும் பார்த்துக் கொள்ளும்.

(முன்மொழிவு மறுதலிக்கப்பட்டது.)

[1]**திரு. அவைத் தலைவர்:** பதிவு 14. டாக்டர் அம்பேத்கர், நீங்கள் ஏதும் பதில் சொல்ல விரும்புகிறீர்களா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** விளக்கம் தேவையில்லை.

(பதிவு எண் 14 ஒன்றியப் பட்டியலில் சேர்க்கப்பட்டது.)

## பதிவு 22

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் முன்மொழிவது:

> ''பட்டியல் Iஇன் பதிவு 22க்குப் பதிலாகப் பின்வரும் பதிவை இடம்பெறச் செய்யலாம்:
>
> '22. நடுக்கடலிலோ நடுவானிலோ நடைபெறும் கொள்ளைகளும் குற்றங்களும்; நிலத்திலோ நடுக் கடலிலோ நடுவானிலோ தேசங்களின் சட்டத்துக்கு எதிராக நடைபெறும் குற்றங்கள்'.

இப்பதிவின் இரண்டாம் பகுதி- ''நிலத்திலோ நடுக்கடலிலோ நடு வானிலோ தேசங்களின் சட்டத்துக்கு எதிராக நடைபெறும்

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 29 1949, பக். 744.
2. மேற்படி அதே நூல், பக். 745.

குற்றங்கள்'' என்பது - புதியதன்று. இது வரைவின் முந்தையப் பகுதியில் விடுபட்டுப் போயிற்று. குற்றங்கள் என்பதற்கு 'Felonies and offences' என்ற தொடருக்குப் பதிலாக இந்தியாவில் சாதாரணமாகப் புழங்கும் 'Crimes' என்ற சொல்லையே பயன்படுத்தலாம். ஆங்கிலத்தில் 'Fellonies and offences' என்பவை கலைச் சொற்கள். நாம் முதல் பகுதியிலிருந்து ''தேசங்களின் சட்டத்துக்கு எதிராக'' என்ற சொற்களையும் எடுத்து விடுகிறோம். ஏனென்றால் கொள்ளைகளையும் குற்றங்களையும் எந்த ஒரு நாடும் தனக்குரிய சட்ட மேலுரிமையாலும் ஆணையுரிமையாலும் கட்டுப்படுத்த முடியும். இதற்கும் தேசங்களின் சட்டத்துக்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை.

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, என் மாண்புமிகு நண்பர் திரு. நசிருதீன் அகமது கூறியதைக் கேட்கும் போது, இப்பதிவு 22 என்ன செய்யக் கருதுகிறது என்பதை அவர் அவ்வளவு தெளிவாக அறிந்திருக்கவில்லை என்று நான் மீண்டும் சொல்ல வேண்டியிருக்குமோ என அஞ்சுகிறேன்.

**திரு. நசிருதீன் அகமது:** டாக்டர் அம்பேத்கர் உரையாடலில் ஈடுபட்டிருந்ததால் நான் பேசியதைக் கேட்கவில்லை என்பதுதான் பிரச்சினையே.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் உரையாடலில் ஈடுபட்டிருந்தது உண்மைதான். ஆனால் கூறியதைக் கவனித்துக் கொண்டுதான் இருந்தேன்.

''கொள்ளையும் குற்றமும்'' என்ற தொடரை நாம் ஏன் பன்மையில் பயன்படுத்த வேண்டும் என்ற கேள்வியை என் நண்பர் முதலில் எழுப்பினார். சரி, நாம் கொள்ளையும் குற்றமும் என்பதை வேறு வழியில் பயன்படுத்தினால் அவை கூட்டுப் பெயர்களாக வரும். இதுபோன்ற பிரச்சினைகளில், குற்றவியல் சட்டத்துக்கு வழிவகை செய்யுமிடத்து சொல்லைக் கூட்டு வடிவத்தில் பயன்படுத்தாமல் விருப்பது சாலச் சிறந்தது எனக் கருதுகிறேன். அவர் சில எடுத்துக் காட்டுகளைக் குறிப்பிட்டார். ஆனால் சில நிலைகளில் சொல்லைப் பொதுப்படப் பயன்படுத்துவதே போதுமானது, வேறு நிலைகளில்

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 29 1949, பக். 747-48.

இது போதுமானதன்று என்ற உண்மையை அவர் மறந்து விடுகிறார். ஆகவே வரைவுக்குழு ''கொள்ளைகளும் குற்றங்களும்'' என்ற சொற்களை வேண்டுமென்றேதான் பன்மையில் பயன்படுத்தியிருக்கிறது. ஏனென்றால் அது பயன்படுத்தப்படும் சூழலுக்குப் பொருத்தமாக உள்ளது.

இப்பதிவுக்கு எதிரான இரண்டாம் கருத்தாக 'கொள்ளைகள்' என்பதற்குப் பிறகு அரைப்புள்ளி இருக்க வேண்டும் என்று என் நண்பர் திரு. நசிருதீன் அகமது சொன்னார். இது பதிவு 22இன் பொருளையும் உட்கருத்தையும் சிதைத்துவிடும் எனக் கருதுகிறேன். ''கொள்ளைகள்'' என்பதற்குப் பிறகு அரைப்புள்ளி இருப்பதாகக் கொண்டால் பதிவு 22இல் உள்ள ''கொள்ளைகள்'' என்பது பதிவின் மற்றப் பகுதிகளிலிருந்து விலகி நிற்கும். கொள்ளைகள் என்பது பதிவுகளின் மற்றப் பகுதிகளிலிருந்து விலகி நின்றால் உள்நாட்டு ஆறுகளில் நடக்கும் கொள்ளைகள் குறித்தும் சட்டமியற்றும் உரிமை மைய அரசுக்கு இருக்கும் என்று பொருளாகும். எல்லா வகைப்பட்ட கொள்ளைகள் குறித்தும் சட்டமியற்றும் அதிகாரத்தை மையச் சட்டமன்றத்திற்கு வழங்குவது இப்பதிவின் நோக்கமன்று. ''நடுக்கடலிலோ நடுவானிலோ நடைபெறும்'' என்ற சொற்கள் ''குற்றம்'' என்ற சொல்லுக்கு உரியவை மட்டுமல்ல, ''கொள்ளை'' என்ற சொல்லுக்கும் உரியவையாகும் நோக்கம் கொண்டவை.

அடுத்ததாக என் நண்பரின் மூன்றாம் கருத்து என்னவென்றால் ''தேசங்களின் சட்டத்திற்கு எதிரான குற்றங்கள்'' என்ற சொற்களுக்கு முன்னால் வரும் ''நிலத்திலோ நடுக்கடலிலோ நடுவானிலோ'' என்ற சொற்களை விட்டுவிட வேண்டுமாம். இரண்டாம் பதிவு அனைத்தளாவியது ஆகும் என்பதையும், பதிவின் முதல் பகுதிக்கு மாறாக அது நடுக்கடலிலும் நடுவானிலும் மட்டுமல்லாமல் நிலத்திலும் கூட தேசங்களின் சட்டத்துக்கு எதிராக நடைபெறும் குற்றங்களைக் கையாள மையச் சட்டமன்றத்துக்கு அதிகாரம் வழங்குவது ஆகும் என்பதையும் இது தெளிவாக்காது. வேறுவகையில் சொல்வதென்றால் பதிவின் இரண்டாம் பகுதியைப் பொறுத்தவரை மாநிலங்களுக்கு எந்தவகையான அதிகாரமும் இருக்காது. ஆகவே முன்மொழியப்பட்டுள்ளபடி பதிவு வரைவாளரின் நோக்கத்தைக் கொண்டுள்ளது என்றும் திருத்தம் தேவையில்லை என்றும் பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

**திரு. நசிருதீன் அகமது:** மாண்புமிகு உறுப்பினர் நான் கூறியதைக் கேட்கவில்லை. நிலத்திலோ நடுக்கடலிலோ நடுவானிலோ அல்லாமல் கரையோரக் கடலில் தேசங்களின் சட்டத்திற்கு எதிராக நடைபெறும் குற்றங்களின் நிலை என்ன?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இது அவரது கற்பனையில் மட்டுமே நடக்க முடியும். வேறெங்கும் நடக்க முடியாது.

**சர்தார் ஹுக்கம் சிங் (கிழக்கு பஞ்சாப்: சீக்கியர்):** கொள்ளைகள் என்பது எஞ்சியவற்றிலிருந்து விலகி நிற்கவில்லை என்றால், 'நடுவானில்' என்ற இந்தச் சொற்கள், 'கொள்ளை' என்ற சொல்லுக்கு உரித்தாகுமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நடுவானிலும் கொள்ளைகள் நடக்கலாம்.

**திரு. நசிருதீன் அகமது:** 'Piracies' என்னும் கொள்ளைகள் எப்பொழுதும் நீரில் நடப்பவையே; நிலத்திலோ நடுவானிலோ நடப்பவை அல்ல.

**திரு. அவைத் தலைவர்:** நான் இப்பொழுது திருத்தங்களை வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

**திரு. நசிருதீன் அகமது:** கடைசித் திருத்தம் மட்டும் வாக்கெடுப்புக்கு விடப்படுவதை விரும்புகிறேன்.

***(டாக்டர் அம்பேத்கரின் திருத்தம் நீங்கலாக மற்றத் திருத்தங்கள் மறுதலிக்கப்பட்டன. திருத்தப்பட்ட வடிவில் பதிவு 22 ஒன்றியப் பட்டியலில் சேர்க்கப்பட்டது.)***

## பதிவு 26

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் முன்மொழிவது:

> "பட்டியல் Iஇன் பதிவு 26க்குப் பதிலாகப் பின்வருவதை இடம்பெறச் செய்யலாம்:
>
> '26. சுங்கத்துறை எல்லைகளைக் கடந்து நடக்கும் இறக்குமதி அல்லது ஏற்றுமதி; சுங்க எல்லைகளின் வரையறை.''

இது மூலப் பதிவின் மறுசீரமைப்புதான்.

★ ★ ★

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 29 1949, பக். 752.

**திரு. நசிருதீன் அகமது:** ...என் திருத்தத்தில் ''இறக்குமதி மற்றும் ஏற்றுமதி'' என்பதில் ''மற்றும்'' என்ற சொல் மிக முக்கிய மானது. நான் ஏற்கெனவே சொல்லியிருப்பதுபோல் இது ஏறத்தாழ வரைதல் பற்றியது. எனவே என் முன்மொழிவை அவையில் வாக் கெடுப்புக்கு விடாமல் அதனை வரைவுக்குழுவே பார்த்துக் கொள் ளட்டும் என்று விட்டுவிடுகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, எனக்குத் தெளிவு போதும். அழகைத் தேடி ஓட எனக்கு விருப்பமில்லை.

*(திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது. திருத்தப்பட்ட வடிவில் பதிவு 26 ஒன்றியப் பட்டியலில் சேர்க்கப்பட்டது.)*

## பதிவு 26 - A

★ ★ ★

**பேராசிரியர் ஷிபன்லால் சக்சேனா:** ஐயா, இப்பொருள் பற்றி அமெரிக்க உச்சநீதிமன்றத்தில் வழக்குகள் நடைபெற்றுள்ளன. இது தெளிவாகச் சொல்லப்படுவதை விரும்புகிறேன். எனவே நான் திருத்தத்தை முன்மொழிய விரும்புகிறேன்.

ஐயா, நான் முன்மொழிவது:

''பட்டியல் நுஇன் பதிவு 26க்குப் பின்னர் பின்வரும் புதிய பதிவு சேர்க்கப் படலாம்:

'26-A. கடற்கரையில் சாதாரண கீழ்மட்ட நீர்க்குறியிலிருந்து கடல் நோக்கிய திசையில் மூன்று கடல் மைல்களுக்கு அப்பால் கடலடியில் உள்ள நிலங்கள், கனிமங்கள் மற்றும் மதிப்பு வாய்ந்த ஏனையவற்றின் மீதான உடைமை யும் மேலாட்சியும்.''

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** உறுப்பு 271-A ஏற்கெனவே இப்பிரச்சினையைக் கவனித்துள்ளது எனலாம். எனக் குள்ள இடர்ப்பாடு இதுதான்: என் நண்பர் பேராசிரியர் ஷிபன்லாலின் திருத்தம் உடைமை பற்றிப் பேசுகிறது. இப்பொழுது, இந்த எல்லாச் சட்டப் பட்டியல்களிலும் சட்டம் செய்வதற்கான அதிகாரத்தைப்

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 30 1949, பக். 753 -54.

பற்றிச் சொல்கிறோமே தவிர தனதாக்கிக் கொள்ளும் அதிகாரத்தைப் பற்றியல்ல. இச்செய்தி வேறோர் சட்டத்தினால் ஒழுங்குபடுத்தப்படுகிறதே தவிர சட்டப் பதிவுகளால் அல்ல. ஆகவே இதை என்னால் ஏற்றுக்கொள்ள முடியவில்லை.

**திரு. அவைத் தலைவர்:** அமெரிக்க உச்சநீதிமன்றத்தின் ஒரு தீர்ப்பை அவர் சுட்டியுள்ளார். ஆனால் அது நமது அரசமைப்பின் உறுப்பு 271-A போன்ற ஒன்று இல்லாத நிலையை அடிப்படையாகக் கொண்டது எனக் கருதுகிறேன்.

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** பதிவே இல்லை என்பதைக் கண்டுபிடித்தோம். எனவே இது ஐயத்திற்குரியதாக இருந்தது. இந்த ஐயப்பாட்டைத் தீர்க்கவே நாம் 271-Aஐ முன்வைக்கிறோம். இது நடைமுறையில் திரு. ஷிபன்லால் கொடுத்த திருத்தத்தின் சொல் மாறாத மறுபதிப்பே.

## பதிவு 31

[1]**திரு. அவைத் தலைவர்:** பதிவு 31க்குச் சில திருத்தங்கள் இருக்கக் காண்கிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் முன்மொழிவது:

> ''பட்டியல் Iஇன் பதிவு 31க்குப் பதிலாகப் பின்வரும் பதிவை இடம்பெறச் செய்யலாம்:
>
> '31. நாடாளுமன்றம் இயற்றிய சட்டத்தைக் கொண்டு அல்லது சட்டத்தின்படி நெடுஞ்சாலைகளைத் தேசிய நெடுஞ்சாலைகளாக அறிவித்தல்''.

இது செய்தியைத் தெளிவாக்குவதற்காகச் சொற்களை மாற்றிப் போடுவதே தவிர வேறல்ல.

(திருத்தப்பட்ட வடிவில் பதிவு 31 பட்டியலில் சேர்க்கப்பட்டது.)

## பதிவு 37

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் முன்மொழிவது:

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 30 1949, பக். 754.
2. மேற்படி அதே நூல், பக். 755.

''பட்டியல் Iஇன் திருத்தம் 12இல் பதிவு 37 இல் 'வான் வழியாக அல்லது கடல் வழியாக' என்ற சொற்களுக்குப் பதிலாக 'இருப்புப் பாதை வழியாக, கடல் வழியாக அல்லது வான் வழியாக' என்ற சொற்களை இடம்பெறச் செய்யலாம்.''

இதற்கு ஒரு விடுபாடுதான் காரணம்.

**டாக்டர் பி.எஸ். தேஷ்முக்:** ஐயா, நான் பணிந்து முன் மொழிவது:

''பட்டியல் Iஇன் (ஆறாவது வாரம்) திருத்தம் எண் 12இல், பட்டியல் Iஇன் பதிவு 37இல் (பதிலாக இடம்பெற முன்மொழியப்பட்டுள்ள) 'இருப்புப் பாதை வழியாக, கடல் வழியாக அல்லது வான் வழியாக' என்ற சொற்களுக்குப் பதிலாக 'நிலம், கடல் அல்லது வான் வழியாக' என்ற சொற்களை இடம்பெறச் செய்யலாம்.''

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, டாக்டர் தேஷ்முக் முன்மொழிந்துள்ள திருத்தத்தை என்னால் ஏற்றுக் கொள்ள முடியாதோ என அஞ்சுகிறேன். ஏனென்றால் நாம் இதைச் சேர்த்துக் கொண்டால் அது மைய அரசின் அதிகாரப் பொருளாகி விடும்.

**டாக்டர் பி.எஸ். தேஷ்முக்:** அது இரு மாகாணங்களுக்கு இடைப்பட்டதாக இருந்தால்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அது மாநிலங் களுக்கிடையிலான போக்குவரத்து என்ற தலைப்பிற்குள் வரும்.

**டாக்டர் பி.எஸ். தேஷ்முக்:** நான் என் திருத்தத்தை விலக்கிக் கொள்ள அணியமாய் உள்ளேன்.

(திருத்தம் அவையின் அனுமதி கொண்டு விலக்கிக் கொள்ளப் பட்டது.)

(திரு. எச்.வி. காமத் தமது திருத்தத்தை வலியுறுத்தவில்லை.)

---

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 30 1949, பக். 757.

## பதிவு 38

[1]மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஐயா, நான் முன்மொழிவது:

''பட்டியல் Iஇன் பதிவு 38க்குப் பதிலாகப் பின்வரும் பதிவை இடம்பெறச் செய்யலாம்:

'38. இருப்புப் பாதைகள்'

இம்மாற்றத்திற்குக் கொஞ்சம் விளக்கம் தேவைப்படுவதாகக் கருதுகிறேன். மாண்புமிகு உறுப்பினர்கள் வரைவு அரசமைப்புச் சட்டத்தில் உள்ளவாறு பதிவு 38ஐ எடுத்துப் பார்த்தால் ஒன்றிய இருப்புப் பாதைகளும் சிறுதிற இருப்புப் பாதைகளும் வேறுபடுத்திக் காட்டப்பட்டிருப்பதை முதலில் காண்பார்கள். இவ்வேறுபாடு தேவையானதாய் இருந்தது. ஏனென்றால் ஒன்றிய இருப்புப் பாதைகளைப் பொறுத்தவரை பாதுகாப்பு, குறைந்தபட்ச, அதிகபட்ச வீதங்கள் மற்றும் கட்டணங்கள் முதலானவை தொடர்பாகச் சட்டமியற்றும் அதிகாரம் மைய அரசுக்கு இருக்கும். சிறுதிற இருப்புப் பாதைகளைப் பொறுத்தவரை சரக்குகளையும் பயணிகளையும் ஏற்றிச் செல்லும் வண்டிகள் என்ற அளவில் உள்ளபடியான நிர்வாகப் பொறுப்பு வரம்புக்குட்பட்டதாய் இருந்தது. வேறுவகையில் சொல்வதென்றால் குறைந்தபட்ச, அதிகபட்ச வீதங்களும் கட்டணங்களும், தொடர் வண்டி நிலையம், சேவை முனையக் கட்டணங்கள் இன்ன பிறவற்றைப் பொறுத்தவரை, மையச் சட்டமன்றத்தின் மேலுரிமையிலிருந்து எடுக்கப்பட்டு விட்டன. இருப்புப் பாதைச் சேவைகள் இந்திய ஆட்சிப் பரப்பெங்கும் ஒரேசீரான சேவையாக இருப்பதால் எல்லாப் பிரச்சினைகளிலும் ஒரே சீரான அடிப்படையில் இருப்புப் பாதைகளைக் கையாள்வதற்குச் சட்டமியற்றிட ஒற்றை ஆணையுரிமைதான் இருக்க வேண்டும் என்று எண்ணப்படுகிறது. ஆதலால் முதல் பகுதியிலுள்ள பதிவு சிறுதிற இருப்புப் பாதைகள் உட்பட எல்லா இருப்புப் பாதைகளுக்கும் பொருந்தும்படி இப்பொழுது விரிவாக்கப்படுகிறது. மேலும் சட்டம் ஒரே சீராக இருக்க வேண்டுமென்பதால் ஒன்றிய இருப்புப் பாதைகளையும் சிறுதிற இருப்புப் பாதைகளையும் வேறுபடுத்திப் பார்க்கும் பதிவின் இரண்டாம் பகுதியை வைத்துக்கொள்வது தேவையற்றது எனக் கருதப்படுகிறது.

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 30 1949, பக். 757.

இது துப்புரவாக ஒரு சட்டப் பதிவுதான் என்பதையும் நான் குறிப்பிடலாம். இது உடைமை தொடர்பான பதிவன்று. அதாவது, குறைந்தபட்ச, அதிகப்பட்சக் கட்டணங்கள் மற்றும் வீதங்கள், முனையக் கட்டணங்கள் ஆகியவற்றை ஒழுங்குபடுத்தும் அதிகாரத்தை மைய அரசு பெற்றிருந்தாலும் கூட சிறுதிற இருப்புப் பாதையைச் சொந்தமாக வைத்துள்ள ஒவ்வொரு மாநிலமும் - பகுதி Iஇல் இருந் தாலும் சரி, பகுதி IIIஇல் இருந்தாலும் சரி - குறிப்பிட்ட இருப்புப் பாதைக்கு உரிமை படைத்தது எனில், மைய அரசால் நிர்ணயிக்கப் படக்கூடிய வீதங்கள் மற்றும் கட்டணங்களின் வரவுத் தொகையை பெற்றுக் கொள்ளவும் வைத்துக் கொள்ளவும் உரிமை பெற்றிருக்கும். இது உடைமையுரிமைகளை சிறிதும் பாதிக்கவில்லை. அவை உள்ள வாறே இருந்துவரும். பகுதி Iஇலோ அல்லது பகுதி IIIஇலோ உள்ள எந்த ஒரு மாநிலத்துக்கும் இப்போது சொந்தமாயுள்ள எந்தச் சிறுதிற இருப்புப் பாதையையும் மைய அரசு கையகப்படுத்த விரும்பினால், ஒன்றியம் அதனைச் சாதாரண வழியில் கையகப்படுத்த வேண்டி யிருக்கும். எனவே, இது துப்புரவாக ஒரு சட்டப் பதிவுதான். இருப்புப் பாதைகள் தொடர்பான எல்லாப் பிரச்சினைகளிலும் ஒரே சீரான சட்டம் வேண்டுமென்பதே திருத்தத்தின் நோக்கமாகும். இது உடைமை தொடர்பான எவ்விதச் சிக்கலிலும் எந்தப் பாதிப்பும் ஏற்படுத்தாது.

ஆனால் டிராம் வண்டித்துறை தொடர்பான சிக்கல் இருப்புப் பாதைச் சிக்கலிலிருந்து வேறுபட்டது. விளக்கக் கூறினில், இருப்புப் பாதைகள் என்பதை டிராம் வண்டிப் பாதைகளைச் சேர்க்காத விதத் தில் வரையறுக்க எண்ணியுள்ளோம். இதனால் டிராம் வண்டிப் பாதைகள் 'இருப்புப் பாதைகள்' என்பதில் உட்படாவிட்டால் எப்படியோ அப்படியே, பகுதி I மற்றும் பகுதி III இல் உள்ள மாநிலங் கள் எல்லா வகைகளிலும் டிராம் வண்டித்துறைகளை ஒழுங்கு படுத்தும் அதிகாரத்தைத் தக்கவைத்து கொள்ளும்.

**திரு. ஆர்.கே. சித்வா:** மாகாண அரசுகளால் செயலாக்கப் படும் சிறுதிற இருப்புப் பாதைகள் சட்டம் உள்ளது. அச்சட்டத்தை நீக்கம் செய்து ஒன்றியத்திற்குள் கொண்டு வரும் நோக்கமுள்ளதோ என நான் தெரிந்து கொள்ளலாமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஆமாம், ஒன்றியம் நினைத்தால் அச்சட்டத்தை ஒழிப்பதற்கோ வேறெந்தச் சட்டமும்

செய்வதற்கோ அதனைத் தக்கவைத்துக் கொள்வதற்கோ அதற்கு அதிகாரம் இருக்கும். இது அதிகாரமளிக்கும் பதிவு மட்டுமே. பெருதிற, சிறுதிற இருப்புப் பாதைகளை ஒழுங்குபடுத்த வெவ்வேறு சட்டங்கள் இயற்றுவதற்கோ, அல்லது பெருதிற இருப்புப் பாதை களா, சிறுதிற இருப்புப் பாதைகளா என்பதைக் கருதாமல் எல்லா இருப்புப் பாதைகளையும் ஒழுங்குபடுத்தும் ஒற்றைச் சட்டமியற்று வதற்கோ இப்பதிவு மைய அரசுக்கு அதிகாரமளிக்கும்.

**திரு. ஆர்.கே. சித்வா:** அப்படியானால் சிறுதிற இருப்புப் பாதைகளாளானவை. சிறுதிற இருப்புப் பாதைகள் சட்டத்தால் ஆளப் படுமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஆமாம், இப் பொழுதுள்ள சட்டம் நாடாளுமன்றம் அதனை மாற்றும் வரை தொடரும். இது அதனை மாற்றுவதற்கு நாடாளுமன்றத்திற்கு அதிகார மளிப்பது மட்டுமே.

**திரு. அவைத் தலைவர்:** இப்பொழுது நான் பதிவு 38ஐ வாக் கெடுப்புக்கு விடுகிறேன். ஒரு திருத்தம் இருப்பதாக என்னிடம் சொல்லப்படுகிறது. இன்று காலை 9 மணிக்குப் பிறகு அது என் கைக்கு வந்தது. அதை நான் ஏற்றுக்கொள்ள இயலாதோ என அஞ்சு கிறேன்.

*(டாக்டர் அம்பேத்கரின் திருத்தத்தால் திருத்தப்பட்ட வடிவில் பதிவு 38 ஒன்றியப் பட்டியலில் சேர்க்கப்பட்டது.)*

## பதிவு 39

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் முன்மொழிவது:

> "பட்டியல் Iஇன் பதிவு 39க்குப் பதிலாகப் பின்வரும் பதிவை இடம்பெறச் செய்யலாம்:
>
> '39. இந்த அரசமைப்புச் சட்டத்தின் தொடக்கத் தேதியில் தேசிய நூலகம், இந்திய அருங்காட்சியகம், பேரரசப் போர் அருங்காட்சியகம், விக்டோரியா நினைவகம், இந்தியப் போர் நினைவகம் என அறியப்படும் நிறுவனங்கள், முழுமையாகவோ பகுதியாகவோ இந்திய அரசின் நிதியுதவி பெற்று நடைபெறு வதும் தேசிய முக்கியத்துவம் வாய்ந்த நிறுவனம் என்று சட்டம் கொண்டு நாடாளுமன்றத்தால் அறிவிக்கப்படுவதுமான வேறு எந்த நிறுவனமும்".

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 30 1949, பக். 758.

1947 ஆகஸ்டு 15ஐத் தொடர்ந்து நிறுவனங்களின் பெயரில் ஏற்பட்டுள்ள ஒரு சில சொல்லளவிலான மாற்றங்களைத் தவிர இப்பதிவின் சாரம் இப்பொழுது என்னவாக உள்ளதோ அதுவேதான்.

**திரு. பி. தாஸ்** (ஒரிசா: பொது): அரசமைப்புச் சட்டம் செயலுக்கு வரும்பொழுது, ''பேரரசு நூலகம்'' என்ற பெயர் ''தேசிய நூலகம்'' என மாற்றப்பட்டிருப்பது போல் ''பேரரசப் போர் அருங்காட்சியகம்'' என்ற பெயர் ''தேசியப் போர் அருங்காட்சியகம்'' என மாற்றப்படுமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ''பேரரசு நூலகம்'' என்பது ''தேசிய நூலகம்'' என மாற்றப்பட்டிருப்பதாக அறிகிறேன், ஆனால் பேரரசுப் போர் அருங்காட்சியகம் இப்பொழுதுள்ள பெயரையே தக்கவைத்துக் கொள்கிறது. இந்தப் பெயர்களின் நோக்கம் இந்நிறுவனங்களைப் பற்றி நாடாளுமன்றம் சட்டமேதும் இயற்ற விரும்பும் போதெல்லாம் அவற்றை அடையாளப்படுத்துவது மட்டுமே.

**திரு. பி. தாஸ்:** அரசமைப்புச் சட்டம் செயலுக்கு வந்து தகவமைப்புகள் நடைபெறும்போது '' பேரரசு '' என்ற சொல் போய் விடுமா எனத் தெரிந்து கொள்ள விரும்புகிறேன். ''மாட்சிமைதங்கிய மன்னரின் அரசு'' ''முடியரசு'' போன்ற சொற்கள் மறைந்துவிடும் என எதிர்பார்க்கிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தகவமைப்புகள் சட்டங்களுக்குப் பொருந்துமே தவிர பெயர்களுக்குப் பொருந்த மாட்டா.

**திரு. அவைத் தலைவர்:** பெயர்களை மாற்றும் உரிமையை இப்பதிவு மையச் சட்டமன்றத்திற்கு வழங்குகிறது.

இதற்குத் திரு. நசிருதீன் அகமதால் கொண்டு வரப்பட்ட திருத்தம் ஒன்று உள்ளது, எண் 160.

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** திரு. நசிருதீன் அகமதின் திருத்தத்தை என்னால் ஏன் ஏற்றுக்கொள்ள இயலவில்லை

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 30 1949, பக். 758.

என்பதற்கு அதிக விளக்கம் தேவையில்லை எனக் கருதுகிறேன். உண்மையில் பதிவு இரு பகுதிகளாக இருப்பதை நீங்கள் காண்பீர்கள். முதல் பகுதி அதில் பட்டியலிடப்பட்டுள்ள குறிப்பான நிறுவனங்கள் பற்றியது. இரண்டாம் பகுதி முழுமையாகவோ பகுதியாகவோ இந்திய அரசின் நிதியுதவி பெறும் நிறுவனங்கள் பற்றியது. இதனால் ''ஒரே விதமான'' என்பவை போன்ற சொற்களைப் பயன்படுத்த இயலாது. ஏனென்றால் அது இப்பதிவின் நோக்கத்தை எல்லைக் குட்படுத்தும். மைய அரசின் நிதியுதவி கொண்டு நடைபெறுவ தானாலும் சரி, அல்லது பகுதியளவுக்கு மைய அரசின் நிதியுதவி கொண்டும் பகுதியளவுக்கு மாகாணங்களின் நிதியுதவி கொண்டும் நடைபெறுவதானாலும் சரி, எந்த ஒரு நிறுவனத்தையும் எடுத்துக் கொள்ளும் அதிகாரத்தை மைய அரசுக்கு வழங்குவதே அந்த நோக்கம்.

*(திரு. நசிருதீன் அகமது முன்மொழிந்த 3 திருத்தங்களில் இரண்டு அவரால் வலியுறுத்தப்படவில்லை, ஒன்று டாக்டர் அம்பேத்கரின் திருத்தத் தால் மறுதலிக்கப்பட்டது, பதிவு 39 ஒன்றியப் பட்டியலில் சேர்க்கப்பட்டது.)*

★ ★ ★

## பதிவு 40

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் முன்மொழிவது:

> ''பட்டியல் Iஇன் பதிவு 40க்குப் பதிலாகப் பின்வரும் பதிவை இடம்பெறச் செய்யலாம்:
>
> '40. இந்த அரசமைப்புச்சட்டம் தொடங்கும் தேதியில் காசி இந்துப் பல்கலைக் கழகம், அலிகார் முஸ்லீம் பல்கலைக் கழகம், டில்லிப் பல்கலைக் கழகம் என அறியப்படும் நிறுவனங்கள் மற்றும் தேசிய முக்கியத்துவம் வாய்ந்த நிறுவனமாக நாடாளுமன்றத்தால் சட்டம் கொண்டு அறிவிக்கப்படும் வேறெந்த நிறுவனமும்.''

''பல்கலைக் கழகம்'' என்ற சொல் பிழையானது, அது ''நிறு வனம்'' என இருக்க வேண்டும் என்பதைப் பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன். அதை மாற்றிப் போட என்னை அனுமதிப்பீர்கள் என நம்புகிறேன்.

தேசிய முக்கியத்துவம் வாய்ந்ததாக நாடாளுமன்றம் கருதும் எந்த நிறுவனத்தையும் எடுத்துக் கொள்ள அதனை அனுமதிக்கும்

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 30 1949, பக். 761.

பிற்பகுதியைத் தவிர இதில் அடிப்படையான எந்த மாற்றமும் இல்லை.

**டாக்டர் பி.எஸ். தேஷ்முக்:** இதோடு சேர்த்து 40-A-உம் எடுத்துக் கொள்ளப்பட நான் முன்மொழியலாமா? இது அதே செய்தியின் இன்றியமையாதப் பகுதியாகும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் முன்மொழிவது:

> "பட்டியல் Iஇன் பதிவு 40க்குப் பிறகு பின்வரும் புதிய திருத்தம் நுழைக்கப்படலாம்:
>
> '40A. முழுமையாகவோ, பகுதியாகவோ இந்திய அரசின் நிதியுதவி பெற்று நடத்தப்படுகின்றவையும் தேசிய முக்கியத்துவம் வாய்ந்த நிறுவனங்களாக நாடாளுமன்றத்தால் சட்டம் கொண்டு அறிவிக்கப்படுகிறவையுமான அறிவியல் அல்லது தொழில்நுட்ப கல்வி நிறுவனங்கள்."

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, என் மதிப்பிற்குரிய நண்பர்கள் திரு. நசிருதீன் அகமதும் டாக்டர் தேஷ்முக்கும் எதிரெதிர் நோக்கங்களுக்காகப் பேசக் கேட்கிறேன். "கல்விக் கழகம்" என்ற சொல்லைச் சேர்த்து இந்த உறுப்பின் வீச்சை விரிவாக்க ஒருவர் விரும்புகிறார். "டில்லிப் பல்கலைக் கழகம்... தேசிய முக்கியத்துவம் வாய்ந்த நிறுவனமாக நாடாளுமன்றத்தால் சட்டம் கொண்டு அறிவிக்கப்படும் வேறெந்த நிறுவனமும்" என்ற சொற்களை எடுத்து விட்டு உறுப்பின் வீச்சைக் குறுக்க மற்றவர் விரும்புகிறார்.

டாக்டர் தேஷ்முக்கின் திருத்தத்தைப் பொறுத்தவரை "கல்விக் கழகம்" என்ற சொல்லைச் சேர்ப்பது தேவையற்றதாக எனக்குப் படுகிறது. ஏனென்றால் 'நிறுவனம்' என்ற சொல் பல்கலைக் கழகம், கல்விக் கழகம் ஆகிய இரு சொற்களையுமே உட்படுத்துவதற்குப் போதிய விரிவுடையதாகும். ஆகவே அது தேவையே இல்லை.

என் மதிப்பிற்குரிய நண்பர் திரு. நசிருதீன் அகமதின் திருத்தத்தை பொறுத்தவரை டில்லிப் பல்கலைக் கழகம் என்பது முன்பே அவர் சுட்டிக்காட்டியது போல் மையச் சட்டமன்றத்தின் கீழ் உள்ளது.

---

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 30 1949, பக். 767.

ஏனென்றால் அது மைய அரசின் சட்டமுறைக்கு உட்பட்டதாகிய ஆணையரின் மாகாணத்தில் உள்ளது. எனவே ''டில்லிப் பல்கலைக் கழகம்'' என்ற சொற்களைச் சேர்ப்பதால் இப்போதைய நிலவரத்திலிருந்து நாம் விலகிவிடவில்லை என்பதே உண்மை. நாடாளு மன்றத்தால் சட்டம் கொண்டு அறிவிக்கப்படும் வேறெந்த நிறுவனம் தொடர்பாகவும் பதிவின் பிற்பகுதியைப் பொறுத்தவரை அச்சொற்களை நீக்காமல் வைத்துக் கொள்வது விரும்பத்தக்கதென எனக்குத் தோன்றுகிறது. ஏனென்றால் பண்பாட்டுக் கண்ணோட்டத்திலோ தேசியக் கண்ணோட்டத்திலோ முக்கியத்துவம் வாய்ந்த சில நிறுவனங்கள் இருக்கலாம், அவற்றின் நிதிநிலை வேறெந்த நிறுவனத்தைப் போலவும் வலுவானதாக இல்லாமற் போகலாம், அவற்றுக்கு மைய அரசு கைகொடுத்து உதவ வேண்டியிருக்கலாம். இதைக் கருத்தில் கொண்டு பதிவின் கடைசிப் பகுதி தேவை எனக் கருதுகிறேன். அவரது திருத்தத்தை நான் ஏற்றுக்கொள்ள அணியமாய் இல்லை.

அடுத்து, என் மதிப்பிற்குரிய நண்பர் திரு. காமத்தைப் பொறுத்தவரை அவர் ''ஆராய்ச்சி நிறுவனம்'' என்ற சொற்களைச் சேர்க்க விரும்பினார். ஆராய்ச்சி நிறுவனங்கள் தொடர்பான பதிவு எண் 57-A பற்றிய என் திருத்தத்தை அவர் மறந்துவிட்டார், அல்லது அதன்பால் அவரது கவனம் ஈர்க்கப்படவில்லை போலும். அப்பதிவு ஒருங்கிணைப்பு மற்றும் தராதரங்களைக் காத்தல் என்ற அளவோடு நிற்பது உண்மைதான். ஒருவேளை திரு. காமத் மாகாணங்களால் நிறுவப்படும் முகமைகளைக் கருத்தில் கொண்டிருக்கக் கூடும். இவற்றை மைய அரசு எடுத்துக் கொள்வது விரும்பத்தக்கதாய் இருக்கலாம். மைய அரசின் சுமையை அதிகப்படுத்தும் விதத்தில் ஒவ்வொரு வகை நிறுவனமாகச் சேர்த்துக் கொண்டே போவதில் பயனில்லை என்று எனக்குத் தோன்றுகிறது. நான் முன்பே சொன்னது போல், 57-Aஇல் அடங்கிய வழிவகைகளை நிறைவேற்ற அனுமதித்தாலே போதுமானதாய் இருக்கும். ஏனென்றால் அறிவியல், தொழில்நுட்ப நிறுவனங்களில் உயர் கல்விக்கான ஒருங்கிணைப்பையும் தரக் காப்பையும் சட்டம் கொண்டு நிலைநிறுத்தப் போதுமான அதிகாரத்தை மைய அரசுக்கு அது வழங்கும். இது இப்போதைக்குப் போதுமானதாக இருக்க வேண்டும் எனக் கருதுகிறேன்.

**திரு. அவைத் தலைவர்:** நான் இப்பொழுது திருத்தங்களை வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

*(3 திருத்தங்களுமே மறுதலிக்கப்பட்டன.)*

***(டாக்டர் அம்பேத்கரின் திருத்தத்தால் திருத்தப்பட்ட வடிவில் பதிவு 40 ஒன்றியப் பட்டியலில் சேர்க்கப்பட்டது.)***

★ ★ ★

## பதிவு 41

[1]*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* ஐயா, நான் முன்மொழிவது:

> "பட்டியல் Iஇன் பதிவு 41இல் 'மற்றும் விலங்கியல்' என்ற சொற்களுக்குப் பதிலாக 'விலங்கியல் மற்றும் மாந்தரியல்' என்ற சொற்களை இடம்பெறச் செய்யலாம்.

★ ★ ★

[1]***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** "மாந்தரியல்" என்ற சொல் மிகவும் விரிவானது, 'இனக் குழுவியலையும்' கூட அளாவக் கூடியது.

★ ★ ★

[1]***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** ஐயா, இந்தியாவில் நடக்கும் மண்ணியல் மதிப்பாய்வுகள் குறித்து கடந்த காலத்தில் மைய அரசு காட்டியுள்ள அலட்சியப் போக்கைப் பற்றி என் நண்பர் திரு. சித்வா அதிகப்படியாகவே பேசிவிட்டாரோ என்றஞ்சுகிறேன். இதுகாறும் இப்பிரச்சினையை மைய அரசு கவனிக்கவில்லை என்பதை ஒப்புக்கொள்ளத்தான் செய்கிறேன். ஆனால் இதை வைத்து மண்ணியலில் மைய அரசு இதுவரை காட்டியிருப்பதைக் காட்டிலும் மாகாணங்கள் சற்றாவது கூடுதல் அக்கறை காட்டப் போகின்றன என்றாகாது.

அனைத்துக்கும் முதலாவதாக, இது பெருஞ்செலவு தேவைப்படுகிற பெரும் பணி. மாகாணங்களால் தங்கள் பரப்புக்குள் கிடைக்கக் கூடிய கனிமங்களை வளர்த்தெடுப்பதற்கான செல்வாதாரங்களுக்கு வழிகாண இயலும் என நான் கருதவில்லை. இந்தக் கண்ணோட்டத்தில், மண்ணியல் குறித்துச் சட்டமியற்ற மாகாணங்களுக்கு வாய்ப்பளிக்கும் பொருட்டு அதனைப் பொதுப் பட்டியலுக்கு மாற்றுவதால் நன்மை ஏதும் விளைந்திடாது எனக் கருதுகிறேன்.

அவரது திருத்தத்தை ஏற்றுக் கொள்வதில் நான் காணும் இரண்டாவது இடர்ப்பாடு என்னவென்றால் இந்தியாவின் கனிம வளங்களை மைய அரசு வளர்த்தெடுக்கலாம் என ஒன்றியப் பட்டியலில் ஒரு பதிவு உள்ளது. நாட்டின் கனிம வளர்ச்சி மைய அரசின் அதிகாரப் பொருளாய் இருக்கும் என்றொரு சட்டத்தை நாடாளு மன்றம் இயற்றுவதாக வைத்துக் கொள்வோம்; அப்போது பொதுப் பட்டியலின்படி சட்டமியற்றும் அதிகாரம் மாகாணங்களுக்கும் இருக்குமானால் நாடாளுமன்றம் தன் சட்டத்தைச் செயலாக்கு வதில் அல்லது கனிம வளங்களை வளர்த்தெடுப்பதில் மிகப் பெரும் இடர்ப்பாடு உண்டாகும். ஆகவே திரு. சித்வாவை நான் வேண்டிக் கொள்கிறேன், பதிவை இப்போதுள்ளவாறே இருக்க விடுங்கள்.

**திரு. அவைத் தலைவர்:** அடுத்ததாக நான் திருத்தங்களை வாக்கெடுப்புக்கு விடுகிறேன். திரு. காமத் முன்மொழிந்துள்ள முதல் திருத்தம்...

**திரு. எச்.வி. காமத்:** ''மாந்தரியல்'' என்ற சொல்லில் ''இனக் குழுவியல்'' என்ற சொல்லும் அடங்கும் என டாக்டர் அம்பேத்கர் உறுதியளித்துள்ளதால், நான் அவரின் அறிவுமேன்மையை ஏற்றுக் கொள்கிறேன். திருத்தத்தை வலியுறுத்தாமல் விடுகிறேன்.

*(திருத்தம் அவையின் அனுமதி கொண்டு விலக்கிக் கொள்ளப் பட்டது.)*

**திரு. அவைத் தலைவர்:** அடுத்ததாக திரு. சித்வாவின் திருத்தம்...

**திரு. ஆர்.கே. சித்வா:** தரப்பட்டுள்ள வாக்குறுதியைக் கருத்தில் கொண்டு, திருத்தத்தை விலக்கிக் கொள்ள அனுமதி வேண்டு கிறேன்.

*(திருத்தம் அவையின் அனுமதி கொண்டு விலக்கிக் கொள்ளப் பட்டது.)*

*(டாக்டர் அம்பேத்கரின் திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.)*

***(திருத்தப்பட்ட வடிவில் பதிவு 41 ஒன்றியப் பட்டியலில் சேர்க்கப் பட்டது.)***

★ ★ ★

## பதிவு 43

[1]**திரு. அவைத் தலைவர்:** நாம் இப்பொழுது பதிவு 43ஐ எடுத்துக் கொள்கிறோம். டாக்டர் அம்பேத்கர் ஒரு திருத்தம் முன் மொழிய வேண்டும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் முன் மொழிவது:

> ''பட்டியல் Iஇன் பதிவு 43க்குப் பதிலாகப் பின்வரும் பதிவை இடம்பெறச் செய்யலாம்:
>
> '43. ஒன்றியத்தின் தேவைகளுக்காகச் சொத்துரிமையைக் கையகப்படுத் தல் அல்லது பயன்படுத்திக் கொள்ளுதல்.''

மூலப் பதிவு முன்பிருந்தபடி இதனோடு வேறு சொற்களை யும் கொண்டிருந்தது. அதாவது இழப்பீட்டுக் கொள்கைகள் முதலான வற்றையும் குறிப்பிட்டது என்பதை உறுப்பினர்கள் காண்பார்கள். அச்சொற்களை பொதுப் பட்டியலில் ஒரு தனிப் பதிவில் சேர்க்க எண்ணியுள்ளோம். எனவே அச்சொற்களை இங்கு தக்கவைத்துக் கொள்ளத் தேவையில்லை. பொதுப் பட்டியலில் அது பதிவு 35 ஆக இருக்கும்.

**திரு. சியாமானந்தன் சகாயா** (பீகார்: பொது): ஐயா, நான் ஓர் ஆலோசனை சொல்ல விரும்புகிறேன்.

**திரு. அவைத் தலைவர்:** சற்றே காத்திருங்கள். திருத்தம் ஒன்று முன்மொழியப்பட இருக்கிறது.

**திரு. சியாமானந்தன் சகாயா:** திருத்தம் முன்மொழியப் படுவதற்கு முன்பாகவே நான் அதைச் சொல்ல விரும்புகிறேன். டாக்டர் அம்பேத்கரால் முன்மொழியப்பட்டுள்ள பட்டியலில் உள்ள இந்தக் கூறு உறுப்பு 24இன் மொழிநடையோடு உடன்பட்டுச் செல்ல வேண்டியிருக்கும். எனவே உறுப்பு 24 நிறைவேற்றப்படும் வரை இந்தக் கூறு நிறுத்தி வைக்கப்படலாம் என்பது என் யோசனை...

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இது தேவையற்றது எனப் பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன். ஏனென்றால் எந்நிலை

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 30 1949, பக். 771-72.

யிலும் கொள்கைகள் வகுத்துரைக்கும் அதிகாரத்தைச் சட்டமன்றத் துக்குத் தர வேண்டியிருக்கும். கையகப்படுத்தும் கொள்கைகளை விதிப்பதற்கு அரசுக்கு ஒரு தனிப் பதிவும் மாகாணங்களுக்கு ஒரு தனிப் பதிவும் இருக்க வேண்டுமா என்பதுதான் கேள்வி. முன் மொழியப்படுவது என்னவென்றால் மைய அரசு, மாகாணங்கள் இரண்டுக்குமே பொதுப் பட்டியலில் ஒரு பொதுவான பதிவு இருக்க வேண்டும் என்பதே. எனவே உறுப்பு 24க்கு என்ன நேர்ந்தாலும் கொள்கைகள் தொடர்பான இப்பதிவை எங்காவது வைக்க வேண்டி யிருக்கும். பொதுப் பட்டியலில் இச்செய்தியை வைத்திட என் நண்ப ருக்கு ஏதும் மறுப்பு இருந்தாலொழிய இப்பதிவின் பரிசீலனையைத் தள்ளிப்போடுவதால் எந்தப் பயனும் இல்லை.

**திரு. சியாமானந்தன் சகாயா:** மாநில அரசுகள் கையகப்படுத் தும் பிரச்சினையிலும் கூட மைய நாடாளுமன்றமே அதற்கான கொள்கையைத் தீர்மானிக்க வேண்டியிருக்கக் கூடிய நேர்வு குறித்து நான் யோசித்துக் கொண்டிருக்கிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இதுதான் முக்கியம். என் நண்பர் இதைப் புரிந்து கொள்வாரானால் பொதுப் பட்டியலில் அதைச் சேர்க்குமிடத்து மைய அரசுக்கும் அதிகாரம் இருக்கும்.

**திரு. சியாமானந்தன் சகாயா:** சரியாக அப்படித்தான், ஆனால் நீங்கள் ''மைய அரசுக்கும் இருக்கும்'' என்று சொல்கிறீர்கள். நான் பணிந்து சொல்லிக் கொள்வது...

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் சொல்வது இதுதான்: நாம் 'கொள்கைகள்' முதலான சொற்களை வெட்டி யெடுத்துப் பொதுப் பட்டியலின் பதிவு 35இல் வைக்கிறோம். ஒன்றியப் பட்டியலில் 43, மாநிலப் பட்டியலில் 9 ஆகிய இரு பதிவு களையும் என் நண்பர் எடுத்துப் பார்ப்பாரானால், அவை இரண்டும் சரியாக ஒரே சொல்லமைப்பில் இருக்கக் காண்பார். வேறு வகை யில் சொல்வதென்றால், இரண்டுமே சொத்துடைமையைக் கட்டாய மாகக் கையகப்படுத்தும் அதிகாரத்தை வழங்குவதோடு, கொள்கை கள் விதிக்கும் அதிகாரத்தையும் வழங்குகின்றன. கொள்கைகள் தொடர்பான பதிவை மைய அரசுகளுக்கும், மாகாண அரசுகளுக்கும் இடையே ஒன்றுக்கொன்று சார்பற்றுப் பிரித்துக் கொடுப்பதற்குப் பதிலாக, ''கொள்கைகள்'' முதலான அந்தச் சொற்களை எடுத்துப்

பொதுப் பட்டியலின் பதிவு 35இல் சேர்ப்பதே இப்போதைய முன் மொழிவு.

**பேராசிரியர் ஷிபன்லால் சக்சேனா:** அந்த மற்றொரு உறுப்பை நிறைவேற்றும் வரை இதை ஒத்திவைத்தால் தீங்கேதும் நேரிடுமா?

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** ஒத்திப் போடுவதால் எந்த நன்மையும் ஏற்படாது. இவற்றை ஒத்திப்போடுவதை நான் ஆதரிக்கவில்லை. இதைப் பரிசீலிக்க ஏற்கனவே நிறைய நேரம் எடுத்துக் கொண்டாகிவிட்டது.

***டாக்டர் பி.எஸ். தேஷ்முக்:*** ஐயா, நான் முன்மொழிவது:

"பட்டியல் Iஇன் (ஆறாம் வாரம்) திருத்தம் எண் 21இல், பட்டியல் Iன் முன் மொழியப்படும் பதிவு 43இல், 'சொத்துடைமையை' என்ற சொற்களுக்கு முன் 'ஒன்றியச் சட்டத்தின்படி' என்ற சொற்களை நுழைக்கலாம்."

... சொத்துடைமை ஏதும் கையகப்படுத்தப்படவோ பயன் படுத்திக் கொள்ளப்படவோ வேண்டுமென்றால் அது நாடாளு மன்றம் இயற்றிய சட்டப்படி நடைபெறுமே தவிர தற்போக்காகச் செய்யப்படாது என்பதை நான் முன்மொழிந்துள்ள திருத்தம் குறித் துரைக்கிறது; இந்தத் திருத்தம் ஏற்றுக்கொள்ளப்படுமென நான் நம்பு கிறேன்.

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** இதற்குத் தேவையே இல்லை. இந்தப் பதிவுகள் சட்டமியற்றும் அதிகாரம் பற்றியவையே. "ஒன்றியச் சட்டத்தின்படி" என்ற சொற்களைச் சேர்ப் பதால் என்ன பயன்? இப்போதுள்ள இப்பதிவின்படி ஒன்றியத்திற்கு சட்டமியற்ற அதிகாரம் இருக்கும். இதற்கு வேறெந்தப் பொருளும் இருக்க முடியாது.

***டாக்டர் பி.எஸ். தேஷ்முக்:*** என் திருத்தத்தை விலக்கிக் கொள்ள அனுமதி வேண்டுகிறேன்.

***(திருத்தம் அவையின் அனுமதி கொண்டு விலக்கிக் கொள்ளப்பட்டது.)***

***(டாக்டர் அம்பேத்கரின் திருத்தத்தால் திருத்தப்பட்ட வடிவில் பதிவு 43 ஒன்றியப் பட்டியலில் சேர்க்கப்பட்டது.)***

★ ★ ★

## பதிவு 50

★ ★ ★

[1]**திரு. ஜகத் நாராயண லால்:** இது பொருளைத் தெள்ளத் தெளிவாக்கும். பொருள் மயக்கம் ஏதும் இருக்காது. இதனை திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரிக்கு ஆலோசனையாகத் தெரிவித்துக் கொள்கிறேன். என் ஆலோசனையை ஏற்றுக் கொள்வதன் மூலம் அவர்கள் கருத்தில் கொண்டுள்ள நோக்கத்தை அடைய முடியும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இதனை நான் கருதிப் பார்ப்பேன். திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி முன்மொழிந்துள்ள பதிவை இப்போதைக்கு ஏற்றுக் கொள்ளலாம்.

**திரு. அவைத் தலைவர்:** பிரச்சினை இதுதான்:

''பட்டியல் Iஇன் பதிவு 50க்குப் பதிலாகப் பின்வரும் பதிவுகளை இடம் பெறச் செய்யலாம்:

'50. வங்கிக் கழகங்கள், காப்பீட்டுக் கழகங்கள், நிதிக் கழகங்கள் உட்பட, ஆனால் கூட்டுறவுச் சங்கங்கள் நீங்கலாக, வர்த்தகக் கழகங்களை அமைத்தல், ஒழுங்குப்படுத்தல், மூடுதல்.

50-A. வர்த்தகக் கழகங்கள் என்றாலும், அல்லவென்றாலும் ஒரு மாநிலம் என்ற அளவோடு நிற்காத குறிக்கோள்களுடைய - பல்கலைக் கழகங்கள் நீங்கலான - கழகங்களை அமைத்தல், ஒழுங்குபடுத்துதல், மூடுதல்.''

*(பதிவுகள் 50, 50A, ஒன்றியப் பட்டியலில் சேர்க்கப்பட்டன.)*

★ ★ ★

## பதிவு 52

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் முன்மொழிவது:

பட்டியல் Iஇன் பதிவு 52க்குப் பதிலாகப் பின்வரும் பதிவை இடம்பெறச் செய்யலாம்:

'52. உச்சநீதிமன்றம், உயர்நீதிமன்றங்களின் அமைப்பும் ஒழுங்கும்; உச்ச நீதிமன்றத்தின் மேலுரிமையும் அதிகாரங்களும், அதில் பெறப்படும் கட்டணங்களும்; உச்சநீதிமன்றத்தின் முன் அல்லது எந்த உயர்நீதிமன்றத்தின் முன்னும் சட்டத்தொழில் செய்ய உரிமை படைத்தவர்கள்.''

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 30 1949, பக். 773-74.
2. மேற்படி அதே நூல், பக். 774.

கடைசியில் வரும் சொற்கள் கூடுதலாகச் சேர்க்கப்பட்டவை. உயர்நீதிமன்றம், உச்சநீதிமன்றம் ஆகிய இரண்டிலும் சட்டத் தொழில் செய்யும் உரிமையை ஒழுங்குபடுத்த வேண்டிய காலம் வந்துவிட்டதால் இச்சொற்களைச் சேர்ப்பது அவசியம் எனக் கருதப்படுகிறது.

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் விவாதத்தை இடைமறிக்க விரும்பவில்லை. ஆனால், உயர்நீதிமன்றங்களின் யாப்பு குறித்துச் சொல்கின்ற உறுப்புகள் 192A, 193, 197, 201, 207 ஆகியவற்றை நாம் முன்பே நிறைவேற்றியுள்ளோம் என்பதைச் சுட்டிக் காட்ட விரும்புகிறேன். இந்த உறுப்புகளின்படி, பண வகை மேலுரிமையைத் தவிர, உயர்நீதிமன்றங்கள் அவற்றின் யாப்பையும், ஒழுங்கமைப்பையும், ஆட்சிப் பரப்பு சார்ந்த மேலுரிமையையும் பொறுத்தவரை முழுமையாக மைய அரசின் பொறுப்பில் விடப்படுகின்றன. ஆகவே, இத்திருத்தம் முறையற்றதாக எனக்குத் தோன்றுகிறது.

★ ★ ★

[1]**திரு. நசிருதீன் அகமது:** மூலவரைவின் பதிவு உச்சநீதிமன்றம் குறித்து மட்டுமே சொல்லிற்று. டாக்டர் அம்பேத்கர் முன்மொழிந்த புதிய பதிவில் ''உச்சநீதிமன்றம், உயர்நீதிமன்றங்கள் ஆகியவற்றின் யாப்பும் ஒழுங்கமைப்பும்'' என்று உள்ளது. மேலும் ''உச்சநீதிமன்றம் அல்லது எந்தவோர் உயர்நீதிமன்றத்திலும் தொழில்நுட்ப உரிமை படைத்தவர்கள்'' என்றும் அவர் கூறினார்.

முக்கியமான பலவும் பதிவுகளில் இடைச் செருகலாய்க் கள்ளத்தனமாக நுழைக்கப்படுவதற்கே என் முதல் எதிர்ப்பு.

(குறுக்கீடு)

**திரு. மகாவீர் தியாகி:** ஓர் ஒழுங்குப் பிரச்சினை. ஐயா, ''கள்ளத்தனம்'' என்ற சொல் நாடாளுமன்றத்திற்கு உகந்ததுதானா?

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, வரைவுக் குழு கள்ளத்தனமாக எதையோ புகுத்த முயன்றுள்ளது என்று கூறுவது சரியான வாதம்தானா? நான் பதிவை மாற்றியிருப்பது ஏன் என்று

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 30 1949, பக். 775.
2. மேற்படி அதே நூல், பக். 778.

என்னிடம் விளக்கம் கேட்க என் மதிப்பிற்குரிய நண்பருக்கு உரிமை உண்டு. கள்ளத்தனம் ஒன்றுமில்லை. அதன் ஒவ்வோர் இனத்தையும் ஒவ்வொரு பகுதியையும் நியாயப்படுத்த முழுக்க முழுக்க அணியமாய் உள்ளேன்.

**திரு. மகாவீர் தியாகி:** ஐயா, நான் உங்கள் தீர்ப்பை வேண்டு கிறேன், கள்ளத்தனம் என்ற சொல் நாடாளுமன்றத்துக்கு உகந்தததுதானா?

**திரு. அவைத் தலைவர்:** 'கள்ளத்தனம்' என்பது நாடாளு மன்றத்துக்கு உகந்ததா இல்லையா என்று சொல்லும் அளவிற்கு எனக்கு நாடாளுமன்ற நடைமுறையில் பரிச்சயமில்லை என்பதை ஒப்புக்கொள்கிறேன். வருத்தம் தரக்கூடிய சொற்களைப் பயன்படுத்த வேண்டாமென்று மாண்புமிகு உறுப்பினரைக் கேட்டுக்கொள்கிறேன்.

**திரு. நசிருதீன் அகமது:** உங்கள் தீர்ப்புக்குத் தலைவணங்கு கிறேன், ஐயா...

★ ★ ★

[1]**திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி:** முன்பே டாக்டர் அம்பேத்கர் உறுப்பு 207ஐ அவை உறுப்பினர்களின் கவனத்திற்குக் கொண்டு வந்திருக்கிறார். இதனால் மாண்புமிகு உறுப்பினர் இந்தச் செய்தியை வளர்த்தத் தேவையில்லை என்று நான் சொல்லலாமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** என்னால் விடை யளிக்க முடியும்; எனக்குப் பத்து நிமிடங்களே போதும். அவர் சொல்ல விரும்புவதை நான் புரிந்து கொண்டிருக்கிறேன்.

**திரு. நசிருதீன் அகமது:** அவர் விடையளிப்பதாக உறுதி யளித்துள்ளார். ஆனால் உள்ளபடியே டாக்டர் அம்பேத்கரிடமிருந்து ஒரு விடையைப் பெறுவது எனக்கு வழக்கத்துக்கு மாறான அதிர்ஷ்ட மாகவே இருக்கும். இது மிகவும் முக்கியமானது, இதனை இலகு வாகக் கையாள முடியாது. வரைவுக்குழு என்ன வேண்டுமானாலும் செய்வதற்கு உரிமை படைத்தது என்று வைத்துக் கொண்டால் எனக்கு இந்தக் களத்தில் இடமேயில்லை என்று பணிந்து சொல்லிக் கொள்

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 30 1949, பக். 780-82.

கிறேன். காரணம் எதுவானாலும் எனக்குத் தோல்வி நிச்சயம் என்று உணர்கிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் தொடக்கத்திலேயே ஒன்றைச் சொல்லித்தானாக வேண்டும். என் நண்பர் திரு. நசிருதீன் அகமது வரைவுக்குழுவைப் பற்றி மிகவும் ஏளனமான சொற்களில் பேசுவதை வழக்கமாக்கிக் கொண்டுள்ளார் என்பதைப் பற்பல தருணங்களில் கவனித்துள்ளேன். அவருக்கு விடையளிக்கும் பொருட்டு அவரது நிலைக்கு நான் இறங்கவில்லை. ஆனால் தொடர்ந்து அவர் இப்படியே செய்து கொண்டிருந்தால் நிச்சயமாக நான் அதே முறையில் அவருக்கு பதிலடி கொடுக்கத் தவறமாட்டேன் என்று அவரை எச்சரிக்க விரும்புகிறேன்.

**திரு. நசிருதீன் அகமது:** இப்படித்தான் உறுப்பினர்களை அச்சுறுத்துவதா? இது என் மீது எவ்விளைவும் உண்டுபண்ணாது என்பதில் சந்தேகம் வேண்டாம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இது அச்சுறுத்தல் அல்ல, எச்சரிக்கைதான்.

இப்போது நான் என் நண்பர் டாக்டர் பஞ்சாப்ராவ் தேஷ்முக் எழுப்பிய பிரச்சினைகளுக்கு வருகிறேன்: அவருடைய யோசனையை ஏற்றுக்கொள்ள முடியாமைக்கு நான் பெரிதும் வருந்துகிறேன். ஏனென்றால் அவர் இந்நாட்டிலுள்ள ஒவ்வொரு நீதிமன்றத்தையும் உட்படுத்தக்கூடிய விதத்தில் அந்த அளவுக்கு பதிவு 52ஐ விரிவாக்க விரும்புகிறார். இது முடியாத காரியம். இதனை ஏற்றுக்கொள்ள முடியாதோ என்று அஞ்சுகிறேன்.

நான் இப்போது என் நண்பர் திரு. நசிருதீன் அகமதின் வாதங்களுக்கு விடையளிக்கிறேன். முதலாவதாக நாம் இந்தப் பதிவு 52இல் உயர்நீதிமன்றத்தைக் கள்ளத்தனமாக நுழைக்க முயன்று கொண்டிருக்கிறோம் என்று அவர் சொன்னார்; ஏனென்றால், முன்பிருந்தவாறு அப்பதிவில் இது இடம்பெறவில்லை. வரைவுக்குழு அவ்வப்போது பதிவுகளை மட்டுமல்லாமல் உறுப்புகளையும் திருப்பிப் பார்த்துத் திருத்தம் செய்வது அவைக்கு நினைவிருக்கும். வரைவுக்குழு எல்லாம் அறிந்தது என்று நான் இங்கு உரிமை கொண்டாட வரவில்லை. வரைவுக் குழு ஒரே மூச்சில் முழுச் செய்தியையும் உள்வாங்கிக்

கொள்ளத் தவறிவிட்டது என்றால் நான் அக்குழுவைக் குற்றங்கூற அணியமாய் இல்லை; எவரொருவரும் அது குறித்துத் தீர்ப்புச் சொல்லி வரைவுக் குழுவுக்குக் கண்டனம் தெரிவிப்பதை அனுமதிக் கவும் நான் அணியமாய் இல்லை. இது மிகப் பெரும் பணியாகும். நாம் நமது வழியில் படிப்படியாக முன்னேறிச் சென்றாக வேண்டும்.

**திரு. எச்.வி. காமத்:** *அவையால் வரைவுக் குழு குறித்துத் தீர்ப்புச் சொல்ல முடியாதா?*

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஆனால், நான் சொல்வதை, அதாவது மறுபரிசீலனை தேவைப்படாத ஒரு கச்சித மான முழுமைச் சூத்திரத்தை வரைவுக்குழு அவையின் முன் வைப்பது முடியாத காரியம் என்பதை அவை ஒப்புக்கொள்ள வேண்டும். ஐயா, இப்போது நாம் உயர்நீதிமன்றங்களை நுழைத்திருக்கிறோம் என்று என் நண்பர் சொன்னார். சரி, நாம் வேண்டுமென்றே உயர்நீதிமன்றங் களை நுழைத்திருக்கிறோம். ஏனென்றால் நாம் முன்பே நிறைவேற்றி யிருக்கிற குறிப்பிட்ட சில உறுப்புகளைக் கருத்தில் கொண்டு உயர் நீதிமன்றங்களைச் சேர்க்க வேண்டியிருப்பதாகக் கருதினோம். உயர் நீதிமன்றங்கள் குறித்துச் சொல்கின்ற உறுப்புகள் 192-A, 193, 197, 201, 207 ஆகியவற்றை என் நண்பர் திரு. நசிருதீன் அகமது மறந்துவிட்டார் என்று தெளிவாகத் தெரிகிறது; அவர் இந்த உறுப்புகளில் பொறுமை யாகக் கருத்துச் செலுத்துவாரானால், மாகாணச் சட்டமன்றங்களுக்கு விடப்பட்டுள்ள ஒரே ஓர் செய்தி பண வகையிலோ அல்லது கருப் பொருள் தொடர்பாகவோ உயர்நீதிமன்றங்களின் மேலுரிமையை நிர்ணயிப்பதே ஆகும் என்பதைக் காண்பார். உயர்நீதிமன்றம் குறித்து எஞ்சியவை மைய அரசின் மேலுரிமைக்குள் வைக்கப்படுகின்றன. ஒன்றியப்பட்டியலில் மைய அரசுக்கு முழுமையான அதிகாரம் வழங்கு வதற்கான பதிவுகளைப் பரிசீலித்தபோது இந்த இடைவெளியைச் சரிசெய்து உயர்நீதிமன்றங்களைச் சேர்க்க வேண்டியிருந்தது. இந்த உறுப்புகளின் காரணமாக உயர்நீதிமன்றங்கள், இரு நேர்வுகளில் தவிர, முழுமையாக நாடாளுமன்றத்தின் அதிகார எல்லைக்குள் வைக்கப் பட்டிருக்கின்றன என்பதை முன்பே கூறினேன். இதில் கள்ளத்தனம் ஒன்றுமில்லை. இது உறுப்பும் பதிவும் சரிவர வரையப்படாத காரணத் தால் மூல வரைவில் நேர்ந்துவிட்ட ஒரு பிழையைச் சரி செய்வதே தவிர வேறல்ல. உயர்நீதிமன்றங்கள் சேர்க்கப்பட்டிருப்பதற்கான காரணம் இதுவே.

உச்சநீதிமன்றத்திலும் உயர்நீதிமன்றத்திலும் தொழில் செய்ய உரிமை படைத்தவர்கள் என்ற பதிவை நுழைத்திருப்பது ஏன் என்ற கேள்விக்கு வருகிறேன். என் நண்பர் திரு. அல்லாடி கிருஷ்ணசுவாமி அய்யர் இது தொடர்பான நிலையை முன்பே விளக்கியுள்ளார்; எனினும் நான் அதே செய்தியை மிகச் சுருக்கமாக எடுத்து வைப்பேன். உண்மையாகக் கூறினால், உச்சநீதிமன்றத்திலோ உயர்நீதிமன்றத் திலோ தொழில் செய்ய உரிமை படைத்தவர்கள் என்ற இந்தச் சொற்களைச் சேர்ப்பதில் தனிச் சிறப்பு ஒன்றுமில்லை. உறுப்பு 121 ஆனது உச்சநீதிமன்றத்தில், தொழில் செய்பவர்கள் தொடர்பாக எந்தச் சட்டமும் இயற்ற நாடாளுமன்றத்துக்கு அதிகாரம் அளிப்பதை உறுப் பினர்கள் காணலாம். ஆகவே அதிகாரம் ஏற்கெனவே இருக்கிறது. இப்பதிவு உச்சநீதிமன்றத்தில் தொழில் செய்ய உரிமை படைத்தவர் களைச் சுட்டுகிற அளவில் புதியதொன்றுமில்லை.

இப்போது உயர்நீதிமன்றம் தொடர்பாகவும் நிலை இதுதான்: இன்று மைய அரசுக்கு இருக்கிற அதிகாரம் பொதுப் பட்டியலில் தொழில்கள் பற்றிச் சொல்லும் பதிவு 17இல் அடங்கியுள்ளது. சட்டத் தொழில் என்பது தொழில்களில் ஒன்றாகும். ஆகவே உயர்நீதிமன்றத் தில் முன்னிலை ஆகிறவர்களின் சட்டத் தொழிலை ஒழுங்குபடுத்த நாடாளுமன்றம் சட்டமியற்றுவது பொதுப் பட்டியலில் இருக்கிற பதிவு 17 அதற்கு அளிக்கும் அதிகாரத்தினால் முற்றிலும் சாத்தியமே. ஆனால் இதில் ஒரு சங்கடமுள்ளது. அதாவது பொதுப் பட்டியல் என்பதன் பொருள் இரு தரப்புகளும் சட்டமியற்றலாம் என்பதே. மைய அரசும் சட்டமியற்றலாம்; மாகாணங்களும் சட்டமியற்றலாம். இந்தச் சட்டங்கள் ஒன்றுக்கொன்று முழுக்க இசைந்திடாது போகலாம். ஆகவே பொதுப் பட்டியலில் உள்ளவாறு பதிவு 17 அனைத்துத் தொழில் களையும் அளாவி நிற்கும்படி விட்டுவிட்டு, சட்டத் தொழிலில் ஒரு பகுதியை எடுத்துவந்து இங்கு இடம்பெறச் செய்வதன் மூலம், சட்டத் தொழில் தொடர்பான எந்தவொரு சட்டமும் உயர்நீதிமன்றங் களில் தொழில் செய்கிறவர்களைப் பொறுத்தவரை மைய அரசு சட்டமியற்றுவதற்கான தனிப் பொருளாக்கப்படலாம் என்று கருதப் பட்டது. இப்படி நாம் செய்ததற்கான காரணம் என் நண்பர் திரு. அல்லாடி கிருஷ்ணசுவாமி அய்யர் சுட்டியுரைத்த கடினமான நேர்வுகளே ஆகும். நானும் அவற்றில் ஒன்றைத் திருப்பிக் கூறலாம். அநேகமாக நீங்கள் அவர் சொன்னதைக் கேட்டிருக்க மாட்டீர்கள். எடுத்துக்காட்டாக, சென்னையைச் சேர்ந்த ஒரு வழக்கறிஞர், உச்ச நீதிமன்றத்தில் ஒரு வழக்கில் செயல்படுகிறார் என்றும் முன்னிலை

யாவதாகவும், உச்சநீதிமன்றம் இந்த வழக்கை முடிப்பதற்குப் பதிலாக பம்பாய் உயர்நீதிமன்றத்திற்கு அனுப்பி வைப்பதாகவும் கொள்வோம். என்ன நடக்கும்?

பம்பாய் அரசாங்கமோ, அல்லது பதிவு 17இன்படி சட்டமியற்றப்பட்டிருந்தால் பம்பாய்ச் சட்டமோ சென்னையைச் சேர்ந்த ஒரு வழக்கறிஞரை பம்பாய் உயர்நீதிமன்றத்தில் முன்னிலையாக அனுமதிக்காமற் போகலாம். இதன் விளைவாக, சென்னை வழக்கறிஞர் ஒருவர் உச்சநீதிமன்றத்தில் முன்னிலையாகி முழு வழக்கையும் நடத்தினார் என்றாலும் வழக்கு பம்பாய் உயர்நீதிமன்றத்திற்கு அனுப்பி வைக்கப்பட்டால் அவரை அந்த உயர்நீதிமன்றம் தன்னிடம் முன்னிலையாக விடாமல் சட்டம் கொண்டு தடுக்கலாம். இது மிகப் பெரும் இன்னலாகும் என்று ஒப்புக்கொள்ளப்படுமெனக் கருதுகிறேன். ஆகவே வெவ்வேறு உயர்நீதிமன்றங்களில் தொழில் செய்பவர்கள் தொடர்பாக ஒரே சீரான நிலையை அடையும் பொருட்டு தொழில்கள் தொடர்பாகச் சொல்லும் பதிவு 17இலிருந்து அதை வெட்டியெடுத்து இங்கு சேர்த்து விடுவதே இப்பதிவு செய்யக் கருதியிருப்பதாகும். இதனால் உயர்நீதிமன்றத்தில் முன்னிலை ஆகிறவர்களின் சட்டத் தொழில் ஒரே சீரான சட்டத்தால் ஒழுங்குபடுத்தப்படும் நிலை உருவாகும். வரைவுக்குழு முன்மொழிந்துள்ள வடிவில் பதிவு 52இல் புரட்சி ஒன்றுமில்லை; கள்ளத்தனம் ஒன்றுமில்லை.

**திரு. அவைத் தலைவர்:** திருத்தங்களை இப்போது வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

*(முன்பு அளிக்கப்பட்ட வடிவத்தில் டாக்டர் அம்பேத்கரின் திருத்தம் தவிர ஏனைய அனைத்துத் திருத்தங்களும் நிராகரிக்கப் பட்டன.)*

***(திருத்தப்பட்ட வடிவத்தில் பதிவு 52 ஒன்றியப் பட்டியலில் சேர்க்கப் பட்டது.)***

## பதிவு 53

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்** *(பம்பாய்: பொது):* ஐயா, நான் முன்மொழிவது:

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 30 1949, பக். 783-84.

''பட்டியல் Iஇன் பதிவு 53இல் 'இப்போதைக்கு முதல் அட்டவணையின் பகுதி IIIல் குறித்துரைக்கப்படும் மாநிலங்கள் தவிர' என்ற சொற்களையும் எண்ணையும் விட்டுவிடலாம்.''

ஏனென்றால் பகுதி Iஇலும், பகுதி IIIஇலும் இடம்பெறும் மாநிலங்களுக்கிடையே நாம் எந்த வேறுபாடும் காட்டக் கருதவில்லை.

**திரு. எச்.வி. காமத்** (மத்திய மாகாணங்கள் மற்றும் பேரார்: பொது): என்னுடைய சிறிய திருத்தம் ஒன்று, எண் 198 இருக்கிறது, ஐயா, நான் முன்மொழிவது:

''பட்டியல் Iஇன் (ஆறாவது வாரம்) திருத்தம் எண் 25 தொடர்பாக பட்டியல் Iஇன் பதிவு 53இல் இத்தகைய உயர்நீதிமன்றம் எதனுடையவும் மேலுரிமையை விலக்குதல் என்ற சொற்களுக்குப் பதிலாக 'இத்தகைய உயர்நீதிமன்றம் எதனுடையவும் மேலுரிமையிலிருந்து விலக்குதல்' என்ற சொற்களை இடம்பெறச் செய்யலாம்.''

இது சொற்களை இட மாற்றிப் போடுவதே ஆகும் என்பதை யானறிவேன். ஆனால் இது சிறிய அளவில் பொருளையும் மாற்றுகிறது, பதிவில் நோக்கமாகக் கொள்ளப்படுவதை வெளிப்படுத்துகிறது. இந்தப் பதிவு எந்த உயர்நீதிமன்றத்தின் மேலுரிமையிலிருந்தும் குறிப்பிட்ட சில பகுதிகளை விலக்குவது தொடர்பானதாகும் என நான் நம்புகிறேன்...

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, திரு. காமத்தின் திருத்தம் சிறிதும் தேவையற்றதாகும், ஏனென்றால் பதிவு எண் 53இல் ''தவிர'' என்பதில் தொடங்கி முடிவு வரையிலான பகுதியை அடியோடு நீக்குவதே எனது திருத்தத்தின் நோக்கம். நான் பதிவின் எந்தப் பகுதியைத் தக்கவைத்துக் கொண்டிருந்தாலும், பிறகு பதிவில் பயன்படுத்தப்படும் சொல்லமைப்பு திரு. காமத் யோசனையாகக் கூறிய சொல்லமைப்பைக் காட்டிலும் சிறப்பானதா அல்லது பின்னது முன்னதை விடவும் சிறப்பானதா என்ற கேள்வி எழக்கூடும் என்பது உண்மைதான்.

**திரு. எச்.வி. காமத்:** எனது திருத்தம் பதிவு தொடர்பானதே தவிர திருத்தம் தொடர்பானதன்று.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** திருத்தம் தேவையில்லை என்று கருதுகிறேன். ஏனென்றால் முழுவதையுமே நான்

விட்டுவிடுகிறேன். பதிவு 53இல் பயன்படுத்தப்படும் மொழிநடை உறுப்பு 207இல் பயன்படுத்தப்பட்ட மொழிநடைக்கு இசைவாய் இருக்க வேண்டும் என்பது இரண்டாவது கருத்து.

**திரு. எச்.வி. காமத்:** இது ஏற்றுக்கொள்ளப்பட்டால் முன்பே நிறைவேற்றியிருக்கிற அந்த மற்றொரு உறுப்பின் மொழிநடையை - மூன்றாவது வாசிப்பில் - திருத்த வேண்டியிருக்கும்.

**திரு. அவைத் தலைவர்:** டாக்டர் அம்பேத்கரின் திருத்தம் இந்தப் பதிவின் ஒரு பகுதியை மட்டுமே குறிப்பதாகும் என்று எனக்குத் தெரிகிறது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ''இப்போதைக்கு முதல் அட்டவணையின் பகுதி IIIஇல் குறித்துரைக்கப்பட்ட மாநிலங்கள் தவிர'' என்ற இறுதிப் பகுதியை நீக்கிவிடுகிறேன். திருத்தப்பட்ட வடிவத்தில் பதிவு பின்வருமாறு இருக்கும்:

> ''இந்திய ஆட்சிப் பரப்புகள் எந்தவொரு மாநிலத்திலும் தலைமையிடம் கொண்டுள்ள ஓர் உயர்நீதிமன்றத்தின் மேலுரிமையை அந்த மாநிலத்திற்கு வெளியே உள்ள எந்தவொரு பகுதிக்கும் விரிவாக்குதல், மற்றும் இத்தகைய உயர்நீதிமன்றத்தின் மேலுரிமையை அந்த மாநிலத்திற்கு வெளியே உள்ள எந்தவொரு பகுதியிலிருந்தும் விலக்குதல்.'' இந்தப் பதிவு மேலுரிமையை விரிவாக்குவதற்கும் விலக்குவதற்கும் மட்டுமே வழிவகை செய்கிறது.

**திரு. எச்.வி. காமத்:** இத்தகைய உயர்நீதிமன்றத்தின் மேலுரிமையை அந்த மாநிலத்திற்கு வெளியே உள்ள எந்தவொரு பகுதியிலிருந்தும் விலக்குதல் என்ற இரண்டாவது பகுதியை எனது திருத்தம் குறித்திருக்கிறது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் உங்கள் சொற்சிலம்பத்தை ஏற்றுக்கொள்ளவில்லை.

**திரு. எச்.வி. காமத்:** இது ஒன்றும் சொற்சிலம்பம் ஆகாது. இது சரியான ஆங்கிலம் குறித்த பிரச்சினையே ஆகும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இது வெறும் ஆங்கிலம் பற்றிய பிரச்சினையே என்றால் அடுத்தக் கட்டத்தில் இதனை எடுத்துக் கொள்ளலாம்.

**திரு. அவைத் தலைவர்:** அடுத்து திரு. காமத்தின் திருத்தத்தை வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

(திருத்தம் மறுதலிக்கப்பட்டது.)

**திரு. அவைத் தலைவர்:** இப்போது டாக்டர் அம்பேத்கரின் திருத்தத்தை வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

(திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.)

★ ★ ★

## பதிவு 56

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் முன்மொழிவது:

''பட்டியல் Iஇன் பதிவு 56க்குப் பதிலாகப் பின்வரும் பதிவை இடம்பெறச் செய்யலாம்:

'56. இந்தப் பட்டியலிலுள்ள செய்திகளில் எந்த ஒன்றின் நோக்கத்திற்காகவும் விசாரணைகள், ஆய்வுகள் மற்றும் புள்ளிவிவரங்கள்.''

வேறுபாடு ஏதுமில்லை. ''இந்தப் பட்டியலிலுள்ள செய்திகளில் எந்த ஒன்றின் நோக்கத்திற்காகவும்'' மட்டுமே இதனை நாம் செய்திருக்கிறேன்.

**திரு. நசிருதீன் அகமது** (மேற்கு வங்காளம்: முஸ்லீம்): எனது திருத்தம் எண் 167 வாசகத்தை மேம்படுத்தும் என்றபோதிலும் நான் அதனை முன்மொழிய விரும்பவில்லை.

(திருத்தம் எண் 254 முன்மொழியப்படவில்லை.)

**திரு. பூல் சிங்** (ஐக்கிய மாகாணங்கள்: பொது): அவைத் தலைவர் அவர்களே, டாக்டர் அம்பேத்கரால் யோசனையாகத் தெரிவிக்கப்பட்ட திருத்தம் இந்தப் பதிவின் வீச்சுக்கு வரம்பிடும்... இந்த சில சொற்களோடு, நான் நிலைமையை மறுபரிசீலனை செய்யும்படி டாக்டர் அம்பேத்கரை வேண்டிக் கேட்டு முடிக்கிறேன்.

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 31 1949, பக். 784-85.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, என் நண்பர் தெரிவித்துள்ள அச்சம் ஒருவகையில் ஆதாரமற்றது என்றும் மாநிலங் கள் தொடர்பான மற்ற எல்லா விசாரணைகளும், இன்ன பிறவும் ஏனைய செய்திகளும் பொதுப் பட்டியலில் இப்போது வைக்கப் பட்டுள்ளன என்ற உண்மையின் பக்கம் அவர் ஏறெடுத்தும் பார்க் காததே இந்த அச்சத்துக்குக் காரணம் என்றும் நான் கருதுகிறேன். அவர் விரும்புகிற எந்த நோக்கமும் இல்லாமல் போய்விடவில்லை.

*(திருத்தப்பட்ட வடிவத்தில் பதிவு 56 பொதுப் பட்டியலில் சேர்க்கப்பட்டது.)*

## பதிவு 57

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் முன்மொழிவது:

''பட்டியல் I இன் பதிவு 57க்குப் பதிலாகப் பின்வருவதை இடம்பெறச் செய்யலாம்:

'57. பின்வரும் நோக்கங்களுக்கான, அதாவது ஆராய்ச்சிக்கான தொழில் முறை, செய்தொழில் அல்லது தொழில்நுட்பப் பயிற்சிக்கான, குற்றப் புல னாய்வு அல்லது கண்டுபிடிப்பில் அறிவியல் அல்லது தொழில்நுட்ப உதவிக் கான காவல்துறை அதிகாரிகளின் பயிற்சிக்கான, அல்லது தனி ஆய்வுகளை ஊக்கி நடாத்துவதற்கான ஒன்றிய முகமைகளும் ஒன்றியக் கல்விக் கழகங் களும்.

'செய்தொழிற் பயிற்சி', 'குற்றப் புலனாய்வு அல்லது கண்டு பிடிப்பு', 'காவல்துறை அதிகாரிகளின் பயிற்சிக்கான' முதலான சொற் களைச் சேர்த்ததினால் பதிவு சற்றே விரிவாக்கப்படுகிறது.

★ ★ ★

[2]**திரு. அவைத் தலைவர்:** இந்தப் பதிவு 57க்கு திரு. கரிமுதீன் பெயரில் ஒரு திருத்தம் (எண் 3544) இருக்கிறது. இது முன்மொழியப் படாததால், டாக்டர் அம்பேத்கர் விடையளிக்கலாம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அவைத் தலைவர் அவர்களே, என் மதிப்பிற்குரிய நண்பர் திரு. காமத் முன்மொழிந்த திருத்தங்களை நான் முன்மொழிந்த பதிவுடன் ஒப்பிட்டுப் பார்த்துள்

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 31 1949, பக். 785.
2. மேற்படி அதே நூல், பக். 787-88.

ளேன். ஒரு செய்தியைத் தவிர என் மாண்புமிகு நண்பர் திரு. காமத் மனத்தில் கொண்டிருக்கிற நோக்கத்தை நிறைவேற்ற மைய அரசுக்கு முழு உரிமை இருக்கும் எனக் கருதுகிறேன். பதிவு 57இன்படி மைய அரசு செயல்படுத்த இயலாத ஒன்றே ஒன்று ஆன்மிக ஆராய்ச்சியே. சமாளிக்க வேண்டிய இந்த பல்வேறு சிக்கல்களையும் முழுக்க நன்கு அறிந்துள்ள இந்தப் பேரவை ஆன்மிக ஆராய்ச்சி என்பது போன்ற எந்தவொரு முகமையையும் அதன்மீது சுமத்த விரும்பும் என்று நான் கருதவில்லை. திருத்தத்தின் நோக்கங்களில் ஏனையவை பதிவு 57இல் உட்படும்.

**திரு. எச்.வி. காமத்:** முன்மொழியப்பட்டவாறு இப்பதிவில் ஆட்சிப் பணி அதிகாரிகள் உட்படுவார்கள் என்று எப்படிக் கூறு கிறீர்கள்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் அப்படிக் கருதுகிறேன்; ஏனென்றால் காவல் துறை அதிகாரிகளுக்கு மட்டுமல்ல பயிற்சி. பயன்படுத்தப்பட்ட மொழி நடை ஆராய்ச்சிக்கான தொழில் துறை, செய்தொழில் அல்லது தொழில்நுட்பப் பயிற்சிக்கான என்ப தாகும். மேற்கண்ட தலைப்பில் எதையும் சேர்த்துக்கொள்ள முடியும்.

★ ★ ★

**திரு. அவைத் தலைவர்:** திருத்தப்பட்ட வடிவத்தில் டாக்டர் அம்பேத்கர் முன்மொழிந்த பதிவை இப்போது வாக்கெடுப்புக்கு விடுகிறேன். பிரச்சினை இதுதான்:

> ''பட்டியல் Iஇன் பதிவு 57க்குப் பதிலாகப் பின்வரும் பதிவை இடம்பெறச் செய்யலாம்:
>
> '57. பின்வரும் நோக்கங்களுக்கான, அதாவது ஆராய்ச்சிக்கான, தொழில் முறை, செய்தொழில் அல்லது தொழில்நுட்ப பயிற்சிக்கான, குற்றப் புல னாய்வு அல்லது கண்டுபிடிப்பில் அறிவியல் அல்லது தொழில்நுட்ப உதவிக் கான, காவல்துறை அதிகாரிகளின் பயிற்சிக்கான அல்லது தனி ஆய்வுகளை ஊக்கி நடாத்துவதற்கான ஒன்றிய முகமைகளும் ஒன்றியக் கல்விக் கழகங் களும்.''

(திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.)

(திருத்தப்பட்ட வடிவத்தில் பதிவு 57 ஒன்றியப் பட்டியலில் சேர்க்கப்பட்டது.)

## பதிவு 57-A (தொடர்ச்சி)

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் முன்மொழிவது:

"பட்டியல் I இன் பதிவு 57க்குப் பிறகு பின்வரும் புதிய பதிவை நுழைக்கலாம்:

'57-A. உயர்கல்விக் கழகங்களிலும் அறிவியல் மற்றும் தொழில்நுட்பக் கழகங்களிலும் ஆராய்ச்சிக் கழகங்களிலும் தராதரங்களை ஒருங்கிணைத்துக் காத்துவருதல்."

இந்தப் பதிவு முந்தையப் பதிவு எண் 57க்குக் குறைநிரப்புக் கூறே ஆகும். மாகாணங்களால் நடத்தப் பெறுகிற கல்விக் கழகங்கள் குறித்துச் சொல்கையில், பதிவு 57-A ஆனது, ஆராய்ச்சிக் கழகங்களை ஒருங்கிணைப்பது, அந்தக் கழகங்களில் தராதரங்கள் தாழ்ந்து விடாமல் காத்து வருவது என்ற வரம்புக்குட்பட்ட அளவிற்கு மைய அரசுக்கு அதிகாரம் வழங்க எண்ணுகிறது.

ஐயா, நான் மேலும் முன்மொழிவது:

"பட்டியல் I (ஆறாவது வாரம்) திருத்தம் எண் 28இல் முன்மொழியப்பட்ட புதிய பதிவு 57-Aஇல் காத்து வருதல் என்ற சொல்லுக்குப் பதிலாக 'நிர்ண யித்தல்' என்ற சொல்லை இடம்பெறச் செய்யலாம்."

[2]**திரு. வசந்த குமார்தாஸ்** (மேற்கு வங்காளம்: பொது): எனக்கு ஒரு திருத்தம், எண் 29 உள்ளது.

**திரு. துணைத் தலைவர்:** அவை புதிய உறுப்புகள் என்று எண்ணினேன். டாக்டர் அம்பேத்கர், நீங்கள் பேசுவதற்கு முன் அது முன்மொழியப்படுவதை விரும்புவீர்களா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஆம்.

**திரு. துணைத் தலைவர்:** திரு. தாஸ், எண் 29ஐ நீங்கள் முன் மொழியலாம்.

* * *

[3]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அவைத் தலைவர் அவர்களே, ஐயா இந்தப் பதிவு 57-A குறித்துப் பேசியிருக்கின்ற என்

---

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 31 1949, பக். 788.
2. மேற்படி அதே நூல், பக். 793.
3. மேற்படி நூல், பக். 796.

நண்பர்கள் ஓரளவுக்குக் கலந்து குழப்பியிருப்பதாகக் கருதுகிறேன். என்னால் அறிந்துகொள்ள முடிந்தவரை மாகாணங்களுக்கு மைய அரசு மானியம் ஏதும் வழங்கினால் மட்டுமே இந்தப் பதிவு 57-A அனுமதிக்கப்பட வேண்டும் என்பது அவர்களது வாதமாகும். இவ் விரண்டையும் ஒன்றோடு ஒன்று கலப்பது தேவையற்றதாகவே எனக்குத் தோன்றுகிறது. மைய அரசிலிருந்து மாகாணங்களுக்கு மானி யங்கள் குறித்த பிரச்சினை இரு தனித்தனி உறுப்புகளான 255, 262 ஆகியவற்றில் கையாளப்பட்டுள்ளது. மைய அரசினால் மாகாணங் களுக்கு வழங்கப்படும் உதவி மானியங்களுக்கு உறுப்பு 255 வழிவகை செய்கிறது -

> ''நாடாளுமன்றம் சட்டம் கொண்டு வழிவகை செய்யக்கூடிய இத்தொகை கள், உதவி தேவைப்படும் நிலையிலிருப்பவை என்று நாடாளுமன்றம் நிர்ண யிக்கும்படியான மாநிலங்களின் தொகுப்பு நிதிக்கான உதவி-மானியங் களாக அந்தந்த ஆண்டிலும் இந்தியத் தொகுப்பு நிதியிலிருந்து பெறப்படும்...''

ஆகவே, நிதி உதவி என்ற வகையில் மாநிலங்களை ஆதரிப் பதற்கான வழிவகை முன்பே உறுப்பு 255 இல் இருக்கிறது. மற்றொரு முக்கிய உறுப்பையும் அவை உறுப்பினர்களின் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன்; அது உறுப்பு 262 ஆகும்; அது இன்னுங் கூட விரிவான வீச்சுடையது. அது சொல்கிறது -

> ''ஒன்றியமோ ஒரு மாநிலமோ எந்தப் பொது நோக்கத்துக்காகவும் எந்த மானியமும் வழங்கலாம். இதற்குரிய நோக்கம், நேர்வைப் பொறுத்து, நாடாளுமன்றமோ மாநிலச் சட்டமன்றமோ சட்டங்கள் இயற்றும்படியான ஒன்றாக இல்லாவிட்டாலும் கூட இப்படிச் செய்யலாம்.''

அது இன்னும் கூட விரிவான வீச்சுடையது என்பதை அவை யினர் காண்பார்கள். ஒரு பொருள் பட்டியல் Iக்கு உட்பட்டதாய் இல்லாவிட்டாலும் மானியங்கள் வழங்க நாடாளுமன்றத்திற்கு உரிமை இருக்கும் என்று அது சொல்கிறது. ஆகவே இந்தப் பிரச் சினையைத் தனியாகக் கையாண்டு விட்ட நிலையில் பதிவு 57-A உடன் இதனைக் கலந்து குழப்பத் தேவையில்லை எனக் கருதுகிறேன்.

குறிப்பிட்ட சில வகைக் கல்விக் கழகங்களில், அதாவது உயர் கல்வி அளிக்கின்ற கல்விக் கழகங்களிலும் அறிவியல் தொழில்நுட்பக் கழகங்களிலும் ஆராய்ச்சிக் கழகங்களிலும் இன்ன பிறவற்றிலும் சில வகுப்புகளில் குறிப்பிட்ட சில தராதரங்களைக் காத்து வருவது பற்றி மட்டுமே பதிவு 57-A சொல்கிறது. ''இந்தப் பதிவு ஏன்?'' என்று நீங்கள் கேட்கலாம். இது ஏன் தேவை என்பதை நான் காட்டுவேன். இந்தியா

வில் வெவ்வேறு பல்கலைக்கழகங்களால் நடத்தப்படுகின்ற இளங் கலை (பி.ஏ.) பட்டத் தேர்வை உதாரணமாக எடுத்துக் கொள்வோம். இப்போது பெரும்பாலான மாகாணங்களும் மைய அரசும் தேர்வர் களுக்காக விளம்பரம் செய்கின்றபோது, தேர்வர் ஒரு பல்கலைக் கழகத்தின் பட்டதாரியாக இருக்க வேண்டும் என்று மட்டுமே சொல்கின்றன. இளங்கலைத் தேர்வெழுதும் ஒருவர் மொத்த மதிப் பெண்களில் 15 சதவீதம் பெற்றால் அத்தேர்வில் தேர்ச்சி பெற்றவராகக் கருதப்படுவார் என்று சென்னை பல்கலைக்கழகம் சொல்வதாகக் கொள்வோம். மதிப்பெண்களில் 20 சதவீதம் பெற்றிருக்கின்ற ஒருவர் பி.ஏ. பட்டத் தேர்வில் தேர்ச்சி பெற்றவராகக் கருதப்படுவார் என்று பீகார் பல்கலைக் கழகம் சொல்வதாகக் கொள்வோம். வேறு ஒரு பல்கலைக்கழகம் வேறு தராதரத்தை நிர்ணயித்தால் நிலைமை ஒரே குழப்பமாகிவிடும். தேர்வர் ஒரு பட்டதாரியாக இருக்க வேண்டும் என்று வழக்கமாகச் சொல்லப்படுவது அர்த்தமற்றதாகிவிடும் என்று கருதுகிறேன். இதேபோல் குறிப்பிட்ட சில ஆராய்ச்சிக் கழகங்கள் உள்ளன; மைய அரசு மற்றும் மாகாண அரசுகளின் எத்தனையோ நடவடிக்கைகள் இந்தக் கழகங்களின் விளைவுகளையே சார்ந்துள் ளன. இந்தத் தொழில்நுட்ப, அறிவியல் கல்விக் கழகங்களின் விளைவு கள் இயல்பான தராதரத்திலிருந்து இழிந்து கெடுவதை அனுமதிக்க முடியாது என்பதும், ஆயினும் மைய அரசின் நோக்கங்களுக்காகவோ அனைத்திந்திய நோக்கங்களுக்காகவோ அல்லது மாநிலத்தின் நோக் கங்களுக்காகவோ அவை அங்கீகரிக்கப்படுவதை அனுமதித்தாக வேண்டும் என்பதும் கண்கூடாய்த் தெரிகிறது.

ஆகவே நிதியுதவி என்ற பிரச்சினை ஒருபுறமிருக்க அனைத் திந்திய அடிப்படையில் தராதரங்கள் காக்கப்பட வேண்டும் என்பது மைய அரசின் நலனுக்கும் அதேபோல் மாகாணங்களின் நலன்களுக் கும் இன்றியமையாத் தேவையாகும். இதுவே இந்தப் பதிவின் நோக்கம். பல மாகாணங்கள் ஆராய்ச்சிக் கழகங்கள் அல்லது பல்கலைக்கழகங்களை நிறுவுவதற்கு அவசரப்படுகின்றன, அல்லது முன்னைக் காட்டிலும் நல்ல விளைவுகளை உருவாக்குகிறோம் என்ற எண்ணத்தை வெளியுலகிற்கு ஏற்படுத்துவதற்காக அவற்றின் தரா தரங்களை இலேசாகக் குறைத்துக் கொள்ள அவசரப்படுகின்றன என்ற உண்மையைக் கருத்தில் கொண்டால், இது நற்பயன் அளிக்கும் மிக முக்கிய வழிவகையாகும் என்பது என் கணிப்பு.

**டாக்டர் பி.எஸ். தேஷ்முக்:** தேர்ச்சிகளுக்கான விழுக்காடு களையும், மதிப்பெண்களையும் நிர்ணயிப்பது அரசினரின் நோக்கமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அரசினர் அதைச் செய்யலாம்; தாங்கள் சரியெனக் கருதக்கூடிய எவ்வழியிலும் தரா தரத்தைக் காப்பது அரசினர் பொறுப்பு. அரசினர் என்ன செய்யலாம் என்பதை என்னால் கூறமுடியாது.

*(திரு. டி.கே. தாஸ் முன்மொழிந்த திருத்தம் விலக்கிக் கொள்ளப் பட்டது. டாக்டர் அம்பேத்கரின் முன்மொழிவு ஏற்றுக்கொள்ளப்பட்டது, பதிவு 57-A ஒன்றியப் பட்டியலில் சேர்க்கப்பட்டது.)*

★ ★ ★

## பதிவு 58

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** ஐயா, நான் முன்மொழிவது.

'பட்டியல் Iஇன் பதிவு 58க்குப்பதிலாகப் பின்வரும் பதிவை இடம்பெறச் செய்யலாம்:

'58. ஒன்றிய அரசுப் பணிகள், அனைத்திந்தியப் பணிகள், ஒன்றிய அரசுப் பணித் தேர்வாணையம்.''

★ ★ ★

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அனைத்திந்தியப் பணிகள் என்பதை நீக்கக் கோருகிற என் நண்பர் டாக்டர் பஞ்சாப்ராவ் தேஷ்முக்கின் திருத்தத்தைப் பொறுத்தவரை அனைத்திந்தியப் பணி களும் அவற்றின் ஒழுங்குமுறையும் முன்பு இந்திய அரசாங்கச் சட்டத் தில் இடம்பெறவில்லை என்ற காரணத்திற்காகவே இதனை ஏற்றுக் கொள்வது சாத்தியமில்லை.

ஏனென்றால் அது முழுக்க முழுக்க அரசுச் செயலரின் கையில் விடப்பட்டிருந்தது. அரசுச் செயலர் என்று எவரும் இல்லா மல் இந்தப் பதிவில் கூட்டுத்தேர்வாணையம் குறிப்பிட வேண்டும் என்ற என் நண்பர் திரு.காமத்தின் யோசனையைப் பொறுத்தவரை, இன்னுங் கூட ஆழ்ந்து பரிசீலிக்கும்போது அது சிக்கல்களைத் தோற்றுவிக்கும் என்பது எனது பணிவான கருத்தாகும். கூட்டுத் தேர்வாணையம் அதன் யாப்பையும் அதன் உறுப்பினர்களின் அமர்த் தத்தையும் நீக்கத்தையும் பொறுத்தவரை இந்த மூன்று வகைகளில் மட்டுமே - அனைத்திந்தியப் பொருளாகும். இந்த மூன்றுக்குமான

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, ஆகஸ்டு 31 1949, பக். 797.
2. மேற்படி அதே நூல், பக். 798-99.

வழிவகை முன்பே உறுப்பு 284ல் செய்யப்பட்டுள்ளது. மற்ற அனைத்து வகைகளிலும் இது உண்மையில் ஒரு மாநில அரசுப் பணித் தேர்வாணையமே ஆகும். எடுத்துக்காட்டாகக் கூறுவதானால் சில பணிகளை விலக்கி வைக்கிற, அல்லது குறிப்பிட்ட சிலவற்றில் அவர்களைக் கலந்து பேசுகிற நோக்கத்திற்காக இன்னமும் அது ஒரு மாநில அரசுப் பணித் தேர்வாணையமாகவே இருக்கும். இச்செய்திகளில் மாநிலங்களின் மேலுரிமையை நீக்குவது விரும்பக்கத்தக்கதன்று. ஆனால் பதிவு 58 இல் கூட்டுத் தேர்வாணையமும் குறிப்பிடப்பட்டால் இந்த விளைவுதான் ஏற்படும். திரு காமத்தின் முன்மொழிவுக்கு நான் மறுப்பு தெரிவிப்பது இந்த நோக்கத்திற்காகவே

**திரு. எச்.வி.காமத்:** இது பொதுப்பட்டியலுக்குப் போகுமா என்பதை நான் தெரிந்து கொள்ளலாமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** இல்லை. போகாது. போய்விட்ட நிலையில் அரசமைப்புச் சட்டத்தில் எங்கேனும் ஏதேனும் ஒரு செயலாண்மையால் அனைத்திந்தியப் பணிகளை ஒழுங்குமுறைப்படுத்துவதற்கு வழிவகை செய்வது அவசியமாகும். ஆகவே இதற்கு மிகவும் பொருத்த செயலாண்மை மைய அரசே ஆகும். பட்டியல் I மைய அரசின் அதிகார எல்லைக்குட்பட்ட செய்திகள் தொடர்பானதாகும். ஆகவே அனைத்தியப் பணிகள் இயல்பாக இடம்பெற வேண்டியது பட்டியல் Iஇல்தான். இது ஒரு வாதம்.

இரண்டாவது வாதம் இதுதான்: அனைத்திந்தியப் பணிகளில் இப்போதே இரு வகைகள் உள்ளன. பழைய இந்தியக்குடியியல் பணியில் (ICS) எஞ்சியிருப்பவர்கள் இன்னமும் இந்திய அரசாங்கத்தில் தொடர்ந்து பணியாற்றிவருகின்றனர். இரண்டாவதாக, அனைத்திந்திய ஆட்சிப்பணி, அனைத்திந்தியக் காவல்பணி ஏற்படுத்தப்பட்டுள்ளன. மைய அரசு தொடர்ந்து அனைத்திந்திய ஆட்சிப்பணி அல்லது அனைத்திந்தியக் காவல் பணியின் அடிப்படையில் அரசு அதிகாரிகளை ஆட்சேர்ப்புச்செய்வதா என்பது அடுத்துவரும் உறுப்பை நாம் பரிசீலிக்கும்போது தீர்மானிக்கப்பட வேண்டும். இந்தப் பணிகள் மாகாணங்களின் ஒப்புதலுடன் உண்டாக்கப்பட்டுள்ளன என்பதில் ஐயம் ஏதுமில்லை. இரண்டாவதாக, இந்தப் பணிகள் இருக்கிறபடியால் அவற்றை ஒழுங்குமுறைப்படுத்த வழிவகை செய்வது தேவை இதற்கு வழிவகை செய்து தேவை. இதற்கு வழிவகை செய்யக்

கூடிய சரியான பட்டியல் ஒன்றியப் பட்டியலே இடும் என்பதைப் பணிந்து தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்தப் பதிவில் கூட்டுத் தேர்வாணையம் குறிப்பிட வேண்டும் என்ற என் நண்பர் திரு.காமத்தின் யோசனையைப் பொறுத்த வரை, இன்னுங்கூட ஆழ்ந்து பரிசீலிக்கும்போது அது சிக்கல்களைத் தோற்றுவிக்கும் என்பது எனது பணிவான கருத்தாகும். கூட்டுத் தேர் வாணையம் அதன் யாப்பையும் அதன் உறுப்பினர்களின் அமர்த்தத் தையும் நீக்கத்தையும் பொறுத்தவரை இந்த மூன்று வகைகளில் மட்டுமே - அனைந்தியப் பொருளாகும். இந்த மூன்றுக்குமான வழிவகை முன்பே உறுப்பு 284 இல் செய்யப்பட்டுள்ளது. மற்ற அனைத்து வகைகளிலும் உண்மையில் ஒரு மாநில அரசுப் பணித் தேர்வாணையமே ஆகும்; எடுத்துக்காட்டாகக் கூறுவதானால் சில பணிகளை விலக்கிவைக்கிற, அல்லது குறிப்பிட்ட சிலவற்றில் அவர்களைக் கலந்து பேசுகிற நோக்கத்திற்காக இன்னமும் அது ஒரு மாநில அரசுப்பணித்தேர்வாணையமாகவே இருக்கும். இச்செய்தி களில் மாநிலங்களின் மேலுரிமையை நீக்குவது விரும்பத்தக்கதன்று. ஆனால் கூட்டுத் தேர்வாணையமும் குறிப்பிட்டால் இந்த விளைவு தான் ஏற்படும்.

**திரு.எச்.வி.காமத்:** அது எங்கே போகும்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** சில அம்சங்களில் மைய அரசு மட்டும் என்பதாக இருக்கலாம். எடுத்துக்காட்டாக ஒரு கூட்டு அரசுப் பணித் தேர்வாணையம் அமைக்கப்பட வேண்டும் என்று மாநிலங்கள் கூட்டாகச் சொன்னால், அந்த தீர்மானத்தின் காரணமாக மையஅரசு மேலுரிமையைப் பெறுகிறதே தவிர வேறு வழியில் அல்ல. அடிப்படைச் செய்திகள் அனைத்திலும் பகிர்வு முறையில் அது ஒரு மாநில அரசுப் பணித் தேர்வாணையமே என்று கூட நான் கூறலாம்.

**டாக்டர் பி.எஸ்.தேஷ்முக்:** எனது திருத்தத்தை விலக்கிக் கொள்ள அனுமதி வேண்டுகிறேன். (பேரவையின் அனுமதியுடன் திருத்தம் விலக்கிக் கொள்ளப்பட்டது.)

***அவைத் தலைவர்:*** திரு. காமத்தின் திருத்தத்தை வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

*(திரு. காமத்தின் திருத்தம் விலக்கிக் கொள்ளப்பட்டது. டாக்டர் அம்பேத்கரின் திருத்தம் நிறைவேற்றப்பட்டது. திருத்தப்பட்ட வடிவத்தில் பதிவு 58 ஒன்றியப் பட்டியலில் சேர்க்கப்பட்டது.)*

## பதிவு 58-A

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** ஐயா, நான் முன்மொழிவது:

''பட்டியல் I ன் பதிவு 58க்குப் பிறகு பின்வரும் பதிவை நுழைக்கலாம்:

'58-A. ஒன்றிய ஓய்வூதியங்கள், அதாவது இந்திய அரசாங்கத்தால் அல்லது இந்தியத் தொகுப்பு நிதியிலிருந்து செலுத்தப்பட வேண்டிய ஓய்வூதியங்கள்.''

இந்தப் பதிவு வரைவில் இடம்பெறவில்லை. முன்னெச்சரிக்கை வழிமுறை என்ற வகையில் இத்தகைய ஒருபதிவு இருப்பது தேவை என்று நாம் கருதினோம்.

★ ★ ★

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** என் நண்பர் டாக்டர் தேஷ்முக் தெரிவித்த திருத்தம் நான் முன்மொழிந்துள்ள திருத்தத்திலிருந்து எவ்வகையிலும் முன்னேற்றமானது என்றோ எவ் வகை யிலும் சாரமான வேறுபாடு கொண்டது என்றோ நான்கருத வில்லை. நாம் காட்ட விரும்பும் வேறுபாடு இதுதான்: இந்தியத் தொகுப்பு நிதியிலிருந்து, அதாவது வரிகளின் வரவுத் தொகையிலிருந்து செலுத் தப்பட வேண்டிய குறிப்பிட்ட சில ஓய்வூதியங்கள் இருக்கலாம்.

பங்களிக்கும் தன்மையிலான ஓய்வூதியங்களை இந்திய அரசு ஏற்படுத்துவது முற்றிலும் சாத்தியமே. அந்நிலையில் சுமையானது தொகுப்புநிதியைச் சாராமல் ஏற்கனவே ஒரு நிதிக்குப் பங்களிப்புச் செய்திருப்பவரைச் சாரலாம். இதுவே வேறுபாடாகும். என் சொல்லமைப்பில் பதிவு இவ்வாறு உருப்பெற்றிருப்பதற்கு இதுவே காரணம்.

**டாக்டர் பி.எஸ்.தேஷ்முக்:** என ¬ திருத்தத்தை விலக்கிக் கொள்ள விரும்புகிறேன்.

*(அவையின் அனுமதியுடன் திருத்தம் விலக்கிக் கொள்ளப் பட்டது.)*

---

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 ஆகஸ்டு 31, பக்கம் 799 - 801.

*(டாக்டர் அம்பேத்கரின் முன்மொழிவு ஏற்றுக்கொள்ளப்பட்டது; பதிவு 58-A ஒன்றியப் பட்டியலில் சேர்க்கப்பட்டது.)*

## பதிவு 60

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** ஐயா, நான் முன்மொழிவது:

> 60.' பட்டியல்I இன் பதிவு 60க்குப் பதிலாகப் பின்வரும் பதிவை இடம் பெறச் செய்யலாம்:
>
> நாடாளுமன்றத்தினால் சட்டம் கொண்டு தேசியமுக்கியத்துவம் வாய்ந் தவை என்று அறிவிக்கப்பட்ட தொன்மையான, வரலாற்று நினைவுச் சின்னங்கள், பதிவுருக்கள்.''

மூலவரைவில் இருந்தவாறு பதிவில் எஞ்சியதை, அதாவது தொல்பொருள் ஆய்வுக்குரிய இடங்களும் பழம்பொருட்களும் என்பதைப் பொதுப்பட்டியலுக்கு மாற்றக் கருதியுள்ளோம்.

**திரு.எச்.வி.காமத்:** இப்போது இந்தப் பதிவில் எதற்கு உருக்கொடுக்க முயல்கிறார்களோ அந்த உறுப்பு 39 இன் மொழி நடையை மாற்றுவதற்கு டாக்டர் அம்பேத்கர் உருப்படியான காரணங் கள் எதையும் முன்வைக்கவில்லை என்று கருதுகிறேன். ஆகவே திருத்தம் எண் 206 ஐ முன்மொழிகிறேன், அதனை ஏற்றுக்கொள்ளும் படி அவையை வேண்டுகிறேன்.

**திரு. அவைத் தலைவர்:** திருத்தம் எண் 206 குறித்து நீங்கள் ஏதேனும் கூற விரும்புகிறீர்களா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இல்லை, ஐயா, இப்பொருள் குறித்து எதுவும் கூறுவது தேவையற்றதே.

**திரு. அவைத் தலைவர்:** அப்படியானால், திரு. காமத் முன்மொழிந்த திருத்தத்தை வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

***(திருத்தம் மறுதலிக்கப்பட்டது. டாக்டர் அம்பேத்கரின் முன்மொழிவு ஏற்றுக்கொள்ளப்பட்டது. திருத்தப்பட்ட வடிவத்தில் பதிவு 60 ஒன்றியப் பட்டியலில் சேர்க்கப்பட்டது.)***

---

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 ஆகஸ்டு 31, பக். 800.

**பேராசிரியர் ஷிபன் லால் சக்சேனா:** ஐயா, எனது திருத்தங்களை முன்மொழிய அனுமதிப்பீர்களா?

**திரு. அவைத் தலைவர்:** நான் அவற்றை எடுத்துக்கொள்ள அழைத்தபோது நீங்கள் இங்கு இல்லை. இப்போது காலம் கடந்துவிட்டது என்பதற்காக வருந்துகிறேன்.

**பேராசிரியர் ஷிபன்லால் சக்சேனா:** அவை மிக முக்கியமான திருத்தங்கள், அய்யா, அவை சார்பற்றவையும் ஆகும் எனக் கருதுகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** உங்களுக்கு ஆதரவாக எவ்வித அடிப்படையும் இல்லை.

## பதிவு 61

[1]**திரு. அவைத் தலைவர்:** பட்டியலை முடித்துவிடலாம். பிறகு பார்ப்போம். இப்போது பதிவு எண் 61. அச்சிட்ட பட்டியலில் ஒரு திருத்தம் இருக்கிறது. இதுகுறித்து டாக்டர் அம்பேத்கர் அறிவிப்புக் கொடுத்துள்ளார். எண் 3548.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** ஐயா, அதனை நான் முன்மொழியவில்லை.

**திரு. அவைத்தலைவர்:** அடுத்து, திரு.சந்தானம் பெயரில் இரண்டு திருத்தங்கள் இருக்கின்றன.

**மாண்புமிகு திரு.கே.சந்தானம்:** அவற்றை நான் முன்மொழியவில்லை.

**திரு. அவைத் தலைவர்:** அப்படியானால், பதிவு 61ஐ வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

*(பதிவு 61 ஒன்றியப் பட்டியலில் சேர்க்கப்பட்டது)*

---

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 ஆகஸ்டு 31, பக். 802.

## பதிவு 61-A

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் முன்மொழிவது:

'பட்டியல் I இன் பதிவு 61க்குப் பிறகு பின்வரும் பதிவை நுழைக்கலாம்:

61.-A சுங்க எல்லை கடந்து ஏற்றுமதி செய்ய வேண்டிய, அல்லது ஒரு மாநிலத்திலிருந்து மற்றொரு மாநிலத்திற்குக் கொண்டு செல்ல வேண்டிய பண்டங்களுக்கான தர நியமங்களை நிறுவுதல்''

எடைகள் மற்றும் அவைகளின் நியமம் குறித்துச் சொல்கின்ற பதிவு 61-A ஏற்கனவே உள்ளது. பண்டங்களுக்கான தர நியமங்களை நிறுவுவதற்கு ஒரு வழிவகை இருக்க வேண்டும் என்று கருதப்படுகிறது.

★ ★ ★

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அய்யா, என் நண்பர் டாக்டர் தேஷ்முக் எழுப்பிய பிரச்சினையைப் பட்டியல் II இல் உள்ள பதிவுகளைப்பற்றி நாம் விவாதிக்கும்போது தாராளமாக எழுப்பலாமே! அவை மாநிலங்களின் மேலுரிமைக்குட்பட்டவை. நாம் இங்கு பட்டியல் I குறித்து மட்டுமே பேசுகிறோம். மாநிலங்களின் உள்விவகாரங்களில் குறுக்கிடாதவாறு மைய அரசின் அதிகாரத்துக்கு எல்லையிடுவதே இதன் நோக்கம். ஆகவே இப்பதிவு மிகவும் எச்சரிக்கையான சொல்லமைப்பில் வரையப்பட்டுள்ளது.

இப்பதிவு ஒரு மாநிலத்திலிருந்து மற்றொரு மாநிலத்திற்குக் கொண்டு செல்ல வேண்டிய பண்டங்களின் தர நியமங்கள் பற்றியே பேசுகின்றது என்பதை என் நண்பர் காணலாம். இவை தொடர்பாக மாநிலங்களின் நிர்வாகத்தில் குறுக்கிட மையஅரசுக்கு அதிகாரமளிக்கும் எண்ணம் இல்லை. அவர் இந்தப் பிரச்சினையை எழுப்ப விரும்பினால் மாநிலப் பட்டியல் குறித்துநாம் விவாதிக்கும்போது எழுப்பலாம்.

**டாக்டர் பி.எஸ்.தேஷ்முக்:** இந்தப்பதிவை நிறுத்தி வைத்துக் கொள்ளலாம் என்றும், நாம் இந்தப் பட்டியலை இறுதியாக்குவதற்கு முன்பாக வேளாண்மை அமைச்சகத்தைக் கலந்து கொள்ளலாம் என்றும் நான் யோசனை கூறலாமா?

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 ஆகஸ்டு 31, பக். 802
2. மேலது பக்கம் 803.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** நாம் பட்டியல் IIக்கு வரும்போது இதுபற்றி விவாதிக்கலாம்.

**திரு. அவைத் தலைவர்:** திருத்தங்களை வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

*(டாக்டர் தேஷ்முக்கின் திருத்தங்கள் மறுதலிக்கப்பட்டன.)*

**திரு. அவைத் தலைவர்:** இப்போது புதிய பதிவு 61-Aஐ வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

*(அம்பேத்கரின் முன்மொழிவு வாக்கெடுப்புக்கு விடப்பட்டது.)*

*  *  *

[1]**திரு.வி.எஸ். சர்வதே:** நான் டாக்டர் அம்பேத்கரிடமிருந்து அறிந்து கொள்ள விரும்புகிறேன். எல்லை கடந்து ஏற்றுமதி செய்தல் என்ற தொடரின் பொருள் என்ன?

**திரு. அவைத் தலைவர்:** வாக்கெடுப்பெல்லாம் நடந்து முடிந்த பின் இந்தக் கேள்வி காலந்தாழ்ந்து வருகிறதோ என்று அஞ்சுகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** மதிப்பிற்குரிய உறுப்பினர் பிற்பாடு என்னிடம் வருவாரானால் அவருக்கு இதை விளக்கிச் சொல்வேன்.

**திரு. அவைத் தலைவர்:** கேள்வி விடுக்கப்பட்டுள்ளது.

முன்மொழிவு ஏற்றுக்கொள்ளப்பட்டது. பதிவு 61-A ஒன்றியப் பட்டியலில் சேர்க்கப்பட்டது.

## பதிவு 63

[2]**திரு. அவைத் தலைவர்:** இப்போது பதிவு 63 ஐ எடுத்துக் கொள்ளலாம்.

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 ஆகஸ்டு 31, பக். 804.
2. மேலது பக். 805.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அவைத்தலைவர் அவர்களே, மூலப்பதிவுக்கான திருத்தம் எண் 3551 ஐ நான் முன் மொழியவில்லை. நான் முன்மொழிகின்ற திருத்தம் 34ஐப் பொறுத்த வரை இப்படிச் செய்வதன் மூலம் திருத்தம் எண் 212 ஐயும் அதில் சேர்த்து விடுவேன். ஐயா, நான் முன்மொழிவது:

> 'பட்டியல் Iஇன் பதிவு 63க்குப் பதிலாகப் பின்வரும் பதிவை இடம்பெறச் செய்யலாம்.
>
> '63. எண்ணெய் வயல்கள் மற்றும் கனிம எண்ணெய்ச் செல்வாதாரங்களை ஒழுங்குமுறைக்குள்ளாக்குவதும் வளர்த்தெடுப்பதும், பெட்ரோலியம் மற்றும் பெட்ரோலியப்பண்டங்கள்; ஆபத்தான முறையில் தீப்பற்றக் கூடியவை என்று நாடாளுமன்றத்தால் சட்டம் கொண்டு அறிவிக்கப்படும் ஏனைய நீர்மங்களும் பொருட்களும்''.

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** இந்த இரண்டு திருத்தங்களில் எந்த ஒன்றுக்கும் தேவையிருப்பதாக நான் கருத வில்லை. என் நண்பர் பேராசிரியர் ஷிபன்லால் சக்சேனா கருத்தில் கொண்டுள்ள நோக்கம், அதாவது எண்ணெய் முதலானவற்றிற்காகக் கருத்தில் கொண்டுள்ள நோக்கம் அதாவது எண்ணெய் முதலான வற்றிற்காகக் கனிமவள ஆய்வை ஒழுங்குமுறைக்குள்ளாக்க மைய அரசையும் அனுமதிக்க வேண்டும் என்ற நோக்கம், நாம் பயன்படுத்தி யுள்ள 'ஒழுங்குமுறைக்குள்ளாக்குவதும் வளர்த்தெடுப்பதும்' என்ற சொற்களால் ஈடேறும். 'அரித்துத் தின்னும்படியான' என்ற சொல்லைச் சேர்ப்பது தொடர்பாக எவ்வகையிலும் இப்படிப்பட்ட அதிகாரம் இருப்பது தேவையற்றது எனக் கருதுகிறேன்.

***(டாக்டர் அம்பேத்கரின் ஒரே ஒரு திருத்தத்துடன் பதிவு 63 ஒன்றியப் பட்டியில் சேர்க்கப்பட்டது.)***

## பதிவு 64

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அய்யா, நான் முன்மொழிவது:

> 'பட்டியல் Iஇன் பதிவு 64க்குப் பதிலாகப் பின்வரும் பதிவை இடம்பெறச் செய்யலாம்:

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 ஆகஸ்டு 31, பக். 805.
2. மேலது பக். 806

'64. இவற்றின் மீது ஒன்றிய அரசின் கட்டுப்பாடு பொதுநலனுக்கு உகந்தது என்று நாடாளுமன்றம் சட்டம் கொண்டு அறிவிக்கும்படியான தொழில்கள்.''

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அய்யா, பதிவு உள்ளவாறு முழுக்க முழுக்கச் சரியாகவே உள்ளது; வரைவுக்குழு மனத்தில் கொண்டுள்ள நோக்கத்தை அது நிறைவேற்றுகிறது. இந்தப் பதிவில் வழிவகை செய்யப்பட்டவாறு எந்தவொரு குறிப்பிட்ட தொழில்மீதும் மைய அரசு மேலுரிமை பெற்றதும் அந்தத் தொழில் அதனுடைய எல்லா அம்சங்களிலும் வளர்ச்சியில் மட்டுமல்லாது ஏனைய அம்சங்களிலும்கூட நாடாளுமன்றத்தின் மேலுரிமைக்கு உட்பட்டதாகிறது. ஆகவே தொழில்களை முதலில் வைப்பதே ஆகச் சிறந்தது என்று எண்ணியுள்ளோம். இவ்விதம், வளர்ச்சி தொடர்பாக மட்டுமல்லாமல் நாடாளுமன்றம் தான் விரும்புகிற எவ்விதத்திலும் கையாள்வதற்கு ஐயத்துக்கிடமற்ற மேலுரிமையை அதற்கு வழங்க முடியும். இப்பதிவு திரு.காமத் விரும்புவதைக் காட்டிலும் வெகு விரிவானது.

***(இரு திருத்தங்கள் நிராகரிக்கப்பட்டன; டாக்டர் அம்பேத்கரின் முன் மொழிவு ஏற்றுக்கொள்ளப்பட்டது; திருத்தப்பட்ட வடிவத்தில் பதிவு 64 ஒன்றியப் பட்டியலில் சேர்க்கப்பட்டது.)***

## பதிவு 64-A

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அய்யா, ஒரு புதிய பதிவு 64-Aஐக் கொண்டு வருவதற்கான திருத்தத்தைப் பொறுத்த வரை, இந்தப்பிரச்சினை தலைமை அமைச்சர்கள் மாநாட்டில் முன் னுரைக்கப்பட்டது; தலைமை அமைச்சர்களின் மாநாடு இந்த முன் மொழிவுக்கு உடன்படவில்லை என்பதை நான் குறிப்பிடலாம்.

உணவு வினியோகம் என்னும் பிரச்சினையைப் பொறுத்த வரை, ஐந்தாண்டு காலத்திற்கு மையஅரசு உணவு வினியோகத்தின் மீது கட்டுப்பாடு கொண்டிருக்கலாம் என்ற உறுப்பு 206 இல் நாம் வழிவகை செய்திருக்கிறோம்.

இரண்டாவது திருத்தம், அதாவது புதிய பதிவு 64-Bஐச் சேர்ப்பது தொடர்பாக....

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 ஆகஸ்டு 31, பக். 807.
2. மேலது பக். 809-10.

**திரு. அவைத் தலைவர்:** அது முன்மொழியப்படவில்லை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அய்யா, முன் மொழியப்பட்ட திருத்தத்தை என்னால் ஏற்றுக்கொள்ள முடியாது.

**திரு. அவைத் தலைவர்:** திருத்தத்தை வாக்கெடுப்புக்கு விடு கிறேன். பிரச்சினை இதுதான்:

'பட்டியல் I இன் பதிவு 64க்குப் பிறகு பின்வரும் புதிய பதிவைச் சேர்க்கலாம்:

'கால்நடை வளர்ப்பு, காடு வளர்ப்பு, மீன் பண்ணைகள், உட்பட வேளாண்மையின் வளர்ச்சியை ஒருங்கிணைத்தல் உணவு வழங்கல் மற்றும் வினியோகம்''

(திருத்தம் மறுதலிக்கப்பட்டது.)

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** திருத்தத்தின் முதல் பகுதியைப் பொறுத்தவரை, இந்தச் செய்தியைப் பொதுப் பட்டி யலில் வைப்பதற்கு வரைவுக்குழு முன்மொழிந்துள்ளது. என் நண்பர் பேராசிரியர் சக்சேனா பொதுப் பட்டியலை ஆராய்ந்து பார்த்தால் பதிவு 64-Bக்கு இணையாக பொதுப்பட்டியலின் பதிவு 35-A இல்'(அ)' என்னும் பதிவு இருக்கக் காண்பார்.

(ஆ) எனும் பதிவைப் பொறுத்தவரை, இது சர்ச்சைக்குரிய பிரச்சினை. வரைவுக்குழு இன்னும் இது குறித்து எவ்வித முடிவிற்கும் வரவில்லை. (அ) என்பது குறிப்பிட்ட சில தொழில்களை தேசிய முக்கியத்துவம் வாய்ந்தவை என அறிவித்திட நாடாளுமன்றத்திற்கு நாம் ஏற்கனவே வழங்கியிருக்கும் அதிகாரத்தின் தருக்கரீதியான விளைவே தவிர வேறல்ல என்று வரைவுக்குழு கருதுகிறது. குறிப்பிட்ட சில தொழில்களைத் தேசிய முக்கியத்துவம் வாய்ந்தவை என்று அறி வித்திட நாடாளுமன்றத்திற்கு அதிகாரம் உண்டு என்றால், இத்தகைய தொழில்களின் பண்டங்களையும் உற்பத்திப் பொருட்களையும் ஒழுங்குமுறைக்குள்ளாக்கவும் நாடாளுமன்றத்திற்கு அதிகாரம் இருக்க வேண்டும். ஆனால் (ஆ) என்பது தேசிய முக்கியத்துவம் வாய்ந்தவை என்று மன்றத்தால் அறிவிக்கப்பட்டவை அல்லாத வேறு தொழில்களின் பண்டங்களைப் பற்றியதாகும். நான் முன்னமே

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 ஆகஸ்டு 31, பக். 811.

சொன்னதுபோல் இது சற்றே சர்ச்சைக்குரியதாகும். வரைவுக்குழு எந்த முடிவிற்கும் வரவில்லை. பொதுப்பட்டியலிலுள்ள பதிவு 35க்கு நாம் வரும்வரையில் இப்பிரச்சினையை நிறுத்திவைத்துக்கொள்ள பேராசிரியர் சக்சேனா அனுமதிக்கலாம் என்பது என் யோசனை.

***பேராசிரியர் ஷிபன்லால் சக்சேனா:*** காத்திருக்க எனக்கு மறுப்பேதுமில்லை.

***திரு. அவைத் தலைவர்:*** அப்படியானால், இது நிறுத்தி வைத்துக் கொள்ளப்படுகிறது.

## பதிவு 65

★ ★ ★

[1]***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** திரு. காமத்தின் திருத்தம் கொஞ்சமும் தேவையற்றது என்று எனக்குத் தோன்றுகின்றது. ஏனென்றால் எண்ணெய் வயல்கள் என்ற சொல் பொதுவான முறையில் பயன்படுத்தப்படுகின்றது. அது காணப்படுகின்ற இடங்களில் எல்லாம் மைய அரசுக்கு மேலுரிமை இருக்கும். எண்ணெய் வயல் நீருக்கு அடியில் இருக்கக்கூடுமானால்......#

***திரு. அவைத் தலைவர்:*** 'மற்றும் நீரடிப் பரப்புகள்'' என்று அவர் சொல்கிறார்.

***திரு.எச்.வி.காமத்:*** சுரங்கங்கள், எண்ணெய் வயல்கள், மற்றும் நீரடிப் பரப்புகள் என்று நான் சொல்கிறேன்.

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** என் நண்பர் முக்குளிப்புச் செயல்களை மனத்தில் கொண்டிருக்கிறார்.

***திரு. எச்.வி. காமத்:*** இல்லை. முத்துத் தொழில்.

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:*** என்னால் சொல்ல முடிந்ததெல்லாம் இப்பிரச்சினையை நான் பரிசீலனை செய்வேன்.

---

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 ஆகஸ்டு 31, பக். 813.

# புள்ளியின் குறுக்கீட்டைக் காட்டுகின்றன.

**திரு. அவைத் தலைவர்:** அடுத்து பேராசிரியர் சக்சேனா முன்மொழிந்தத் திருத்தத்தை முதலில் வாக்கெடுப்புக்கு விடுகிறேன். பிரச்சினை இதுதான்:

'பட்டியல் I இன் பதிவு 65 இல் 'ஒழுங்குமுறைக்குள்ளாக்குதல்' என்ற சொல்லுக்குப் பிறகு 'மற்றும் சேமநலம்' என்ற சொல்லை நுழைக்கலாம்.

திருத்தம் மறுதலிக்கப்பட்டது.

**திரு.எச்.வி.காமத்:** டாக்டர் அம்பேத்கரின் உறுதிமொழியைக் கருத்தில் கொண்டு நான் எனது திருத்தத்தை இப்போது வலியுறுத்தவில்லை. வரைவுக் குழுவினால் இத்திருத்தம் பரிசீலிக்கப் படலாம்.

*(முன்மொழிவு ஏற்றுக்கொள்ளப்பட்டது. பதிவு 65 ஒன்றியப் பட்டியலில் சேர்க்கப்பட்டது.)*

## பதிவு 66

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அய்யா, நான் முன்மொழிவது:

'பட்டியல் I இன் பதிவு 66 இல், 'மற்றும் எண்ணெய் வயல்கள்' என்ற சொற்களை நீக்கிவிடலாம்.''

இது ஏற்கனவே பதிவு 63க்கு மாற்றப்பட்டு விட்டது.

★ ★ ★

[2]**திரு. ஜகத் நாராயண் லால் (பீகார்: பொது):** அவைத் தலைவர் அவர்களே... திரு.பிரஜேஷ்வர் பிரசாத்தினால் முன்மொழியப் பட்ட திருத்தத்தை - இதற்காக வருந்துகிறேன். நான் எதிர்க்க விரும்பினேன், அவ்வளவுதன்— டாக்டர் அம்பேத்கர் முன்மொழிந்த திருத்தத்தை ஆதரிக்கிறேன். மற்றத் திருத்தங்களை எதிர்க்கிறேன்.

**திரு. பிரஜேஷ்வர் பிரசாத்:** டாக்டம் அம்பேத்கரின் திருத்தம் 'எண்ணெய் வயல்கள்'' என்ற சொல்லை நீக்குகிறது.

**திரு. ஜகன் நாராயண்லால்:** 'எண்ணெய் வயல்கள்' என்ற சொற்கள் முன்பே வந்திருப்பதால் நீக்கப்பட வேண்டும்.

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 ஆகஸ்டு 31, பக். 813.
2. மேற்படி அதே நூல், ். 816.

**திரு. அவைத் தலைவர்:** நீங்கள் ஏதேனும் கூற விரும்பு கிறார்களா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இல்லை, அய்யா, நான் எந்தத் திருத்தத்தையும் ஏற்றுக்கொள்ள விரும்பவில்லை.

**திரு. அவைத் தலைவர்:** பிரஜேஷ்வர் பிரசாத்தின் திருத் தத்தை எடுத்துக்கொள்வோம்.

**திரு. பிரஜேஷ்வர் பிரசாத்:** அய்யா, நான் அதனை விலக்கிக் கொள்ள அனுமதி வேண்டுகிறேன்.

(பேரவையின் அனுமதியுடன் திருத்தம் விலக்கிக் கொள்ளப் படுகிறது.)

(திரு. காமத்தின் திருத்தம் விலக்கிக் கொள்ளப்பட்டது, டாக்டர் அம்பேத்கரின் திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது. திருத்தப் பட்ட வடிவத்தில் பதிவு 66 ஒன்றியப் பட்டியலில் சேர்க்கப் பட்டது.)

## பதிவு 67

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அய்யா, நான் முன்மொழிவது:

'பட்டியல் Iஇன் பதிவு 67க்குப் பதிலாகப் பின்வரும் பதிவை இடம்பெறச் செய்யலாம்:

'67. எந்தவொரு மாநிலத்திற்கும் சொந்தமான காவல்துறைப் படையைச் சேர்ந்தவர்களின் அதிகாரங்களையும், மேலுரிமையையும் அம்மாநிலத் திற்குட்பட்ட எந்தவொரு பகுதிக்கும் விரிவாக்குதல், ஆனால் ஒரு மாநிலத் தின் காவல்துறை அந்த மாநிலத்திற்குட்படாத எந்தவொரு பகுதியிலும் அப்பகுதி இடம்பெற்றுள்ள மாநிலத்தின் அரசினுடைய ஒப்புதல் இல் லாமல் அதிகாரங்களையும் மேலுரிமையையும் செலுத்த இயலாதவாறு இவ்விதம் விரிவாக்குதல்; எந்தவொரு மாநிலத்திற்கும் சொந்தமான காவல்துறைப் படையைச் சேர்ந்தவர்களின் அதிகாரங்களையும், மேலுரிமை யையும் அம் மாநிலத்திற்கு வெளியேயுள்ள இருப்புப் பாதைப் பகுதிகளுக்கு விரிவாக்குதல்.''

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 ஆகஸ்டு 31, பக். 817.

**திரு.அவைத் தலைவர்:** நீக்கத்திற்காக சர்தார் ஹுக்கம் சிங் ஒரு திருத்தம் கொண்டு வந்துள்ளார். அதனை முன்மொழியத் தேவை யில்லை. இந்தப் பதிவுக்கு டாக்டர் தேஷ்முக் ஒரு திருத்தம் கொடுத் துள்ளார் என அறிகிறேன். அதனை அவர் முன்மொழியவில்லை அறிகிறேன். ஆகவே முன்மொழிவை வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

*(திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.)*

***(திருத்தப்பட்ட வடிவத்தில் பதிவு 67 ஒன்றியப் பட்டியல் சேர்க்கப் பட்டது.)***

## பதிவு 68

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அய்யா, நான் முன்மொழிவது:

> "பட்டியல் Iஇன் பதிவு 68க்குப் பதிலாகப் பின்வரும் பதிவை இடம்பெறச் செய்யலாம்:
>
> நாடாளுமன்றத்திற்கும் மாநிலங்களின் சட்டமன்றங்களுக்குமான தேர்தல் கள்; குடியரசுத் தலைவர், மற்றும் துணைத்தலைவர் தேர்தல்கள்; இத்தகைய தேர்தல்களை மேற்பார்வையிடுவதற்கும் வழிநடத்துவதற்கும் கட்டுப்படுத்து வதற்குமான தேர்தல் ஆணையம்."

★ ★ ★

**திரு. அவைத் தலைவர்:** திரு.சந்தானம் பெயரில் இதற்கொரு திருத்தம் இருக்கிறது. மற்றசில உறுப்புகள் தொடர்பாக நாம் எடுத்துள்ள முடிவைக் கருத்தில் கொண்டால் இந்தத் திருத்தம் தேவை யற்றதாகி விடுவதாக நினைக்கிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இந்தத் திருத் தத்தை ஏற்றுக்கொள்ளத் தேவையில்லை. ஏனெனில் தேர்தல் ஆணையம் என்பதில் வட்டார ஆணையர்களும் அடங்குவர்.

***(திருத்தம் மறுதலிக்கப்பட்டது. டாக்டர் அம்பேத்கரின் முன்மொழிவு கொண்டு திருத்தப்பட்ட வடிவத்தில் பதிவு 68 ஏற்றுக்கொள்ளப்பட்டு ஒன்றியப் பட்டியலில் சேர்க்கப்பட்டது.)***

---

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 ஆகஸ்டு 31, பக். 818.
2. மேற்படி நூல், பக். 819-20.

## பதிவு 69

[2]மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: அய்யா, நான் முன்மொழிவது:

"பட்டியல் Iஇன் பதிவு 69க்குப் பதிலாகப் பின்வரும் பதிவுகளை இடம் பெறச் செய்யலாம்:

'69. குடியரசுத்தலைவர் மற்றும் ஆளுநர்களின் ஊதியங்களும் படிகளும் விடுப்புரிமைகளும்; ஒன்றிய அமைச்சர்கள் மாநிலங்களவைத் தலைவர் மற்றும் துணைத்தலைவர், மக்களவைத் தலைவர் மற்றும் துணைத்தலைவர் ஆகியோரின் சம்பளங்களும் படிகளும்; நாடாளுமன்ற உறுப்பினர்களின் சம்பளங்களும் படிகளும்; இந்தியாவின் தலைமைக் கணக்குத் தணிக்கை யாளரின்சம்பளங்களும் படிகளும், பணிநிலைமைகளும்.

69A. நாடாளுமன்ற அவை ஒவ்வொன்றுக்கும், அந்தந்த அவையின் உறுப் பினர்கள் மற்றும் குழுக்களுக்குமுள்ள சிறப்புரிமைகளும் காப்புரிமைகளும், அதிகாரங்களும்"

**திரு. அவைத் தலைவர்:** இதற்குத் திரு.காமத்தின் பெயரில் ஒரு திருத்தம் எண் 219 உள்ளது.

**திரு. எச்.வி. காமத்:** நான் எனது திருத்தத்தை முன்மொழிய விரும்பவில்லை, ஆனால் டாக்டர் அம்பேத்கர் உச்சநீதிமன்ற நீதிபதி களை மறந்தது அல்லது பார்க்காமல் விட்டது எவ்வாறு என்று கேட்பேன்.

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அவர்களின் சம்பளங்களுக்கும் இன்ன பிறவற்றுக்கும் அட்டவணையில் வழிவகை செய்யப்பட்டிருக்கிறது. அட்டவணையில் குறித்துரைக்கப்பட்ட வாறு அவர்களின் சம்பளங்கள் இருக்கும் என்று நாம் சொல்லி யிருக்கிறோம்.

**திரு. அவைத் தலைவர்:** அடுத்து, டாக்டர் தேஷ்முக்கின் திருத்தம் எண் 220. இது மாநிலப் பட்டியலில் இடம்பெறுவதே அதிகப் பொருத்தமுடையதல்லவா?

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 ஆகஸ்டு 31, பக். 819-20.

**டாக்டர் பி.எஸ்.தேஷ்முக்:** இல்லை. அய்யா, நான் முன் மொழிவது:

'பட்டியல் I இன் (ஆறாவது வாரம்) திருத்தம் எண் 39 இல் பட்டியல் I இன் முன்மொழியப்பட்ட பதிவு 69க்குப் பிறகு பின்வரும் புதிய பதிவைச் சேர்க் கலாம்:

69.A. மாநிலச் சட்டமன்றங்களின் உறுப்பினர்களுக்கும் அவற்றின் குழுக் களுக்குமுள்ள சிறப்புரிமைகளும் காப்புரிமைகளும், அதிகாரங்களும்.''

சிறப்புரிமைகள் ஒரே சீரசாக இருப்பதும் அவை மாநிலத் திற்கு மாநிலம் வேறுபடக் கூடாதென்பதும் அவசியமெனக் கருது கிறேன்.

**திரு. பிரஜேஷ்வர் பிரசாத்:** கேளுங்கள், கேளுங்கள்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** ஒவ்வொரு சட்ட மன்றத்துக்கும் தன் சிறப்புரிமைகளையும் காப்புரிமைகளையும் அதிகாரங்களையும் வரையறுக்கும் ஆணையுரிமை இருக்க வேண்டும் என்பதே சரியானது. ஆகவேதான் நாடாளுமன்றத்துக்குத் தன் உறுப் பினர்களின் சிறப்புரிமைகளையும்/காப்புரிமைகளையும், அதிகாரங் களையும் குறித்துரைக்க அதிகாரம் இருக்க வேண்டும் என்றும், மாநிலச் சட்டமன்றங்களுக்குத் தங்கள் உறுப்பினர்கள் தொடர்பாக இதேபோன்ற அதிகாரம் இருக்க வேண்டும் என்றும் நாம் வழிவகை செய்துள்ளோம். முழு அதிகாரமும் மைய அரசில் குவிக்கப்பட வேண்டும் என்று நான் கருதவில்லை. நாடாளுமன்றம் தன் உறுப் பினர்களின் சிறப்புரிமைகளையும்/ காப்புரிமைகளையும்/ அதிகாரங் களையும் வரையறுத்து ஒரு சட்டம் நிறைவேற்றினால் அனேக மாக மாநிலச் சட்டமன்றங்களும் அதனையே பின்பற்றித் தாங்கள் உசிதமெனக் கருதக்கூடிய சிறு திருத்தங்களுடன் அப்படியே பார்த் தொழுகும் என்று நான் நினைத்திருக்க வேண்டும்.

***(டாக்டர் அம்பேத்கரின் முன்மொழிவு ஏற்றுக்கொள்ளப்பட்டது. டாக்டர் தேஷ்முக்கின் திருத்தம் நிராகரிக்கப்பட்டது. திருத்தப்பட்ட வடிவத்தில் பதிவு 69, 69-A ஆகியவை ஒன்றியப் பட்டியலில் சேர்க்கப்பட்டன.)***

## பதிவு 70

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அய்யா, நான் முன்மொழிவது:

''பட்டியல் I பதிவு 70 இன் இறுதியில் 'அல்லது நாடாளுமன்றத்தினால் அமர்த்தப்படும் ஆணையங்கள்' என்ற சொற்களைச் சேர்க்கலாம்.''

இருக்கிற வடிவத்தில், இப்பதிவு குழுக்களை மட்டுமே குறிப்பதாகும்.

**திரு. அவைத் தலைவர்:** இதற்கு வேறு ஏதேனும் திருத்தம் இருப்பதாக நான் கருதவில்லை.

(முன்மொழிவு ஏற்றுக்கொள்ளப்பட்டது. திருத்தப்பட்ட வடிவத்தில் பதிவு 70 ஒன்றியப் பட்டியலில் சேர்க்கப்பட்டது.)

## பதிவு 70-A

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அய்யா, நான் முன்மொழிவது:

'பட்டியல் I பதிவு 70க்குப் பிறகு பின்வரும் பதிவை நுழைக்கலாம்:

70A. 'திரைப்படங்கள் காட்ட அனுமதித்தல்'.

இந்தப் பதிவு மூலவரைவில் பொதுப்பட்டியலில் சேர்க்கப்பட்டிருந்தது. இப்போது இதனைப் பட்டியல் Iஇல் சேர்க்க முன்மொழியப்படுகிறது.

* * *

[3]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அவைத் தலைவர் அவர்களே, மூலவரைவில், பொதுப்பட்டியலில் இருந்த இந்தப் பதிவை ஒன்றியப் பட்டியலுக்குக் கொண்டுவர இரட்டை நோக்கமுள்ளது. முதலாவதாக, திரைப்படங்களை அனுமதிப்பதற்கு இயன்ற வரையில் ஒரேசீரான அளவுத்திட்டத்தைக் குறித்துரைக்கவேண்டும்;

---

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 ஆகஸ்டு 31, பக்.820
2. மேலது, பக். 821
3. அதே நூல், பக். 824.

இரண்டாவதாக, ஒரு திரைப்படத்துக்குக் குறிப்பிட்ட ஒரு மாகாணம் அனுமதி வழங்காமற் போய் அதனால் அப்படத்தின் தயாரிப்பாளருக்குத் தீங்கு செய்யப்படுவதைத் தடுக்கவேண்டும் என்பதாகும். இப்படி அனுமதி வழங்க மறுப்பதற்கு ஏதோ தனி மனப்போக்கு காரணமாயிருக்கலாம்; அல்லது திரைப்படத்துக்கு அனுமதி வழங்குவதில் முக்கியமாய்க் கொள்ள வேண்டிய பொது அளவுத் திட்டங்களுக்கு இணங்காத சில அசாதாரண அளவுத் திட்டங்கள் காரணமாயிருக்கலாம். ஆகவே திரைப்படத்திற்கு அனுமதி வழங்கும் இந்த அதிகாரத்தை மைய அரசுக்கும் மாகாணங்களுக்குமிடையே பகிர்ந்து கொடுத்தால் ஒவ்வொரு மாகாணமும் தனக்கேயுரிய அளவுத் திட்டத்தைக் குறித்துக் கொண்டே போகலாம்; மையஅரசு ஒவ்வொரு மாகாணத்தையும் அணுகி அதன் அளவுத்திட்டத்தைப் பரிசீலிக்கும்படி இணங்க வைக்கவும், அந்த அளவுத்திட்டங்கள் நல்லவையா கெட்டவையா என்று சுட்டிக்காட்டவும் வேண்டியிருக்கும். இப்படிச் செய்வதற்குப் பதிலாக இந்த அதிகாரத்தை ஒன்றியப் பட்டியலுக்குக் கொண்டு வருவதே சாலச்சிறந்தது எனக் கருதுகிறேன்.

இப்பிரச்சினையில் எஞ்சிருப்பவற்றைப் பொறுத்தவரை பட்டியல் IIஇல் பதிவு 43 ஐ அப்படியே விட்டுவைக்க முன்மொழியப்படுகிறது. இதனால் கலை அரங்குகள், நாடக நிகழ்வுகள், திரையரங்குகள் ஆகியவற்றின் மீது மாகாணங்கள் தமக்குள்ள கட்டுப்பாடு முழுவதையும் - அனுமதி வழங்கும் பிரச்சினை நீங்கலாக அப்படியே தக்க வைத்துக் கொள்ளும்.

நான் முன்மொழிந்திருக்கின்ற யோசனையால் குறிப்பிட்ட எந்நலனுக்கும் தீங்கு ஏதும் நேரிடும் என்று நான் கருதவில்லை. மறுபுறம் நான் முன்பே சொன்னதுபோல் திரைப்படத்திற்கு அனுமதி வழங்கும் அதிகாரத்தை மைய அரசு போன்ற ஒற்றை அமைப்பின் கையில் குவிப்பதால் தெளிவான நன்மைகள் கிட்டும்.

**திரு. ராஜ்பகதூர்:** அனுமதி வழங்குவது மட்டுமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நல்ல திரைப்படம் என்றும் அறநெறிகளுக்கு ஏற்றது என்று மைய அரசு அனுமதி வழங்கிவிட்டால், படத்தைத் திரையிடுவதற்கு மேற்கொண்டு வழி

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 ஆகஸ்டு 31, பக்.825

வகை ஏதும் தேவைப்படுவதற்கு எக்காரணமும் இருப்பதாக நான் கருதவில்லை.

**திரு. அவைத் தலைவர்:** திருத்தம் அண் 222 ஐ வாக்கெடுப்பிற்கு விடுகிறேன்.

**டாக்டர் பி.எஸ். தேஷ்முக்:** அதனை விலக்கிக் கொள்ளவிரும்புகிறேன்.

*(பேரவையின் அனுமதியுடன் திருத்தம் விலக்கிக் கொள்ளப்பட்டது.)*

**திரு. ராஜ்பகதூர்:** நான் என்னுடைய திருத்தம் எண் 266 ஐ விலக்கிக் கொள்ள விரும்புகிறேன்.

*(பேரவையின் அனுமதியுடன் திருத்தம் விலக்கிக் கொள்ளப்பட்டது. பதிவு 77A ஒன்றியப் பட்டியலில் சேர்க்கப்பட்டது.)*

## பதிவு 73

[1]**திரு. அவைத் தலைவர்:** அடுத்து பதிவு 73 வருகிறது. டாக்டர் அம்பேத்கர்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அய்யா, நான் முன்மொழிவது:

> 'பட்டியல் Iஇன் பதிவு 73க்குப் பதிலாகப் பின்வரும் பதிவை இடம்பெறச் செய்யலாம்:
>
> '73. மாநிலங்களுக்கிடையிலான வர்த்தகமும் வாணிகமும்.''

பதிவு 73இல் இதை அடுத்துவரும் சொற்கள் தேவையற்றவை. ஏனென்றால் பட்டியல் IIஇன் பதிவு 33ஐக் கைவிடும் யோசனை உள்ளது.

**திரு. அவைத் தலைவர்:** இதற்கு ஒரு திருத்தம் இருக்கிறது, திரு. நசிருதீன் அகமதின் திருத்தம் எண் 266.

**திரு. நசிருதீன் அகமது:** நான் அதனை முன்மொழியவில்லை.

---

1. அரசமைப்புப்பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 ஆகஸ்டு 31, பக்.825.

**திரு. அவைத் தலைவர்:** அப்படியானால் இந்தப் பதிவுக்குத் திருத்தம் ஒன்றுமில்லை. டாக்டர் அம்பேத்கர் முன்மொழிந்த வடிவத்தில் பதிவை நான் வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

(திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது. திருத்தப்பட்ட வடிவத்தில் பதிவு 73 ஒன்றியப்பட்டியலில் சேர்க்கப்பட்டது. இங்கு குறிப்பிட்டப்பட்டிராத பதிவுகள் குறித்த விவாதங்களில் டாக்டர் அம்பேத்கர் கருத்து ஏதும் கூறவில்லை. இவற்றில் பெரும்பாலானவை விவாதமே இல்லாமல் ஏற்றுக்கொள்ளப்பட்டன.)

## பதிவு 73-A

[1]**திரு.நசிருதீன் அகமது:** ... ஆகவே கோள்களுக்கிடையிலான பயணத்தைப் பட்டியலில் சேர்த்தாக வேண்டும், அப்படிச் சேர்க்க வேண்டுமானால், இந்தத் திருத்தத்தையும் ஏற்றுக் கொள்ள வேண்டியிருக்கும். புவியிலிருந்து நிலவுக்கும் நிலவிலிருந்து புவிக்கும் பயணம் செய்யும் சாதனை வெகுவிரைவில் நிகழலாம். ஆனால் திரு.காமத்தின் திருத்தம் அதனைச் சாத்தியமாக்காது. மூலத் திருத்தத்தை முழுமைப் படுத்துவதற்காக எனது திருத்தம் ஏற்றுக் கொள்ளப்பட வேண்டும். அய்யா, திருத்தம் நிராகரிக்கப்படுவதாயிருந்தால், இன்னும் கூட மன நிறைவு அளிக்ககூடிய விதத்தில் வாக்கெடுப்பு கொண்டு நிராகரிக்கப்படும் என நான் நம்புகிறேன்.

**திரு. அவைத் தலைவர்:** இதற்கு மேல் எந்தப் பேச்சும் தேவை என்று நான் கருதவில்லை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** என் நண்பரின் முன்மொழிவுகள் அறியவொண்ணாத செய்திகள் பற்றியவையா, அல்லது அறியப்படாத செய்திகள் பற்றியவையா என்று எனக்கு விளங்கவே இல்லை. அவை அறியப்படாதவை என்றால் நாம் நமது நேரத்தை வீணாக்கியிருக்கிறோம். ஆனால் அவை அறியப்படாதவையே தவிர அறியவொண்ணாதவை அல்ல என்றால், அவை தொடர்பாக நமக்குப் போதுமான அதிகாரங்கள் இருக்கின்றன. எந்தப் பதிவு குறித்தும் அலட்டிக் கொள்வது ஏன்?

1. அரசமைப்புப்பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 ஆகஸ்டு 31, பக். 828.

திரு.அவைத் தலைவர்: நான் திரு.நசிருதீன் அகமதின் திருத்தத்தை வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

(திருத்தம் மறுதலிக்கப்பட்டது).

## பட்டியல் I

## பதிவு 74

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** (பம்பாய் பொது:) அய்யா, நான் முன்மொழிவது:

> ''பட்டியல் Iஇன் பதிவு 74க்குப் பதிலாகப் பின்வரும் பதிவை இடம்பெறச் செய்யலாம்:
>
> 74. மாநிலங்களிடையிலான ஆறுகள் மற்றும் ஆற்றுப்படுகைகளை ஒழுங்குமுறைக்குள்ளாக்குவதும் வளர்த்தெடுப்பதும், ஒன்றியக் கட்டுப்பாட்டின்கீழ் இப்படி ஒழுங்குமுறைக்குள்ளாக்குவது அல்லது வளர்த்தெடுப்பது பொதுநலனுக்கு உகந்தது என்று சட்டம் கொண்டு நாடாளுமன்றம் அறிவிக்குமளவிற்கு இப்படி செய்தல்.''

**திரு. பிரஜேஷ்வர் பிரசாத் (பீகார்: பொது):** அவைத் தலைவர் அவர்களே, நான் எனது திருத்தத்தை முன்மொழிவதற்கு முன்பாக உங்கள் அனுமதியுடன் ஒருவார்த்தை சொல்லட்டுமா? எப்படியோ, ஒருவேளை என் குற்றத்தினால், இந்தத் திருத்தத்தில் ஒரு சொல்லைக் காணவில்லை. 'ஒழுங்குமுறைக்குள்ளாக்குதல்'' என்ற சொல்லைச் சேர்க்க விரும்புகிறேன். அய்யா, நான் பணிந்து முன்மொழிவது:

> ''திருத்தங்கள் பட்டியலில் திருத்தம் 3562 இன் பட்டியல் I இன் முன்மொழியப்பட்ட பதிவு 74க்குப் பதிலாகப் பின்வருவதை இடம்பெறச் செய்யலாம்:
>
> ''74. மாநிலங்களுக்கிடையிலான ஆறுகளையும் மாநிலங்களுக்கிடையிலான நீர்வழிகளையும் ஒழுங்குமுறைக்குள்ளாக்குவதும் வளர்த்தெடுப்பதும் - வெள்ளக்கட்டுப்பாடு நீர்ப்பாசனம், நீர்வழிப் போக்குவரத்து, நீர்மின் ஆற்றல் இன்ன பிற நோக்கங்களுக்காக இப்படிச்செய்தல் - ஒன்றியக் கட்டுப்பாட்டின் கீழ் இப்படி வளர்த்தெடுப்பது பொதுநலனுக்கு தேவையானது அல்லது உகந்தது என்று சட்டம் கொண்டு நாடாளுமன்றம் அறிவிக்குமளவிற்கு இப்படிச் செய்தல்.''

அய்யா, ஒரே ஒரு கருத்தைத்தான் நான் சொல்லியாக வேண்டும். அதாவது எனது இந்தத் திருத்தம் டாக்டர் அம்பேத்கர்

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டம்பர் 1, பக். 830.

முன்மொழிந்த திருத்தத்தைக் காட்டிலும் விரிந்தகன்ற தன்மை யுடையது.

★ ★ ★

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அய்யா, நான் சொல்ல விரும்புவதெல்லாம், திரு.பிரஜேஷ்வர் பிரசாத் என்ன விரும்பினாலும் அது என் திருத்தத்தில் சேர்க்கப்பட்டுள்ளது; ஆகவே அதை ஏற்கத் தேவையில்லை.

***(திரு.பிரஜேஷ் பிரசாத் தனது திருத்தத்தை விலக்கிக் கொண்டார். டாக்டர் அம்பேத்கரின் திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது. திருத்தப்பட்ட வடிவத்தில் பதிவு 74 ஒன்றியப் பட்டியலில் சேர்க்கப்பட்டது.)***

## பதிவு 75

*(பதிவு 75க்கு திரு.நசிருதீன் அகமது முன்மொழிந்த திருத்தம் டாக்டர் அம்பேத்கரால் ஏற்றுக்கொள்ளப்படவில்லை. ஆகவே அதனை அவை மறு தலித்து விட்டது. திருத்தப்பட்ட வடிவத்தில் பதிவு 75 ஒன்றியப்பட்டியலில் சேர்க்கப்பட்டது.)*

## பதிவு 76

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அய்யா, நான் முன்மொழிவது:

> ''பட்டியல் Iஇன் பதிவு 76க்குப் பதிலாகப் பின்வரும் பதிவை இடம்பெறச் செய்யலாம்:
>
> '76. ஒன்றிய முகமைகள் வழியாக உப்பு உற்பத்தி, வழங்கல் மற்றும் வினியோகம்; ஏனைய முகமைகள் வழியாக உப்பு உற்பத்தி, வழங்கல் மற்றும் வினியோகத்தை ஒழுங்குமுறைக்குள்ளாக்குவதும் கட்டுப்படுத்து வதும்.''

*(திருத்தப்பட்ட வடிவத்தில் பதிவு 76 ஒன்றியப் பட்டியலில் சேர்க்கப்பட்டது.)*

**திரு. மகாவீர் தியாகி** (ஐக்கிய மாகாணம்: பொது:): அய்யா, நீங்கள் பிரச்சினையை வாக்கெடுப்புக்கு விடும்போது டாக்டர் அம்பேத்கர் ஒலி பெருக்கிக்கு அப்பால் 'ஆம்'' என்று சொல்கிறார். இதன் விளைவாக ஆம் என்ற பதில்கள் அளவு மீறி உரத்த குரலில் ஒலிக்கின்றன.

---

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டம்பர் 1, பக். 831

## பதிவு 79

[1]மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: அய்யா, பதிவு 79 தொடர்பாக நான் ஒன்றுமட்டும் சொல்ல வேண்டும். பதிவு 79 பட்டியல் Iஇல் இருந்து வருமானால் பங்குச் சந்தைகள் மீதும் முற்பதிவுச் சரக்கு அங்காடி மீதும் விதிக்கப்படக்கூடிய வரிகள், அவற்றிலான வாணிக நடவடிக்கைகள் மீது விதிக்கப்படும் முத்திரைக் கட்டணங்கள் அல்லாத வரிகள் ஆகியவற்றின் வரவுத் தொகைகளைத் தனதாக்கிக் கொள்வதற்கு மைய அரசுக்கும் உரிமை இருக்கும் என்று அவை உறுப்பினர்கள் சிலர் கருதிக் கொண்டிருக்கின்றனர். பங்குச் சந்தைகளையும், முற்பதிவு சரக்கு அங்காடியையும் பட்டியல் Iஇல் சேர்க்கும்போது இந்தப் பதிவின்படி விதிக்கப்படக்கூடிய வரிகளின் வரவுத்தொகையைக் தனதாக்கிக் கொள்வதற்கான மைய அரசுக்கு உரிமை ஏதும் இருக்க வேண்டும் என்பது வரைவுக்குழுவின் நோக்கம் அல்லவே அல்ல என்பதைத் தெளிவுபடுத்த விரும்புகிறேன். ஆகவேதான் அனைத்துவகையான ஐயப்பாடுகளையும் களையும் பொருட்டு குறிப்பிட்ட சில வரிகளின் வரத்தொகைகளை மாகாணங்களிடையே பங்கீட்டளிக்க கோருகின்ற உறுப்பு 250 ஐ வரைவுக்குழு திருத்த எண்ணுகிறது. நாம் செய்ய எண்ணியிருப்பது இதுதான்; ஒரு தொடர் விளைவான வழிவகை என்ற முறையில் பங்கீட்டளிக்க வேண்டிய வரிகளை ஒவ்வொன்றாக பட்டியலிடும் (அ) முதல் (ஈ) முடிய உள்ள கூறுகளடங்கிய உறுப்பு 250 உடன் பங்குச் சந்தைகள் மற்றும் முற்பதிவுச் சரக்கு அங்காடி மீதான வரிகளின் வரைவுத்தொகைகள் என்பதைச் சேர்க்கலாம். இந்தப் பதிவு பட்டியல் Iஇல்இருந்து வருமானால் வரிகளைத் தனதாக்கிக் கொள்ள மைய அரசுக்கு அதிகாரம் அளிக்கும் என்று சில உறுப்பினர்கள் கொண்டுள்ள ஐயப்பாடுகளையும் இது களைந்துவிடும் என்று நான் உறுதியாக நம்புகிறேன். அதுவன்று நோக்கம். அங்குள்ள பதிவு முற்ற முழுக்க சட்ட மியற்றும் தன்மையிலானது. அதற்கு நிதிவகை உட்பொருள் எதுவும் இருக்காது.

**பண்டித ஹிருதய் நாத் குன்ஸ்ரு (ஐக்கிய மாகாணங்கள்: பொது):** நான் டாக்டர் அம்பேத்கரைக் கேட்க விரும்புகிறேன்: இது தொடர்பாக உறுப்பு 277லும் மாற்றம் கொண்டுவரும் எண்ணம் உங்களுக்குள்ளதா?

---

1. அரசமைப்புப்பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டம்பர் 1, பக் - 832.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** சரி, முன்னுக்குப் பின் முரணில்லாமல் செய்வதற்காகத் தொடர்விளைவான வழிவகை ஏதும் கொண்டு வருவது குறித்துப் பரிசீலிப்பேன்.

*(பதிவு 79 ஒன்றியப் பட்டியலில் சேர்க்கப்பட்டது.)*

## பதிவு 81

[1]**திரு.பிரஜேஷ்வர் பிரசாத்:** அவைத் தலைவர் அவர்களே, நான் பணிந்து முன்மொழிவது:

> ' 'திருத்தங்களின் பட்டியலில் திருத்தம் எண் 3572க்குப் பதிலாகப் பின்வருவதை இடம்பெறச்செய்யலாம்:
>
> ''பட்டியல் Iஇல் பதிவு 81க்குப் பதிலாகப் பின்வருவதை இடம்பெறச் செய்யலாம்:
>
> ''81. விவசாய நிலம் உள்ளிட்ட சொத்துக்கான வாரிசு உரிமை தொடர்பான தீர்வைகள்.''

[2]**மாண்புமிகு டாக்டர்.பி.ஆர்.அம்பேத்கர்:** அய்யா, மாகாணத் தலைமை அமைச்சர்களுடன் நடைபெற்ற மாநாட்டில் இது குறித்துப் பரிசீலிக்கப்பட்டது என்பதை நான் குறிப்பிடலாம். கொள்கை பழுதற்றதாக இருக்கக்கூடும் என்றபோதிலும் இந்த அடிப்படை மாற்றத்தைச் செய்வதற்குத் தாங்கள் இப்போது அணியமாயில்லை என்று அவர்கள் கருத்துத் தெரிவித்தார்கள்.

*(திரு. பிரஜேஷ்வர் பிரசாத்தின் திருத்தம் விலக்கிக் கொள்ளப்பட்டது. பதிவு 81 ஒன்றியப் பட்டியலில் சேர்க்கப்பட்டது.)*

## பதிவு 83

[3]**திரு. அவைத் தலைவர்:** இதற்கு இரண்டு திருத்தங்கள் உள்ளன.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அய்யா, நான் முன்மொழிவது:

> ''பட்டியல் Iஇன் 83இல் 'இருப்புப்பாதை' என்ற சொல்லுக்குப் பிறகு ஒரு காற்புள்ளியையும் 'கடல்' என்ற சொல்லையும் நுழைக்கலாம்.

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டம்பர் 1, பக். 833.
2. மேலது , பக். 835
3. மேலது, பக். 836.

கவனக்குறைவால் விடுபட்டுப்போன 'கடல்' என்ற சொல்லைச் சேர்ப்பதன் மூலம் பதிவை முழுமையாக்குவதே நோக்க மாகும்.

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அய்யா, டாக்டர் தேஷ்முக்கின் திருத்தத்தை என்னால் ஏற்றுக்கொள்ள முடியாது. ஏன் என்றால், 'தரை'' என்ற சொல்லைச் சேர்ப்பது சாலை வழி யாகக் கொண்டுசெல்லப்படும் பண்டங்களுக்கும் பயணிகளுக்கும் இறுதி வரி விதிக்கவும் மைய அரசையே அனுமதிக்கும். நமது திட்டத் தின்படி சாலை வழியாக கொண்டு செல்லப்படும் பண்டங்கள் மற்றும் பயணிகள் மீதான இறுதி வரிகள் என்பது முழுக்க முழுக்க வெவ்வேறு மாநிலங்களின் மேலுரிமைக்கு உட்பட்டதாக இருக்கும். என்னால் அவரது திருத்தத்தை ஏற்றுக்கொள்ள முடியாதிருப்பதற்குக் காரணமாகிற முதன்மையான மறுப்புரை இதுதான். அய்யா, அவர் வேறொரு சந்தர்ப்பத்தில் இதேபோன்ற ஒரு திருத்தத்தை முன் மொழிய முயன்றார் என்பதும் அவை அதனை நிராகரித்துவிட்டது என்பதும் உங்களுக்கு நினைவிருக்கும்.

இப்போது திரு.சித்வா தொடர்பாக, சென்றமுறை இச்செய்தி மீண்டும் விவாதிக்கப்பட்டது. இவ்வரிகள் மைய அரசால் விதிக்க வேண்டியவை என்றபோதிலும் அவை அனைத்தின் வரவுத் தொகை களும் வெவ்வேறு மாகாணங்களுக்கிடையில் பங்கீட்டளிக்க வேண்டி யவையாக இருக்கும் என்று நான் சொன்னேன். மைய அரசு உரிமைப் பங்கு ஏதும் கேட்காது. மாகாணங்கள் இந்த வரவுத் தொகைகளை பெற்றபிறகு அவற்றில் ஒரு பகுதியை உள்ளாட்சி அமைப்புகளுக்கு மாற்றிக்கொடுக்க விரும்பினால் அவ்வாறு செய்திட அவற்றுக்கு உரிமை உள்ளது. இந்த அரசமைப்புச் சட்டத்தில் ஓர் உள்ளாட்சி அமைப்புக்குக் கிடைக்கக்கூடிய வரிவிதிப்பு தொடர்பான எந்த வொரு செய்திக்கும் வழிவகை செய்வது முடியாத காரியம். இது மாநில அரசுக்கும் உள்ளாட்சி அமைப்புக்கும் இடைப்பட்ட பிரச் சினையே ஆகும். ஆகவே இப்போது இந்தப் பதிவைத் திருத்தம் செய்வதன் மூலமாகவோ அல்லது பட்டியல் IIக்கு மாற்றுவதன்

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டம்பர் 1, பக். 836
2. மேலது பக். 837

மூலமாகவோ மாற்றியமைக்க வாய்ப்பில்லை.

(திரு. ஆர்.கே. சித்வாவும், டாக்டர். பி.எஸ். தேஷ்முக்கும் தங்கள் திருத்தங்களை விலக்கிக் கொண்டார்கள்.)

'பட்டியல் I பதிவு 33 இல் 'இருப்புப்பாதை' என்ற சொல்லுக்குப் பிறகு ஒரு காற்புள்ளியையும், 'கடல்' என்ற சொல்லையும் நுழைக்கலாம்.''

(டாக்டர் அம்பேத்கரின் திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது. திருத்தப் பட்ட வடிவத்தில் பதிவு எண் 83 ஒன்றியப் பட்டியலில் சேர்க்கப்பட்டது.)

## பதிவு 86

(திருத்தம் எண் 54 முன்மொழியப்படவில்லை.)

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அய்யா, நான் முன்மொழிவது:

''பட்டியல் I பதிவு 86 இல் 'போதைப்பொருள் அல்லாத மருந்துகள்'' என்ற சொற்களை நீக்கலாம்''.

முன்மொழியப்பட்ட பட்டியல் போதைப்பொருள் அல்லாத மருந்துகளை பொதுப்பட்டியலில் சேர்த்தது.

★ ★ ★

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அய்யா, இந்தப் பதிவு இப்போதைக் மாகாணப் பட்டியலில் இருப்பது உண்மை தான். ஆனால் இரண்டு உண்மைகளை ஒப்புக்கொள்ளவேண்டும். எந்த மாகாணமும் இதுவரை எச்சமயத்திலும் இந்த உருப்படிகளின் மீது எவ்வரியும் விதித்ததில்லை என்பது ஒன்று. ஆகவே மாகா ணங்கள் அவற்றின் நிதிவகை நோக்கங்களுக்காக இதனைப் பயன் படுத்திக் கொண்டதில்லை. இரண்டாவதாக, இச்செய்தி பொதுப் பட்டியலுக்குரியதாகி, மையஅரசு இது குறித்துச் சட்டம் ஏதும் இயற்றி, அச்சட்டத்தில் வருவாய் ஒரு கூறாக இருக்கும் போதுகூட அந்த வருவாயானது உறுப்பு 253 கூறு(2) இன் வழிவகைகளின்படி பங்கீட்டு அளிக்கவேண்டியதாகவே இருக்கும். ஆகவே நிதித் துறை யைப் பொறுத்தவரை உண்மையில் மாகாணங்களுக்கு இழப்பேது மில்லை. அடுத்து ஆட்சிப் பரப்பு எங்கிலும் செயல்படுகிற அனைத் திந்திய மருந்துப் பொருட்கள் சட்டம் ஒன்று இருக்க வேண்டியது

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டம்பர் 1, பக். 838.
2. மேற்படி அதே நூல், பக். 839.

அவசியமாகும். போதைப்பொருள் அல்லாத மருந்துகளைப் பட்டியலில் சேர்க்காவிட்டால் இது நிகழ முடியாது. இந்த மருந்துப் பொருட்கள் தொடர்பாக மாகாணங்கள் தாங்கள் விரும்பக்கூடியவாறு வட்டாரச் சட்டம் இயற்றும் அதிகாரத்தையும் இது காப்பாற்றிக் கொடுக்கிறது.

**திரு. அவைத் தலைவர்:** டாக்டர் அம்பேத்கர் முன்மொழிந்த திருத்தத்தை நான் வாக்கெடுப்புக்கு விடுகிறேன். பிரச்சினை இதுதான்:

*(திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது. திருத்தப்பட்ட வடிவத்தில் பதிவு 86 ஒன்றியப் பட்டியலில் சேர்க்கப்பட்டது.)*

## பதிவு 86-A

[1]**திரு.எச்.வி.காமத்:** எனது திருத்தத்தில் பயன்படுத்தப்பட்ட மருத்துவ மற்றும், அறிவியல் சொல்லாட்சி தவறாகப் புரிந்து கொள்ளப்பட்டிருக்கின்றதா என்பதை யானறியேன். இந்த சொல் லாட்சி மருந்துப் பொருளியல் பற்றிய தரமான புத்தகம் எதிலும் காணப்படும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** நாம் அதிகாரம் பெற்றிருக்கிறோம். நாம் பொதுப்பட்டியலில் சேர்க்கப் போகிற பதிவு 20 இதையும் கவனத்தில் கொள்ளும்.

(திரு. எச்.வி. காமத்தின் திருத்தம் மறுதலிக்கப்பட்டது).

## பதிவு 88-A

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அமெரிக்க ஐக்கிய நாடுகளின் உச்சநீதிமன்றத்தின் அந்த 4 பக்க அச்சிட்ட தீர்ப்பை என் நண்பர் படித்துக் காட்டப்போவதில்லை என்று நம்புகிறேன். அது ஒவ்வொருவருக்கும் சுற்றுக்கு விடப்பட்டிருக்கின்றது.

**திரு. தேஷ்பந்து குப்தா:** தீர்ப்பு முழுவதும் படித்துக் காட்டப் படும் என்று என் நண்பர் ஊகித்துக் கொள்வது தவறாகும். அதன் சில பகுதிகளைப் படித்துக் காட்டத் தேவையிருந்தால் படித்துக் காட்டுவேன்

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டம்பர் 1, பக். 840
2. மேலது, பக். 841

என்பது மெய்தான். நான் எழுப்பிய வாதத்திற்குப் பொருத்தப்பாடுள்ள பகுதிகளை மட்டுமே குறிப்பிடுகிறேன். இந்த வரி இரு குறிப்பான அம்சங்களில் கூட்டாட்சி அரசமைப்பை மீறுவதாகக் காரணங்காட்டி அந்தப் பதிப்பாளர்கள் எதிர்ப்புத் தெரிவித்தார்கள் என்பதை நான் சுட்டிக்காட்ட விரும்புகிறேன்: 1. அது பதினான்காவது திருத்தத்தின் பிரிவு 1 இல் அடங்கிய உரிய நடைமுறை தொடர்பான விதிக் கூறினை மீறிப் பத்திரிகைச் சுதந்திரத்தைக் குறுக்குகிறது; 2. அதே திருத்தத்தை மீறி வரிச் சட்டங்களின் சரிநிகரான பாதுகாப்பை மேல் முறையீட்டாளர்களுக்கு மறுக்கிறது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் ஓர் ஒழுங்குப் பிரச்சினையை எழுப்புகிறேன்.

**திரு.நசிருதீன் அகமது:** ஒரே நேரத்தில் இரண்டு ஒழுங்குப் பிரச்சினைகள் இருக்கலாகாது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** என் ஒழுங்குப் பிரச்சினை தொடக்க நிலைக்குரியது: இந்தத் திருத்தத்தில் ஒப்பமிட்டவர்களில் ஒருவரான என் நண்பர் - திரு.சீத்தாராம் ஜாஜீவுக்குப் பிறகு அவருடைய பெயர் இதில் குறிப்பிடப்படுகிறது. முன்பே இத்திருத் தத்திற்கு அறிவிப்புக் கொடுத்துவிட்டநிலையில் அது ஒழுங்காக இல்லை என்று இப்பொழுது எவ்வாறு கூறமுடியும்?

**திரு.தேசபந்து குப்தா:** என் நண்பர் தன் திருத்தங்களை நூறு முறை திருத்தியிருக்கிறார்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அவர் தன் திருத் தத்திற்கு ஒரு திருத்தம் முன்மொழிவதாக இருந்தால் அது ஒழுங்காக இருக்கும்.

**திரு.தேசபந்து குப்தா:** என் நண்பர் அடிக்கடி செய்திருப்பது போன்றே என் கருத்தை மாற்றிக்கொள்ள அனைத்து உரிமையும் எனக்கு உண்டு.

**திரு. அவைத் தலைவர்:** அவர் அறிவிப்பில் ஒப்பமிட்டிருந் தாலும்கூட 88-Aக்கு ஒப்பமிட்டாரா என்று எனக்குத் தெரியவில்லை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** திரு. தேசபந்து குப்தா அவர் பெயர்.

★ ★ ★

[1]**திரு. அவைத் தலைவர்:** முதன்மையான பிரச்சினை குறித்து உறுப்பினர்கள் சொல்வதை நான் கேட்க அவரவுகிறேன். ஆனால் அதற்கு முன்பாக, வரைவுக்குழு இதனை மறுபரிசீலனை செய்யுமா என்பதை அறிய விரும்புகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இந்த அவையில் தெரிவிக்கப்பட்டவைப் போன்ற பல்வேறு கண்ணோட்டங்களையும் கேட்க விரும்புகிறோம். அய்யா, இப்போதே எந்தத் திட்டவட்டமான முடிவுக்கும் வரும் வாய்ப்பில்லை என்று அவையோ, நீங்களோ தீர்மானித்தால் பிரச்சினையை வரைவுக் குழுவுக்கே அனுப்பிவிடலாம். தெரிவிக்கப்படும் பல்வேறு கருத்துக்களையும் மனத்தில் கொண்டு அது அவைக்கு ஏற்புடைய ஏதேனும் வழியைக் கண்டறியக்கூடும்.

ஆனால் இப்போதுள்ள நிலையில் அதனை மறுவார்ப்பு செய்யமுயல்வதால் பயன் ஏதும் விளையும் என நான் கருதவில்லை. இங்கு நம்மிடம் திட்டவட்டமான திருத்தங்கள் உள்ளன. ஒன்று இங்கே என் நண்பருடையது; இன்னொன்று என் நண்பர் திரு. ஜுன்ஜுன் வாலாவுடையது.

**திரு. அவைத் தலைவர்:** உண்மையில் இரு பிரச்சினைகளைப் பரிசீலிக்க வேண்டும். ஒன்று: நாம் ஏற்கனவே நிறைவேற்றியுள்ள முந்தைய உறுப்பைக் கருத்தில்கொண்டால், திரு.கோயங்கா முன்மொழிய எண்ணியுள்ள திருத்தம் ஒழுங்கானதா? இரண்டாவது...

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அய்யா, ஏதேனும் ஒன்று அதிகார வரம்பு கடந்ததாக இருக்குமா, அல்லது ஏதேனும் ஒன்று அதிகார வரம்பு கடந்ததாக இருக்காதா என்ற அடிப்படையில் இந்தப் பிரச்சினைக்கு முடிவுகட்ட முடியாது என்பேன். இதனை முடிவு செய்ய இந்த அவைக்கு அருகதையில்லை. இது நீதித்துறைச் சார்ந்த பிரச்சினையாகும். அவை முடிவு செய்ய வேண்டியதெல்லாம், பட்டியல் II,IIIஇல் சேர்க்கப்படும் பல்வேறு பதிவுகளிலிருந்தும் செய்தித்தாள்களுக்குப் பாதுகாப்பளிக்க விரும்புகிறோமா என்பதும், இந்தப் பதிவு களிலிருந்து அவற்றுக்கு விலக்கேதும் அளிக்க விரும்பினால் எந்த அளவிற்கு நாம் உறுதியளிக்க வேண்டும் என்பதுமேயாகும்.

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டம்பர் 1, பக்.843 - 844.

ஏமாற்றுக்கும் மோசடிக்கும் இடமே விடாத ஒரு நிலையை ஏற்படுத்தியுள்ளோம் என்று இங்கேயே, இப்போதே பத்திரிகையாளர் எவருக்கும் உறுதிமொழி ஏதும் வழங்க நம்மால் முடியாது. நாம் அந்த உறுதிமொழியைத் தர முடியாது. ஆகவே, பல்வேறு பதிவுகளின் செயல் பாட்டிலிருந்தும் செய்திப்பத்திரிகைளுக்கு நாம் பாதுகாப்பு வழங்க விரும்புகிறோமா என்ற குறிப்பான பிரச்சினைக்கு முடிவு கட்டுவதே மேல். அதுதான் முதன்மையான கேள்வி.

★ ★ ★

[1]**திரு. அவைத் தலைவர்:** இது உறுப்பு 13ஐ மீறுவதாக இல்லையா என்ற பிரச்சினையையும் நீங்கள் பரிசீலிக்க வேண்டும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** இதுகுறித்து சில கருத்துகள் நமக்கு உள்ளன. நீங்கள் கேட்க அணியமாயிருந்தால் நான் அவற்றைப் பணிந்துரைப்பேன்.

★ ★ ★

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அய்யா, எடுத்த எடுப்பிலயே, ஒழுங்குப் பிரச்சினை என்ன என்பதை, அல்லது நான் எவ்வாறு அதனைப் புரிந்து கொண்டிருக்கிறேன் என்பதைக் கூற விரும்புகிறேன்; ஏனென்றால் என்னிடம் தவறு இருக்குமானால் தொடக்கத்திலேயே சரிசெய்துகொள்ள விரும்புகிறேன். ஒழுங்குப் பிரச்சினை இதுவாகத்தான் இருக்குமெனத் தோன்றுகிறது; அடிப்படை உரிமைகளில் ஒருபகுதியும், எல்லாக் குடிமக்களுக்கும் பேச்சுரிமை அல்லது கருத்து வெளியீட்டு உரிமை இருக்கும் என்று கூறுவது மாகிய உறுப்பு 13ஐ இந்தப் பேரவை நிறைவேற்றியிருக்கிறது என்ற உண்மையைக் கருத்தில் கொண்டால் உறுப்பு 13 வழங்கும் அடிப் படை உரிமையை வெட்டிக் குறைக்கும்படியான ஓர் உறுப்பை நிறை வேற்ற இந்த அவைக்கு உரிமையுண்டா? நாம் இப்போது பரிசீலிக்க வேண்டிய பிரச்சினை இதுதான் என்று எடுத்துக்கொள்கிறேன்.

பேச்சுரிமைக்கு வரம்பிடுகின்ற விளைவைத் தரக்கூடிய எந்த முன்மொழிவையும் இந்த அவை இப்போது பரிசீலிக்க உரிமை யில்லை என்ற கருத்துக்கு ஆதரவாக அமெரிக்க ஐக்கிய நாடுகளின்

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டம்பர் 1, பக். 845.
2. மேற்படி அதே நூல், பக். 848-51.

உச்சநீதிமன்றத் தீர்ப்பு ஒன்று எடுத்துக்காட்டப்பட்டுள்ளது. அத் தீர்ப்பை நான் முழுவதுமாகப் படிக்கவில்லை. அதன் சில பகுதி களை மட்டுமே படித்துள்ளேன். பத்திரிக்கைத் துறைக்கு விதிக்கப் படும் எந்த வரியும் பத்திரிக்கைச் சுதந்திரத்தை குறுக்கிவிடுகிறது - நான் அமெரிக்காவின் மொழிநடையை பயன்படுத்துகிறேன் - என்ற உண்மை யைக் கருத்தில் கொண்டால் அது அதிகார வரம்பை மீறுவ தாகும் என்று அத்தீர்ப்பில் சொல்லப்பட்டுள்ளது.

**திரு. தேசபந்து குப்தா:** வருமான வரி நீங்கலாக. இது தீர்ப் பிலேயே கூறப்பட்டுள்ளது.

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** அய்யா, இப்போது கேள்விக்குள்ளாக்கப்பட்ட குறிப்பிட்ட வரியின் தன்மை என்ன என்பது அந்தக் குறிப்பான வழக்கின் விவரங்களிலிருந்து தெளிவாக வில்லை. கேள்விக்குள்ளாக்கப்பட்ட அந்தக் குறிப்பிட்ட வரியின் கடுமை குறித்தும் தெளிவாகத் தெரியவில்லை. வரிவிதிப்பு ஒருபுற மிருக்க, அந்த வரி அதிகாரவரம்பு மீறியதா இல்லையா என்பதைப் பரிசீலிக்கையில் அதன் கடுமையையும் ஒரு கூறாகச் சேர்த்துக் கொள்ள வேண்டும் எனக் கருதுகிறேன். முக்கியமான இந்த உண்மை இத் தீர்ப்பில் குறிப்பிடப்படவே இல்லை என்பதை முன்பே சொன்னேன். ஆகவே நான் அந்தத் தீர்பை ஏற்றுக்கொள்ள அணியமாயில்லை.

நான் வேறு வாதங்களை முன்வைக்கிறேன். இவை சாரமுள் ளவை, எவ்வித குற்றவிமர்சனத்திற்கும் இடமளிக்காதவை என்று நான் கருதுகிறேன். நான் பணிந்துரைக்க விரும்பும் முதல் கூறு இது தான். அமெரிக்க ஐக்கிய நாடுகளின் அரசமைப்புச் சட்டத்தில் அரசமைப்பு வழிப்பட்ட உத்தரவாதங்கள் வழங்கப்பட்டிருப்பினும் இந்த அடிப்படை உரிமைகள் அறுதியானவையல்ல என்றும் அர சமைப்புச் சட்டத்தில் பயன்படுத்தப்பட்டுள்ள மொழிநடை எதுவா யினும், அந்த அடிப்படை உரிமைகள் மீது நியாயமான கட்டுத் தளைகள் விதிக்க அமெரிக்க நாடாளுமன்றமாகிய காங்கிரசுக்கு உரிமையுள்ளது என்றும் அமெரிக்க உச்சநீதிமன்றமே தீர்ப்பளித்துள் ளது. உண்மையில் வரைவு அரசமைப்புச் சட்டத்தை இந்த அவை பரிசீலனைக்கு எடுத்துக்கொண்டு ஆவன செய்வோம் என்ற என் முன்மொழிவுக்கு ஆதரவாக நான் ஆற்றிய தொடக்க உரையில் ஒரு கணிசமான பகுதியை இந்தப் பிரச்சினை குறித்த பரிசீலனைக்காக ஓதுக்கினேன் என்பதை நான் அவைக்கு நினைவூட்டலாம்; ஏனென்றால்

நமது அடிப்படை உரிமைகள், உறுப்பு 13க்குப் பிறகு வரும் (2), (3), (4), (5) ஆகியவற்றில் பட்டியலிடப்பட்டுள்ள பல்வேறு வரம்புத் தடைகளுக்கும் உள்ளாக்கப்பட்டிருப்பதால் அவற்றுக்கு மதிப்பே இல்லை என்று ஏடுகளில் வந்துள்ள, மற்றவர்கள் சொல்லியுள்ள சில விமர் சனங்களை நான் கவனித்தேன். இப்படி விமர்சிப்பவர்களின்பால் நாம் ஓரளவு மதிப்பும் கவனமும் செலுத்தத்தான் வேண்டும்.

அந்த விமர்சனங்களுக்கு விடை சொல்லும் பொருட்டு இது தொடர்பாக உச்சநீதிமன்றத்தின் முடிவுகளை சற்றே சிரமம் எடுத்துப் பரிசீலிக்க முற்பட்டேன். நான் இப்படிச் செய்ய காரணம் என்னவென்றால் அடிப்படை உரிமைகள் என்று அழைக்கப்பட்ட அரசமைப்பு வழிப்பட்ட உத்தரவாதங்கள் அமெரிக்க அரசமைப்புச் சட்டத்தில் நிபந்தனைகள் ஏதுமில்லாமல் அறுதியான முறையில் தெளிந்துரைக்கப்பட்டன என்பதைக் கருத்தில் கொண்டு அந்த வழி வகைக்கு வரம்பிட அமெரிக்க ஐக்கிய நாடுகளின் உச்சநீதிமன்றத் திற்கு உரிமையில்லாது போயிருக்கலாம் என்று நானே ஒரு சமயத் தில் கருதினேன். ஆனால் அரசமைப்புச்சட்டத்தை வகுக்கையில் நாம் மேற்கொண்ட அதே போக்கைத்தான் அமெரிக்க உச்சநீதி மன்றமும் மேற்கொண்டது என்பதை அறிந்து பெரிதும் வியப்புற் றேன்; அதாவது அடிப்படை உரிமைகள் எவ்வளவுதான் அடிப்படை யானவை என்றாலும் அவை அறுதி உரிமைகளாக இருக்கமுடியாது என்ற போக்குதான் அது. அவ்வுரிமைகள் குறிப்பிட்ட சில வரம்புத் தடைகளுக்கு உள்ளாகத்தான் வேண்டும்.

இப்போது அவை எனக்கு அனுமதி அளிக்குமானால் நான் எனது உரையிலிருந்து ஒரே ஒரு பகுதியை மட்டும் மேற்கோளாகக் காட்டுவேன். நான் சொன்னது இதுதான்:

> ''கிட்லோ - எதிர் - நியூயார்க் என்ற வழக்கில் வன்முறை வழிப்பட்ட மாற்றத்தை ஏற்படுத்தும் நோக்கமுடைய பேச்சுகளைத் தண்டிப்பதற்கென்று சொல்லப்பட்ட நியூயார்க்கின் 'குற்றஅராஜக'ச்சட்டம் அரசமைப்பின்படி செல்லத்தக்கதா என்பதே பிரச்சினையாக இருந்தது. இவ்வழக்கில் உச்ச நீதி மன்றம் கூறியதாவது:
>
> 'அரசமைப்புச் சட்டத்தின் பாதுகாப்பைப் பெற்றுள்ள பேச்சுரிமையும் ஏட் டுரிமையும் பொறுப்பற்ற முறையில் என்ன வேண்டுமானாலும் பேசுவதற்கோ அச்சிட்டு வெளியிடுவதற்கோ அறுதிஉரிமை வழங்குவது இல்லை, முடிந்த வாறெல்லாம் மொழியைப் பயன்படுத்துவதற்குக் காப்புரிமை தரும் கட்டுத் தளையற்ற உரிமம் தருவதுமில்லை, இந்த உரிமையைத் தவறாகப் பயன் படுத்துகிறவர்களைத் தண்டிக்கவிடாமல் தடுப்பதுமில்லை என்பது நெடுங் காலம் முன்பே நிலைநாட்டப் பெற்றுவிட்ட அடிப்படைக் கோட்பாடாகும்.''

நான் வேறுபல வழக்குகளையும் எடுத்துக்காட்டினேன். என் வாதமெல்லாம் இதுதான்: அமெரிக்காவிலேயேகூட அடிப்படை உரிமைகளின் மீது சில வரம்புத்தடைகள் இருக்க வேண்டும் என்பது ஏற்றுக்கொள்ளப்பட்ட கொள்கைகள்தான். இதுகுறித்து கேள்விக்கே இடமில்லை என்பதே என் கருத்து. ஆகவே நமது பதிவு விளம்பரங்கள் மீதான வரிபற்றிப் பேசுகிற அளவில் இப்போதைக்கு நான் திருத் தங்களுக்குள் நுழையப் போவதில்லை. இப்பதிவின் அடிப்படையில் மாகாண அரசுகள் நடவடிக்கை எடுப்பது ஏட்டுரிமைக்கு ஒரு வகை யான வரம்புத்தடையாகிவிடும் என்ற காரணத்தால் இந்த அவையின் அதிகார வரம்பை மீறியதாகும் என்று சொல்லி அதைக் கேள்விக் குள்ளாக்க முடியாது என்பது என் பணிவான கருத்து. ‘விளம்பரங் கள்’ என்ற தலைப்பில் விதிக்கப்படும் எந்த வரியும் உறுப்பு 13க்கு முரணமாக இருக்கும் என்ற காரணத்தால் அது அதிகார வரம்பு மீற லாகும் என்ற பொருள் விளக்கத்தை நான் அடியோடு ஏற்க மறுக் கிறேன்.

நான் பணிவுடன் தெரிவித்துக் கொள்ள விரும்புவது என்ன வென்றால், தெளிவாக எடுத்துரைக்க கூடியதும், நியாயமாகத் தோன்றக் கூடியதும், ஏற்றுக்கொள்ளக் கூடியதுமான கொள்கை இதுதான். ஒரு செய்தித் தாளுக்குக் கடுமையானதொரு வரி விதிக்கப்பட்டு இதன் விளைவாக அது அடியோடு துடைத்தெறியப்படுமானால், வரி விதிப்பு அதிகாரத்தை இப்படிச் செலுத்துவது அதிகார வரம்புமீறலாக அமையும். ஏனென்றால் உறுப்பு 13 உத்தரவாதம் செய்துள்ள பேச்சுரிமையை அது அறவே துடைத்தெறிவதாக இருக்கும். விளம் பரங்களுக்கான வரி விதிப்பு நியாயமானதாக இல்லாமல், பாகுபாடு காட்டுவதாக இருந்தால், அதாவது, அது செய்திப் பத்திரிகைகளுக்கு மட்டும் உரியதாக இருந்து மற்ற எல்லா விளம்பர வடிவங்களுக்கும் விலக்களிக்கப்படுகிற அளவில் இருந்தால் அது உறுப்பு 15ஐ மீறுவ தாகுமென்பதை என்னால் புரிந்துகொள்ள முடியும். உறுப்பு 15இன்படி அனைவருக்கும் சரிநிகரான பாதுகாப்பளிக்க எண்ணியுள்ளோம். ஆகவே நான் பணிந்து தெரிவிப்பது என்னவென்றால்: செய்தித் தாள் களையும், பேச்சு உரிமைகளையும் பாதிக்கின்ற எதுவும் அதிகார வரம்பு மீறலாகி விடும் என்று கூறும் அளவிற்குச் செல்கிற எந்த வாதத்தையும் நான் ஏற்றுக்கொள்ள அணியமாயில்லை என்று சொல்ல உரிமை எடுத்துக் கொள்கிறேன்; இந்த அவையும் அதை ஏற்றுக் கொள்ளாதென நம்புகிறேன்.

இப்போது நான் அந்த மற்றொருப் பிரச்சினைக்கு வருகிறேன். குறிப்பிட்ட சில மாகாணங்களில் முன்னுக்கு வந்துள்ள சில பல நிலைமைகளைக் கருத்தில் கொண்டு செய்தித்தாள்கள் தொடர்பான இந்தக் குறிப்பிட்ட பதிவை பட்டியல்Iஇலிருந்து பட்டியல் IIக்கு மாற்றுவது அல்லது பட்டியல்III இல் சேர்ப்பது தேவையாயிருக்கலாம் என்பது உண்மைதான். இது அரசமைப்புச் சட்டப் பிரச்சினையன்று; இது செயற் கொள்கைப் பிரச்சினையும், நம்பிக்கைப் பிரச்சினையுமே ஆகும்; அதாவது, நீங்கள் மையஅரசிடம் கூடுதல் நம்பிக்கை வைக்க அணியமாய் இருக்கிறீர்களா அல்லது ஒரு மாகாணம் செய்யக்கூடிய எந்தவொரு பிழையையும் சரி செய்ய மைய அரசுக்கு உரிமையும் அதிகாரமும் கொடுத்து வைக்க விரும்பகிறீர்களாக என்பது விவா தத்திற்குரிய பிரச்சினைதான் என்பதில் ஐயமில்லை. இதுபற்றித்தான் நாம் விவாதித்து வருகிறோம். குறிப்பிட்ட பதிவு ஏதும் பட்டியல் Iஇல் இருந்து வர வேண்டுமா, ஒரு பகுதி பட்டியல் Iஇலும் ஒரு பகுதி பட்டியல் IIஇலும் இருக்க வேண்டுமா அல்லது பட்டியல் IIIஇல் இடம்பெற வேண்டுமா என்று விவாதித்து வருகிறோம்.

இது குறித்து முடிவு எடுக்க அவைக்கு முழு உரிமையுண்டு. ஏனென்றால் இப்பிரச்சினையில் அவை முழு சுதந்திரத்தைப் பெற்றி ருக்கிறது; உறுப்பு 13ன் காரணமாக அவையின் கை கட்டப்பட் டிருக்கிறது என்றும், செய்தித் தாள்கள் மீது எவ்வித வரம்புத் தடை யும் விதிக்க அதனால் ஒன்றும் செய்ய முடியாது என்றும் எவரும் சொல்லப்போவதில்லை. நான் இந்த வாதத்தை அடியோடு மறுதலிக் கிறேன்.

அய்யா, நான் இப்போது பல்வேறு திருத்தங்கள் பற்றியும் பேச விரும்புகிறேன். நீங்கள் என்னை அனுமதித்தால் அவற்றைப் பற்றிப் பேசுகிறேன். ஏனென்றால் எனக்குப் பிறகு பேசக் கூடியவர்கள் நான் சொல்வதை விமர்சிக்கலாம். செய்தித்தாள்களில் சொந்தநலன் கொண்ட நண்பர்கள் உண்மையில் மாகாணங்கள் விதிக்கக்கூடிய எவ்வகையான வரியிலிருந்தும் முழுக் காப்புரிமை பெற முயல்வதாக எனக்குத் தோன்றுகிறது. என் நண்பர் திரு.கோயங்காவும் வேறு பலரும் சுமார் ஐம்பது அறுபது பேர் முன்மொழிந்துள்ள முதல் திருத்தம் ஒன்றியப் பட்டியலாகிய பட்டியல் Iக்கு இதை மாற்ற வேண்டும் என்பதே. அவர்கள் இதைச் செய்கையில் நாமாகச் செய்திராத எதையோ செய்திருக்கின்றனர். நமது செய்தித்தாள் பதிவு வரிவிதிப்புடன் தொடர்புடையதல்ல. பட்டியல் Iஇலும், பட்டியல்

IIஇலுமுள்ள ஏற்பாட்டை உன்னிப்பாகக் கவனித் திருக்கிற உறுப் பினர்கள் பதிவுகளை நாம் இரு பகுதிகளாக, அதாவது முழுக்க முழுக்க சட்டமியற்றுவதற்குரிய பதிவுகளாகவும், வரி விதிப்பிற்குரிய பதிவு களாகவும் பிரித்திருக்கிறோம் என்பதை உணர்வார்கள். செய்தித் தாள்கள் பட்டியல் IIIஇல் குறிப்பிடப்பட்டபோதிலும் சட்டமியற்று வதற்குரிய பதிவுக்கிடையில்தான் குறிப்பிடப்படுகின்றன. இப்போது என் நண்பர் திரு. கோயங்கா முன்மொழிந்துள்ள திருத்தம் அவரது கண்ணோட்டத்தில் பெருங்கேடு செய்துள்ளது; அதாவது பட்டியல் Iஇல் வரிவிதிப்பு தொடர்பான பகுதியில் செய்தித்தாள்களைச் சேர்த் துள்ளார். இதன் பொருள் என்னவென்றால், செய்தித் தாள்கள் மீது வரிவிதிக்க மைய அரசுக்கு உரிமையிருக்கும் என்பதே. (கேளுங்கள், கேளுங்கள்). எனக்குச் செய்தித்தாள்களைப் பிடிக்காது. அவற்றுக்குத் தீங்கிழைப் பதிலோ பாதுகாப்பளிப்பதிலோ எனக்கு அக்கறையில்லை. இந்த அவைதான் விரும்புவதைச் செய்ய அதன் கையில் பிரச்சினை முழுவதையும் ஒப்படைத்திட அணியமாய் இருக்கிறேன்.

என் நண்பர் திரு. ஜுன்ஜுன்வாலா முன்மொழிந்த இரண் டாவது திருத்தம் என்ன செய்கிறது? செய்தித்தாள்களை பட்டியல் Iக்கு மாற்றிவிட்ட போதிலும் விற்பனைக்குரிய பண்டங்கள் என்ற முறையில் அவை இப்போதும் பட்டியல் IIஇல் இருந்துவரும் என்று அவர் எண்ணுகிறார், ஏனென்றால் அந்தப்பட்டியலிலுள்ள பதிவு மிகப் பரந்த ஒன்றாகும். பண்டங்கள் என்ற முறையில் செய்தித்தாள் களையும் அது உள்ளடக்கும். ஆகவே திரு.கோயங்காவின் திருத் தத்தை ஏற்றுக்கொள்வதால் மட்டும் எந்தவொரு நோக்கமும் நிறை வேறாது என அவர் கருதுகிறார். ஏனென்றால் பண்டங்களின் விற்பனை வரிகள் தொடர்பான பதிவின் கீழ் அவை மாகாணங்கள் வரி விதிப் புக்குட்பட்டவையாக இருக்கும். ஆகவே அவர் விற்பனை வரிகள் சட்டத்திலிருந்து செய்தித் தாள்களை விலக்கிட தனது திருத்தத்தை முன்மொழிந்துள்ளார்.

இப்போது பரிசீலனைக்குரிய கேள்வி என்னவென்றால், மாகா ணங்கள் தமது வரிவிதிப்பின் அடித்தளத்தில் நான் அதனை இப்படிக் குறிப்பிடலாம், ஒரு முக்கியப் பகுதியாக அமைகிற செய்தித்தாள் களை மாகாண வரி விதிப்புத் துறையிலிருந்து அறவே நீக்கிட வேண்டும் என்பதை ஏற்றுக்கொள்ளுமா என்பதே. இது பரிசீலிக்கப் பட வேண்டிய ஒன்றாகும். அய்யா, இது நிதி தொடர்பானதாக இருப்பதால், நிதியமைச்சகத்துடனோ மாகாணங்களின் நிதியமைச்

சர்களுடனோ கலந்துபேசாமல் வரைவுக்குழு தானே பொறுப்பை ஏற்றுக்கொள்ள அணியாமல் இருக்கும் என்று நான் கருதவில்லை. முழுக்க முழுக்கச் சட்டமியற்றுவதற்குரிய பதிவுகளைப் பொறுத்த வரை நாம் பெருமளவில் பொறுப்பேற்றுக் கொண்டுள்ளோம். பிரச்சினை நிதி தொடர்பானதாக இருக்கும்போது, எந்நிலையிலும் மைய நிதியமைச்சகத்தையும் அதே போல் பல்வேறு மாகாணங் களின் நிதியமைச்சர்களையும் நாம் கலந்து பேசவேண்டும் என்பதை ஒரு வகையான நிலைத்த மரபாகக் கொண்டுள்ளோம்.

ஆக, இவையே இந்தத் திருத்தங்களில் அடங்கியுள்ள இடர்ப் பாடுகளாகும். நீங்கள் செய்தித் தாள்கள் குறித்த பதிவை ஒன்றியப் பட்டியலுக்கு மாற்றுவீர்களானால் மைய அரசு செய்தித்தாள்களுக்கு செய்பொருள் உற்பத்தியாளர் என்ற முறையில் வரி விதிக்கலாமா என்பதை யானறியேன்; ஏனென்றால் இந்தியாவின் எப்பகுதியிலும் உற்பத்தி செய்யப்படும் பண்டங்கள் மீது சுங்கத் தீர்வை விதிக்க மைய அரசுக்கு உரிமை உண்டு. ஆகவே செய்தித் தாள்கள் வரி விதிப் பிலிருந்து தப்புவது கடினம் என்றே எனக்குத் தோன்றுகிறது. இவை எல்லாவற்றையும் பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ள வேண்டியிருக் கிறது. அதாவது இவை அப்பாற்றபட்ட செய்திகள் என்றாலும் விவா தத்தில் பங்கெடுத்துக் கொள்ள விரும்பும் உறுப்பினர் ஒவ்வொரு வரும் இடர்ப்பாடுகள் என்ன என்பதை அறிந்துகொள்ள வேண்டும் என்று நான் கருதுவதால் இக்கட்டத்தில் இவற்றை எடுத்துச் சொல்லி யிருக்கிறேன். நாம் உறுப்பு 13ஐ நிறைவேற்றியுள்ளோம் என்ற போதிலும் எவ்வகையான வரம்புத் தடை குறித்தும் அவை பரிசீலிக்கத் தடை ஒன்றுமில்லை என்பதுதான் இத்தருணத்தில் என் கருத்துக்குரிய தாகிறது. அவையின் தடை ஒன்றுமில்லை. ஏற்புக்காக முன்வைக்கப் படும் முன்மொழிவு மிகவும் ஆபத்தான ஒன்று. அது வரி விதிப் பையே அடியோடு ஒழித்துவிடும். உறுப்பு 24கூட இடம் பெற முடி யாமற் போகலாம். வேறு பல சிக்கல்களும் தலைதூக்கும். ஆகவே, அடிப்படை உரிமைகளுக்கும் உத்தரவாதம் அளிக்கப்பட்டிருப்பதால் வரி விதிப்பு அதிகாரத்தைச் செயல்படுத்தக்கூடாது, ஏனென்றால் அது அடிப்படை உரிமைகளை வரம்புக்கு உட்படுத்துவதிலோ அழிப் பதிலோ போய்முடியும் என்று நீங்கள் சொல்வீர்களானால், இது ரொம்பப் பெரிய கருத்து. எவரும் இதனை ஒருபோதும் ஏற்றுக் கொள்வார்கள் என்று நான் நினைக்கவில்லை.

★ ★ ★

[1]*பண்டித தாகூர் தாஸ் பர்கவா:* இவ்வுரிமை அறவே அழிக்கப் பட்டு விடவில்லை என்றாலும், குறிப்பிடத்தக்க அளவுக்குக் குறுக்கப் படுவதாகவோ , குறைக்கப்படுவதாகவோ கொண்டால், அதனை இது பார்த்துக் கொள்ளாதா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:* எது அறிவுக்குகந்தது என்பதை நீதிமன்றம் தீர்மானிக்கும்.

*திரு. அல்லாடி கிருஷ்ணசாமி அய்யர்:* என் உரையுடன் கூடுதலாகச் சொல்ல எதுவுமில்லை.

(இந்நிலையில் திரு. தேஷ்பந்து குப்தா பேச எழுந்தார்.)

*திரு. அவைத் தலைவர்:* இதைப் போன்ற ஒரு பிரச்சினையில் பதிலளிக்க உரிமை ஏதும் இருப்பதாக நான் கருதவில்லை.

*திரு.தேஷ்பந்து குப்தா:* இது ஓர் ஒழுங்குப் பிரச்சினை; குழப்பம் உண்டாக்கி இருப்பதாகத் தோன்றும் ஓரிரு கூறுகளைத் தெளிவாக்க விரும்புகிறேன்.

*திரு. அவைத் தலைவர்:* வேண்டாம். பதிலளிக்க உங்களுக்கு உரிமை உண்டா இல்லையா என்பதுதான் கேள்வி.

*மதிப்பிற்குரிய உறுப்பினர்:* மதிப்பிற்குரிய உறுப்பினர் ஒருவருக்கு பதிலளிக்க உரிமை இல்லை என அவைத் தலைவர் ஏற்கனவே சொல்லிவிட்டார்.

*திரு. தேஷ்பந்து குப்தா:* அய்யா, சில வாதங்கள் எழுப்பப் பட்டிருப்பதால் இவற்றை விளக்கும்படி உங்களைக் கேட்டுக்கொள் கிறேன். குறிப்பாக ஏனென்றால் திரு.அல்லாடி கிருஷ்ணசாமி அய்யர் தம் வாதங்களை எழுப்பிய பின் இப்பக்கத்திலிருந்து எவரும் பேச வில்லை.

*திரு. அவைத் தலைவர்:* உங்கள் பக்கத்திலிருந்தும் உங்கள் கண்ணோட்டத்திலிருந்தும் அதிகமானவர்கள் பேசியதாக நினைக் கிறேன்.

---

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டம்பர் 1, பக்.859.

எழுப்பப்பட்டிருக்கிற ஒழுங்குப் பிரச்சினையைப் புரிந்து கொண்டிருக்கிறேன். இதை நான் பரிசீலிக்க வேண்டும். நான் எனது தீர்ப்பைப் பின்னர் வழங்குவேன். ஆனால் இதற்கிடையே டாக்டர் அம்பேத்கர் அவரே எழுப்பியிருக்கிற மற்றொரு வாதத்தைக் கருதிப் பார்க்கும்படி கேட்டுக் கொள்கிறேன். ஒழுங்கு மீறப்படவில்லை என்று நான் தீர்ப்பளிப்பதாகக் கொண்டால், திரு கோயங்கா முன் மொழிவதற்கோ திரு. ஜுன்ஜுன்வாலா திருத்துவதற்கோ முற்பட்டுள்ள வடிவில் அதனை வைத்துக் கொள்வீர்களா என்ற வினாவிற்கும் நிறைகுறை சார்ந்து விடையளிக்க டாக்டர் அம்பேத்கர் அணியமாய் இருப்பார் என எதிர்பார்க்கிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அந்நிலையில் அவர்கள் திருத்தத்தை விலக்கிக் கொள்ள வேண்டும்.

**திரு. தேசபந்து குப்தா:** திருத்தம் முன்மொழியப்படவில்லை. திருத்தத்தை முன்மொழிவதற்கு நான் எதிர்ப்புத் தெரிவித்தேன்.

**திரு. அவைத் தலைவர்:** நான் என் தீர்ப்பைப் பின்னர் வழங்குவேன். நாம் இப்பொழுது ஏனைய கூறுகளை எடுத்துக்கொள்வோம். சில புதிய கூறுகள் முன்மொழியப்பட்டிருக்கின்றன. அச்சிட்ட பட்டியலில் சில உள்ளன. நாம் அதற்குச் செல்வதற்கு முன் ஏனைய பதிவுகளில் நுழைந்து பார்ப்போம்.

## பதிவு 91

[1]**திரு. நசிருதீன் அகமது:** நான் திருத்தத்தை முன்மொழிய மாட்டேன்; ஆனால் அப்பதிவைப் பற்றியே பேசுவேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** ஏன் குழந்தைக்காக பாடக்கூடாது? பாடல் மட்டும் ஏன் கூடாது? நீங்கள் திருத்தத்தை முன்மொழிந்து உரையாற்றலாம்.

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** திரு. அவைத் தலைவர் அவர்களே, என் நண்பர் சர்தார் ஹுக்கம் சிங் எழுப்பியுள்ள மறுப்பின் தொடர்பாக நான் முன்மொழிகிறேன். பதிவு 91 இன் நோக்கம் என்ன என்பதை அவர் உணர்ந்திருப்பதாக நான் கருத

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டம்பர் 1, பக். 854.
2. மேற்படி அதே நூல், பக். 856-57.

வில்லை. ஆகவே பட்டியலில் 91இன் நோக்கம் என்ன என்பதைத் தெள்ளத் தெளிவாக எடுத்துரைக்க விரும்புகிறேன். உண்மையில் பட்டியல் Iஇன் எல்லை அல்லது வீச்சை வரையறுக்க வேண்டும் என்பதே அது. நாம் இப்பிரச்சினையைச் சமாளிப்பதற்காக, அதாவது பட்டியல் II மற்றும் IIIஇன் வீச்செல்லையை வரையறுப்பதற்காக, பதிவு 67 போன்ற ஒன்றைச் சேர்த்திருக்கலாம் எனக் கருதுகிறேன். அது பின்வருமாறு கூறுகிறது:

> ''பட்டியல் II அல்லது IIIஇல் சேர்க்கப்படாத எதுவும் பட்டியல் Iஇல் சேருவதாகக் கருதப்படும்.''

உண்மையில் அதுதான் இதன் நோக்கமாகும். இது இரு வேறு வழிகளில் பயன்பட்டிருக்கலாம். பதிவு 91 போன்ற ஒன்றை பட்டியல் Iஇல் சேர்க்கச் செய்திருக்கலாம், அல்லது 'பட்டியல்II அல்லது III இல் சேர்க்கப்படாத எதுவும் பட்டியல்Iஇல் சேரும்' என்று நான் முன்மொழிந்திருப்பது போன்ற ஒரு பதிவை ஏற்றுக் கொண்டிருக்கலாம். இதுதான் அதன் நோக்கம். ஆனால் இப்படி ஒரு பதிவு தேவை. இதில் கேள்விக்கு இடமில்லை. இப்போது நான் அந்த மற்றொரு மறுப்புரைக்கு வருகிறேன். இது வெளிப்படையாக அல்லவென்றாலும் குசுகுசுப் பேச்சாகவாவது திரும்ப திரும்பச் சொல்லப்பட்டுள்ளது. உள்ளபடியே நம்மிடம் உறுப்பு 233 போன்ற ஒன்று இருக்கும்போது பட்டியல்Iஇல் 91 பதிவுகளை வைத்துக்கொண்டிருப்பது ஏன் என்பதே அந்த மறுப்புரை. ''பொதுப்பட்டியலிலோ மாநிலப் பட்டியலிலோ சேர்க்கப்படாத எப்பொருள் குறித்தும் எச்சட்டமும் இயற்றிட நாடாளுமன்றத்துக்குத் தனி அதிகாரம் உள்ளது'' என்னும் உறுப்பு 223 எஞ்சிய அதிகார உறுப்பு என்றழைக்கப்படுகிறது. பட்டியல்IIஅல்லது பட்டியல்IIIஇல் சேர்க்கப்படாத எதுவும் அரசமைப்புச் சட்டத்தின் குறிப்பானதோர் உறுப்பினால் மைய அரசிடம் கையளிக்கப்படும் நிலையில் நாம் பட்டியல்Iஇல் குறித்துரைத்திருக்கும் இந்த இனங்களைப் பட்டியலிடத் தேவையில்லை என்ற கருத்தைக் கோட்பாட்டளவில் ஏற்றுக்கொள்ளவே செய்கிறேன். இப்படிச் செய்வதற்கு காரணம் அரசமைப்புப் பேரவையின் முயற்சிகள் தொடங்கிய போதிருந்த இந்திய சமஸ்தானங்களும் மைய அரசின் சட்டமியற்றும் அதிகாரங்கள் என்ன என்பதை அறிவதில் குறியாக இருந்தார்கள். இவற்றை அவர்கள் திட்டவட்டமாகவும், தீர்க்கமாகவும் தெரிந்து கொள்ள விரும்பினார்கள்; எஞ்சிய அதிகாரங்கள் மட்டுமே மைய அரசுக்கு இருக்கும் என்று சொல்வதால் அவர்கள் நிறைவடையப் போவதில்லை. மாகாணங்களின்

அச்சங்களையும் இந்திய சமஸ்தானங்களின் அச்சங்களையும் போக்கு வதற்காகவே "எஞ்சிய அதிகாரங்கள்'' என்ற அடையாளச் சொற் றொடரில் சேர்க்கப்பட்டிருப்பது என்ன என்பதைக் குறிப்பிட்டுச் சொல்ல வேண்டியதாயிற்று. இந்தக் காரணத்தால் நமக்கு உறுப்பு 233 இருந்தபோதிலும் நாம் இம்முயற்சியை மேற்கொள்ள வேண்டி யிருந்தது.

நமது அரசமைப்புச் சட்டத்தைப் பொறுத்தவரை இதில் அவ்வளவு கேலிக்குரியது ஒன்றுமில்லை என்றும் நான் குறிப்பிட லாம். மைய அரசின் அதிகாரங்களைப் பட்டியலிடுவது கூட்டாட்சி அரசமைப்புகள் அனைத்திலும், எஞ்சிய அதிகாரங்களை மைய அரசுக்கு வழங்கியுள்ள கூட்டாட்சி அமைப்புகளிலும் கூட, வழக்கில் உள்ள நடைமுறைதான் என்பதே காரணம். கனடா நாட்டு அர சமைப்புச் சட்டத்தை எடுத்துக்காட்டாகக் கொள்வோம். இந்திய அரசமைப்புச் சட்டத்தைப் போலவே கனடா நாட்டு அரசமைப்புச் சட்டமும் எஞ்சிய அதிகாரங்கள் என்கிறவற்றைக் கனடிய நாடாளு மன்றத்துக்கு வழங்குகிறது. இருந்தாலும் கனடிய அரசமைப்பு உறுப்பு 99ல் கனடிய நாடாளுமன்றம் இவையிவை குறித்துச் சட்டமியற்ற லாம் என்று குறிப்பிட்ட சில வகையினங்களையும் சில பதிவுகளை யும் பட்டியலிட முற்படுகிறது. அதுவும்கூட, கனடியக் கூட்டாட்சி யின் இன்றியமையாக் கூறாக அமையப்போகும் பிரெஞ்சு மாகாணங் களின் அச்சங்களைத் தணிப்பதற்காகச் செய்யப்பட்டது. இந்திய அரசாங்கச் சட்டத்திலும் இதேபோல் செய்யப்பட்டுள்ளது. இதே திட்டம் அங்கேயும் வகுத்துரைக்கப்பட்டுள்ளது. 1935ஆம் ஆண்டின் இந்திய அரசாங்கச் சட்டத்தின் பிரிவு 104 இப்போதைய அரசமைப் பின் உறுப்பு 223ஐப் போன்றதாகும். எஞ்சிய அதிகாரங்கள் மைய அரசைச்சாரும் என்ற கொள்கையையே அதுவும் விதிக்கிறது. இருந் தாலும் அதில் அதற்கேயுரிய பட்டியல் I இருந்தது. இது குறித்து மிகையாக விமர்சிக்க காரணம் ஒன்றும் இல்லை; அடிப்படை ஒன்று இல்லை. நான் முன்பே சொன்னதுபோல், இந்த எஞ்சிய அதிகாரங்கள் என்ன என்பதை குறிப்பாகத் தெரிந்துகொள்ளவேண்டியத் தேவை பல்வேறு மாகாணங்களுக்கும் இருப்பதை கருத்தில் கொண்டே இப்படிச் செய்துள்ளோம். மேலும் வேறு கூட்டாட்சி அரசமைப்பு களில் கடைபிடிக்கப்பட்டுள்ள நன்கறிந்த மரபுநெறிகளையே நாமும் கடைப்பிடித்துள்ளோம். என் நண்பர் சர்தார் ஹுக்கம் சிங்கின் திருத் தத்தையும் அவை ஏற்றுக்கொள்ளாது, எனது நண்பர் திரு. நசிருதீன் அகமதின் பேச்சுகளையும் அவ்வளவு பெரிதாக எடுத்துக்கொள்ளாது என நான் நம்புகிறேன்.

*(எல்லாத் திருத்தங்களும் மறுதலிக்கப்பட்டன. ஒன்றியப் பட்டியலில் பதிவு 91 சேர்க்கப்பட்டது.)*

[1]**திரு. அவைத் தலைவர்:** இதுபற்றி மேற்கொண்டு விவாத மேதும் தேவையில்லை எனக் கருதுகிறேன். ஆனால், டாக்டர் அம்பேத்கர் இதுபற்றி ஏதும் சொல்ல வேண்டியிருந்தால் நான் கேட்பேன். ஆனால் மற்றபடி இப்படி ஒரு செய்தி பற்றி விவாத மேதும் தேவைப்படுவதாக நான் கருதவில்லை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** விவாதம் ஏதும் தேவையில்லை. நான் எதுவும் சொல்ல விரும்பவில்லை.

**திரு. பிரஜேஷ்வர் பிரசாத்:** எனது திருத்தத்தை விலக்கிக் கொள்ள விரும்புகிறேன்.

***(திரு. பிரஜேஷ்வர் பிரசாத் திருத்தத்தை விலக்கிக் கொள்ள அனுமதிக்கப் படவில்லை. அது வாக்கெடுப்புக்கு விடப்பட்டு மறுதலிக்கப்பட்டது.)***

## பதிவு 70-A

## பட்டியல் I

[2]**திரு. அவைத் தலைவர்:** இதுபற்றி டாக்டர் அம்பேத்கர் ஏதும் சொல்ல வேண்டியுள்ளதா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** இல்லை, அய்யா, நான் விடையாகச் சொல்வதற்கு ஒன்றுமில்லை. இளைஞர்களும் இளம்பெண்களும் தங்களைத் தாங்களே கவனித்துக் கொள்வதில் வல்லவர்கள். ஏன் அவர்களைப் பற்றி அலட்டிக் கொள்ள வேண்டும்?

***(திருத்தம் மறுதலிக்கப்பட்டது. பேராசிரியர் எஸ்.எல். சாக்சேனாவின் இதேபோன்ற திருத்தமும் மறுதலிக்கப்பட்டது.)***

## பதிவு 59

[3]**திரு. ராஜ் பகதூர்:** ... பிரச்சினைகளின் முக்கியத்துவத்தை நாம் உணர்ந்தாக வேண்டும். நான் முன்பே சொன்னது போல் வேறு எந்தத் திருத்தத்தையும் நான் முன்மொழியப் போவதில்லை.

---

*1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949, செப்டம்பர் 1, பக். 859.*

*2. மேற்படி அதே நூல், பக். 860 - 61.*

*3. அதே நூல், பக். 863.*

ஏனென்றால் புதிய பதிவுகளுக்கு யோசனை கூறி ஏனைய உறுப்பினர்கள் முன்மொழிந்த திருத்தங்களில் பெரும்பாலானவற்றுக்கு விடையளிப்பதற்கேகூட மாண்புமிகு வரைவுக்குழுத் தலைவர் முயற்சி எடுக்கவில்லை எனக் கண்டு நான் சற்றே ஊக்கமிழக்கிறேன்.

**திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி:** நீங்கள் முன்மொழிந்த திருத்தத்தைப் படித்துப் பார்ப்பதில் அவர் ஈடுபட்டுள்ளார்.

**திரு. ராஜ் பகதூர்:** என் முன்மொழிவுக்கு ஒரு பதில் கிடைத்தால் நான் பேறு பெற்றவனாவேன்.

**மாண்புமிகு டாக்டர் அம்பேத்கர்:** அய்யா, என் நண்பர் என்னிடமிருந்து ஒரு பதிலை எதிர்பார்ப்பதால் நான் ஓரிரு வார்த்தைகள் மட்டும் சொல்வேன். கடுவறுமையைக் கட்டுப்படுத்துவதும் ஒழிப்பதுமான பிரச்சினைக்கு ஏற்கனவே பட்டியல் IIIஇல் பதிவு 24 இல் வழிவகை செய்யப்பட்டுள்ளது. 'நாடோடித் தன்மை' எனும் இப்பதிவில் கடுவறுமையும் அடக்கமாகும். இது அங்கேயே இருக்க வேண்டுமா அல்லது பட்டியல் Iஇல் கொண்டுவரப்பட வேண்டுமா என்பதுதான் ஒரே கேள்வி. இதைப் பட்டியல் IIIஇல் விட்டுவைப்பதே மேல் என நினைக்கிறேன். இதனால் மாகாணங்கள், மைய அரசு ஆகிய இரண்டுமே இப்பதிவின் அடிப்படையில் செயல்பட முடியும்.

*(திரு. ராஜ் பகதூரின் திருத்தம் விலக்கிக் கொள்ளப்பட்டது.)*

## பட்டியல் II

## பதிவு I

*  *  *

[1]**திரு. அவைத் தலைவர்:** டாக்டர் அம்பேத்கர், நீங்கள் ஏதும் கூற விரும்புகிறீர்களா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் ஏதும் கூற விரும்பவில்லை.

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949, செப்டம்பர் 1, பக். 865.

**திரு. பிரஜேஷ்வர் பிரசாத்:** எனது திருத்தத்தை விலக்கிக் கொள்கிறேன்.

**திரு. அவைத் தலைவர்:** அவை இத்திருத்தம் விலக்கிக் கொள்ளப்பட இசைவளிக்கும் மனநிலையில் இல்லை என்று தெளிவாகத் தெரிகிறது. நான் இதை வாக்கெடுப்புக்கு விடுகிறேன். பிரச்சினை இதுதான்:

'பட்டியல் IIஇன் பதிவு 1 பட்டியல் Iக்குப் புதிய பதிவு 2Aவாக மாற்றப் படலாம்.''

(திருத்தம் மறுதலிக்கப்பட்டது.)

**திரு. அவைத் தலைவர்:** டாக்டர் அம்பேத்கரின் திருத்தம் ஒன்று உள்ளது, திருத்தம் எண் 63.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அய்யா, நான் முன்மொழிவது:

'பட்டியல் IIஇன் பதிவு 1இல் பின்வரும் சொற்களை நீக்விடலாம்:

'பொது ஒழுங்கு காத்தல் தொடர்பான காரணங்களுக்காக தடுப்புக்காவல், இத்தகையக் காவலுக்கு உள்ளாக்கப்படும் ஆட்கள்.''

இப்பதிவை பட்டியல் IIIஇல் வைக்க வேண்டுமென முன்மொழியப்படுகிறது. இந்தக் காரணத்தினால்தான் இச்சொற்கள் நீக்கப் படலாம் என முன்மொழிகிறேன்.

**சர்தார் ஹுக்கம் சிங்:** அய்யா, நான் முன்மொழிவது:

''பட்டியல் IIஇன் பதிவு 1 இல் 'கடற்படை, தரைப்படை அல்லது வான்படை'' என்ற சொற்களுக்குப் பிறகு 'அல்லது ஒன்றியத்தின் வேறு எந்த ஆயுதப்படைகளும்' என்ற சொற்களை நுழைக்கலாம்.''

இது வரைவுக்குழுவின் தரப்பிலான ஒரு விடுபாடு என நான் கருதுவதால் இத்திருத்தத்தை முன்மொழிகிறேன். இது வேண்டுமென்றே விடப்பட்டுள்ளது என எனக்குச் சொல்லப்படுமேயானால்....

---

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டம்பர் 1, பக். 866.
2. மேற்படி அதே நூல், பக். 867-68.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இத்திருத்தத்தை ஏற்றுக்கொள்ள நான் அணியமாய் உள்ளேன்.

*(திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது. திருத்தப்பட்ட வடிவில் பதிவு 1 மாநிலப் பட்டியலில் சேர்க்கப்பட்டது.)*

## பதிவு 2

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அய்யா, நான் முன்மொழிவது:

> "பட்டியல் IIஇன் பதிவு 2க்கு பதிலாகப் பின்வரும் பதிவை இடம்பெறச் செய்யலாம்:
>
> '2. உச்சநீதிமன்றம் மற்றும் உயர்நீதிமன்றங்கள் நீங்கலாக அனைத்து நீதிமன்றங்களின் நீதியாட்சியும் யாப்பும் ஒழுங்கமைப்பும்: உச்சநீதிமன்றம் நீங்கலாக அனைத்து நீதிமன்றங்களிலும் வாங்கப்படும் கட்டணம்.''

உயர்நீதிமன்றங்களையும் சேர்த்துக் கொள்ளும் மாற்றம் மட்டுமே செய்யப்பட்டுள்ளது. ஏனென்றால் நேற்று நான் விளக்கியது போல உயர்நீதிமன்றங்களின் யாப்பையும் ஒழுங்கமைப்பையும் பொறுத்தவரை முழுக்க முழுக்க மைய அரசின் கட்டுப்பாட்டில் உள்ளன.

*(திருத்தப்பட்ட வடிவில் பதிவு 2 மாநிலப் பட்டியலில் சேர்க்கப்பட்டது.)*

## பதிவு 4

[2]**திரு.பிரஜேஷ்வர் பிரசாத்:** எந்தக் கருத்தும் சொல்லாமலே நான் என் திருத்தத்தை முன்மொழிவேன், அதாவது நான் உரை யேதும் நிகழ்த்த மாட்டேன். அய்யா, நான் முன்மொழிவது:

> "திருத்தங்கள் பட்டியலின் திருத்தம் எண் 3589க்குப் பதிலாகப் பின்வருவதை இடம்பெறச் செய்யலாம்: 'பட்டியல் IIஇல் பதிவு 4 அப்பட்டியலிலிருந்து எடுக்கப்பட்டு பட்டியல் Iஇல் சேர்க்கப்படலாம்.''

அய்யா, உங்கள் அனுமதி கிடைத்தால் நான் பணிவுடன் சொல்ல விரும்புவது, இப்பதிவு பட்டியல் Iக்குப் பதிலாக பட்டியல்

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டம்பர் 1, பக். 866.
2. மேற்படி அதே நூல், பக். 867-68.

IIIஇல் சேர்க்கப்பட வேண்டும். திரு.டி.டி. கிருஷ்ணமாச்சாரியின் மறுப்புக்கு இது விடையளிக்கும். அய்யா, 'காவல்துறை'யை உயிராதாரமான அதிகாரப் பொருளாய்க் கருதுகிறேன். அது பொதுப்பட்டியல் அதிகாரங்களில் சேர்க்கப்பட்டு இவ்விதம் மைய அரசின் கீழ் கொண்டு வரப்பட வேண்டும் எனக் கருதுகிறேன்.

**திருமதி பூர்ணிமா பானர்ஜி:** (ஐக்கிய மாகாணங்கள்: பொது): 'காவல் துறை' என்பதில் ஊர்க்காவலர் படையும் பிராந்திய ரட்சா தளமும் அடங்கும் என்பது குறித்து உங்களுக்கு மனநிறைவு ஏற்படுகிறதா எனக் கேட்க விரும்புகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அது மாகாணத்தால் இயற்றப்படக்கூடிய சட்டத்தைப் பொறுத்தது. காவல் துறைச் சட்டத்தின்படி குறிப்பிட்ட ஒருவரை வேலைக்கு எடுக்கிறார்கள் என்றால் அவர் அந்நோக்கத்திற்குக் காவலர் துறையினர்தான் அல்லது வேறு ஏதோ ஒரு சட்டத்தின்படி வேலைக்கு எடுத்துக் காவல் துறையின் அதிகாரங்கள் வழங்கப்படுமானால் அதுவும் காவல் துறையாகவே இருக்கும்.

**திரு. மகாவீர் தியாகி:** ஊர்க்காவல் படையும் பிராந்திய ரட்சா தளமும் இந்திய அரசாங்கத்தின் எஞ்சிய அதிகாரங்களுக்கு உட்படுமா அல்லது உள்ளாட்சியின் கட்டுப்பாடுகளுக்கு உட்படுமா என நான் கேட்கலாமா? அவை வேறு எவற்றுக்கு உட்படும்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அது காவல்துறை இல்லை எனில் மைய அரசின் கீழ்வரும். 'காவல்துறை' என்பது 'இராணுவம்' என்பதற்கு மாறாகப் பயன்படுத்தப்படுகிறது. 'இராணுவம்' அல்லாத எதுவும் 'காவல்துறை' ஆகும்.

**திரு.மகாவீர் தியாகி:** வினாக்களின் நடுவே அது உங்களது தீர்ப்பாகப் பதிவு பெறட்டும்.

**பண்டித ஹிருதய் நாத் குன்ஸ்ரு:** டாக்டர் அம்பேத்கரின் பொருள்விளக்கம் சரி என்றால் இராணுவம் என்று பெயரிட்டு அழைக்காமலேயே இராணுவம் அமைத்துக்கொள்ள மாகாணத்தால் முடியும்.

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:*** *இல்லை, அவர்கள் அப்படிச் செய்ய முடியுமென நான் நினைக்கவில்லை.*

***டாக்டர் பி.எஸ். தேஷ்முக்:*** *ஏற்கனவே அதுதான் நடந்து கொண்டிருக்கிறது.*

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** *இராணுவம் என்பது 1911 ஆம் ஆண்டின் இந்திய இராணுவச் சட்டத்தின்படி பதிவு செய்யப்படுகிறது. இச்சட்டத்தில் பதிவு செய்துகொள்ளக் கடுமையான நிபந் தனைகள் விதிக்கப்பட்டுள்ளன. அந்தப் பதிவில் சட்டமியற்ற மாகாணத்திற்கு உரிமை இல்லவே இல்லை.*

***பண்டித ஹிருதய் நாத் குன்ஸ்ரூ:*** *இராணுவ உருவாக்கம் தொடர்பாக ஒரு மாகாணம் சட்டமியற்றவே இயற்றாது. ஆனால் அது ஒரு படையை அமைத்து அதனை இராணுவம் என அழைக் காமல் அதற்கு இராணுவப் பயிற்சி அளிக்க இயலும்.*

***திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி:*** *அய்யா, மாகாணங்களில் சிறப்பு ஆயுதக் காவல்துறை இருப்பதைக் குறிப்பிட விரும்புகிறேன். காவல்துறைச் சட்டத்தின்படி தரப்பட்டுள்ள அதிகாரத்தைப் பயன் படுத்தி இவற்றுக்கு ஆள் சேர்க்கின்றனர். இவை அரைகுறை இராணுவ அடிப்படையில் இருந்தாலும் காவல்துறைப் படை யாகவே கருதப்படுகின்றன.*

***திரு. மகாவீர் தியாகி:*** *நீங்கள் ஏன் ஊர்க்காவலர் என்ற சொற்களைச் சேர்த்து அதனைத் தெளிவாக்கக்கூடாது?*

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** *ஆயுதக் காவல் துறை உள்ளது; ஆயுதமில்லாத காவல்துறையும் உள்ளது.*

***திரு. அவைத் தலைவர்:*** *இராணுவம் என அழைக்காமல் காவல்துறை என அழைத்து ஓர் இராணுவத்தை அமைக்க ஒரு மாகா ணத்தால் இயலுமா? இதுவே பண்டித குன்ஸ்ரு கேட்டுள்ள கேள்வி.*

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:*** *ஒரு மாகாணம் அரசமைப்புச் சட்டத்தை ஏமாற்றி மோசடி செய்யப் போகிறது எனில் அந்த மோசடி நடைபெறாமல் தடுக்கும் வலிமை மைய அரசுக்கு இருக்கும்.*

*(திரு. பிரஜேஷ்வர் பிரசாத்தின் திருத்தம் விலக்கிக் கொள்ளப்பட்டது. மாநிலப் பட்டியலில் பதிவு 4 சேர்க்கப்பட்டது.)*

★ ★ ★

## பதிவு 7-A

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அய்யா, நான் முன்மொழிவது:

> ''பட்டியல் IIஇன் பதிவு 7க்குப் பிறகு பின்வரும் பதிவை நுழைக்கலாம்:
>
> '7-A மாநில ஓய்வூதியங்கள், அதாவது மாநில அரசோ மாநிலத் தொகுப்பு நிதியிலிருந்தோ கொடுக்கும்படியான ஓய்வூதியங்கள்.''

இது பட்டியல் Iஐப் பொறுத்து நாம் ஏற்கனவே செய்திருப் பதற்கு இணையான ஒரு பதிவே தவிர வேறல்ல.

(மாநிலப் பட்டியலில் பதிவு 7-A சேர்க்கப்பட்டது.)

★ ★ ★

## பதிவு 9

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அய்யா, நான் முன்மொழிவது:

> ''பட்டியல் IIஇன் பதிவு 9க்கு பதிலாக பின்வரும் பதிவை இடம்பெறச் செய்யலாம்:''
>
> '9. பட்டியல் III பதிவு 35 இன் வழிவகைகளுக்கு உட்பட்டு, ஒன்றியத்தின் நோக்கங்களுக்காக அல்லாமல் சொத்துடைமையை கையகப்படுத்தல் அல்லது பயனகப்படுத்தல்.''

ஒரே மாற்றம் என்றவென்றால் அடிக்கோடிட்ட சொற்கள் இப்பொழுது பொதுப்பட்டியலில் சேர்க்கப்பட்டுள்ளன. எனவே அவற்றை இப்பதிவிலிருந்து விட்டுவிடுவது அவசியம். இதையே தான் நாம் பட்டியல் Iலும் இதேபோன்ற பதிவு தொடர்பாகச் செய் துள்ளோம்.

*(டாக்டர் அம்பேத்கரின் முன்மொழிவு ஏற்றுக்கொள்ளப்பட்டது. திருத் தப்பட்ட வடிவில் பதிவு 9 மாநிலப் பட்டியலில் சேர்க்கப்பட்டது.)*

---

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டம்பர் 1, பக். 869.
2. மேற்படி அதே நூல், பக். 869-70.

## பதிவு 10-A

[1]***மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:*** *அய்யா, நான் முன்மொழிவது:*

*''பட்டியல் IIஇன் பதிவு 10க்குப் பிறகு பின்வரும் பதிவை நுழைக்கலாம்:*

*'10-Aபட்டியல்Iஇன் பதிவு 60இல் குறிப்பிடப்பட்டவை அல்லாத மற்ற புராதன, வரலாற்று நினைவுச் சின்னங்கள்.' ''*

நாம் இப்பதிவை இரு பகுதிகளாகப் பிரித்து ஒரு பகுதியைப் பட்டியல் Iஇல் சேர்த்துள்ளோம். மறுபகுதியை இப்பொழுது பட்டியல் IIஇல் சேர்க்கிறோம்.

*(மாநிலப் பட்டியலில் பதிவு 10-A சேர்க்கப்பட்டது.)*

## பதிவு 12

[2]***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** *அய்யா, நான் முன்மொழிவது:*

*'பட்டியல் IIஇன் பதிவு 12க்கு பதிலாகப் பின்வரும் பதிவுகளை இடம்பெறச் செய்யலாம்:*

*'12. மாநில அமைச்சர்கள், சட்டமன்றப் பேரவையின் அவைத்தலைவர், துணை அவைத்தலைவர், சட்டமன்ற மேலவை இருப்பின் அம்மேலவையின் தலைவர், துணைத்தலைவர் ஆகியோரின் சம்பளங்களும் படிகளும்; மாநிலச் சட்டமன்ற உறுப்பினர்களின் சம்பளங்களும் படிகளும்'*

*''12A. சட்டமன்றப் பேரவை, அதன் உறுப்பினர்கள் மற்றும் குழுக்கள், சட்டமன்ற மேலவை இருப்பின் உறுப்பினர்கள் மற்றும் குழுக்களின் சிறப்புரிமைகளும் காப்புரிமைகளும் அதிகாரங்களும்.''*

இது மைய அரசு தொடர்பாக பட்டியல் Iஐப் பொறுத்து நாம் செய்திருப்பதன் மறுவடிவமே தவிர வேறல்ல.

*(பதிவுகள் 12, 12A ஆகியவை மாநிலப் பட்டியலில் சேர்க்கப் பட்டன.)*

## பதிவு 14

[3]**திரு. அவைத் தலைவர்:** 'வீடுகள் மற்றும் வாடகைகளின் ஒழுங்குமுறையும் கட்டுப்பாடும்'' என்பதுதான் இப்பொழுது பிரச்

---

*1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டம்பர் 1, பக். 871.*

*2. மேற்படி அதே நூல், பக். 871.*

*3. அதே நூல், பக். 873-74.*

சினையாகும். தியாகி அவர்களே, இதை நீங்கள் ஒரு தனிப் பதிவாக முன்மொழியுங்கள்:

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** ஆமாம், அவர் அதைத் தனிப் பதிவாக முன்மொழியலாம்.

**திரு.மகாவீர் தியாகி:** உங்களுக்கு நன்றி, டாக்டர் அம்பேத்கருக்கும்தான். அவர் முதல் முறையாக என்னிடம் பெருந்தன்மையுடன் நடந்து கொண்டுள்ளார்.

அய்யா, வரைவுக்குழு சமர்ப்பித்துள்ள பட்டியலுக்கு ஒரு திருத்தத்தை முன்மொழிவது உண்மையிலேயே தர்மசங்கடமானது என்பதைப் பணிந்து தெரிவித்துக் கொள்கிறேன். ஏனென்றால் வரைவுக் குழுவினர் எப்போதுமே கருத்துவளம் மிக்கவர்கள், அவர்களோடு போராடி வெற்றி பெறுவது மிகக்கடினம்.

**திரு. அவைத் தலைவர்:** ஆனால் நீங்கள் ஒரு கூடுதல் பதிவை முன்மொழிகிறீர்கள்.

**திரு. மகாவீர் தியாகி:** ஆமாம், அய்யா, ஆனால் வரைவுக் குழுவின் ஏற்பினைக் கேட்டுப் பெறவேண்டும். கடைசியாகப் பார்த்தால் முக்கியமாக அவர்கள்தாம் ஆலோசனைகளை ஏற்றுக்கொள்கிறவர்கள். அவர்கள் ஏற்றுக்கொண்டால் இந்தப் பேரவை மெய்யாகவே அவற்றுக்கு உடன்படும்.

பட்டியல் II அல்லது பட்டியல் IIIஇல் குறிப்பிடப்படாத எல்லா எஞ்சிய அதிகாரங்களும் மைய அரசுக்குப் போய்விடும் எனச் சொல்லும் ஒரு பதிவை அவை ஏற்கனவே ஏற்றுக்கொண்டிருக்கிறது. நகரப் பகுதிகளில் வீடுகள் மீதான கட்டுப்பாடும் அவ்வீடுகளின் வாடகை மீதான கட்டுப்பாடும் இன்றைய முக்கியப் பிரச்சினை என்பதைப் பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன். இது 1935 ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டத்தின் மூலப் பட்டியலில் இடம்பெறவில்லை. ஏனென்றால் அந்நேரத்தில் வீடுகள் மற்றும் அவற்றின் வாடகைகள் மீதான கட்டுப்பாடு தேவையாயில்லை. அப்பொழுது அது இந்தியாவில் வழக்கத்தில் இல்லை. ஆனால்...

---

1. அரசமைப்புப்பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டம்பர் 1, பக். 873- 74.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** மாண்புமிகு உறுப்பினரின் வாதத்தை நான் புரிந்துகொள்கிறேன். ஒரு சில நிமிடங்களில் அவருக்கு விடையளிக்கலாம்.

**திரு.மகாவீர் தியாகி:** ஆமாம், ஆகவே வீடுகள் மீதான கட்டுப்பாடு, வாடகைகள் மீதான கட்டுப்பாடு எனும் இப்பொருள் இடம்பெற்றாக வேண்டும் என்பதை மட்டும் பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன். நான் இன்னும் கூட மேலே போய் நல்ல தானியங்கள் மீதான கட்டுப்பாடும் இடம்பெற வேண்டும் என்பேன். இந்த அவை ஏற்றுக்கொள்ளுமானால் அதை எங்கேனும் பிறவற்றைச் சாராத தனிக் கூறாகச் சேர்த்துக் கொள்ளலாம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அய்யா, திரு. தியாகி அந்த வடிவத்தில் குறிப்பிடவில்லை என்றாலும் மூவேறு வினாக்கள் இருப்பதாகக் கருதுகிறேன். வீடுகளையும் வீட்டு வாடகையையும் ஒழுங்குமுறைப்படுத்துவதற்கும் கட்டுப்படுத்துவதற்குமான அதிகாரம் ஏதும் மாகாணச் சட்டமன்றத்திற்கு இருக்கவேண்டுமா கூடாதா என்பது முதல் வினா. இந்தச் சிக்கல் தொடர்பாக, மாகாண அரசுகளுக்கு இத்தகைய அதிகாரம் இருக்க வேண்டும் என்பதில் எவ்விதக் கருத்து வேறுபாடும் இருக்க முடியாது எனக் கருதுகிறேன். அரசமைப்பின் முன்வரைவும் பட்டியலில் உள்ள பதிவுகளும் வீடுகளையும் வாடகைகளையும் ஒழுங்குமுறைப்படுத்துவதும், கட்டுப்படுத்துவதுமான நோக்கத்திற்கு மாகாணச் சட்டமன்றங்கள் அதிகாரங்களைச் செலுத்து வதற்கு வழிவகை ஏதும் செய்கின்றனவா என்பது அடுத்த வினா. இப்போது, திரு. தியாகி முன்மொழிந்துள்ள வடிவில் குறிப்பாக இந்தப்பதிவு சிறிதும் தேவையற்றது என்பதே எனது பணிவான கருத்து. ஏனென்றால் வேறு இரு பதிவுகள் உள்ளன. அதாவது பட்டியல் IIஇன் பதிவு 24 ‘நிலம், நிலத்தில் அல்லது நிலத்தின் மீதான உரிமைகள், நிலக்கிழாருக்கும் குத்தகையாளருக்குமான வாடகைத் தண்டல் முதலானவை உள்ளிட்ட நிலக் குத்தகைகள்'' பற்றிச் சொல்கிறது. பட்டியல் IIIஇல் எண் 8 என்னும் இன்னொரு பதிவு விவசாய நிலம் அல்லாத வேறு வகைச் சொத்துடைமையின் கைமாற்றம், பத்திரங்கள் மற்றும் ஆவணங்களைப் பதிவு செய்தல் வாடகைகள் மீதான ஒழுங்குமுறை, கட்டுப்பாடு ஆகியவை தொடர்பாக மாகாண அரசுகள் சட்டங்கள் இயற்றச் செய்திட இந்த இரு பதிவுகளும் போதுமானவை என்று கண்டறியப்பட்டிருக்கிறது. இது என் நண்பர் திரு. தியாகிக்கும் தெரிந்ததுதான். இந்திய அரசாங்கச்

சட்டத்தின் பட்டியல் IIஇன் கீழ், இன்றும்கூட இப்படி ஒரு பதிவு இல்லை என்றபோதிலும் மாகாணங்கள் இப்பிரச்சினையில் சட்டங்கள் இயற்றியுள்ளன. எனவே நிலம் தொடர்பான பதிவு 24, சொத்துடைமைக் கைமாற்றம் தொடர்பான எண் 8 என்னும் மற்றொரு பதிவு ஆகியவை திரு. தியாகி மாகாணங்களுக்கு அளிக்க விரும்பும் அதிகாரத்தை அளிக்கப் போதுமானவையே ஆகும்.

திரு. தியாகியின் திருத்தத்தை ஏற்றுக்கொள்வதில் இது மற்றோர் இடர்ப்பாடாகும். இப்பொழுது நாம் இப்பதிவை சேர்க்க வேண்டுமெனக் கொண்டால் அது வீடுகளின் மீது ஒழுங்குமுறை, வாடகைகள் மீது கட்டுப்பாடு எனும் நோக்கத்திற்காக மாகாணங்கள் ஏற்கெனவே செய்திருக்கிற சட்டங்களின் மீது குறிப்பிட்ட அளவு ஐயத்தைத் தோற்றுவிக்கும். இந்த நோக்கத்திற்காகச் சட்டங்கள் இயற்றும் அதிகாரச் சட்டமன்றத்துக்கு வழங்கிட ஏற்கனவே இருந்த வடிவில் இப்பதிவு போதுமானதாக இல்லை என்று சட்டமன்றமே கருதியாகத் தோன்றும். எனவே, குறிப்பாக இந்த அதிகாரத்தை வழங்குவதற்கான தேவை இருந்தது. ஏற்கனவே செய்யப்பட்டிருக்கிற சட்டங்கள் செல்லுமா என்பது குறித்து நாம் தேவையற்ற முறையில் ஐயப்பாடுகளைக் கிளப்பிவிட நேரிடும் என நான் கருதுகிறேன். எனவே இது திருத்தத்தை ஏற்றுக்கொள்ளக்கூடாது என்பதற்கு ஒரு கூடுதல் காரணமாகும். முதலாவதாக, முன்பே சொன்னதுபோல், இது தேவையற்றது; ஏனென்றால் இத்தகைய சட்டங்கள் செய்திட மாகாணங்கள் போதிய அதிகாரம் பெற்றிருக்கின்றன.

இப்பொழுது மூன்றாவது பகுதிக்கு வருகிறேன். படைக் குடியிருப்புகள் தங்கள் பகுதிகளுக்குள் வாடகைகளையும் வளாகங்களையும் ஒழுங்குமுறைப்படுத்த அனுமதிக்கும் அதிகாரத்தை நீக்க வேண்டும் என்ற பிரச்சினை குறித்து நான் சொல்லிக் கொண்டிருந்த பொழுது என் நண்பர் திரு.தியாகி ஓரளவுக்குப் போராடிக் கொண்டிருந்தார். இப்பதிவை ஏற்றுக் கொள்ளச் செய்வதன் மூலம் ஏற்கனவே நிறைவேற்றப்பட்டிருக்கிற பட்டியல் Iஇல் இப்பதிவு தந்துள்ள அதிகாரத்தை ஒழித்துக் கட்டுவது மாகாணங்களுக்கு சாத்தியப்படும் என்பது என் நண்பரின் நோக்கமாக இருக்குமானால், அவர் அறவே தவறாகப் புரிந்து கொண்டிருப்பதாகக் கருதுகிறேன். இப்பதிவு அரசமைப்புச் சட்டத்தின் பகுதியாகலாம் என்றபோதிலும் நாம் ஏற்கனவே

நிறைவேற்றியிருக்கிற பதிவு செல்லத்தக்கதாய் இருக்கும்; மாகாணங்களிடம் அதிகாரமேதும் ஒப்படைக்கப்பட்டிருந்தாலும் கூட, படைக் குடியிருப்புகள் தங்கள் பகுதிகளில் அமைந்துள்ளன. வளாகங்கள் தொடர்பாகவும் வளாகங்களின் வாடகை தொடர்பாகவும் ஒழுங்கு முறைகள் வகுக்கும் அதிகாரத்தைப் பெற்றிருக்கும். என் நண்பர் திரு.தியாகியின் நோக்கம் நமக்குத் தேவையற்றது என்பதை நான் அவுருக்குப் பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன். குறிப்பாக ஏனென்றால், இப்போதுள்ளவாறு இப்பதிவுகளின்படி ஏற்கனவே செய்யப் பட்டிருக்கிற சட்டங்கள் செல்லுமா என்று ஓரளவு ஐயமேற்படச் செய்வதாக இஃதமையும்.

[1]*திரு. மகாவீர் தியாகி:* வாடகைகளைக் கட்டுப்படுத்த மாகாண அரசுக்கு உரிமையில்லை என்ற அடிப்படையில் வீட்டு உரிமையாளர் எதிர்ப்புத் தெரிவிப்பதாகக் கொண்டால் என்ன நேரிடும்?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* இல்லை, அவரால் முடியாது. ஏனென்றால் பொதுக்கூறுகள் சட்டத்தின்படி நிலம் என்பதில் கட்டடங்களும் அடங்கும்.

*திரு. மகாவீர் தியாகி:* நிலம் என்பதில் கட்டமும் அடங்கும் என்பது சட்டத்திற்கு ஒரு புதிய பொருள் விளக்கமாகும்.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:* இது புதியதே. ஏனென்றால் சட்டம் திரு. தியாகியின் தொழிலன்று.

## பதிவு 15

[2]*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* அய்யா, நான் முன்மொழிவது:

> ''பட்டியல் IIஇன் பதிவு 15 இல் 'பிறப்பு இறப்புகளைப் பதிவு செய்தல் என்ற சொற்களை நீக்கிவிடலாம்''

இது பொதுப்பட்டியலுக்கு மாற்றப்படுகிறது.

★ ★ ★

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டம்பர் 1, பக். 874-75

2. மேலது பக்.875

[1]மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: முன்மொழியப் பட்ட திருத்தங்களில் எந்த ஒன்றையும் நான் ஏற்றுக்கொள்ளவில்லை.

***(திரு. காமத், பிரஜேஷ்வர் பிரசாத் ஆகியோரின் திருத்தங்கள் மறுதலிக்கப் பட்டன. டாக்டர் அம்பேத்கரின் முன்மொழிவு ஏற்றுக் கொள்ளப்பட்டது. திருத்தப் பட்ட வடிவில் பதிவு 15 மாநிலப் பட்டியலில் சேர்க்கப்பட்டது.)***

## பதிவு 18

[2]மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: அய்யா, நான் முன் மொழிவது:

> ''பட்டியல் IIஇன் 18க்குப் பதிலாகப் பின்வரும் பதிவை இடம்பெறச் செய்யலாம்:
>
> '18. பட்டியல் Iஇன் பதிவுகள் 40, 40-A, 57, 57-A மற்றும் பட்டியல்IIIஇன் பதிவு 17-A ஆகியவற்றின் வழிவகைகளுக்கு உட்பட்டு, பல்கலைக் கழகங்கள் உட்படக்கல்வி.''

***(பதிவு 24க்கான எல்லாத்திருத்தங்ளும் டாக்டர் அம்பேத்கரால் நிரா கரிக்கப்பட்டு அவையால் மறுதலிக்கப்பட்டன. பதிவு 24 மாநிலப் பட்டியலில் சேர்க்கப்பட்டது.)***

★ ★ ★

சர்தார் ஹுக்கம் சிங் (கிழக்கு பஞ்சாப்: சீக்கியர்): அய்யா, இப்பதிவு பொதுப்பட்டியலுக்கு மாற்றப்பட வேண்டும் என்ற இத் திருத்தத்தை இப்பொழுது பண்டித பர்கவா முன்மொழிந்திருக்கிறார். எனது திருத்தத்தை முன்மொழியத் தேவையில்லை. பண்டித பர்கவா வின் திருத்தத்தை நான் முழுமனதாக ஆதரிக்கிறேன்.

[3]மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: அய்யா, இத் திருத்தத்தை ஏற்றுக்கொள்ள நான் அணியமாய் உள்ளேன். (பண்டித பர்கவாவின் திருத்தம் வருமாறு):

> 'திருத்தங்கள் பட்டியலின் திருத்தம் எண் 3626 தொடர்பாக பட்டியல் IIஇல் உள்ள பதிவு 43 பட்டியல் IIIக்கு பதிவு 9-A ஆக மாற்றப்படலாம்.''

(முன்மொழிவு ஏற்றுக்கொள்ளப்பட்டது.)

---

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பெர்2, பக். 880.
2. மேலது பக். 881
3. அதே நூல், பக். 914.

(பட்டியல் IIஇன் பதிவு 43 பொதுப்பட்டியலுக்கு மாற்றப் பட்டது.)

## பதிவு 45

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அய்யா, திரு. ஷிபன்லால், திரு. சாகு ஆகிய இரு நண்பர்களும் இந்தப் பதிவு 45இன் கருத்தை அறவே தவறாகப் புரிந்துகொண்டு விட்டனரோ என நான் பெரிதும் அஞ்சுகிறேன். மேலும் இப்பதிவை விட்டுவிட்டால் நாட்டில் பந்தயம் வைத்தலோ சூதாட்டமோ இருக்கவே இருக்காது என்று அவர்கள் பெரிதும் தவறாகக் கருதியுள்ளனர்.

இப்பதிவை விட்டுவிட்டால் பந்தயம் வைத்தல், சூதாட்டம் ஆகியவற்றின்மீது கட்டுப்பாடு என்பதே இருக்காது என்பதை அவர் களுக்குச் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். எவ்வாறென்றால் பதிவு 45, இருக்குமானால், ஒன்று அது பந்தயம் வைத்தல், சூதாட்டம் ஆகியவற்றை அனுமதிக்கும் நோக்கத்திற்குப் பயன்படுத்தப்பட லாம், அல்லது அது அவற்றைத் தடை செய்வதற்குப் பயன்படுத்தப் படலாம். இப்பதிவு இல்லையென்றால் இப்பிரச்சினையில் மாகாண அரசுகள் அறவே கையறு நிலையி லிருக்கும்.

அவர்கள் என்ன செய்து கொண்டிருக்கிறார்கள் என்பதை உணர்வார்கள் என நம்புகிறேன். இப்பதிவு விடப்பட்டால் இப் பொருள் தானாகவே பதிவு 91 இன் படி பட்டியல் Iக்கு மாற்றப்பட்டு விடும் என்பது இதனால் ஏற்படக்கூடிய மற்றொரு விளைவாக இருக்கும். அதாவது மைய அரசு, ஒன்று, சூதாட்டத்தை அனுமதிக்க லாம், அல்லது சூதாட்டத்தைத் தடை செய்யலாம். ஆகவே எழும் கேள்வி இதுதான்: இப்பதிவு இங்கேயே இருக்க வேண்டுமா, அல்லது இங்கு விடப்பட்டு பட்டியல்Iஇல் ஒரு குறிப்பான கூறாக ஒரு குறிப்பான கூறாக அமையவேண்டுமா, அல்லது பதிவு 91இல் சேர்க்கப்பட்டதாகக் கருதப்படவேண்டுமா? பந்தயம் கட்டுதலோ சூதாட்டமோ கூடாது என்று என் நண்பர்கள் குறியாக இருப்பார் களானால், பந்தயங் கட்டுதலையும் சூதாட்டத்தையும் அரசு சகித்துக் கொள்ளக்கூடாத குற்றச் செயலாக்கிடும் வகையில் அரசமைப்புச்

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர் 2, பக். 917-18..

சட்டத்திலேயே ஓர் உறுப்பைச் சேர்ப்பதுதான் முறையானதாக இருக்கும். இப் பொழுதுள்ளபடி இது முன்தடுப்பு முறையிலானது. சூதாட்டத்தைத் தடைசெய்திட மாநில அரசுக்கு முழு அதிகாரம் இருக்கும். இவ்விளக்கத்தை ஏற்று அவர்கள் இப்பதிவிற்கான தங்கள் மறுப்பை விலக்கிக் கொள்வார்கள் என நம்புகிறேன்.

***(திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது. பதிவு 45 மாநிலப் பட்டியலில் சேர்க்கப்பட்டது.)***

## பதிவு 38 - (தொடர்ச்சி)

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** பதிவு 38க்கும், பண்டித லட்சுமி காந்த மைத்ரா பெயரில் உள்ள திருத்தம் எண் 311க்கும் திரும்பிச் செல்லும்படி உங்களைக் கேட்டக் கொள்ள லாமா? அய்யா, நீங்கள் மனமுவந்து இந்தப் பதிவை நிறுத்திவைத்துக் கொள்ளும்படி திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரியைப் பணித்ததாக அறிந்தேன். ஆனால் என் மாண்புமிகு நண்பர் பண்டித மைத்ரா எடுத்துச் சொல்லியுள்ள திருத்தத்தை ஏற்றுக்கொள்ள அணியமாய் உள்ளேன்.

**திரு. அவைத் தலைவர்:** மிக நன்று. பிரச்சினை இதுதான்:

''பட்டியல் IIஇன் பதிவு 38 பட்டியல் IIIக்கு மாற்றப்பட்டலாம்.''

(திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.)

பதிவு 38 பொதுப்பட்டியலுக்கு மாற்றப்பட்டது.

## பதிவு 46

*　　　*　　　*

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இத்திருத்தத்தை என்னால் ஏற்றுக் கொள்ள இயலாது. இப்பொழுது நமது வருவாய் அமைப்பு ஒழுங்குபடுத்தப்படுவதால் மாகாண நிர்வாகம் முழு

1. அரசைமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர் 2, பக். 918.
2. மேற்படி அதே நூல், பக். 919.

வதையும் இது குலைத்துவிடும். இப்பிரச்சினையை அடுத்த நிலையில் நாடாளுமன்றமோ வெவ்வேறு மாகாணங்களோ ஆய்ந்திடலாம். நிலவரி விதிப்பது தொடர்பாக ஏதோ ஒருவகை ஏற்பாட்டுக்கு அவர்கள் வந்து வருமானவரி விதிப்பதில் ஏற்றுக்கொள்ளப்படும் கொள்கைகளை ஏற்றுக்கொண்டால், பதிவு பிற்பாடு மாற்றியமைக்கப் படலாம். ஆனால் இன்று அது சாத்தியமில்லை. இப்பிரச்சினை மாகாணத் தலைமை அமைச்சர்களுடனான மாநாட்டில் மிக விரிவாகப் பரிசீலிக்கப்பட்டது. இப்பதிவுக்குத் தரப்பட்டுள்ள இடத்தில் எந்த மாற்றம் செய்வதையும் அவர்கள் அடியோடு எதிர்த்தார்கள்.

***(இரு திருத்தங்களும் மறுதலிக்கப்பட்டன. முன்மொழிவு ஏற்றுக் கொள்ளப்பட்டது. பதிவு 46 மாநிலப் பட்டியலில் சேர்க்கப்பட்டது.)***

## பதிவு 48

**திரு. பிரஜேஷ்வர் பிரசாத்:** அய்யா, நான் பணிவுடன் முன்மொழிவது:

> "திருத்தங்கள் பட்டியலில் திருத்தம் எண் 3631 இல் 'நீக்கப்பட்டது' என்ற சொல்லுக்குப் பதிலாக பட்டியல் Iக்கு மாற்றப்பட்டது' என்ற சொற்களையும் எண்ணையும் இடம்பெறச் செய்யலாம்."

**பேராசிரியர் ஷிபன் லால் சக்சேனா:** நானும் எனது திருத்தம் எண் 316ஐ முன்மொழிகிறேன்:

> "பட்டியல் IIஇன் பதிவு 48 பட்டியல் IIIக்கு மாற்றப்படலாம்."

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் அதை ஏற்றுக் கொள்ளவில்லை.

***(இரு திருத்தங்களும் மறுதலிக்கப்பட்டன. பதிவு 48 மாநிலப் பட்டியலில் சேர்க்கப்பட்டது.)***

## பதிவு 49

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** பதிவு 46 பற்றி விவாதித்தபோது நான் அளித்துள்ள காரணங்களால், திருத்தத்தை ஏற்க மறுக்கிறேன்.

---

1. அரசைமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர் 2, பக். 920.

**திரு. அவைத் தலைவர்:** பிரச்சினை இதுதான்:

> "திருத்தங்கள் பட்டியலின் திருத்தம் எண் 3632 இல் 'நீக்கப்பட்டது' என்ற சொல்லுக்குப் பதிலாக 'பட்டியல் Iக்கு மாற்றப்பட்டது' என்ற சொற்களையும் எண்ணையும் இடம்பெறச் செய்யலாம்."

திருத்தம் மறுதலிக்கப்பட்டது.

**திரு. அவைத் தலைவர்:** பிரச்சினை இதுதான் :

> "பட்டியல் IIஇன் பதிவு 49 பட்டியல் IIIக்கு மாற்றப்படலாம்."

***(திருத்தம் மறுதலிக்கப்பட்டது. பதிவு 49 மாநிலப் பட்டியலில் சேர்க்கப் பட்டது.)***

★ ★ ★

## பதிவு 50

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அய்யா, நான் முன்மொழிவது:

> "பட்டியல் IIஇன் பதிவு 50 இல் 'அல்லது சாலைகள்' என்ற சொற்கள் முடிவில் சேர்க்கப்படலாம்."

***(டாக்டர் அம்பேத்கரின் திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது. முன்மொழிவு ஏற்றுக்கொள்ளப்பட்டது. திருத்தப்பட்ட வடிவில் பதிவு 50 மாநிலப் பட்டியலில் சேர்க்கப் பட்டது.)***

★ ★ ★

## பதிவு 52

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அய்யா, நான் முன்மொழிவது:

> "பட்டியல் IIஇன் பதிவு 52இல் 'போதைப் பொருளல்லாத மருந்துகள்' என்ற சொற்களை விட்டுவிடலாம்." இது தொடர்விளைவாக வருவதுதானே தவிர வேறல்ல.

***(திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது. முன்மொழிவு ஏற்றுக்கொள்ளப் பட்டது. திருத்தப்பட்டவடிவில் பதிவு 52 மாநிலப் பட்டியலில் சேர்க்கப் பட்டது.)***

---

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர் 2, பக். 920.
2. மேற்படி அதே நூல், பக். 922.

## பதிவு 56

[1]**பேராசிரியர் ஷிபன் லால் சக்சேனா:** அய்யா, நான் முன்மொழிவது:

''பட்டியல் II இன் பதிவு 56 பட்டியல் III க்கு மாற்றப்படலாம். பின்வரும் விளக்கம் முடிவில் சேர்க்கப்படலாம்:

''விளக்கம்: தொழில்முறைகள், வினைகள், செய்தொழில்கள், வேலை வாய்ப்புகள் ஆகியவற்றிலிருந்து வருகிற அல்லது கிடைக்கிற வருமானத்தின் மீதான வரிகள் தொடர்பாகச் சட்டங்கள் இயற்ற ஒன்றியத்துக்குள்ள ஆணை யுரிமையை இப்பிரிவில் கூறப்பட்டுள்ள எதுவும் எவ்வகையிலும் வரம்புக் குட்படுத்துவதாக கருதப்பட மாட்டாது.''

★ ★ ★

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அய்யா, இத் திருத்தம் சற்றே தப்பெண்ணத்தை அடிப்படையாகக் கொண்டுள்ள தாகக் கருதுகிறேன். இப்பதிவு முழுக்க முழுக்க ஒரு மாகாணப் பதிவே. வருமான வரி விதித்திட மைய அரசுக்குள்ள அதிகாரத்தை இதனால் வரம்புக்குட்படுத்த முடியாது. மறுபுறம் இந்தப்பதிவு 56 மைய அரசு மட்டுமே விதிக்கக்கூடிய வருமான வரியின் மீதான எல்லை மீறலாகும் விதத்தில் செயல்படுத்தலாம். அய்யா, உள்ளாட்சி அதிகார அமைப்புகளால் விதிக்கப்படும் எந்த வரிகளும் வருமான வரியாகக் கருதப்படாது என்று உறுப்பு 356 இல் நான் ஒரு திருத்தம் கொண்டு வந்தேன் என்பதை நீங்கள் நினைவுகூரலாம். இத்திருத்தம் தேவை யற்றது.

**பேராசிரியர் ஷிபன்லால் சக்சேனா:** அய்யா, நான் திருத் தத்தை வலியுறுத்தவில்லை.

(பேரவையின் அனுமதி கொண்டு திருத்தம் விலக்கிக் கொள்ளப்பட்டது.)

(பதிவு 36 மாநிலப் பட்டியலில் சேர்க்கப்பட்டது.)

## பதிவு 58

[3]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அய்யா, நான் முன்மொழிவது:

---

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர் 2, பக். 923.
2. மேற்படி அதே நூல், பக். 923.
3. அதே நூல், பக். 923.

''பட்டியல் IIஇல் பதிவு 58க்குப் பதிலாகப் பின்வரும் பதிவுகளை இடம் பெறச் செய்யலாம்:

'58 சரக்குகளின் விற்பனை அல்லது கொள்முதல் மீதான வரிகள்.

58-A. விளம்பரங்களின் மீதான வரிகள்.''

நாம் 'விற்றுமுதல்' என்ற சொல்லை வெட்டிவிட முயன்று கொண்டிருக்கிறோம்.

★ ★ ★

[1]**திரு. வி.எல். முனிசாமி பிள்ளை (சென்னை: பொது):** நான் முன்மொழிவது:

''திருத்தங்கள் பட்டியலின் திருத்தம் எண் 3638 தொடர்பாக, பட்டியல் IIஇன் பதிவு 58 இல் 'சரக்குகள் கொள்முதல்' என்ற சொற்களுக்கு முன் 'செய்தித் தாள்கள் அல்லாத' என்ற சொற்களையும் 'விளம்பரங்கள் மீதான வரிகள்' என்ற சொற்களுக்கு முன் 'செய்தித்தாள்களில் வருகிறவை அல்லாத' என்ற சொற்களையும் நுழைக்கலாம்.''

**திரு. தேஷ் பந்து குப்தா: (டில்லி):** இதையும் நிறுத்திவைத்துக் கொள்ளலாம் எனும் என் யோசனையைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**திரு. அவைத் தலைவர்:** இது நேற்று எழுப்பப்பட்ட வினா. என் தீர்ப்புக்காக இதை நிறுத்தி வைத்துக் கொள்கிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** திருத்தம் எண் 122ஐப் பிறவற்றைச் சாராத தனிச் செய்தியாகக் கருதி ஒரு கூடுதல் பதிவின் வாயிலாகக் கொண்டு வரலாம் என்பது என் யோசனை. இதை அடுத்து வரைவுக்குழு ஏற்றுக்கொண்டால் இரண்டையும் ஒன்றாகச் செய்யலாம். அதற்கு உட்பட்டு இப்பதிவு ஒழிந்து போகலாம். பதிவு 122 இல் அக்கறை உள்ளவர்கள் இதை ஒரு கூடுதல் பதிவின் வடிவில் கொண்டுவர அனுமதிக்கலாம்.

**திரு. அவைத் தலைவர்:** செய்தித்தாளும், விளம்பரமும் என்பதைப் பொறுத்தவரை உங்கள் கருத்து தொடப்படவில்லை.

**திரு.தேஷ்பந்து குப்தா:** இதற்கு வேறு எங்காவது வரைவுக் குழு வழிவகை செய்யவேண்டும் எனக் கருதப்படுமானால் இப்பதிவு

1. அமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர் 2, பக். 924.

குறித்துப் பேரவை ஒரு முடிவை எடுத்தபின் கடந்த காலத்தைத் திருத்துவது கடினமாகிவிடும்.

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** நாம் மூன்று பட்டியல்கள் பற்றிய விவாதத்தை முடிப்பதற்கு முன் இப்பிரச்சினையை எழுப்பலாம்.

***திரு. அவைத் தலைவர்:*** நேற்று நாம் நிறுத்தி வைத்துக் கொண்ட 88-A ஐ எடுத்துக் கொள்ளும்போது இதனைத் தனியாக எடுத்துக்கொள்ள அனுமதியளிக்க அணியமாய் உள்ளேன். எனவே நிலைமை என்னவென்றால் விளம்பரம் தொடர்பான பிரச்சினை நிறுத்தி வைத்துக்கொள்ளப்படுகிறது. ஆனால் அது ஒரு புறம் இருக்க டாக்டர் அம்பேத்கர் திருத்திய வடிவில் இப்பதிவு வாக்கெடுப்புக்கு விடப்பட்டுள்ளது.

***பேராசிரியர் ஷிபன்லால் சக்சேனா:*** திரு.தேஷ்பந்து குப்தா. இதனை நிறுத்தி வைத்துக்கொண்டால் இன்னும்கூட எளிதாய் இருக்கும். தீர்ப்பு இன்னமும் வழங்கப்படாமல் இருக்கும்போது, எப்படி இதனை நிறைவேற்ற முடியும்?

***திரு. அவைத் தலைவர்:*** செய்தித்தாளும் விளம்பரமும் என்பதைப் பொறுத்தவரை உங்கள் கருத்து தொடப்படவில்லை.

***திரு.தேஷ்பந்து குப்தா:*** இதற்கு வேறு எங்காவது வரைவுக் குழு வழிவகை செய்ய வேண்டும் எனக் கருதப்படுமானால் இப்பதிவு குறித்துப் பேரவை ஒரு முடிவை எடுத்தபின் கடந்த காலத்தைத் திருத்துவது கடினமாகிவிடும்.

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** நாம் மூன்று பட்டியல்கள் பற்றிய விவாதத்தை முடிப்பதற்கு முன் இப்பிரச்சினையை எழுப்பலாம்.

***திரு. அவைத் தலைவர்:*** நேற்று நாம் நிறுத்தி வைத்துக் கொண்ட 88-Aஐ எடுத்துக்கொள்ளும்போது இதனைத் தனியாக எடுத்துக் கொள்ள அனுமதியளிக்க அணியமாய் உள்ளேன். எனவே நிலைமை என்னவென்றால் விளம்பரம் தொடர்பான பிரச்சினை

நிறுத்திவைத்துக் கொள்ளப்படுகிறது. ஆனால் அது ஒருபுறம் இருக்க டாக்டர் அம்பேத்கர் திருத்திய வடிவில் இப்பதிவு வாக்கெடுப்புக்கு விடப்பட உள்ளது.

**பேராசிரியர் ஷிபன்லால் சக்சேனா:** தீர்ப்பு இன்னமும் வழங்கப்படாமல் இருக்கும்போது, எப்படி இதனை நிறைவேற்ற முடியும்?

**திரு. தேஷ்பந்து குப்தா:** இதனை நிறுத்தி வைத்துக் கொண்டால் இன்னும்கூட எளிதாய் இருக்கும்.

**திரு. அவைத் தலைவர்:** சரி, இதனை நிறுத்தி வைத்துக் கொள்வோம். நேற்று நாம் நிறுத்தி வைத்துக்கொண்ட 88-A உடன் சேர்த்து இதனை எடுத்துக்கொள்வோம்.

பட்டியல் II இன் பதிவு 58 நிறுத்தி வைத்துக்கொள்ளப்பட்டது.

## பதிவு 59

[1]**திரு. அவைத் தலைவர்:** பதிவு 59.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் முன்மொழிவது:

> "பட்டியல் II இன் பதிவு 59இல் பின்வருவதை முடிவில் சேர்க்கலாம்:
> "பட்டியல் III இன் பதிவு 21 இன் வழிவகைகளுக்கு உட்பட்டு.""

வரிக்கொள்கையை விதிக்கும் அதிகாரம் மைய அரசுக்கு இருக்க வேண்டுமெனப் பட்டியல் III இல் நாம் சொல்லப் போகிறோம்.

***(டாக்டர் அம்பேத்கரின் முன்மொழிவு ஏற்றுக்கொள்ளப்பட்டது. திருத்தப்பட்ட வடிவில் பதிவு 59 மாநிலப் பட்டியலில் சேர்க்கப்பட்டது.)***

## பதிவு 64

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அய்யா, நான் முன்மொழிவது:

1. அரமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர் 2, பக். 924.
2. அதே நூல், பக். 925.

''பட்டியல் IIஇன் பதிவு 64 நீக்கப்படலாம்.'' அது பொதுப்பட்டியலில் எடுத்துக்கொள்ளப்படுகிறது.

*(முன்மொழிவு ஏற்றுக்கொள்ளப்பட்டது. பட்டியல் IIஇன் பதிவு 64 மாநிலப் பட்டியலிலிருந்து நீக்கப்பட்டது.)*

## பதிவு 67

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அய்யா, இப்போதுள்ள வரைவுடன் நாம் சேர்க்க எண்ணியுள்ள அரசமைப்புச் சட்டப் பகுதி இப்பிரச்சினையைப் பார்த்துக்கொள்ளும். ஆட்சியாளர்களுக்குச் செலுத்த வேண்டிய அனைத்தைப் பற்றியும் இந்தப் பகுதியில் பேசப்படும். இப்போதைக்கு இத்தகைய திருத்தம் எதற்கும் தேவையேதும் இருப்பதாக நான் கருதவில்லை. ஒரு திருத்தம் என்ற வகையில் நாம் அறிமுகப்படுத்த எண்ணியுள்ள அந்தப் பகுதியைக் கண்டபிறகு என் நண்பர் தமது நோக்கம் நமது முன்மொழிவால் நிறைவேறுகிறதா என்பதைக் காணக்கூடும் எனக் கருதுகிறேன். இல்லை என்றால், அப்பகுதி அவையின் முன்வரும்போது அதற்கொரு திருத்தத்தை அவர் முன்மொழிவது முறையாக இருக்கும்.

**காக்கா பகவந்த் ராய்:** அய்யா, நான் எனது திருத்தத்தை விலக்கிக் கொள்ள விரும்புகிறேன்.

(அவையின் அனுமதி கொண்டு திருத்தம் விலக்கிக் கொள்ளப் பட்டது.)

★ ★ ★

## பதிவு 2-A

[1]**திரு. அவைத் தலைவர்:** அடுத்ததாக நாம் பதிவு 2-Aக்கு வருகிறோம். டாக்டர் அம்பேத்கர்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அய்யா, நான் முன்மொழிவது:

''பட்டியல் IIIஇன் பதிவு 2க்குப் பிறகு பின்வரும் பதிவை நுழைக்கலாம்:

'2A. சட்டத்தால் நிறுவப்பட்ட அரசின் நிலைத்தன்மை, பொது ஒழுங்கு காத்தல், சமுதாயத்தின் வாழ்க்கைக்கு இன்றியமையாத சேவைகள் அல்லது

1. அரசமைப்புப்பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர் 2, பக். 926.

வழங்கல்கள் ஆகியவற்றோடு தொடர்புடைய காரணங்களுக்காகத் தடுப்புக் காவல்; இத்தகையத் தடுப்புக்காவலுக்கு உட்பட்டவர்கள்.''

★ ★ ★

## ஏழாம் அட்டவணை (தொடர்ச்சி)
## பட்டியல் III
## (பொதுப்பட்டியல்)
## பதிவு 2-A

[1]**திரு. துணைத் தலைவர்** (திரு.வி.டி.கிருஷ்ணமாச்சாரி): நாம் இப்பொழுது பொதுப்பட்டியலின் பதிவு 2-A குறித்து விவாதித்துக் கொண்டிருக்கிறோம்.

**திரு. நசிருதீன் அகமது** (மேற்கு வங்கம்: முஸ்லீம்): துணைத் தலைவர் அவர்களே, அய்யா, திருத்தம் எண் 290 இல் ஒருசொல் மாற்றம் செய்துகொள்ள உங்கள் அனுமதியை நாடுகிறேன். திரு.காமத் எண் 289 ஐ முன்மொழிந்திருக்கிறார். நான் அடுத்த பதிவை முன் மொழிய விரும்புகிறேன். சிறு சொல்மாற்றம் செய்துகொள்ள உங்கள் அனுமதியை நாடுகிறேன். திருத்தம் ஒருபோதும் ஏற்றுக்கொள்ளப் படாது, அது பரிசீலனைகூடச் செய்யப்படாது என்பதை அறிவேன். எனவே திருத்தத்தின் முகத்தோற்றத்தை மேம்படுத்துவதில் எந்தத் தீங்குமில்லை. எனது திருத்தத்தில் 'வன்முறை கொண்டு அரசைக் கவிழ்த்தல்'' என்ற சொற்களுக்குப் பதிலாக 'அரசின் இடர்காப்பு'' என்ற சொற்களை இடம்பெறச் செய்ய உங்கள் அனுமதி உண்டா? 'அரசின் இடர்காப்பு'' என்ற சொல்லமைப்பு இன்னும் கூடச் சரியான தாகத் தெரிகிறது. மாற்றம் சொல்லளவில்தான்.

**திரு. துணைத் தலைவர் :** சரி.

**திரு. நசிருதீன் அகமது:** அய்யா, நான் பணிவுடன் முன் மொழிவது....

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்** (பம்பாய் : பொது): அய்யா, என் நண்பருக்கு நான் சொல்லக்கூடிய யோசனை இதுதான்: 'சட்டத்தால் நிறுவப்பட்ட அரசின் நிலைத்தன்மை தொடர்பான''

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர்2, பக். 929-30.

என்ற சொற்களுக்குப் பதிலாக இப்பொழுது நான் யோசனையாகக் கூறும் சொல்லமைப்பை, அதாவது ‘அரசின் இடர்காப்பு தொடர்பான’’ என்ற சொற்களை ஏற்றுக்கொள்ள அவர் அணியமெனில், நானும் அதை ஏற்றுக்கொள்ள அணியமாய் உள்ளேன். ஏனென்றால் சரியாக இதே மொழிநடையைத்தான் பட்டியல் Iஇல் திருத்தப்பட்ட பதிவு 3இல் பயன்படுத்தியிருக்கிறோம் - அங்கு ‘இந்தியாவின் இடர்காப்பு’’ என்ற சொல்லைப் பயன்படுத்தியிருக்கிறோம். இப்பொழுது நான் யோசனையாகச் சொல்லியிருக்கிற சொல்லமைப்பில் என் நண்பருக்கு மனநிறைவு ஏற்படுமானால் இதை ஏற்றுக்கொள்ள நானும் அணியமாய் உள்ளேன்.

**திரு. நசிருதீன் அகமது:** நான் டாக்டர் அம்பேத்கருக்கு நன்றி தெரிவித்துக் கொள்கிறேன். ஆனால் சரியாக இந்த மாற்றத்தைத்தான் என்னைச் செய்ய அனுமதிக்கும்படி துணைத்தலைவரைக் கேட்டுக் கொண்டிருந்தேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** உங்கள் சொற்கள் வேறு.

**திரு. நசிருதீன் அகமது:** நான் ஒரு திருத்தப்பட்ட திருத்தத்தை முன்மொழிய இருந்தேன். அது சரியாகச் சொல்லுக்குச் சொல் டாக்டர் அம்பேத்கர் இப்பொழுது யோசனையாகத் தெரிவித்துள்ள அதே அமைப்பில் உள்ளது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அப்படியானால் அதுபற்றிப் பேச எதுவுமில்லை. என் மாண்புமிகு நண்பர் நான் சொல்லியிருக்கிறபடி திருத்தத்தை முன்மொழிவாரானால் அதை ஏற்றுக்கொள்ள அணியமாய் உள்ளேன்.

**திரு. நசிருதீன் அகமது:** நான் எனது திருத்தத்தை முன்மொழி வேண்டும்.

**திரு. துணைத் தலைவர்:** இதை டாக்டர் அம்பேத்கர் ஏற்றுக் கொள்வதால் மாண்புமிகு உறுப்பினர் திருத்தத்தை முன்மொழிந்து அதன் மீது உரையாற்றுவது அவசியமா?

**திரு. நசிருதீன் அகமது:** சரியானதும், என் மாண்புமிகு

நண்பரின் கருத்துக்களைத் துல்லியமாக ஒத்திருப்பதுமான ஒரு திருத் தத்தை நான் முன்மொழியப்போகிறேன் என்பதை அவர் ஒப்புக் கொள்ளத் தவறினால் நான் செய்வதற்கொன்றுமில்லை. ஆனால் என் திருத்தத்தை முன்மொழிய விடுங்கள்.

அய்யா, நான் பணிவுடன் முன்மொழிவது:

''பட்டியல் Iஇன் (ஆறாம் வாரம்) திருத்தம் எண் 124இல், பட்டியல் IIIஇல் முன்மொழியப்பட்டுள்ள புதிய பதிவு 2-Aஇல் 'அரசின் நிலைத்தன்மை'' என்ற சொற்களுக்குப் பதிலாக 'அரசின் இடர்காப்பு'' என்ற சொற்களை இடம் பெறச் செய்யலாம்.''

'அரசின் நிலைத்தன்மை'' என்ற சொற்றொடர் முறையான தாக இல்லை...

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் திருத்தத்தை ஏற்றுக் கொள்வதால் வாதம் எதற்கும் தேவை இருப்பதாக நான் கருதவில்லை.

**திரு. நசிருதீன் அகமது:** எனக்குத் தெரியும். ஆனால் இந்த அவை இருக்கிறது. நான் ஓரிரு வார்த்தைகள் மட்டும் சொல்வேன். 'அரசாங்கத்தின் நிலைத்தன்மை தொடர்பான காரணங்களுக்காகத் தடுப்புக்காவல்' என டாக்டர் பி.ஆர்.அம்பேத்கரர் முன்மொழிந் துள்ள புதிய பதிவின் சூழலில் 'அரசாங்கத்தின் நிலைத்தன்மை' எனும் சொற்றொடர் சற்றே மேலோட்டமானதாய் உள்ளது.

'அரசாங்கம்' வேறு 'அரசு' வேறு.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** இதுவே நான் அதை ஏற்றுக்கொண்டதற்குக் காரணமாகும்.

**திரு. நசிருதீன் அகமது:** ஆனால், அய்யா, அவர் இதை ஏற்றுக் கொண்டிருப்பது ஏன் என்று தெளிவுபடுத்தவில்லை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** ''அரசின் இடர் காப்பு'' என்பது சரியான சொற்றொடர் என்று சொல்லியிருக்கிறேன். எனவே வாதம் செய்ய வேண்டிய தேவையேதுமில்லை.

**திரு. துணைத் தலைவர்:** மாண்புமிகு உறுப்பினர் முன்மொழிந்த திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கிற நிலையில் விரிவான வாதங்கள் செய்ய வேண்டிய தேவையில்லை.

**திரு. நசிருதீன் அகமது:** ஆனால் இந்த அவைக்குத் தெரிய வேண்டும். வரைதல் மோசமாய் இருப்பதை வெளிப்படுத்துவது பற்றி இவ்வளவு பதற்றம் ஏன்? இதுதான் முக்கியம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் தவறு செய்திருக்கிறேன் என்று ஒப்புக்கொள்வதால் என் மதிப்பிற்குரிய நண்பர் மனநிறைவு அடைவாரெனில் அவ்வாறு ஒப்புக்கொள்ள நான் அணியமாய் உள்ளேன்.

**திரு. நசிருதீன் அகமது:** இந்தப் பேரவை மட்டுமல்ல, பொதுவாக உலகமே இதனை மதித்துப் போற்ற வேண்டும். வரையப்பட்டுள்ளபடி "அரசாங்கத்தின் நிலைத்தன்மை'' என்பது அமைச்சரவையின் பாதுகாப்பின்மையைக் குறிக்கக்கூடும். இதற்காக எதிர்க்கட்சியினரை சிறையிலடைக்கலாம் என்றாகிவிடும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** சரி, நாங்கள் குளறுபடி செய்திருக்கிறோம். போதுமா?

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அய்யா, திருத்தப்பட்ட வடிவில் திருத்தம் முன்வைக்கப்பட வேண்டுமே தவிர அறிவிப்புத் தாளில் உள்ளபடி அல்ல.

**திரு. துணைத் தலைவர்:** டாக்டர் அம்பேத்கர் திருத்தி அமைத்துள்ளபடி திருத்தம் எண் 124ஐ இப்பொழுது முன்வைத்திருக்கிறேன். பிரச்சினை இதுதான்:

''பட்டியல் IIIஇன் பதிவு 2க்குப் பிறகு பின்வரும் பதிவை நுழைக்கலாம்:

''2-A அரசின் பாதுகாப்பு, பொது ஒழுங்கு காத்தல், சமுதாயத்துக்கு இன்றியமையாத சேவைகள் அல்லது வழங்கல்கள் ஆகியவை தொடர்பான காரணங்களுக்காகத் தடுப்புக்காவல்; இத்தகையக் காவலுக்கு உட்பட்டவர்கள்.

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர் 3, பக். 831.

*(முன்மொழிவு ஏற்றுக்கொள்ளப்பட்டது.)*

திருத்தப்பட்ட வடிவில் பதிவு 2-A பொதுப் பட்டியலில் சேர்க்கப்பட்டது.

## பதிவு 3

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அய்யா, நான் முன்மொழிவது:

> ''பட்டியல் IIIஇன் பதிவு 3க்குப் பதிலாகப் பின்வரும் பதிவை இடம்பெறச் செய்யலாம்.
>
> '3. கைதிகளையும் குற்றஞ்சாட்டப்பட்டவர்களையும் இப்பட்டியலின் பதிவு 2Aஇல் குறிப்பிடப்பட்ட காரணங்களுக்காகத் தடுப்புக் காவலுக்கு உட்பட்டவர்களையும் ஒரு மாநிலத்திலிருந்து இன்னொரு மாநிலத்திற்கு இடம்பெயர்த்தல்.''

**திரு. நசிருதீன் அகமது:** நான் திருத்தம் எண் 291 ஐ முன் மொழியவில்லை.

**திரு. துணைத் தலைவர்:** திருத்தம் எண் 292. உறுப்பினர் இல்லாததால் திருத்தம் முன்மொழியப்படவில்லை. நான் டாக்டர் அம்பேத்கரின் திருத்தத்தை வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

***(திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது. திருத்தப்பட்ட வடிவில் பதிவு பொதுப்பட்டியலில் சேர்க்கப்பட்டது.)***

## பதிவு 4

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் முன் மொழிவது:

> ''பட்டியல் III பதிவு 4 இல் 'இப்போதைக்கு முதல் அட்டவணையின் பகுதி I அல்லது பகுதி IIஇல் குறித்துரைக்கப்படுகிற' என்ற சொற்களையும் எண்களையும் நீக்கிவிடலாம்.''

***(டாக்டர் அம்பேத்கரின் திருத்தத்தால் திருத்தப்பட்ட வடிவில் பதிவு 4 பொதுப் பட்டியலில் சேர்க்கப்பட்டது.)***

---

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர் 3, பக். 931.

## பதிவு 6

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அய்யா, மதிப்பிற்குரிய நண்பர் டாக்டர் தேஷ்முக்கின் திருத்தம் பதிவு 6 இல் குழந்தைகள் பாதுகாப்பு தொடர்பான சில சொற்களை நுழைக்க வேண்டுவதாய் இருக்கிற அளவில் பொருத்தமற்றதாகும் என்பதில் அய்யத்துக்கு இடமே இல்லை. ஏனென்றால் பதிவு 6 சிறார்களையும், இளம்படியர்களையும் குறிக்கிறது என்பதில் அய்யமில்லை, ஆனால் பதிவை அதன் முழு உருவில் எடுத்துக்கொண்டால் அது தகுநிலை பற்றிச் சொல்கிறது என்பதை மனத்தில் இருத்திக் கொண்டாக வேண்டும். சிறார்கள், இளம்படியர்கள், ஆகியோரின் தகுநிலையைப் பொறுத்தவரை இந்த வகையினங்கள் பதிவு 6 இல் சேர்க்கப்பட்டுள்ளன, ஆனால் 'அரவணைப்பும் பாதுகாப்பும் இன்றி ஏழ்மைப்பட்ட, கைவிடப்பட்ட குழந்தைகளையும் இளம் வயதினரையும் பேணிக் காத்தல்'' என்பது அவர்களின் தகுநிலைக்கு உவப்பானதன்று.

**டாக்டர் பி.எஸ். தேஷ்முக்:** சரியாக அந்தக் காரணத்திற்காகத் தான் பிறவற்றைச் சாராத ஒரு தனிப்பதிவை அறிமுகப்படுத்த விரும்பினேன். தனியாக ஒரு கூடுதல் பதிவு வேண்டும் எனக் கோரி ஏற்கனவே என் பெயரில் ஒரு திருத்தம் உள்ளது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அவர் முன்மொழிந்த திருத்தத்தைப் பற்றி இப்பொழுதுதான் நான் பேச இருந்தேன். பதிவு எண் 6 இன் கட்டமைப்பை கடுமையாகச் சேதப்படுத்தாமல் அதனிடையில் இந்தச் சொற்களை நுழைப்பதற்கில்லை. எனவே இந்நிலையில் இச்சொற்களை நுழைக்கும் முன்மொழிவை என்னால் ஏற்றுக்கொள்ள இயலாது என்பது உறுதி.

இப்போது, அய்யா, குழந்தைகள் பாதுகாப்பு எனும் பொதுச் சிக்கல் குறித்துப் பேசுவேன். குழந்தைகள் பாதுகாப்புக்கு அரசு வழிவகை செய்வதற்கு அடியேன் உட்பட இந்த அவையின் உறுப்பினர்கள் அனைவரும் வரைவுக்குழு உறுப்பினர்களும் ஒரு நாளும் எவ்வித மாறுபாடும் தெரிவிக்க இயலாது என்பதில் அய்யமில்லை. ஆனால் வரைவுக்குழு வரைந்த பட்டியலில் இப்பிரச்சினை ஏற்கனவே

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர் 3, பக். 935-36.

கவனிக்கப்பட்டுள்ளதா என்பதுதான் ஒரே கேள்வி. இப்பதிவுகளை வரைகையில் நாம் செய்திருப்பது சட்டமியற்றுவதற்கான கருப் பொருள்களை குறிப்பிடப்படுவதும் வகைப்படுத்துவதும்தானே தவிர சட்டமியற்றுவதன் நோக்கங்கள் அல்லது குறிக்கோள்களை எடுத் துரைப்பதல்ல.

குறிப்பிட்ட சில நிலைமைகளில் குழந்தைகள் பாதுகாப்பு என்னும் நோக்கத்தை அடைவதற்காக சட்டமியற்றத்தான் வேண்டு மென ஒரு சட்டமன்றம் கருதுமானால் அப்படிச் செய்ய அதற்கு உரிமை உண்டு. இந்தப் பதிவுகளில் எந்த ஒன்றின்படியும் குழந்தை களின் பாதுகாப்பு என்னும் இந்த நோக்கத்தை மாநில அரசு அடைய இயலாமற் போகுமா என்பதே கேள்வி. பட்டியல் IIஇல் சேர்க்கப் பட்டுள்ள இப்பதிவுகளில் எந்த ஒன்றையும் குழந்தைகளைப் பாதுகாப் பதற்கு சட்டங்கள் இயற்றும் நோக்கத்திற்கு மாநில அரசு பயன்படுத் தலாம் என்று எனக்குத் தோன்றுகிறது. எடுத்துக்காட்டதாக, நீதியாட்சி என்கிற பட்டியல் IIஇன் பதிவு 2 இன்படி குழந்தைகளுக்குச் சிறுவர் நீதிமன்றங்கள் அமைக்க மாநில அரசிற்கு உரிமையிருக்கும்.

**டாக்டர் பி.எஸ்.தேஷ்முக்:** நான் அதைச் சொல்லவில்லை. சிறுவர் நீதிமன்றங்களை நான் குறிப்பிடவே இல்லை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** சிறைச்சாலைகள், சீர்திருத்தப் பள்ளிகள் மற்றும் இளங்குற்றவாளிகளுக்கான நிறுவனங் களை எடுத்துக்கொண்டால் தனிவகைச் சிறைகளை நிறுவிட அவற் றுக்கு அதிகாரமளிக்கலாம். அங்கு சீர்திருத்தக் கொள்கை செயல் படுமே தவிர தண்டனைக் கொள்கை இருக்காது. கல்வியை எடுத்துக் கொள்வோம்.

**திருமதி ஜி. துர்காபாய்:** அய்யா, இளங்குற்றவாளிகள் என்ற பிரச்சினை ஏழ்மைப்பட்ட, கைவிடப்பட்ட குழந்தைகளின் பிரச் சினையிலிருந்து அடியோடு வேறுபட்ட அடிப்படை கொண்டிருப் பதை நான் பணிவுடன் எடுத்துக்காட்டலாமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் முன்பே சொன்னதுபோல், பட்டியல் IIஇல் கல்வி பற்றிச் சொல்லும் பதிவு 18 ஐ மாநில அரசானது கைவிடப்பட்ட குழந்தைகளும் உள்ளிட்ட சிறுவர் களுக்கான தனிவகைப் பள்ளிகள் நிறுவும் நோக்கத்திற்குப் பயன்

படுத்திக் கொள்ளலாம். சங்கங்களைப் பதிவு செய்வதையும் இன்ன பிறவற்றையும் பற்றிச் சொல்கிற பதிவு 42 இன்படி, குழந்தைகளைக் கவனித்துக் கொள்ளும் நோக்கத்திற்காகச் சங்கங்களைப் பதிவு செய்ய மாநில அரசுக்கு உரிமையிருக்கும் அல்லது இதைச் செய்ய அவை தாமே ஒரு வகைக் கழகத்தைத் தொடக்கலாம்.

ஆக, பட்டியல் IIஇல் சேர்க்கப்பட்டுள்ள பதிவுகளின்படி குழந்தைகளைப் பாதுகாக்கும் நோக்கத்திற்காக மாநில அரசு எல்லா வழிவகைகளும் செய்யலாம் என்று நான் உளமாரச் சொல்வதை என் நண்பர்கள் ஏற்றுக்கொள்வதாய் இருந்தால் குழந்தைகள் பாதுகாப்பு பற்றிச் சொல்வதற்குத் தனியாக ஒரு பதிவு வைத்துக் கொள்வதில் எப்பயனும் இல்லை. நான் முன்பே கூறியதுபோல் சிறுவர் பாதுகாப்பு என்பது சட்டமியற்றுவதற்கான ஒரு கருப் பொருளாக இருக்க முடியாது; அது சட்டமியற்றுவதன் குறிக் கோளாக, நோக்கமாக இருக்க முடியும்.

***டாக்டர் பி.எஸ். தேஷ்முக்:*** *கானகப் பறவைகளின் பாது காப்புக்காகவும் கூட நீங்கள் வழிவகை செய்திருக்கிறீர்கள்!*

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** *என் இரு நண்பர் களுமே இப்பிரச்சினையில் விடாப்பிடியாக இருப்பதை என்னால் காண முடிகிறது. ஆதலால் அவர்கள் தங்கள் திருத்தத்தை விலக்கிக் கொள்ளும்படி நான் வேண்டிக் கொள்வேன். திருப்பிப் பார்த்துத் திருத்தும் கட்டத்தில் வரைவுக்குழு இப்பிரச்சினையைப் பரிசீலிக்கும் என்றும், பட்டியல்களில் எந்த ஒன்றிலும் இப்படி ஏதேனும் ஒரு பதிவைச் சேர்ப்பது பயனுள்ளதாக இருக்குமானால், அந்தச் செய்தி யைப் பரிசீலித்து அவையில் ஒரு முன்மொழிவைக் கொண்டு வரு வோம் என்றும் அவர்களுக்கு உறுதியளிக்கிறேன். இந்நிலையில் நான் இதை ஏற்றுக்கொள்வது கடினம் என்றுதான் சொல்ல வேண்டும். ஏனென்றால் இப்பொருள் பற்றி ஒரு முழு நிறைவான பரிசீலனைக்கு என்னை ஈடுபடுத்திக் கொள்ளப் போதிய அவகாசம் இல்லை. இத்தகைய ஒரு பதிவை அறிமுகப்படுத்துவதற்கு முன் இந்த முழு நிறைவான பரிசீலனை தேவைப்படுகிறது.*

***திரு. துணைத் தலைவர்:*** *டாக்டர் தேஷ்முக் தமது திருத்தத்தை வலியுறுத்த விரும்புகிறாரா?*

**டாக்டர் பி.எஸ்.தேஷ்முக்:** பிறவற்றைச் சாராது தனித்தியங்கும் பதிவுக்கான என் அடுத்த திருத்தம் வரும் அந்த நேரத்தில் இப்பொழுது முடிந்திருப்பதை விடவும் சாதகமாக ஏதேனும் சொல்ல இயலும் என்றாவது டாக்டர் அம்பேத்கர் கூற வேண்டுமாய்க் கேட்டுக் கொள்கிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் முழுப் பிரச்சினையையும் கருதிப் பார்ப்பேன்.

***(திருத்தம் விலக்கிக் கொள்ளப்பட்டது. பதிவு 6 பொதுப்பட்டியலில் சேர்க்கப்பட்டது.)***

## பதிவு 15

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அய்யா, நான் முன்மொழிவது:

''பட்டியல் IIIஇன் பதிவு 15க்குப் பதிலாக பின்வரும் பதிவை இடம்பெறச் செய்யலாம்:

'15. நடவடிக்கைக்குரிய பிழைகள்.

நான் கைவிடச் சொல்லும் சொற்கள் உண்மையில் தேவையற்றவை.

(முன்மொழிவு ஏற்றுக்கொள்ளப்பட்டது. திருத்தப்பட்ட வடிவில் பதிவு 15 பொதுப்பட்டியலில் சேர்க்கப்பட்டது).

★ ★ ★

## புதுப் பதிவு 17-A

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** 'பட்டியல் IIIஇன் பதிவு 17க்குப் பிறகு பின்வரும் பதிவை நுழைக்கலாம்:

''17-A. தொழிலாளர்களுக்கான தொழில் மற்றும் செய்நுட்பப் பயிற்சி.''

***(திருத்தப்பட்ட வடிவில் பதிவு - 17 - A பொதுப்பட்டியலில் சேர்க்கப் பட்டது.)***

---

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர் 3, பக். 937.
2. அதே நூல், பக். 939

## பதிவு 20

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் முன் மொழிகிறேன்:

''பதிவு 20க்குப் பதிலாகப் பின்வரும் பதிவை முன்வைக்கலாம்:

'20. பட்டியல் Iஇன் பதிவு 62 இல் அபின் தொடர்பாக உள்ள வழிவகை களுக்கு உட்பட்டு போதை மருந்துப் பொருட்களும் நச்சுப் பொருட்களும்.''

(திரு. காமத் தமது திருத்தத்தை முன்மொழியவில்லை.)

(திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.)

(திருத்தப்பட்ட வடிவில் பதிவு 20 பொதுப்பட்டியலில் சேர்க்கப் பட்டது.)

## பதிவு 21

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அய்யா, நான் முன் மொழிவது:

''பட்டியல் IIIஇன் பதிவு 21க்குப் பதிலாகப் பின்வரும் பதிவை இடம்பெறச் செய்யலாம்:

'21. எந்திரமுறையில் இயக்கப்படும் ஊர்திகள், இத்தகைய ஊர்திகளுக்கு வரிவிதிப்பதற்கான கொள்கைகள் உட்பட.''

(திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.)

திருத்தப்பட்ட வடிவில் பதிவு 21 பொதுப்பட்டியலில் சேர்க்கப் பட்டது.

## புதிய பதிவு - 25-A

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்-அம்பேத்கர்:** அய்யா, நான் முன்மொழிவது:

''பட்டியல் IIIஇன் பதிவு 25க்குப் பிறகு பின்வரும் புதிய பதிவை நுழைக் கலாம்:

'25-A. பிறப்பு இறப்பு பதிவு உட்பட முக்கியப் புள்ளிவிவரங்கள்''.

---

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர் 3, பக். 939
2. மேலது பக். 940.

*(முன்மொழிவு ஏற்றுக்கொள்ளப்பட்டது. பதிவு 25-A பொதுப் பட்டியலில் சேர்க்கப்பட்டது.)*

## பதிவு 26

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அய்யா, நான் பணிவுடன் முன்மொழிவது:

''பட்டியல் III இன் பதிவு 26க்குப் பதிலாகப் பின்வரும் பதிவை இடம்பெறச் செய்யலாம்.

'26. வேலை நிலைமைகள், சேமநலநிதிகள், வேலைக்கு அமர்த்துபவர்களின் பொறுப்பு, தொழிலாளர்களுக்கான இழப்பீடு, இயலாமை மற்றும் முதுமைக்கான ஓய்வூதியங்கள், பேறுகால நன்மைகள் உட்பட தொழிலாளர் நலன்!''

*(திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது. திருத்தப்பட்ட வடிவில் பதிவு 26 பொதுப்பட்டியலில் சேர்க்கப்பட்டது.)*

## புதிய பதிவு 26-A

★ ★ ★

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அய்யா நான் முன்மொழிவது:

''பட்டியல் IIIஇன் பதிவு 26க்குப் பிறகு பின்வரும் பதிவை நுழைக்கலாம்:

'26.A சமூகக் காப்புறுதியும் சமூகப் பாதுகாப்பும்''

## புதிய பதிவு 26-B

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அய்யா, நான் விளக்கமளிக்கட்டுமா? பட்டியலிலுள்ள பதிவுகளைப் பற்றி ஓரளவுக்குக் குழப்பமும் தவறான புரிதலும் இருப்பதாய்த் தோன்றுகிறது. என் நண்பர் டாக்டர் தேஷ்முக்கின் திருத்தத்தைப் பொறுத்தவரை உழவர்கள், சாகுபாடியாளர்கள் மற்றும் அனைத்துவகை விவசாயிகளின் சேமநலத்தையும் அவர் விரும்புகிறார். சரி, 'எல்லா வகைப் பட்ட விவசாயிகள்' எனும் இந்த அனைத்தளாவிய சொற்களுக்குப்

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர் 3, பக். 940.
2. மேலது பக். 944.

பொருள் என்ன என்பது பற்றி ஒரு வகைத் தெளிவான கண்ணோட்டம் வேண்டும் என விரும்புகிறேன். ரூ.5 இலட்சம் நிலவரி செலுத்தும் ஜமீன்தார்களின் சேமநலத்தையும் அரசு பேண வேண்டுமென அவர் விரும்புகிறாரா?

**திரு. ஆர்.கே. சித்வா:** நீங்கள் அச்சொற்களை விட்டுவிடலாம்.

[1]**மாண்புமிகு டாக்டர் அம்பேத்கர்:** இதில் மால்குசார்களும் அடங்குவார்கள். எப்பதிவையும் நான் ஏற்கும் முன் இச்சொற்களின் பொருள் என்ன என்பதுபற்றி என் மனத்தில் தெளிவான, முரணற்ற கருத்து இருந்தாக வேண்டும். 'விவசாயிகள்' என்ற சொல்லுக்குத் துல்லியமான பொருள் ஒன்றும் இல்லை. இது நிலவாரதாரரைக் குறிக்கலாம். உள்ளபடியே பயிர்செய்பவரைக் குறிக்கலாம். இரண்டு ஏக்கர் வைத்துள்ளவரைக் குறிக்கலாம். ஐந்தாயிரம் ஏக்கர் அல்லது ஐந்து இலட்சம் ஏக்கர் வைத்திருப்பவரையும் குறிக்கலாம்.

**டாக்டர் பி.எஸ். தேஷ்முக்:** குறிப்பிட்ட அந்தச் சொற்றொடரை விட்டுவிட அணியமாய் உள்ளேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** இது நான் காணும் ஓர் இடர்ப்பாடு. இரண்டாவது கூறு என்னவென்றால் வெவ்வேறு பதிவுகள் குறித்தும் அவற்றின் பொருள் என்ன என்பது குறித்தும் என் நண்பர் டாக்டர் தேஷ்முக் அதிகக் கவனம் செலுத்துவதாகத் தெரியவில்லை. வேளாண்மையைப் பொறுத்தவரை பட்டியல் IIஇல் குறிப்பான இரு பதிவுகளைப் பெற்றுள்ளோம். எண் 21, அதாவது வேளாண்மை; எண் 24, அதாவது நிலம். அவர் இந்த இரு பதிவுகளையும் எடுத்துப் பார்ப்பாரேயானால் அவருக்கு.....*

**டாக்டர் பி.எஸ்.தேஷ்முக்:** எவ்வளவு பொய்மையான வாதங்கள் முன்வைக்கப்படுகின்றன! இதேபோல் தொழிலாளர் நலம் என்பது ஒரு குறிப்பான பதிவு. இருப்பினும் நீங்கள் அவர்களது தொழிற்பயிற்சிக்குத் தனித்த வழிவகை வேண்டும் என்கிறீர்கள்? பொய்மையான வாதங்களை முன்வைக்காதீர்கள்.

---

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர் 3, பக். 944 - 946.
★ புள்ளிகள் குறியீட்டைக் குறிக்கின்றன.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நிர்வாகங்களின் தவறுகள் தொடர்பான கேள்விகளுக்குப் பதிலளிப்பது என் வேலையன்று. இப்பதிவுகள் என்ன பொருள் அளிக்கின்றன என விளக்க மட்டுமே செய்கிறேன். நான் முன்பே சொன்னதுபோல் ஏற்கனவே நமக்குப் பட்டியல் IIஇல் இரு பதிவுகள் உள்ளன. 'வேளாண்மைக் கல்வி மற்றும் ஆராய்ச்சி, பூச்சிகளுக்கெதிரான பாதுகாப்பு, தாவர நோய்கள் தடுப்பு உட்பட'' வேளாண்மைக்குப் பதிவு 21 இருக்கவே இருக்கிறது.

**டாக்டர் பி.எஸ்.தேஷ்முக்:** பிறகு 'தொழிலாளர் நலம்'' வேண்டும் என்கிறீர்களே, ஏன்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நீங்கள் ஏன் கொஞ்சம் பொறுமை காக்கக்கூடாது? என் வேலை எனக்குத் தெரியும். என் வேலை எனக்குத் தெரியாது எனச் சொல்ல வருகிறீர்களா? எனக்கு என் வேலை தெரியும், நிச்சயமாக.

**டாக்டர் பி.எஸ்.தேஷ்முக்:** உங்கள் போக்கும் எனக்குத் தெரியும் எல்லோரையும் முட்டாளாக்கப் பார்க்காதீர்கள்!

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** வேளாண்மை தொடர்பாக மட்டுமல்லாமல் விவசாயிகள் தொடர்பாகவும் கூட எவ்வகை சேமநலப் பணியும் செய்திட எந்த மாநிலத்துக்கும் அதிகாரமளிக்கக்கூடிய ஒரு பதிவு ஏற்கனவே உள்ளது. இதோடு கூட நமக்குப் பதிவு 24 உள்ளது. 'நிலத்தில் அல்லது நிலத்தின் மீதான உரிமைகள், நிலக்குத்தகைகள், நிலவுடைமையாளர் - குத்தகையாளர் உறவு உள்ளிட்டவை'' தொடர்பாகச் சட்டங்கள் இயற்றலாம் என்று இப் பதிவில் வழிவகை செய்யப்பட்டுள்ளது. விவசாயிகளின் எல்லாப் பொருளாதார நலன்களையும் இப்பதிவின்படி கவனித்துக் கொள்ளலாம். ஆக, பதிவுகளைப் பொறுத்தவரை, மாகாண அரசுகள் வேளாண் வகுப்புகளின் சேமநலத்துக்காகச் செயல்படுத்துவதற்குத் துணை செய்ய வேண்டிய எதுவும் இல்லாமற் போய்விடவில்லை.

அடுத்ததாக என் நண்பர் திரு.சித்வா எழுப்பிய வினாவுக்கு வருகிறேன். அது மிகவும் நியாயமான ஒரு வினா எனக் கருதுகிறேன். 'தொழிலாளி' என்ற சொல்லுக்கான விளக்கம் என்ன என்பது அவர் கேள்வி. 'தொழிலாளி' என்றால் ஆலைத்தொழிலாளி, விவசாயத்

தொழிலாளி ஆகிய இருவரையும் குறிக்குமா? என்ற திட்டவட்டமான கேள்வியை அவர் என்னிடம் கேட்டார். இதுவே அவரது கேள்வி எனக் கருதுகிறேன். இதில் இரு தொழிலாளர்களும் அடங்குவர் என்பது என் திட்டவட்டமான விடை. இப்பதிவுக்கு ஆலைத் தொழிலாளரோடு தன்னை மட்டுப்படுத்திக் கொள்ளும் நோக்கம் இல்லை. ஆலைத் தொழிலாளர் ஆனாலும் சரி, விவசாயத் தொழிலாளர் ஆனாலும் சரி, தொழிலாளர் தொடர்பான எந்த வகை நலப் பணியும் பதிவு 26இன்படி மைய அரசோ, மாகாண அரசோ எது வேண்டுமானாலும் நிறைவேற்றக்கூடியதாக இருக்கும்.

இதேபோல், வேலை நிலைமைகள், காப்புநிதிகள், பணிக்கு அமர்த்துகிறவர்களின் பொறுப்பு, வேலையாட்களின் இழப்பீடு, இயலாமைக்கால ஓய்வூதியங்கள் உட்பட உடல்நலக் காப்பீடு இவையனைத்தும் ஆலைத்தொழிலாளர் ஆனாலும் சரி, விவசாயத் தொழிலாளர் ஆனாலும் சரி, எவ்வகைத் தொழிலாளர்களுக்கும் உரிமையுள்ளதாக இருக்கும். எனவே, இப்பதிவு எண் 26 ஐப் பொறுத்தவரை இது எந்தப் பொருளிலும் ஆலைத் தொழிலாளர் என்ற அளவோடு மட்டுப்பட்டதில்லை. என் நண்பர் டாக்டர் தேஷ்முக் முன்மொழிந்திருப்பது போன்ற திருத்தம் கிஞ்சிற்றும் தேவையற்றது. மேலும் ஆழமும் தெளிவும் அற்றதாகும் என்பேன்; இதற்குச் சட்ட விளக்கம் ஏதும் தரமுடியாது.

**டாக்டர் பி.எஸ். தேஷ்முக்:** இந்நாட்டில் விவசாயத் தொழிலாளர்களைத் தவிர வேறு வகுப்பினர் யாரும் இல்லையா? ''சாகுபடியாளர்கள்'' என்றும் 'விவசாயிகள்'' என்றும் அழைக்கப்படும் ஒரு வகுப்பினரைப் பற்றி டாக்டர் அம்பேத்கர் எப்போதாவது கேள்விப் பட்டதுண்டா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** நான் ஏற்கனவே விளக்கியிருப்பது போல் அவர்களின் சேமநலம் மாகாணப் பட்டியலின் பதிவுகள் 21, 24 இன்படி கவனித்துக் கொள்ளப்படும்.

***(டாக்டர் பி.எஸ். தேஷ் முக்கின் திருத்தம் மறுதலிக்கப்பட்டது. டாக்டர் அம்பேத்கரின் திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது. திருத்தப்பட்ட வடிவில் பதிவு 27 பொதுப்பட்டியலில் சேர்க்கப்பட்டது.)***

## பதிவு 27

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அய்யா, நான் முன்மொழிவது:

> "பட்டியல் IIIஇன் பதிவு 27க்குப் பதிலாக பின்வரும் பதிவை இடம் பெறச்செய்யலாம்:
>
> '27. வேலைவாய்ப்பும் வேலையின்மையும்".

திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

திருத்தப்பட்ட வடிவில் பதிவு 27 பொதுப்பட்டியலில் சேர்க்கப் பட்டது.

*　　　　*　　　　*

## பதிவு 28

*　　　　*　　　　*

[2]**திரு துணைத் தலைவர்:** நான் இப்பொழுது பிரச்சினையை முன்வைக்கிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** நான் ஒரு வார்த்தை சொல்லவேண்டும். தொழிலாளர் சேமநலத்தைப் பொறுத்தவரை 'தொழிற்சங்கம்' என்ற சொல் மிக விரிவான பொருளைக் குறிக்கிறது. அது ஆலைத்தொழில் நிறுவனங்களின் தொழிற்சங்கங்களை மட்டும் அல்லாமல் விவசாயத் தொழிலாளர்களின் தொழிற்சங்கங்களையும் கூட உள்ளடக்கக் கூடியதாக இருக்கலாம். இவ்வாறு இருக்க இங்கு 'ஆலைத்தொழில்' என்ற சொல்லை நுழைப்பதன் வாயிலாக 'தொழிற் சங்கம்' என்ற சொல்லின் வீச்சையும் பொருளையும் நாம் எல்லைக் குட்படுத்த முயலவில்லையா என எனக்குச் சற்றே ஐயமாய் உள்ளது. ஆனால் நான் எந்தத் திருத்தத்தையும் முன்மொழியவில்லை. இச் சொல்லை ஆராயவும் கருதிப் பார்க்கவும் வரைவுக்குழுவுக்கு ஒரு வாய்ப்பை அளிக்க விரும்புகிறேன். பதிவு இப்பொழுது உள்ளபடியே இருக்க வேண்டுமென விரும்புகிறேன். 'தொழிற்சங்கம்' என்ற

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர் 3, பக். 946.
2. மேலது நூல், பக். 947.

சொல்லின் விரிவான விளக்கத்தைக் கருத்தில் கொண்டு பார்க்கையில் இப்பதிவில் ஒரு பகுதியில் திருத்தம் தேவைப்படலாம் எனும் எனது ஐயத்தை வெளிப்படுத்தியிருக்கிறேன்.

**திரு. துணைத் தலைவர்:** டாக்டர் அம்பேத்கர் சொல்வதற்கு உட்பட்டு 28ஐ வாக்கெடுப்புக்கு விடுகிறேன். பிரச்சினை இதுதான்:

(முன்மொழிவு ஏற்றுக்கொள்ளப்பட்டது.)

பதிவு 28 பொதுப்பட்டியலில் சேர்க்கப்பட்டது.

## பதிவு 28-A

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** ஐயா, நான் முன்மொழிவது:

> "பட்டியல் IIIஇன் பதிவு 28க்குப் பிறகு பின்வரும் புதிய பதிவை நுழைக்கலாம்.
>
> '28-A வணிக மற்றும் தொழில் துறை ஏகபோகங்கள், கூட்டு நிறுவனங்கள் மற்றும் அறக்கட்டளைகள்'."

முன்மொழிவு ஏற்றுக்கொள்ளப்பட்டது. பதிவு 28-A பொதுப் பட்டியலில் சேர்க்கப்பட்டது.

## பதிவு 29

[2]**திரு. துணைத் தலைவர்:** பதிவு 29 இல் திருத்தமேதும் இல்லாததால் நான் இதை வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

பதிவு 29 பொதுப்பட்டியலில் சேர்க்கப்பட்டது.

**டாக்டர் பி.எஸ்.தேஷ்முக்:** அய்யா, எனது இத்திருத்தத்தின் ஒருபகுதி நேற்று மிக்க கனிவுடன் ஏற்றுக்கொள்ளப்பட்டது. ஆனால், சொல்லமைப்பைப் பொறுத்தவரை நாம் மாநிலப் பட்டியலைப் பற்றி விவாதித்துக் கொண்டிருந்த பொழுது 'கலப்பட உணவு' என்பதைப் பட்டியல்IIIக்கு மாற்றவேண்டும் என முடிவெடுக்கப் பட்டது. எனவே இந்நிலையில் நாம் இப்பதிவின் சொல்லமைப்பை

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர் 3, பக். 947.
2. மேற்படி நூல், பக். 948.

எடுத்துக்கொண்டால் பொருத்தமாக இருக்கக்கூடும். அதேநேரத்தில் எனது முதல் திருத்தமும் ஏற்றுக்கொள்ளப்பட வேண்டும் என விரும்பு கிறேன்.

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:*** ஈண்டு அறிமுகம் செய்யப்பட்டுள்ள பதிவு 29A ஆனது இதற்கு முன்பே இன்னும் மிக விரிவான முறையில் பட்டியல்Iஇல் நிறைவேற்றப்பட்டுள்ள பதிவு 61Aஇல் அடங்கியுள்ளது என்பதன்பால் நான் கவனத்தை ஈர்க்க லாமா? இங்கு பயன்படுத்தப்படும் 'சரக்குகள்'' என்ற சொல்லில் வேளாண் பொருட்களும் இன்ன பிறவும் அடங்கும். இதேபோல் நேற்று திரு. மைத்ராவின் முன்மொழிவின் பேரில் 29B ஏற்றுக் கொள்ளப்பட்டது. அது இப்பொழுது பட்டியல் IIIஇல் பதிவு 20A ஆகும்.

***டாக்டர் பி.எஸ்.தேஷ்முக்:*** என் நண்பர் சொல்லியுள்ள கருத் தின் முதல் பகுதியை ஏற்றுக்கொள்கிறேன். 29Aஐ சேர்த்துக் கொள் வதற்கு நான் முன்மொழியவில்லை. பட்டியல் IIஇல் இருந்தவாறு இப்பதிவை இடமாற்றம் செய்வதற்கு மட்டுமே முன்மொழியப் படுகிறதா என்று எனக்குத் தெளிவாகத் தெரியவில்லை.

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:*** இது 20A ஆகப் பொதுப்பட்டியலுக்கு மாற்றப்படுகிறது. இந்த முன்மொழிவுதான் அவையால் நிறைவேற்றப்பட்டது.

***டாக்டர் பி.எஸ்.தேஷ்முக்:*** அதன் வீச்சை விரிவாக்குவது இன்னும் கூட நன்றாய் இருக்காதா?

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** 'உணவுக் கலப் படம்' என்பதில் ஒவ்வொன்றும் அடங்கும் எனக் கருதுகிறேன்.

***டாக்டர் பி.எஸ்.தேஷ்முக்:*** அப்படியானால் இத்திருத்தத்தை நான் முன்மொழியவில்லை.

***திரு.துணைத் தலைவர்:*** ஆக, பதிவுகள் 30, 31 ஐ வாக்கெடுப் புக்கு விடுகிறேன்.

பதிவுகள் 30, 31 பொதுப்பட்டியலில் சேர்க்கப்பட்டன.

## புதிய பதிவு 31-A

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் முன் மொழிவது:

"பதிவு 31க்குப் பிறகு பின்வரும் புதிய பதிவை நுழைக்கலாம்:

'31-A. துறைமுகங்கள்: பெருந்துறைமுகங்கள் தொடர்பான பட்டியல் Iஇன் வழிவகைகளுக்கு உட்பட்டு"

*(முன்மொழிவு ஏற்றுக்கொள்ளப்பட்டது. பதிவு 31-A பொதுப் பட்டியலில் சேர்க்கப்பட்டது.)*

## பதிவு 32

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் முன் மொழிவது:

"பட்டியல் IIஇன் பதிவு 32 நீக்கப்படலாம்"

இது பட்டியல் Iக்கு மாற்றப்பட்டிருக்கிறது.

பதிவு 32 பொதுப்பட்டியலிலிருந்து நீக்கப்பட்டது.

## பதிவு 33

[3]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் முன் மொழிவது:

"பட்டியல் IIIஇன் பதிவு 33 நீக்கப்படலாம்"

நான் முன்பு சொன்னதுபோல் இதுவும் பட்டியல் Iக்கு மாற்றப் பட்டிருக்கிறது.

பதிவு 33 பொதுப்பட்டியலிலிருந்து நீக்கப்பட்டது.

## பதிவுகள் 33A & 33B

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் முன் மொழிவது:

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, செப்டெம்பர் 3, பக். 948.
2. மேற்படி அதே நூல், பக். 949
3. அதே நூல், பக். 949.
4. அதே நூல், பக். 949.

''பட்டியல் IIIஇன் பதிவு 33க்குப் பிறகு பின்வரும் புதிய பதிவுகளை நுழைக்கலாம்:

'33A. வெளியேறிச் சென்றவர்களின் உடைமை என்று சட்டம் கொண்டு அறிவிக்கப்பட்ட (விவசாய நிலம் உள்ளிட்ட) சொத்துடைமையைப் பாது காப்பதும் மேலாண்மை செய்வதும் தீர்வு செய்வதும்.

33B. இந்தியா, பாகிஸ்தான் என்னும் டொமினியன்கள் நிறுவப்பட்டதன் காரணத்தினால் தங்களது மூலவசிப்பிடத்திலிருந்து இடம்பெயர்ந்தவர்களின் துயர் தணிப்பும் மறுவாழ்வும்.''

*(திருத்தம் எண் 296 முன்மொழியப்படவில்லை.)*

***(பதிவுகள் 33A,33B பொதுப்பட்டியலில் சேர்க்கப்பட்டன.)***

## பதிவு 34

[1]**திரு. பிரஜேஷ்வர் பிரசாத்:** அய்யா, இப்பிரச்சினையில் இன்னொரு கூறு உள்ளது. அதன்பால் அவையின் கவனத்தை ஈர்க்க விரும்புகிறேன். பதிவு 34 இவ்வாறு உள்ளது:

''பொருளாதார, சமூகத் திட்டமிடல்.''

அரசியல் திட்டமிடல் என்னவாயிற்று?

**மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர்:** அது பெரிதும் அழிவுண்டாக்கு வதாய் இருக்கும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அரசமைப்புச் சட்டத்தைத் திருத்துவதன் மூலம் இதைச் செய்ய முடியும்.

★ ★ ★

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அய்யா. திருமதி பூர்ணிமா பானர்ஜி முன்மொழிந்த இத்திருத்தத்தை ஏற்றுக்கொள்ள இயலாமைக்கு வருந்துகிறேன். 'கல்வி'' என்ற சொல்லைச் சேர்க்கத் தேவையே இல்லை என்று எனக்குத் தோன்றுகிறது. ''சமூக'' என்ற சொல் முழுச் சமூகம் தொடர்பான எந்த ஒன்றையும் உள்ளடக்கப் போதுமானதே ஆகும். சமயத் திட்டமிடல் மட்டும் இதற்கு விலக் காகும் என்பது உண்மைதான். முரண்பாடு என்பது 'சமூக' என்ப தற்கும் 'சமய' என்பதற்கும் இடையிலானதாக மட்டுமே இருக்கும்.

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, செப்டெம்பர் 3, பக். 950.
2. மேற்படி அதே நூல், பக். 952.

'சமயம்' தொடர்பாக மட்டும் திட்டமிடும் உரிமை அரசுக்கு இருக்காது; மற்ற ஒவ்வொன்றிலும் அரசுக்கு உரிமையிருக்கும்.

என் மதிப்பிற்குரிய நண்பர் திரு.ரோகிணி குமார் சௌத்ரி கூறியவற்றைப் பொறுத்தவரை இப்பதிவுக்குப் பொதுப்பட்டியலில் இடம் கிடைத்திருப்பதை அவர் உணர்வார் எனக் கருதுகிறேன். மாநில அரசுக்கும் கூட அதன் விருப்பம்போல் திட்டமிட்டுக் கொள்ளும் உரிமை இருக்கும். மைய அரசு திட்டமிடத் தொடங்கி, அத்திட்டம் மாநில அரசு தயாரித்த திட்டத்தோடு முரண்பட்டால் மட்டுமே மாநில அரசு தயாரித்த திட்டம் வழிவிட்டு விலகிநிற்கும். இது எவ்வகையிலும் மாநில அரசின் திட்டமிடும் அதிகாரத்தை ஆக்கிரமிப்பது ஆகாது.

எனவே, இந்தப் பதிவு இப்போதுள்ளவாறே அதே மொழி நடையில் இருந்து வரவேண்டும் என்று பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

**திரு.துணைத் தலைவர்:** பிரச்சினை இதுதான்; 'பட்டியல் IIIஇன் பதிவு 34க்குப் பதிலாக பின்வரும் பதிவை இடம்பெறச் செய்யலாம்:

'34. பொருளாதார, கல்வி, சமூகத் திட்டமிடல்'''

திருத்தம் மறுதலிக்கப்பட்டது.

***(பதிவு 34 பொதுப்பட்டியலில் சேர்க்கப்பட்டது.)***

## பதிவு 34-A

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் முன்மொழிவது:

''பட்டியல் IIIஇன் பதிவு 34க்குப் பிறகு பின்வரும் புதிய பதிவை நுழைக்கலாம்:

'34A. தொல்பொருள் ஆய்வுக்குரிய இடங்களும் மீதமிச்சங்களும்.''

இது பொதுப் பட்டியலில் இருக்கும்.

(பதிவு 34A பொதுப் பட்டியலில் சேர்க்கப்பட்டது.

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர் 3, பக். 952.
2. மேற்படி அதே நூல், பக். 953.

## பதிவு 35

[1]மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஐயா, நான் முன்மொழிவது:

''பட்டியல் IIIஇன் பதிவு 35க்குப் பதிலாகப் பின்வரும் பதிவை இடம்பெறச் செய்யலாம்:

'35 ஒன்றிய அரசின் அல்லது ஒரு மாநில அரசின் நோக்கங்களுக்காக அல்லது வேறு எந்தப் பொது நோக்கங்களுக்காக கையகப்படுத்தப்படும் சொத்துக்கான இழப்பீட்டை நிர்ணயிப்பதற்கு அடிப்படையான கொள்கைகளும், மேலும் இத்தகைய இழப்பீட்டைத் தரவேண்டிய வடிவமும் வகையும்.''

(திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.)

திருத்தப்பட்ட வடிவில் பதிவு 35 பொதுப் பட்டியலில் சேர்க்கப் பட்டது.

## பதிவு 35-A

[2]மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்: அய்யா, நான் முன்மொழிவது:

''பட்டியல் IIIபதிவு 35க்குப் பிறகு பின்வரும் புதிய பதிவை நுழைக்கலாம்:

'35A. குறிப்பிட்ட தொழில்களின் மீது ஒன்றிய அரசு கட்டுப்பாடு செலுத்துவது பொதுநலனுக்கு உசிதமென நாடாளுமன்றம் சட்டம் கொண்டு அறிவிக்குமிடத்தே அந்தத் தொழில்களின் உற்பத்திப் பண்டங்களிலான வர்த்தகம் மற்றும் வணிகம், அப்பண்டங்களின் உற்பத்தி, வழங்கல் மற்றும் பங்கீடு''

(முன்மொழிவு ஏற்றுக்கொள்ளப்பட்டது.)

பதிவு 35-A பொதுப் பட்டியலில் சேர்க்கப்பட்டது.

## பதிவு 36

[3]மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: அய்யா, நான் முன்மொழிவது:

''பட்டியல் IIIஇன் பதிவு 36க்குப் பதிலாகப் பின்வரும் பதிவை இடம் பெறச் செய்யலாம்:

'36. பட்டியல் IIஅல்லது III இல் குறித்துரைக்கப்படும் செய்திகளில் எந்த ஒன்றின் நோக்கங்களுக்காகவும் தொழில்களும் புள்ளிவிவரங்களும்.''

---

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர் 3, பக். 953
2. மேலது பக். 953.
3. மேலது பக். 953.

**திரு. அவைத் தலைவர்:** திருத்தம் ஏதுமில்லை.

*(பதிவு 36 பொதுப்பட்டியலில் சேர்க்கப்பட்டது.)*

## புதிய பதிவு

[1]**திரு. அவைத் தலைவர்:** பண்டித கோவிந்த வல்லப பந்த் முன்மொழிந்துள்ள புதிய பதிவு உள்ளது.

*(திருத்தம் எண் 144 முன்மொழியப்படவில்லை.)*

[2]**டாக்டர் பி.எஸ். தேஷ்முக்:** அய்யா, நான் முன்மொழிவது:

'பட்டியல் IIIஇல் பின்வரும் புதிய பதிவு சேர்க்கப்படலாம்:

'உறுப்பு VIல் கண்டுள்ளவாறு சுரண்டலிலிருந்தும் கைவிடப்படுவதிலிருந்தும் குழந்தைகளையும் இளைஞர்களையும் பாதுகாத்தல்.''

அய்யா, இரு தறுவாய்களில் இதே போன்ற திருத்தங்களை முன்மொழிந்தேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** இத்திருத்தம் ஏனைய திருத்தங்களோடு சேர்த்துப் பரிசீலிக்கப்பட்டது. இப்பிரச்சினை வரைவுக் குழுவால் பரிசீலிக்கப்படும் என என் நண்பருக்குப் பதிலளித்தேன். அப்போது அவர் ஏற்றுக் கொள்ளக் கூடியவராகவே இருந்தார்.

**டாக்டர் பி.எஸ். தேஷ்முக்:** நான் பணிவுடன் தெரிவித்துக் கொள்வதெல்லாம் வரைவுக்குழுவின் முடிவுக்கேற்ப சொல்லமைப்பை மாற்றலாம். ஆனால் இடைக்கால அடிப்படையில் இப்பதிவை முன்மொழிந்தவாறு ஏற்றுக்கொள்ளப்படலாம். இதனை வரைவுக்குழு மட்டும் பரிசீலிக்க விடுவது போதாது. பொருத்தமாய் இருக்கக்கூடிய சொல்லமைப்பையும் ஏற்றுக் கொள்ளலாம்; ஆனால் சுரண்டலிலிருந்தும் கைவிடப்படுவதிலிருந்தும் குழந்தைகளையும் இளைஞர்களையும் பாதுகாப்பது தொடர்பான ஒரு பதிவு இருக்க வேண்டும். இதை டாக்டர் அம்பேத்கர் கனிவுடன் ஏற்றுக்கொள்வார் என நம்புகிறேன்.

---

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர் 3, பக். 954.
2. அதே நூல், பக். 954.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** என் நண்பரின் மனத்திலுள்ள நோக்கத்துக்கு ஏனைய பதிவுகளில் எந்த ஒன்றும் பயன் படாதென்றால் இப்படி ஒரு பதிவைச் சேர்க்க என்னால் இயன்றதைச் செய்வேன் என அவருக்கு நான் சொல்லியிருக்கிறேன். நான் இவ் வுறுதியை அவருக்கு அளித்திருக்கிறேன்.

**டாக்டர் பி.எஸ்.தேஷ்முக்:** இந்த ஒரு பிரச்சினைக்கு நானும் அவை உறுப்பினர்களில் குறைந்தது சிலரும் மிகப் பெரும் முக்கியத் துவம் அளிக்கிறோம்; நான் முன்மொழிந்திருப்பதைப் போன்ற ஒரு பதிவு நமக்கு இருக்குமானால் எந்தத் தீங்கும் நேர்ந்திடாது என நம்புகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இப்பிரச்சினையை என்னால் இயன்ற அளவு சீரிய முறையில் பரிசீலிப்பேன். இதன் இலக்கின்பால் நான் முழுமையாகப் பரிவு கொண்டுள்ளேன். இதற்கு மேல் நான் என்ன சொல்ல முடியும்?

★ ★ ★

[1]**திரு. நசிருதீன் அகமது:** விபசாரத்தை அடியோடு தடை செய்ய வேண்டும் என்று இப்பொழுதுதான் ஒரு பேச்சாளர் சொல்லி யிருக்கிறார்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** இது நாம் விவா திக்க வேண்டிய ஒரு கேள்விதானா? அதிகாரம் மாநில அரசுக்கா, அல்லது மைய அரசுக்கா, அல்லது அது பொதுப்பட்டியலில் இருக்க வேண்டுமா என்பதுதான் ஒரே கேள்வி. அதிகாரத்தை எவ்வாறு செலுத் துவது; பகுதியளவுக்கு அனுமதிப்பதா அல்லது அடியோடு தடை செய்வதா என்பது அந்தந்தச் சட்டமன்றத்துக்கான பிரச்சினை. இதை நாம் சட்டமன்றத்திடம் விட்டுவிட வேண்டும்.

**திரு. நசிருதின் அகமது:** இது பொருத்தமானதே என பணி வுடன் தெரிவித்துக் கொள்கிறேன். இத்திருத்தம் 'பாலியல் தொழிலை ஒழுங்குபடுத்தவும் கட்டுப்படுத்தவும்' வழிவகை செய்கிறது.

**திரு. வி.ஐ. முனிசாமி பிள்ளை:** (சென்னை : பொது): அய்யா, நான் பேச விரும்புகிறேன்.

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர் 3, பக். 957-58.

**திரு. அவைத் தலைவர்:** விவாதத்தை முடிப்பதற்கு முன் மொழியப்பட்டுள்ளது. பிரச்சினை இதுதான்:

''இப்போது பிரச்சினை வாக்கெடுப்புக்கு விடப்படலாம்.''

முன்மொழிவு ஏற்றுக்கொள்ளப்பட்டது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அய்யா, இவற்றை ஒழுங்குபடுத்துவதற்கு, அதாவது பொதுவிடுதிகள் தொடர்பாகவோ ஓரளவுப் பெருவீத விவசாயம் தொடர்பாகவோ இப்பதிவுகளின் படி மாநிலத்திற்குப் போதிய அதிகாரம் வழங்கப்பட்டுள்ளது. பட்டியல்IIஇல் பொது ஒழுங்கு பற்றிச் சொல்லும் பதிவு 1 ஐயும் காவல்துறை பற்றிச் சொல்லும் பதிவு 4 ஐயும் பொதுப்பட்டியலில் குற்றவியல் சட்டம் பற்றிச் சொல்லும் பதிவையும் என் நண்பர் டாக்டர் தேஷ்முக் எடுத்துப் பார்ப்பாரானால் இப்பிரச்சினைகளை ஒழுங்குபடுத்திடப் போதுமானதற்கும் கூடுதலாக அதிகாரம் வழங்கப் பட்டுள்ளதைக் காண்பார். மாநிலப் பட்டியலில் நிலம் பற்றிச் சொல்லும் பதிவு 24 ஐயும் வேளாண்மை பற்றிச் சொல்லும் பதிவு 21ஐயும் அவர் எடுத்துப் பார்ப்பாரானால் மாநிலங்களுக்கு அரசுப் பண்ணைகள் அல்லது அவர்கள் விரும்பும் எதையும் வைத்துக் கொள்ளப் போதுமானதற்கும் கூடுதலாகவே அதிகாரம் இருக்கக் காண்பார். ஆக, எஞ்சியிருக்கும் ஒரே ஒரு கேள்வி பண்ணைகள் அமைத்தல், பொது விடுதிகளை ஒழுங்குபடுத்தல் ஆகியவை தொடர் பான இந்தப் பொருள் பொதுப் பட்டியலில் இருக்க வேண்டுமா என்பதுதான். என் பார்வையில் இது பொதுப்பட்டியலில் இருக்க வேண்டுமா அல்லது மாநிலப் பட்டியலில் இருக்க வேண்டுமா என்பதை முடிவுசெய்வதற்கான அளவுகோல் இப்பிரச்சினைகள் அனைத்திந்திய அக்கறைக்கு உரியவையா அல்லது முற்ற முழுக்க வட்டார அக்கறைக்கு உரியவையா என்பதே ஆகும். என் பார்வையில் விபச்சாரம், பொதுவிடுதிகளை ஒழுங்குபடுத்தல், பண்ணைகள் அமைத்தல் ஆகியவை வட்டார அக்கறைக்குரிய செய்திகளாகும். எனவே இவற்றை மாநிலங்கள் பார்த்துக் கொள்ளட்டும் என்று விட்டுவிடுவது மேல். இதற்கு அவை போதுமானதற்கும் கூடுதலான அதிகாரம் பெற்றுள்ளன. மைய அரசு இந்த வேலையை எப்படிச் செய்யஇயலும் என்பது எனக்குத் தெரியவில்லை. மைய அரசிடம் விவசாய நிலம் எதுவும் இல்லை. மைய அரசு பண்ணை நிறுவ விரும் பினால் அது விவசாயிகளிடமிருந்து நிலவுடைமையைக் கையகப் படுத்த வேண்டும். இதையே மாநில அரசும் செய்யலாம். இப்பதிவுகள்

பொதுப்பட்டியலில் இடம்பெறுவது என்ன நோக்கத்திற்குப் பயன் படும் என்று எனக்குத் தெரியவில்லை; அரசுகள் என்று நாம் அழைக்கிற நம் மாநிலங்கள் ஐரோப்பாவிலுள்ள பல அரசுகளைக் காட்டிலும் மிகப் பெரியவை என்பதையும் நினைவுப்படுத்தியாக வேண்டும்.

**திருமதி ஜி. துர்காபாய்:** டாக்டர் அம்பேத்கர் ஒன்றைத் தெளிவு படுத்துவாரா? இப்பதிவு விபச்சாரத்தை ஒழுங்குபடுத்தல் அல்லது தடைசெய்தல் பற்றிப் பேசுகிறது. இங்கு 'ஒழுங்குபடுத்தல்'' என்பதன் பொருள் எனக்கு விளங்கவில்லை. முழுத்தடை என்பதாக இருக்க வேண்டும் எனக் கருதுகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** மாநிலங்களால் அவற்றை ஒழுங்கபடுத்த முடியும்; தடை செய்யவும் முடியும். மாநிலங்களால் இதைச் செய்ய முடியும். (எல்லாத் திருத்தங்களும் மறுதலிக்கப்பட்டன.)

## புதிய பதிவு 88-A

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** 58 சான்றோர் களும் முன்மொழிந்துள்ள திருத்தத்தை ஏற்றுக்கொள்ள அணியமாய் உள்ளேன்.

**திரு. மகாவீர் தியாகி:** அய்யா, உங்களுக்கு நான் ஒன்று சொல் லட்டுமா? அவையில் ஒரு பெரும் பிரிவினர் இப்பதிவை நீக்க வேண்டுமென விரும்புகிறார்கள். ஆகவே நீங்கள் தயவுசெய்து வரைவுக்குழு மேற்கொண்டு பரிசீலிப்பதற்கு இவ்வினத்தை நிறுத்தி வைத்துக் கொள்ள இணங்கலாம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அய்யா, இத்திருத் தத்தை முன்மொழிபவர் அக்கறையோடு இதைச் செய்வாரானால் ஏற்றுக்கொள்ள நான் அணியமாய் உள்ளேன்.

**திரு. ராம்நாத் கோயங்கா (சென்னை - பொது):** அய்யா, அண்மையில் நீங்கள் டாக்டர் அம்பேத்கரை அவரது மாற்று முன் மொழிவுடன் அணியமாய் இருக்கும்படி கேட்டுக் கொண்டீர்கள்.

---

1. அரசமைப்புப்பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர் 3, பக். 960-63.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அப்படி அவர் எதுவும் சொல்லவில்லை.

**திரு. ராம்நாத் கோயங்கா:** அய்யா, இந்தக் கூறு சிறிது நேரம் எடுத்துக் கொள்ளும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அய்யா, திருத்தம் இதோ உள்ளது.

**திரு. ராம்நாத் கோயங்கா:** என் யோசனை என்னவென்றால் நாம் வரைவுக் குழுவுடன் தொடர்புகொண்டு எல்லாரும் ஏற்றுக் கொள்ளத்தக்க ஒரு சூத்திரத்தை வந்தடையலாம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** இது நீங்கள் முன் மொழிந்துள்ள சூத்திரம்.

**திரு ராம்நாத் கோயங்கா:** உங்களோடு கலந்தாலோசித்துப் பயன்பெறுவோம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அய்யா, அவர்கள் பதிவு 88Aஐ முன்மொழிந்தால் நான் அதை ஏற்றுக்கொள்ள அணிய மாய் உள்ளேன்.

**திரு. எஸ். நாகப்பா:** அது முன்மொழியப்பட்டு விட்டது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அது இன்னும் முன்மொழியப்படவில்லை. அது பட்டியல் Iஇல் உள்ள பதிவு 88A மாநிலப் பட்டியலில் அல்ல என்று மறுப்பு தெரிவிக்கப்பட்டது. அது முன்மொழியப்படவில்லை. எனவே, இதைத் திரு.கோயங்கா முன் மொழிய விரும்பினால்....*

**திரு. தேஷ்பந்து குப்தா:** அய்யா, இப்பிரச்சினையை நிறுத்தி வைத்துக் கொள்ளலாம் என்று நான் முறைப்படி முன்மொழிகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஏன்? நாம் முழுப் பட்டியலையும் முடிக்க முயன்றோம். அதனால்தான் நாம் விரைந்

---

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர் 3, பக். 960-63.

தோம், பல உறுப்பினர்களை அவர்கள் வழக்கமாய்ப் பேசும் அள வுக்குப் பேசவிடவில்லை. இப்போது பலரும் கையொப்பமிட்டு ஒரு திட்டவட்டமான திருத்தம் கொடுத்திருப்பதால் இதை ஏன் நிறுத்தி வைத்துக் கொள்ள வேண்டும் என எனக்குத் தெரியவில்லை.

**திரு. தேஷ்பந்து குப்தா:** அது திட்டவட்டமான வடிவத்தில் இருக்கவில்லை. எப்படி என்றால் டாக்டர் அம்பேத்கரே கூட வரை வில் மறுப்புக்குரிய ஏதோ இருக்கக் கண்டு இன்னுஞ்சிறந்த ஒரு வரைவை நமக்கு வழங்கி உதவ அணியமாய் இருந்தார்.

**திரு. அவைத் தலைவர்:** அண்மையில் டாக்டர் அம்பேத்கர் கூறியதை நான் புரிந்து கொண்டபடி இது பட்டியல் Iஇல் இருக்க வேண்டுமா, பட்டியல் IIல் இருக்க வேண்டுமா என்பது ஒன்றே கேள்வியாக இருந்தது. கொள்கைப் பிரச்சினை குறித்து முடிவெடுக்க வேண்டும் என்றார் அவர்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** இதை நீங்கள் பட்டியல் Iஇல் சேர்க்க விரும்பினால் அதை நான் ஏற்றுக்கொள்ள அணியமாய் உள்ளேன்.

**திரு. அவைத் தலைவர்:** இப்பதிவு குறிப்பாக எந்த இடத் தில் சேர்க்கப்பட வேண்டும் என்பது வரைவுக்குழுவிடம் விடப்படும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** முழுத் தொல்லை யும் இதுவே. இப்பதிவு முதலில் பட்டியல் IIஇல் இருந்தது. இது இவ்வடிவில் பட்டியல்Iஇல் இருக்க வேண்டுமே தவிர பட்டியல் IIஇல் இருக்கலாகாது என்று அவர்கள் எதிர்ப்பு தெரிவித்தார்கள். அவர்கள் விரும்பினால் இதை ஏற்றுக்கொள்ள அணியமாய் உள்ளேன்.

★ ★ ★

**திரு. தேஷ்பந்து குப்தா:** அய்யா, தகவலுக்காகக் கேட்கிறேன். இரண்டாம் பட்டியலில் நேற்று நிறுத்தி வைத்துக்கொண்ட பதிவு எண் 58க்கு என்ன நேரிடும் என்பதை நான் கேட்டறியலாமா?

**திரு. அவைத் தலைவர்:** அது ஒழிந்துவிடும்.

**திரு. தேஷ்பந்து குப்தா:** இவை இரண்டும் இணைந்து செல் வதால் அது நேற்று நிறுத்திவைத்துக் கொள்ளப்பட்டது.

. . .

**திரு. அவைத் தலைவர்:** ஏனென்றால் இதைப் பட்டியல் IIக்கு மாற்றக் கோரிய ஒரு திருத்தம் இருந்ததால் அது நிறுத்திவைத்துக் கொள்ளப்பட்டது. இது பட்டியல்Iஇல் நிறைவேற்றப்பட்டால் அத் திருத்தம் ஒழுங்கு மீறுவதாய் இருக்கும்.

**திரு.தேஷ்பந்து குப்தா:** இரு திருத்தங்கள் உள்ளன. இதனைப் பட்டியல் Iக்கு மாற்றலாம் என்பது ஒன்று. பதிவு 58 இன் வீச்செல்லையை வரையறுப்பது இன்னொன்று. நேற்று திருத்தம் நிறுத்திவைத்துக் கொள்ளப்பட்டது. ஏனென்றால், அந்நேரத்தில் இப்பிரச்சினை அவை முன் இருக்கவில்லை. அவை இரண்டும் இணைந்தே செல்லவேண்டும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இதை நான் ஏற்றுக்கொள்ள வேண்டிய கட்டாயமில்லை. அவை இணைந்து செல்வதில்லை. இதை நான் ஏற்க மறுக்கிறேன்.

**திரு. அவைத் தலைவர்:** எண் 122 எனும் ஒரு திருத்தம் இருந்தது. இத்திருத்தத்தின் காரணத்தால் அதன் பரிசீலனை நிறுத்தி வைத்துக் கொள்ளப்பட்டது. இப்போதுதான் முன்மொழியப்பட்டிருக்கிற திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டால், பிறகு திருத்தம் எண் 122 ஒழுங்கு மீறயதாகிறது. டாக்டர் அம்பேத்கரின் முன்மொழிவு அதாவது திருத்தம் எண் 121 மட்டுமே அவை முன் இருக்கும்.

**திரு. ராம்நாத் கோயங்கா:** பட்டியல் IIஇல் தொடர் விளைவான ஒரு திருத்தம் வராதா? மாநிலப் பட்டியலில் விற்பனை மீதும் அதேபோல் விளம்பரம் மீதும் வரிகள் விதித்திட மாநிலத்திற்குச் சில அதிகாரங்கள் வழங்கப்பட்டுள்ளன. இது பட்டியல் Iக்கு மாற்றப்படுமானால் தொடர்விளைவாக வரும் திருத்தம் பற்றி அறிவிப்புக் கொடுத்துள்ளோமே அது.

**திரு. அவைத் தலைவர்:** இது பட்டியல் Iஇல் சேர்க்கப்படலாம் என்பதுதான் அறிவிப்பு. இது பட்டியல் Iஇல் எடுத்துக் கொள்ளப்பட்டால் ஒழிந்துவிடும்.

**திரு. ராம்நாத் கோயங்கா:** ஆனால் இப்பதிவில் பட்டியல் IIஇல் விதிவிலக்குக் வழிவகை செய்ய வேண்டி இருக்கும்; செய்தித்தாள்களை விலக்காகக் கொண்டு சரக்குகளின் விற்பனை.

*திரு. அவைத் தலைவர்:* இது தேவையில்லை.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* இது தொடர் விளைவான திருத்தம் அல்லவே அல்ல. இரு திருத்தங்களுமே ஒன்றை யொன்று சாராதவை. 88-A என அழைக்கப்படவுள்ள ஒரு புதுப் பதிவைச் சேர்த்து இப்பதிவை விரிவாக்க வேண்டும் என்பது ஒரு திருத்தம். அடுத்ததாக மற்றொரு திருத்தமும் உள்ளது. பட்டியல் IIஇல் விற்பனை வரி பற்றிச் சொல்லும் பதிவு 58க்கான என் திருத் தத்துக்கு திருத்தம் ஆகும் இது. 'சரக்குகள்'' என்ற சொல் செய்தித் தாள்களைத் தவிர்க்கும் வகையில் உரித்தாக்கப்பட வேண்டும் என்று அந்தத் திருத்தம் சொல்கிறது.

அதற்கேயுரிய நிறைகுறைகளின் அடிப்படையில் அதற்குத் தீர்வு காணப்படும். இங்கு முன்மொழியப்பட்டுள்ளவாறு பதிவு 88Aஐச் சேர்த்துப் பட்டியல்Iஐ விரிவாக்க வேண்டுமா என்பதுதான் நாம் விடை காண வேண்டிய உடனடிக் கேள்வி.

*திரு.ராம்நாத் கோயங்கா:* இதுதான் நிலை. விளம்பரங்கள் உட்பட செய்தித்தாள்கள் மீதான வரிகள் பட்டியல்Iக்கு மாற்றப்பட வேண்டும் என்றும், செய்தித்தாள்கள் மீது வரிவிதிக்கும் ஆணை யுரிமை மாகாணங்களுக்கு இருக்கக்கூடாது என்றும் நாம் முன் மொழிந்திருக்கிறோம். எனவே திருத்தம் எண் 57 பட்டியல் IIஇல் பதிவு 58 இல் திருத்தம் எண் 122க்குத் தொடர்விளைவான ஒரு திருத்தமாகும். எனவே இந்த இரு திருத்தங்களையும் சேர்த்து எடுத்துக் கொள்ளவேண்டி இருக்கும். நேற்று பட்டியல்IIஇல் பதிவு 58 பற்றிய இந்தப் பிரச்சினை நம்முன் வந்தபோது, நீங்கள் தீர்ப்பளிக்கும் வரை இதனைத் தள்ளிவைத்துவிட்டு இந்தப் பதிவுகள் குறித்து ஒன்றாக ஒரு முடிவு எடுக்கலாம் என்று சொன்னீர்கள்.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* அவற்றை ஒன்றன் பின் ஒன்றாக எடுத்துக்கொள்வோம். இரு திருத்தங்களையும் ஒன்றன் பின் ஒன்றாக வைக்கலாம்.

*திரு. ராம்நாத் கோயங்கா:* அய்யா, பட்டியல் IIஇல் முதலில் பதிவு 58 ஐயும் பிறகு 88-A ஐயும் வைக்கலாம் என்று யோசனை சொல்லலாமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** உங்கள் விருப்பம் போல் எப்படி வேண்டுமானாலும் இதை வைத்துக் கொள்ளலாம். ஆனால் இரண்டாம் திருத்தத்தின் மீது குறிப்பிட்ட விதத்தில் வாக் களிப்பது திருத்தத்தின் மீது வேறொரு விதத்தில் வாக்களிப்பதோடு முரண்படும் என்பதை நான் உங்களுக்குச் சொல்லவேண்டும். ஒன்றை ஏற்றுக்கொண்டு மற்றொன்றை மறுதலித்திட அவைக்கு உரிமை யிருக்கும்.

**திரு. ராம்நாத் கோயங்கா:** இப்பிரச்சினையில் உங்கள் தீர்ப்பை அறியவிரும்புகிறேன். நீங்கள் செய்தித்தாள்கள் மீதான வரிகளைப் பட்டியல் Iக்கு மாற்றினால் பிறகு அதற்குப் பட்டியல் IIஇலும் எந்த இடமும் இருக்க முடியாமற் போகும். அதற்குப் பட்டியல் Iஇல் இடமிருந்தால் பிறகு அது கண்டிப்பாகப் பட்டியல் IIஇலிருந்து ஒழிந்து விடும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** வரிகளைப் பொறுத்தவரை பட்டியல் IIஇலிருந்து மட்டும் ஒழிந்துவிடும். ஆனால் சரக்குகளின் விற்பனையைப் பொறுத்தவரை அது நீடித்திருக்கும். அதையும் நீங்கள் ஒழித்துவிட வேண்டுமென விரும்புகிறீர்களா? உங்களுக்கு இரட்டைக் குறிக்கோள் உள்ளது. அதாவது நான் புரிந்து கொண்டபடி, செய்தித்தாள்கள் எந்த ஒரு தீர்வைக்கும் உட்பட் டவையாக இருக்கக்கூடாது, விற்பனை வரிச் சட்டத்தின்படியும் எந்த வரிக்கும் உட்பட்டவையாக இருக்கக்கூடாது என்கிறீர்கள். வெளிப்படையாகச் சொல்வதென்றால் இரு நன்மைகளையும் நான் உங்களுக்கு அளிக்க அணியமாய் இல்லை.

**திரு. ராம்நாத் கோயங்கா:** அய்யா, திங்கட்கிழமை காலை வரை இப்பிரச்சினையை நிறுத்திவைத்துக் கொள்ளும்படி கேட்டுக் கொள்கிறேன். இதனால் நாங்கள் கூடி விவாதித்து விட்டு உங்களிடம் வரமுடியும். ஏனென்றால் பொருள் விளக்கம் என்னவாயினும், சொல்லப்படுவதுதான் நமது திருத்தத்தின் குறிக்கோள். அந்தக் குறிக் கோள் செயல்படுத்தப்படவில்லை என்றால் நாம் வேறு திருத்தங் கள் கொண்டுவர வேண்டியிருக்கும். ஆனால் அதுவே நமது விருப்பம். நாம் சாமானியர்களே. டாக்டர் அம்பேத்கர் நம்மை வழிநடத் துவார். அனைத்து வரி விதிப்பையும் மாகாணங்கங்களிலிருந்து எடுத்து மைய அரசிடம் தந்துவிட வேண்டும். அந்த நோக்கம் நிறைவேற்றப் படவில்லை எனில் நம் நோக்கங்களை நிறைவேற்றும்படியான

வேறொரு திருத்தத்தை முன்மொழிய வேண்டி இருக்குமோ என்றஞ்சு கிறேன். இவையே நம் நோக்கங்கள்.

**திரு. அவைத் தலைவர்:** டாக்டர் அம்பேத்கர், பிரச்சினை நிறுத்தி வைத்துக் கொள்ளப்பட்டால் நீங்கள் மறுப்பு தெரிவிப் பீர்களா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** நான் இதுபற்றி ஒளிவுமறைவின்றிப் பேசுவேன். பதிவு 88Aஐ ஏற்றுக்கொள்ள நான் கட்டளை பெற்றுள்ளேன். இந்தக் கட்டளையை அடியொற்றிப் பதிவு 88A ஏற்றுக்கொள்ள அணியமாய் உள்ளேன். மற்றொன்று (திருத்தம் எண் 122) தொடர்பாக இதுபோன்ற கட்டளை ஏதும் எனக் கில்லை. இதை ஏற்றுக்கொள்வது கடினமாய் இருக்கும் என்பதை உறுதியாக அறிவேன். செய்தித்தாள்கள் மீது எவ்வகை வரியும் விதிக் காமல் முழு விலக்கு அளித்தல் என்பது என்னைப் பொறுத்த அளவில் முடியாத காரியம்.

**திரு.ராம்நாத் கோயங்கா:** அப்படி இல்லை. வரி விதிப்பை மைய அரசிடம் விட வேண்டுமே தவிர மாகாணங்களிடம் விடக் கூடாதென விரும்புகிறேன். நான் டாக்டர் அம்பேத்கருக்குச் சொல்லக் கூடுமென்றால், அதை மாகாணங்களிடமிருந்து எடுத்துவிடவேண் டும் என்பதே கட்டளை.

**மாண்புமிகு டாக்டர். பி.ஆர்.அம்பேத்கர்:** கட்டளை பற்றி நீங்கள் எனக்குப் பொருள் விளக்கம் அளிக்க வேண்டியதில்லை. அது என்னவென்று எனக்குத் தெரியும். தெளிவாகவே தெரியும்.

**திரு.ராம்நாத் கோயங்கா:** அது எப்படி இருக்கிறதோ அப் படியே உங்களுக்குப் பொருள் விளக்கமளித்துக் கொண்டிருக்கிறேன். (குறுக்கீடு)

**திரு. தேஷ்பந்து குப்தா:** டாக்டர் அம்பேத்கர் கட்டளை குறித்துப் பேசியிருப்பதால் நான் ஒன்றைத் தெளிவுபடுத்த விரும்பு கிறேன். கட்டளையை வழங்கிய ஆணையத்திடம் இவ்வினாவை எழுப்பியபோது இரு திருத்தங்களும் ஒத்தமைவது தெள்ளத் தெளி

வாயிற்று. இவ்வரி மைய அரசு வரியாக இருந்து வரவேண்டுமே தவிர, மைய அரசு வரியாகவும் அதேபோல் மாகாண அரசு வரியாக வும் இருக்கக்கூடாது என்று நாம் விரும்பினோம்.

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:*** வேறிடத்தில் விவாதித்த பிரச்சினைகளை இங்கு குறிப்பிடுவது முறையன்று. ஆனால் நான் முன்பே சொன்னதுபோல் அந்தக் கட்டளையை ஏற்று நடக்கஅணியமாகவே உள்ளேன். நம் நண்பர்கள் இந்தத் திருத் தத்தைக் கொண்டுவந்து ஏற்படுத்திய குழப்படி எத்தகையது என்பது குறித்து வேறோர் இடத்தில் நான் கூறியதைக் கேட்ட பிறகு அவர்கள் அந்த மற்றொரு பிரச்சினையைக் கள்ளத்தனமாகக் கொண்டுவந்து நுழைத்தார்கள்.

***திரு. ராம்நாத் கோயங்கா:*** நாங்கள் குழப்படி செய்திருப் பதாக டாக்டர் அம்பேத்கர் கருதுவதால் அந்தக் குழப்படியிலிருந்து மீண்டு வர ஒரு வழிவேண்டும்.

(குறுக்கீடு)

***திரு. அவைத் தலைவர்:*** இப்பிரச்சினையில் அதிக உணர்ச்சி வெளிப்படக் காண்கிறேன். எனவே வேறொரு நாளில் உணர்ச்சிகள் சற்றே தணித்திருக்கும்போது இதை நாம் எடுத்துக்கொள்வதே நன்று...

ஐந்தாம் அட்டவணை

[1]***திரு அவைத் தலைவர்:*** நாம் ஐந்தாம் அட்டவணையை எடுத்துக் கொள்வோம்.

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்*** (பம்பாய்: பொது); அய்யா, நான் முன்மொழிவது:

> ஐந்தாம் அட்டவணைக்குப் பதிலாகப் பின்வரும் அட்ட வணையை இடம் பெறச் செய்யலாம்:
>
> ''ஐந்தாம் அட்டவணை

1. அரசமைப்புப்பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர் 3, பக். 965-67.

## "ஐந்தாம் அட்டவணை"

*(உறுப்பு 215-A (அ) மற்றும் 215-B(1))*

## அட்டவணைப் பகுதிகள் மற்றும் அட்டவணைப் பழங்குடிகள் மீதான ஆட்சி மற்றும் கட்டுப்பாடு தொடர்பான வழிவகைகள்.

### பகுதி I

### பொது

1. *விளக்கம்: இந்த அட்டவணையில் சூழல் வேறு விதமாகக் கோரவில்லை என்றால் 'மாநிலம்'' என்பது இப்போதைக்கு முதல் அட்டவணையின் பகுதி I அல்லது பகுதி III ல் குறித்துரைக்கப்படும் ஒரு மாநிலத்தைக் குறிக்கும்.*

2. *அட்டவணைப் பகுதிகளில் ஒரு மாநிலத்தின் நிர்வாக அதிகாரம் இந்த அட்டவணையில் வழிவகைகளுக்கு உட்பட்டு மாநிலத்தின் நிர்வாக அதிகாரம் அதில் உள்ள அட்டவணைப் பகுதிகளுக்கும் விரிவடைகிறது.*

3. *அட்டவணைப் பகுதிகளின் ஆட்சி தொடர்பாக ஆளுனர் அல்லது ஆட்சி யாளர் இந்திய அரசுக்கு அளிக்கும் அறிக்கை. ஆட்சியாளர் அட்டவணைப் பகுதிகளைக் கொண்டுள்ள ஒவ்வொரு மாநிலத்தின் ஆளுநர் அல்லது ஆட்சியாளர் அம்மாநிலத்திலுள்ள அட்டவணைப் பகுதிகளின் ஆட்சி தொடர்பாக ஆண்டுதோறும் அல்லது இந்திய அரசு கோரும்போதெல்லாம் அவ்வரசுக்கு ஓர் அறிக்கை அளிப்பார்; ஒன்றியத்தின் நிர்வாக அதிகாரம் மேற்சொன்ன பகுதிகளின் ஆட்சி தொடர்பாக மாநிலத்திற்குக் கட்டளை கள் அளிப்பதற்கும் விரிவடையும்.*

### பகுதி II

### அட்டவணைப் பகுதிகள் மற்றும் அட்டவணைப் பழங்குடிகள் மீதான ஆட்சி மற்றும் கட்டுப்பாடு

4. *பழங்குடிகள் அறிவுரை மன்றம்: (1) அட்டவணைப் பகுதிகளைக் கொண் டுள்ள ஒவ்வொரு மாநிலத்திலும், குடியரசுத்தலைவர் கட்டளையிடுவா ரானால் அட்டவணைப் பகுதிகளைக் கொண்டிராவிட்டாலும் அட்ட வணைப் பழங்குடிகளைக் கொண்டுள்ள எந்த ஒரு மாநிலத்திலும் கூட, பழங்குடிகள் அறிவுரை மன்றம் ஒன்று ஏற்படுத்தப்படும்; இம்மன்றம் இருபதுக்கு மேற்படாத உறுப்பினர்களைக் கொண்டிருக்கும். இவர்களில் கூடுமானவரை முக்கால்பங்கினர் அம்மாநிலத்தின் சட்டப்பேரவையில் அட்டவணைப் பழங்குடியினரின் பிரதி நிதிகளாய் இருப்பார்கள்.*

*ஆனால், மாநிலத்தின் சட்டமன்றப் பேரவையில் பழங்குடிகளுக்குள்ள அட்டவணை சாதிகளின் பிரதிநிதிகளின் எண்ணிக்கை பழங்குடிகள் அறிவுரை மன்றத்தில் இத்தகைய பிரதிநிதிகளைக் கொண்டு நிரப்ப வேண்டிய இடங்களின் எண்ணிக்கையைக் காட்டிலும் குறைவாக இருந்தால்*

எஞ்சிய இடங்கள் அந்தப் பழங்குடிகளின் ஏனைய உறுப்பினர்களைக் கொண்டு நிரப்பப்படும்.

2. மாநிலத்திலுள்ள அட்டவணைப் பழங்குடிகளின் சேமநலம் மற்றும் முன்னேற்றம் தொடர்பாக நேர்வைப் பொறுத்து ஆளுநர் அல்லது ஆட்சியாளர் தங்கள் பார்வைக்கு அனுப்பக்கூடிய பிரச்சினைகளில் அறிவுரை வழங்குவது பழங்குடிகள் அறிவுரை மன்றத்தின் கடமையாக இருக்கும்.

3. நேர்வைப் பொறுத்து, ஆளுனர் அல்லது ஆட்சியாளர் பின்வருவனவற்றைக் குறித்தளிக்கிற ஆட்சியாளர் பின்வருவனவற்றைக் குறித்தளிக்கிற அல்லது ஒழுங்குபடுத்துகிற விதிகளை வகுக்கலாம்.

அ. மன்ற உறுப்பினர்களின் எண்ணிக்கை அவர்களை அமர்த்தும் முறை, மன்றத்தின் தலைவரையும் அதிகாரிகள் மற்றும் பணியாளர்களையும் அமர்த்தும் முறை;

ஆ. அதன் கூட்டங்களை நடத்துவதும் பொதுவாக அதன் நடைமுறையும்;

இ. இடைநிகழ்வான ஏனைய எல்லா பிரச்சினைகளும்.

5. அட்டவணைப் பகுதிகளுக்குப் பொருந்தக்கூடிய சட்டம்: (1) இந்த அரசமைப்புச்சட்டத்தில் என்ன கூறப்பட்டிருப்பினும், நாடாளுமன்றத்தில் அல்லது மாநிலச் சட்டமன்றத்தின் எந்தக் குறிப்பிட்ட சட்டமும் அம்மாநிலத்திலுள்ள ஓர் அட்டவணைப் பகுதிக்கு அல்லது அதன் எந்த ஒரு பாகத்துக்கும் பொருந்தாது அல்லது அதன் எந்த ஒரு பாகத்துக்கும் பொருந்தாது அல்லது அம்மாநிலத்திலுள்ள ஓர் அட்டவணைப்பகுதிக்கு அல்லது அதன் எந்த ஒரு பாகத்துக்கும் பொருந்தும் என்று நேர்வைப்பொறுத்து ஆளுனர் அல்லது ஆட்சியாளர் பொது அறிவிக்கை கொண்டு கட்டளையிடலாம்; இது அந்த அறிவிக்கையில் அவர் குறித்துரைக்கக்கூடிய விதிவிலக்குகளுக்கும் திருத்தங்களுக்கும் உட்பட்டதாகும்.

(2) நேர்வைப் பொறுத்து ஆளுனர் அல்லது ஆட்சியாளர் ஒரு மாநிலத்தில் இப்போதைக்கு அட்டவணைப் பகுதியாக உள்ள எந்த ஒரு பகுதியின் அமைதிக்கும் நல்லாட்சிக்குமாக ஒழுங்குமுறைகள் வகுக்கலாம்.

(3) குறிப்பாகவும், மேற்சொன்ன அதிகாரத்தின் பொதுத்தன்மைக்குக் கேடின்றியும் இத்தகைய ஒழுங்குமுறைகள்:

(அ) இத்தகைய எந்த ஒரு பகுதியிலும் அட்டவணைப் பழங்குடிகளின் உறுப்பினர்களால் அல்லது அவ்வுறுப்பினர்களுக்குள் நிலம் கைமாற்றம் செய்யப்படுவதைத் தடைசெய்யலாம் அல்லது கட்டுப்படுத்தலாம்;

(ஆ) இத்தகைய பகுதிகளில் அட்டவணைப் பழங்குடி உறுப்பினர்களுக்கான நில ஒதுக்கீட்டை ஒழுங்கு செய்யலாம்;

(இ) இத்தகைய பகுதிகளில் அட்டவணைப் பழங்குடி உறுப்பினர்களுக்குக் கடனாகப் பணம் கொடுப்பவர்கள் வட்டித் தொழில் செய்வதை ஒழுங்கு செய்யலாம்.

(3) இப்பத்தியின் உள்பத்தி(2)இல் குறிப்பிட்டிருப்பது போன்ற எந்த ஒழுங்கு முறையும் வகுக்கையில், ஆளுனர் அல்லது ஆட்சியாளர் இவ்வாறான பகுதிக்கு அப்போதைக்குப் பொருந்தக்கூடிய நாடாளுமன்றச் சட்டம், ஆனால் மாநிலச் சட்டமன்றச் சட்டம் அல்லது நடப்பிலுள்ள எந்த ஒரு சட்டத்தையும் நீக்கம் அல்லது திருத்தம் செய்யலாம்.

(4) இப்பத்தியின்படி வகுக்கப்படும் எல்லா ஒழுங்குமுறைகளும் உடனுக் குடன் குடியரசுத்தலைவரிடம் சமர்ப்பிக்கப்படும், அவர் இசைவளிக்கும் வரை அவை எவ்விதத்துக்கும் செயலுக்கு வராது.

(5) ஒழுங்குமுறையை வகுக்கும் ஆளுனர் அல்லது ஆட்சியாளர் அந்த மாநிலத் திற்குப் பழங்குடிகள் அறிவுரை மன்றம் இருக்கும் நேர்வில் அம்மன்றத் தைக் கலந்து பேசவில்லை என்றால் இந்தப் பத்தியின்படி எந்த ஒழுங்கு முறையும் வகுக்கப்படாது.

## பகுதி III

## அட்டவணைப் பகுதிகள்

6. *அட்டவணைப் பகுதிகள் - (1)* இந்த அரசமைப்புச் சட்டத்தில் 'அட்ட வணைப் பகுதிகள்' என்ற சொற்றொடர் குடியரசுத் தலைவர் அட்ட வணைப் பகுதிகளாக ஆணையிட்டு அறிவிக்கக்கூடிய பகுதிகளைக் குறிக்கும்.

2. குடியரசுத்தலைவர் எந்நேரமும் ஆணையிட்டு -

(அ) ஓர் அட்டவணைப் பகுதி முழுவதும் அல்லது அட்டவணைப் பகுதியின் குறிப்பிட்ட எந்தப் பாகமும் அட்டவணைப் பகுதியாக இல்லாமற்போகும் என்று கட்டளையிடலாம்;

(ஆ) எந்த அட்டவணைப் பகுதிகளையும் மாற்றியமைக்கலாம்; ஆனால் எல்லைகளைத் திருத்தம் செய்வது என்ற அளவில் மட்டுமே இவ்வாறு மாற்றியமைக்கலாம்;

(இ) ஒரு மாநிலத்தின் எல்லைகள் எவ்விதத்தும் மாற்றியமைக்கப்படும்போது, அல்லது ஒரு புதிய மாநிலம் ஒன்றியத்தில் சேர்க்கப்படவோ நிறுவப் படவோ செய்யும்போது, முன்பு எந்த ஒரு மாநிலத்திலும் சேர்க்கப்படாத ஆட்சிப்பரப்பு எதனையும் அட்டவணைப்பகுதி என்று அல்லது அப்பகுதி யின் பாகம் என்று அறிவித்திடலாம்; இவ்வாறான எந்த ஓர் ஆணையிலும் தேவையென்றும் முறையென்றும் குடியரசுத்தலைவருக்குத் தோன்றக் கூடிய இடைநிகழ்வான, தொடர் விளைவான வழிவகைகள் அடங்கி யிருக்கலாம்; ஆனால் மேற்சொன்னது போல், இந்தப் பத்தியின் உள்பத்தி (1) இன்படி பிறப்பிக்கப்பட்ட ஆணை அடுத்துவரும் எந்த ஆணையாலும் மாற்றப்படாது.

## பகுதி IV

## அட்டவணையின் திருத்தம்

7. *அட்டவணையின் திருத்தம்: 1.* நாடாளுமன்றம் அவ்வப்போது இந்த அட்ட வணையின் வழிவகைகளில் எந்த ஒன்றையும் சேர்க்கை, மாற்றம் அல்லது

நீக்கம் என்ற முறையில் சட்டம் கொண்டு திருத்திடலாம்; அட்டவணை இவ்வாறு திருத்தப்படும் போது, இந்த அரசமைப்பச் சட்டத்தில் இந்த அட்டவணைக்கான எந்தச் சுட்டுரையும் இவ்வாறு திருத்தப்பட்ட அட்டவணைக்கான சுட்டுரையாகக்கருதப்படும்.

2. இந்த பத்தியின் உள்பத்தி (1) இல் குறிப்பிடக்கூடிய எந்த ஒரு சட்டமும் இந்த அரசமைப்புச் சட்டத்தின் உறுப்பு 304 இன் நோக்கங்களுக்கு அரசமைப்புச் சட்டத் திருத்தமாக கருதப்படாது.

திருத்தப்பட்டபடி ஐந்தாம் அட்டவணையில் உள்ள செய்யப்பட்டிருக்கிற முக்கிய மாற்றங்களை இரத்தினச் சுருக்கமாக அவை முன் வைக்க விரும்புகிறேன். முதல் முக்கிய மாற்றமானது பழங்குடிகள் அறிவுரை மன்றத்தை அமைப்பது தொடர்பான பத்தி 4 இல் செய்யப்பட்டுள்ளது. இப்பத்தி முதலில் வரைவு அரசமைப்புச் சட்டத்தில் இருந்தபடி அட்டவணைப் பகுதிகள் அல்லது அட்டவணைப் பழங்குடிகள் இருக்கும் மாநிலம் ஒவ்வொன்றிலும் பழங்குடிகள் அறிவுரை மன்றம் வைப்பது கட்டாயமாகும். ஏதோ ஒரு பாகத்தில் அட்டவணைப் பழங்குடி உறுப்பினர்கள் சிலர் வாழ்ந்து வந்த போதிலும் அம்மாநிலத்தில் அட்டவணைப்பகுதி என்று எதுவும் இல்லாதவிடத்து அம்மாநிலத்திற்கு அரசமைப்புச் சட்டம் ஓர் அறிவுரை மன்றத்தை ஏற்படுத்தத் தேவையில்லை எனக் கருதப்பட்டது. அட்டவணைப் பகுதியில் வாழாத அட்டவணைப் பழங்குடிகளின் நோக்கங்களுக்காக அறிவுரை மன்றம் அமைக்க வேண்டிய தேவை இருந்தால் அறிவுரை மன்றம் அமைப்பதா இல்லையா எனும் பிரச்சினையை குடியரசுத்தலைவரிடம் விட்டுவிடுவதே மேலென்று கருதப்பட்டது. ஆகவேதான் 'குடியரசுத் தலைவர் கட்டளையிடுவாரானால் அட்டவணைப் பகுதிகளைக் கொண்டிராவிட்டாலும் அட்டவணைப் பழங்குடிகளைக் கொண்டுள்ள எந்த ஒரு மாநிலத்திலும் கூட பழங்குடிகள் அறிவுரை மன்றம் ஒன்று'' என்ற சொற்கள் இடம்பெறுகின்றன. அட்டவணைப்பகுதிகளைப் பொறுத்தவரை ஓர் அறிவுரை மன்றம் அமைப்பது கட்டாயமாகும். அட்டவணைப் பழங்குடிகளைப் பொறுத்தவரை அறிவுரை மன்றம் அரசமைப்புச் சட்டப்படி கட்டாயமில்லை. அது குடியரசுத் தலைவரின் விருப்புரிமைக்கு விடப்படுகிறது.

முக்கிய மாற்றத்திற்கு உள்ளாக்கியிருக்கிற மற்றொன்று பத்தி 5 ஆகும். நாடாளுமன்றமும் வட்டாரச் சட்டமன்றமும் இயற்றிய சட்டங்கள் அட்டவணைப் பகுதிகளுக்குப் பொருந்துவது பற்றி பத்தி 5 சொல்கிறது. மூல வரைவில் இருந்தவாறு பத்தி 5 கோரியது

என்னவென்றால் நாடாளுமன்றமோ வட்டாரச் சட்டமன்றமோ இயற்றிய சட்டம் திருத்தியமைக்கப்பட்ட வடிவில் அட்டவணைப் பகுதிகளுக்குப் பொருந்தும்படி செய்யவேண்டும் எனப் பழங்குடிகள் அறிவுரை மன்றம் கட்டளையிட்டால் அதன் ஆணையை அல்லது முடிவை நிறைவேற்றியாக வேண்டும். நாடாளு மன்றமோ வட்டாரச் சட்டமன்றமோ இயற்றிய சட்டங்கள் அட்டவணைப் பகுதிகளுக்குப் பொருந்துவது பற்றிய பிரச்சினையில் ஆளுனருக்கு விருப்புரிமை இருப்பதே சாலச்சிறந்தது என்றும் பத்தி 5 இல் அடங்கிய மூல வழிவகை செய்யக் கருதியதுபோல் அவரது விருப்புரிமையை அறுதியாகக் கட்டுப்படுத்தக்கூடாது என்றும் கருதப் பட்டது.

நான் மதிப்பிற்குரிய உறுப்பினர்களின் கவனத்திற்குக் கொண்டு வர விரும்பும் முக்கியமான மற்றொன்று பத்தி 6 ஆகும். மூலவரைவின் பத்தி 6 ஆனது அட்டவணைப் பகுதிகளாக இருக்க வேண்டியவற்றின் ஓர் அட்டவணையை வரைந்தளித்தது. இந்த வழிவகை அவசியமாகியிருப்பது குறிப்பாக ஏனென்றால் பகுதி IIIஇல் உள்ள மாநிலங்களில் அட்டவணைப் பகுதிகளாக எவை இருக்கப் போகின்றன என்பதைத் தெரிந்துகொள்வது இந்தக் கட்டத்தில் சாத்தியமில்லை. நான் குறிப்பிட்டிருக்கும் இடர்ப்பாட்டைச் சமாளிப்பதற்கும், அதேபோல் வழிவகைகளை நெகிழ்வாக்குவதற்கும் அட்டவணைப் பகுதிகள் தொடர்பான திட்டவட்டமான பிரிவை வைத்துக் கொள்வதைக் காட்டிலும் அதிகாரத்தைக் குடியரசுத் தலைவரிடமே விட்டு விடுவது சாலச் சிறந்ததாக இருக்கும் என்று கருதப்படுகிறது.

நான் கவனத்துக்கு கொண்டு வரவிரும்புகிற இன்னொரு முக்கியத் திருத்தம் பகுதி IVஇல் சேர்க்கப்பட்டிருப்பதும் ஐந்தாம் அட்டவணையின் திருத்தம் பற்றிச் சொல்வதுமான பத்தி 7 ஆகும். மூலவரைவின்படி இந்தப் பத்தியில் ஐந்தாம் அட்டவணையின் திருத்தத்திற்கு வழிவகை ஏதும் இருக்கவில்லை. இந்த அட்டவணையை நாடாளுமன்றம் திருத்தலாம் என்று இப்பொழுது வழிவகை செய்யப்படுகிறது. இந்த அட்டவணையைத் திருத்த நாடாளுமன்றத்திற்கு அதிகாரம் இருப்பது விரும்பத்தக்கது எனக் கருதுகிறேன். மாநிலத்துக்குள் ஒருவகை மாநிலம் உருவாக்குவதால் பயனில்லை. இது போன்ற சிறப்பு வழிவகையின்படி குறிப்பிட்ட பழங்குடிகள் சட்ட மன்றமும் அதேபோல் நாடாளுமன்றமும் இயற்றிய சட்டத்தின்

பொதுவான செயல்பாட்டிலிருந்து விலக்கி வைக்கப்படுவது விரும்பத் தக்கதல்ல. பத்தி 5 இன் உள்பத்தி (2) இல் அடங்கியுள்ள வழிவகை யின்படி (அ), (ஆ), (இ) ஆகியவற்றில் எடுத்துரைக்கப்படும் குறிப் பிட்ட தன்மையிலான ஒழுங்குமுறைகளை வகுப்பதற்கான சட்ட மியற்றும் அமைப்பாக ஆளுநர் அமைகிறார்; இந்த ஒழுங்குமுறை கள் இப்பிரச்சினைகளைப் பொறுத்தவரை நாடாளுமன்றமோ சட்ட மன்றமோ இயற்றிய எந்தச் சட்டத்தையும் விஞ்சி நிற்கும் அதிகாரங் களைக் கொண்டிருக்கும். இப்படிப்பட்ட வழிவகை எல்லாக் காலங் களுக்கும் ஒரே விதமாக இருக்கலாகாது. காலத்துக்கும் நிலைமை களுக்கும் ஏற்ப அதில் தக்க மாற்றங்கள் செய்ய நாடாளுமன்றத் துக்கு உரிமை இருக்கவேண்டும். ஆகவே, நாடாளுமன்றத்துக்கு அது தேவை எனக் கருதும் திருத்தங்களைச் செய்யும் அதிகாரம் இருக்கும் என்று பகுதி IV இன் புதிய பத்தி 7 இல் வழிவகை செய்யப்பட்டிருக் கிறது. அட்டவணையிலான இத்தகைய திருத்தம் ஏதும் சட்டத்தின் சாதாரண வழிமுறையால் செய்யப்படுமே தவிர அரசமைப்புச் சட் டத்தில் ஒரு திருத்தமாகக் கருதப்பட மாட்டாது.

வரைவுக்குழு இப்புது அட்டவணையை முன்வைப்பதற்கு முன் இக்குறிப்பிட்ட பிரச்சினையில் தொடர்புடைய மாகாணங்களின் அதாவது அட்டவணைப் பகுதிகள் மற்றும் அட்டவணைப் பிரதி நிதிகளோடு இப்பிரச்சினையை விவாதித்தது என்பதை நான் குறிப் பிடலாம். இப்பிரச்சினை பற்றிப் பெரிதும் அறிந்துள்ள என் மதிப் பிற்குரிய நண்பர் திரு. தக்கரின் கருத்தையும் நாங்கள் பரிசீலனைக்கு எடுத்துக் கொண் டோம். இந்தப் பிரச்சினையில் அக்கறை கொண்ட அனைத்துத் தரப்புகளின் ஒப்புதலையும் இப்பதிய அட்டவணை பெற்றிருக்கிறது என்பதை முரண்பாடின்றிக் குறிப்பிடலாம். பழைய அட்டவணையின் இடத்தில் புதிய ஒன்றை ஏற்றுக்கொள்வதில் அவைக்கு எவ்வித இடர்ப்பாடும் இருக்காது என நம்புகிறேன்.

[1]**திரு. அவைத் தலைவர்:** எனக்குத் தெரிந்தவரை இப்பொழுது முன்மொழியப்பட்டுள்ள வடிவில் ஐந்தாம் அட்டவணைக்கு வேறெந்தத் திருத்தமும் இல்லை.

**பேராசிரியர் ஷிபன் லால் சக்சேனா:** எனக்குச் சில திருத்தங் கள் உள்ளன.

1. அரசமைப்புப்பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர் 3, பக். 978-79.

**திரு. அவைத் தலைவர்:** கடைசி நேரத்தில் வந்துள்ள இந்த திருத்தங்கள் உறுப்பினர்களுக்குச் சுற்றுக்கு விடப்படவில்லை. அவை இன்று காலை 8.58க்கு வந்தன.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அவை பற்றி எனக்கு எதுவும் தெரியாது. இவற்றை அனுமதிக்கக்கூடாது.

**திரு. அவைத் தலைவர்:** உங்களுக்குத் திருத்தங்கள் ஏதும் இருந்தால் நீங்கள் உங்கள் கருத்துக்களைச் சொல்லலாம். பேராசிரியர் ஷிபன்லால் சக்சேனாவும் டாக்டர் தேஷ்முக்கும் அனுப்பி வைத்த புதிய திருத்தங்களின் தொகுப்பு ஒன்று என்னிடம் இருப்பதை அவைக்குத் தெரியப்படுத்தலாம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** நம்மிடம் படிகள் இல்லை. அவர்கள் எது பற்றிப் பேசுகிறார்கள் என்று நமக்குத் தெரியாது.

**திரு. அவைத் தலைவர்:** டாக்டர் தேஷ்முக்கின் திருத்தம் காலை 9.20க்கு வந்து சேர்ந்தது. பேராசிரியர் சக்சேனாவின் திருத்தம் காலை 8.58க்கு வந்து சேர்ந்தது. சட்ட நுட்பமாகப் பார்த்தால் உங்கள் திருத்தம் அமர்வு தொடங்குவதற்குச் சற்று முன்னர் வந்தது. ஆனால் இது மற்ற உறுப்பினர்களுக்குப் பெரிதும் வசதி குறைவெனக் கருதுகிறேன்.

**டாக்டர் பி.எஸ். தேஷ்முக்** (மத்திய மாகாணங்கள் மற்றும் மற்றும் பேரார்: பொது): என் திருத்தங்கள் வரைவுத் தன்மை யிலானவை.

**திரு. அவைத் தலைவர்:** மிக்க நன்று, அவை வரைவுக்கு குழுவிடம் ஒப்படைக்கப்படும். பேராசிரியர் சக்சேனா, உங்கள் திருத் தங்கள் எதிலும் சாரமேதும் இருப்பதாக நான் நினைக்கவில்லை.

★ ★ ★

[1]**திரு. அவைத் தலைவர்:** நான் இப்பொழுது விவாதத்தை முடிக்க விரும்புகிறேன். டாக்டர் அம்பேத்கர் ஏதேனும் சொல்ல விரும்புகிறாரா?

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர் 3, பக். 999.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** சொல்ல வேண்டியதை எல்லாம் திரு முன்ஷி சொல்லிவிட்டார். மேற்கொண்டு பயனுள்ள எதையும் சொல்ல முடியும் என நான் நினைக்கவில்லை.

**திரு. அவைத் தலைவர்:** எனவே இப்பொழுது திருத்தங்களை வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

**திரு. நசிருதீன் அகமது:** என் திருத்தங்களை வாக்கெடுப்புக்கு விட வேண்டாம். ஆனால் அவற்றை வரைவுக்குழு பரிசீலிக்கலாம்.

★ ★ ★

பத்தி 3 ஐந்தாம் அட்டவணையில் சேர்க்கப்பட்டது.

## ஆறாம் அட்டவணை

[1]**திரு. அவைத் தலைவர்:** நாம் இப்பொழுது ஆறாம் அட்டவணைக்குச் செல்கிறோம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அய்யா, நான் முன்மொழிவது:

> ''பத்தி 1இன் உள்பத்தி (1)இல் 'பழங்குடிப் பகுதிகள்' என்ற சொற்களுக்கு முன் 'இப்பத்தியின் வழிவகைகளுக்கு உட்பட்ட' என்ற சொற்களை நுழைக்கலாம்.''

பழங்குடிப் பகுதிகள் என்பவை இந்த அட்டவணையோடு இணைக்கப்பட்ட பட்டியலில் சேர்க்கப்பட்டவை என்று மட்டுமே மூலவரைவு சொல்லியது. பட்டியலில் சேர்க்கப்பட்ட அந்தப் பகுதிகளின் எல்லைகளை வரையறுக்க அதிகாரம் ஏதும் வழங்கப்படவில்லை. பட்டியலில் சேர்க்கப்பட்டுள்ள அந்தப் பகுதிகளின் எல்லைகளை வரையறுக்கும் அதிகாரம் ஆளுனருக்கு வழங்கப்படுவது அவசியம் எனக் கருதப்படுகிறது. ஆளுனருக்கு இந்த அதிகாரம் வழங்கிட வழிவகை செய்யும் பொருட்டு இந்தத் திருத்தங்களில் அடங்கியுள்ள சொற்களைச் சேர்க்க வேண்டுவது அவசியம்.

**திரு. அவைத் தலைவர்:** திருத்தம் எண் 99உம் கூட பத்தி 1 தொடர்பானதே.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இதை நான் முன்மொழியலாமா?

1. அரசமைப்புப்பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர் 3, பக். 999.

திரு. அவைத் தலைவர்: சரி.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்: அய்யா நான் முன்மொழிவது :

'பத்தி I இன் உள்பத்தி (3) க்குப் பதிலாகப் பின்வரும் உள்பத்தியை இடம் பெறச் செய்யலாம்:

'(3) ஆளுனர் பொது அறிவிப்பைக் கொண்டு -

(அ) மேற்சொன்ன பட்டியலின் பகுதி I இல் எந்தப் பகுதியையும் சேர்க் கலாம்.

(ஆ) ஒரு புதிய தன்னாட்சி மாவட்டத்தை உருவாக்கலாம்.

(இ) எந்தத் தன்னாட்சி மாவட்டத்தின் பரப்பையும் அதிகமாக்கலாம்.

(ஈ) எந்தத் தன்னாட்சி மாவட்டத்தின் பரப்பையும் குறைக்கலாம்.

(உ) ஒரு தன்னாட்சி மாவட்டத்தை உருவாக்க இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட தன்னாட்சி மாவட்டங்களையோ, அவற்றின் பகுதி களையோ ஒன்றாக்கலாம்.

(ஊ) எந்தத் தன்னாட்சி மாவட்டத்தின் எல்லைகளையும் வரையறுக்க லாம். ஆனால் இந்த அட்டவணையின் பத்தி 14 உள்பத்தி (1) இன் படி அமர்த்தப்பட்ட ஒரு ஆணைக்குழுவின் அறிக்கையைப் பரிசீ லித்த பிறகு அல்லாமல் இந்த உள்பத்தியின் (ஆ),(இ), (ஈ), (உ) கூறுகளின்படி ஆளுநர் எந்த ஆணையும் பிறப்பிக்க மாட்டார்.''

இத்திருத்தத்தில் உள்பத்தி 3 உட்கூறுகள் (உ), (ஊ) ஆகிய வற்றில் சேர்க்கப்பட்டுள்ள புதிய செய்திகளைக் கவனத்துக்குக் கொண்டு வந்தாக வேண்டும். தேவையைப் பொறுத்து எந்தக் குறிப் பான நிலவரத்திலும் இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட தன்னாட்சி மாவட்டங்களை ஒன்று சேர்க்கவேண்டி ஏற்படலாம். உட்கூறு (ஊ) இல் அடங்கியுள்ள அதிகாரமும் தேவை. ஏனென்றால் வெவ்வேறு பழங்குடிகளிடையே குறிப்பான பூசல் ஏதும் இருக்க நேர்ந்தால் எல்லைகளை வரையறுப்பது விரும்பத்தக்கதாகலாம்.

துணைவிதி ஒரு மாற்றத்தை அறிமுகப்படுத்துகிறது. மூலத் துணைவிதிகளோடு இந்தத் துணைவிதியை ஒப்புநோக்கினால் உள்பத்தி (3)க்கு இரு துணைவிதிகள் இருப்பதைக் காணலாம். முதல் துணைவிதியில் ஆணைக்குழுவின் பரிந்துரையின்பேரில் கூறு (ஆ) அல்லது கூறு(இ) ன்படி ஆளுனர் செயல்படலாம். ஆனால் கூறுகள் (ஈ) அல்லது (உ) இன்படி செயல்பட விரும்பினால் சம்பந்தப்பட்ட தன்னாட்சி மாவட்டங்களின் தீர்மானம் அவருக்குத் தேவைப்பட்டது.

உள்பத்தி(3) இன் வெவ்வேறு பகுதி களுக்கான இரு துணைவிதிகளைக் கொண்டு இப்படி வேறுபடுத்திக் காட்டத் தேவையில்லை எனக் கருதப்படுகிறது. இந்த அட்டவணையின் பத்தி 14 இன் உள்பத்தி (1) இன்படி அமர்த்த எண்ணியுள்ள ஆணைக்குழுவின் அறிக்கையைப் பரிசீலித்த பிறகு ஆளுநர் செயல்பட வேண்டும் என்பதன் மூலம் இந்த விதியை ஒரே சீராக்குவது நன்று.

**திரு. அவைத் தலைவர்:** இந்த அட்டவணையைப் பொறுத்த வரை, முழு அட்டவணையும் மாற்றப்படாமல், சில பத்திகளுக்குக் குறிப்பிட்ட சில திருத்தங்கள் மட்டுமே யோசனையாகத் தெரிவிக்கப் பட்டுள்ளன என்பதால் இதனைப் பத்தி பத்தியாக எடுத்துக்கொள்ள லாம் எனக் கருதுகிறேன். முதல் பத்தியைப் பொறுத்தவரை இவையே வரைவுக்குழுவின் சார்பாக முன்மொழியப்பட்டிருக்கிற இரு திருத் தங்கள் ஆகும். அறிவிப்புக் கொடுக்கப்பட்டுள்ள மற்றத் திருத்தங் களை இப்பொழுது எடுத்துக் கொள்கிறேன். இவற்றில் சிலவற்றை திருத்தங்கள் பட்டியலின் இரண்டாம் பாகத்தில் அச்சிட்டிருக்கக் காணலாம்.

(திருத்தங்கள் 3489, 3490, 3491 முன்மொழியப்படவில்லை.)

பத்தி 1 முதல் 16 முடிய நீக்கப்படலாம் என்று ஒரு திருத்தம் உள்ளது. இதை எடுத்துக் கொள்ள வேண்டுமா என்று எனக்குத் தெரிய வில்லை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அதை எடுத்துக் கொள்ளத் தேவையில்லை.

★ ★ ★

**திரு. அவைத் தலைவர்:** டாக்டர், அம்பேத்கர், நீங்கள் ஏதும் சொல்ல விரும்புகிறீர்களா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அய்யா, இந்தத் திருத்தங்கள் பற்றிக் கருத்துகள் சொல்லப்பட்டபோது எழுப்பப் பட்ட வாதங்களில் இரண்டுக்கு மட்டுமே விடை தேவைப்படுகிறது. முதல் கேள்வி திரு. சலிகாவால் எழுப்பப்பட்டது ஆகும். திரு. சலிகா

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர் 3, பக். 1004-05.

முன்வைத்த திருத்தம் கண்டு நான் சற்றே வியப்படைந்தேன் என்பதைச் சொல்லியாக வேண்டும். ஏனென்றால், ஐந்தாம் அட்டவணை போலவே ஆறாம் அட்டவணையும் வரைவுக் குழுவுக்கும் அசாம் தலைமையமைச்சர் நண்பர் திரு.நிகோல்ஸ் ராய்க்கும் இடையிலான உடன்பாட்டிலிருந்து பிறந்தது எனலாம். அம்மாநாட்டில் திரு. சலிகா வும் இருந்தார். வரைவுக்குழு திருத்தியபடி புது அட்ட வணையை அவர் ஏற்றுக்கொண்டார். எவ்வாறாயினும் யார் இந்த ஆணைக் குழுவாக அமைவார்கள் என்பதையும் அதன் உறுப்பினர்களாக யார் இருப்பார்கள் என்பதையும் ஆணைக்குழு தொடர்பான எல்லாப் பிரச்சினைகளையும் பற்றி அவர் மனத்தில் உள்ள ஐயப்பாட்டைப் போக்கிக்கொள்ள நீண்ட நேரம் ஆகாது. திரு. சலிகா ஆறாம் அட்ட வணையின் சொல்லமைப்பைக் கவனமாகப் படித்திருந்தாலே ஆணைக்குழுவை அமர்த்துவதில் ஆளுனர் தமது விருப்புரிமைப்படி செயல்படப்போவதில்லை என்பதைக் கண்டிருப்பார் எனக் கருது கிறேன். ஆளுனருக்கு விருப்புரிமை ஏதும் விட்டுவைக்கப்படவில்லை. இப்படி இருக்கையில் ஆணைக்குழுவோடு கலந்தாலோசிப்பதில் அதன் வட்டார அமைச்சர்களின் அறிவுரைப்படி அவர் வழிநடத்தப் படுவார் என்பது கண்கூடாகத் தெரிகிறது. எனவே அவர் தெரிவித் திருப்பது போன்ற அச்சங்களுக்குச் சிறிதும் தேவை யிருப்பதாக நான் எண்ணவில்லை.

நிற்க, என் நண்பர் திரு.பிரஜேஷ்வர் பிரசாத்தின் திருத்தத்தைப் பொறுத்தவரை, இந்த ஒரு திருத்தத்தில்தான் அவர் ஓரளவு கருத் துக்குரிய வாதம் புரிந்திருப்பதாகக் கருதுகிறேன். பழங்குடிப் பகுதி முழுவதும் அசாம் மாகாணத்திலிருந்து அகற்றப்பட்டு மைய அரசின் ஆட்சிக்குட்பட்ட பகுதியாக்கப்பட வேண்டும் என அவர் சொல் கிறார்.

ஏனென்றால் அவர் முன்வைத்துள்ள திருத்தத்திற்கு நான் தெரிவித்திருப்பதைத் தவிர வேறெந்தப் பொருளும் இருக்க முடியாது. இது செயலளவில் அப்பகுதியை மைய அரசின் ஆட்சிக்குப்பட்ட பகுதியாக அமைப் பதையே குறிக்கும். ஆனால் அவர் இரு செய்தி களை மறந்துவிட்டதாகத் தோன்றுகிறது. முதலாவது என்னவென் றால், அந்தப் பகுதிகளில் வாழும் பழங்குடி மக்களின் மன நிறைவுக் காக நாம் தன்னாட்சி மாவட்டங்கள் அமைத் துள்ளோம், இதனால் அவர்கள் தங்கள் பகுதிகளை அரசாள்வதில் எப்படியும் முதல் பத்தாண்டுகளுக்குத் தன்னாட்சி பெற்றவர்களாய் இருப்பார்கள் என்ற

போதிலும், தன்னாட்சி மாவட்டங்கள் அசாம் மாகாணத்தின் பகுதியாக மாட்டா என்று ஈண்டு நாம் வழிவகை செய்துள்ளோம். இந்நிலையில், மாகாணத்தின் ஒரு பகுதியை அதன் ஆளுநரின் ஆளுகைக்கு விட்டுவிடுவதும் மறுபகுதியை, மைய அரசின் ஆட்சிப் பகுதியாக ஆட்சி செய்வதும் மிகக் கடினம்.

இரண்டாவதாக ஒன்றையும் அவர் மறந்துவிட்டார். தன்னாட்சிப் பகுதிகளை அமைக்கையிலும் கூட, தன்னாட்சி மாவட்டங்களை ஒட்டியுள்ள குறிப்பிட்ட சில 'எல்லைப் பகுதிகள்'' எனப்படுபவை உள்ளன என்பதை வரைவுக்குழு மறந்துவிடவில்லை. அவர்தான் இந்த உண்மையை கவனிக்க மறந்திருக்கிறார். அசாமின் இந்த எல்லைப் பகுதிகளின் ஆட்சியைப் பொறுத்தவரை ஆளுனர் குடியரசுத் தலைவரின் கீழ் செயல்படுவார் என இந்த அட்டவணையில் வழிவகை செய்யப்பட்டிக்கிறது. ஆகவே எல்லைப் பகுதிகளுக்கு எத்தகைய போரியல் முக்கியத்துவம் இருந்தபோதிலும், அவர் குறிப்பிட்டுக் காட்டியுள்ள கவலையளிக்கும் காரணிகள் எதுவும் அங்கு இடம்பெறாது பார்த்துக்கொள்ள மைய அரசுக்குப் போதிய மேலுரிமை இருக்கும் என்பது உறுதி. எனவே இந்தத் திருத்தங்கள் எல்லாம் தேவையற்றவை, பொருத்தமற்றவை எனக் கருதுகிறேன்.

**திரு. குலதர் சலிகா:** திருத்தம் எண் 139 ஏற்றுக்கொள்ளப்படுகிறதா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** என்னால் உடனடியாகச் சொல்ல இயலாது. நான் உங்கள் திருத்தத்தையும் திரு. பிரஜேஷ்வர் பிரசாத்தின் திருத்தத்தையும் மட்டுமே பார்த்துக் கொண்டிருக்கிறேன். அவை தேவையற்றவை எனக் கருதுகிறேன்.

**திரு. அவைத் தலைவர்:** திருத்தம் எண் 139 முன்மொழியப்படவே இல்லை. இது பத்தி 14 பற்றியது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** பத்தி 14க்கு வரும் போது இது பற்றிப் பேசலாம்.

***(மேற்கூறிய வடிவில் டாக்டர் அம்பேத்கரின் திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது. மற்றவை மறுதலிக்கப்பட்டன. திருத்தப்பட்ட வடிவில் பத்தி 1 ஆறாம் அட்டவணையில் சேர்க்கப்பட்டது.)***

ஆறாம் அட்டவணை - தொடர்ச்சி

(பத்தி 2)

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் (பம்பாய்:பொது):** அய்யா, நான் பணிவுடன் முன்மொழிவது:

> "பத்தி 2 இன் உள்பத்தி (1) இல் 'இருபதுக்குக் குறையாத நாற்பதுக்கு மேற் படாத உறுப்பினர்கள்' என்ற சொற்களுக்குப் பதிலாக 'இருபத்து நான்குக்கு மேற்படாத உறுப்பினர்கள்' என்ற சொற்களை இடம்பெறச் செய்யலாம்."

மூலவரைவில் இடம்பெற்ற 40 என்ற எண்ணிக்கை அதிகப் படியானதாக இருக்கக்கூடும் என்று கருதப்பட்டதால் இந்தத் திருத்தம் கொண்டு வரப்படுகிறது.

அய்யா நான் முன்மொழிவது:

> "பத்தி 2 இல் உள்பத்தி(2) நீக்கப்படலாம்."

தொகுதிகளின் வரையறுப்புக்கு அரசமைப்புச் சட்டத்திலேயே வழிவகை செய்வதைக் காட்டிலும் நாம் அதை விதிகளிடமே விட்டு விடக் கருதுவதால்தான் இந்த நீக்கம் செய்யப்படுகிறது.

அய்யா, நான் முன்மொழிவது:

> "பத்தி 2 இன் உள்பத்தி (7) இன் கூறு (ஈ) க்குப் பிறகு பின்வரும் கூறு சேர்க்கப்படலாம்:
>
> (ஈஈ) இத்தகைய மன்றங்களின் உறுப்பினர்களது பதவிக்காலம்."

இது விதி செய்யும் அதிகாரங்களிலிருந்து விடுபட்டது.

★ ★ ★

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அய்யா, நீங்கள் விரும்பினால், இந்நிலையில் நான் சிலவற்றைச் சொல்வேன். அனேகமாய்ப் பலரும் பேசத் தேவையில்லாமற் போகலாம். இந்த அய்யங்கள் எல்லாம் களையப் பட்டிருக்கும் எனக் கருதுகிறேன்.

**பேராசிரியர் ஷிபன் லால் சக்சேனா:** இந்த ஏற்பட்டை நிரந்தர அரசமைப்புச் சட்டத்தில் சேர்க்கப் போகிறோம். அசாமின் சில

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர் 6, பக். 1007
2. மேற்படி அதே நூல், பக். 1013.

பகுதிகள் என்றென்றும் நாடாளுமன்றக் கட்டுப்பாட்டுக்கு அப்பாற்பட்டு இருந்து வரும் என்று இதற்குப் பொருளாகும் என்பதை மட்டும் சொல்ல விரும்புகிறேன்.

**திரு. அவைத் தலைவர்:** அட்டவணை முழுவதையும் நீக்கம் செய்வது அவசியம் என்று நாடாளுமன்றம் கருதினால் அப்படிச் செய்திட பத்தி 20 இன் படி அதற்கு அதிகாரம் அளிக்கப்படுகிறது. இதற்கு மேல் உங்களுக்கு வேறென்ன வேண்டும்?

**பேராசிரியர் ஷிபன்லால் சக்சேனா:** அய்யா, இந்த உண்மையை என்ற பேச்சில் குறிப்பிட்டிருக்கிறேன்.

**திரு. அவைத் தலைவர்:** இந்நிலையில் டாக்டர் அம்பேத்கர் ஏதும் சொல்ல விரும்புகிறாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அய்யா, நீங்கள் விரும்பினால் இப்பொழுது மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் பேச வேண்டுமென்றால் பேசட்டும்.

* * *

[1]**திரு. அவைத் தலைவர்:** பதிலளிக்க டாக்டர் அம்பேத்கரை அழைக்கிறேன். இப்போது இதை முடித்துக் கொள்வது நன்றெனக் கருதுகிறேன். நாம் போதுமான அளவு விவாதித்தாகிவிட்டது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நாம் இப்பிரச்சினை குறித்து இரண்டு மணி நேரம் விவாதித்திருக்கிறோம். அய்யா, இப்பிரச்சினையை பற்றிப் பேசுகையில் விவாதத்தில் பங்கேற்ற பலர் உண்மையில் அட்டவணையோடு தொடர்பில்லாத கூறுகள் குறித்தே பேசியதாகத் கருதுகிறேன். அட்டவணை மீது கவனம் செலுத்துவதற்கு இதுவே சரியான தருணம். குறிப்பாக உறுப்பினர் எவரேனும் புத்தம் புதிதாகச் சொல்வதற்கு ஏதேனும் இருந்தாலொழிய நாம் விவாதத்தை தொடரத் தேவையில்லை.

**திரு. அவைத் தலைவர்:** நான் ஏற்கனவே உங்களை விடையளிக்க அழைத்துவிட்டேன்.

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப். 6, பக். 1024-28

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் உங்களுக்குப் பெரிதும் கடமைப்பட்டுள்ளேன். அய்யா, நம் முன் இரு திருத்தங்கள் உள்ளன. பொது விவாதத்திற்கு பதிலளிக்கும் முன் அவை பற்றிப் பேச எண்ணியுள்ளேன்.

முதலவாது திரு.சலிகா முன்மொழிந்துள்ள திருத்தம் எண் 100. இதைப் பொறுத்தவரை பத்தி 2 இன் உள்பத்தி (5) இல் இது எவ்வாறு பொருந்திவரும் என்று தெரியவில்லை. உள்பத்தி (5) வட்டார மற்றும் மாவட்ட மன்றங்களின் மேலுரிமை பற்றி மட்டுமே சொல்கிறது. ஆளுனர் அல்லது மாநில சட்டமன்றம் தரக்கூடிய கட்டளைகள் எதனோடும் அதற்கு எவ்வித தொடர்புமில்லை. நாம் ஒரு மாவட்டமன்றத்தையும் வட்டார மன்றத்தையும் உருவாக்கு வதோடு சரி. மாண்புமிகு உறுப்பினர் இத்தகைய திருத்தம் எதை யேனும் முன்மொழிய விரும்பினால் தக்க வழிவகையின்படி அதைச் செய்ய வேண்டும். இந்த அட்டவணை மாவட்ட மன்றத் துக்கும் வட்டார மன்றத்துக்கும் உரிய அதிகாரப்பொருள் பற்றிப் பேசுகிறது. ஆகவே குறிப்பாக இந்த இடத்தில் இத்திருத்தத்துக் குரிய பொருத்தப்பட்டை என்னால் இம்மியளவும் புரிந்துகொள்ள முடியவில்லை.

திருத்தம் எண் 257 ஐப் பொறுத்தவரை, இதைக் கொண்டு தான் மதிப்பிற்குரிய உறுப்பினர் மன்ற உறுப்பினர்களின் எண்ணிக் கையை பதினைந்து என்று வரம்பிட விரும்புகிறார், இந்தத் திருத் தமும்கூட தேவையற்றதாகவே எனக்குத் தோன்றுகிறது. 'இருபத்து நான்குக்கு மேற்படாத' என்று என் திருத்தத்திலேயே உள்ளது. இருபத்து நான்கு என்பது மேல் வரம்பு . ஆதலால் பதினைந்துக்கும் குறைவான உறுப் பினர்களைக கொண்டு மன்றம் அமைக்க வேண்டியிருந்தால் அப்பொழுதுங்கூட என் திருத்தமே போதுமானதாக இருக்கும். எனவே திருத்தம் எண் 257 தேவையே இல்லை என்கிறேன். இப்பொழுது, இந்தத் திருத்தங்களுக்கு தீர்வு கண்டுவிட்ட நிலையில் வட்டார மற்றும் மாவட்ட மன்றங்கள் இருக்க வேண்டுமா என்ற கேள்வி குறித்த பொது விவாதத்தின் பக்கம் திரும்புகிறேன். இந்தப் பிரச்சினை தொடர்பாக இந்த விவாதத்தில் கலந்துகொண்ட பெரும்பாலான உறுப்பினர்கள் இந்த ஆறாம் அட்டவணையில் காணப்படும் வழி வகையை சரிவரப் படித்திருப்பார்களேயானால், இந்த வட்டார மற்றும் மாவட்ட மன்றங்களை உருவாக்குவதன் வாயிலாக நாம் ஒரு வகையான ஒதுக்கப்பட்ட மக்கட்பிரிவைத் தோற்றுவிக்கிறோம்

என்ற வாதத்தை அவர்கள் எழுப்பியிருக்க மாட்டார்கள் என்று உறுதியாக நம்புகிறேன். இது அப்படி ஒன்றும் செய்யவில்லை. நிற்க, அசாமிலுள்ள பழங்குடிகளின் நிலை இந்தியாவின் ஏனைய பகுதிகளில் உள்ள பழங்குடிகளின் நிலையிலிருந்து சற்றே மாறுபட்ட அடிப்படையில் உள்ளது.

**திரு. எ.வி. தக்கர்:** தயவு செய்து மலைவாழ்ப் பழங்குடிகள் என்று சொல்லுங்கள்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** சொல்லாட்சி பற்றிய கவலை எனக்கில்லை. இப்போதைக்கு அசாம் முதலான பகுதிகளைப் பற்றிப் பேசிக் கொண்டிருக்கிறேன். வேறுபாடு இதுவாகத்தான் இருக்கும் எனத் தோன்றுகிறது. அசாம் தவிர ஏனைய பகுதிகளில் வாழும் பழங்குடி மக்கள் ஏறத்தாழ இந்துமயமாக்கப் பட்டிருக்கிறார்கள், பழங்குடி மக்கள் தங்களைச் சூழ்ந்து வாழும் பெரும்பான்மையான மக்களின் நாகரிகத்தோடும் பண்பாட்டோடும் தன்வயமாக்கப்பட் டிருக்கிறார்கள். அசாமிலுள்ள பழங்குடிகளைப் பொறுத்தவரை இதுவல்ல நிலைமை. அவர்களின் வேர்கள் இன்றளவும் அவர்களுக்கேயுரிய நாகரிகத்திலும், அவர்களுக்கேயுரிய பண்பாட்டிலும் ஊறியுள்ளன. அவர்கள் தங்களைச் சுற்றி வாழும் இந்துக்களின் வாழ்க்கை முறைகளையோ பழக்கவழக்கங்களையோ முதன்மையாக அல்லது பெரும்பகுதியாக ஏற்றுக்கொண்டு விடவில்லை. அவர்களுடைய வாரிசுமைச் சட்டங்கள், பழக்கவழக்கங்கள் முதலானவை இந்துக்கு உரியவற்றிலிருந்து அறவே மாறுபட்டவை. இந்த முக்கிய வேறுபாட்டின் தாக்கத்தினால்தான் நாம் ஏனைய ஆட்சிப் பரப்புகளுக்கு வழிவகை செய்துள்ள ஏற்பாட்டிலிருந்து வேறு வகையான ஒரு ஏற்பாட்டை அசாமிற்கு வழிவகை செய்துள்ளோம் எனக் கருதுகிறேன். வேறுவிதமாகச் சொன்னால் காரணம் எதுவாக இருப்பினும் அசாம் பழங்குடிகளின் நிலை அமெரிக்க ஐக்கிய நாடுகளில் வெள்ளை வந்தேறிகளுக்கு மாறாக செவ்விந்தியர்களின் நிலையைச் சற்றே ஒத்துள்ளது. நிற்க, செவ்விந்தியர்கள் தொடர்பாக அமெரிக்க ஐக்கிய நாடுகள் செய்ததென்ன? எனக்குத் தெரிந்தவரை காப்பிடங்கள் அல்லது எல்லைப் பகுதிகள் என்கிறவற்றை தோற்றுவித்தார்கள், இவற்றுக்குள் செவ்விந்தியர்கள் வாழ்ந்தார்கள். அவர்கள் தம்மளவில் ஒரு குடியரசு ஆவார்கள். அமெரிக்க அய்க்கிய நாடுகள் சட்டப்படி அவர்கள் அந்நாட்டின் குடிமக்கள் என்பதில் ஐயமில்லை. ஆனால் இது அமெரிக்க ஐக்கிய நாடுகளின் அரசமைப்புச் சட்டத்தின்பால்

பெயரளவிலான பற்றுறுதியே ஆகும். உள்ளபடியே அவர்கள் தனித்த சுயேச்சையான மக்களாவர். அவர்களது சட்டங்களும், வாழ்க்கை முறைகளும் பழக்கவழக்கங்களும் தனிவேறு தன்மை கொண்டவை. ஆதலால் அவர்களை வெள்ளை மக்களால் வெள்ளைக்காரர்களுக்காக வெள்ளை நாகரிகத்தின் நோக்கத்தை முன்னிட்டுச் செய்யப்பட்ட சட்டங்களின் வீச்செல்லைக்குள் ஒரே அடியில் கொண்டு வருவது ஆபத்தாய் இருக்கும் என்று அமெரிக்கா உணர்ந்தது.

செவ்விந்தியர்களின் தேவைக்காக அமெரிக்க ஐக்கிய நாடுகள் கைக்கொண்ட வழியை சற்றே அடியொற்றித்தான் வட்டார மற்றும் மாவட்ட மன்றங்களை உருவாக்கி வருகிறோம் என்பதை ஏற்றுக் கொள்கிறேன். ஆனால் என் வாதம் என்னவென்றால், இந்த உண்மையை, அதாவது நாம் வட்டார, மாவட்ட மன்றங்களைத் தோற்றுவிக்கிறோம் என்பதை அடிப்படையாகக் கொண்டு இந்த அட்டவணையைக் குற்றவிமர்சனம் செய்திருப்பவர்கள் நாம் இந்த அரசமைப்புச் சட்டத்தில் சேர்த்துள்ள ஒன்றிணைக்கும் காரணிகளை அறவே புரிந்து கொள்ளத் தவறிவிட்டார்கள்.

பிரித்து ஒதுக்குவது என்று சொல்லப்படுகிற இதனை இல்லாமற் செய்யும் வழிவகைகள் சிலவற்றை எடுத்துக்காட்ட விரும்புகிறேன்.

நாம் செய்திருப்பவற்றில் முதலாவது இதுவே: அசாம் அரசின் நிர்வாக ஆணையுரிமை அசாமிலுள்ள பழங்குடி அல்லாத பகுதிகளுக்கு மட்டுமில்லாமல் பழங்குடிப் பகுதிகளுக்கும் பொருந்தும், அதாவது, அசாம் அரசின் நிர்வாக ஆணையுரிமை தன்னாட்சி மாவட்டங்களுக்கு உட்பட்ட பகுதிகளிலும் கூட செலுத்தப்படும் என நாம் வழிவகை செய்திருக்கிறோம். 1935 ஆம் ஆண்டின் இந்திய அரசாங்கச் சட்டத்தில் அடங்கிய வழிவகைகளுடன் ஒப்புநோக்கின் இது ஒரு மாபெரும் முன்னேற்றம் என்பதை பார்க்கத்தான் போகிறோம். அந்தச் சட்டத்தில் காணப்படும் வழிவகைகளில் நிர்வாகத்துறை இரு வகையினங்களாகப் பிரிக்கப்பட்டது. ஒன்று மாகாணத்தின் அரசாங்கம் என அழைக்கப்பட்டது. பழங்குடிப் பகுதிகளை பொறுத்தவரை மற்றொரு நிர்வாகத்துறை விருப்புரிமைப்படி செயல்படும் ஆளுனர் என அழைக்கப்பட்டது. இது அசாமிலுள்ள பழங்குடிப் பகுதிகளுக்கு மட்டுமல்லாமல் ஏனைய பகுதிகளில் அறவே விலக்கி வைக்கப்பட்ட பகுதிகளுக்கும் பொருந்துவதாய் இருந்தது. அந்தப்

பகுதிகளில் நிர்வாக ஆணையமாகச் செயல்பட்டது விருப்புரிமைப் படியான ஆளுனரே தவிர அம்மாகாணத்தின் நிர்வாகத்துறை அல்ல. நாம் இந்த வேறுபாட்டை ஒழித்துவிட்டதால் தன்னாட்சி மாவட்டங்களில் இருப்பவை உட்பட பழங்குடிப் பகுதி முழுவதுமே இப்பொழுது மாகாண அரசாங்கத்தின் ஆணையுரிமைக்கு உட்பட்டுள்ளது. ஒன் றிணைப்பதாகிய இந்தச் செய்தியில் மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் எந்தக் கவனமும் செலுத்தவில்லை. வட்டித் தொழில், நிலம் முதலான குறிப்பிட்ட சிலத் துறைகளில் சட்டம் இயற்றல் போன்ற பணி நீங்தலாகவும் கிராமப் பஞ்சாயத்துகள் அல்லது வட்டார மன்றங்கள் அல்லது மாவட்ட மன்றங்களில் செயல்படுத்த குறிப்பிட்ட சில நீதித் துறைப்பணிகள் நீங்கலாகவும், நாடாளுமன்றத்தின் ஆணையுரிமையும் அதேபோல் அசாம் சட்டமன்றத்தின் ஆணையுரிமையும் வட்டார மன்றங்கள் மீதும் மாவட்டமன்றங்கள் மீதும் பொருந்துகிறது. அவை சட்டம் இயற்றும் பிரச்சினையில் நாடாளு மன்ற ஆணையுரிமையிலிருந்து தடைக்காப்பு பெற்றவையல்ல, உயர்நீதிமன்றம் அல்லது உச்சநீதிமன்றத்தின் மேலுரிமையிலிருந்து தடைக்காப்பு பெற்றவையுமல்ல. புதிய திருத்தத்தின் நோக்கம் இதுவே. இது ஓர் ஒன்றிணைக்கும் ஆற்றல் என்பதைப் பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

மற்றோர் ஒன்றிணைக்கும் ஆற்றல் இதுதான்: நாடாளு மன்றம் இயற்றிய சட்டங்களும் அசாம் சட்டமன்றம் இயற்றிய சட்டங்களும் இந்த வட்டார மன்றங்களுக்கும் மாவட்டமன்றங்களுக்கும் தாமாகப் பொருந்தும்; பொருந்தக்கூடாது என்று ஆளுனர் நினைத்தால் மட்டுமே பொருந்த மாட்டா. வேறுவிதமாகச் சொல்வதென்றால், அசாம் சட்டமன்றத்தால் அல்லது நாடாளுமன்றத்தால் இயற்றப்படும் சட்டம் ஏன் பொருந்தக்கூடாது என்பதைக் காட்டும் பொறுப்பு ஆளுனரைச் சாரும். பொதுவாக, வட்டாரச் சட்ட மன்றம் இயற்றியச் சட்டங்களும் நாடாளுமன்றம் இயற்றிய சட்டங்களும்கூட இந்தப் பகுதிகளுக்குப் பொருந்தக்கூடியவையாகவே இருக்கும். இது மற்றுமோர் ஒருங்கிணைக்கும் ஆற்றல் என்கிறேன். நான் குறிப்பிட்டாக வேண்டிய இன்னுமோர் ஒன்றிணைக்கும் ஆற்றல் இதுதான். வட்டார மன்றங்கள் அல்லது மாவட்ட மன்றங்கள் அமைத்ததன் வாயிலாக பழங்குடி மக்களுக்கு நாம் வழங்கியிருக்கிற அரசியல் ஆணையுரிமை அல்லது அதிகாரம்தான் அவர்கள் உரிமைப் படி பெற்றாக வேண்டிய முழு ஆற்றல் வட்டமுமாகும் என நாம் சொல்லவில்லை. மறுபுறம் வட்டார மன்றங்களையும் மாவட்ட

மன்றங்களையும் பெறப்போகும் பழங்குடி மக்கள் அசாம் சட்ட மன்றத்திலேயும் அதேபோல் நாடாளுமன்றத்திலும் போதுமான பிரதிநிதித்துவம் பெற்றிருப்பார்கள். இவ்விதம் அவர்கள் அசாமிற்கான சட்டங்கள் இயற்றுவதிலும் இந்தியா முழுவதற்குமான சட்டங்கள் இயற்றுவதிலும் கூட தங்களுக்குரிய பங்கை வகிக்க இயலும். நான் குறிப்பிட்டுள்ள இந்தப் பங்கேற்புச் சட்டங்கள், அதாவது அசாம் சட்டமன்றத்தில் பிரதிநிதித்துவம், நாடாளுமன்றத்தில் பிரதிநிதித் துவம், நாடாளுமன்றம் இயற்றிய சட்டங்களைப் பொருந்தச் செய்தல், அசாம் சட்டமன்றம் இயற்றிய சட்டங்களைப் பொருந்தச் செய்தல் ஆகியவை ஒன்றிணைக்கும் சக்திகள் இல்லை என்றால், மாகாண அரசியல் வாழ்வு முழுவதுடனும் வட்டார மன்றங்களையும் மாவட்ட மன்றங்களையும் ஒன்றிணைக்கும் நோக்கத்திற்கு நம்மால் இவற்றைவிடப் பெரிய ஒன்றிணைக்கும் சக்திகள் எவற்றுக்கெல்லாம் நம்மால் வழிவகை செய்துவிட முடியும் என்பதை வட்டார மன்றங் களையும் மாவட்ட மன்றங்களையும் உருவாக்கியதன் மூலம் அறிந்து கொள்ள விரும்புகிறேன். எனவே நாம் இதன் வாயிலாக அசாம் மக்களை இறுக்கமான இருவேறு பிரிவுகளாக, அதாவது பழங்குடி களாகவும் பழங்குடி அல்லாதவதராகவும் வெட்டித் துண்டாடி விட்டோம் என்பதை நான் ஏற்றுக்கொள்ளவில்லை. மறுபுறம், நான் முன்பே சொன்னதுபோல் இருசாராரும் அரசியல் வகையில் ஒன்று சேரவும், ஒருவர் மீது ஒருவர் தாக்கஞ் செலுத்தவும், ஒருவருடன் ஒருவர் கூடிப் பழகவும், ஒருவரிடமிருந்து ஒருவர் எதையாவது கற்றுக் கொள்ளவும் வழிசெய்யக்கூடிய பல பங்கேற்புச் சட்டங் களை நாம் வழங்கியுள்ளோம். வட்டார மன்றங்கள் மற்றும் மாவட்ட மன்றங்கள் தொடர்பான வழிவகைக்கு எதிராக வலியுறுத்தப்பட் டிருக்கும் வாதத்திற்கு முழுக்க முழுக்க அடிப்படையாக இருப்பது இந்த அட்டவணையில் காணப்படும் ஏனைய வழிவகைகளைத் தவறாகப் புரிந்து கொண்டிருப்பதும், தக்கவாறு படிக்காமல் இருப் பதுமே ஆகும் என்று நான் உறுதியாக நம்புகிறேன். அய்யா, என் நண்பர் திரு. சலிகா தமது திருத்தத்தை முன்மொழிவதில் மேற்கொண்ட போக்கு குறித்தும், மேலும் எனது நண்பர் திரு.ரோகிணி குமார் சௌதுரியின் போக்குகுறித்தும் நான் சற்றே வியப்படைந்தேன். அவர்கள் இப்பொழுது மகிழ்ச்சியும் ஒற்றுமையும் நிறைந்த ஒரு குடும்பமாக இருக்கவில்லை எனக் கருதுகிறேன். இதற்கு என்ன காரணம் என்று எனக்குப் புரியவில்லை. ஆனால் இந்தத் திருத்தங்கள் செய்யப்பட்டபோது அவை திரு. சலிகாவின் இசைவுடன் செய்யப்

பட்டன, அசாம் தலைமையமைச்சரின் இசைவுடனும் மேலும் இதில் முக்கியமாகத் தொடர்புடைய என் நண்பர் திரு. நிகோலஸ் ராயின் இசைவுடனும் செய்யப்பட்டன என்பதை என்னால் சொல்ல முடியும். இவர்கள் இப்பொழுது இந்த அட்டவணைக்கு அப்பாற்பட்டக் காரணிகளால் ஒருவரையொருவர் குறை சொல்வதில் ஈடுபட்டிருப் பதைக் காண்கிறேன். இந்தப் பூசலுக்கு, ஒருவருக்கு எதிராக ஒருவர் வெளிப்படுத்திக் கொண்டிருக்கிற இந்த வெளிப் படையான பூசலுக் கும் பகைமைக்கும் வேறு எந்தக் காரணத்தையும் என்னால் காண முடியவில்லை. எனவே முழுக்க முழுக்க குடும்பச் சண்டை என நான் கருதுகிற இதற்குள் நுழைய விரும்பவில்லை.

**திரு.ரோகிணி குமார் சௌதுரி:** எங்களுக்கு எதிராக அவதூறு கள் பொழிய மாண்புமிகு டாக்டர் அம்பேத்கருக்கு உரிமை உண்டா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** நான் எந்த அவ தூறும் செய்யவில்லை; அய்யா, இது குடும்பச் சண்டை, இதற்குள் நுழையமாட்டேன் என்றுதான் சொன்னேன். நாம் மிகச் சிறந்தே வழிவகையை செய்துள்ளோம் என்பதே என் கருத்து.....*

**திரு.குலதர் சலிகா:** நேர்மையாக தெரிவித்த கருத்துக்கு டாக்டர் அம்பேத்கர் உள்நோக்கங்கள் கற்பிப்பதற்கு எதிர்ப்பு தெரி விக்கிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** நான் உள்நோக் கங்கள் ஏதும் கற்பிக்கவில்லை. இந்த அட்டவணையில் செய்யப் பட்டிருக்கும் ஒவ்வொரு மாற்றத்திலும் திரு. சலிகாவுக்கும் ஒரு பங்கு உண்டு. அந்த உண்மையை அவர் மறுக்கட்டும். அவரால் அதை மறுக்க முடியுமா?

**திரு. குலதர் சலிகா:** ஆமாம், நான் மறுக்கிறேன். சிலவற்றை நான் ஏற்றுக்கொள்ளவில்லை என திரு. பர்தோலோயிடம் சொன் னேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அவர் திரு. பர்தோலி யின் காதுகளில் கிசுகிசுத்திருக்கக்கூடும். அவர் வரைவுக்குழுவில் இந்த மாற்றங்களுக்கு எதிராக ஒரு வார்த்தை கூடச் சொல்லவில்லை. குறிப்பிட்ட வேறு சில நேர்வுகளில் செய்ததுபோல் நான் அவரது

கையொப்பத்தைப் பெறவில்லை. ஏனென்றால் எந்த உறுப்பினரும் சொன்ன சொல்லிலிருந்து பின்வாங்கக்கூடாது என நான் விரும்பு கிறேன். ஆனால் வட்டார மன்றங்களுக்கும் மாவட்ட மன்றங்களுக் கும் குறிப்பிட்ட சில நோக்கங்களுக்கு குறிப்பிட்ட வகையிலான தன்னாட்சி வழங்கப்பட்டிருக்கிறது என்பதைத்தான் நான் சொல்லிக் கொண்டிருந்தேன். அதே நேரத்தில் அவை மாகாணத்தின் வாழ்விலும் நாடுமுழுவதன் வாழ்விலும் கட்டுண்டிருக்கின்றன. ஒன்றுபடும் தன்மையைக் கொண்ட இந்தக் காரணிகள் பழங்குடி மக்களை அசாமிலும் நாட்டிலும் ஏனைய சமவெளி மக்களுடன் இணைக்க வில்லை, சேர்க்கவில்லை என்றால் வருத்தத்துக்குரிய இத்தகைய நிலைமைக்கான காரணத்தை வேறெங்காவதுதான் தேடிப்பிடிக்க வேண்டும். வட்டார மன்றங்களை உருவாக்கினால் பழங்குடிப் பகுதிகள் திபேத்தின் வழிச்சென்றுவிடும், வேறு ஏதோ ஒரு பகுதியின் வழிச்சென்றுவிடும் என என் நண்பர் ரோகிணி குமார் சௌதுரி சொன்னார். இந்த வருவதுரைத்தலை பழங்குடிப் பகுதிகளோடு மட்டும் நிறுத்திக்கொள்ளக்கூடுமா என்பதை யானறியேன். அசாமே சென்றுவிடக்கூடும் என நான் அஞ்சுகிறேன். இதற்கு அரசமைப்புச் சட்டத்தில் நம்மால் எந்த வழிவகையும் செய்ய முடியாது. இதுபற்றி எனக்கு அய்யமில்லை.

**திரு. பி. தாஸ்** (ஒரிசா: பொது): நான் டாக்டர் அம்பேத் கரைக் கேட்கலாமா? அசாம் - பர்மா எல்லையில் இப்பொழுதும் பிரித்தானியக் கையாட்கள் செயல்பட்டுக் கொண்டிருக்கிறார்கள் என்பதும் கரேன்களுக்கும் பர்மியர்களுக்கும் இடையிலான குழப் பங்களுக்கு அவர்களே பொறுப்பு என்பதும் டாக்டர் அம்பேத்கருக்கு தெரியுமா? அதே பிரித்தானியக் கையாட்கள் இப்பொழுதும் அசாம் பழங்குடிப் பகுதிகளில் செயல்படவில்லையா? என் நண்பர் மறைதிரு நிகோல்ஸ் ராயின் உரையைக் கேட்டதிலிருந்து பழங்குடிப் பகுதி களில் பிரித்தானிய செல்வாக்கு பரவுவதற்கு தோதாக அப்பகுதிகள் ஒரு தனித்த அமைப்பாக இருக்க வேண்டுமென அவர் விரும்பு வதாகக் கருதுகிறேன். அரசில் அங்கம் வகிப்பவர் என்ற முறையில் டாக்டர் அம்பேத்கர் இந்தப் பழங்குடிப் பகுதிகளையும் பற்றி நன்கறிவார். நான் கொஞ்சம் அறிந்துள்ளேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** என்னால் சொல்ல முடிவதெல்லாம், இந்த அயற்செல்வாக்கை அடியோடு ஒழித்துக் கட்டுவதற்கு ஏதேனும் ஒருவழி காண்பது முழுக்கச் சாத்தியமான ஒன்றே.

**திரு. பி. தாஸ்:** வரைவுக்குழு.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** வரைவுக்குழுவுக்கும் இந்த அயற் செல்வாக்கை ஒழித்துக்கட்டுவதற்கும் எந்தத் தொடர்புமில்லை. இது வேறோர் அமைப்பின் பணி. இந்த அயற் செல்வாக்கை ஒழித்துக்கட்டுவது கடினமாய் இருக்காது என என் நண்பருக்கு என்னால் உறுதியளிக்க முடியும்.

*(திருத்தப்பட்ட வடிவில் பத்தி 2 அட்டவணையில் சேர்க்கப்பட்டது.)*

*(பத்தி 3)*

* * *

[1]**திரு. குலதர் சலிகா:** உண்மையில் இந்தத் திருத்தமும் என் திருத்தமும் ஒன்றே. எனவே டாக்டர் அம்பேத்கர் இதுபோல் கூடுதலாகச் சேர்த்தும் நீர்க்கச் செய்தும் சட்டமியற்றுவதைத் தடபுடலாக்குவதைக் காட்டிலும் திருத்தத்தை ஏற்றுக் கொண்டிருக்க வேண்டும். வரைவுக்குழுவின் திருத்தத்தை ஏற்றுக்கொள்வதை விட என் திருத்தம் எண் 113ஐ ஏற்றுக்கொள்வதே நல்லது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** மதிப்பிற்குரிய உறுப்பினர் எனக்காக ஏற்கனவே இதை முன்மொழிந்திருக்கிறார். நானே இதை முன்மொழிந்ததாக நீங்கள் எடுத்துக்கொண்டால் நேரம் மிச்சமாகும்.

**திரு. அவைத் தலைவர்:** அவர் முன்மொழிந்திருப்பதாக எடுத்துக் கொள்கிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** முறைப்படி இதை நான் முன்மொழியட்டுமா?

**திரு. அவைத் தலைவர்:** சரி.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அய்யா, நான் முன்மொழிவது:

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர் 6, பக். 1029.

''பத்தி 3, உள்பத்தி (2)க்குப் பிறகு பின்வரும் உள் பத்தியை சேர்க்கலாம்:

'(3) இந்தப் பத்தியின்படி இயற்றப்படும் எல்லாச் சட்டங்களும் உடனுக்குடன் ஆளுனரிடம் சமர்ப்பிக்கப்படும், அவர் இசைவளிக்கும் வரை எவ்விதத்திலும் செயலுக்கு வராது.''

**திரு.ரோகிணி குமார் சௌதுரி:** அவைத் தலைவர் அவர்களே, நான் பணிந்து முன்மொழிவது:

''பட்டியல் I (ஏழாம் வாரம்) திருத்தம் எண் 114 இல், பத்தி 3 இல் முன்மொழியப்பட்ட உள்பத்தி (3)க்குப் பதிலாக பின்வருவதை இடம்பெறச் செய்யலாம்.

''(3) இந்தப் பத்தியின்படி இயற்றப்படும் எல்லாச் சட்டங்களும் ஆளுநரிடம் சமர்ப்பிக்கப்படும், அவர் இவற்றை மாநிலச் சட்டமன்றத்தின் முன் வைத்திடுவார்; சட்டமன்றம் ஏற்றுக்கொண்டு ஆளுனர் இசைவளிக்கும்வரை இந்தச் சட்டங்கள் எவ்விதத்தும் செயலுக்கு வராது.''

திருத்தம் மறுதலிக்கப்பட்டது.

★ ★ ★

[1]**திரு. அவைத் தலைவர்:** டாக்டர் அம்பேத்கர், நீங்கள் ஏதும் சொல்ல விரும்புகிறீர்களா? இதில் விவாதிக்க ஏதும் இருப்பதாக நான் கருதவில்லை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அய்யா, என் நண்பர் திரு. சலிகாவின் திருத்தம் எண் 113 யைப் பொறுத்தவரை, உண்மையில் அதன்பொருள் என்ன என்பது எனக்குப் புரியவில்லை. அது சொல்கிறது: ''ஆளுனர் சட்டங்களையும் ஒழுங்குமுறைகளையும் வகுத்து, மாநிலச் சட்டமன்றம் ஒப்புக்கொள்ளக்கூடிய அதிகாரங்களை மாவட்ட மன்றத்திடமும் வட்டார மன்றங்களிடமும் ஒப்படைப்பார்.'' இதற்கு என்ன பொருள் என்று என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. எனவேதான் இதை ஏற்றுக்கொள்வதாக என்னால் சொல்ல இயலவில்லை. என் திருத்தத்தையும் எனது மாண்புமிகு நண்பர் திரு.ரோகிணி குமார் சௌதுரி முன்மொழிந்த திருத்தத்தையும் பொறுத்தவரை 'ஆளுனர்' என்ற சொல்லின் பொருள் என்ன என்பதை என் மாண்புமிகு நண்பர் புரிந்துகொள்ளத் தவறி விட்டார் என்பதைத் தவிர எந்த வேறுபாடும் இல்லை. அசாம் சட்ட மன்றம் சட்டங்களுக்கு ஒப்புதலளிக்கும் என்று அவர் சொல்கிறார்.

---

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர் 6, பக். 1031.

எனது திருத்தத்தின்படி அசாம் அமைச்சரவையின் அறிவுரைரைப் பொறுத்து சட்டங்களுக்கு ஆளுனர் ஒப்புதளிப்பார். ஏனென்றால் இந்த ஏற்பாடு முழுவதிலும் 'அவரது விருப்புரிமைப்படி' என்ற சொற்களை விட்டுவிடுகிறோம். ஆளுனர் என்ற சொல் வரும் இடத்தெல்லாம், அமைச்சரவையின் அறிவுரைப்படி செயல்படும் ஆளுனர் என்பதே அதன் பொருளாகும். அமைச்சரவையின் அறிவுரைப்படி செயல்படும் ஆளுனர் ஒரு சட்டத்துக்கு ஒப்புதலளிப்பதற்கும் அசாம் சட்டமன்றமே ஓர் சட்டத்துக்கு ஒப்புதலளிப்பதற்கும் இடையே மிக முக்கிய வேறுபாடு இருப்பதாக அவர் உண்மையிலே கருதுகிறாரா என்று நான் அவரைக் கேட்க விரும்புகிறேன். என் திட்டம் இந்த ஏற்பாட்டின் மூலக் கூறுகளோடு, அதாவது குறிப்பிட்ட சில வகைகளில் சட்டங்கள் இயற்றிட அரசமைப்புச் சட்டத்தால் வழங்கப்பட்ட ஒரு குறிப்பிட்ட உள்ளார்ந்த உரிமைகள் பழங்குடி மக்களுக்கு இருக்க வேண்டும் எனக் கருதுகிறேன். இவ்வாறு இருக்க எண் பத்தி(3) இத்திட்டத்தோடு மிக அதிகமாய் ஒத்துப்போகிறது; எந்த ஒரு சட்டத்தையும் ஆளுனர் ஏற்றுக்கொள்ள வேண்டுமா கூடாதா என அவருக்கு அறிவுரை வழங்கும் சிறிதளவு அதிகாரத்தை அசாம் அமைச்சரவைக்கு வழங்குகிறது. சட்டமன்றத்தின் தலையீட்டுக்கு தேவையே இல்லை.

**திரு.ரோகிணி குமார் சௌதுரி:** நான் மாண்புமிகு டாக்டர் அம்பேத்கரை சரிவரப் புரிந்துகொண்டிருக்கிறேன் என்றால் என் திருத்தத்தை விலக்கிக்கொள்ள அணியமாக உள்ளேன். அதாவது ஆளுநருக்கு அமைச்சரவை அறிவுரை கூறவேண்டும், அமைச்சரவை சட்டமன்றத்தின் கருத்தை பெறுகிறது என்றால் எனக்கு எந்த மறுப்புமில்லை. விவாதிப்பதற்கான வாய்ப்பு அவைக்கு கிடைக்கும் வரை அமைச்சரவை எந்த நடவடிக்கையும் எடுக்காது என்பதையே அமைச்சரவையின் அறிவுரை குறிக்கிறதென்றால் நான் விரும்புவதும் டாக்டர் அம்பேத்கர் விரும்புவதும் ஒன்றே என நினைக்கிறேன். ஆக, நான் விலகிக் கொள்வேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** நான் சொல்லியிருப்பதற்கும் கூடுதலாகவே அவர் புரிந்து கொள்கிறார் என நினைக்கிறேன். அவருக்கு அந்த உறுதிமொழியைத் தர எவ்விதத்திலும் நான் அணியமாக இல்லை.

*(திருத்தம் மறுதலிக்கப்பட்டது. திருத்தப்பட்ட வடிவில் பத்தி 3 அட்டவணையில் சேர்க்கப்பட்டது.)*

(பத்தி 4)

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அய்யா, நான் முன்மொழிவது:

> "பத்தி 4 இன் உள்பத்தி (1) இல் 'அல்லது இந்த அட்டவணையின் பத்தி 3 இன்படி இயற்றப்பட்ட எந்தச் சட்டத்திலிருந்தும் பிறக்கிறவை' என்ற சொற்களும் எண்களும் நீக்கப்படலாம்." அவை தேவையற்றவை.

ஐயா, நான் மேலும் முன்மொழிவது:

> "பத்தி 4 இன் உள்பத்தி(2) இல் இத்தகைய வழக்குகள் மீதான மேல்முறை யீட்டு மேலுரிமைகளைப் பெற்றிருக்கலாம், இத்தகைய வட்டார அல்லது மாவட்டமன்றம் அல்லது நீதிமன்றத்தின் முடிவு இறுதியானதாக இருக்கும்' என்ற சொற்களுக்குப் பதிலாக 'உயர்நீதிமன்றம், உச்சநீதிமன்றம் தவிர இத்தகைய வழக்குகள் மீது மேலுரிமை பெற்றிருக்கும் என்ற சொற்களை இடம்பெறச் செய்யலாம்."

அய்யா நான் மேலும் முன்மொழிவது:

> "பத்தி 4 இன் உள்பத்தி (2)க்குப் பிறகு பின்வரும் உள்பத்தியைச் சேர்க்கலாம்:
>
> (3) இந்தப்பத்தியின் உள்பத்தி 2 இன் வழிவகைகள் பொருந்தும்படியான வழக்குகள் மீது ஆளுனர் ஆணைகொண்டு அவ்வப்பொழுது குறித்துரைக்கும் படியான மேலுரிமையை அசாம் உயர்நீதிமன்றம் பெற்றிருக்கவும் செலுத்தவும் செய்யும்."

இத்திருத்தம் ஒரு முக்கிய மாற்றத்தைச் செய்கிறது. மூல வடிவில் பத்தி 4 இன் உள்பத்தி (2) இன்படி மாவட்ட நீதிமன்றத்தின் தீர்ப்புதான் இறுதியானதாய் இருந்தது. இப்பொழுது அவை உயர் நீதிமன்ற, உச்சநீதிமன்ற மேல்முறையீட்டு மேலுரிமைக்கு உட்பட்டதாய் இருப்பதற்கு நாம் வழிவகை செய்திருக்கிறோம். அது ஒரு தேவையான வழிவகையாகும்.

★ ★ ★

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அய்யா, மதிப்பிற்குரிய நண்பர் என்னைப் பார்த்து இந்த வினாக்களைத் தொடுத்ததால் நான் சற்றே வியப்படைந்தேன் என்பதைச் சொல்லத்தான்

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர் 6, பக். 1033.
2. மேற்படி அதே நூல், பக். 1035-36.

வேண்டும். அவரே அவற்றிற்கு விடை கண்டிருக்கலாம் எனக் கருது கிறேன். ஆனால் அவர் அவற்றை என்னை நோக்கித் தொடுத்திருப் பதால் இப்பொழுது நான் விடையளிப்பேன்.

பழங்குடிப் பகுதியில் நிறுவப்படும் நீதிமன்றங்களில் முன் னிலையாவதற்கு வழக்குரைஞர்கள் அனுமதிக்கப்படுவார்களா? என்ற முதல் வினாவைப் பொறுத்தவரை விடை மிகவும் எளியதொன்றே. முதலாவதாக, பட்டியல் III இல் தொழில்முறைகள் பற்றிச் சொல்லும் பதிவின்படி சட்டத் தொழில் தொடர்பாக எந்த ஒரு சட்டத்தையும் இயற்றும் அதிகாரம் மாகாண அரசுக்கு இருக்கும்; அந்தச் சட்டத் தின்படி அவர்கள் தன்னாட்சி மாவட்டங்கள் என அறியப்படும் மாவட்டங்களில் வழக்குரைஞர்கள் நீதிமன்றங்களில் முன்னிலை யாவதற்கு உரிமை உண்டு என்று வழிவகை செய்தால், அந்தச் சட்டம் பொருந்தும்; பொருந்தாது என்று ஆளுநர் நினைத்தால் மட்டும் பொருந்தாது. எனவே இந்தச் செய்தி தெள்ளத் தெளிவாக உள்ளது.

இந்தப் பத்தியின்படி உருவாக்கப்படும் தீர்ப்பாயங்களின் முடிவுகளிலிருந்து மேல்முறையீடுகள் செய்யும் பிரச்சினையைப் பொறுத்தவரை இங்கும் விடை மிகவும் எளியதொன்றே. இந்தப் பத்தி முதலில் மேல் முறையீட்டு நீதிமன்றம் ஒன்றை அங்கே அமைக் கலாம். மேல் முறையீட்டு வழக்குகள் இந்த நீதிமன்றங்களுக்குப் போகும், அல்லது மாவட்ட நீதிபதியின் நீதிமன்றத்தை ஒரு மேல் முறையீட்டு நீதிமன்றாக அறிவிக்கலாம்; கிராமப் பஞ்சாயத்து களும் பிற நீதிமன்றங்களும் எடுத்த முடிவுகளிலிருந்து வரும் மேல் முறையீடுகளை இந்த நீதிமன்றம் விசாரிக்கும். ஆகவே அங்கேயும் மேல்முறையீட்டுக்கான ஒரு வழிவகை உள்ளது. இப்போதைய எனது திருத்தத்தின்படி மாவட்ட மேல்முறையீட்டு நீதிமன்றத்திலிருந்து உயர்நீதிமன்றத்துக்கோ உச்சநீதிமன்றத்துக்கோ மேலும் மேல்முறை யீடு செய்யலாம்.

**திரு. ரோகிணி குமார் சௌதுரி:** நான் உள்பத்தி (2) இன் இந்த வரிகளைக் குறிப்பாகப் படித்துக் காட்டுகிறேன்:

> ''ஒரு தன்னாட்சி வட்டாரத்துக்கான வட்டாரமன்றம் அல்லது இதற்கென வட்டாரமன்றத்தால் அமைக்கப்படும் எந்தவொரு நீதிமன்றமும், அல்லது

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர் 6, பக். 1033.

தன்னாட்சி மாவட்டத்துக்குள் எந்தவொரு பகுதி தொடர்பாகவும் வட்டார மன்றம் ஒன்றில்லாவிட்டால் அந்த மாவட்டத்திற்கான மாவட்டமன்றம் அல்லது இதற்கென மாவட்ட மன்றத்தால் அமைக்கப்படும் எந்தவொரு நீதிமன்றமும் அட்டவணைப் பழங்குடிகளாயிருக்கும் தரப்பினர் இடையிலான அனைத்து வழக்குகள் தொடர்பாகவும் ஒரு மேல்முறையீட்டு நீதிமன்றத்திற்குரிய அதிகாரங்களைச் செலுத்தும்...

*தரப்பினரில் ஒருவர் அட்டவணைப் பழங்குடியைச் சாராதவராயிருக்கும்போது என்ன நேரிடும்?*

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** *இரு தரப்பினரில் ஒருவர் பழங்குடியாகவும் மற்றவர் பழங்குடி அல்லாதவராகவும் இருந்தால் சாதாரண சட்டமே பொருந்தும்.*

***திரு. ரோகிணிகுமார் சௌதுரி:*** *நீங்கள் எங்கே இப்படி வழிவகை செய்திருக்கிறீர்கள்?*

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** *இது அதிலிருந்து தெரியவருகிறது. இப்போதும்கூட அது கூறுகிறது: 'தரப்பினர் இருக்குமிடத்தே....*' இடர்பாடு ஏதுமிருப்பதாக நான் கருதவில்லை. என் நண்பர் இதை புரிந்துக் கொண்டிருப்பாரென நான் நம்புகிறேன்.*

***திரு. ரோகிணி குமார் சௌதுரி:*** *எந்தவொரு இடத்திலும் வழிவகை ஒன்றும் செய்யப்படவில்லை, அய்யா.*

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** *சாதாரண நீதிமன்றத்தின் மேலுரிமை பத்தி 4 இல் வழிவகை செய்யப்பட்டுள்ள அளவிற்கு மட்டுமே நீக்கப்படுகிறது. மற்றபடி சாதாரண பகுதியிலுள்ள நீதிமன்றங்களின் மேலுரிமை தொடருகிறது. இவை மட்டுமே இந்தப் பகுதியிலுள்ள நீதிமன்றங்களாக இருக்க மாட்டா; மாகாணத்தின் பொதுச்சட்ட ஆட்சியின் நோக்கத்திற்காக மாகாண அரசாங்கத்தால் நிறுவப்படும் வேறு நீதிமன்றங்களும் இருக்கும்.*

*(திருத்தப்பட்ட வடிவத்தில் பத்தி 4 அட்டவணையில் சேர்க்கப்பட்டது)*

---

★ புள்ளிகள் குறியீட்டை குறிக்கின்றன.

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர் 6, பக். 1039.

(பத்தி 9)

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அய்யா நான் முன்மொழிவது:

''பத்தி 9 இன் உள்பத்தி (1) ஐ நீக்கலாம்.''

கனிமவள ஆய்வுக்காகவோ அல்லது கனிமப்பொருட்களை பிரித்தெடுப்பதற்காகவோ அசாம் அரசாங்கத்தால் வழங்கப்படும் ஒப்புறுதியை அல்லது குத்தகையை இந்தப் பத்தி குறிப்பிடுகிறது. இந்தப் பிரச்சினை இப்போது மைய அரசாங்கத்திடம் இருக்கிறது. ஆகவே இந்த உள் பத்தியை இங்கே வைத்துக் கொள்வது தேவை யற்றதாகும்.

(பத்தி 10)

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அய்யா, நான் முன்மொழிவது;

''பத்தி 10 உள்பத்தி (2) இல் 'இப்படிப்பட்ட ஒழுங்குமுறைகள்' என்ற சொற்களுக்குப் பதிலாக 'குறிப்பாகவும்' முன்சொன்ன அதிகாரத்தின் பொதுத்தன்மைக்குக் கேடின்றியும் 'இப்படிப்பட்ட ஒழுங்குமுறைகள்' என்ற சொற்களை இடம்பெறச் செய்யலாம்.

இரு ஒரு வரைவு மாற்றம் மட்டுமே.

நான் மேலும் முன்மொழிவது:

''பத்தி 10 உள்பத்தி (2)க்குப் பிறகு பின்வரும் உள்பத்தியைச் சேர்க்கலாம்:

'3. இந்தப் பத்தியின்படி வகுக்கப்படும் எல்லா ஒழுங்குமுறைகளும் உடனுக்குடன் ஆளுநரிடம் சமர்ப்பிக்கப்படும், அவர் இசைவளிக்கும்வரை எவ்விதத்தும் செயலுக்கு வராது.''

(திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது).

* * *

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** என் நண்பருக்கு பயங்கர கிளர்ச்சியூட்டும் பிரச்சினைகள் தொடர்பாக நான் ஓரிரு சொல்

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர் 6, பக்.1041.

2. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர் 6, பக்.1041 - 42.

கூறலாமா? காப்புக் கூறுகள் என்ற முறையில் மூன்று வழிவகைகள் செய்யப்பட்டுள்ளன. என் நண்பர் இவற்றைக் கருத்தில் கொள்ள வில்லை. பத்தி 10க்கான முதலாவது துணைவிதி கூறுகிறது: ''ஆனால் இந்தப் பத்தியின்படி இப்படிப்பட்ட ஒழுங்குமுறைகளை வகுக்க வேண்டுமானால் மாவட்ட மன்றத்தின் மொத்த உறுப்பினர்களில் முக்கால் பங்கிற்குக் குறையாத பெரும்பான்மைக் கொண்டு அவற்றை நிறைவேற்ற வேண்டும்.'' இது ஒரு காப்புக் கூறாகும். இரண்டாவதுக் காப்புக்கூறு வரைவு அரசமைப்புச் சட்டத்தின் பக்கம் 184 இல் அடங்கியிருக்கிறது. அது கூறுகிறது: ''ஆனால் மேலும் என்னவென்றால் இப்படிப்பட்ட ஒழுங்குமுறைகள் வகுக்கப்படுவதற்கு முன்பிருந்தே மாவட்டத் திற்குள் தொழில் செய்து வந்துள்ள வட்டிக் காரர் அல்லது வணிகருக்கு இப்படிப்பட்ட ஒழுங்குமுறைகள் எதன் படியும் உரிமம் வழங்க மறுப்பதற்கு சட்ட அருகதை இராது. ஆகவே நடப்பிலிருக்கிற உரிமைகள் பாதிக்கப்படுவதில்லை.

என் நண்பர் அக்கறையுடன் கவனிக்கத் தவறிவிட்ட மூன்றாவது செய்தி நான் முன்மொழிந்திருக்கிற திருத்தமாகும். அதாவது ''இந்த பத்தியின்படி வகுக்கப்படும் எல்லா ஒழுங்குமுறைகளும் உடனுக் குடன் ஆளுநரிடம் சமர்ப்பிக்கப்படும். அவர் இசைவளிக்கும்வரை எவ்விதத்தும் செயலுக்கு வராது.'' என் இந்த முன்னெச்சரிக்கைகள் இருக்கின்றன.

வரைவுக்குழு செய்திருப்பது அநாகரிகச் செயல் என்றும் பிரித்தானிய அரசு கூட செய்யாத ஒன்று என்றும் அவர் கூறியிருப் பதைப் பொறுத்தவரை, இந்தத் தனித்துறை முழுக்க முழுக்க ஆளுநரின் விருப்புரிமைக்குட்பட்டதாக இருந்தது என்பதை அவர் மறந்துவிடுகிறார் என்று நான் சுட்டிக்காட்டலாம்; இது அவர் செய்தப் பிழை. நாம் ஆளுநரின் அந்த விருப்புரிமையை அடியோடு நீக்கி விட்டோம். அவர் இப்போது அமைச்சரவையின் அறிவுரைக்குட் பட்டுத்தான் செயல்பட முடியும்.

நான் அளித்திருக்கும் விளக்கம் என் நண்பர் திரு.ரோகிணி குமார் சௌதுரிக்கு நிறைவளிக்கிறதா? என்று இப்போது எனக்கு சந்தேகமாய் உள்ளது.

**மதிப்பிற்குரிய உறுப்பினர்கள்:** இல்லவே இல்லை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** என்னால் தர முடிந்ததைக் காட்டிலும் உங்களுக்குக் கூடுதலாக ஏதோ தேவைப் படுகிறது என்பதை நானறிவேன். பசியால் வாடிய டேவிட் காப்பர் பீல்டு இன்னும் கொஞ்சம் கஞ்சிக் கேட்டானல்லவா, அவனைப் போலத்தான் நீங்களும்.

*(மேலே குறிப்பிட்ட டாக்டர் அம்பேத்கரின் திருத்தம் திருத்தப்பட்ட வடிவத்தில் பத்தி 10 அட்டவணையில் சேர்க்கப்பட்டது.)*

★ ★ ★

*(பத்தி 12)*

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** வரிசைத் தாள் குறித்த எனது திருத்தம் எண் 128 ஐ நான் கவனத்திற்குகொண்டு வரலாமா? இதை முன்மொழியப்போவதால் என் நண்பரின் இந்தத் திருத்தம் தேவையற்றதாகவே இருக்கும். அதில் அவர் எதிர்ப்புத் தெரிவிக்கும்படியான சொற்களை விட்டுவிட எண்ணுகிறேன்.

**திரு. குலாதர் சாலிகா:** இப்போதாவது வரைவுக் குழுவிற்கு ஒருவகையில் புத்தி வந்திருக்கிறதே என்று நான் மகிழ்ச்சியடைகிறேன். வரைவுக் குழுவிற்கு முதன் முதலாக புத்தி வந்திருப்பது மகிழ்ச்சிக்குரியது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** இதற்குக் காரணம் நீங்கள் முதன்முதலாக உங்கள் வாதங்களை கொண்டு என்னை நம்ப வைத்திருப்பதே.

அய்யா, நான் இப்போது எனது திருத்தம் எண் 128ஐ முன் மொழிகிறேன்.

> ''பத்தி 12 கூறு (ஆ) இல் 'விளம்பர நேர்வைப் பொறுத்து இத்தகைய மாவட்டத்திற்கான மாவட்ட மன்றம் அல்லது இத்தகைய வட்டாரத்திற்கான வட்டார மன்றம் இத்தகைய கட்டளைப் பிறப்பிக்கப்படுவதைப் பரிந்துரை செய்யும் ஒரு தீர்மானத்தை நிறைவேற்றுமானால் மாவட்ட மன்றம் அல்லது வட்டார மன்றத்தின் ஒப்புதலுடன் அறிவிப்பில் குறித்துரைக்க' என்ற

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர் 6, பக். 1043.
2. மேற்படி அதே நூல், பக். 1044.

*சொற்களுக்குப் பதிலாக 'அறிவிப்பில் குறித்துரைக்க' என்ற சொற்களை இடம்பெறச் செய்யலாம்.''*

மாவட்ட மன்றமோ, வட்டார மன்றமோ நிறைவேற்றக்கூடிய எந்தவொரு தீர்மானத்தின் கட்டுத்தளைகளிலிருந்தும் இந்த திருத்தத்தினால் ஆளுநர் விடுவிக்கப்படுகிறார். நாடாளுமன்றம் அல்லது, அசாம் சட்டமன்றம் நிறைவேற்றிய ஒரு குறிப்பிட்டச் சட்டம் அப்பகுதிக்கு பொருந்தக்கூடியதாய் இருந்தாலும் இல்லாவிட்டாலும் அவர் இப்போது அமைச்சரவையின் அறிவுரைப்படி செயல்பட முடியும்.

***(திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது. திருத்தப்பட்ட வடிவத்தில் பத்தி 12 அட்டவணையில் சேர்க்கப்பட்டது.)***

## (பத்தி 13)

[1]**திரு. அவைத் தலைவர்:** திருத்தம் எண் 129.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அய்யா, நான் முன்மொழிவது:

*''பத்தி 13 இல் 'அசாம் மாநிலம்' என்ற சொற்களுக்குப் பிறகு முதலில் விவாதத்திற்காக மாவட்ட மன்றத்தின் முன் வைக்கப்படும், பிறகு இந்த விவாதத்திற்குப் பின்னர்' என்ற சொற்களை நுழைக்கலாம்.''*

★ ★ ★

**திரு.ரோகிணி குமார் சௌதுரி:** அவைத் தலைவர் அவர்களே, நான் முன்மொழியலாமா?

*'மேற்கண்ட திருத்தம் எண் 129, பத்தி 13 இல்' 'பிறகு இந்த விவாதத்திற்குப் பின்னர்' என்ற (நுழைப்பதற்கு முன்மொழிந்த) சொற்களுக்குப் பிறகு 'தன்னாட்சி மாவட்டங்கள் தொடர்பான இத்தகைய தனி அறிக்கை மாநில சட்ட மன்றம் செய்யக் கூடிய திருத்தங்களுக்கும் மாற்றங்களுக்கும் உட்பட்டதாயிருக்கும்' என்ற சொற்களை நுழைக்கலாம்.''*

★ ★ ★

**திரு. அவைத் தலைவர்:** திரு.ரோகிணி குமார் சௌதுரியின் திருத்தம் குறித்து நீங்கள் ஏதேனும் சொல்ல விரும்புகிறீர்களா, டாக்டர் அம்பேத்கர்?

---

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர் 6, பக். 1044.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** *'பிரிவு 177'' என்ற சொற்கள் மூலவரைவில் இடம்பெற்றுள்ள போதிலும் என் நண்பர் திரு.ரோகிணிகுமார் சௌதுரி பொருத்தம் என்று நினைத்து இந்தத் திருத்தம் 130 கொண்டு வந்திருப்பதை நான் குறை கூறத்தான் வேண்டும். 177 இன் பொருளுக்குள் ஒரு நிதிநிலை அறிக்கையாக அதை கருதுவது பற்றிய விளைவு என்ன வென்றால் அதன்மீது சட்டமன்றம் விவாதமும், வாக்கெடுப்பும் நடத்தும் என்பதே. திருத் தங்கள் முன்மொழியப்படலாம்; பண ஒதுக்கீட்டுச் சட்டம் இதற்கு பொருந்தும். ஒன்றே ஒன்று தான். அசாம் சட்டமன்றம் இதனை பரிசீலனை செய்வதற்கு முன், பணம் எவ்வாறு ஒதுக்கப்பட வேண்டும் என்பது தொடர்பாக மாவட்ட மன்றங்கள் தங்களது கருத்தைக் கூற மாவட்ட அவைகளை அனுமதிப்பது விரும்பத்தக்கதாகும். அவருக்கு இப்போது மனம் நிறைந்திருக்கும் என நான் நம்புகிறேன்.*

*(திருத்தப்பட்ட வடிவத்தில் பத்தி 13 அட்டவணையில் சேர்க்கப் பட்டது.)*

★ ★ ★

*(பத்தி 14)*

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** *அய்யா, இந்தத் திருத்தம் தேவைபடுவதாக நான் கருதவில்லை.*

**திரு. அவைத் தலைவர்:** *நீங்களே முதலில் சில திருத்தங்களை முன்மொழிய வேண்டியிருக்கிறது.*

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** *ஆம், அய்யா. நான் அவற்றை முதலில் முன்மொழிகிறேன். அய்யா நான் முன்மொழிவது:*

> *''பத்தி 14 உள்பத்தி (1) இல் 'மாநிலத்திலுள்ள தன்னாட்சி மாவட்டங்கள்' என்ற சொற்களுக்குப் பிறகு 'இந்த அட்டவணையின் பத்தி 1 உள்பத்தி (3) இன் கூறுகள் (ஆ) ,(இ), (ஈ), (உ) ஆகியவற்றில் குறித்துரைக்கப்படும் பிரச்சினை கள் உள்பட என்ற சொற்கள், அடைப்புக்குறிகள், எழுத்துக்கள், எண்கள் ஆகியவற்றை நுழைக்கலாம்.''*
>
> *'பத்தி 14 உள்பத்தி (1) இல் 'தன்னாட்சி மாவட்டங்கள்' என்ற சொற்கள் இடம்பெறுகிற இரண்டு இடங்களில்' அச்சொற்களுக்குப் பிறகு 'மற்றும் தன்னாட்சி வட்டாரங்கள்' என்ற சொற்களை நுழைக்கலாம்.''*

---

*1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர் 6, பக்.1046-48.*

*பத்தி 14 உள்பத்தி (3) இல் தன்னாட்சி மாவட்டங்கள் என்ற சொற்களுக்குப் பிறகு 'மற்றும் தன்னாட்சி வட்டாரங்கள்' என்ற சொற்களை நுழைக்கலாம்.''*

*இந்தத் திருத்தங்களில் சில தொடர்விளைவுத்தன்மையுடையவை. மற்றவை முழுக்க சொல் தொடர்பானவை.*

*திரு. குலாதர் சாலிகா: அவைத்தலைவர் அவர்களே, நான் முன்மொழிவது:*

*''திருத்தங்கள் பட்டியல் (தொகுதி II) திருத்தம் எண்கள் 3500, 3501 ஆகியவை தொடர்பாக பத்தி 14 உள்பத்தி (1) கூறு (இ) க்குப் பிறகு பின்வரும் புதிய கூறை சேர்க்கலாம்.*

*''எந்தவொரு மாவட்ட அல்லது வட்டார மன்றத்திலும் எந்தவொரு பழங் குடி பகுதியையும் விலக்குதல்''*

*''எந்தவொரு மாவட்ட அல்லது வட்டார மன்றத்திலும் எந்தவொரு பழங்குடி பகுதியையும் சேர்ப்பது அல்லது சேர்க்காமல் விலக்குதல்.''*

இவ்வளவு வேண்டா வெறுப்பாக நடந்துகொண்டபின் பதிலுக்கு அன்பு காட்டுவார்கள். இதை ஏற்றுக்கொண்டு, எனது திருத்தத்தை (ஈ) இல் சேர்ப்பார்கள் என்று நம்புகிறேன். இது அந்தக் கூறு பெரிதும் மேம்படத் துணைசெய்யும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இந்த அட்டவணையின் பத்தி 1க்கு நான் முன்மொழிந்தத் திருத்தத்தை என் மதிப்பிற்குரிய நண்பரின் கவனத்திற்கு கொண்டுவர விரும்புகிறேன். அதில் உள்பத்தி (3) இன் வழிவகைகள் குறிப்பிட்ட சில வகையில் மாற்றப் பட்டன. அவர் இப்போது வழிவகை செய்ய விரும்புகிற இந்தச் செய்தி ஆணையத்தின் பரிந்துரை பேரில் ஒழுங்குப்படுத்தப்படவுள்ளது. அந்தப்பத்தி முன்பே நிறைவேற்றப்பட்டிருக்கிறது, ஆகவே இது தேவையற்றது.

*திரு. குலாதர் சாலிகா: திருத்தம் எண் 99தான் அதுவா?*

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஆம், அது 99 தான்.

*திரு.குலாதர் சாலிகா:* ஆனாலும் நீங்கள் ஈங்கு பத்தி 14 இல் வரும் ஆணையத்துக்கு (அ), (ஆ), (இ) என்ற அளவோடு வரம்பிட்டுள்ளீர்கள். இதுவே எனக்குள்ள இடர்ப்பாடு.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அதுதான் நிறைவேற்றப்பட்டது.

**திரு. குலாதர் சாலிகா:** அது முன்பே நிறைவேற்றப்பட்டிருக்கிறது, ஆனால் அதற்கு நீங்கள் அ, ஆ, இ ஆகியவற்றில் வரம்பிட்டுள்ளீர்கள்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** என் மதிப்பிற்குரிய நண்பருக்கு நான் விளக்கமளிக்கக் கூடுமானால், சேர்ப்பதன் மூலமோ, சேர்க்காமல் விலக்குவதன் மூலமோ பழங்குடி பகுதிகளில் மாற்றங்கள் செய்வது பற்றி சொல்லும் உள்பத்தி (3) இன் செயல்பாடு இரு வகைகளாக பிரிக்கப்படடுள்ளன. முதலாவது இதுதான்: குறிப்பிட்ட அட்டவணையின் எந்தப் பகுதியிலும் சேர்த்தல் (அ) ஆகும். ஆளுநர் அதை ஆரம்பத்திலேயே செய்யமுடியும். இதற்கு ஆணையத்தின் பரிந்துரை ஏதும் தேவையில்லை. ஆனால் எனது திருத்தத்தின்படி ஆ, இ, ஈ, ஊ, ஆகியவற்றின்படி நடவடிக்கை எடுக்கப்படுவதாக இருந்தால் அப்போது ஆணையத்தின் பரிந்துரை தேவைப்படும்; நான் சொன்னதுபோல் அப்பகுதி அவையால் நிறைவேற்றப்பட்டிருக்கிறது. இதனை இப்போது மறுபடியும் எழுப்ப முடியாது.

**திரு.குலாதர் சாலிகா:** இந்த அட்டவணையின் பத்தி 14 உள் பத்தி (1) இன்படி அமர்த்தப்பட்ட ஆணையத்தின் அறிக்கை பற்றிய பரிசீலனையைக் கொண்டு நீங்கள் மீண்டும் வரம்பிட்டுள்ளீர்கள். நீங்கள் திருத்தம் எண் 992 தந்துள்ளீர்கள்; ஆனால் மீண்டும் அதற்கு வரம்பிட்டுள்ளீர்கள் டாக்டர் அம்பேத்கர் இதுகுறித்து சொல்வதற்கு என்ன உள்ளது என்பதை நான் செவிமடுக்க விரும்புகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** பத்தி 14 அதற்கு வரம்பிடவில்லை.

**திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி:** பத்தி 14 உள்பத்தி 1 இல் மாநிலங்களிலுள்ள தன்னாட்சி மாவட்டங்கள் என்ற சொற்களுக்குப் பிறகு 'இந்த அட்டவணையின் பத்தி 1 உள்பத்தி 3 இன் கூறுகள் ஆ, இ, ஈ, உ ஆகியவற்றில் குறித்துரைக்கப்பட்ட செய்திகள் உட்பட' என்ற சொற்களை சேர்க்க வேண்டும் என்று சொல்கிற திருத்தம் எண் 134 ஐ மதிப்பிற்குரிய உறுப்பினர் தயவுசெய்து ஏறெடுத்துப் பார்ப்பாரானால், அவர் மனத்தில் கொண்டுள்ள நோக்கத்திற்கு ஏற்கெனவே இந்தத் திருத்தம் பயன்படக் காண்பார்.

**திரு. குலாதர் சாலிகா:** அய்யா, நன்றி.

**பண்டித ஹிருதய் நாத் குன்ஸ்ரு** (ஐக்கிய மாகாணங்கள்): பொது): இதைப் புரிந்துகொள்வதில் எனக்கு சற்றே இடர்ப்பாடு இருக்கிறது. ஆளுநர் அமர்த்துக்கூடிய ஆணையம் புதிய பழங்குடிப் பகுதியை சேர்ப்பதை மட்டுமல்லாமல் சேர்க்காமல் விலக்கி வைப் பதையும் பரிசீலிக்க வேண்டும் என்பதே திரு. சாலிகா முன்மொழிந் துள்ள திருத்தத்தின் பொருளாகும். மற்றொரு பழங்குடிப் பகுதி இதில் உட்படுத்தாமல் இருக்கலாம்; அதற்கு இங்கு வழிவகை செய்யப்பட வில்லை. டாக்டர் அம்பேத்கரின் திருத்தம் எண் 99 வழிவகை செய்வதெல்லாம், ஒரு பகுதியை ஒரு பழங்குடிப்பகுதியிலிருந்து பிரித்தெடுத்து மற்றொரு பகுதியோடு ஒன்றிணைக்கலாம் என்பதே. ஆனால் ஒரு பகுதியை அடியோடு விலக்கி வைப்பது விரும்பக்கத்தா என்பது பற்றி விசாரித்து, அறிக்கை அளிக்க ஆணையத்திற்கு அதிகாரம் ஏதும் வழங்கப்படவில்லை. ஆனால் ஒரு பகுதியை பழங்குடிப் பகுதியில் சேர்க்காமல் விலக்கி வைக்கும் அதிகாரம் நாடாளுமன்றத் திற்கு மட்டுமே இருக்கும். ஆணையம் பரிசீலித்து அளிக்கும் பரிந் துரைகளை தன்முன் நிறுத்திக் கொள்ளாமலே அதனால் இப்படி செய்ய முடியும். இந்தப் பிரச்சினையை கையாள அதிகாரம் பெற்ற தாக இந்த ஆணையம் இருக்காது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** என் மதிப்பிற்குரிய நண்பர் பண்டித குன்ஸ்ருக்குள்ள இடர்ப்பாடுக் குறித்து நான் பேசக் கூடுமானால் திரு. சாலிகா அளித்துள்ள திருத்தத்தின் நோக்கத்தை அவர் தெளிவாக புரிந்துகொள்ளவில்லை என்று கருதுகிறேன். எந்த ஒரு பழங்குடிப் பகுதியையும் சேர்ப்பது அல்லது சேர்க்காமல் விலக்கி வைப்பது, அதாவது மாவட்ட அல்லது வட்டார மன்றத்தின் மேல் உரிமையை குறைப்பது என்பதே திரு. சாலிகாவின் திருத்தமாகும். திரு. சாலிகா இதுபற்றித்தான் பேசிக் கொண்டிருக்கிறார். ஒரு தன் னாட்சி மாவட்டத்திலிருந்து எந்தவொரு பகுதியையும் அடியோடு பிரித்தெடுத்து அசாமின் பொது ஆட்சிப்பரப்பில் அதனை சேர்ப்பது பற்றிதான் என் மதிப்பிற்குரிய நண்பர் பேசிக் கொண்டிருக்கிறார். இவை இருவேறு செய்திகளாகும்.

**பண்டித ஹிருதய்நாத் குன்ஸ்ரு:** ஏன் இதுகுறித்து அறிக்கை அளிக்கும்படி ஆணையத்தைக் கேட்டுக் கொள்ளக்கூடாது?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஆணையம் அறிக்கை அளிக்க அதிகாரம் பெற்றுள்ளது. என் மதிப்பிற்குரிய நண்பர் வழிவகையைப் படித்துப் பார்ப்பாரானால் பின்வருவதைக் காண்பார்: ''எந்தவொரு பிரச்சினைக் குறித்தும் ஆராய்ந்து அறிக்கை அளிப்ப தற்கு அசாம் அரசு எப்போது வேண்டுமானாலும் ஓர் ஆணையத்தை அமர்த்தலாம்.'' ''எந்தவொரு பிரச்சினையும்'' என்பதில் பத்தி 1 இல் கூறப்பட்டிருக்கிற வழிவகைகளும் அடங்கக்கூடும். 'மாநிலத்தில் தன்னாட்சி மாவட்டங்களின் நிர்வாகம் தொடர்பாக ''அவரால் குறித் துரைக்கப்பட்டவை'' என்பதிலும் இந்த வழிவகைகள் குறிப்பாகச் சொல்லப்படுகின்றன. 'தன்னாட்சி மாவட்டங்களின் நிர்வாகம் குறித்து அவ்வப்போது விசாரித்து அறிக்கை அளிப்பதற்கு ஓர் ஆணை யத்தை நியமிக்கலாம்'' என்பதில் குறித்துரைக்கப்பட்ட பிரச்சினை களும், அதாவது ''எந்தவொரு பிரச்சினையும்'' அடங்கும். திருத்தம் எண் 134 ஐ முன்மொழிந்திருப்பது இதனை தெள்ளத்தெளிவாக்கும் பொருட்டே தவிர ''எந்தவொரு பிரச்சினையும்'' என்ற சொற்களின் பொருள் விளக்கத்திற்கு இட்டுச் செல்வதற்கல்ல. ''இந்த அட்ட வணையின் பத்தி1 உள்பத்தி 3 இன் கூறுகள் ஆ, இ, ஈ, உ ஆகிய வற்றில் குறித்துரைக்கப்படும் பிரச்சினைகள்'' இவற்றில் அடங்கக் கூடும் என்று நான் இப்போது திட்டவட்டமாக குறிப்பிட்டுள்ளேன். இவை ஆணையத்தின் பார்வைக்கு அனுப்பி வைக்கப்படும். இதுதான் எனது திருத்தம் 134இன் உட்கருத்தாகும்.

**பண்டித ஹிருதய்நாத் குன்ஸ்ரு:** திருத்தத்தின் உட்கருத்தை நான் புரிந்துக்கொள்கிறேன், சரிதான். பத்தியின் கூறுகள் ஆ, இ, ஈ, உ ஆகியவற்றில் இருப்பவற்றை நான் நன்கு அறிவேன். ஆனால் நான் சொல்வது என்னவென்றால் தன்னாட்சி வட்டாரங்களின் நிர்வாகம் தொடர்பான பிரச்சினை எதனையும் ஆராய்வதற்காக அமர்த்தப் படவுள்ள ஆணையம் ஒரு பழங்குடிப் பகுதியில் முன்பே சேர்க்கப் பட்டுவிட்ட ஒரு பரப்பை அதிலிருந்து விலக்கிவைத்து ஒரு சாதாரண நிர்வாகப்பகுதியுடன் இணைக்கலாம் என்றும் அறிக்கை அளிக்கும் அதிகாரத்தை பெற்றிருப்பதாக எனக்குத் தோன்றவில்லை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** என் மதிப்பிற்குரிய நண்பர் மேற்கூறிய அட்டவணையின் பத்தி 3 கூறு (ஈ)ஐ எடுத்துப் பார்க்க வேண்டும்.

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர் 6, பக்.1049.

**பண்டித ஹிருதய்நாத் குன்ஸ்ரு:** உங்களது திருத்தம் கொண்டே அது நீக்கப்பட்டுவிட்டது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** நாடாளுமன்றம் சட்டம் கொண்டு அதை செய்யவேண்டியிருக்கும் என்று நான் கருது கிறேன்.

**பண்டித ஹிருதய்நாத் குன்ஸ்ரு:** ஆணையம் ஆராய்ந்து அளித்த பரிந்துரைகள் நம்மிடம் இல்லை. ஆணையத்தின் அறிக்கையை நாடாளுமன்றம் தன்முன் வைத்துக்கொள்ள வேண்டும்; ஆனால் இப்போது நாடாளுமன்றம் தான் அறிந்திருக்கக்கூடிய தன் வலுவையே முழுக்க சார்ந்து பிரச்சினையை கையாள வேண்டியிருக்கும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இது ஆளுநரின் சட்டஉரிமைக்கு உட்படாத ஒரு பிரச்சினையாகும். நிறைவேறிவுள்ள வடிவில் எந்தவொரு பகுதியையும் பழங்குடிப் பகுதிகளிலிருந்து விலக்கிவைப்பது ஆளுநரின் அதிகாரவரம்பிலிருந்து அகற்றப்பட்டு விட்ட பிரச்சினையாகும். இதுகுறித்து நாடாளுமன்றமே முடிவு செய்யட்டும் என்று விடப்படுகிறது. உள்பத்தி 3 இன் கூறுகள் ஆ, இ, ஈ, உ ஆகியவற்றில் குறிப்பிடப்படும் பிரச்சினைகளை கையாள்வதில் ஆளுநருக்கு வழிகாட்டுவதற்காக மட்டுமே இந்த ஆணையம் உள்ளது. இதற்குப் புறத்தே உள்ள எந்தவொரு பிரச்சினையும் நாடாளுமன்றத்திற்குரியது. நாடாளுமன்றம் இந்த ஆணையத்தைச் சாராமல் தனியாக ஓர் இணையத்தை அமர்த்தி, அதன் பிறகு சட்டமியற்றலாம்.

**பேராசிரியர் ஷிபன்லால் சக்சேனா:** அதற்குரிய வழிவகை ஏதுமில்லை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** வழிவகை ஏதும் தேவையில்லை. நாடாளுமன்றம் அசாம் அமைச்சரவையின் அறிவுரையின் அடிப்படையில் நடவடிக்கை எடுக்கலாம். அந்த அறிவுரை சுயேச்சையானதல்ல என்றும், சுயேச்சையானச் சான்று இருக்க வேண்டும் என்றும் நாடாளுமன்றம் கருதினால் ஓர் ஆணையத்தை அமர்த்தவும், தானாகவே ஒரு விசாரணையை நடத்தவும் அதற்கு உரிமை இருக்கும்.

**திரு. ரோகிணிகுமார் சௌத்ரி:** முதன்மையாக அசாம் தொடர்புடைய சௌத்ரி இந்த ஆறாம் அட்டவணையின் மீதான

விவாதத்தை பொறுத்தவரை அசாம் மாகாணத்திலிருந்து வந்திருக்கும் உறுப்பினர்களின் கருத்துக்கு சிறிதாவது மதிப்பு உண்டென்றால் மாண்புமிகு டாக்டர் அம்பேத்கர் எந்தவொரு திருத்தத்தையும் ஏற்றுக் கொள்ள உடன்படுவார் என்று கருதுகிறேன். இந்தத் திருத்தத்தை ஏற்றுக்கொள்வதற்கான தேவை குறித்து நாங்கள் பெரிதும் கருத்தொரு மித்தவர்களாகவே இருக்கிறோம் எனக் கருதுகிறேன். இரு அமைச் சர்கள் குறித்து யானறியேன். ஆனால் நாங்கள் கருத்தொருமித்தே இருக் கிறோம்.

★ ★ ★

[1]**திரு. ரோகிணி குமார் சௌத்ரி:** முதன்மையாக அசாம் தொடர்புடைய இந்த ஆறாம் அட்டவணைமீதான விவாதத்தைப் பொறுத்தவரை அசாம் மாகாணத்திலிருந்து வந்திருக்கும் உறுப்பினர் களின் கருத்துக்கு சிறிதாவது மதிப்பு உண்டென்றால், மாணபுமிகு டாக்டர் அம்பேத்கர் உடன்படுவார் என்று நான் கருதுகிறேன். இந்தத் திருத்தத்தை ஏற்றுக்கொள்வதற்கான தேவை குறித்து நாங்கள் பெரிதும் கருத்தொருமித்தவர்களாகவே இருக்கிறோம் என கருது கிறேன். இரு அமைச்சர்கள் குறித்து யானறியேன் ஆனால் எங்களில் மற்றவர் கருத்தொறுமித்தே இருக்கிறோம்.

**பேராசிரியர் ஷிபன்லால் சக்சேனா:** ஆணையத்துக்கு எவரை யும் நியமிக்க ஆளுநருக்கு உரிமை இருக்கிறது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஆளுநருக்கு வரம்புத் தடைகள் என்பதே இல்லை.

**திரு. ரோகிணி குமார் சௌத்ரி:** இரு உறுப்பினர்கள் சட்ட மன்றத்தால் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும் என்கிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அவர் அப்படி செய்வதற்கு தடையில்லை.

**திரு. ரோகிணிகுமார் சௌத்ரி:** இப்படிசொல்வதில் தீங்கு ஏதுமில்லை. ஒரு மனிதர் வாழலாம் அல்லது சாகலாம். நீங்கள் ஏன் சாகச் சொல்கிறீர்கள்? நான் வாழச் சொல்லவிரும்புகிறேன். தயவு செய்து எனது திருத்தத்தை ஏற்றுக்கொள்ளுங்கள்.

---

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர் 6, பக். 1049.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஆளுநர் அமைச்சரவையின் அறிவுரைப்படி ஓர் ஆணையத்தை அமர்த்த ஆவண செய்வார். உங்கள் அமைச்சரவை சட்டமன்றத்திலிருந்து இரு உறுப்பினர்களை நியமிக்காது என்று நீங்கள் நினைக்கிறீர்கள்.

**திரு. ரோகிணிகுமார் சௌத்ரி:** சட்டமன்றத்தால் அவர்கள் தேர்ந்தெடுக்கப்படவேண்டுமென விரும்புகிறேன். சட்டப்பேரவையால் தேர்ந்தெடுக்கப்படுவதற்கு ஒருவகையில் முக்கியத்துவம் அளிக்கிறேன். மாண்புமிகு டாக்டர் அம்பேத்கரும் இப்படி முக்கியத்துவம் அளிப்பது வழக்கமாயிருந்தது என்று நினைக்கிறேன். ஆனால் அவர் இப்போது மனம் மாறலாம்.

**திரு. அவைத் தலைவர்:** திரு பிரஜேஷ்வர் பிரசாத் முன்மொழிந்த வேறு சில திருத்தங்கள் இருக்கின்றன: 207, - ''ஆளுநர் என்பதற்குப் பதிலாகக் குடியரசுத் தலைவர்''; 208, - ''ஆளுநர்'' என்பதற்குப் பதிலாக ''குடியரசுத் தலைவர்'', 209 - ''மாநில சட்டமன்றம்'' என்பதற்குப் பதிலாக ''நாடாளுமன்றம்''; 210 - ''அசாம்'' என்பதற்குப் பதிலாக ''ஒன்றியம்''; 211 - ''மாநிலம்'' என்பதற்குப் பதிலாக ''ஒன்றியம்''; 212 - ''ஆளுநர்'' என்பதற்கு பதிலாகக் ''குடியரசுத் தலைவர்''; 213 - ''மாநிலத்தில் என்பதற்குப் பதிலாக ''அசாம் மாநிலத்தில்''.

**திரு. பிரஜேஷ்வர் பிரசாத்:** நான் இவற்றை முன்மொழிய விரும்பவில்லை.

**திரு. அவைத் தலைவர்:** இந்தப் பத்திக்கான திருத்தங்கள் அனைத்தும் முன்மொழியப்பட்டிருக்கின்றன. டாக்டர் அம்பேத்கர் நீங்கள் ஏதேனும் கூற விரும்புகிறீர்களா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இல்லை.

**திரு. அவைத் தலைவர்:** நான் இப்போது திருத்தங்களை வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

*(பின்வரும் திருத்தங்கள் ஏற்றுக்கொள்ளப்பட்டன.)*

1. 'திருத்தங்கள் பட்டியலின் (தொகுதி II) திருத்தம் எண்கள் 3500, 3501, 3502 ஆகியவற்றிற்குப் பதிலாக பின்வருபவற்றை இடம்பெறச் செய்யலாம்:

*''ஆறாம் அட்டவணையின் பத்தி 14க்குப்பதிலாக பின்வருவதை இடம்பெறச் செய்யலாம்:*

*''ஆறாம் அட்டவணையின் பத்தி 14க்குப் பதிலாக பின்வருவதை இடம்பெறச் செய்யலாம்:*

*''குடியரசுத் தலைவரின் முகவர் என்ற முறையில் அசாம் ஆளுநர் அசாம் மாநிலத்திலுள்ள தன்னாட்சி மாவட்டங்கள், தன்னாட்சி வட்டாரங்கள் ஆகியவற்றின் நிர்வாகம் தொடர்பாக தம்மால் குறித்துரைக்கப்படும் எந்தவொரு பிரச்சினைக் குறித்தும் ஆராய்ந்து அறிக்கை அளிப்பதற்காக எப்போது வேண்டுமானாலும் ஓர் ஆணையத்தை அமர்த்தலாம். இந்த ஆணையத்தில் ஏழுக்குக் குறையாத உறுப்பினர்கள் இருப்பார்கள். இவர்களில் மூன்றுக்கு குறையாமல் அட்டவணை பழங்குடிகளின் உறுப்பினர்கள் இருப்பார்கள்; சிறந்த மானிடவியலார், ஓய்வுபெற்ற உச்சநீதிமன்ற, உயர்நீதிமன்ற நீதிபதிகள், அறிவியலார், எழுத்தாளர்கள் ஆகியோரிடையிலிருந்து மற்ற உறுப்பினர்கள் தெரிந்தெடுக்கப்படுவார்கள் அல்லது மாநிலத்திலுள்ள தன்னாட்சி மாவட் டங்கள், தன்னாட்சி வட்டாரங்களின் நிர்வாகம் குறித்து அவ்வப்போது பொதுவாகவும் பின்வருவனவற்றை பற்றிக் குறிப்பாகவும் ஆராய்ந்து அறிக்கை அளிப்பதற்காக இதேபோன்ற ஓர் ஆணையத்தை அமர்த்தலாம்.*

*அ. இத்தகைய மாவட்டங்களிலும் வட்டாரங்களிலும் கல்வி, பண்பாடு, மருத்துவம், பொருளாதாரம், சமயம் ஆகியவற்றிற்கான வசதிகளுக்கும் தகவல் தொடர்புகளுக்கும் வழிவகை செய்தல்;*

*ஆ. இத்தகைய மாவட்டங்கள், வட்டாரங்கள் தொடர்பாக புதிதாகவோ தனிச்சிறப்பாகவோ சட்டமியற்றலுக்கான தேவை;*

*இ. மாவட்ட, வட்டார மன்றங்களால் இயற்றப்படும் சட்டங்கள், ஒழுங்குமுறைகள், விதிகள் ஆகியவற்றின் ஆட்சி, இத்தகைய ஆணையம் கடைப்பிடிப்பதற்கான நடைமுறையை வரையறுத்தல்;''*

*2 ''பத்தி 14 உள்பத்தி(1) இல் மாநிலத்தில் உள்ள தன்னாட்சி மாவட்டங்கள் என்ற சொற்களுக்குப் பிறகு இந்த அட்டவணையின் பத்தி 1 உள்பத்தி (3)இன் கூறுகள் ஆ, இ, ஈ, உ ஆகியவற்றில் குறித்துரைக்கப்படும் பிரச்சினைகள் உட்பட'' என்ற சொற்களையும் அடைப்புக்குறிகளையும் எழுத்துக்களையும் எண்களையும் நுழைக்கலாம்.''*

*3. ''பத்தி 14 உள்பத்தி(3) இல் 'தன்னாட்சி மாவட்டங்கள்' என்றச் சொற்கள் இடம்பெறுகின்ற இரு இடங்களில் அவற்றிற்குப் பிறகு 'மற்றும் தன்னாட்சி வட்டாரங்கள்' என்ற சொற்களை நுழைக்கலாம்.'';*

*4. ''பத்தி 14 உள்பத்தி (1) இன் கூறுகள் அ, ஆ, ஆகியவற்றில் 'மாவட்டங்கள்' என்ற சொல் இடம்பெறுகின்ற இரு இடங்களில் அவற்றிற்குப் பிறகு 'மற்றும் வட்டாரங்கள்' என்ற சொற்களை நுழைக்கலாம்;''*

*5. ''பத்தி 14 உள்பத்தி (3) இல் 'தன்னாட்சி மாவட்டங்கள்' என்றச்சொற்களுக்குப் பிறகு 'மற்றும் தன்னாட்சி வட்டாரங்கள்' என்றச்சொற்களை நுழைக்கலாம்'';*

திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

*(திருத்தப்பட்ட வடிவத்தில் பத்தி 14 அட்டவணையில் சேர்க்கப் பட்டது.)*

*(பத்தி 15)*

(திருத்தம் எண் 140 முன்மொழியப்படவில்லை.)

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அய்யா, நான் முன்மொழிவது:

"பத்தி 15 உள்பத்தி (3) ஐ விட்டுவிடலாம்"

இப்படிச் செய்வது ஏனென்றால், இது ஆளுநருக்கு விருப்புரிமை வழங்குகிறது. ஆளுநருக்கு விருப்புரிமை வழங்க இப்போது கருதவில்லை.

**திரு. அவைத் தலைவர்:** திருத்தம் எண் 142. நாம் எத்தனையோ முறை விருப்புரிமை என்னும் பிரச்சினைக் குறித்து பேசியிருக்கிறோம். இதனை முன்மொழிவதற்கான தேவையிருக்கிறதா?

**திரு. பிரஜேஷ்வர் பிரசாத்:** நீங்கள் எனக்கு என்ன சொல்கிறீர்களோ அப்படி அய்யா.

**திரு. அவைத் தலைவர்:** இது தேவையானது என்று நான் கருதவில்லை. திருத்தம் 214; மீண்டும் 'ஆளுநர்'' என்பதற்குப் பதிலாக 'குடியரசுத்தலைவர்''; திருத்தம் 215: 'மாநிலச் சட்டமன்றம் என்பதற்குப் பதிலாக 'நாடாளுமன்றம்''; திருத்தம் 216; இதுவும் டாக்டர் அம்பேத்கரின் திருத்தமும் ஒன்றுதான். இவை எல்லாம் திருத்தங்களாகும். டாக்டர் அம்பேத்கர் நீங்கள் ஏதேனும் கூற விரும்புகிறீர்களா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இல்லை. மூல வரைவில் ஆளுநருக்கு நாம் கொடுத்திருந்த விருப்புரிமையை அவரிடமிருந்து எடுத்து விடுகிறோம் என்று முன்பே கூறினேன். இந்த உள் பத்தி (3)ஐ நீக்குவது அவசியமாகும்.

(டாக்டர் அம்பேத்கரின் திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.)

*(திருத்தப்பட்ட வடிவத்தில் பத்தி 15 அட்டவணையில் சேர்க்கப் பட்டது.)*

---

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர் 6, பக். 1051.

**திரு. பிரஜேஷ்வர் பிரசாத்:** அய்யா, நாம் மேலும் ஒரு சில நிமிடங்கள் அமர்ந்து இந்த அட்டவணையை முடித்து விடுவோம் என்று யோசனை தெரிவிக்கிறேன்.

**திரு. அவைத் தலைவர்:** அதற்குநேரமாகும். நம்மால் முடிக்க இயலாதுப் போகலாம். நாம் நமது குறித்த நேரத்திற்குப் பெரிதும் பின் தங்கியுள்ளோம் என்றும், இழந்த நேரத்தை ஈடுசெய்வதற்காக ஏதேனும் செய்யவேண்டியிருக்கும் என்றும் நான் இப்போதுதான் அவைக்கு நினைவூட்டுவதாயிருந்தேன்.

**திரு. ஆர்.கே. சித்வா** (மத்திய மாகாணம் மற்றும் பேரார்: பொது): இன்று நாம் பேசுவதற்கு வேறொன்றுமில்லை; நாம் பிற்பகலில் அமரலாம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** நீங்கள் விரும்பினால் நாளை நாம் அமரலாம். இன்று நாம் பரிசீலனைக்கு எஞ்சியுள்ள சில உறுப்புகளை எடுத்துக்கொள்வதற்காக வரைவுக்குழுவின் கூட்டத்தைக் கூட்டியிருக்கிறோம்.

★ ★ ★

(பத்தி 16)

★ ★ ★

[1]**திரு. அவைத் தலைவர்:** வேறு இரு திருத்தங்கள் இருக்கின்றன, அவற்றை நான் தள்ளுபடி செய்கிறேன். ஏனென்றால் இவை திரு. பிரஜேஷ்வர் பிரசாத்தின் மற்றொரு திருத்தத்தைப் போலவே உள்ளன. டாக்டர் அம்பேத்கர் நீங்கள் ஏதேனும் கூற விரும்புகிறீர்களா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்** (பம்பாய்: பொது): அசாமின் தலைமை அமைச்சருக்கு இந்த பிரச்சினைக் குறித்து கருத்துக்கள் ஏதும் இருக்குமானால் நான் அவர்கூறுவதை கேட்க விரும்புகிறேன்.

**மாண்புமிகு கோபிநாத் பர்தோலாய்** (அசாம்: பொது): அய்யா, பத்தி 16க்கான இரண்டாம் துணைவிதியை நீக்குவதற்காக சற்றுமுன்

---

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர் 7, பக். 1054.

திரு. சாலிகாவால் முன்மொழியப்பட்டத் திருத்தம் தொடர்பாக, நான் சொல்ல வேண்டியதெல்லாம், இந்த வகையான நடவடிக்கை எடுக்கப்படுகிற ஒவ்வொரு நேர்விலும் - அதனால் பாதிக்காப்படுகிற தரப்புகளுக்கு கருத்துச் சொல்லும் வாய்ப்பு அளிக்கப்படுகிறது என்பதே. இதை செய்வதற்கான பொறியமைவு ஏதும் இந்த துணை விதியில் விதித்தளிக்கப்படவில்லை என்பதை ஏற்றுக்கொள்கிறேன். ஆகவே, திரு. சிறிசீத் சாலிகா தமது திருத்தத்தை பின்வருமாறு மாற்றியமைத்துக் கொண்டால் அதாவது ‘சட்டமன்றத்தின் கருத்து சொல்லும் வாய்ப்பு'' என்ற சொற்களுக்குப் பதிலாக ‘வட்டாரமன்றத்தின் கருத்துக்களை முன்வைக்கும் வாய்ப்பு'' என்ற சொற்களை இடம்பெறச் செய்வதாக இருந்தால் அவரது திருத்தத்தின் நோக்கம் நிறைவேறும்.

**திரு. குலாதர் சாலிகா:** அதைச் செய்வதற்கு நான் அணியமாய் இருக்கிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** திரு.சாலிகாவின் திருத்தத்திற்கான திரு.பர்தோலாயின் திருத்தத்தை ஏற்றுக்கொள்ள நான் அணியமாய் இருக்கிறேன், திரு.சாலிகாவும் அதை ஏற்றுக்கொண்டு உள்ளார். துணைவிதி இப்போது இப்படி இருக்கும்:

> ''ஆனால், மேலும் நேர்வைப்பொறுத்து மாவட்ட அல்லது வட்டார மன்றத்திற்கு மாநிலச் சட்டமன்றத்தின் தமது கருத்துக்களை முன்வைக்கிற வாய்ப்பை தராமல் இந்தப்பத்தியின் கூறு (ஆ) இன்படி நடவடிக்கை ஏதும் எடுக்கப் படாது.''

**திரு. அவைத் தலைவர்:** பிரச்சினை இதுதான்: ''ஆறாம் அட்டவணையின் பத்தி 16க்கான இரண்டாவது துணைவிதிக்குப் பதிலாக பின்வருவதை இடம்பெறச் செய்யலாம்.

> ''ஆனால் மேலும், நேர்வைப் பொறுத்து மாவட்ட அல்லது வட்டாரமன்றத்திற்கு மாநிலச் சட்டமன்றத்தில் தமது கருத்துக்களை முன்வைக்கிற வாய்ப்பை தராமல் இந்தப்பத்தியின் கூறு (ஆ) இன்படி நடவடிக்கை ஏதும் எடுக்கப் படாது.''

திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

***(திருத்தப்பட்ட வடிவத்தில் பத்தி 16 ஆறாவது அட்டவணையில் சேர்க்கப்பட்டது).***

*(புதியப் பத்தி 16-A)*

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அய்யா, நான் பணிந்து முன்மொழிவது:

*''பத்தி 16க்குப் பிறகு பின்வரும் பத்தியை நுழைக்கலாம்:*

*'16A. இப்படிப்பட்ட மாவட்டங்களில் தொகுதிகளை அமைப்பதில் தன்னாட்சி மாவட்டங்களிலிருந்து பகுதிகளை விலக்கிவைத்தல். அசாம் சட்டப்பேரவைக் கான தேர்தல்களின் நோக்கத்திற்காக, ஒரு தன்னாட்சி மாவட்டத்திற்குட்பட்ட எந்தவொரு பகுதியும் எத்தகைய மாவட்டங்கள் எதற்காகவும் ஒதுக்கீடு செய்யப்பட்ட இடம் அல்லது நிரப்புவதற்கு எந்தவொரு தொகுதியின் பகுதியாகவும் அமையாது என்று ஆளுநர் ஆணை கொண்டு அறிவித்திட லாம்; ஆனால் அது சட்டப்பேரவையில் இவ்வாறு ஒதுக்கீடு செய்யப்படாத இடம் இடங்களை நிரப்புவதற்கான ஆணையில் குறித்துரைக்கப்பட வேண்டிய ஒரு தொகுதியின் பகுதியாக அமையும் என்று அவர் அறிவிக்கலாம் ''*

இதன்நோக்கம் என்னவென்றால் தன்னாட்சி மாவட்டங் களில் சேர்க்கப்பட்டிருக்கிற, ஆனால் உண்மையில் தன்னாட்சி மாவட் டங்களில் வசித்துவரும் மக்களின் பகுதியாக இல்லாதவர்களுக் கென தொகுதிகள் வரையறுப்பதன் மூலம் சட்டப் பேரவையில் இடம்பெறும் வாய்ப்பை அவர்களுக்கு வழங்குவதே இதன் நோக்கம்.

*(பத்தி 16-A ஆறாவது அட்டவணையில் சேர்க்கப்பட்டது).*

*(பத்தி 17)*

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அய்யா, நான் முன்மொழிவது:

*''பத்தி 17 உள்பத்தி (2)க்குப் பிறகு பின்வரும் உள்பத்தியை சேர்க்கலாம்:*

*'(3) இந்தப் பத்தியின் உள்பத்தி 2 இன்படி குடியரசுத் தலைவரின் முகவராக ஆளுநர் தம்பணிகளை நிறைவேற்றுகையில் தம் விருப்புரிமைப்படி செயல் படுவார்.''*

★ ★ ★

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அய்யா, நான் இதை ஏற்றுக்கொள்ளவில்லை.

---

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர் 7, பக். 1055.
2. மேற்படி அதே நூல், பக். 1056.

**திரு. அவைத் தலைவர்:** அப்படியனால், நான் முதலில் டாக்டர் அம்பேத்கரின் திருத்தத்தை வாக்கெடுப்புக்கு விடுகிறேன். பிரச்சினை இதுதான்:

பத்தி 17 உள்பத்தி 2க்குப் பிறகு பின்வரும் உள்பத்தியைச் சேர்க்கலாம்.

இந்தப் பத்தியின் உள்பத்தி 2 இன்படி முகவராக ஆளுநர் தம் பணிகளை நிறைவேற்றுகையில் தம் விருப்புரிமைப்படி செயல்படுவார்.''

(திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது)

(பிரஜேஷ்வர் பிரசாத்தின் திருத்தம் நிராகரிக்கப்பட்டது.)

*(திருத்தப்பட்ட வடிவத்தில் பத்தி 17 ஆறாம் அட்டவணையில் சேர்க்கப் பட்டது)*

*(பத்தி 18)*

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அய்யா, நான் முன்மொழிவது:

' 'பத்தி 18 இல் வரி 22 இல் 'தமது விருப்புரிமைப்படி' என்ற சொற்களை நீக்கலாம்.''

''பத்தி 18 இன் கூறு (இ) ஐ நீக்கலாம்.''

**திரு. அவைத் தலைவர்:** திருத்தம் எண்கள் 148, 149 ஆகியவை தள்ளுபடி செய்யப்படுகின்றன. அடுத்து திருத்தங்கள் 223, 224, 225, 226 ஆகியவை இருக்கின்றன. இவை ஏறத்தாழ ஒரே வழிப்பட்டவை. நீங்கள் எண் 226ஐ முன்மொழிய விரும்புகிறீர்களா திரு. பிரஜேஷ்வர் பிரசாத்? ஏனைய மூன்றையும் நான் தள்ளுபடி செய்துவிட்டேன்.

**திரு. பிரஜேஷ்வர் பிரசாத்:** எனது திருத்தங்களில் எதையும் முன்மொழிய நான் விரும்பவில்லை, அய்யா.

**திரு. அவைத் தலைவர்:** அப்படியானால் டாக்டர் அம்பேத்கரின் திருத்தங்கள் எண் 146, 147 ஆகியவற்றை வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

(திருத்தங்கள் ஏற்றுக்கொள்ளப்பட்டன.)

*(திருத்தப்பட்ட வடிவத்தில் பத்தி 18 ஆறாம் அட்டவணையில் சேர்க்கப் பட்டது.)*

## (பத்தி 19)

[1]*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* அய்யா, நான் முன்மொழிவது:

''பட்டியல் 1 (ஏழாவது வாரம்) திருத்தங்கள் எண் 150, 151 தொடர்பாக பத்தி 19,க்கும் அதற்கான இணைப்பு அட்டவணைக்கும் பதிலாக பின்வரும் பத்தியையும் அட்டவணையையும் இடம்பெறச்செய்யலாம்.

''19. பழங்குடிப் பகுதிகள் -

1. கீழ்க்காணும் அட்டவணையின் பகுதிகள் I, II ஆகியவற்றில் குறித்துரைக்கப்படும் பகுதிகள் அசாம் மாநிலத்துக்குள் பழங்குடி பகுதிகளாக இருக்கும்.

2. ஐக்கிய காசி - ஜெயிந்தியா மலை மாவட்டமானது இந்த அரசமைப்புத் தொடங்குவதற்கு முன் காசி அரசுகள் என்று அறியப்பட்ட ஆட்சிப் பரப்புகளையும், காசி மற்றும் ஜெயந்தியா மலை மாவட்டத்தையும் தன்னகத்தே கொண்டமையும்; இப்போதைக்கு ஷில்லாங் படைக்குடியிருப்பு மற்றும் நகராட்சிக்குள் அமைந்த பகுதிகள் எதுவும் இதில் அடங்கியிருக்காது; ஆனால் ஷில்லாங் நகராட்சிக்குள் அமைந்தப் பகுதியில் காசி அரசாகிய மையிலியம் என்பதன் பகுதியாக அமைந்திருந்த அளவுக்கு இதில் அடங்கும்''.

ஆனால் இந்த அட்டவணையின் பத்தி 3, உள்பத்தி 1, கூறுகள் உ, ஊ மற்றும் பத்தி 4,5 பத்தி 8 உள்பத்தி 3, உள்பத்தி 4 கூறுகள் அ, ஆ, ஈ ஆகியவற்றின் நோக்கங்களுக்காக ஷில்லாங் நகராட்சிக்குள் அமைந்த பரப்பின் எப்பகுதியும் இம்மாவட்டத்துக்குள் இருப்பதாகக் கருதப்படாது.

3. கீழ்காணும் அட்டவணையில் எந்தவொரு மாவட்டத்திற்குமான ஐக்கிய காசி - ஜெயந்தியா மலைகள் மாவட்டம் அல்லாத எந்தவொரு மாவட்டத்தையும் அல்லது நிர்வாக பரப்பையும் குறிப்பிடும் அந்த சுட்டுரையும் இந்த அரசமைப்புச் சட்டம் தொடங்கும் நாளில் அந்த மாவட்டம் அல்லது பரப்பை குறிப்பிடும் சுட்டுரையாகக் கருதப்படும்.

ஆனால், கீழ்க்காணும் அட்டவணையின் பகுதி IIஇல் குறித்துரைக்கப்படும் பழங்குடிப் பகுதிகளில் குடியரசுத் தலைவரின் முன் ஒப்புதலோடு இதற்கென அசாம் ஆளுநர் அறிவிப்பு செய்யக்கூடிய சமவெளிப் பகுதிகள் எதுவும் அடங்காது.

அட்டவணை

பகுதி - I

1. ஐக்கிய காசி - ஜெயந்தியா ஷியா மலை மாவட்டம்.
2. கரோ மலை மாவட்டம்.
3. லுஷாய் மலை மாவட்டம்.
4. நாகா மலை மாவட்டம்.
5. வடக்கு கச்சார் மலைப்புறம்.
6. மிகிர் மலைகள் மாவட்டம்.

---

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர் 7, பக். 1057.

பகுதி -II

1. பாலிப்பரா எல்லைத்தடம், திராப் எல்லைப்பகுதி; அபோர் மலை மாவட்டம், மிஸிமி மலை மாவட்டம் ஆகியவை உள்ளிட்ட வடகிழக்கு எல்லைப்பகுதி

2. நாகா பழங்குடிப்பகுதி.

★ ★ ★

[1]**திரு ரோகிணி குமார் சௌதுரி:** ஆனால் அவர் (டாக்டர் அம்பேத்கர்) இன்று காலை முன்மொழிந்திருக்கிற திருத்தம் வெறும் உருமறைப்பே ஆகும் என்பேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** எதற்காக உரு மறைப்பு?

**திரு.ரோகிணி குமார் சௌதுரி:** ஏனென்றால், ஷில்லாங் நகராட்சியின் எந்தப் பகுதியையும் தன்னாட்சி மாவட்டத்தில் சேர்ப்பது தொடர்பாக அம்பேத்கர் தமது கருத்தை மாற்றிக் கொண் டுள்ளார் என்பதை இது காட்டுவதாகத் தோன்றுகிறது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் எனது கருத்தை மாற்றிக் கொள்ளவில்லை.

**திரு.ரோகிணி குமார் சௌதுரி:** இருக்கின்றவாறு திருத்தத்தின் பத்தி 2இல் அடங்குவது என்னவென்றால்...

**திரு.டி.டி.கிருஷ்ணமாச்சாரி:** அய்யா, இங்கிருக்கிற நாம் இந்தப் பிரச்சினையில் கொஞ்சம்கூட பக்க சார்பற்றவர்களாக இருக் கிறோம் என்பதையும எவ்வித உருமறைப்புக்கும் தேவையே இல்லை என்பதையும் நான் சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.

[2]**திரு. அவைத் தலைவர்:** உருமறைப்பு என்றப் பிரச்சினையே இல்லை, ஏனென்றால் ஷில்லாங் நகராட்சியில் மைலியம் அரசுக்குள் அமைந்த பகுதியைத் தவிர அந்த நகராட்சியை விலக்கிவைக்கவே அவர் விரும்புவதாக இந்தப் பத்தி தெள்ளத் தெளிவாக சொல்கிறது.

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அய்யா, பத்தி 19க்கு ஒரு புதிய உரையை தரும் என் திருத்தம் எண் 331 நான் காண்பது போன்ற எவ்வகை இடர்ப்பாட்டையும் ஏற்படுத்தும் என்று நான் நினைக்க

---

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர்7, பக்.1063 - 64.

2. மேற்படி அதே நூல், பக். 64.

வில்லை. ஆகவே பத்தி 19 இல் அடங்கிய வழிவகைகளுக்கு விளக்க மளிப்பதில் அதிக நேரம் செலவிடுவது அவசியம் என்று நான் எண்ண வில்லை. ஆனால் இப்போது அனல் பறக்கும் விவாதம் இந்தளவுக்கு நடைபெற்றுள்ள நிலையில், திருத்தப்பட்ட புதியபத்தி 19 இல் அடங்கியுள்ள வழிவகைகளுக்கு நான் விளக்கமளித்தாக வேண்டும்.

இப்போது சர்ச்சையின் முக்கியப் பகுதி பத்தி 19 இன் உள் பத்தி (2) இல் மையம் கொண்டிருக்கிறது. இதன் பொருள் என்ன என்பதை நான் விளக்க விரும்புகிறேன். அட்டவணையின் பகுதி Iஇல் பதிவு 1 என்று குறிப்பிடப்படுகிற ஐக்கிய காசி - ஜெயந்தியா மலை மாவட்டத்தைப் பொறுத்தவரை ஷில்லாங் நகராட்சிக்குள் அமைந் திருப்பதும் மைலியம் என்னும் காசி அரசைச் சேர்ந்ததுமாகிய பகுதி ஐக்கிய காசி - ஜெயந்தியா மலை மாவட்டத்தைச் சேர்ந்ததாக இருக்கும் என்பது இதன் பொருளாகும். மில்லியம் அரசில் ஷில்லாங்கில் அடங்கும் பகுதி ஐக்கிய - காசி- ஜெயந்தியா மலை மாவட்டத்தைச் சேர்ந்ததாக இருக்கும் என்று பொருள். மைலியம் அரசின் இந்தப் பகுதி இப்போது பத்தி 19இன் புதிய வழிவகைககளின்படி உண்மை யில் தனித்தனியான இரு மேலுரிமைகளுக்கு உட்பட்டதாயிருக்கும் என்று உணரப்படுகிறது. இது ஷில்லாங் நகராட்சியின் மேலுரிமைக்கு உட்பட்டதாகும், ஏனென்றால் இந்த வழிவகையைக் கொண்டு நாம் ஷில்லாங் நகராட்சியின் எல்லைகளை மாற்றி அமைக்கவில்லை. அசாம் சட்டமன்றம் இயற்றிய நகராட்சி சட்டத்தால் வரையறுக்கப் பட்டவாறு ஷில்லாங் நகராட்சியின் எல்லை அப்படியே இருந்து வருகிறது. அந்தச் சட்டத்தின்படி மைலியம் அரசின் இந்தக் குறிப் பிட்டப் பகுதி நகராட்சியின் பகுதியாகும். இந்த இரட்டை மேலுரிமை அதாவது ஐக்கிய காசி - ஜெயந்தியா மலை மாவட்டமும் நகராட்சி யும் முரண்பட நேரிடலாம் என்பது ஒப்புக்கொள்ளப்படுகிறது. இந்த முரண்பாட்டை வெல்லும் பொருட்டு நான் உட்கூறு(2) க்கு துணை விதியை சேர்த்திருக்கிறேன். துணைவிதியின் விளைவு இதுதான். துணைவிதியில் குறிப்பிட்ட நோக்களுக்காக ஐக்கிய காசி - ஜெயந்தியா மலைகள் மாவட்டத்தின் மாவட்ட மன்றத்தின் மேலுரிமை அகற்றப் படுகிறது, நகராட்சியின் மேலுரிமை துணைவிதியில் குறிப்பிடப்பட்ட இந்த நோக்கத்திற்காக கட்டுப்படுத்தப்படுகிற அளவிற்கு மாவட்ட மன்றத்தின் மேலுரிமை இந்தப் பகுதி மீது தொடரும். மேலுரிமைத் தொடர்பான முரண்பாட்டை தவிர்ப்பதே துணைவிதியின் கருத் தாகும். மைலியம் அரசுப் பரப்பு ஐக்கிய காசி - ஜெயந்தியா மலைகள் மாவட்டத் திலிருந்து அறவே விலக்கப்படவேண்டும் என்றும், முழுக்க

1. அரசமைப்புப்பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப். 7, பக். 1070 - 74.

முழுக்க ஷில்லாங் நகராட்சியை சேர்ந்ததாக்கப்பட வேண்டும் என்றும் மறு தரப்பில் சிலர் சொல்லியுள்ளார்கள்.

**பண்டித ஹிருதய் நாத் குன்ஸ்ரு:** இப்போதிருப்பது போல்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அப்படித்தானா என்று யானறியேன். முக்கியச் செய்தி இதுதான். அந்தத் தரப்பிலிருந்து யாரோ - என் நண்பர் திரு. ரோகினி குமார் சௌதுரி என்று நினைக்கிறேன் கூறியதுபோல் நகராட்சியில் முக்கால்பங்கு இந்தப் பகுதிக்குள் வந்துவிடுகிறது. திருமணச் சட்டங்களையும். வாரிசுரிமைச் சட்டங்களையும், பிற பழக்கவழக்கங்களையும் பொறுத்தவரை மைலியம் அரசின் இப்பகுதியில் வாழ்கின்ற மக்கள் முழு மாவட்டத்திற்கும் உரிய அதேச் சட்டங்களையும், அதேப் பழக்கவழக்கங்களையும், அதேத் திருமணச் சடங்களையும் சடங்குகளையும் பகிர்ந்து கொள்கிறார்கள் என்பதில் இம்மியளவும் ஐயமில்லை. ஆகவே இப்படித்தான் நிகழும்: இந்தப் பகுதி ஐக்கிய காசி- ஜெயந்தியா மலைகளின் மாவட்டங்களிலிருந்து அறவே விலக்கப்பட்டதாகக் கொண்டால் இதன்விளைவாக இம்மக்கள் திருமணச் சட்டங்களையும் இன்ன பிறவற்றையும் பொறுத்தவரை மைலியம் அரசின் எஞ்சியப் பகுதியில் வாழும் தங்கள் சகோதரர்களை அடிப்படையில் ஒத்திருந்தாலும், அதேப்போது பொதுவான வாரிசுரிமை சட்டத்திற்கும் பொதுவான திருமண சட்டத்திற்கும், நாடாளுமன்றமோ அசாம் சட்டமன்றறோ இயற்றக்கூடிய எல்லா பொதுவான சட்டங்களுக்கும் அனைத்துக்கும் உட்பட்டவர்களாவார்கள். இந்தக் காரணத்தால்தான், கூறு (2) இல் அடங்கிய வழிவகையும் அதனுடன் சேர்ந்த துணை விதியுமே இந்தச் சிக்கலுக்கு சரியான தீர்வாக இருக்கும் என்று வரைவுக்குழு கருதியது. அதாவது துணைவிதியில் வரையறுக்கப்பட்டவாறு நகராட்சியை சேர்ந்ததாக உள்ள அப்பகுதி நகராட்சிக்கு உட்பட்டதாகவே இருந்து வரவேண்டும். அதே சமயத்தில் மாவட்ட மன்றம் அமைப்பதற்கான நோக்கங்களுக்கு அப்பகுதி மாவட்ட மன்றத்திற்கு உட்பட்டதாக இருந்துவரும். மோதல் ஏதுமில்லை, அடிப்படையான நோக்கத்திற்கு, அதாவது ஒருபடித்தான மக்கள் சமூகம் ஒரேவகை சட்டங்களுக்கும், ஒரே வகையான நிர்வாக அமைப்புக்கும் உட்பட்டவர்களாய் இருக்க வேண்டும் என்பதற்கு இது உதவுகிறது. அவர்கள் அனைவருக்கும் ஒரேவகை நிர்வாக அமைப்புதான் இருக்க வேண்டும்.

இப்போது, கவனித்துக் கொள்ள வேண்டிய எல்லாப் பிரச்சினைகளையும் கவனித்துக் கொள்வதற்கு போதியளவுக்கு துணைவிதி விரிவானதா அல்லது மிகவும் குறுகியதா என்று சற்றே சர்ச்சை

உண்டாகலாம். இதுக்குறித்து கருத்து ஏதும் தெரிவிக்க நான் அணியமாய் இல்லை. இந்தப் பிரச்சினைக் குறித்துப் போதிய அறிவும், தகவலும் உடையவர்கள் என்று கருதப்படவேண்டிய இரு முதன்மை பிரதிநிதிகள், அதாவது அசாம் தலைமை அமைச்சரும் அவர் கூட்டாளி அருட்திரு நிக்கோல்ஸ்ராயும், ராடம் வரைவுக்குழுவுக்கு வழிக்காட்டியிருக்கின்றனர். வேறு சில பிரச்சினைகள் சேர்க்கப்பட வேண்டும் என்று அவர் அறிவார்ந்து கருதினால் நிச்சயமாக வரைவுக் குழு எந்த மறுப்பும் சொல்லாது. ஏனென்றால் வரைவுக்குழுவுக்கும் இந்தப் பிரச்சினைக்கும் தொடர்பேதுமில்லை.

**திரு.ரோகிணி குமார் சௌதுரி:** ஷில்லாங்கில் வாழ்கிற பழங்குடி அல்லாத மக்களுக்கு இந்தப் பிரச்சினையில் கருத்து ஏதும் சொல்ல உரிமை இல்லை என்கிறீர்களா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** எந்தப் பிரச்சினையில்?

**திரு. ரோகிணி குமார் சௌதுரி:** நீங்கள் இப்போது பேசிக் கொண்டிருக்கும் பிரச்சினை எதுவாயினும் அதில்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** நீங்கள் சொல்வதை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. நாம் செய்திருப்பது என்னவென்றால் இந்தப் பகுதியில் வாழ்கின்ற மக்களுக்கு இரட்டை உரிமை இருக்கிறது. ஷில்லாங் நகராட்சியில் தங்களது பிரதிநிதிகளை தேர்ந்தெடுக்கும் உரிமை இருக்கிறது; மாவட்ட மன்றங்களில் தங்கள் பிரதிநிதிகளை தேர்ந்தெடுப்பதற்கும் உரிமை இருக்கிறது. அப்பால் மேலுரிமை தனியாக இருக்கிறது. புதிய பத்தி 19 ஐப் பொறுத்தவரை வேறு எந்தப் பிரச்சினையும் இருப்பதாக நான் கருத வில்லை.

**திரு. ரோகிணி குமார் சௌதுரி:** ஒரு தகவல் கேட்கிறேன். இப்போது பேசிக்கொண்டிருக்கும் உறுப்பினர் என்ன சொல்ல விரும்புகிறார்? பழங்குடியை சேர்ந்த ஒரே ஒருவர் கூட இல்லாத திமாப்பூரில் இருப்பவர்களுக்கும், ஷில்லாங்கில் இருப்பவர்களுக்கும் முழுக்க முழுக்க அருட்திரு நிக்கோல்ஸ்ராயின் கருத்துதான் வழி காட்ட வேண்டும் என்கிறாரா?

**திரு. அவைத் தலைவர்:** அவர் திம்மாப்பூர் பற்றி ஏதும் சொல்லவில்லை. பத்தி 10 உள்பத்தி (2) இன் உட்கூறு (ஈ) ஐ துணை விதியில் சேர்க்கலாமா என்ற திரு.பர்தோலாயின் கேள்விக் குறித்தே அவர் பேசிக் கொண்டிருக்கிறார்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** எனக்கு மறுப் பேதுமில்லை. நாம் பிரச்சினையை அவர்களிடம் விட்டு விடு கிறோம். சில பிரச்சினைகள் சேர்க்கப்பட வேண்டும் என்று அவர்கள் கருதினால் நாம் ஏன் மறுத்துரைக்க வேண்டும்? நாம் அவர்களின் அறிவுரைப்படி நடக்கிறோம்.

**பண்டித் ஹிருதய்நாத் குன்ஸ்ரு:** நான் பிரச்சினை குறித்து அறிக்கையில் கைச்சாத்திட்ட திரு. பர்தோலாயிக்கும் அருட்திரு ஜெ.ஜெ.எம். நிக்கோல்ஸ் ராய்க்கும் ஷில்லாங் நகராட்சியின் எல்லைக்குள் பழங்குடி மக்களின் நிலைத் தொடர்பாக ஒரு மாற்றம் வேண்டி முறையீடு ஏதும் வந்ததா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அவர்களின் தகுதி சான்றுகள் குறித்து நான் கேள்வி எழுப்பவில்லை. இப்படி எந்த முறையீடும் பெற்று அவர்கள் தங்களை வலுப்படுத்திக் கொண்டுள் ளார்களா என்று நான் ஆராயவுமில்லை.

**பண்டித ஹிருதய்நாத் குன்ஸ்ரு:** நான் இக்கேள்வியை எழுப்பியது ஏனென்றால் என் மாண்புமிகு நண்பர் அசாம் தலைமை அமைச்சர் மற்றும் அருட்திரு நிக்கோல்ஸ் ராயின் ஆணையுரிமையை குறிப்பிட்டார். நான் குறிப்பிட்டிருக்கிற குழுவின் அறிக்கையில் இந்தப் பெருமக்கள் இருவரும் கைச் சாத்திட்டு உள்ளனர்; ஷில்லாங் நகராட்சியின் எல்லைகள் இப்போது இருக்கின்றவாறே இருக்க வேண்டும் என்று அந்தக் குழு கூறுகிறது; அப்பகுதியில் வாழ்கிற மக்களின் தகுநிலையில் எந்தவொரு மாற்றத்திற்கும் அது யோசனைக் கூறவில்லை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அவர்கள் அப்படிச் செய்திருக்கலாம்; ஆனால் அறிக்கை மேற்கொண்டு மறுப்பரிசீலனை செய்வதற்கு தடையாக இருக்க முடியாது! எவ்வகையில் இதற்கு மேல் இந்தப் பிரச்சினையை நம்மால் கொண்டு செல்லமுடியும் என்று நான் கருதவில்லை. நான் முன்பே சொன்னதுபோல், இது ஒரு வட்டாரப்பிரச்சினை என்று வரைவுக்குழுவினர் கருதினர். ஆகவே இந்த பிரச்சினையில் முதன்மையாக பங்கேற்பவர்களின் ஆணை யுரிமை அல்லது அறிவுரை இல்லாமல் தாங்கள் செயல்பட முடியாது என்று எண்ணினர். நாம் அவர்களின் அறிவுரையை ஏற்று பணி முடித்தோம். அவர்கள் நினைத்தால்...*

---

* புள்ளிகள் குறியீட்டை குறிக்கின்றன.

**திரு. குலாதர் சாலிகா:** இந்தியா முழுவதிலுமிருந்து வந்த மக்கள் திம்மாப்பூரில் வசிக்கின்றனர்.

**திரு. அவைத் தலைவர்:** திம்மாப்பூர் பற்றி என்ன சொன்னாலும் பயன் இல்லை. அவர் திம்மாப்பூர் பற்றி எதுவும் சொல்லவில்லை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** நான் இதுவரை திமாப்பூர் குறித்து ஏதும் சொல்லவில்லை. நான் அதற்கு வருகிறேன்.

இப்போது நான் தன்னாட்சி மாவட்டங்களிலிருந்து குறிப்பிட்ட சிலப் பகுதிகளை விலக்கி வைக்கும் பிரச்சினைக்கு வருகிறேன்.

இது தொடர்பாக சற்றுமுன் நிறைவேற்றப்பட்டிருக்கிற 16-A என்னும் புதிய உறுப்பை அவைக்கு நினைவுப்படுத்த விரும்புகிறேன். நீங்கள் அதை எடுத்துப் பார்க்க வேண்டுமென விரும்புகிறேன். உறுப்பு 16-Aஐ வடிவமைக்கையில் இரு கேள்விகள் எழுப்பப்பட்டன. ஒரு கேள்வி கரோ மலைகள் என்று அழைக்கப்படுவதன் ஏதோ இரு முசாக்கள் (Mouzas) தொடர்பானதாகும். இதனுடன் சேர்ந்து திம்மாப்பூர் பரப்புப் பற்றிய கேள்வியையும் என் நண்பர் திரு.சாலிகா எழுப்பினார், மாநாட்டில் அவரும் கலந்துகொண்டார் என்று நான் கூறுவதில் நியாயம் இருப்பதாகக் கருதுகிறேன். அசாமைச் சேர்ந்த மூன்றுப் பிரதிநிதிகளும் கூட இந்த மாநாட்டில் கலந்து கொண்டனர். திரு.பர்தோலாய், அருட்திரு நிக்கோல்ஸ் ராய், திரு. சாலிகா ஆகியோரே அவர்கள்; கரோ மலைகளின் இந்த மூசாக்களும் (Mouzas) திமாப்பூர் பகுதியும் தன்னாட்சி மாவட்டத்திலிருந்து பிரிக்கப்பட வேண்டுமா என்பது பற்றியும் பரிசீலிக்கப்பட்டது. தன்னாட்சி மாவட்டங்களிலிருந்து மாநாட்டில் சொல்லப்பட்டது என்னவென்றால் அவற்றைப் பிரிப்பது விரும்பத்தக்கதல்ல, ஏனென்றால் இந்த மூசாக்களின் (Mouzas) வாழ்க்கை - அவற்றின் பொருளாதார வாழ்க்கை - தன்னாட்சி மாவட்டங்களில் உள்ள மக்களின் வாழ்க்கையுடன் நெருக்கமாக கட்டுண்டு இருக்கிறது. ஆகவே இந்தப் பகுதிகள் அதாவது கரோ மலைகளிலிருந்தும் திமாப்பூர் பகுதியிலிருந்தும் மூன்று மூசாக்கள், இந்தப் பகுதியில் வசிப்பவர்களுக்கு சட்டப்பேரவையில் அரசியல் பிரதிநிதித்துவம் அளிப்பதற்காக மட்டும் பிரிக்கப்படுமானால் அதுவே போதுமானதாகும் என்று கூறப்பட்டது. என் நண்பர் திரு.சாலிகா திட்டவட்டமாக இதனை தெரிவித்தார்; இவர்தான் இப்போது

திம்மாப்பூர் பகுதிப் பற்றிய கேள்வி எழுப்பியுள்ளார். ஆகவே அசாமைச் சேர்ந்த இந்த மூன்று பிரதிநிதிகளும் வேண்டியதாலும் தூண்டியதாலும்தான் பத்தி 16A இப்போதுள்ளவாறு வடிவமைக்கப் பட்டது. முழுமையாக பிரிந்துவிட வேண்டுமென்றும் இதனை தன்னாட்சிப்பகுதியில் சேர்க்கக்கூடாது என்றும் அவர்கள் அச்சமயத் தில் ஏற்றுக்கொண்டிருந்தால் அவர்களின் விருப்பங்களை நிறைவேற்ற நமக்கு மறுப்பேதும் இருந்திருக்காது. ஆகவே வரைவுக் குழுதான் செய்வதற்கு அறிவுரை சொல்லப்படாத ஏதோ ஒன்றை செய்தது என்று குற்றம் கூறுவதில் பயன் ஏதும் இல்லை. நான் பணிந்து தெரிவிக்கும் முதலாவது கருத்து இதுவே ஆகும். வரைவுக் குழுவும், திம்மாப்பூர்ப் பகுதிப் பிரச்சினையை முதன்முதலாக எழுப்பிய திரு.சாலிகா உட்பட அசாமின் மூன்று பிரதிநிதிகளும் எடுத்த தூல முடிவுகளுக்கு உருக்கொடுப்பதே பத்தி 16-A.

**திரு. குலாதர் சாலிகா:** அறிவுரையாளராக அங்கு சென்று பார்க்கும்படி என்னிடம் கூறப்பட்டது என்பதை நான் பணிந்து தெரிவித்துக் கொள்கிறேன். நான் வரைவுக் குழுவின் உறுப்பினர் என்று ஒருபோதும் எண்ணிக் கொள்ளவில்லை. நீங்கள் அங்கு என் பெயரை காணமாட்டீர்கள்.

**திரு. அவைத் தலைவர்:** நீங்கள் வரைவுக்குழுவின் உறுப் பினர் என்று யாரும் சொல்லவில்லை. நீங்கள் அங்கு இருந்ததாக அவர் சொல்லியிருக்கிறார்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அது அவர் கருத்து. இன்னும் ஒன்றை சொல்லியாக வேண்டும் அதாவது எல்லைகளை மாற்றியமைப்பதற்கும், பகுதிகளை குறைப்பதற்கும், இன்னப் பிறவற்றிற்கும் ஆளுநருக்கு அதிகாரம் வழங்குகிற திருத்தம் 99இன்படி, இப்போது தன்னாட்சிப் பகுதியில் சேர்க்கப்பட வேண்டிய பகுதியிலிருந்து ஆளுநர் எந்தவொரு பகுதியையும் துண்டிப்பது, விலக்கிவைப்பது முழுக்க சாத்தியமே. இல்லாவிட்டால் வரைவுக்குழு அந்தப்பொருளில் வெளிப்படையான கூறு ஒன்றை சேர்க்க அணியமாகவே இருக்கும். ஆனால் பிரதிநிதிகள் ஒரு மாநாட் டிற்கு வந்து குறிப்பிட்ட உடன்பாட்டிற்கு இணங்குவதும் பிறகு அந்த உடன்பாட்டிலிருந்து பின்வாங்கி திருத்தங்கள் கொண்டு வருவதும், வரைவுக்குழுவினருக்கு எதிராக கருத்து சொல்வதில்

குறியாக இருப்பதும், பிரதிநிதிகளின் விருப்பங்களுக்கு மாறாக அவர்கள் ஏதோ ஏதோ செய்துவிட்டதாக சொல்வதும் இயன்றவரை மிதமாக சொன்னால் பெரிதும் வருந்தத்திற்குரியதாகும் என்று நான் குறிப்பிட விரும்புகிறேன்....*

**திரு. குலாதர் சாலிகா:** இல்லை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** நான் மிகவும் வருந்துகிறேன். என்னால் முடிந்ததெல்லாம்....*

**திரு. குலாதர் சாலிகா:** இல்லை, இல்லை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** நான் மிகவும் வருந்துகிறேன். ஆகவே, பத்தி 16-A,ஐ பொறுத்தவரை அரசியல் தேவைகளின் நோக்கத்திற்காக பிரித்திட இது வழிவகைச் செய்கிறது. முழுமையாக பிரித்திட வேண்டுமானால் நாம் நிறைவேற்றியுள்ள பத்தியில் முன்பே அதற்கு வழிவகைச் செய்யப்படுகிறது என்பதை பணிந்து தெரிவித்துக் கொள்கிறேன். அது அப்படி செய்யவில்லை என்றால் ஆளுநர் 'உசிதமென கருதுமிடத்து எந்தப் பகுதியையும் விலக்கிவைக்க அவருக்கு அதிகாரம் இருக்கும் என்பதை தெள்ளத் தெளிவாக்குவதற்காக கூறு ஒன்றை சேர்க்க நான் அணியமாய் இருக்கிறேன். புதியப் பத்தி 19 இல் அடங்கியிருக்கும் எனது திருத் தத்தைப் பொறுத்தவரை சர்ச்சைக்குரிய அனைத்து செய்திகளுக்கும் விடையளிக்கப்பட்டிருப்பதாக நான் நம்புகிறேன்.

அய்யா, இப்போது மற்றொரு பத்தியைச் சேர்க்க சொல்கிற என் மாண்புமிகு நண்பர் திரு. குன்ஸ்ரூரின் திருத்தம் குறித்து பேச எண்ணுகிறேன். அவரது திருத்தமானது ஏற்கனவே நிறைவேற்றி யிருக்கிற ஐந்தாம் அட்டவணையின் பத்தி 5 ஐ திருப்பிச் சொல்வதேத் தவிரவேறல்ல என்பதை கவனிக்கலாம்; இந்தப் பத்தி அசாமில்லாத வேறு மாநிலங்களில் பழங்குடி பகுதிகள் அல்லது அட்டவணைப் பகுதிகள் பற்றியதாகும். அவருடைய திருத்தத்தில் இதற்கு மேல் ஒன்றுமில்லை.

---

★ மூலத்தில் கண்டுள்ளபடி புள்ளிகள் குறுக்கீட்டைக்காட்டும்.

அவருடைய திருத்தத்திற்கு எதிரான பணிவான கருத்து இது தான்.

அவரின் புதியப் பத்தியின் உட்கூறு 1 ஐப் பொறுத்தவரை அது சிறிதும் தேவையற்றதே. இது ஆறாவது அட்டவணையின் பத்தி 13 ஆல் ஆளப்படுகிறது. இந்தப் பத்தி நாடாளுமன்றம் அல்லது அசாம் சட்டமன்றம் இயற்றிய சட்டங்களை பயன்படுத்தவோ, பயன்படுத்தாமலிருக்கவோ பயன்படுத்தினால் மாற்றங்களோடு பயன் படுத்தவோ ஆளுநருக்கு அதிகாரம் அளிப்பதாகும். ஆகவே அந்த வழிவகை சிறிதும் தேவையற்றதாகும்; அது முன்பே நமது வரைவில் அடங்கியிருக்கிறது.

இரண்டாவது உட்கூறு 2 தொடர்பாக நிலை இதுதான்; ஐந்தாவது அட்டவணையைப் பொறுத்தவரை அப்பகுதித் தொடர் பான ஒழுங்குமுறைகளை வகுக்க நாம் ஆளுநருக்கு அதிகாரம் அளிக்கவே செய்கிறோம் என்பது உண்மைதான்; ஆனால் ஆறாவது அட்டவணையைப் பொறுத்தவரை ஆளுநருக்கு அந்த அதிகாரத்தை வழங்க நாம் கருதவில்லை. இந்தக் காரணத்திற்காகத்தான் ஐந்தாவது அட்டவணையைப் பொறுத்தவரை பழங்குடிகள் தங்களுக்காக ஒழுங்குமுறைகள் எதையும் வகுத்துக்கொள்ள ஆணையுரிமை ஏதும் இல்லை; ஆனால் ஆறாவது அட்டவணையைப் பொறுத்தவரை நாம் குறிப்பிட்ட சிலவகைகளில் சட்டங்கள் இயற்றுவதற்கான உரிமையை மாவட்ட மன்றத்திற்கும் வட்டார மன்றத்திற்கும் வழங்கி யிருக்கிறோம். ஆகவே பழங்குடிகளுக்கு ஒழுங்குமுறைகள் வகுக் கும் அதிகாரம் பழங்குடிகளுக்கு வழங்கப்பட்டிராத இடத்தில் அந்த அதிகாரத்தை ஆளுநருக்கு வழங்குவது அவசியமாகும் என்று எனக்கு தோன்றுகிறது. ஆனால் ஒழுங்குமுறைகள் வகுக்கும் அதிகாரம் பழங்குடி மன்றங்களுக்கே தரப்பட்டுள்ள இடத்தில் இதுபோன்ற ஒழுங்குமுறைகள் வகுக்க ஆளுநருக்கும் அதிகாரம் அளிப்பது சிறிதும் தேவையற்றதாகும். இந்த காரணத்தினால்தான் ஆறாவது அட்ட வணையை பொறுத்தவரை ஆளுநருக்கு அதிகாரம் அளிக்க நாம் கருதவில்லை. ஆகவே இந்தத் திருத்தம் சிறிதும் தேவையற்றதாகும் என்று பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன். மற்றொன்றையும் நான் தெட்டத்தெளிவாக விரும்புகிறேன். ஒழுங்குமுறைகள் வகுக்கும் அதிகாரத்தை ஆறாம் அட்வணையின்படி மாவட்ட மன்றத்திற்கு வழங்க எண்ணியுள்ளோமே அது புதிய அதிகாரமே அல்ல. உண்மை என்னவென்றால் அசாமில் இப்போது சில குறிப்பிட்ட ஒழுங்கு

முறைகள் உள்ளன. நமது அட்டவணையைக் கொண்டு நாம் வழங்குகின்ற ஒழுங்குமுறைகளை வகுக்கும் அதே அதிகாரத்தை பழங்குடிகளுக்கு அதிகாரம் இருக்கிறது என்பதை இது நீடிக்கச் செய்கிறதேத் தவிர வேறல்ல. ஆகவே நான் விளக்கியுள்ள காரணங்களால் அவரது திருத்தம் சிறிதும் தேவையற்றது. ஆகவே நான் அதை எதிர்க்கிறேன். இங்கு வெளிப்பட்ட கண்ணோட்டங்களில் அதிக வேறுபாடு இருப்பது போல் நாம் நடத்திய விவாதத்திலிருந்து தோன்றக்கூடும். உண்மையில் அவ்வளவு அதிக வேறுபாடில்லை என்றுதான் நான் சொல்ல வந்தேன். நான் டாக்டர் அம்பேத்கர் கூறியதை கவனித்துள்ள படியால், இரண்டு யோசனைகள் ஏற்றுக்கொள்ளப்படுமானால் அனேகமாக வேறுபாடுகளில் பெரும்பகுதி மறைத்துவிடும் என்று நம்புகிறேன், ஆகவே அவர் பத்தி 10 உள்பத்தி 2 இன் கூறு ஈ ஐ துணைவிதியில் சேர்க்க வேண்டும் என்று யோசனைக் கூறவந்தேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர் அம்பேத்கர்:** நாம் இதை வரைவுக்குழுவிடம் விட்டுவிட்டால் அது அதைச் செய்யும். திருத்தம் எண் 99 இல் உள்பத்தி (3) கூறு (ஈ) யில்

**திரு. அவைத் தலைவர்:** ‘ஒரு தன்னாட்சி மாவட்டத்தின் பரப்பை குறைக்க’’ என்ற சொற்களுக்குப் பிறகு ‘‘அல்லது ஒரு தன்னாட்சி மாவட்டத்திலிருந்து எந்தவொரு பரபரப்பையும் விலக்கி வைக்க என்ற சொற்களை நாம் சேர்க்கலாம் என்று யோசனை கூற வந்தேன். பிரச்சினைகளுக்கும் விடையாகும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** நாங்கள் அதைச் செய்ய அணியமாகவே இருக்கிறோம்.

**திரு. அவைத் தலைவர்:** எனக்கு இந்த இடர்ப்பாடு உள்ளது. நான் உள்பட அவையின் உறுப்பினர்களில் பெரும்பானவர்கள் வட்டார நிலைமையுடன் பரிச்சயமற்றவர்கள், ஆகவே அசாம் தொடர்பாக நாமாகவே எந்தவொரு ஒரு திட்டவட்டமான வழி முறையையும் மேற்கொள்ளும் நிலையில் இல்லை. அங்கிருந்து வரும் நண்பர்கள் நமக்கு வழிகாட்ட வேண்டியிருக்கிறது. அவர்களுக்கிடையில் சில வகைகளில் வேறுப்பாடு இருப்பதால் நமது நிலை மிகக் கடினமாகிவிடுகிறது. ஆகவே வட்டார அரசாங்கமே இதை பார்த்துக் கொள்ளட்டும் என்று விட்டுவிடுவதே சாலச் சிறந்ததாயிருக்கும் என்பேன். நான் தெரிவித்திருக்கும் ஆலோசனைகள்

வட்டார அரசாங்கம் இந்தப்பிரச்சினையை கையாளுவதற்கு வழி செய்யும். நான் தெரிவித்திருக்கும் இரு யோசனைகள் தொடர்பாகவும் டாக்டர் அம்பேத்கருக்கு மறுப்பேதும் இல்லை என்று புரிந்துகொள் கிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** இல்லை, அய்யா. 10(2) ஈ ஐ துணைவிதியில் சேர்க்கவும், மற்றதில் 'விலக்கிவைப்பதற் கான அதிகாரம்' என்பதை சேர்க்கவும்கூட நான் அணியமாய் இருக் கிறேன்.

**திரு. அவைத் தலைவர்:** அது, அசாமைச் சேர்ந்த நண்பர் களை மனநிறைவுக் கொள்ளச் செய்யும் என்று கருதுகிறேன்.

[1]**திரு. அவைத் தலைவர்:** பத்தி 19 இன்படி முன்மொழிவு வேறுபட்டிருக்கிறது.

**மாண்புமிகு அருட்திரு ஜெ.ஜெ.எம். நிக்கோல்ஸ்ராய்:** பத்தி ஏற்கனவே கவனித்துக்கொள்ளும் ஒரு செய்தியை பத்தி 19இல் வைப்ப தற்கு காரணம் ஏதும் இருப்பதாக யானறியேன்.

**திரு. அவைத் தலைவர்:** 'பத்தி 10 உள்பத்தி 2 இன் உட்கூறு (ஈ)'' என்பதை, பத்தி 10 இன் முழுவதையுமல்ல, சேர்ப்பதே கருத் தாகும்.

**மாண்புமிகு அருட்திரு ஜெ.ஜெ.எம். நிக்கோல்ஸ்ராய்:** இங்கு இந்தத் துணை விதியில் அதனை சேர்ப்பதால் என்னப் பயன்? ஏற்கனவே இது 10 இல் இருக்கிறது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** பத்தி 10 உள்பத்தி 2 இன் உட்கூறு ஈ வர்த்தகம் பற்றியதே தவிர வட்டிக்கு பணம் கொடுப் பதைப் பற்றியதன்று அதைத்தான் சேர்க்க முயல்கிறோம்.

**திரு. அவைத் தலைவர்:** விலக்கி வைத்தல் என்ற பிரச் சினையை பொறுத்தவரை அது மூலவரைவில் இருந்தது.

---

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர் 7, பக். 1075 - 76.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** திரு நிக்கோல்ஸ் ராய் அவர்களே அல்லாம் சரி, நீங்கள் எதையும் இழக்கும் நிலையில் இருப்பதாக நான் கருதவில்லை.

**மாண்புமிகு அருட்திரு ஜெ.ஜெ.எம்.நிக்கோல்ஸ்ராய்:** ஒரு தன்னாட்சி மாவட்டத்தின் எந்தவொரு பரப்பையும் விலக்கிவைக்க ஆளுநருக்கு அதிகாரம் வழங்கும்படியான ஒரு திருத்தத்தை நீங்கள் வாசகத்தில் சேர்க்கப் போகிறீர்களா இல்லையா என்று நான் உங்களைக் கேட்கிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நாமும் 'விலக்க வைக்கவும்'' கூட நாம் வழங்குகிறோம். 'குறைத்தல் உண்மையில்' விலக்கிவைத்தலை குறிப்பதாகும்.

**திரு. அவைத் தலைவர்:** 'குறைத்தல்' என்பதன் பொருள் 'விலக்கி வைத்தல்'' ஆகும்.

(திருத்தப்பட்ட வடிவத்தில் பத்தி 19, அட்டவணை பகுதிகள் I,II ஆகியவை ஆறாம் அட்டவணையில் சேர்க்கப்பட்டன.)

## (பத்தி 20)

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அய்யா, நான் முன்மொழிவது:

'பத்தி 19க்குப் பிறகு பின்வரும் பத்தியை நுழைக்கலாம்:-

20. அட்டவணைக்கு திருத்தம் 1. நாடாளுமன்றம் இந்த அட்டவணையின் வழிவகைகளால் எந்தவொன்றையும் சேர்த்தல் மாற்றல் அல்லது நீக்கம் செய்தல் என்ற முறையில் அவ்வப்போது சட்டம் கொண்டு திருத்தலாம். அட்டவணை அவ்வாறு திருத்தப்படுகிறபோது இவ் அரசமைப்புச் சட்டத்தில் இந்த அட்டவணையை சுட்டும் எந்தக் குறிப்பும் அவ்வாறு திருத்தப்பட்ட அட்டவணையை சுட்டும் குறிப்பாகக் கருதப்படும்.

(2) 'இந்தப் பத்தியின் உள்பத்தியில் குறிப்பிடப்படும் எந்தச் சட்டமும் இந்த அரசமைப்பு உறுப்பு 304 இன் நோக்கத்திற்கு அதற்கான ஒரு திருத் தமாக கருதப்படும்.''

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர் 7, பக்.1081 - 82.

## உறுப்பு 281

[1]திரு. அவைத் தலைவர்: அடுத்து நாம் உறுப்பு 281க்குச் செல்வோம்.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்: அய்யா, நான் முன்மொழிவது:

பொருள் விளக்கம்

''உறுப்பு 281க்குப் பதிலாக பின்வருவதை இடம்பெறச்செய்யலாம்:

''281. இந்தப்பகுதியில் சூழல் வேறுவிதமாகக் கோரவில்லை என்றால் 'மாநிலம்' என்ற சொல் இப்போதைக்கு முதல் அட்டவணையின் பகுதி I அல்லது IIIஇல் குறித்துரைக்கப்படும் மாநிலத்தைக் குறிப்பதாகும்.''

(உறுப்பு 281 அரசமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.)

## உறுப்பு 282 முதல் 282 C முடிய

மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்: அய்யா, நான் முன்மொழிவது:

''திருத்தங்கள் பட்டியல் (தொகுதி II) திருத்தம் எண் 3034 தொடர்பாக உறுப்பு 282க்குப் பதிலாகப் பின்வரும் உறுப்புகளை இடம்பெறச் செய்யலாம்:

ஒன்றியத்தில் அல்லது ஒரு மாநிலத்தில் பணி புரிகிறவர்களின் ஆட்சேர்ப்பும் பணி நிலைமைகளும்

282. இந்த அரசமைப்புச் சட்டத்தின் வழிவகைகளுக்கு உட்பட்டு உரிய சட்டமன்றத்தின் சட்டங்கள், அரசுப் பணிகளுக்கும், ஒன்றியத்தின் அல்லது ஏதேனும் ஒரு மாநிலத்தின் விவகாரங்கள் தொடர்பான பதவிகளுக்கு அமர்த்தப்படுபவர்களின் ஆட்சேர்ப்பையும் பணிநிலைமைகளையும் ஒழுங்குமுறைமைக்குள்ளாக்கலாம்.

ஆனால் ஒன்றியத்தின் விவகாரங்கள் தொடர்பான பணிகள் மற்றும் பதவிகளை பொறுத்தவரை குடியரசுத்தலைவரும் மாநில விவகாரங்கள் தொடர்பான பணிகள் மற்றும் பதவிகளை பொறுத்தவரை நேர்வைப் பொறுத்து மாநில ஆளுநர் அல்லது ஆட்சியாளரும் இத்தகைய பணிகள் மற்றும் பதவிகளுக்கு அமர்த்தப்படுபவர்களின் ஆட்சேர்ப்பு மற்றும் பணிநிலைமைகளை ஒழுங்குமுறைப்படுத்துவதற்காக இந்த உறுப்பின்படி உரிய சட்டமன்றத்தின் சட்டத்தால் அல்லது சட்டத்தின்படி வழிவகை செய்யப்படும் வரை இதற்கான விதிகளை வகுப்பது பொருத்தமானதாகவே

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப். 7, பக்.1082.

இருக்கும். அவ்வாறு வகுக்கப்படும் விதிகள் எவையும் இத்தகைய எந்தவொருசட்டத்தின் வழிவகைகளுக்கும் உட்பட்டே செயல் வடிவம் பெறும்.

*ஒன்றியம் அல்லது மாநில அரசுக்கு பணி செய்கிறவர்களின் பதவிக் காலம்*

282-A. 1. இந்த அரசமைப்புச் சட்டத்தால் வெளிப்படையாக வழிவகை செய்யப்பட்ட நிலைகள் நீங்கலாக, ஒன்றியத்தின் பாதுகாப்பு பணிகள் அல்லது குடியியல்பணியில் அல்லது அனைத்திந்திய பணியில் ஓர் உறுப்பினராக இருக்கின்ற அல்லது ஒன்றியத்தின் கீழ் பாதுகாப்புத் தொடர்பான எந்தவொரு பதவியும் அல்லது எந்தவொரு குடியியல் பதவியும் வகிக்கின்ற ஒவ் வொருவரும் குடியரசுத்தலைவர் காலம்வரை பதவி வகிக்கிறார். ஒரு மாநில அரசின் கீழ் எந்தவொரு குடியியல் பதவியும் வகிக்கிற ஒவ்வொருவரும் நேர்வைப் பொறுத்து மாநில ஆளுநர் அல்லது ஆட்சியாளர் விரும்பும் காலம் வரை பதவி வகிக்கிறார்.

2. ஒன்றியத்தின்கீழ் அல்லது ஒரு மாநில அரசின் கீழ் பதவி வகிக்கிறவர் குடியரசுத் தலைவர் அல்லது நேர்வைப் பொறுத்து மாநிலத்தின் ஆளுநர் அல்லது ஆட்சியாளர் விரும்பும் காலம் வரை பதவி வகிக்கிறார் என்ற போதிலும் தனித் தகுதிகள் படைத்த ஒருவரின் சேவையைப் பெறுவது அவசியமென்று குடியரசுத் தலைவரோ நேர்வைப் பொறுத்து ஆளுநர் அல்லது ஆட்சியாளரோ கருதினால் பதுகாப்புப்பணி அல்லது அனைத் திந்தியப்பணி அல்லது ஒன்றியம் அல்லது மாநில அரசின் குடியியல் பணியில் உறுப்பினராயில்லாத ஒருவரை இந்த அரசமைப்பின் இப்படியொரு பதவி வகித்திட அமர்த்தக்கூடிய எந்தவோர் ஒப்பந்தமும் ஒப்பந்தக்காலம் முடிவதற்கு முன் அந்தப் பதவி ஒழிக்கப்பட்டாலோ அவர் தன் தரப்பில் எவ்விதத்தும் தவறாக நடந்து கொள்ளாமல் வேறு காரணங்களுக்காக அந்தப் பதவியை விட்டு நீங்குமாறு கோரப்பட்டாலோ அவருக்கு இழப்பீடு கொடுக்க வழிவகை செய்யலாம்.

*ஒன்றியம் அல்லது மாநில அரசின்கீழ் குடியியல் பொறுப்புகளில் வேலைக்கு அமர்த்தப்பட்டவர்களின் வேலை நீக்கம் செய்தல் விலக்குதல் அல்லதுதரவரிசைக் குறைப்புச் செய்தல்.*

282 -B. 1. ஒன்றியத்தின் குடியியல் பணியில் அல்லது அனைத்திந்திய பணியில் அல்லது ஒரு மாநிலத்தின் குடியியல் பணியில் ஓர் உறுப்பினராக இருக்கிற அல்லது ஒன்றியம் அல்லது ஒரு மாநில அரசின் கீழ் குடியியல் பதவி வகிக்கிற எவரொரு வரையும் அவரை அமர்த்திய ஆணையத்துக்கு கீழ்ப் பட்ட ஓர் ஆணையம் வேலைநீக்கம் செய்யவோ விலக்கவோ கூடாது.

(2) மேற்சொன்ன இப்படிப்பட்ட எவரொருவரையும் அவர் தொடர்பாக எடுக்கக் கருதப்படும் நடவடிக்கைக்கெதிராக காரணம் காட்டும் நியாயமான ஒரு வாய்ப்பை அவருக்குக் கொடுக்காமல் வேலைநீக்கம் செய்யப்படவோ கூடாது.

ஆனால் இந்தக் காரணம் பின்வரும் நேர்வுகளில் பொருந்தாது:

(அ) ஒரு குற்றவியல் குற்றச்சட்டு ஒன்றின்பேரில், அவருக்கு குற்றத்தீர்ப்பு வழங்கப்படுவதற்கு இட்டுச் சென்றுள்ள நடத்தையின் காரணமாக அவர் வேலை நீக்கம் செய்யப்படுகின்ற அல்லது விலக்கப் படுகிற அல்லது தரவரிசைக் குறைப்பு செய்யப்படுகிறநிலை.

(ஆ) ஒருவரை வேலைநீக்கம் செய்யவோ, விலக்கவோ அல்லது தரவரிசை குறைப்பு செய்யவோ அதிகாரம் பெற்றுள்ள ஓர் ஆணையம் காரணம் காட்டும் வாய்ப்பு ஒன்றை அவருக்கு வழங்குவது நியாயமாக நடைமுறை சாத்தியமற்றது போன்ற ஏதேனும் ஒரு காரணத்தால் - இந்த காரணத்தை அந்த ஆணையம் எழுத்துவடிவில் பதிவுசெய்ய வேண்டும்- மனநிறைவு கொள்ளும் நிலை.

(இ) நேர்வைப் பொறுத்து குடியரசுத் தலைவரோ, ஆளுநரோ ஆட்சியாளரோ அரசின் பாதுகாப்பு நலனை முன்னிட்டு அவருக்கு இப்படி ஒரு வாய்ப்பு வழங்குவது உசிதமில்லை என மனநிறைவுக் கொள்ளும்நிலை.

(3) இந்த உறுப்பின் கூறு 2 க்கான துணைவிதியின் கூறு (ஆ)இன்படி எவரொருவருக்கும் அறிவிப்புக்கொடுப்பது நியாயமாக நடைமுறை சாத்திய மானதா என்று கேள்வி ஏதும் எழுமானால் இப்படிப்பட்டவரை நேர்வைப் பொறுத்து வேலையிலிருந்து நீக்கவோ விலக்கவோ அல்லது தரவரிசைக் குறைப்பு செய்யவோ அதிகாரம் பெற்றுள்ள ஆணையம் இதுகுறித்து எடுக்கும் முடிவே இறுதியானதாக இருக்கும்.

282-C. (1) இந்த அரசமைப்புச் சட்டத்தின் பகுதி IXஇல் என்ன கூறப் பட்டிருப்பினும் மாநிலங்கள் மன்றமானது கூட்டத்தில் கலந்துகொண்டு வாக்களிக்கும் உறுப்பினர்களில் மூன்றில் இருபங்கிற்கு குறையாதவர்களின் ஆதரவுடன் தீர்மானம் இயற்றுவதன்மூலம் இப்படிச்செய்வது தேசநல னுக்கு தேவையானது அல்லது விரும்பத்தக்கது என்று அறிவிக்குமானால் ஒன்றியத்திற்கும் மாநிலங்களுக்கும் பொதுவான ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட அனைத்திந்திய பணிகளை உருவாக்க நாடாளுமன்றம் சட்டம் கொண்டு வழிவகைசெய்யலாம். இந்த அத்தியாயத்தின் மற்ற வழிவகைகளுக்கு உட்பட்டு இத்தகைய எந்தவொரு பணிக்கும் அமர்த்தப்படுபவர்களின் ஆட் சேர்ப்பையும் பணிநிலைமைகளையும் அது ஒழுங்குமுறைக்குள்ளாக்கலாம்.

2. இந்த அரசமைப்புச் சட்டத்தின் தொடக்க நாளன்று இந்திய ஆட்சிப் பணிகள் என்றும், இந்திய காவல்பணி என்றும் அறியப்பட்ட பணிகள் இந்த உறுப்பின்படி நாடாளுமன்றத்தால் உருவாக்கப்பட்ட பணிகளாகக் கருதப் படும்.

அய்யா, நான் முன்மொழிந்துள்ளத் திருத்தம் குறித்து இக் கட்டத்தில் எதுவும் கூற கருதவில்லை. ஏனென்றால் உறுப்புகளே தெட்டத் தெளிவாக இருக்கின்றன. சில விமர்சனங்களை சொல்லக் கூடியப் பல திருத்தங்கள் உள்ளன, அப்போது நான் அந்தத் திருத்தங்

களுக்கு தீர்வு காணும் பொருட்டு தேவையாயிருக்கக்கூடிய விளக்கங்களை அவைக்கு அளிக்கும் நிலையில் இருப்பேன்.

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** என் நண்பர் இப்பிரச்சினைக் குறித்து போதிய அளவிற்கு சொல்லி முடித்துள்ளார் என்றும், அவர் தொடரத் தேவையில்லை என்றும் கருதுகிறேன். நாம் அவரது வாதத்தைப் புரிந்துகொண்டுள்ளோம். நாம் இன்று எப்படியும் ஓர் உறுப்பையாவது நிறைவேற்ற வேண்டும்.

**டாக்டர் மனோமோகன் தாஸ்:** அப்படியனால், நான் நிறுத்திக் கொள்கிறேன்.

★ ★ ★

[2]**திரு. அவைத் தலைவர்:** மதிப்பிற்குரிய உறுப்பினர் (திரு. காமத்) அவருக்கான நேர வரையறையை கடந்துவிட்டார். டாக்டர் அம்பேத்கர் நீங்கள் பேச விரும்புகிறீரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** நான் இந்தத் திருத்தங்கள் எதையும் ஏற்றுக் கொள்ளவில்லை.

*(அனைத்துத் திருத்தங்களும் மறுதலிக்கப்பட்டன)*

★ ★ ★

## உறுப்பு 282-B

★ ★ ★

[3]**திரு.ஆர்.கே.சித்வா:** நாங்கள் அமர்ந்து முடிக்க அணியமாய் இருக்கிறோம். நாம் ஏழுட்டு மணிநேரம் அமரலாம்.

**திரு. அவைத் தலைவர்:** அது முடியாது. நாம் எட்டுமணி நேரம் அமர முடியாது. எப்படியிருந்தாலும் நாம் மனிதப் பிறவிகள். இயந்திரங்கள் போல் வேலை செய்ய முடியாது. ஆகவே அது சாத்தியமானதாய் இருக்குமென்று நான் கருதவில்லை. நீங்கள் என்ன சொல்கிறீர்கள் டாக்டர் அம்பேத்கர், இன்று பிற்பகலில் அமருவது சாத்தியம்தானா?

1. அரசமைப்புப்பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர் 7, பக். 1088
2. மேலது பக். 1090.
3. அதே நூல், பக். 1094.

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:*** நான் அமைச்சரவைக் கூட்டத்திலிருந்து ஐந்தரை மணி அளவில் திரும்பிவிட முடியுமென எதிர்பார்க்கிறேன். அதன் பிறகு இரண்டு மணி நேரம் அமர அவை அணியமாய் இருந்தால் நான் அணியமாகவே இருக்கிறேன், ஆனால் நமக்கு ஐந்தரை மணியிலிருந்து வரைவுக்குழுவின் கூட்டம் இருக்கிறது, ஏனென்றால் முன்பே நிறுத்தி வைத்துக்கொண்ட உறுப்புகளை நாம் அணியப்படுத்தி வைத்துக்கொள்ளா விட்டால் தொடர்வது கடினமாக இருக்கும். நாம் ஒரு முடிவை அடைவதற்காக வேறொரு இடத்திற்கு சென்று பிறகு இங்கு வரவேண்டியிருக்கும். அவை விரும்பினால் நாம் வரைவுக்குழுவின் அமர்வை வேறு ஏதேனும் ஒரு நேரத்திற்கு மாற்றிக் கொள்ளலாம்.

★ ★ ★

[1]***திரு. நசிருதீன் அகமது:*** ...... வலிந்து தாக்குதல், அத்துமீறல், செய்நுட்பவகைப்பட்ட அவதூறு, இதுப்போன்ற பல்வேறு குற்றங்கள் உள்ளன. இவை ஒரு தொகுப்பாக்கப்பட்டு அறவகைத் தீயொழுக்கத்தை குறித்திடாதக் குற்றங்கள் என்று வர்ணிக்கப்படுகின்றன. இப்படிப்பட்ட வழக்குகள் அனைத்திலும் அலுவலக அதிகாரி அவரை துரத்தியடிக்க முயலுவாரானால் நாம் கேட்பதெல்லாம், காரணம் காட்ட அவருக்கு ஒரு வாய்ப்பை அளிக்க வேண்டும் என்பதே.

***மாண்புமிகு டாக்டர், பி.ஆர்.அம்பேத்கர்:*** (பம்பாய்: பொது): கூறு 3 ஐ நீக்குவதற்கு திருத்தம் ஏதுமில்லை. உட்கூறு (அ) ஐ நீக்குவதற்கு மட்டுமே உங்கள் திருத்தமுள்ளது.

***திரு. நசிருதீன் அகமது:*** ஆம், நான் இந்தத் திருத்தத்திற்கும் கூட அறிவிப்பு கொடுத்துள்ளேன். திருத்தம் எண் 246 ஐப் பாருங்கள்.

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:*** 282-Bஇன் கூறு (3) ஐ நீக்குவதற்கு திரு. ஜஸ்பத் ராய் கபூரின் திருத்தம் ஒன்று இருக்கிறது.

***திரு. அவைத் தலைவர்:*** மாண்புமிகு உறுப்பினரின் (திரு. நசிருதீன் அகமது) திருத்தம் ஒன்றும் இருக்கிறது.

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** அவர் தொடரலாம். நான் அவரது கவனத்தை ஈர்க்கவே விரும்பினேன்.

---

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர் 8, பக்.1104

[1]**திரு. அவைத் தலைவர்:** நான் திருத்தங்களை வாக்கெடுப்புக்கு விடப்போகிறேன், டாக்டர் அம்பேத்கர், நீங்கள் ஏதேனும் கூற விரும்புகிறீர்களா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** நான் ஓரிரு சொற்கள் கூற விரும்புகிறேன், அய்யா.

திருத்தங்களை முன்மொழிந்து பேசிய பல்வேறு உறுப்பினர்களும் தெரிவித்த விமர்சனங்களை நான் கேட்டதில் அவர்கள் அறவே தனித்தனியான இருவேறு பிரச்சினைகளை தெளிவாக வேறுபடுத்தி காண்பதில் வெற்றியடையவில்லை என்ற முடிவிற்கு நான் வந்திருக்கிறேன்; இவை வேலைநீக்கம் செய்வதற்கான காரணங்களும் ஆகும். அறிவிப்பு கொடுப்பதற்கான காரணங்களும் ஆகும். இந்த உறுப்பு 282-B வேலைநீக்கம் தள்ளுபடி செய்வதற்கான காரணங்களை பற்றியதன்று.

உறுப்பு 282 இன் வழிவகைகளின்படி உரிய சட்டமன்றத்தால் இயற்றப்படக்கூடிய சட்டம் இப்பிரச்சினையை பார்த்துக் கொள்ளும். குடியியல் பணிக்கு அமர்த்தப்பட்ட ஒருவர் என்னென்ன வழக்குகளில் பணிநீக்கம் செய்யப்பட வேண்டும் என்ற பிரச்சினையை நாடாளுமன்றம் இயற்றும் சட்டம் ஒழுங்குபடுத்தும். இந்தப் பிரச்சினையை கையாளுவது இந்த உறுப்பு 282-B இன் நோக்கமல்ல.

நான் முன்பே சொன்னது போல் தன் மீது எடுக்கக் கருதும் நடவடிக்கைக்கு எதிராக காரணம் காட்டுகிற வாய்ப்பு ஒருவருக்கு இருக்கவேண்டுமானால் வேலைநீக்கத்திற்கு முன்பாக அறிவிப்பு கொடுக்க வேண்டும் அல்லவா, இப்படிக் கொடுக்காமலிருப்பதற்கான காரணங்களைப் பற்றியதே இந்த உறுப்பு 282B. இந்த கூறின் உள்நோக்கம் என்னவென்றால் ஒவ்வொரு வழக்கிலும் அறிவிப்பு தரப்படவேண்டும் என்றாலும் அ, ஆ, ஈ ஆகிய உட்கூறுகளில் குறிப்பிடப்பட்டுள்ள மூன்று வழக்குகளில் அறிவிப்பு கொடுக்க தேவையில்லை என்ற பொதுக்கோட்பாட்டை விதிப்பதே இந்தக்கூறின் உட்கருத்து. இந்த உறுப்பு கூறுவதெல்லாம் இவ்வளவே. இந்த உறுப்பு அரசமைப்புச் சட்டத்திற்கு ஓர் இழுக்காகும் அல்லது வெட்கக்கேடாகும் அல்லது அதில் படிந்த கறையாகும் என்று என் மதிப்பிற்

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப். 8, பக்.1112 - 1114.

குரிய நண்பர் திரு.காமத் செய்திருக்கும் விமர்சனம் மிகவும் தவறாகும் என்பது என் கணிப்பு.

**திரு. எச்.வி. காமத்:** (குறுக்கீடு)....

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** குடியியல் சார்ந்த பணியில், பாதுகாப்புக்கும் இடர்காப்புக்கும் நமக்குகிருக்கிற மிகச் சிறந்த வழிவகை அனேகமாய் இதுதான் என்று நான் எண்ணியிருக்க வேண்டும்; ஏனென்றால் அது வேலைநீக்கம் செய்வதற்கான ஆணை யுரிமைக்கு ஓர் அடிப்படையாகன வரம்பெல்லை அதில் அடங்கி யுள்ளது. தன்னை ஏன் வேலை நீக்கம் செய்யக்கூடாது என்று விளக்கு வதற்கான வாய்ப்பை தராமல் எவரையும் வேலைநீக்கம் செய்ய லாகாது என்று அது கூறுகிறது. இப்படிப்பட்ட ஒரு வழிவகை இழுக்கு பயக்கும் என்றால் நான் என் மாண்புமிகு நண்பர் காமத்தின் நேர்மை உணர்வு குறித்து அவரிடமிருந்து மாறுபட்டாக வேண்டும்.

**திரு. எச்.வி. காமத்:** நான் உறுப்புக்கான துணைவிதிகளை குறிப்பிடுகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** துணைவிதிகளுக்கு வருகிறேன்.

கூறு (2) ஐ பொறுத்தவரை நல்லறிவு பெற்றுள்ள ஒவ்வொரு வரும், அரசின் குடியியல் பணியில் ஈடுப்பட்டிருப்பவர்களின் பாது காப்புக்காக வகுக்கப்பட்டிருக்கக்கூடிய மிகச் சிறந்த துணைவிதி இதுவே என்பதை ஏற்றுக்கொள்வார்கள் எ. ரபது குறித்து என் மனத் தில் எவ்வித ஐயமுமில்லை. குற்ற வழக்கு எதிலும் குற்றத் தீர்ப்புப் பெற்றுள்ள எவருக்கும் அறிவிப்பு கொடுக்க தேவையில்லை என்ற பிரச்சினை எழுப்பப்பட்டிருக்கிறது. அங்கேயும் ஒரு தவறு நடந்துள் ளது என்று நான் பணிந்து தெரிவித்தாக வேண்டும். ஏனென்றால் ஒருவருக்கு ஒரு குற்றவியல் குற்றம் புரிந்ததாக குற்றத் தீர்ப்பு வழங்கப்பட்டப்போதிலும் அக்குற்றம் அறவகை தீயொழுக்கத்தை குறிப்பதல்ல என்றால் அவரை அரசுப் பணியிலிருந்து நீக்கம் செய்ய தேவையில்லை என்று ஒரு மாநில அரசு இயற்றும் ஒழுங்குமுறை கள் தாராளமாக வழிவகை செய்யலாம். இவ்வாறு சட்டமியற் றிட நாடாளுமன்றத்திற்கு முழு உரிமையுண்டு. எடுத்துக்காட்டாக

மோட்டார் வாகனச் சட்டப்படி அல்லது ஒரு குறிப்பிட்ட செயலை றஒரு குற்றமாக்கும் விதத்தில் நாடாளுமன்றமோ, மாநிலஅரசோ இயற்றிய ஏதேனும் ஓர் அற்பச் சொற்பமான சட்டத்தின்படி அமைந்த குற்றவியல் குற்றச்சாட்டு ஒவ்வொன்றுமே வேலை நீக்கத்திற்கு காரணமாகிவிட வேண்டும் என்ற கட்டாயமில்லை. என்னென்ன வழக்குகளில் எவ்வித வேலை நீக்கத்திற்கு தேவை இருக்காது என்று கூற நாடளுமன்றத்திற்கு உரிமை இருக்கும். அரசியல் குற்றங்களை விலக்கிட நாடாளுமன்றத்திற்கு உரிமை இருக்கும். இந்தக் கூறு அறிவிப்பு கொடுக்கும் பிரச்சினைப் பற்றி மட்டுமே நேரடியாக சொல்கிறது; நாடாளுமன்றம் அரசியல் தன்மை கொண்ட குற்றங் களுக்கு தண்டனையிலிருந்து விலக்களிக்கலாம்; அறவகை தீயொழுக் கத்தை குறித்திடாத குற்றங்களுக்கு விலக்களிக்கலாம். நாடாளுமன்றத் தின் இந்தச் சுதந்திரத்தில் உட்கூறு(21) கைவைக்கவோ அதனை கட்டுப்படுத்தவோ இல்லை. நான் இதை தெளிவுபடுத்த விரும்பு கிறேன்.

உட்கூறு (ஆ) என்பதைப் பொறுத்தவரை இது இந்திய அர சாங்கச் சட்டத்தின் பிரிவு 240 இலிருந்து அப்படியே எடுத்துக் கொள்ளப் பட்டிருக்கிறது. இந்திய அரசாங்கச் சட்டத்தின் பிரிவு 240 ஐ சேர்ப்பதன் நோக்கம் பணிகளுக்கு பாதுகாப்பளிப்பதே என்பது ஏற்றுக்கொள்ளப்படும் என்று கருதுகிறேன். குடியியல் பணிகளுக்கு பாதுகாப்பு வழங்குவதில் குறியாக இருந்த பிரித்தானியர்களும் கூட உட்கூறு ஆ போன்ற ஒரு துணைவிதியை சேர்ப்பது தேவை யானது என்று கருதினார்கள். ஆகவே, நாம் இதற்குமுன் நடப்பில் லாத புதிய ஒன்றை சேர்த்துவிடவில்லை. உட்கூறு(இ) என்பதைப் பொறுத்தவரை குறிப்பிட்ட சில வழக்குகளில் ஒரு குற்றச்சாட்டை வெளிப்படுத்துவதேக் கூட அரசின் பாதுகாப்பை பாதிக்கக்கூடும் என்று கருதப்பட்டது. ஆகவே, உட்றகூறு (இ)ன்படி குறிப்பிட்ட சில வழக்குகளில் அறிவிப்பு தரப்படாது என்று குடியரசுத் தலைவர் சொல்லிவிடலாம் என்பதற்கு வழிவகை செய்யப்படுகிறது. இது பெரிதும் நன்மை பயக்கும் வழிவகையாகும் என்று நான் கருது கிறேன்; இது உட்கூறு 2 இல் அடங்கியுள்ள வழிவகைகளை நீக்கம் செய்ய குடியரசுத் தலைவருக்கு அகல வழித்திறந்து விடுகிறது என்று வெளிப்படையாக விமர்சிக்கப்பட்டபோதிலும் அரசின் நலன்களை மேல் எனக்கொண்டால் இதை தக்க வைத்துக் கொள்ள வேண்டும் என்ற கருத்தில் எனக்கு நாட்டமுண்டு.

கூறு 3 க்கு வருகிறேன், இது வேண்டுமென்றே சேர்க்கப்பட்டிருக்கிறது. இந்தக்கூறு 3 இல்லை எனக் கொண்டால் என்ன நிலை ஏற்படும்? உட்கூறு (அ) அல்லது (ஆ) அல்லது (இ) இன்படி அறிவிப்புக் கொடுக்கப்பெறாத எவரும் நீதிமன்றத்திற்கு செல்வதற்கும், காரணம்காட்டும் வாய்ப்பைத் தராமல் தன்னை வேலை நீக்கம் செய்துவிட்டார்கள் என்று கூறவும் உரிமையுடையவராக இருப்பார். நிற்க 'மனநிறைவு' என்ற சொல் தொடர்பாக நீதிமன்றங்கள் இரு வேறு கண்ணோட்டங்கள் கொண்டிருக்கின்றன: இது அதிகாரியின் அகவயப்பட்ட மனநிலைதானா அல்லது அதாவது சூழ்நிலைமைகளை பொருத்தமையும் புறவயப்பட்ட நிலையா? (இந்த வகையான ஒரு பிரச்சினையில் நீதிமன்றத்தின் மேலுரிமையை நீக்கவிட்டு, அதிகாரியின் முடிவை இறுதியானதாக்குவதே மேல் என்று கருதப்பட்டது. நியாயமான அறிவிப்புக் கொடுப்பது நடைமுறைச் சாத்தியமில்லை என்று அதிகாரி கருதினாலோ, அல்லது குறிப்பிட்ட சில சூழ்நிலைமைகளில் அறிவிப்புக்கொடுக்கத் தேவையில்லை என்று குடியரசுத் தலைவர் எண்ணினாலோ அதனை கேள்விக்குள்ளாக்க எந்த நீதிமன்றத்தாலும் இயலாது என்று கூறும். இந்தக் கூறு (3)ஐ சேர்க்க வேண்டியதானதற்கு இதுவே காரணம்.

இப்போது நான் மற்றொரு தவறான அச்சத்தையும் போக்க விரும்புகிறேன்: என்னவென்றால் குடியியல் பணித் தொடர்பாக நான் சேர்த்துள்ள வழிவகைகளின்படி எந்தவொரு குடியியல் பணியாளரையும் வேலை நீக்கம் செய்ய தடையற்ற உரிமை அரசாங்கத்திற்கு இருக்கிறது என்றும், கூறு 2 இன் உட்கூறுகள் அ, ஆ, இ ஆகியவற்றை சேர்த்ததால் இந்த அதிகாரம் மேலும் மோசமாக்கப்படுகிறது என்றும் சிலர் நினைக்கின்றனர். இதுவும்கூட ஒரு தவறான அச்சமே என்று தெரிவித்துக்கொள்கிறேன், ஏனென்றால் நாம் முன்னே நிறைவேற்றியுள்ள அரசுப்பணித் தேர்வாணையம் தொடர்பான வழிவகைகளின்படி பணிநிலைமைகள் தொடர்பாக ஓர் அதிகாரி எடுக்கும் எந்தவொரு நடவடிக்கையாலும் பாதிக்கப்படுகிற ஒவ்வொரு குடியியல் பணியாளருக்கும் அரசுப்பணித் தேர்வாணையத்திடம் மேல்முறையீடுச் செய்யும் உரிமை இருக்கும். என்றொரு வழிவகை இருக்கிறது. ஆகவே காரணம் காட்டுவதற்கான வாய்ப்பை அலுவலருக்கு அரசாங்கம் வழங்கியிராத நேர்வுகளில்கூட அரசுப் பணித் தேர்வாணையத்திற்கு போவதற்கும், தனது பணித்தொடர்பாக வகுக்கப்பட்ட விதிகளில் அடங்கிய வழிவகைகளுக்கு மாறாக தன்னை அநீதியான முறையில் வேலைநீக்கம் செய்திருப்பதாக மேல்முறையீடு செய்யவும் அந்த அலுவலருக்கு உரிமை இருக்கும். ஆகவே,

இந்த உறுப்பில் அடங்கிய வழிவகைகள் தொடர்பாக மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் தெரிவித்துள்ள அச்சங்கள் சிறிதும் ஆதாரமற்றவை என்றும் இவை இந்த சட்டத்தின் வழிவகைகளையும், உறுப்பு 282இன் வழிவகைகளையும், அரசுப் பணித்தேர்வாணையம் தொடர்பான வழிவகையையும் தவறாக புரிந்து கொண்டதன் விளைவாக எழுந்தவை என்றும் நான் நினைக்கிறேன்.

***(மொத்தத்தில் 15 திருத்தங்கள் மறுதலிக்கப்பட்டன. டாக்டர் அம்பேத்கரின் மூலத் திருத்தம் - உறுப்பு 282-B ஏற்றுக்கொள்ளப்பட்டு அரசமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது)***

## உறுப்பு 282-C

[1]*திரு. அவைத் தலைவர்:* இந்த உறுப்புக்கு வேறு திருத்தம் ஒன்றுமில்லை. நீங்கள் பேச விரும்பினீர்கள், டாக்டர் தேஷ்முக்.

*டாக்டர் பி.எஸ்.தேஷ்முக்:* அய்யா, பின்வரும் சொற்களை விட்டு விடுதல் தொடர்பாக என் நண்பர் திரு.பிரஜேஷ்வர் பிரசாத் முன்மொழிந்தத் திருத்தத்தை நான் ஆதரிக்கிறேன்:

> "மாநிலங்கள் மன்றமானது கூட்டத்தில் கலந்து கொண்டு வாக்களிக்கும் உறுப்பினர்களில் மூன்றில் இரண்டு பங்கிற்கு குறையாதவர்களின் ஆதரவுடன் தீர்மானம் இயற்றுவதன் மூலம் இப்படிச் செய்வது தேசியநலனுக்கு தேவையானது அல்லது விரும்பத்தக்கது என்று அறிவித்திருந்தால்.''

நான் இதேபோன்ற ஒரு திருத்தம் எண் 250 ஐ முன்மொழிய எண்ணியிருந்தேன். ஆனால் முழுதொத்த திருத்தம் ஒன்று முன்மொழியப்பட்டிருப்பதால் இப்போது அதனை முன்மொழியும் எண்ணம் எனக்கில்லை. இந்த வழிவகையை என்னால் புரிந்துக்கொள்ள இயலவில்லை. எங்குமே எந்தவொரு முக்கிய பிரச்சினையிலும் முன்முயற்சியான உரிமை மையநாடாளுமன்றத்தில் மக்களவைக்கு தரப்பட்டுள்ளதேத் தவிர வேறு எந்த அவைக்கும் விட்டுவைக்கப்படவில்லை. ஆனால் என்னால் அறிந்து கொள்ளவும், தெரிந்து கொள்ளவும் முடிந்த வரை முதல்முறையாக இங்குதான் நாம் முன்முயற்சிறயை மாநிலங்கள் மன்றத்திற்கு வழங்குகிறோம். அய்யா, மையப் பணிகள் விரும்பத்தக்கதவையாகவோ, விரும்பத்தகாதவையாகவோ உள்ளன. விரும்பத்தக்கவை என்றால் அவற்றை தொடங்கும் வழியில் ஏற்படுத்தப்படும்

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப். 8, பக். 1119.

இத்தனை தடைகளால் முடக்கப்படக்கூடாது. விரும்பத்தகாதவை என்றால் அவற்றிற்காக எந்தவித வழிவகையும் இருந்திருக்கக்கூடாது. மேன்மேலும் அனைத்திந்தியப் பணிகளை ஏற்படுத்தும் போக்கு இருக்கும் என்று நான் எண்ணுகிறேன், ஆகவே அவற்றை சேர்ப்பதை இத்துணை கடினமாக்குவதில் அர்த்தம் ஒனறுமில்லை என்பது என் கருத்து. மாநிலங்கள் மன்றத்தில் கலந்து வாக்களிக்கும் உறுப்பினர் களில் மூன்றில் இரு பங்கிற்கு குறையாதவர்களின் ஆதரவை இந்த முன்மொழிவு பெறவேண்டியது ஏன்? இந்தச் சொற்களின் நோக்கம் மாநிலங்களின் மன்றம் என்னும் பயனற்ற அவைக்கு ஏதோ ஒரு கண்ணியம் அல்லது ஏதோ ஒரு பணியை சார்த்துவது அல்லவென் றால் அவை கிஞ்சிற்றும் தேவையற்றவை என்று கருதுகிறேன். இப்படிப்பட்ட ஒரு முக்கிய பிரச்சினையில் முன்முயற்சியை மாநிலங் கள் மன்றத்திற்கு தரவேண்டும் என்னும் இந்த சிந்தனையோட்டத் தின் அடிநாதமாயிருக்கும் ஒரே கவலை இதுதான் எனத்தெரிகிறது. இந்த சொற்களுக்கு பயனுள்ள நோக்கம் ஏதுமிருப்பதாக நான் கருத வில்லை; ஆகவே அவற்றை விட்டுவிட முன்மொழிகிறேன்.

***திரு. அவைத் தலைவர்:*** டாக்டர் அம்பேத்கர் நீங்கள் ஏதேனும் கூற விரும்புகிறீர்களா?

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** ஒரு வார்த்தை மட்டுமே. திருத்தத்தை முன்மொழிந்த திரு. பிரஜேஷ்வர் பிரசாத் ஆகட்டும், அதனை ஆதரித்த என் நண்பர் டாக்டர் தேஷ்முக் ஆகட்டும் உறுப்பு 282இன் வழிவகைகளை கருத்தூன்றி படித்திருப்பதாக தெரியவில்லை. அரசின் கீழமைந்த பணிகளுக்கு ஆட்சேர்க்கும் ஆணையுரிமை மைய அரசுக்கு இருக்கும் என்றும் மாநில அரசுப் பணிக்கு ஆட்சேர்ப்பு செய்வதற்கும் அப்பணியில் இருப்பவர்களுக் கான பணிநிலைமைகளை விதிப்பதற்கும் ஒவ்வொரு மாநில அரசும் உரிமை பெற்றிருக்கும் என்று உறுப்பு 282 முதலில் விதித் துரைக்கிறது. ஆகவே நாம் உறுப்பு 282 ஐக் கொண்டு முழுமையான மேலுரிமையை வழங்கியுள்ளோம். 282 மாநிலங்களுக்கு வழங்கும் தன்னாட்சியை 282C ஓரளவிற்கு பறித்துக் கொள்கிறது. அடுத்து தன்னாட்சியின் மீது படையெடுக்க வேண்டுமென்றால் அவ்வாறு செய்வதற்கு மைய அரசுக்கு சற்றே ஆணையுரிமை வழங்கப்பட்டிருக்க வேண்டும் என்பது கண்கூடு; உறுப்பு 282ஐக் கட்டுப்படுத்த மைய அரசுக்கு ஆணையுரிமை வழங்குவதற்குள்ள ஒரே வழிமுறை மேலவை உறுப்பினர்களில் மூன்றில் இரண்டு பங்கினரின் ஒப்புதலை

பெறுவதுதான். உறுப்பு 282 இல் குறிப்பிடப்பட்ட ஒரே அமைப்பு மேலவைதான். கருதுகோள் வகையில் மேலவையானது மாநிலங்களை பிரதிநிதித்துவப்படுத்துகிறது. ஆகவே அந்த அவை உறுப்பினர்களின் தீர்மானம் மாநிலங்களால் தரப்பட்ட ஆணையுரிமைக்கு ஒப்பாகும். அதனால்தான் இந்தச் சொற்கள் உறுப்பு 282Cயில் சேர்க்கப்பட்டுள்ளன.

*(டாக்டர் அம்பேத்கரின் முன்மொழிவு ஏற்றுக்கொள்ளப்பட்டது. பிரஜேஷ்வர் பிரசாத்தின் திருத்தம் நிராகரிக்கப்பட்டது உறுப்பு 282 C அரசமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.)*

## உறுப்பு 283

[1]**திரு. அவைத் தலைவர்:** அடுத்து நாம் உறுப்பு 283க்கு வருகிறோம், டாக்டர் அம்பேத்கர்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அய்யா, நான் முன்மொழிவது:

> "திருத்தங்கள் பட்டியலின் (தொகுதி II) திருத்தம் எண் 3037க்குப் பதிலாக பின்வருவதை இடம்பெறச்செய்யலாம்:
>
> உறுப்பு 283க்குப் பதிலாக பின்வரும் உறுப்பை இடம்பெறச்செய்யலாம்.
>
> மாறுங்கால வழிவகை — 283. இந்த அரசமைப்புச் சட்டத்தின்படி இதற்கென்று வேறு வழிவகைகள் செய்யப்படும்வரை, இந்த அரசமைப்புச் சட்டம் தொடங்கப்போகும் நேரத்தில் செயலில் இருப்பவையும் இந்த அரசமைப்புச் சட்டம் தொடங்கியப் பிறகு அனைத்திந்தியப் பணி என்ற முறையிலோ ஒன்றியம் அல்லது மாநில அரசின் கீழமைந்த பணி அல்லது பதவி என்ற முறையிலோ தொடர்ந்து நடப்பிலிருப்பவையுமான எல்லாச்சட்டங்களும், இந்த அரசமைப்புச் சட்டத்தின் வழிவகைகளுக்கு முரண்படாத அளவில் தொடர்ந்து செயலில் இருக்கும்.

இது முழுக்க முழுக்க ஒரு மாறுங்கால வழிவகையாகும்.

*(முன்மொழிவு ஏற்றுக்கொள்ளப்பட்டது. திருத்தம் 283 அரசமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது)*

## உறுப்பு 302

[1]**திரு. அவைத் தலைவர்:** அடுத்து நாம் உறுப்பு 302 ஐ எடுத்துக் கொள்வோம். டாக்டர் அம்பேத்கர்.

1. அரசமைப்புப்பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர் 8, பக். 1119.
2. அதே நூல், பக். 1119-20.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அய்யா, நான் முன்மொழிவது:

''உறுப்பு 302 இன் கூறு 1 இல் 'ஆளுநர்' என்ற சொல்லுக்குப் பிறகு 'அல்லது ஆட்சியாளர்' என்ற சொல்லை நுழைக்கலாம்.

'உறுப்பு 302 இன் கூறு(1) க்கான இரண்டாம் துணைவிதியில் 'இந்திய அரசாங்கத்துக்கோ, ஒருமாநில அரசாங்கத்துக்கோ எதிராக இந்த அரசமைப்புச் சட்டத்தின் பகுதி X அத்தியாயம் III இல் குறிப்பிடப்படுவதுப் போன்ற சட்ட நடவடிக்கைகளை கொண்டு வருதல் என்ற சொற்களுக்கும் எண்களுக்கும் பதிலாக 'இந்திய அரசாங்கத்துக்கோ ஒரு மாநில அரசாங்கத்துக்கோ எதிராக தக்க சட்டநடவடிக்கைகளைள கொண்டு வருதல் என்ற சொற்களை நுழைக்கலாம்

'உறுப்பு 302 இன் கூறு (3) இல் 'ஆளுநர்' என்ற சொல்லுக்குப் பிறகு 'அல்லது ஆட்சியாளர்' என்ற சொற்களை நுழைக்கலாம்''

'உறுப்பு 302 இன் கூறு (4) இல்

அ. 'ஆளுநர்' என்ற சொல் இடம்பெறுகின்ற முதலாவது இடத்தில் அச்சொல்லுக்குப் பிறகு 'அல்லது ஆட்சியாளர்' என்ற சொற்களை நுழைக்கலாம்.

ஆ. 'ஆளுநர் என்ற சொல் வருகிற இரண்டாம் இடத்தில் அச்சொல்லுக்குப் பதிலாக 'ஆளுநர் அல்லது ஆட்சியாளர்' என்ற சொற்களை இடம்பெறச் செய்யலாம்.

இ. 'ஆளுநர்' என்ற சொல் இடம்பெறுகின்ற மூன்றாவது இடத்தில் 'அல்லது ஆட்சியாளர்' என்ற சொற்களை நுழைக்கலாம்.

**மதிப்பிற்குரிய உறுப்பினர் ஒருவர்:** 13 என்னவாயிற்று அய்யா?

**திரு. அவைத் தலைவர்:** அது வரிசைத் தாளில் இல்லை. அது நிறுத்தி வைத்துக்கொள்ளப்படுகிறது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** திருத்தங்கள் 14, 16, 17, 18 ஆகியவை முழுக்க, முழுக்க வரைவுத் திருத்தங்களாகும். அனேகமாக விளக்கம் தேவைப்படுகின்ற ஒரே திருத்தம் எண் 15 ஆகும். இந்தத் திருத்தத்தை கொண்டு வருவதற்கான காரணம் அத்தியாயம் IIIஐ சுட்டும் குறிப்பின்பொருள் உண்மையில் உறுப்பு 274ஐ சுட்டும் குறிப்பே ஆகும் என்பதே. உறுப்பு 274 அரசாங்கத்துக்கு எதிராக வழக்குத்தொடுக்கும் உரிமை தொடர்பானதாகும், அந்த உறுப்பு இரு பகுதிகளாக பிரிக்கப்படுகின்றது. ஒரு பகுதி இந்த அரசமைப்புச் சட்டம் தொடங்கும் நாளில் உள்ளவாறான வழக்குத் தொடுக்கும் உரிமை தொடர்பானதாகும். மற்றொரு பகுதி அரசாங்

கத்துக்கு எதிராக வழக்குத் தொடுக்கும் உரிமை தொடர்பாக மேற்கொண்டு வழிவகை செய்ய நாடாளுமன்றத்துக்குள்ள அதிகாரம் பற்றியதாகும். சொற்கள் அங்கிருப்பதுப் போலவே நீடித்திருக்குமானால், அரசாங்கத்திற்கெதிராக வழக்கு தொடுக்கும் உரிமையானது சட்டம் தொடங்கும் நாளில் இருக்கக்கூடியது போலவே 274 இன் அடிப்படையில் இருக்கும். 'தக்க சட்ட நடவடிக்கைகள்' என்ற சொற்களை இடம்பெறச் செய்வதன் நோக்கம் சட்டம் தொடங்கும் நாளில் இருக்கக்கூடியதுபோல் வழக்குத் தொடுக்கும் உரிமையை அது குறிக்க வேண்டும் என்பது மட்டுமல்ல. அப்போதைய அரசாங் கத்துக்கெதிராக நாடாளுமன்றம் சட்டம் கொண்டு வழிவகை செய்யக் கூடிய அடுத்தடுத்த நடவடிக்கைகளுக்கும் அது பொருந்த வேண்டும் என்பதே. இந்தத் திருத்தத்திற்கான காரணம் இதுவே. மற்றொன்றையும் நான் அவைக்குச் சொல்லலாம்; இந்தத் திருத்தம் நிறைவேற்றப் படுமானால் உறுப்பு 202 இல் தொடர்விளைவான சிறிய திருத்தம் ஒன்றை நானும் கொண்டு வரவேண்டி இருக்கும்.

★ ★ ★

[1]**திரு. அவைத் தலைவர்:** டாக்டர் அம்பேத்கர் உறுப்பு 302இன் கூறு(1) இல் 'கடமைகள்' என்ற சொல்லுக்குப் பதிலாக 'செயல்பாடுகள்' என்ற சொல்லை இடம்பெறச் செய்யலாம் என்று திரு.காமத் முன்மொழிந்த ஒரு திருத்தம் இருக்கிறது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** 'செயல்பாடுகள்' என்ற சொல் ஒரு விரிவான ஒன்று. அதிகாரங்கள் கடமைகள் இரண்டும் அதில் அடங்கும். நாம் செய்யமுடியும் எல்லாச் செயல்பாடுகளையும் உள்ளடக்குகிற அதிகாரங்களும் கடமைகளும் என்று நாம் சொல்லியுள்ளோம்; நமக்கிருக்கக்கூடிய எல்லா செயல்பாடுகளும் அதில் அடங்கும். இதுபோன்ற எந்தவகையான திருத்தமும் தேவையற்றது.

**திரு. அவைத் தலைவர்:** பிரச்சினை இதுதான்: 'உறுப்பு 302 கூறு(1) இல் 'கடமைகள்' என்ற சொல்லுக்குப் பதிலாக 'செயல்பாடுகள்' என்ற சொல்லை இடம்பெறச் செய்யலாம்.

திருத்தம் மறுதலிக்கப்பட்டது.

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர் 8, பக். 1122

**திரு. அவைத் தலைவர்:** இந்த ஒருதிருத்தம் மட்டுமே முன்மொழியப்பட்டுள்ளது. நான் இப்போது டாக்டர் அம்பேத்கரின் திருத்தத்தை வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

**திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி:** எல்லாவற்றையும் மொத்தமாக சேர்த்து வாக்கெடுப்புக்கு விடலாம்.

**திரு. அவைத் தலைவர்:** உறுப்பினர்கள் விரும்பினால் நான் அவற்றைத் தனித்தனியாக வாக்கெடுப்புக்கு விடுவேன். சரி. நான் அவற்றை ஒன்றாகச் சேர்த்து வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அய்யா, நான் முன்மொழிவது:

*''உறுப்பு 243 இன் மேலுள்ள தலைப்பையும் உறுப்புகள் 243, 244, 245 ஆகியவற்றையும் விட்டுவிடலாம்.''*

அதனை வாக்கெடுப்புக்கு விடலாம். மற்றவற்றைத் தனியாக எடுத்துக் கொள்ளலாம். அது பிறவற்றை சாராமல் தனித்து இயங்கக் கூடிய ஒன்று.

(முன்மொழிவு ஏற்றுக்கொள்ளப்பட்டது.)

*உறுப்பு 243க்கு மேலுள்ள தலைப்பும், உறுப்புகள் 243, 244, 245 ஆகியவையும் நீக்கப்பட்டன.*

## பகுதி XA

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அய்யா, நான் முன்மொழிவது:

'பகுதி Xக்குப் பிறகு பின்வரும் புதிய பகுதியை நுழைக்கலாம், அதாவது -

பகுதி XA

இந்திய ஆட்சிப் பரப்புக்குள் வர்த்தகம், வாணிகம், இடைத் தொடர்பு ஆகியவை.

இந்திய ஆட்சிப்பரப்பு எங்கிலும் வர்த்தகம், வாணிகம், இடைத்தொடர்பு ஆகியவற்றின் சுதந்திரம்.

274 - A இந்திய ஆட்சியப்பரப்பு எங்கிலும் இந்தப் பகுதியின் மற்ற வழிவகைகளுக்குட்பட்டு வர்த்தகம், பெருவாணிகம், இடைத் தொடர்பு ஆகியவை தடையின்றி சுதந்திரமாக நடைபெறும்.

274-B நாடாளுமன்றமானது இந்த அரசமைப்புச் சட்டத்தால் வழங்கப்படும் அதிகாரங்களை பயன்படுத்தி இயற்றப்படும் சட்டம் கொண்டு ஒரு மாநிலத்துக்கும் மற்றொரு மாநிலத்துக்குமிடையில் அல்லது இந்திய ஆட்சிப் பரப்பின் எந்த ஒரு பகுதிக்குள்ளும்

வர்த்தகம், வாணிகம், இடைத்தொடர்பு ஆகியவற்றின் மீது சட்டம் கொண்டுகட்டுத் தளைகள் விதித்திட நாடாளுமன்றத்திற்குள்ள அதிகாரம்.

வர்த்தகம் வாணிகம், அல்லது இடைத்தொடர்பின் சுதந்திரத்தின் மீது பொதுநலனை முன்னிட்டு தேவைப்படக்கூடிய கட்டுத் தளைகள் விதிக்கலாம்.

### 274-C1. இந்த அரசமைப்புச் சட்டத்தின் உறுப்பு

வர்த்தகம், வாணிகம் ஆகியவை தொடர்பாக ஒன்றியம் மற்றும் மாநிலங்களின் சட்டமியற்றும் அதிகாரங்களுக்குக் கட்டுத்தளைகள்

274-C1. இந்த அரசமைப்புச் சட்டத்தின் உறுப்பு 274-Bஇல் என்ன கூறப்பட்டிருப்பினும் ஏழாம் அட்டவணையிலுள்ள பட்டியல்களில் எந்தவொன்றிலும் வர்த்தகம், அல்லது வாணிகம் தொடர்பாக இடம்பெற்றுள்ள எந்தவொரு பதிவையும் பயன்படுத்தி ஒரு மாநிலத்திற்கு மேல் மற்றொரு மாநிலத்திற்கு முன்னுரிமை வழங்குகிற அல்லது முன்னுரிமை வழங்கும் ஆணையுரிமையளிக்கிற அல்லது ஒரு மாநிலத்துக்கும் மற்றொரு மாநிலத்துக்குமிடையே எவ்வித பாகுபாடும் செய்கிற அல்லது எவ்விதப் பாகுபாடும் செய்யும் ஆணையுமளிக்கிற எந்தவொரு சட்டத்தையும் இயற்றிட நாடாளுமன்றத்துக்கோ ஒரு மாநில சட்டமன்றத்துக்கோ அதிகாரம் இருக்காது.

(2) இந்திய ஆட்சிப்பரப்பின் எந்தவொரு பகுதியிலும் சரக்குகளின் கட்டுப்பாட்டிலிருந்து எழக்கூடிய நிலைமையை சமாளிக்கும் நோக்கத்திற்காக மேற்கூறியதுபோல் முன்னுரிமை ஏதும் வழங்குவது அல்லது பாகுபாடு ஏதும் செய்வது அவசியம் என்று சட்டம் கொண்டு அறிவிக்கப்படுமானால் அப்படிப்பட்ட சட்டம் ஏதும் இயற்றவிடாமல் இந்த உறுப்பின் கூறு (1) இல் கூறப்பட்டுள்ள எதுவும் நாடாளுமன்றத்தை தடுத்திடாது.

மாநிலங்களுக்கிடையில் வர்த்தகம், வாணிகம், இடைத்தொடர்பு ஆகியவை மீது கட்டுத்தளைகள்

274-D. இந்த அரசமைப்பு சட்டத்தின் உறுப்பு 274 அல்லது 274-C இல் என்ன கூறப்பட்டிருப்பினும் ஒரு மாநிலச் சட்டமன்றம் சட்டம் கொண்டு -

(அ) அந்த மாநிலத்தில் தயாரிக்கப்பட்ட அல்லது உற்பத்தி செய்யப்பட்ட சரக்குகளுக்கு விதிக்கப்படும் எந்த வரியையும் வேறு மாநிலங்களிலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட அதேபோன்ற சரக்குகளுக்கு விதிக்கலாம்; ஆனால் இப்படி இறக்குமதி செய்யப்பட்ட சரக்குகளுக்கும் இப்படி தயாரிக்கப்பட்ட அல்லது உற்பத்தி செய்யப்பட்ட சரக்குகளுக்கும் இடையில் பாகுபாடு செய்யக் கூடாது;

(ஆ) அந்த மாநிலத்துடன் அல்லது அந்த மாநிலத்துக்குள் நடைபெறும் வர்த்தகம், வாணிகம், அல்லது இடைத்தொடர்பின் சுதந்திரத்திற்கு பொதுநலனை முன்னிட்டு தேவைப்படக்கூடிய, நியாயமான கட்டுத்தளைகள் விதிக்கலாம். ஆனால் குடியரசுத் தலைவரின் முன் ஒப்புதல் பெறாமல் இந்த உறுப்பின் கூறு ஆ-இன் நோக்கத்திற்காக மாநிலச் சட்டமன்றத்தில் சட்டமுன்வடிவு அல்லது திருத்தம் ஏதும் அறிமுகம் செய்வதோ முன்மொழிவதோ கூடாது. இந்நோக்கத்திற்காக மாநிலத்தின் ஆளுநர் அவசர சட்டம் ஏதும் பிறப்பிப்பதும் கூடாது.

274 முதல் 274 Dமுடிய உள்ள உறுப்புகளின் வழிவகைகளை நிறைவேற்றுவதற்கான ஆணையத்தை அமர்த்துதல்.

274 E. நாடாளுமன்றம் இந்த அரசமைப்புச் சட்டத்தின் உறுப்புகள் 274-A,274-B, 274-C, 274-D ஆகியவற்றின் நோக்கங்களை நிறைவேற்றுவதற்கு பொருத்தமென்று தான் கருதுகிற ஆணையத்தை சட்டம் கொண்டு அமர்த்தலாம். இவ்விதம் அமர்த்தப்படும் ஆணையத்துக்கு தேவை என்று தான் கருதுகிற அதிகாரங்களையும் கடமைகளையும் உரித்தாக்கலாம்.''

அய்யா, நான் இக்கட்டத்தில் செய்ய வேண்டியதெல்லாம் முதலில் வர்த்தகம் மறறும் வாணிகச் சுதந்திரம் தொடர்பான உறுப்புகள் வரைவு அரசமைப்புச் சட்டத்தின் வெவ்வேறு பகுதிகளில் அங்கொன்றும் இங்கொன்றுமாகச் சிதறிக்கிடந்தன என்பதை அவைக்குத் தெரிவிப்பதே ஆகும். அடிப்படை உரிமைகளின் பட்டியலில் ஓர் உறுப்பு இடம்பெற்றது. அதாவது உறுப்பு 16 ஆனது வர்த்தகமும், வாணிகமும் நாடாளுமன்றம் இயற்றக்கூடிய சட்டம் எதற்கும் உட்பட்டு இந்திய ஆட்சி பரப்பெங்கிலும் தடையின்றிச் சுதந்திரமாக இருக்கும் என்று கூறியது. மற்ற உறுப்புகள், அதாவது **243, 244, 245** ஆகியவை வரைவு அரசமைப்புச் சட்டத்தின் வேறு ஒரு பகுதியில் சேர்க்கப்பட்டன. அவையின் உறுப்பினர்களில் பலரும் உறுப்புகள் 243, 244, 245 ஆகியவற்றின் விளைவுகளைப் புரிந்து கொள்ளக்கூடிய நிலையில் இல்லை என்பது விவாதப்போக்கில் தெரியவந்தது. ஏனென்றால் இந்த உறுப்புகள் உறுப்பு 16 இலிருந்து தொடர்பற்று விலகியிருந்தன. ஆகவே, வர்த்தகம் மற்றும் வாணிகச் சுதந்திரம் தொடர்பான எல்லா வழிவகைகளையும் அவைக்கு முழுமையாகப் படம் பிடித்துக் காட்டும் பொருட்டு வரைவு அரசமைப்புச் சட்டத்தின் வெவ்வேறு பகுதிகளில் அங்கொன்றும் இங்கொன்றுமாகச் சிதறிக்கிடந்த இந்த வெவ்வேறு உறுப்புகள் அனைத்தையும் ஒற்றைப் பகுதியாக ஒன்று சேர்ப்பதும், அவற்றை வரிசை முறைப்படி எடுத்துரைப்பதும் நல்லது என்று வரைவுக்குழு கருதியது. இதனால் இந்தியா எங்கிலும் வர்த்தகம் மற்றும் வாணிகச் சுதந்திரம் தொடர்பான வழிவகைகள் என்ன என்பதைக் கண்டவுடன் அறிந்து கொள்ள இயலும். இந்தப் பகுதியில் அடங்கியிருக்கும் வழிவகைகளின்படி வர்த்தகத்தையும் வாணிகத்தையும் துளிகூடத் தடையற்றதாக்குவது நோக்கமில்லை, வர்த்தகமும் வாணிகமும் இந்தியா எங்கிலும் தடையின்றிச் சுதந்திரமாக நடைபெறும் என்ற அடிப்படை வழிவகையிலிருந்து விலகிச் செல்வதற்கான எந்தவோர் அதிகாரத்தையும் நாடாளுமன்றம், மாநிலங்கள் ஆகிய இரண்டிடமிருந்தும் பறித்துக் கொள்வதும் நோக்கமில்லை என்பதையும் நான் கூற விரும்புகிறேன்.

வர்த்தகம் மற்றும் வாணிகச் சுதந்திரமானது குறிப்பிட்ட சில வரம்புத் தடைகளுக்கு உள்ளாக்கப்பட்டுள்ளது. இந்த வரம்புத்தடைகளை நாடாளுமன்றமோ பல்வேறு மாநிலங்களின் சட்டமன்றங்களோ விதிக்கலாம். வர்த்தகம் மற்றும் வாணிகச் சுதந்திரத்தில் தலையீட நாடாளுமன்றத்துக்குள்ள அதிகாரத்தில் அடங்கியுள்ள வரம்புத் தடையானது இந்திய ஆட்சிப் பரப்பின் எந்தவொரு பகுதியிலும் சரக்குகளின் தட்டுப்பாட்டிலிருந்து எழக்கூடிய நேர்வுகளுக்கு மட்டுமே பொருந்தும், மாநிலங்களைப் பொறுத்தவரை பொது நலனைக் காரணமாய்க் கொண்டு அதனை நியாயப்படுத்தியாக வேண்டும் என்ற உண்மைக்கு உட்பட்டதாகும் இது. பொதுநலனுக்காக வர்த்தகம் மற்றும் வாணிகச் சுதந்திரத்தில் தலையிடும் மாநிலங்களின் நடவடிக்கையும் வர்த்தகம் மற்றும் வாணிக சுதந்திரத்தைப் பாதிக்கிற எந்தவொரு சட்ட முன்வடிவும் குடியரசுத் தலைவரிடம் முன் ஒப்புதல் பெற்றிருக்க வேண்டும் என்ற ஒரு நிபந்தனைக்கு உட்பட்டதாயிருக்கும். மற்றபடி மாநிலம் இப்படிப்பட்ட சட்டமியற்றுதலை மேற்கொள்ளும் நிலையில் இருக்காது. உறுப்பு 274-E என்பது அமெரிக்க ஐக்கிய நாடுகளில் இருப்பதுபோல் மாநிலங்களிடை ஆணைக் குழுவைப் போன்ற ஓர் ஆணையத்தை நிறுவிட நாடாளுமன்றத்திற்கு வாய்ப்பளிக்கும் ஓர் உறுப்பே ஆகும். இப்படிப்பட்ட ஆணையம் எதையும் திட்டவட்டமாகக் குறிப்பிடாமல் பிரச்சினையை நீக்குப்போக்கான நிலையில் விட்டு விடுவதே விரும்பத்தக்கது என்று கருதப்படுகிறது. இதனால் நாடாளுமன்றம் தான் பொருத்தமெனக் கருதக்கூடிய எவ்வகை ஆணையத்தையும் நிறுவுவதற்குச் சுதந்திரமுடையதாயிருக்கும்.

விவாதப் போக்கில் மேற்கொண்டு கேள்விகள் ஏதும் எழுப்பப்படுமானால் தேவையான விளக்கத்தை நான் மகிழ்ச்சியுடன் அளிப்பேன்.

★ ★ ★

## உறுப்பு 274-A

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அவைத் தலைவர் அவர்களே, என் நண்பர்கள் திரு.டி.டி.கிருஷ்ணமாச்சாரியும், திரு. அல்லாடி கிருஷ்ணசுவாமி அய்யரும் சொல்லியிருப்பதற்கு மேல் நான்

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர் 8, பக். 1142

பயனுள்ள முறையில் கூடுதலாக எதுவும் கூறமுடியும் என்று கருத வில்லை.

*(மூன்று திருத்தங்களும் மறுதலிக்கப்பட்டன. உறுப்பு 274-A அரசமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது. - பதிப்பாசிரியர்)*

## உறுப்பு 264

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்** (பம்பாய்: பொது): அய்யா, நான் முன்மொழிவது:

மாநிலத்தின் வரி விதிப்பிலிருந்து ஒன்றியத்தின் சொத்துக்கு விலக்களித்தல்.

''உறுப்பு 264க்குப் பதிலாகப் பின்வரும் உறுப்பை இடம்பெறச் செய்யலாம்:

264.(1). ஒரு மாநில அரசு, அல்லது ஒரு மாநிலத்திற்குட்பட்ட எந்த ஓர் ஆணையமும் விதிக்கிற எல்லா வரிகளிலிருந்தும் ஒன்றியத்தின் சொத்துக்கு விலக்களிக்கப்படும்.

(2). இந்த உறுப்பின் கூறு (1) இல் என்ன கூறப்பட்டிருப்பினும், மாநிலத்துக்குட்பட்ட எந்தவோர் உள்ளாட்சி ஆணையமும் ஒன்றியத்தின் எந்த ஒரு சொத்தின்மீதும் அச்சொத்து இந்த அரசமைப்பு தொடங்கப்போகும் நேரத்தில் விதிப்புக்குரியதாய் இருந்த அல்லது விதிப்புக்குரியதாய்க் கருதப்பட்ட எந்தவொரு வரியையும் - அந்த வரி தொடர்ந்து அந்த மாநிலத்தில் விதிக்கப்பட்டுக் கொண்டிருக்கும் வரை - விதிக்கத் தடையில்லை; நாடாளுமன்றம் சட்டம் கொண்டு வேறுவிதமாக வழிவகை செய்யும்வரை இந்த நிலை தொடரும்.

விவாதம் ஏதும் இருக்குமானால் திருத்தங்கள் முன்மொழியப் பட்ட பிறகு பேசுவேன்.

★ ★ ★

[2]**பண்டித லட்சுமி காந்த் மைத்ரா:** 1941 ஆம் ஆண்டுச் சட்டத்தின்படி வட்டார வரிகள் தொடர்பாக அரசாங்கத்தின் அறிவிக்கை இருக்குமானால் அவற்றைத் தண்டமுடியும். ஆனால் வரிகள் மாற்றியமைக்கப்பட்ட வடிவத்திலிருக்கும். வழங்கப்படும் சேவைகளே இதில் அளவுகோலாகும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நீங்கள் ஐந்து மணித்துளிகளுக்கு மேல் எடுத்துக் கொண்டுள்ளீர்கள்.

★ ★ ★

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர் 9, பக்.1147.
2. மேற்படி அதே நூல், பக். 1153.

[1]**திரு. சீமன்லால் சக்குபாய் ஷா:** ஆகவே, இந்த இரு பிரச்சினைகளையும் பரிசீலிக்கும்படி டாக்டர் அம்பேத்கரை நான் வேண்டிக் கேட்டுக்கொள்கிறேன், அதாவது 1. உறுப்பு 266 இல் இது தேவையில்லையா...

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** நாம் இப்போதைக்கு 264, 265 ஆகியவற்றைப் பரிசீலித்துக் கொண்டிருக்கிறோம். நாம் உறுப்பு 266க்கு வரும்போது அது குறித்துப் பரிசீலிக்கலாம்.

★ ★ ★

[2]**திரு. அவைத் தலைவர்:** கருத்துக் கூறுகள் அவையின் முன் வைக்கப்பட்டுள்ளன. டாக்டர் அம்பேத்கர் இப்போது விவாதத்திற்குப் பதிலளிப்பார்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அய்யா, முன்மொழியப்பட்ட உறுப்பு 264 இன் கூறு 2 இல் அடங்கியுள்ள வழிவகைகளை முதலில் குறிப்பிடுவேன். இந்தக்கூறு 2 இன் நோக்கம் நடப்பிலுள்ள ஏற்பாட்டைக் காத்துவருவதே என்பது ஏற்றுக்கொள்ளப்படும் என நினைக்கிறேன். ஆகவே, கூறு(2) இன் வழிவகைகளின்படி இந்த அரசமைப்புச் சட்டம் தொடங்கப்போகும் நேரத்தில் ஒன்றியத்துக்குச் சொந்தமாயிருக்கும் சொத்துகள் மீது, அல்லது இந்த வரிகளை விதிப்பதற்கு ஏதுவான அல்லது ஏதுவானதென்று கருதப்படுகிற சொத்தின்மீது குறிப்பிட்ட எந்த வரியும் விதித்துக் கொண்டிருக்கிற நகராட்சிகள் தொடர்ந்து அந்த வரிகளை விதித்து வரும். கூறு 2 செய்வதெல்லாம் இப்போது விதிக்கப்படுகின்ற வரிகளின் இயல்பைப் பரிசீலிக்க நாடாளுமன்றத்திற்கு ஆணையுரிமை இருக்க வேண்டும் என்பதே. ''நாடாளுமன்றம் சட்டம் கொண்டு வேறுவிதமாக வழிவகையும் செய்யும் வரை'' என்னும் விலக்குக் கூறினைத் தவிர கூறு (2) இல் கூடுதலாக ஏதுமில்லை. ''நாடாளுமன்றம் வேறுவிதமாக வழிவகை செய்யும்வரை'', நடப்பிலிருக்கிற உள்ளாட்சி அமைப்புகள் அவை நகராட்சிகளாக இருந்தாலும் சரி, அல்லது வட்டாரக்கழகங்களாக இருந்தாலும் சரி, மைய அரசின் சொத்துகள் மீது தொடர்ந்து வரிவிதிக்கும். ஆகவே, நடப்பிலுள்ள ஏற்பாட்டைப் பொறுத்தவரை உறுப்பு 264 இல் அடங்கியுள்ள வழிவகைககளோடு பூசல் ஏதும் இருக்க முடியாது.

---

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதிIX, 1949 செப்டெம்பர்9, பக். 1155
2. மேலது, பக்.1157 - 1160.

இங்கு எழக்கூடிய ஒரே கேள்வி என்னவென்றால், கூறு (2) வழங்கும் உரிமை அறுதியானதாக இருக்க வேண்டுமா, நாடாளு மன்றம் வேறு விதமாக வழிவகை செய்யும் வரை அதில் அடங்கிய விலக்கு விதிக்கு உட்பட்டதாக இருக்க வேண்டுமா என்பதே. இந்தப் பிரச்சினை விவாதிக்கப்பட்ட வேறோர் இடத்தில் எடுத்துரைத்த சில வாதங்களை அவையின் பரிசீலனைக்கு முன்வைத்தேன்.

**பண்டித ஹிருதய்நாத் குன்ஸ்ரு** (ஐக்கிய மாகாணங்கள்: பொது): என் மாண்புமிகு நண்பர் குறிப்பிடுகிற வேறு இடம் எது? இந்தப் பேரவைக்கு வேறு பிரிவு ஏதும் இருக்கிறதா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அது சொல்லக் கூடாததாகும். ஆகவேதான் நான் 'வேறோர் இடம்'' என்று சொல் கிறேன்.

நான் அங்கு முன்வைத்த வாதுரைகள் இங்கு அலங்கரித்த வடிவில் மறுபடியும் முன் வைக்கப் பட்டிருப்பதால் இந்தப் பேரவை யில் தமது முக்கியத்துவத்தைப் பதிய வைப்பதில் வெற்றியடைய வில்லை என்று நான் நினைக்கிறேன்; ஆகவே, எனது வாதுரைகளைத் திருப்பிச் சொல்ல விரும்புகிறேன்; ஏனென்றால் அவை என்னுடை யவை, அவற்றை இந்தப் பேரவை எப்படிப் புரிந்துகொள்ள வேண்டும் என்று விரும்பு கிறேனோ அந்த முறையில் திருப்பிச் சொல்ல விரும்பு கிறேன்.

வரம்போ நிபந்தனைணோ எதுவும் இல்லாமல் ஒன்றி யத்தின் சொத்துகளுக்கு வரிகள் விதிக்க உள்ளாட்சி ஆணையத்துக்கு முழுவுரிமை வழங்குவது கடினம் என்று நான் அப்போது சொன் னேன்; என் வாதங்கள் இருபடித்தானவை. முதலாவதாக, குறிப் பிட்ட எந்தவோர் ஒழுங்கமைப்பிலும் யாருக்குப் பிரதிநிதித்துவம் இல்லையோ அவருடைய எந்தச் சொத்தையும் எண்ணிப்பார்த்து அப்படிப்பட்டவர்களின் சொத்துமீது வரியேதும் விதித்திட அவ் வமைப்புக்கு எல்லையற்ற உரிமை வழங்குவது கோட்பாட்டளவில் முடியாத காரியம் என்று சொன்னேன், இங்கே இப்போது அதையே சொல்கிறேன். இது இயற்கை நீதியின் கொள்கைகளுக்கு எதிரானது. உள்ளாட்சி ஆணையங்களைப் பொறுத்தவரை அவை நகராட்சிகள் ஆனாலும்சரி, வட்டார அல்லது மாவட்டக் கழகங்கள் ஆனாலும் சரி, அந்த அமைப்புகளில் மைய அரசுக்கு நடைமுறைப் பிரதிநிதித் துவம் ஏதுமில்லை என்று நான் கூறினேன். இதையே நான் உள்ளாட்சி

அமைப்பின் வரிவிதிக்கும் அதிகாரம் வட்டாரச் சட்டமன்றமாகிய மாநிலச் சட்டமன்றம் இயற்றும் சட்டத்திலிருந்து பெறப்படுகிறது என்று நான் சொன்னேன். அரசமைப்புச் சட்டத்தால் மாநிலச் சட்ட மன்றத்திற்கு வழங்கப்பட்டுள்ள வரியாதாரங்களில் குறிப்பாக எதனை அந்த மாநிலச் சட்டமன்றம் உள்ளாட்சி ஆணையத்துக்கு மாற்றிக் கொடுக்கும் என்பதை மைய அரசு அறிந்து கொள்ள முடியவே முடியாது. எது எப்படியிருந்தாலும் உள்ளாட்சி ஆணை யத்தின் வரிவிதிக்கும் அதிகாரம் மாநிலச் சட்டமன்றத்தால் இயற்றப் படும் சட்டத்திலிருந்து பெறப்படும். மைய அரசினுடைய சொத்தின் மீது குறிப்பாக என்ன வரி விதிக்க உள்ளாட்சிஅமைப்புக்கு மாநிலச் சட்டமன்றம் அதிகாரமளிக்கக்கூடும் என்பதை அறிய இப்போது வழியே இல்லை. ஆகவே, மைய அரசானது வரியின் தன்மை என்ன என்றும், வரியின் அளவு என்ன என்றும் அறியாமல் சரணடைந்து விடும், உள்ளாட்சி அமைப்பின் ஆணையுரிமைக்குப்ப பணிந்து போய் விடும் என்று எதிர்பார்க்க உண்மையில் வழியே இல்லை.

இதனால்தான் கூறு (2) இல் உள்ளாட்சி ஆணையத்தின் வரி விதிக்கும் அதிகாரத்தையும் அவர்கள் விதிக்கக் கருதியுள்ள வரியின் அளவையும் பரிசீலிக்க நாடாளுமன்றத்துக்கு ஒரு வாய்ப்பு இருக்க வேண்டும் என்ற இந்த மாற்று ஏற்பாட்டைச் செய்வதற்கு முன் மொழியப்படுகிறது. இவ்வாறு பரிசீலித்த பிறகுதான் நாடாளு மன்றம் தன் சொத்துக்கு உள்ளாட்சி ஆணையம் வரிவிதிக்கத் தன்னை உட்படுத்திக் கொள்ளும். நான் முன்பே கூறியதுபோல், நாடாளு மன்றமானது கூறு(2) தனக்கு வழங்கும் ஆணையுரிமையைச் செலுத் தும்போது உள்ளாட்சி ஆணயத்தின் வரிவிதிப்பிலிருந்து அடியோடு தனக்கு விலக்களித்துக் கொள்ள வேண்டும் என்ற நோக்கம் நாடாளு மன்றத்துக்கோ இந்த உறுப்பை முன்மொழிந்திருப்பவர்களுக்கோ இம்மியளவும் இல்லை. இந்தத் துணைவிதியைக் கொண்டு வருவ தற்குள்ள ஒரே காரணம் நாடாளுமன்றம் அந்த வரிவிதிப்புக்குத் தன்னை உட்படுத்திக் கொள்ளுமாறு கேட்பதற்கு முன்னால் வரி விதிப்புக்கான முன்மொழிவுகளைப் பரிசீலிக்க அதற்கு வாய்ப்பு வழங்கவேண்டும் என்பதே. கூறு (2) ஐப் பொறுத்தவரை நேர்மை யின்மை ஏதும் இருப்பதாக நான் நினைக்கவில்லை. இரண்டாவ தாக, உள்ளாட்சி ஆணையங்கள் இப்போது பெற்றுள்ள நிதிச் செல்வா தாரங்கள் எதையும் கூறு(2) பறித்துக் கொள்ளவில்லை.

என்றாலும் நான் இப்போது ஒன்றைக் கண்டுபிடித்துள்ளேன்; அதாவது கூறு (1) இல் ஒருவகை இடைவெளி உள்ளது, அதனை நான்

சரிசெய்ய அணியமாய் உள்ளேன். அந்த வரியை விதித்துவரும் நக ராட்சிகள் அல்லது உள்ளாட்சி ஆணையங்களின் நேர்வுகளைப் பற்றிக் கூறு (2) சொல்கிறது. இந்த உரிமை அதனைச் செலுத்திவரும் நகராட்சிகள் அல்லது உள்ளாட்சி ஆணையங்களுக்கு மட்டுமான தாக இருக்கக்கூடாது என்பது விரும்பத்தக்கதாகும் என்றும் கருது கிறோம். மைய அரசின் சொத்துக்கு வரிவிதிக்கும் உரிமையை விரிவாக்கி, இதுவரை அந்த அதிகாரத்தைச் செலுத்தியிராத அல்லது செலுத்தத் தவறியுள்ள நகராட்சிகளுக்கும் உள்ளாட்சிக் கழகங்களுக் கும் கூட நாடாளுமன்றம் வழங்கலாம். ஆகவே கூறு (1) இல் இந்தச் சொற்களைச் சேர்க்க அணியமாய் உள்ளேன்.

'ஒன்றியத்தின் சொத்துக்கு' என்ற சொற்களுக்குப் பிறகு 'நாடாளுமன்றம் சட்டம் கொண்டு வேறுவிதமாக வழிவகை செய்யக் கூடிய வரையில் தவிர்த்து' என்ற சொற்களைச் சேர்க்கலாம்.''

அதாவது, இதுவரை ஏற்பிசைவு அளிக்கப் பெறாத மற்ற நகராட்சிகளும் மற்ற உள்ளாட்சிக் கழகங்களும் வரிவிதிப்பதற்கு அதிகாரம் வழங்க அல்லது ஏற்பிசைவளிக்க நாடாளுமன்றத்தை அனுமதிக்கும். இது ஒரு குறைபாடு எனக் கருதுகிறேன், இதனைச் சரிசெய்ய நான் அணியமாய் உள்ளேன். வரிவிதித்து வரும் உள்ளாட்சி ஆணையங்களுக்கும் வரி விதிக்காதிருக்கிற உள்ளாட்சி ஆணையங் களுக்கும் இடையே இதனால் எவ்விதப் பாகுபாடும் இல்லாமற் போகும். அரசமைப்புச் சட்டத்தை நிறைவேற்றிய பிறகும்கூட, வரி விதித்திராத நகராட்சிகளும் உள்ளாட்சி ஆணையங்களும் வரி விதிக்க அனுமதிக்கும் ஒரு சட்டத்தை இயற்ற நாடாளுமன்றத்திற்கு உரிமை இருக்கும். இதற்கப்பால் நான் சொல்ல அணியமாய் இல்லை.

**திரு. சியாம் நந்தன் சகாயா** (பீகார்: பொது): நடப்பிலிருக்கும் 1935 ஆம் ஆண்டின் இந்திய அரசாங்கச் சட்டத்தின்படிகூட இந்திய அரசாங்கத்துக்குச் சொந்தமான கட்டிடங்களுக்கு வரிவிதிக்க நக ராட்சிகள் அனுமதிக்கப்படுவதில்லை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் சொல்லி யிருப்பதும் அதுதான். வாதுரையை இன்னும் விரிவாக விளக்கி யிருக்க என்னால் முடிந்திருக்கும்.

ஆனால் நான் அப்படிச் செய்ய விரும்பவில்லை; ஏனென்றால் நடப்பிலுள்ள ஏற்பாட்டைக் காத்துவர வேண்டும் என்பதை நான் ஏற்றுக்கொண்டுள்ளேன். முழுக்க அரசமைப்புச் சட்டத்தின் கோணத்திலிருந்து கூறு (2)க்கு மறுப்புச் சொல்லியிருப்பேன்; அதை அனுமதிக்க மாட்டேன். ஆனால் நம் பலகை எழுதப்படாத ஒன்றில்லை. அதில் நிறையவே எழுதப்பட்டுள்ளது. ஆகவே எழுதியிருப்பதை அழித்துவிட வேண்டுமென்று நான் விரும்பவில்லை. இந்தக் காரணத்தினால்தான் நான் கூறு (2) ஐ ஏற்றுக்கொள்வேன்; நகராட்சிகள் வரிவிதிக்க வாய்ப்பளிப்பதற்கு நாடாளுமன்றத்தை அனுமதித்திட கூறு (1) ஐயும் திருத்தியமைப்பேன்.

***பாபு ராம் நாராயண் சிங்:*** உள்ளாட்சி அமைப்புகளின் வரிசையான உரிமைக் கோரிக்கைகளை நாடாளுமன்றம் பிற்பாடு பரிசீலனை செய்யும் என்று டாக்டர் அம்பேத்கர் கூறினார். இந்த அரசமைப்புச் சட்டத்தை நிறைவேற்றுவதன் உடனடி விளைவு என்னவாக இருக்கும் என்பதை நான் தெரிந்துகொள்ளவிரும்புகிறேன். எடுத்துக்காட்டாக, எனது பீகார் மாகாணத்தில் சில மாவட்டக் கழகங்களுக்கு, குறிப்பாக ஹசாரிபாக் மாவட்டக்கழகத்துக்கு, எப்போதுமே அரசாங்க நிலக்கரிச் சுரங்கத்திலிருந்து வரியாகப் பெருமளவில் பணம் கிடைக்கிறது. இந்த அரசமைப்புச் சட்டம் நிறைவேற்றப்பட்டவுடன் அந்தக் கொடுப்பு நிறுத்தப்படுமா அல்லது நாடாளுமன்றம் இதுகுறித்து முடிவு செய்யும் வரை தொடர்ந்து கொடுக்கப்படுமா என்பதைத் தெரிந்துகொள்ள விரும்புகிறேன்.

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:*** தனிப்பட்ட வரிகள் விதிக்கப்படுவது குறித்துக் கருத்து ஏதும் தெரிவிக்க என்னால் முடியாது, ஆனால் நகராட்சி அல்லது உள்ளாட்சிக் கழகம் ஏதும் ஒரு வரியை விதித்து வருமானால் மைய அரசின் சொத்து மீதும் வரிவிதிப்புக்குரியதாகக் கருதப்படும் இத்தகைய வேறு சொத்தின் மீதும் அந்த வரி தொடர்ந்து விதிக்கப்படும் என்ற பொதுவான கருத்து தெள்ளத் தெரிவான ஒன்று. அந்த வரிகளை விதித்துக் கொண்டிருக்கிற நகராட்சிகளின் நிலையில் மாற்றம் ஏதுமிருக்காது.

***திரு. ஆர்.கே. சித்வா:*** இப்போது இந்திய இரயில்வேக்கள் வரிவிதிப்புச் சட்டப்படி உள்ளாட்சி அமைப்புகள் வரிப்பணம் கொடுக்கும்படி கோரினால் அறிவிக்கை வெளியிட வேண்டும். டாக்டர் அம்பேத்கர் அப்பிரிவைத் திருத்தம் செய்வது குறித்துப்

பரிசீலனை செய்ய அணியமாய் இருக்கிறாரா? இங்கு அதைத் திருத்தம் செய்ய முடியாதுதான். ஆனால் நாடாளுமன்றத்தில் அதனைத் திருத்தம் செய்யப் போகிறோம் என்று இரயில்வே அமைச்சர் உறுதி யேதும் கொடுக்கிறாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அய்யா, என் நண்பர் திரு.சித்வா இரயில்வேக்கள் வரிவிதிப்புச் சட்டத்திலிருந்து சரியான படிப்பினை பெற்றால் நன்றாயிருக்கும். உள்ளாட்சி ஆணை யங்கள் இரயில்வேக்களின் சொத்துகளுக்கு வரிவிதிக்க அனுமதி யளிக்கும் ஒரு சட்டத்தை நிறைவேற்றியதன் வாயிலாக நாடாளு மன்றமே விரும்பிப் பணிந்து போயிற்று. எந்தவொரு நாடாளு மன்றமும் தன் சொத்துகளை உள்ளாட்சி ஆணையங்களின் வரி விதிப் புக்கு விரும்பியே உட்படுத்திக் கொள்ளலாம். நாடாளுமன்றம் தன் னுடைய மற்றச் சொத்துகள் மீதும் இதேபோல் வரி விதிப்பதை அனுமதிக்க விரும்பி முன்வராது என ஐயுறுவதற்குக் காரணம் ஏதுமில்லை. இரயில்வே சொத்து வரிவிதிப்புச் சட்டம் முறையாகச் செயலாக்கப்படவில்லை என்றால், அல்லது குறைபாடு ஏதும் இருக்கு மானால், அதனைத் திருத்தம் செய்ய நாடாளுமன்றத்திற்கு உரிமை இருக்கும். இரயில்வே சொத்து வரிவிதிப்புச் சட்டப்படி வரி செலுத்த வேண்டியதாய் இருந்து அதற்குரிய காலமும் வந்துவிட்டால், திரு. சித்வாவும் நீதிமன்றம் சென்று அந்தப் பணத்தைக் கொடுக்கச் செய்ய லாம்.

***(திரு. சித்வா தனது திருத்தத்தை விலக்கிக் கொண்டார். டாக்டர் அம்பேத்கரின் திருத்தத்தால் திருத்தப்பட்ட வடிவத்தில் உறுப்பு 264- ஏற்றுக் கொள்ளப்பட்டு, அரசமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.)***

## உறுப்பு 265

* * * *

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அய்யா, நான் முன்மொழிவது:

> "உறுப்பு 265 இல் 'ஓர் ஒன்றிய இரயில்வே' என்ற சொற்கள் இடம்பெறும் இடங்களிலெல்லாம் அவற்றிற்குப் பதிலாக 'அந்த இரயில்வேயும்' என்ற சொற்களை இடம்பெறச் செய்யலாம்."

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, செப். 9, பக்.1160.

இது முக்கியமாக அட்டவணை VII பட்டியல் Iஇல் நாம் செய்துள்ள மாற்றங்களின் தொடர்விளைவாக வருவதாகும்.

*(திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது. திருத்தப்பட்ட வடிவத்தில் உறுப்பு 265 அரசமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.)*

## புதிய உறுப்பு 265-A

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அய்யா, நான் முன்மொழிவது:

''உறுப்பு 265க்குப் பிறகு பின்வரும் உறுப்பை நுழைக்கலாம்:

வரி விதிக்க அதிகாரமளிக்க குறிப்பிட்ட சிலஆணையங்களின் நேர்வில் தண்ணீர் அல்லது மின்சாரம் தொடர்பானவற்றிற்கு மாநிலங்களின் வரி விதிப்பிலிருந்து விலக்களித்தல்.

265-A-1. குடியரசுத் தலைவர் ஆணைகொண்டு வேறுவிதமாக வழிவகை செய்வது தொடர்பானவற்றைத் தவிர இந்த அரசமைப்புச் சட்டம் தொடங்கப் போகும் நேரத்தில் செயலில் உள்ள ஒரு மாநிலத்தின் சட்டம் எதுவும், நடப்பிலிருக்கிற ஏதேனும் ஒரு சட்டத்தைக் கொண்டு அல்லது மாநிலங்களுக்கிடையிலான ஆறு அல்லது ஆற்றுப்படுகை எதனையும் ஒழுங்கு முறைப்படுத்துவதற்காக அல்லது வளர்ச்சி பெறச் செய்வதற்காக நாடாளுமன்றம் இயற்றிய எந்த ஒரு சட்டத்தைக் கொண்டும் நிறுவப்பட்ட எந்தவோர் ஆணையத்தாலும் சேமிக்கப்படுகிற, உற்பத்தி செய்யப்படுகிற, பயன்படுத்தப்படுகிற, பகிர்ந்தளிக்கப்படுகிற அல்லது விற்கப்படுகிற தண்ணீர் அல்லது மின்சாரம் தொடர்பாக வரிவிதிக்காது.

விளக்கம்: இந்தக் கூறினில் செயலில் உள்ள சட்டம் என்ற தொடர் இந்த அரசமைப்புச்சட்டத்தின் உறுப்பு 307 இல் கொண்டிருக்கும் அதே பொருளையே கொண்டுள்ளது. இந்த உறுப்பின் அடுத்துவரும் பத்தியில் உங்கள் அனுமதியோடு சில புதிய சொற்களை அறிமுகம் செய்யவும் அந்தச் சொற்களோடு அதனை முன்மொழியவும் விரும்புகிறேன்.

''2. ஒரு மாநில சட்டமன்றம் சட்டம்கொண்டு இந்த உறுப்பின் கூறு (1) இல் குறிப்பிடப்படுவது போன்ற எந்த வரியையும் விதிக்கலாம் அல்லது விதிக்க அதிகாரமளிக்கலாம். ஆனால் இப்படிப்பட்ட சட்டம் எதுவும் குடியரசுத் தலைவரின் பரிசீலனைக்காக ஒதுக்கம் செய்யப்பட்ட பின் அவருடைய ஒப்புதலைப் பெறாவிட்டால் எவ்விதத்தும் செயலுக்கு வராது. இப்படிப்பட்ட எந்தவொரு சட்டமும் அச்சட்டத்தின்படி பிறப்பிக்க வேண்டிய விதிகள் அல்லது ஆணைகளைக் கொண்டு எந்த ஓர் ஆணையமும் இத்தகைய வரியின் விகிதங்களையும் மற்ற நிகழ்வுகளையும் நிர்ணயிப்பதற்கு வழிவகை செய்யுமானால் இத்தகைய ஆணை எதனையும் பிறப்பிப்பதாக குடியரசுத் தலைவரின் முன்னொப்புதல் பெறுவதற்கு அச்சட்டம் வழிவகை செய்யும்.''

*(புதிய உறுப்பு 265-A அரசமைப்புச் சட்டத்தில் சேர்க்கப் பட்டது.)*

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப். 9, பக்.1161.

## உறுப்பு 266

[1]மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: அய்யா நான் முன்மொழிவது:

ஒன்றிய வரிவிதிப்பு தொடர்பாக மாநில அரசுகளுக்கு விலக்களித்தல்.

''உறுப்பு 266க்குப் பதிலாக பின்வரும் உறுப்பை இடம் பெறச் செய்யலாம்:

''266. (1) ஒரு மாநிலத்தின் சொத்தும் வருமானமும் ஒன்றிய வரிவிதிப்பிலிருந்து விலக்குப் பெற்றிருக்கும்.

(2) இந்த உறுப்பின் கூறு (1) இல் என்ன கூறப்பட்டிருப் பினும், ஒரு மாநில அரசாங்கத்தாலோ அதன் சார்பாகவோ நடத்தப்படும் எவ்வகைய வர்த்தகம் அல்லது தொழில் தொடர் பாகவும் அல்லது அவற்றுடன் இணைந்த எந்த நடவடிக்கைகள் தொடர்பாகவும், அல்லது அதனுடைய நோக்கங்களுக்காக பயன்படுத்தப்படும் அல்லது வைத்துக் கொள்ளப்படும் எந்தச் சொத்து தொடர்பாகவும், அல்லது அதிலிருந்து கிடைக்கிற அல்லது பிறக்கிற எந்த வருமானம் தொடர்பாகவும் நாடாளுமன்றம் சட்டம் கொண்டு வழிவகை செய்யக்கூடுமானால் அப்படிச் செய்யுமளவுக்கு ஒன்றிய அரசு வரி ஏதும் விதிக்கவோ விதிப் பதற்கு அதிகாரமளிக்கவோ தடை இருக்காது.

(3) இந்த உறுப்பின் கூறு (2) இல் கூறப்பட்டுள்ள எதுவும் அரசாங்கத்தின் சாதாரணச் செயல்பாடுகளுக்குத் தேவை யானவை என்று நாடாளுமன்றம் சட்டம் கொண்டு அறிவிக்கக் கூடிய வர்த்தகம் அல்லது தொழில் எதற்கும் அல்லது வர்த்தகம் அல்லது தொழிலின் வகை எதற்கும் பொருந்தாது.

★ ★ ★

## ஏழாம் அட்டவணை

## உறுப்பு 250 (தொடர்ச்சி)

[2]மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்: அய்யா, நான் முன்மொழிவது:

''ஏழாம் அட்டவணையின் பட்டியல்(1) இல் பதிவு 88க்குப் பிறகு பின்வரும் பதிவை நுழைக்கலாம்:

'88 A. செய்தித்தாள்கள் விற்பனை அல்லது கொள்முதல் மீதும் அவற்றில் வெளியிடப்படும் விளம்பரங்கள் மீதுமான வரிகள்.''

மேலும் நான் முன்மொழிவது:

ஏழாம் அட்டவணையின் பட்டியல் IIபதிவு 58க்குப் பதிலாகப் பின்வரும் பதிவுகளை இடம்பெறச் செய்யலாம்.

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர் 9, பக். 1161.

2. மேற்படி அதே நூல், பக். 1172-73.

''58. செய்தித்தாள்கள் அல்லாத மற்றப்பண்டங்களின் விற்பனை மற்றும் கொள்முதல் மீதான வரிகள்.

58-A. செய்தித்தாள்களில் வெளியிடப்படும் விளம்பரங்கள் அல்லாத மற்ற விளம்பரங்கள் மீதான வரிகள்.''

அய்யா, உங்கள் அனுமதியுடன் உறுப்பு 250க்கும் மற்றொரு திருத்தத்தை - எண் 374 - அது உண்மையில் இதன் பகுதியே ஆதலால் முன்மொழிகிறேன்.

நான் முன்மொழிவது:

''உறுப்பு 250 கூறு (1) இல் உட்கூறு (ஈ) க்குப் பிறகு பின்வரும் உட்கூறுகளைச் சேர்க்கலாம்:

'(உ) பங்குச் சந்தைகளிலும் முற்பதிவுச் சரக்குச் சந்தையிலுமான கொடுக்கல் வாங்கல்கள் மீது முத்திரைக் கட்டணங்கள் அல்லாத மற்ற வரிகள்;

(ஊ) செய்தித்தாள்களின் விற்பனை அல்லது கொள்முதல் மீதும் அவற்றில் வெளியிடப்படும் விளம்பரங்கள் மீதுமான வரிகள்.'

**திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி:** திருத்தம் எண். 374. தொடர்பாக உறுப்பு 250 ஐ திரும்பப் பரிசீலிப்பது அவசியமாய் இருக்கும் என்பதால், அப்படிச் செய்வதற்கும் இந்தப் பேரவையின் முறைப்படியான அனுமதியைப் பெறவேண்டியிருக்கும் என்பதை நான் குறிப்பிட விரும்புகிறேன்.

**திரு. ஆர்.கே. சித்வா:** அவை விவாதித்து நிறைவேற்றிய ஓர் உறுப்பை மறுபடியும் பரிசீலிக்க முடியாது என்று நான் ஒழுங்குப் பிரச்சினை கிளப்புகிறேன்.

**திரு. அவைத் தலைவர்:** இந்தப் பிரச்சினையைத்தான் திரு. கிருஷ்ணமாச்சாரியும் கிளப்பியிருக்கிறார்.

**திரு. ஆர்.கே.சித்வா:** இல்லை, அய்யா, அவர் விவாதப் பொருளை மறுபரிசீலனைக்கு விடுவதற்காக ஒரு திருத்தத்தை முன்மொழிந்துள்ளார். அதை மறுபரிசீலனைக்கு விடமுடியாது என்று நான் ஒழுங்குப் பிரச்சினை கிளப்புகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நீங்கள் சொல்வது சரியா, அவர் சொல்வது சரியா என்பதை அவைத் தலைவர் முடிவு செய்வார்.

**திரு. நசிருதீன் அகமது:** மற்றொன்றையும் நான் உங்கள் கவனத்திற்குக் கொண்டு வர விரும்புகிறேன். பதிவு 88Aக்கான திருத்தத்தைப் பொறுத்தவரை அதுவும் திரு.ஜுன்ஜுவாலாவின் திருத்தம் ஒன்றே. இப்பொழுது வரைவுக்குழுவினர் அதைக் தங்களுடையதே போன்று காட்டி வருகின்றனர். வேடிக்கை என்னவென்றால் டாக்டர் அம்பேத்கருடைய திருத்தத்தின் எண் 379 ஆகும்; இதுவே தண்டனைச் சட்டத்தில் திருட்டு தொடர்பான பிரிவு ஆகும். இவ்வகையான இலக்கியக்கலவையை அனுமதிக்கலாமா?

**திரு. அவைத் தலைவர்:** இதைச் சுட்டிக்காட்டியதற்காக நீங்கள் பெருமைப்பட்டுக் கொள்ளலாம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அதைக் கொண்டே அவர் முழு மனநிறைவு அடைகிறார். திருட்டு அல்லது கொள்ளை நடத்திருப்பதாக அவர் முறையீடு தாக்கல் செய்யவில்லை.

**திரு. நசிருதீன் அகமது:** ஆனால் திருட்டு என்பது ஆய்விற் கொள்ளத்தக்க ஒரு குற்றமாகும். அது சமரசத் தீர்வுக்கு இடமளிகக் கூடியதும் அல்ல. இது எவர் ஒருவரின் முறையீட்டையும் பொறுத்த தன்று. மறுப்பேதும் இல்லை என்பது அதற்குச் சமாதானமாகாது.

**திரு. அவைத் தலைவர்:** நாம் முதலில் பதிவுகள் குறித்து விவாதிப்போம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அய்யா, இப் பிரச்சினை சென்றமுறை அவையில் எழுப்பப்பட்டபோது சரியாக என்னதான் நோக்கம் என்பது பற்றியும், அவை என்ன செய்யக் கூடும் என்பது பற்றியும் நான் எதை ஏற்றுக்கொள்ள அணியமாய் இருந்தேன் என்பதைப் பற்றியும் நிறைய விவாதம் நடைபெற்றது.

இப்பிரச்சினையை மறுபடியும் வரைவுக்குழுவுக்கு அனுப்ப லாம் என்று நீங்கள் அன்புடன் குறிப்பிட்டீர்கள். அதைப் பரிசீலனை செய்தபிறகு வரைவுக்குழு புதிய முன்மொழிவுகளைக் கொண்டு வந்துள்ளது. செய்தித் தாள்களும் செய்தித்தாள்களில் வரும் விளம் பரங்கள் மீதான வரிகளும் பட்டியல் (I) இல் வைக்கப்பட வேண்டும் என்பதே முன்மொழிவு. இதற்கு இப்போது வரைவுக்குழு உடன்பட் டுள்ளது. இரண்டாம் திருத்தம் - எண் 379 - ஒரு தொடர்விளைவான

திருத்தமே தவிர வேறல்ல. ஏனென்றால் செய்தித்தாள்கள் மீதும், செய்தித் தாள்களின் விற்பனை மீதும், அவற்றில்வரும் விளம்பரங்கள் மீதுமான வரிகளும் பட்டியல் 1 இல் சேர்க்கப்பட்டுவிட்டதால், விற்பனை வரி சட்டத்தின்படி செய்தித்தாள்கள் மீதும் அவற்றில் வரும் விளம் பரங்கள் மீதும் வரி விதிப்பதை மாநில சட்டமன்றத்தின் மேலுரிமை யிலிருந்து விலக்கி வைப்பது அவசியமாகும்.

*　　　*　　　*

## பதிவு 58

[1]மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: அய்யா, நான் இந்தப் பதிவுகளின்பால் என்போக்கு முன்பின் முரணாய் உள்ளது என்று என் மதிப்பிற்குரிய நண்பர் திரு.சித்வா சொன்னதைக் கருத்தில் கொண்டு நான் விளக்கமென்ற முறையில் ஓரிரு கருத்துகளைச் சொல்ல விரும்புகிறேன். அய்யா, செய்தித்தாள்களும் அடிப்படை உரிமைகள் பற்றிய உறுப்பு 13க்கும் மிக நெருங்கிய தொடர்பு இருப் பதாக இப்பிரச்சினை குறித்து சென்றமுறை நடைபெற்ற விவாதத் தின் போக்கில் நான் குறிப்பிட்டேன். ஆகவே செய்தித்தாள்கள் தொடர்பாக வழிவகை ஏதும் செய்கையில் இந்தப்பிரச்சினையை மனத்தில் இருத்திக் கொள்ள வேண்டும். இரண்டாவது செய்தி என்ன வென்றால் அடிப்படை உரிமைகளை எவ்விதத்திலும் ஒழுங்குமுறைப் படுத்துவதைப் பொறுத்தவரை, நாம் முன்பே நிறைவேற்றியுள்ள அரசமைப்புச் சட்ட உறுப்பு 27இன்படி அடிப்படை உரிமைகள் தொடர்பாக சட்டமியற்றும் எல்லாப் பிரச்சினைகளையும் நாடாளு மன்றத்திடமே விட்டுவிட்டோம்; நாம் மாநிலங்களுக்கு அதிகாரம் எதையும் வைக்கவில்லை. ஆகவே, இந்தப் பரிசீலனையை, அதாவது செய்தித்தாள்கள் அடிப்படை உரிமைகளின் கீழ் வருகின்றன என்பதை யும் அடிப்படை உரிமைகள் தொடர்புடைய எல்லாச் சட்டங்களும் நாடாளுமன்றத்திடமே விட்டுவிடப்படுவதையும் கருத்தில் கொண்டு, வரிவிதிப்பின் நோக்கங்களுக்குச் செய்தித் தாள்கள் மைய அரசின் ஆணையுரிமைக்கு உட்பட வேண்டும் என்பது இயல்பாக பெறப் படுவதாகும் என்று எனக்கும் வரைவுக்குழுவுக்கும் கூடத் தோன் றியது.

---

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர் 9, பக். 1182-83.

வரைவுக்குழுவிடமும் அதேபோல் என்னிடமும் ஓங்கியிருந்த மூன்றாம் பார்வை என்னவென்றால் செய்தித்தாள்கள் அடிப்படை உரிமைகளுடன், அதாவது கருத்து வெளியிடும் உரிமை, சிந்தனைச் சுதந்திரம் ஆகியவற்றுடன் தொடர்புடையதாகும் என்ற உண்மையைக் கருத்தில் கொண்டு செய்தித்தாள்கள் மீதான எந்த வரி விதிப்பும் ஒரேசீராக இருப்பதும் மாகாணத்திற்கு மாகாணம் வேறுபடக்கூடாது என்பதும் விரும்பத்தக்கதாகும். சட்டங்கள் இயற்றும் பொறுப்பை நாடாளுமன்றத்திடம் விட்டுவிட்டால் மட்டுமே இப்படி ஒரே சீராக இருக்கும் நிலையை அடைய முடியும். என் பார்வையிலும் வரைவுக் குழுவினர் பார்வையிலும் முதன்மை பெற்ற மூன்று பார்வைகள் இவையே.

இவை தவிர முக்கியத்துவம் பெற்ற ஒரே ஒரு பார்வை என்னவென்றால் இந்த இனம் முழுக்க முழுக்க சட்டங்கள் இயற்றுவது பற்றிய இனம் மட்டுமேயல்ல. பட்டியல் IIபதிவு 58 இல் இடம்பெற்ற காலவட்டச் சரக்குகளில் செய்தித்தாள்களும் சேர்க்கப்பட்ட அளவில் இது வரிவிதிப்பது பற்றியதாகும். விற்பனை வரிச் சட்டத்தின்படி செய்தித்தாள்கள் மீது வரி விதிப்பதன் மூலம் பெறக்கூடிய வருவாயை மாகாணங்கள் பெறவிடாமல் செய்து விடக்கூடாது என்றால், செய்தித்தாள்கள் மீதான விற்பனை வரியை உறுப்பு 250 இல் சேர்ப்பதுதான் முறையானது என்று நாங்கள் நினைத்தோம். இந்த உறுப்பில் வேறு பல இனங்களும் சேர்க்கப்பட்டுள்ளன; அவற்றின் மீது வரி ஏதும் விதிக்கப்படுமானால் கிடைக்கிற வருமானம் பல்வேறு பங்கீடு செய்யப்படுவதற்கு அது வழிவகை செய்கிறது.

ஆகவே பரிசீலனைக்கு எழக்கூடிய ஒரே பிரச்சினை என்னவென்றால் இப்படிப் பட்டியல் IIஇலிருந்து பட்டியல் Iக்கு இடமாற்றம் செய்வதன் மூலமாக நாம் மாகாணங்கள் நிதிவசதிக்குத் தீங்கிழைக்கிறோமா என்பதே. நாம் மாகாணங்களுக்கு தீங்கேதும் செய்யவில்லை என்பதே என் விடை. ஏனென்றால் என் திருத்தம் எண் 374 ஐ இந்தப் பேரவை ஏற்றுக் கொள்ளுமானால், செய்தித்தாள்களின் விற்பனை மீதான எந்த வரியிலும் மாகாணங்கள் திரட்டி இருக்கக் கூடிய, இப்போது பெற்றுவருகிற பங்கு இத்திருத்தத்தின்படி அவற்றுக்குக் கிடைக்கும். நான் முன்பே கூறியதுபோல், செய்தித்தாள்கள் அடிப்படை உரிமைகளுடன் தொடர்புடையவை ஆதலால் மைய அரசின் மேலுரிமைக்கு உட்படவேண்டும் என்பதும், மாகாணங்களுக்குக் கிடைக்கக்கூடிய நிதிஆதாயம் எதனையும் பார்க்கத்

தவறிவிடக்கூடாது என்பதுமான பொதுக்கோட்பாட்டைக் கருத்தில் கொண்டே இந்த முன்மொழிவுகளை முன்வைக்கிறோம். இந்த மாற்றங்களைச் செய்கையில் இவ்விரு பார்வைகளுமே வரைவுக் குழுவிடம் ஓங்கி நின்றன.

என் மாண்புமிகு நண்பர் திரு.சித்வா செய்துள்ள பிரகடனங் களை என்னால் புரிந்துகொள்ள முடிகிறது. ஏனென்றால் பிறிதோர் இடத்தில் கடுமையாகக் காயம்பட்டு அவர் துடித்துக் கொண்டிருக் கிறார். அவர் என்னென்ன பிரகடனங்கள் செய்துள்ள போதிலும், நாம் முன்மொழிந்துள்ள பதிவுகளுக்கு மறுப்பேதும் சொல்ல முடியாது என்று நான் சொல்கிறேன்.

**திரு. ஆர்.கே. சித்வா:** நான் ஏதோ காயம் பட்டுத் துடித்துக் கொண்டிருப்பதாக டாக்டர் அம்பேத்கர் கூறியதற்கு எதிர்ப்பு தெரி விக்கிறேன். இப்படிப் பேசியதை திரும்பப் பெறுமாறு நீங்கள் அவருக்குச் சொல்லாவிட்டால் நான் அவரது வழியிலேயே பதிலடி கொடுப்பேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** நான் என் பேச்சைத் திரும்பப் பெற அணியமாகவே உள்ளேன், அய்யா. ஆனால் நான் அதை நன்கறிவேன்.

**திரு. அவைத் தலைவர்:** (பிரச்சினை தீர்ந்துவிட்டது. மேற் காட்டி வடிவில் டாக்டர் அம்பேத்கரின் மூலத்திருத்தம் ஏற்றுக் கொள்ளப்பட்டது. மற்ற திருத்தங்கள் நிராகரிக்கப்பட்டன. திருத்தப் பட்ட வடிவில் பதிவுகள் 58, 58-A ஆகியவை ஏழாவது அட்டவணை யின் மாநிலப் பட்டியலில் சேர்க்கப்பட்டன.)

## உறுப்பு 250

[1]**திரு. டி.டி.கிருஷ்ணமாச்சாரி:** டாக்டர் அம்பேத்கர் முன்பே இதை முன்மொழிந்துள்ளார். இது வடிவ அளவிலான பிரச்சினை மட்டுமே. இதை வாக்கெடுப்புக்கு விடலாம்.

**திரு. அவைத் தலைவர்:** டாக்டர் அம்பேத்கர் முன்மொழிந்த திருத்தம் எண் 374 குறித்து எவரேனும் ஏதேனும் கூற விரும்புகிறாரா?

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர் 9, பக். 1184.

(உறுப்பினர் எவரும் எழவில்லை.)

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இது தொடர் விளைவான திருத்தம்தான், அய்யா.

[1]**திரு. அவைத் தலைவர்:** இதற்குத் திருத்தம் ஒன்றுமில்லை. நான் இதை வாக்கெடுப்புக்கு விடுகிறேன். பிரச்சினை இதுதான்:

''உறுப்பு 250 கூறு (1)இல் உட்கூறு(ஈ)க்குப் பிறகு பின்வரும் உட்கூறு களைச்சேர்க்கலாம்.

''(உ) பங்குச் சந்தைகளிலும் முற்பதிவுச் சரக்குச் சந்தைகளிலுமான கொடுக்கல் வாங்கல்கள் மீது முத்திரைக் கட்டணங்கள் அல்லாத மற்ற வரிகள்;

(ஊ) செய்தித்தாள்களின் விற்பனை அல்லது கொள்முதல் மீதும் அவற் றில் வெளியிடப்படும் விளம்பரங்கள் மீதுமான வரிகள்'' (திருத்தம் ஏற்றுக் கொள்ளப்பட்டது.)

## உறுப்பு 202

**திரு. அவைத் தலைவர்:** உறுப்பு 202

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அய்யா, நான் முன்மொழிவது:

''உறுப்பு 202 கூறு(1) இல் 'பரப்புகள் எங்கும்' என்ற சொற்களுக்குப் பிறகு 'எந்த ஓர் ஆள் அல்லது ஆணையத்துக்கும் இவ்விதம் ஆணையிடலாம்.' பொருத்தமான நேர்வுகளில் அந்த ஆட்சிப் பரப்புகளுக்குட்பட்ட எந்த ஓர் அர சாங்கமும் ஆணையம் என்பதில் அடங்கும்' என்ற சொற்களை நுழைக்கலாம்.''

உறுப்பு 302க்கான ஒரு திருத்தத்தை முன்மொழிந்தபோது உறுப்பு 202 இல் தொடர்விளைவான ஒரு திருத்தம் தேவைப்படும் என்று நான் சொன்னேன். ஆகவே நான் இதனை முன்மொழிகிறேன். திருத்தப்பட்ட வடிவில் உறுப்பு 202 இப்போது பின்வருமாறு அமைந் திருக்கும்.

''இந்த அரசமைப்புச்சட்டத்தின் உறுப்பு 25 இல் என்ன கூறப்பட்டிப்பினும், இந்த அரசமைப்புச் சட்டத்தின் பகுதி III வழங்கும் உரிமைகளில் எந்த ஒன்றை யும் செயலாக்குவதற்காகவும் அல்லது வேறு எந்த நோக்கங்களுக்காகவும் ஆட் கொணர்வு, உரிமைக் காப்பு, தடை, உரிமை வினா, ஆவணக்கேட்பு ஆகிய

1. அரசமைப்புப்பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர் 9, பக். 1185-86.

நீதிப்பேராணைகளின் தன்மையில் கட்டளைகள் அல்லது உத்தரவுகள் பிறப்பிக்க ஒவ்வோர் உயர்நீதிமன்றத்துக்கும் அதிகாரம் இருக்கும்; அது எந்த ஆட்சிப் பரப்புகள் தொடர்பாக மேலுரிமை செலுத்துகிறதோ அந்தப் பரப்புகள் எங்கும் எந்த ஓர் ஆள் அல்லது ஆணையத்துக்கும் இவ்விதம் ஆணையிடலாம்; பொருத்தமான நேர்வுகளில் அந்த ஆட்சிப் பரப்புகளுக்குட்பட்ட எந்த ஓர் அரசாங்கமும் ஆணையம் என்பதில் அடங்கும்.''

**பண்டித தாகூர்தாஸ் பர்கவா** (கிழக்கு பஞ்சாப்: பொது): பொருத்தமான நேர்வுகளில்' என்று சொல்கிறீர்களே, ஏன்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஏனென்றால் பொருத்தமான நேர்வுகள் எவை என்பதை நாடாளுமன்றச் சட்டம் விரித்துரைக்கும்.

*(திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.)*

## உறுப்பு 234-A

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அய்யா, நான் முன்மொழிவது:

இரயில்வேக்கள் பாதுகாப்பு தொடர்பாகமாநிலங்கள் மீது ஒன்றியத்தின் கட்டுப்பாடு.

''உறுப்பு 234க்குப் பிறகு பின்வரும் புதிய உறுப்பை நுழைக்கலாம்:

''234-A. (1) ஒன்றியத்தின் நிர்வாக அதிகாரமானது ஒரு மாநிலத்திற்குட்பட்ட இரயில்வேக்களின் பாதுகாப்புக்காக எடுக்கப்பட வேண்டிய நடவடிக்கைகள் தொடர்பாக அம்மாநிலத்திற்கு நெறியாணை வழங்குவதற்கும் பொருந்தும்.

(2) இந்த உறுப்பின் கூறு 1 இன்படி ஒரு மாநிலத்துக்குத் தரப்பட்ட எந்த ஒரு நெறியாணையின் பயனாகவும், இத்தகைய நெறியாணை தரப்படாதிருக்கையில் மாநிலத்தின் இயல்பான கடமைகளை நிறைவேற்றுவதில் ஏற்பட்டிருக்கக் கூடியதைக் காட்டிலும் அதிகப்படியான செலவுகள் ஏற்பட்டிருந்தால் அவற்றை அம்மாநிலத்துக்கு இந்திய அரசு கொடுத்துவிடும்; இப்படி கொடுக்க வேண்டிய தொகை உடன்பாட்டின் வாயிலாக நிர்ணயிக்கப்படலாம், அல்லது உடன்பாடு ஏற்படாத நிலையில் இந்தியத் தலைமை நீதிபதியால் அமர்த்தப்படும் நடுவரால் நிர்ணயிக்கப்படலாம்.

அய்யா, முதலாவதாக அனைத்துக் காவல்துறையும் மாகாணப் பட்டியலில் உள்ளது. இதன் விளைவாக இரயில்வே சொத்தின் பாதுகாப்பும் மாகாண அரசின் களத்திற்குள் அடங்கியிருக்கிறது. குறிப்பிட்ட நேர்வுகளில் மாகாண அரசு தனிப்பட்ட நடவடிக்கைகள் எடுப்பதன் வாயிலாக இரயில்வே சொத்தைப் பாதுகாப்பதை மைய அரசு விரும்பக்

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர் 9, பக். 1185 - 86.

கூடும் எனக் கருதப்பட்டது; இந்த நோக்கத்திற்காக மைய அரசு இப்போது நெறியாணைகள் வழங்கும் அதிகாரத்தை அடைய முனை கிறது. மைய அரசு வழங்கும் தனி நெறியாணைகளின் காரணத்தால் மாகாணங்களுக்கு இயல்புக்கு மேல் சற்றே கூடுதல் செலவு ஏற் படுவது சாத்தியமே. அப்படி ஏற்பட்டால் அந்தக் கூடுதல் செலவு என்ன என்பதை உடன்பாட்டின் வாயிலாகவோ அல்லது உடன்பாடு ஒன்றும் இல்லாவிட்டால் இந்தியத் தலைமை நீதிபதியால் தேர்வு செய்யப்படும் ஒரு நடுவரைக் கொண்டோ நிர்ணயிக்கலாம். இரண் டாவது கூறு கூடுதல் செலவைப் பொறுத்தவரை மைய அரசுக்கும் மாகாணங்களுக்கும் இடையிலான பூசல்களைத் தீர்ப்பதற்காக இந்த அரசமைப்புச்சட்டத்தில் நாம் நிறைவேற்றியுள்ள கூறுகளில் பலவற்றை ஒத்துள்ளது.

**டாக்டர் பி.எஸ். தேஷ்முக்:** அவைத் தலைவர் அவர்களே, இரயில்வே சொத்தை மட்டுமே சுட்டுகிற இந்த விதி வகையின் தேவை குறித்து எனக்கு முழு நம்பிக்கை ஏற்படவில்லை.

**திரு. பிரஜேஷ்வர் பிரசாத்:** அவைத் தலைவர் அவர்களே, இந்த உறுப்பின் கூறு (1)க்கு என் மனப்பூர்வமான ஆதரவைத் தெரிவித்துக் கொள்கிறேன். ஆனால் நான் கூறு 2ஐ அடியோடு எதிர்க் கிறேன். ஆகவே, செலவுகளைப் பொறுத்தவரை மைய அரசுக்கும் மாகாணங்களுக்கும் இடையில் ஏதேனும் மோதல் இருக்குமானால் இப்பிரச்சினையை அப்படியே குடியரசுத் தலைவரின் கையில் விட்டுவிடலாம் என்று விரும்புகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அய்யா, இந்தக் கூறு மிகவும் தேவையானதே. நாம் நிறைவேற்றி இப்போது நடப் பிலுள்ள உறுப்பில் போதுமான வழிவகைகள் இருக்கின்றன என்று என் நண்பர் திரு.தேஷ்முக் கூறுவது - நான் சொல்வதற்கு வருந்து கிறேன் - அடிப்படையிலேயே தவறானது. இரயில்வே காவல்துறை என்பது மாநிலத்தின் ஆணையுரிமைக் குட்பட்டதொன்றாகும். ஒரு பதிவு என்ற முறையில் காவல்துறை பட்டியல்(1) இல் இடம்பெற வில்லை. இதன் விளைவாக காவல்துறை தொடர்பான, எந்தப் பிரச்சினையிலும் சட்டம் இயற்ற மைய அரசுக்கு ஆணையுரிமை ஏது மில்லை, சட்ட ஆணையுரிமை இல்லாததால் நிர்வாக ஆணையுரிமை ஏதுமில்லை. ஆகவே, இரயில்வே சொத்தின் பாதுகாப்பைப் பொறுத்த வரை பிரச்சினை மாநிலஅரசின் நிர்வாக ஆணையுரிமைக்கு உட் பட்டதாகும். அவ்வாறு இருக்க, இதைச் செய்வதற்கு இரண்டே

இரண்டு விதிமுறைகள்தான் உள்ளன. ஒன்று, தன் சொத்தைப் பாதுகாக்கும் நோக்கத்திற்கான காவல்துறையின் ஆணையுரிமை மையஅரசுக்கு வழங்கப்பட வேண்டும்; அப்படி வழங்கினால் நான் முன்மொழிந்திருப்பது போன்ற உறுப்பு தேவையற்றதாகிவிடும். அல்லது, நான் முன்மொழிந்துள்ள, அதாவது நெறியாணைகள் தருவதற்கான வழிவகை நமக்கு இருக்க வேண்டும். இரயில்வேக்களைப் பாதுகாக்க மைய அரசுக்கு ஒரு காவல் துறை இருப்பதாக வைத்துக்கொண்டால் அந்தக் காவல்துறை மாநிலத்தின் காவல்துறை ஆணையத்தோடு மோதிக்கொள்ள நேரிடலாம். ஆகவே ஈண்டு முன்மொழி யப்பட்டுள்ள திட்டத்தினால் இரட்டை மேலுரிமை தவிர்க்கப்பட்டுள்ளது. இந்தத் திட்டத்தின்படி இரயில்வேக்களில் காவல்துறையைக் கூடுதலாக நிறுத்தும்படியும் முன்னெச்சரிக்கைகளை இன்னும் சிறப்பாக மேற்கொள்ளும்படியும் நெறியாணைகள் தருவதற்கு மைய அரசு உரிமை பெற்றிருக்க வேண்டும். ஆக இந்த ஏற்பாட்டினால் மோதல் ஏதும் ஏற்பட வழி இருக்காது. கூடுதல் செலவு ஏற்படுமானால் அதை ஏற்றுக்கொள்ள மைய அரசு அணியமாயிருக்க வேண்டும். என்ன இடர்ப்பாடு இருக்க முடியும் என்பதை என்னால் அறிய முடியவில்லை. இந்தப் பிரச்சினை ஏற்கெனவே கவனிக்கப்பட்டுள்ளது என்ற டாக்டர் தேஷ்முக்கின் அனுமானம் கடைத்தேற முடியாத தவறாகும்.

**டாக்டர் பி.எஸ். தேஷ்முக்:** ஒன்றியத்தின் பிறவகைச் சொத்தைப் பொறுத்தவரை எவ்விதப் பாதுகாப்பும் நமக்குத் தேவையில்லை என்பதற்குக் காரணம் என்ன? இரயில்வே சொத்தையும் பிறவற்றையும் எவ்வாறு வேறுபடுத்திப் பார்க்கிறீர்கள்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஏனென்றால் இரயில்வே சொத்துக்குக் கூடுதல் கவனம் தேவைப்படுவதை நாம் உணருகிறோம், பயணிகளின் பாதுகாப்பும் முக்கியமானதே.

***(டாக்டர் அம்பேத்கரின் முன்மொழிவு ஏற்றுக்கொள்ளப்பட்டது. புதிய உறுப்பு 234-A அரசமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.)***

## புதிய உறுப்பு 242-A

[1]**திரு. அவைத் தலைவர்:** டாக்டர் அம்பேத்கர், தலைப்பு தொடர்பான திருத்தம் எண் 372 - A ஐ நீங்கள் முன்மொழியலாம்.

1. அரசமைப் 'ப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர் 9, பக். 1187.

**திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி:** எண் 373 நிறைவேற்றப் பட்டால் பிறகு தலைப்பை நீக்குதல் தொடர்விளைவானதேயாகும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அய்யா, நான் திருத்தம் எண் 373ஐ முன்மொழிகிறேன்:

''உறுப்பு 242க்குப் பிறகு பின்வரும் புதிய உறுப்பை நுழைக்கலாம்:

மாநிலங்களுக் கிடையிலான ஆறுகள், ஆற்றுப்படுகைகளின் நீர்வளம் தொடர்பான பூசல்களின் நியாயத் தீர்ப்பு.

''242-A. மாநிலங்களுக்கிடையிலான ஆறு அல்லது ஆற்றுப்படுகை எதனுடையவும் அல்லது எதனிலுமான தண்ணீரைப் பயன்படுத்துவது, பங்கீட்டளிப்பது அல்லது கட்டுப் படுத்துவது தொடர்பாக எந்தப் பூசல் அல்லது முறையீட்டையும் நியாயத்தீர்ப்பக்கு விடுவதற்கு நாடாளுமன்றம் சட்டம் கொண்டு வழிவகை செய்யலாம்.

2. இந்த அரசமைப்புச் சட்டத்தில் என்ன கூறப்பட்டிருப்பினும், இந்த உறுப்பின் கூறு(1) இல் சுட்டப்படுவது போன்ற எந்தப்பூசல் அல்லது முறையீடு தொடர்பாகவும் உச்சநீதிமன்றமோ வேறு நீதிமன்றமோ மேலுரிமை செலுத்தாது என்று நாடாளுமன்றம் சட்டம் கொண்டு வழிவகை செய்யலாம்.''

அய்யா, தொடக்கத்தில் இந்த உறுப்பு குடியரசுத் தலைவரின் நடவடிக்கைக்கு வழிவகை செய்தது. தண்ணீர் முதலானவை தொடர்பான இந்தப் பூசல்கள் மிகவும் அரிதாகவே எழக்கூடும் என்றும், ஆகவே அமர்த்தப்படக்கூடிய ஏதோ ஒருவகையான தனிப்பொறியமைவினால் அவற்றைத் தீர்க்கலாம் என்றும் கருதப்பட்டது. ஆனால் நாம் இப்போது பல்வேறு கழகங்களை உருவாக்கிக் கொண்டிருக்கிறோம் என்பதையும் சொத்து முதலானவற்றையும் சொந்தமாக்கிக் கொள்ளும் அதிகாரம் இக்கழகங்களுக்கு வழங்கப்படும் என்பதையும் கருத்தில் கொண்டால் ஏராளமான பூசல்கள் தோன்றக் கூடும், ஆகவே இந்தப் பிரச்சினைகளைக் கையாள ஒரு நிரந்தர அமைப்பை அமர்த்துவது தேவையாயிருக்கும். ஆகவே மூலவரைவு அல்லது முன்மொழிவு மிக இறுக்கமானதாக, அல்லது மாற்றமில்லாததாக உள்ளதென்றும், இந்தப் பிரச்சினைகளைச் சமாளிப்பதற்கு எடுக்க வேண்டிய நீக்குப்போக்கான எந்த நடவடிக்கைக்கும் அது இடமளிக்காது என்றும் கருதப்பட்டது. ஆகவே, இந்த பூசல்களின் தீர்வுக்கான சட்டங்கள் இயற்றும் பொறுப்பை நாடாளுமன்றத்திடம் விட்டுவிடுகிற இந்தப் புதிய உறுப்பை நான் இப்போது முன்மொழிகிறேன்.

**திரு. ஆர்.கே. சித்வா:** உறுப்பு 242Aஐ நீக்க முன்மொழியப் படுகிறது, ஆகவே உறுப்பு 242க்குப் பிறகு இந்தப்புதிய உறுப்பு 242-A எவ்வாறு வரும்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இந்த உறுப்பு நிலைமையைச் சுட்டுகிறது என்பது மட்டுமே.

*(முன்மொழிவு ஏற்றுக்கொள்ளப்பட்டது. புதிய உறுப்பு 242-A. அரசமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.)*

* * *

[1]**திரு . அவைத் தலைவர்:** திருத்தம் எண் 372-A

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அய்யா, நான் முன்மொழிவது:

> ''உறுப்பு 239 மீதான தலைப்பு, உறுப்புகள் 239, 240, 241, 242 ஆகியவற்றை நீக்கிவிடலாம்.''

உறுப்பு 242-A இவற்றைக் கவனித்துக் கொள்கிறது. ஆகவே இவை தேவையற்றவை.

**திரு. அவைத் தலைவர்:** இந்தத் திருத்தம் குறித்து எவரேனும் ஏதேனும் கூறு விரும்புகிறீர்களா? திருத்தங்கள் ஏதுமில்லை. அடுத்து நான் இதை அவையில் வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

(முன்மொழிவு ஏற்றுக்கொள்ளப்பட்டது.)

உறுப்பு 239 மீதான தலைப்பு, உறுப்புகள் 239, 240, 241, 242 ஆகியவை நீக்கப்பட்டன.''

## உறுப்புகள் 248-A, 263, 263-A.

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அய்யா, நான் மூன்று புதிய உறுப்புகளைச் சேர்க்கிற 380, 381, 382 ஆகிய மூன்று திருத்தங்களை முன்மொழிய விரும்புகிறேன். நான் திருத்தம் எண் 382லிருந்து தொடங்குகிறேன்; ஏனென்றால் ஏனையவை தொடர் விளைவானவை.

**திரு. அவைத் தலைவர்:** சரி.

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX,1949 செப்டெம்பர் 9, பக். 1188.
2. மேற்படி அதே நூல், பக். 1188-90.

**மாண்புகு டாக்டர் அம்பேத்கர்:** அய்யா, நான் முன்மொழிவது:

"உறுப்பு 263 க்குப் பிகு பின்வரும் புதிய உறுப்பை நுழைக்கலாம்:

வழக்காளர் வைப்புத் தொகைகள் மற்றும் அரசு ஊழியர்களும் நீதி மன்றங்களும்பெற்றுக் கொள்ளும் ஏனைய பணத்தொகைகளின் காவல் பொறுப்பு

'263 -A. நேர்வைப் பொறுத்து அரசோ ஒரு மாநில அரசோ திரட்டுகிற அல்லது பெற்றுக் கொள்கிற வருவாய்கள் அல்லது பொதுப் பணம் நீங்கலாக ஒன்றிய அல்லது மாநில விவகாரங்கள் தொடர்பாகப் பணியாற்றும் எந்தவோர் அதிகாரியும் இத்தகைய அதிகாரி என்ற பொறுப்பில், அல்லது

(ஆ) எந்தவொரு நோக்கம், 'பொருட்பாடு, கணக்கு அல்லது ஆட்களின் வரவுக்கும் இந்திய ஆட்சிப் பரப்பிற்குட்பட்ட எந்த வொரு நீதிமன்றமும் பெற்றுக் கொள்கிற அல்லது வைப்பாக வரப்பெறுகிற எல்லாப் பணத்தொகைகளும் நேர்வைப் பொறுத்து இந்தியாவின் அல்லது மாநிலத்தின் பொதுக்கணக் கில் செலுத்தப்படும்."

அய்யா, நீங்கள் என்னை அனுமதித்தால் மற்ற திருத்தங் களையும் முன்மொழிவேன்; அதன் பிறகு நாம் செய்ய எண்ணுகிற மாற்றங்களை உறுப்பினர்கள் புரிந்துகொள்ளும்படி செய்வதற்கான பொதுவான கருத்துக்களைச் சொல்வேன்.

**திரு. அவைத் தலைவர்:** சரி.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** நான் திருத்தம் எண் 380 ஐயும் முன்மொழிகிறேன். நான் முன்மொழிவது:

இந்தியாவின் மற்றும் மாநிலங்களின் தொகுப்புநிதிகள் மற்றும் பொதுக் கணக்குகள்.

"உறுப்பு 248A வுக்குப் பதிலாக பின்வரும் உறுப்பை இடம்பெறச் செய்யலாம்:

"248 (1) இந்த அரசமைப்புச் சட்டத்தின் உறுப்பு 248B இன் வழி வகைகளுக்கும், குறிப்பிட்ட சில வரிகள், தீர்வைகள் ஆகியவற்றின் நிகர வரவுகளை முழுமையாகவோ, பகுதியாகவோ மாநிலங் களுக்கு ஒதுக்கிக் கொடுப்பது தொடர்பான இந்த அத்தியாயத்தின் வழிவகைகளுக்கு உட்பட்டு இந்திய அரசாங்கத்தால் பெறப்படும் எல்லா வருவாய்களும், கருவூல உண்டியல்கள், கடன்கள் அல்லது வகைத்தொகை முன்னீடுகள் ஆகியவற்றை வெளியிடுவதன் மூலம் அவ்வரசினால் திரட்டப்படும் எல்லாக் கடன்களும், கடன்களை திருப்பி செலுத்தப்படும்வகையில் பெறப்படும் எல்லா பணத் தொகைளும் 'இந்திய தொகுப்பு நிதி" என்ற தலைப்பில் ஒரே தொகுப்பு நிதியாக அமையும்; மாநில அரசாங்கத்தால் பெறப் படும் எல்லா வருவாய்களும், கருவூல உண்டியல்கள் கடன்கள் அல்லது வகைத்தொகை முன்னீடுகள் ஆகியவற்றை வெளியிடு வதன் மூலம் அவ்வரசினால் திரட்டப்படும் எல்லாக் கடன்களும்

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப். 9, பக்.1188 - 90.

கடன் திருப்பி செலுத்தப்படும் வகையில் ஒரு மாநிலத்தால் பெறப்படும் எல்லா பணத்தொகைகளும் 'மாநில தொகுப்புநிதி''என்ற தலைப்பில் ஒரே தொகுப்பு நிதியாக அமையும்.

(2) இந்திய அரசாங்கத்தாலோ அல்லது அதன் சார்பாகவோ, ஒரு மாநில அரசாங்கத்தாலோ அல்லது அதன் சார்பாகவோ பெறப்படும் ஏனைய எல்லாப் பொதுப் பணத்தொகைகளும் நேர்வைப் பொறுத்து இந்தியாவின் அல்லது அம்மாநிலத்தின் பொதுக்கணக்கில் வரவு வைக்கப்படும்.

(3) சட்டத்திற்கு இணங்கவும், இந்த அரசமைப்புச் சட்டத்தில் வழிவகை செய்யப்பட்டுள்ள நோக்கங்களுக்காகவும், அதில் வழிவகை செய்யப்பட்டுள்ள முறையிலும் அல்லாமல் இந்திய தொகுப்பு நிதியிலிருந்தோ ஒரு மாநிலத் தொகுப்பு நிதியிலிருந்தோ பணம் ஏதும் எடுத்துப் பயன்படுத்தப் படாது.''

## திருத்தம் எண் 381

''உறுப்பு 263க்குப் பதிலாக பின்வரும் உறுப்பை இடம்பெறச் செய்யலாம்:

தொகுப்பு நிதிகள் பொதுக் கணக்குகளில்வரவு வைக்கப் படும்பணத்தொகைகள் ஆகியவற்றின் காவல் பொறுப்பு, இத்தகைய நிதிகளிலும் பொதுக் கணக்குகளிலும் பணத் தொகைகள் செலுத்துவதும் அவற்றிலிருந்து எடுப்பதும்

263 (1) இந்தியாவின் தொகுப்பு நிதி, அவசரக்கால நிதி இவற்றின் காவல்பொறுப்பு. இத்தகைய நிதிகளில் பணம் செலுத்துதல், பணம் எடுத்தல், பணங்கள் தவிர இந்திய அரசாங்கத்தாலோ, அதன் சார்பாகவோ பெறப்படும் இத்தகைய நிதிகளில் வரவு வைக்கப்பட்டவை அல்லாத ஏனைய பொதுப் பணத் தொகைகளின் காவல்பொறுப்பு, அவற்றை இந்தியாவின் பொதுக் கணக்கில் செலுத்துதல், அந்தக் கணக்கிலிருந்து பணம் எடுத்தல் ஆகிய பிரச்சினைகளும் அவற்றோடு தொடர்புடைய அல்லது அவற்றுக்குத் துணையான மற்ற எல்லாப் பிரச்சினைகளும் நாடாளுமன்றத்தால் இயற்றப்படும் சட்டத்தைக் கொண்டு ஒழுங்குமுறைப்படுத்தப்படும்; இதற்காக இப்படி நாடாளுமன்றம் வழிவகை செய்யும்வரை குடியரசுத் தலைவர் வகுக்கும் விதிகளைக் கொண்டு ஒழுங்குமுறைப்படுத்தப்படும்.

2. ஒரு மாநிலத்தின் தொகுப்பு நிதி, அவசரக்காலநிதி இவற்றின் காவல் பொறுப்பு, இத்தகைய நிதிகளில் பணம் செலுத்துதல், அவற்றிலிருந்து பணம் எடுத்தல், மாநில அரசாங்கத்தாலோ அதன்சார்பாகவோ பெறப்படும் இத்தகைய நிதிகளில் வரவு வைக்கப்பட்டவை அல்லாத ஏனைய பொதுப் பணத்தொகைகளின் காவல் பொறுப்பு, அவற்றை மாநிலத்தின் பொதுக்கணக்கில் செலுத்துதல், அந்தக் கணக்கிலிருந்து பணம்எடுத்தல் ஆகிய பிரச்சினைகளும் அவற்றோடு தொடர்புடைய அல்லது அவற்றிற்குத் துணையான மற்ற எல்லாப் பிரச்சினைகளும் மாநில சட்டமன்றத்தால் இயற்றப்படும் சட்டத்தைக் கொண்டு ஒழுங்குமுறைப்படுத்தப்படும்; இதற்காக இப்படி மாநில சட்டமன்றம் வழிவகைகள் செய்யும்வரை மாநில ஆளுநர் வகுக்கும் விதிகளைக் கொண்டு ஒழுங்குமுறைப்படுத்தப்படும்.''

சுருக்கமாகச் சொன்னால் மாற்றங்கள் இருபடித்தானவை. மூலவரைவில் இருந்தபடி உறுப்பு எண் 248 Aஇல் தொகுப்பு நிதியின்

வீச்செல்லை வரம்புக்குட்பட்டதே. தொகுப்பு நிதியானது கடன்கள், கருவூல உண்டியல்கள், வகைதொகை முன்னீடுகள் ஆகியவற்றிலிருந்து பெறப்படும் வரவுத் தொகைகளைக் குறிப்பாகச் சுட்டவில்லை. அவை தொகுப்புநிதியின் பகுதியாக மாறி அவற்றைக் குறிப்பாகச்சுட்ட நாம் எண்ணியுள்ளோம்.

இரண்டாவதாக, தொகுப்பு நிதிக்கு இலக்கணம் வரைகையில், அரசினால் பெறப்பட்டபோதிலும் வரிகள் அல்லது கடன்கள் இன்ன பிறவற்றின் வரவுத் தொகைகளாய் இல்லாத வேறு சில பணத்தொகைகளையும் நாம் அதனோடு ஒன்று சேர்த்து விட்டோம். இதன் விளைவாக வருவாய்கள் அல்லது கடன்களின் பகுதியாக அன்றிப் பிறவாறு அரசு பெறும் பொதுப் பணமும் ஒரு நிதி ஒதுக்கீட்டுச் சட்டத்திற்கு, அதாவது உறுப்பு 248-A உட்கூறு (B) இல் கூறப்பட்டிருக்கும் வழிவகைக்கு உட்பட்டதாயிற்று. கண்டிப்பாகச் சொன்னால் மாநிலத் தொகுப்பு நிதியின் பகுதியாக அமையாத பணம் எடுப்பதை எந்த ஒரு நிதி ஒதுக்கீட்டுச் சட்டத்திற்கும் உட்பட்டதாக்க முடியாது என்பது கண்கூடு. என்னென்ன முறையில் என்னென்ன நோக்கங்களுக்காக என்னென்ன நேரங்களில் என்னென்ன நிபந்தனைக்குட்பட்டு இந்தப் பணத்தொகைகளை எடுத்துப் பயன்படுத்தலாம் என்பதை நாடாளுமன்றம் குறிப்பாகவே விதித்துரைக்கலாம். ஆகவே தொகுப்பு நிதி என்பதன் இலக்கண வரையறையைத் தெளிவாக விரிவுபடுத்துவதற்காகவும் பொதுக்கணக்கில் அவசியமாகவே போய்ச் சேருகிற மற்ற நிதிகளிலிருந்து தொகுப்பு நிதியைத் தனியாக பிரிப்பதற்காகவும்தான் இம்மாற்றங்கள் செய்யப்படுகின்றன. இம்மாற்றங்களில் வேறு எந்த நோக்கமும் இல்லை. நிதி அமைச்சகம், நிதிஒதுக்கீட்டு சட்டம் தொடர்பான நமது வழிவகை வழக்கமாகப் பொதுக்கணக்கில் போய்ச்சேரும் மற்றப் பணத்தொகைகளுக்கும் பொருந்தும்படி செய்யப்படுகிறது என்பதையும், அதனால் தொல்லை உண்டாக வாய்ப்புண்டு என்பதையும் நிதி அமைச்சகம் கவனப்படுத்தியது. இந்த இடர்ப்பாடுகளை நீக்கும் பொருட்டே இந்த வழிவகைகள் இப்போது மூல உறுப்பில் சேர்க்கப்படுகின்றன.

***(முன்மொழிவு ஏற்றுக்கொள்ளப்பட்டது. புதிய உறுப்பு 263 - A அரசமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.)***

## அரசவை மேலுரிமை ஒழிப்புச் சட்ட முன்வடிவு

[1]**திரு. அவைத் தலைவர்:** மாட்சிமை தங்கிய அரசவையின் மேலுரிமையை ஒழிப்பதற்கான ஒரு சட்டமுன்வடிவை அறிமுகம் செய்வதற்கு டாக்டர் அம்பேத்கரின் முன்மொழிவுக்குத் தரப்பட்டுள்ள அறிவிப்பே இன்றைய வரிசைத் தாளில் முதன் இனமாகும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்** (பம்பாய்: பொது): அய்யா, இந்திய மேல்முறையீடுகள், விண்ணப்பங்கள் தொடர்பாக மாட்சிசை தங்கிய அரசவையின் சட்ட மேலுரிமையை ஒழிப்பதற்கான ஒரு சட்டமுன்வடிவை அறிமுகம் செய்வதற்கு நான் அனுமதி வேண்டி முன்மொழிகிறேன்.

**திரு. அவைத் தலைவர்:** பிரச்சினை இதுதான்:

"இந்திய மேல்முறையீடுகள் மற்றும் விண்ணப்பங்கள் தொடர்பாக மாட்சிமைதங்கிய அரசவையின் மேலுரிமையை ஒழிப்பதற்கு ஒரு சட்ட முன்வடிவை அறிமுகம் செய்ய அனுமதி வழங்கப்படலாம்."

(முன்மொழிவு ஏற்றுக்கொள்ளப்பட்டது.)

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அய்யா, சட்ட முன்வடிவை அறிமுகம் செய்கிறேன்.

★ ★ ★

### அரசமைப்பின் முன்வரைவு

### புதிய பகுதி XIV-A- தொடர்ச்சி

[1]**திரு. அவைத் தலைவர்:** திருத்தங்கள் இவ்வளவுதான் என்று கருதுகிறேன். நான் எதையேனும் விட்டிருந்தால் திருத்தங்களுக்கு அறிவிப்பு கொடுத்த உறுப்பினர் சுட்டிக்காட்டலாம், இல்லையேல் அவற்றை அவையின் அனுமதியுடன் விலக்கிக் கொண்டதாக கருதிக் கொள்ளலாம்.

திரு. முன்ஷி முன்மொழிந்தத் திருத்தங்களை இப்போது வாக்கெடுப்புக்கு விடுகிறேன். ஆனால் பத்திகளுக்கு எண் குறிப்பதற்காகத் திரு.தியாகி ஒரு திருத்தம் கொண்டு வந்துள்ளார்.

1. அரசமைப்பு பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர் 14, பக். 1425.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இந்தப் பிரச்சினையைப் பிறகு பார்ப்போம்.

**திரு. மகாவீர் தியாகி:** அது ஏற்றுக்கொள்ளப்பட்டுவிட்டது. அய்யா.

★ ★ ★

[1]**திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி:** அய்யா, அவையை ஒத்தி வைப்பதற்கு முன்பாக, இந்த அத்தியாயம் மாற்றீடு செய்கிற உறுப்புகள் 99, 184 ஆகியவற்றை நீங்கள் வாக்கெடுப்புக்கு விடலாம் என்று நான் யோசனை கூறலாமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இல்லை, இல்லை. இது இன்றைய வரிசைத்தாளில் இல்லை.

**திரு. அவைத் தலைவர்:** இத்துடன் இந்த மாலைப்பொழுதின் நடவடிக்கைகள் முடிவடைகின்றன. ஆனால் அவையை ஒத்தி வைப்பதற்கு முன்பாக பாராட்டி வாழ்த்துகிற முறையில் ஒரு சில வார்த்தைகள் மட்டும் சொல்ல விரும்புகிறேன். நாம் நமது அரசமைப்புச் சட்டத்திற்காக நிறைவேற்றியுள்ள இந்த அத்தியாயம் நாட்டை முழுமையாகக் கட்டியெழுப்புவதில் மகிப்பரந்தகன்ற விளைவுகளைக் கொண்டிருக்கும் எனக் கருதுகிறேன். நாடு முழுமையிலும் ஆட்சிமொழியாகவும் நிர்வாக மொழியாகவும் அங்கீகரிக்கப்பட்ட ஒரு மொழி நமது வரலாற்றில் முன்னெப்போதும் நமக்கு இருந்ததில்லை.

★ ★ ★

## புதிய உறுப்பு 112-B

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** பம்பாய்: பொது: அவைத்தலைவர் அவர்களே, நான் முன்மொழிவது:

"உறுப்பு 112-Aக்குப் பிறகு பின்வரும் புதிய உறுப்பை நுழைக்கலாம்:

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர் 14, பக். 1489.
2. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர் 14, பக். 1493.

குறிப்பிட்ட சில நேர்வுகளில் நடப்பிலுள்ள சட்டத்தின்படி அரசவைக்குள்ளமேலுரிமையையும்அதிகாரங்களையும்உச்சநீதிமன்றம் செலுத்தக்கூடிய நிலை

'112-B நாடாளுமன்றம் சட்டம் கொண்டு வேறுவிதமாக வழிவகை செய்யும் வரை, இந்த அத்தியாயத்தின் மேற்கண்ட வழிவகைகளில் சுட்டப்பட்டுகிறவை அல்லாத வேறு பிரச்சினைகளிலும் உச்சநீதிமன்றத்துக்கு மேலுரிமையும் அதிகாரமும் இருக்கும் இப்போது நடப்பிலுள்ள எந்தச் சட்டத்தின் படியும் இந்த அரசமைப்புத் தொடங்கப்போகும் நேரத்தில் மாட்சிமை தங்கிய அரசவை இந்தப் பிரச்சினைகள் தொடர்பாக செலுத்திய மேலுரிமையும் அதிகாரங்களும்.''

அய்யா, அரசவை தீர்ப்பின்படி குடியியல் பிரச்சினைகளுக்கும் கையகப்படுத்துவதற்கான நடவடிக்கைகள் போன்ற வருமான வரிப் பிரச்சினைகளுக்கும் இடையில் ஒரு வேறுபாடு உள்ளது என்பதே நிலை. வருமானவரி தொடர்பான மற்றும் சொத்தினை கையகப்படுத்துவது தொடர்பான சட்ட நடவடிக்கைகள் 'குடியியல் சட்ட நடவடிக்கைகள்' எனப்படுவதன் எல்லைக்குள் வரமாட்டா என்று தீர்ப்புரைக்கப்பட்டுள்ளது. ஆகவே ஒரு தனி வழிவகை செய்யப்படாவிட்டால் உச்சநீதிமன்றத்தின் அதிகாரங்கள் குடியியல் சட்ட நடவடிக்கைகள் என்ற அளவோடு நின்றுவிடும் என்றும் கருதப்படலாம். அந்த ஐயத்தைப் போக்குவதற்காகவே இப்போது இந்த உறுப்பு 112-B யை அறிமுகம் செய்ய கருதுகிறோம். குடியியல் நடவடிக்கைகளை, குடியியல் தன்மையில்லாத ஏனைய நடவடிக்கைகள் உட்பட்ட எல்லாச் சட்டநடவடிக்கைகள் மீதும் உச்சநீதிமன்றத்திற்கு முழு அதிகாரங்கள் தருவதே நோக்கமாகும். இந்தக் காரணத்தால் தான் இவ்வுறுப்பை அறிமுகம் செய்ய முனைகிறோம்.

★ ★ ★

[1]**திரு. அவைத் தலைவர்:** டாக்டர் அம்பேத்கர் நீங்கள் ஏதேனும் கூற விரும்புகிறீர்களா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அய்யா என் நண்பர் பண்டித தாகூர் தாஸ் பர்கவாவின் திருத்தத்தைப் பொறுத்த வரை அவர் உண்மையில் நீதிமன்றத்தின் மேலுரிமையை விரிவுப் படுத்துவதாக இருந்தால், அந்தத் திருத்தம் தேவை என்று நான் கருத வில்லை. 'செயல் முறை'' என்ற சொல்லில் பொதுவாக நடைமுறைப் பிரச்சினைகள் அடங்கிவிடுவதாகக் கருதப்படுகிறது. நான் முன்மொழிந்துள்ள உறுப்பு 112-B நடைமுறை தொடர்பானதல்ல

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர் 14, பக். 1495-96.

முன்மொழிந்துள்ள உறுப்பு 112-B நடைமுறை தொடர்பானதல்ல என்றாலும் அடிப்படையான மேலுரிமை தொடர்பானதாகும். ஆகவே 'அல்லது செயல்முறை' என்ற அவரது திருத்தம் தேவையற்ற தாகும்.

என் நண்பர் பேராசிரியர் ஷிபன்லால் சக்சேனாவின் திருத் தத்தைப் பொறுத்தவரை நான் இரு வாதங்களுக்கு விடையளிக்க விரும்புகிறேன். முதலாவது என்னவென்றால், இராணுவ நீதிமன்றங் கள் வழங்கிய மரண தண்டனை தொடர்பான பிரச்சினைகளில் உச்சநீதிமன்றத்திகு மேல்முறையீடு செய்ய வேண்டுமென்றால் இந்திய ராணுவச் சட்டம் இப்படி ஒரு வழிவகை செய்து குற்றம் சாட்டப்பட்டவருக்கு மேல்முறையீட்டுக்கான உரிமை வழங்குவது எளிது எனலாம்.

> ''உறுப்பு 114 இன் கூறு (1) ஐ என் நண்பரின் கவனத்திற்குக் கொண்டுவரக் கூடுமானால் ஒன்றியப் பட்டியலில் இடம் பெற்றுள்ள எந்தப் பிரச்சினைகள் தொடர்பாகவும் மேற்கொண்டு இப்படிப்பட்ட மேலுரிமையும், அதிகார மும் உச்சநீதிமன்றத்திற்கு இருக்கும் என்று வழிவகை செய்யப்பட்டுள்ளது.
>
> அது கூறுகிறது:
>
> ''114 (1) ஒன்றியப் பட்டியலில் இடம்பெற்றுள்ள பிரச்சினைகளில் எந்த வொன்று தொடர்பாகவும் நாடாளுமன்றம் சட்டம் கொண்டு வழங்கக்கூடிய மேலுரிமையும் அதிகாரங்களும் உச்சநீதிமன்றத்திற்கு இருக்கும்.

இப்படிப்பட்ட அதிகாரத்தை உச்சநீதிமன்றத்திற்கு அளிக்க வேண்டுமென நாடாளுமன்றம் கருதுமானால், ராணுவச் சட்டத்தில் ஒரு பொருத்தமான வழிவகை செய்து இந்த அதிகாரத்தை நாடாளு மன்றம் வழங்குவதற்குத் தடை ஒன்றுமில்லை.

தனிச்சிறப்பான தேவையுள்ள பிரச்சினைகளைப் பற்றிய மேலும் தொடர்பற்றிய உறுப்பு 112ஐ நான் கவனப்படுத்த விரும்பு கிறேன். அதன்படி இராணுவ நீதிமன்றத்திற்கு எதிரான ஒரு மேல் முறையீட்டைப் பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ள உச்சநீதிமன்றத் திற்கு உரிமையுண்டு; ஏனெனில் அதில் பயன்படுத்தப்படுகின்ற சொற்களாவன:

> ''எந்த நீதிமன்றத்தாலும் அல்லது தீர்ப்பாயத்தாலும் நடத்தப்பட்ட எந்த வழக்கு அல்லது பிரச்சினையும்.''

ஆகவே சொல் அமைப்பு இவ்வளவு விரிவாயிருக்க உறுப்பு

மேலுரிமையிலிருந்து எந்த நீதிமன்றம் அல்லது தீர்ப்பாயமும் தப்ப முடியாது. ஆகவே நான் பணிந்து தெரிவித்துக் கொள்வது என்ன வென்றால் அவரது திருத்தமும் கூட கிஞ்சிற்றும் தேவையற்றதே.

''நடப்பிலிருக்கிற சட்டம்'' என்ற சொற்களை விட்டுவிடுவ தற்கு என் நண்பர் திரு. நசிருதீன் அகமது கொண்டு வந்துள்ள திருத் தத்தைப் பொறுத்தவரை...

**திரு.நசிருதீன் அகமது:** நான் அதனை முன்மொழியவில்லை.

**திரு. அவைத் தலைவர்:** அவர் அதனை முன்மொழியாமல் வரைவுக்குழுவிடமே விட்டுவிட்டார்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அவர் அதனை வரைவுக்குழுவிடமே விட்டுவிட்டார் என்றால் மிக்க மகிழ்ச்சி அய்யா. நாம் நிச்சயமாக அவரது வாதத்துக்கு உரியவாறு மிகச் சிறந்த முறையில் கவனம் செலுத்துவோம்.

**திரு. அவைத் தலைவர்:** அடுத்து நான் திருத்தங்களை வாக் கெடுப்புக்கு விடுகிறேன்.

**பேராசிரியர் ஷிபன்லால் சக்சேனா:** ஈண்டு அளிக்கப்பட்ட உறுதிமொழிகளைக் கருத்தில் கொண்டு நான் என் திருத்தங்களை விலக்கிக் கொள்ளவிரும்புகிறேன்.

**பண்டித தாகூர்தாஸ் பர்கவா:** நானும்கூட எனது திருத்தத்தை விலக்கிக் கொள்கிறேன், அய்யா.

அவையின் அனுமதியுடன் திருத்தங்கள் விலக்கிக் கொள்ளப் பட்டன.

(உறுப்பு 112B அரசமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.)

## புதிய உறுப்பு 15A

[1]**திரு. அவைத் தலைவர்:** அடுத்து நாம் புதிய உறுப்பு 15Aக்குத் திரும்பிச் செல்வோம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அய்யா, நான் முன்மொழிவது:

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர் 15, பக். 1496-98.

''உறுப்பு 15க்குப் பிறகு பின்வரும் உறுப்பை நுழைக்கலாம்:

குறிப்பிட்ட சில கைதுகளுக்கும் சிறைப்படுத்தல்களுக்கும் எதிரான பாதுகாப்பு.

'15A. 1. கைது செய்யப்படுகிற எவர் ஒருவரையும் அப்படி கைது செய்வதற்கான காரணங்களைக் கூடுமான விரைவில் தெரிவிக்காமல் காவலில் வைத்திருக்கக்கூடாது, அவர் விரும்பித் தெரிவுசெய்யும் வழக்கறிஞர் ஒருவரை கலந்துபேசுவதற்கான உரிமையை அவருக்கு மறுக்கவும் கூடாது.

2. கைது செய்யப்பட்டு காவலில் வைக்கப்படுகிற ஒவ்வொருவரும் இப்படி கைது செய்யப்பட்டு இருபத்து நான் மணிநேர காலத்திற்குள் மிக அருகிலுள்ள குற்றவியல் நடுவரிடம் முன்னிலையாக்கப்படுவார்; இந்த இருப்பத்தி நான்கு மணிநேரத்தில் கைதுசெய்யப்பட்ட இடத்திலிருந்து நடுவர் நீதிமன்றத்திற்குப் பயணம் செய்வதற்குத் தேவையான நேரம் சேராது. குற்றவியல் நடுவரின் ஆணையுரிமையில்லாமல் இப்படிப்பட்ட எவர் ஒருவரையும் குறிப்பிட்ட காலத்திற்கு மேல் காவலில் வைத்திருக்கக்கூடாது.

3. இந்த உறுப்பில் கூறப்பட்டுள்ள எதுவும் பின்வருபவர்களுக்குப் பொருந்தாது:

அ. இப்போதைக்கு ஓர் அயற்பகைவராக இருக்கிற எவர் ஒருவரும்;

ஆ. தடுப்புக் காவலுக்கு வழிவகைசெய்கிற எந்தவொரு சட்டத்தின்படியும் கைதுசெய்யப்படுகிற எவரொருவரும்;

ஆனால் இந்த உறுப்பு கூறு (3) உட்கூறு (ஆ) இல் கூறப்பட்டுள்ள எதுவும் ஒருவரை மூன்று மாத காலத்திற்கு மேல் காவலில் வைக்க அனுமதிக்காது; அப்படி மூன்று மாத காலத்திற்கு மேல் காவலில் வைப்பதாயிருந்தால்,

அ. ஓர் உயர்நீதிமன்றத்தின் நீதிபதிகளாக இருக்கிற அல்லது இருந்துள்ள ஆட்களைக் கொண்ட ஓர் அறிவுரைக் கழகம் இப்படிக் காவலில் வைத்திருப்பதற்குத் தன்கருத்துப்படி போதிய காரணம் இருப்பதாக குறிப்பிட்ட மூன்று மாத காலம் முடிவதற்குள் அறிக்கை அளித்திருக்க வேண்டும்.

அல்லது

ஆ. இத்தகையவர் இந்த உறுப்பின் கூறு 4 இன் படி நாடாளுமன்றம் இயற்றிய எந்தவொரு சட்டத்தின் வழிவகைகளின்படியும் காவலில் வைக்கப்பட்டிருக்க வேண்டும்.

4. தடுப்புக்காவலுக்கு வழிவகை செய்யும் எந்தவொரு சட்டத்தின்படியும் கைது செய்யப்படுகிறவர் என்னென்ன நிலைமைகளிலும் என்னென்ன வகை வழக்குகளிலும் மூன்று மாத காலத்திற்கு மேல் காவலில் வைக்கப்படலாம் என்பதையும், இத்தகைய எவரொருவரையும் காவலில் வைக்கக்கூடிய அதிக பட்சக் காலத்தையும் கூட நாடாளுமன்றம் சட்டம் கொண்டு குறித்துரைக்கலாம்.''

அய்யா, இந்தப் பேரவையின் முந்தைய அமர்வு ஒன்றில் நாம் உறுப்பு 15 குறித்து விவாதித்துக் கொண்டிருந்தபோது 'சட்டத்தால் நிறுவப்பட்ட நடைமுறையின்படி அல்லாமல்' என்ற சொற்கள் இருக்க வேண்டுமா அல்லது உறுப்பு 15 இல் இப்போது இடம்பெற்றுள்ள சொற்களுக்குப் பதிலாக 'உரிய வழிமுறை' என்ற சொற்களுக்குப்

பதிலாக 'உரிய வழிமுறை'' என்ற சொற்கள் இடம் பெற வேண்டுமா என்ற பிரச்சினை குறித்து மிகப் பெருமளவில் சர்ச்சை ஏற்பட்டதைப் பேரவை நினைவுக்கூரும். 'உரிய வழிமுறை'' என்ற சொற்களுக்குப் பதிலாக 'சட்டத்தால் நிறுவப்பட்ட நடை முறையின்படி'' என்ற சொற்கள் இடம்பெற வேண்டும் என்று இறுதியில் ஏற்றுக்கொள்ளப் பட்டது. உறுப்பு 15 இன் சொல்லமைப்புக் குறித்து அடியேன் உட்பட அவையில் பலரும் பெரிதும் வருத்தமுற்றோம் என்பதை நானறி வேன். நமது அரசமைப்பு முன்வரைவில் உறுப்பு 15 போல் வேறு எந்தப் பகுதியும் வெளியே பொது மக்களால் இவ்வளவு வன்மை யாகக் குற்ற விமர்சனம் செய்யப்பட்டதில்லை என்பதும் நினைவு கூரப்படும். ஏனென்றால் உறுப்பு 15 அது செய்வதெல்லாம் இதுதான்: ஒருவரை கைது செய்ய விடாமல் நிர்வாகத் துறையைத் தடுக்கிறது, அவ்வளவுதான். தேவையானதெல்லாம் ஒரு சட்டம் வேண்டும் என்பதும், அச்சட்டம் எவ்வித நிபந்தனைகள் அல்லது வரம்புத் தடைகளுக்கும் உட்பட்டிருக்கத் தேவையில்லை என்பதுமே. வேறு வார்த்தைகளில் சொல்வதானால், அடிப்படை உரிமைகளைப் பற்றிய அத்தியாயத்தில் இந்தச் செய்தி சேர்க்கப்பட்ட அதே சமயத்தில் நாடாளுமன்றம் உசிதம் என்று நினைக்கக் கூடியவாறு எவரொரு வரையும் எந்த நிலைமைகளிலும் கைது செய்ய வழிவகை செய் வதற்கு நாம் நாடாளுமன்றத்திற்கு முழு உரிமை வழங்குகிறோம் என்று கருதப்படடது. ஆகவே நாம் இப்போது உறுப்பு 15-Aஐ சேர்ப்பதன் மூலம் அப்போது உறுப்பு 15ஐ நிறைவேற்றுகையில் செய்ததற்கு இழப்பீடு செய்கிறோம் என்றும்கூட சொல்லலாம். வேறு சொற்களில் சொன்னால் நாம் உறுப்பு 15Aஐச் சேர்ப்பதன் வாயிலாக நாம் 'உரிய வழிமுறை' பற்றிய சட்டத்தின் சாரத்திற்கு வழிவகை செய்கிறோம்.

உறுப்பு 15A ஆனது ஒவ்வொரு நாகரிக நாடும் சர்வதேச நீதியின் கோட்பாடுகளாக பின்பற்றுகிற மிக அடிப்படையான கோட்பாடு களில் இரண்டை குற்றவியல் நடைமுறைச் சட்டத்தின் வழிவகை களிலிருந்து அகற்றிடவே செய்கிறது. கூறு(1), (2) ஆகியவற்றில் அடங்கியுள்ள இவ்விரண்டு வழிவகைகளும் முன்பே குற்றவியல் நடைமுறைச் சட்டத்தில் காணப்படுவது உண்மைதான்; ஆகவே மிகவும் அடிப்படையான மாற்றம் எதையும் உண்மையில் நாம் செய்யவில்லை என்று அனேகமாய் சொல்லிவிடலாம். ஆனால், நாம் செய்வது அடிப்படை மாற்றமே என்று நான் வாதிடுவேன். ஏனென் றால் உறுப்பு 15Aஐச் சேர்ப்பதன் மூலம் நாம் செய்வது நாடாளு

றால் உறுப்பு 15Aஐச் சேர்ப்பதன் மூலம் நாம் செய்வது நாடாளு மன்றம், மாகாண சட்டமன்றம் ஆகிய இரண்டின் ஆணையுரிமைக் கும் வரம்புத்தடை ஏற்படுத்துவதுதானே தவிர, இந்த இரு வழிவகை களையும் நீக்கம் செய்வதல்ல. ஏனென்றால் அவை இப்போது நமது அரசமைப்புச் சட்டத்திலேயே சேர்க்கப்படுகின்றன.

மாந்தத் தன்னுரிமையின் ஆர்வலர்கள் கூறுகள் (1), (2) ஆகிய வற்றின் வழிவகைகளோடு மனநிறையவடையாமல் போகலாம் என்பது உண்மைதான். மாந்தத் தன்னுரிமையின் மீது, நிர்வாகத் துறையும், சட்டமன்றமும் நடத்தக்கூடிய தலையீடுகளுக்கு எதிராக மேற்கொண்டு காப்புக்கூறுகள் என்ற வகையில் அவர்கள் அனேக மாய் இன்னும் ஏதேனும் விரும்பக்கூடும். மேற்கொண்டு சில காப்புக் கூறுகளைச் சேர்த்து இந்த உறுப்பை விரிவுபடுத்தியிருக்கலாம் என்ற என் சொந்த கருத்தின் அடிப்படையில் நான் அவர்களிடம் பரிவுக் கொள்கின்ற அதேசமயத்தில் கூறுகளில் அடங்கியுள்ள வழிவகைகள் சட்டவிரோதமான அல்லது தற்போக்கான கைதுகளுக்கு எதிராக போதுமானவை என்று நான் முழுமையாக மனநிறைவடைகிறேன்.

உறுப்பு 15A கூறுகள் (1), (2) ஆகியவற்றில் அடங்கியிருக்கும் வழிவகைகள் கூறு (3) இல் எடுத்துரைக்கப்படும் குறிப்பிட்ட சில வரம்புத் தடைகளுக்கு உள்ளாக்கப்படுவதை உறுப்பினர்கள் காண லாம். உறுப்பு 15 A, கூறுகள் (1), (2) ஆகியவற்றில் அடங்கியிருக்கும் வழிவகைகள் இப்போதைக்கு அயற்பகைவர்களாக இருக்கிற எவருக்கும் பொருந்தாது என்று கூறு (3) கூறுகிறது. அயற்பகைவர் தொடர்பாக கூறு (3) (அ) இல் செய்யப்படும் தனி ஏற்பாட்டிற்கு மேற்கொண்டு மறுப்புரை ஏதும் இருக்குமென்று நான் கருதவில்லை.

கூறு(3) உட்கூறு(ஆ)வைப் பொறுத்தவரை நாடு இப்போது இருக்கும் நிலைமைகளில் பொதுப்பட்டியலில் குறிப்பிட்டவாறு பொது ஒழுங்கையோ அல்லது நாட்டின் பாதுகாப்புப் பணிகளையோ கெடுக்கிற ஒருவரை நிர்வாகத்துறைக் காவலில் வைப்பது அவசியம் என்று ஏற்றுக்கொள்ளப்பட்டதாகக் கருதுகிறேன். இந்நிலையில் மனிதரின் தன்னுரிமை அவசியத்தை அரசின் நலனுக்கு மேலான தாகக் கருத வேண்டும் என்று நான் நினைக்கவில்லை. இந்த அடிப் படையில்தான் கூறு(3) இன் வழிவுகைகளுக்குள் உட்கூறு (ஆ) சேர்க்கப்பட்டுள்ளது.

அங்கேயும் தனி நம்பிக்கையுள்ளவர்கள் இந்தத் தடுப்புக் காவல் அதிகாரம் இரு வரம்புத் தடைகளால் கட்டுப்படுத்தப்பட்டிருப்பதை ஏற்றுக்கொள்வார்கள்: முதலாவதாக, கூறு(3)இன் வழி வகைகளின்படி ஒருவரை மூன்று மாதங்களுக்கு மட்டுமே காவலில் வைக்கும் அதிகாரம் அரசுக்கு இருக்கும். அவர்கள் அவரை மூன்று மாதங்களுக்கு மேல் காவலில் வைக்க விரும்பினால், அறிவுரைக் கழகம் அளித்த அறிக்கை அவர்கள் வசமிருக்க வேண்டும். இந்த அறிவுரைக் கழகம் நிர்வாகத்துறையால் சமர்ப்பிக்கப்படும் ஆவணங்களைப் பரிசீலனை செய்து அனேகமாக தனது வழக்கை எடுத்துரைக்க குற்றம் சாட்டப்பட்டவருக்கும் ஒரு வாய்ப்பை வழங்கி காவல் நியாயமானதே என்ற முடிவுக்கு வந்திருக்க வேண்டும். அந்த அறிக்கையின் அடிப்படை யில் மட்டுமே நிர்வாகத் துறையால் அவரை மூன்று மாதங்களுக்கு மேல் காவலில் வைக்க இயலும். இரண்டாவதாக, எவ்வகையான வழக்குகளில் சிறைக்காவல் மூன்று மாதங்களுக்கு மேல் நீண்டு செல்லலாம் என்பதை விதித்தளிக்கிற ஒரு பொதுச் சட்டத்தை நாடாளுமன்றம் இயற்றி, இத்தகைய சிறைக் காவலின் கால அளவைக் குறிப் பிடுமானால் மூன்று மாதங்களுக்கு மேல் சிறைக்காவலை நீட்டிக்கலாம்.

மொத்தத்தில், தனி மனிதச் சுதந்திரத்தின் பாதுகாப்புக்காகப் போராடுகிறவர்கள், இந்தக் கூறினைச் சேர்க்க முடிந்தது குறித்து தங்களைத் தாங்களே பாராட்டிக் கொள்ள வேண்டும் எனக் கருதுகிறேன். இந்தக்கூறு இப்பிரச்சினையில் அறுதிக் கருத்துகளை உடையவர்களுக்கு மனநிறைவளிக்கா விட்டாலும் ‘சட்டத்தின் உரிய வழிமுறை’ என்ற சொற்கள் சேர்க்கப்படாததால் இழக்கப்பட்ட ஏராளமானவற்றை நிச்சயமாகக் காப்பாற்றிக் கொடுக்கிறது. அய்யா, அவைக்கு இந்த உறுப்பைப் பரிந்துரைக்கிறேன்.

★ ★ ★

[1]**பண்டித தாகூர் தாஸ் பர்கவா:** முதன்மை தீர்மானத்தை முன்மொழிந்த மாண்புமிகு உறுப்பினரின் உரையை அவை இப்போது தான் கேட்டது. ‘சட்டத்தின் உரிய வழிமுறை’ என்ற சொற்களைச் சுற்றி சுமார் 11/4 ஆண்டுமுன்பு சுழன்றடித்த சூடான சர்ச்சையை அவைக்கு நான் நினைவுப்படுத்த தேவையில்லை. இப்போது உறுப்பு 13 இல் 70

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர் 15, பக். 1500-01.

விழுக்காடு அடையப்பட்ட பின் உரிய வழிமுறையின் கணிமானப் பகுதி நடைமுறையில் கைவிடப்பட்டுவிட்டது. நமது நாட்டின் நிலைமைகளில் 'உரிய வழிமுறை' என்னும் இந்த வழிவகை நிச்சயம் நூறு விழுக்காடு தேவை என்று நான் கருதுவேன். இந்த நாட்டில் இதுமட்டுமே சரியான வழிமுறையாகும்...

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அய்யா, நான் ஒரு வார்த்தை சொல்லட்டுமா? என் மதிப்பிற்குரிய நண்பரின் திருத்தங் களில் ஒன்றை நான் ஏற்றுக்கொள்ள அணியமாயிருக்கிறேன். குற்றம் சாட்டபட்டவருக்கு சட்டப் பாதுகாப்பு பெறும் உரிமை இருக்க வேண்டும் என்று அந்தத் திருத்தம் சொல்கிறது. உறுப்பு 15A கூறு (1) இன் கடைசி வரியில் இந்தச் சொற்களை என்னால் சேர்க்க முடியும். அது இவ்விதம் அமையும்:

''அவர் விரும்பி தெரிவு செய்யும் வழிக்கறிஞர்களைக் கலந்து பேசுவதற்கோ, அவர்களின் சட்டப் பாதுகாப்பைப் பெறுவதற்கோ ஆன உரிமையை மறுக்கவும் கூடாது.'' என் மதிப்பிற்குரிய நண்பரின் நோக்கத்தை இது நிறைவேற்றும் என்று நான் எண்ணுகிறேன்.

**பண்டித தாகூர் தாஸ் பர்கவா:** வழக்கு விசாரணைகளிலும் அதேபோன்று குற்றவியல் சட்ட நடவடிக்கைகளிலுமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** 'சட்டப் பாது காப்பு' என்பதன் பொருள் இதுவே. நம்மால் இப்போது விவாதத்தை சுருக்கிக் கொள்ள முடியாதா?

★ ★ ★

[1]**திரு.எச்.வி.காமத்:** ... காவல் துறையினரோ வேறு அதிகாரி களோ ஆட்களை அநியாயமாகக் கைது செய்வதால் விளையக் கூடியத் தீமைகள் அல்லது துன்பத்தைப் போக்க வேண்டும் அல்லது எப்படியும் தணிக்கவாவது வேண்டும் என்பதற்காக கைது செய்யப் பட்டவருக்கு அவர் கைது செய்யப்பட்ட அடுத்துவரும் ஏழு நாட் களுக்குள் அவரது கைதுக்கான காரணங்களைத் தெரிவிக்க வேண்டு மென்று இந்தத் திருத்தத்தின் மூலம் திட்டவட்டமாக வழிவகை

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப். 15, பக்.1515-16.

செய்ய விரும்புகிறேன். டாக்டர் அம்பேத்கர் முன்மொழிந்த இந்த உறுப்பில் 'கூடிய விரைவில்'' என்ற சொற்கள் பயன்படுத்தப்பட்டுள் ளன. ஒருவரை கைது செய்யும்போதே கூட அதற்கான காரணங்களை அவருக்குத் தெரிவிப்பதாக இருந்தால் நான் மகிழ்ச்சியடைவேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அதுதான் நோக்கம். உங்கள் திருத்தத்தால் நிலை மோசமடைகிறது.

**திரு. எச்.வி.காமத்:** பின் ஏன் அதனைத் திட்டவட்டமாகச் சொல்லக்கூடாது? 'கூடுமான விரைவில்' என்ற சொற்களுக்குப் பதிலாக 'உடனடியாக' என்ற சொல்லை இடம்பெறச் செய்தால் வரவேற்று மகிழ்வேன். இதே உறுப்புக்கு என் நண்பர் திருமதி பூர்ணிமா பானர்ஜியும் ஒரு திருத்தத்தை முன்மொழிந்திருக்கிறார்; இதில் அவர் 'கூடுமான விரைவில்' என்ற சொற்களுக்குப் பதிலாக 'பதினைந்து நாட்களுக்கு குறையாமல்' என்ற சொற்களை இடம்பெறச் செய்ய வேண்டுமென விரும்புகிறார். பதினைந்து நாள் என்பது நீண்ட காலம் எனக் கருதுகிறேன். இருபத்து நான்கு மணி நேரம் என்பது மிகச் சிறப்பானதாயிருக்குமென நினைக்கிறேன். எந்நிலையிலும் கைதுசெய்யப்பட்டவருக்கு அவர் கைது செய்யப்பட்டதற்கானக் காரணங்களைத் தெரியப்படுத்துவதில் சிக்கல் ஏதும் இருக்குமானால் எந்த வழக்கிலும் அது ஒரு வாரத்திற்குமேல் நீளக்கூடாது என்று நான் எண்ணுகிறேன்.

அய்யா, அடுத்த திருத்தத்திற்கு (எண்.108) வருவதானால் நான் பணிந்து முன்மொழிவது:

''பட்டியல் I (எட்டாவது வாரம்) திருத்தம் எண் 1 இல் முன்மொழியப்பட்ட புதிய உறுப்பு 15Aஇன் கூறு(2) இல் கடைசியாக வரும் 'குற்றவியல் நடுவர்' என்ற சொல்லுக்குமுன்பு 'இப்படிப்பட்டவருக்கு' விசாரிக்கப்படும் வாய்ப்பை வழங்க வேண்டிய என்ற சொற்களைச் சேர்க்கலாம்.''

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** என் மாண்புமிகு நண்பர் திரு.காமத் நிலையை மோசமாக்குகிறார் என்பதை நான் அவருக்குச் சொல்லியாக வேண்டும். கூடுமான விரைவில் என்ற சொற்கள் கைதுக்கு முன்பாக இல்லாவிட்டாலும் கைதுக்குப் பின் உடனடியாக என்பதையே உண்மையில் குறிக்கின்றன என்பதே நமது எண்ணம். கைதுசெய்யப்பட்டு காவலில் வைக்கப்படுகிற ஒவ்வொரு வரும் அப்படிக் கைது செய்யப்பட்ட இருப்பத்தி நான்கு மணி

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப். 15, பக்.1515-16.

நேரத்திற்குள் மிக அருகிலுள்ள குற்றவியல் நடுவரிடம் முன்னிலைப் படுத்தப்படுவார் என்று கூறு (2) சொல்கிறது. எந்த ஒரு குற்றவியல் நடுவரும் ஒருவரைக் காவலில் வைத்திருப்பதற்கு அடிப்படையான குற்றச்சாட்டுகளை அறியாவிட்டால் இருபத்து நான்கு மணி நேரத் துக்கு மேல் காவலில் வைப்பதை அனுமதிப்பதற்கு ஆணையுரிமையை செலுத்த முடியாது.

**திரு. எச்.வி. காமத்:** குற்றவியல் நடைமுறை குறித்து எனக்கும் கொஞ்சம் தெரியும். காவல் துறை ஒரு சான்றோலையோ குற்ற மடலோ தாக்கல் செய்யாமலேயே ஆட்களைத் தொடர்ந்து பதி னைந்து நாட்கள் காவலில் வைப்பதற்கு நடுவர்கள் ஆணையிட்ட வழக்குகளை நான் அறிவேன். வழக்கின் முதல்நிலைத் தகுதிகளைக் கருத்தூன்றி ஆராயமலேயே ஆட்களைக் காவலில் வைக்க ஆணை யிட்டுள்ள நடுவர்களை நான் அறிவேன். டாக்டர் அம்பேத்கர் சொல்லிய 'கூடுமான விரைவில்' என்ற சொற்கள் உண்மையில் 'உடனடியாக' என்பதைக் குறிக்கின்றனவாம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** எந்நிலையிலும் அது இருபத்தி நான்கு மணி நேரத்தைக் குறிக்கும்.

**திரு. எச்.வி. காமத்:** 'கூடுமான விரைவில்' என்ற சொற்கள் திட்டவட்டமான எந்த உட்பொருளுமில்லாமல் பயன்படுத்தப் பட்டுள்ள சில உறுப்புகளை அவரது கவனத்திற்கு நான் கொண்டு வரலாமா? குடியரசுத் தலைவரின் அவசரநிலை அதிகாரங்களைப் பற்றி உறுப்பு 280ஐ எடுத்துக்காட்டாகக் கொள்ளலாம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** 'கூடுமான விரை வில்' என்ற சொற்களின் பொருள் விளக்கம் இடத்திற்கிடம் வேறு படத்தான் செய்யும்.

**திரு. எச்.வி. காமத்:** இந்த அரசமைப்புச் சட்டத்தில் பயன் படுத்தப்படும் சொற்கள் மற்றும் தொடர்களின் பொருள் குறித்து விளக்கமளிப்பதற்கும், சந்தேகப்படும் வழக்கறிஞர்களோடும் சந்தேகப்படும் நீதிபதிகளோடும் வாதிடுவதற்கும் டாக்டர் அம்பேத் கர் எப்போதும் இந்தியாவில் இருப்பாரா என்பதை நானறியேன். இந்த நாட்டில் நம் நீதிபதிகளுக்கும் வழக்கறிஞர்களுக்கும் வழிகாட்டு வதற்கு டாக்டர் அம்பேத்கர் என்றும் இறவாமல் வாழப் போவ தில்லை என்பதற்காக வருந்துகிறேன். அரசமைப்புச் சட்டம் வரப் போகும் தலைமுறைகளுக்குத்தானே தவிர டாக்டர் அம்பேத்கரின்

ஆயுள்காலத்திற்காக அல்ல என்பதால் நாம் சொல்வதைத் திட்ட வட்டமாகச் சொல்ல வேண்டும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நீங்கள் உங்களின் இறவாமையை மிக மலிவாக விற்கிறீர்கள்.

**திரு. எச்.வி. காமத்:** உடல்சார்ந்த இறவாமையில் எனக்கு விருப்பமே இல்லை. ஆயினும் டாக்டர் அம்பேத்கர் என்றும் இறவா மல் வாழப்போவதாக எண்ணிக் கொள்கிறார் என்று தோன்றுகிறது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** நீங்கள் இந்தத் திருத்தத்தை அவையில் வைத்தது தவறு என்று ஒப்புக்கொள்ளக் கூடும்.

★ ★ ★

[1]**திரு. எச்.வி. காமத்:** டாக்டர் அம்பேத்கர் தமது உரையில் தன்னுரிமைக்காக ஆர்வத்துடன் போராடும் வீரர்களைப் பற்றி குறிப்பிட்டார். நான் முழுமுதல் தன்னுரிமைக்காக வாதாடுகிறவன் அல்லேன் என்பதைத் தெளிவுப்படுத்துவேன்.

**திரு. அவைத் தலைவர்:** அவர் இன்று முழு முதல் தன் னுரிமை குறித்துப் பேசவில்லை.

**திரு. எச்.வி. காமத்:** அய்யா எனக்குச் சரியாக நினைவு இருக்கு மானால் அவர் பேசவே செய்தார்.(மாண்புமிகு டாக்டர் அம்பேத்கர் ஆம் என்ற பொருளில் தலையசைத்தார்). அவர் முழு முதலான மாந்தத் தன்னுரிமையைக் குறிப்பிட்டார். நான் முழுமுதலான மாந்தத் தன் னுரிமைக்காகப் போராடுகிறவனோ, வாதாடுகிறவனோ, அல்லேன்.

## உறுப்பு 15A

[2]**திரு. மகாவீர் தியாகி** (ஐக்கிய மாகாணங்கள்: பொது): டாக்டர் அம்பேத்கரும் வரைவுக்குழுவின் மற்ற உறுப்பினர்களும் வரைவுக் குழுவின் உறுபினர்களாவதற்கு முன்பு சிறைச்சாலைகளில் அடை பட்டுக் கிடக்கும் அனுபவத்தைப் பெற்றிருந்தால் நன்றாயிருக்கும்

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர் 15, பக். 1518.
2. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர் 16, பக். 1547.

என்ற என் விருப்பத்தைத் தெரிவிப்பதற்காக டாக்டர் அம்பேத்கர் தயவுசெய்து என்னை மன்னிப்பாராக.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** நான் இனிமேல் அந்த அனுபவத்தைப் பெற முயலுவேன்.

**திரு. மகாவீர் தியாகி:** பிரித்தானிய அரசு டாக்டர் அம்பேத் கருக்கு இந்தச் சிறப்புரிமையை அளிக்கவில்லை என்ற போதிலும் அவர் தமது கையாலேயே உருவாக்கிக் கொண்டிருக்கும் இந்த அரசமைப்புச் சட்டம் அவரின் வாழ்நாளிலேயே அந்தச் சிறப் புரிமையை அவருக்கு அளிக்கும் என்று நான் அவருக்கு உறுதியளிக் கக்கூடும். அவர்கள் இயற்றுகிற அதே கூறுகளின் வழிவகைகள்படி அவர்கள் காவலில் வைக்கப்படும் நாள் வந்தே தீரும். (குறுக்கீடு).

★ ★ ★

[1]**திருமதி ஜி. துர்காபாய்:** அய்யா, இந்த உறுப்பை அவை ஏற்றுக்கொள்வதற்காகப் பரிந்துரைக்கிறேன்.

**திரு. அவைத் தலைவர்:** இந்த உறுப்புகளுக்குக் கெதிராக தெரிவிக்கப்பட்டுள்ள குற்ற விமர்சனங்களுக்கு விடையளிப்பதற்காக டாக்டர் அம்பேத்கர் சில கருத்துக்களைத் தெரிவிக்க வேண்டியிருக் கிறது என்று அறிகிறேன். ஆகவே இக்கட்டத்தில் பேச அவருக்கு ஒரு வாய்ப்பளிக்கிறேன்; மேற்கொண்டு கேள்வி ஏதும் எழுமானால் நாம் அதனைப் பரிசீலிக்கலாம்.

**பாபு ராம்நாராயண் சிங் (பீகார்:பொது):** இந்த உறுப்பை அறவே நீக்கிட அவர் ஒப்புக்கொள்கிறீரா?

**திரு. அவைத் தலைவர்:** இல்லை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அய்யா, இந்த உறுப்பு 15 A குறித்த விவாதத்தில் அவையின் நேரம் இந்தளவுக்கு எடுத்துக்கொள்ளப்படும் என்று நான் உண்மையில் நினைக்கவில்லை. நான் முன்பே சொன்னது போல், உறுப்பு 15 இன் மொழி நடையை, அதாவது சட்டத்தால் விதித்தளிக்கப்பட்ட நடைமுறைக்கேற்ப ஒருவரைக் கைது செய்யலாம் என்பதைக் கருத்தில் கொண்டால்

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப். 16, பக். 1556 - 1565.

தனிமனிதச் சுதந்திரத்தின் பாதுகாப்புக்கும் இடர்காப்புக்கும் நாம் போதிய கவனம் செலுத்தவில்லை என்று அடியேனும் வரைவுக் குழுவிலுள்ள பெரும்பாலானவர்களும் அதேபோல் பொதுமக்களும் கருதுகிறோம். அந்த உறுப்பு ஏற்றுக் கொள்ளப்படாதிலிருந்தே நானும் என் நண்பர்களும் 'உரிய வழிமுறை'' என்ற சொற்களைப் பயன்படுத்தாமலே உரிய நடைமுறையின் அடக்கத்தை அதன் அடிப்படைக் கூறுகளில் ஏதோ ஒரு வழியில் மீட்டமைக்க முயன்று வருகிறோம். தனிமனிதரின் தன்னுரிமையில் அக்கறை கொண்டுள்ள உறுப்பினர்கள் உறுப்பு 15A அடங்கியுள்ள வழிவகைகள் தங்களுக்கு அளிக்கும் வாய்ப்பு குறித்து மன நிறைவடைந்து அதற்கு மேலும் மகிழ்ச்சி கொண்டிருப்பார்கள் என்றும், அவர்கள் இதனைக் கண்ணியத்துடன் ஏற்றுக் கொண்டிருப்பார்கள் என்றும் நான் எண்ணியிருப்பேன். ஆனால் இந்த விவாதத்தில் பங்கெடுத்து இருப்பவர்கள் இந்த உணர்வுடன் செயல்படவில்லை என்பதற்காகவும் அவர்கள் இந்த உறுப்பைக் குறை கூறுகிறார்கள் என்ற நிலையில் மட்டுமல்லாமல் அதன் எதிராளிகள் என்ற நிலையிலும் தங்களை நிறுத்திக் கொண்டுள்ளார்கள் என்பதற்காகவும் நான் வருந்துகிறேன். உண்மையில் அவர்களின் தீவிரமான தன்னுரிமைக் காதல் எந்தளவிற்கு போய்விட்டதென்றால் இந்த உறுப்பையே விலக்கிக்கொள்வது மிகவும் நன்றாயிருக்கும் என்று அவர்கள் என்னிடமே சொன்னார்கள்.

அய்யா, நான் இப்போது அந்த அறிவுரையை ஏற்றுக்கொள்ள அணியமாயில்லை, ஏனென்றால் அதுவன்று அறிவு வழி என்பது குறித்து என் மனத்தில் எள்ளவும் ஐயம் இல்லை; ஆகவே உறுப்பு 15Aஐ இறுகப் பற்றி நிற்பேன். குறைகூறி பேசிய பல்வேறு உறுப்பினர்களும் எழுப்பியுள்ள சில வாதக்கூறுகளைப் பரிவுடன் பரிசீலிக்க வேண்டி யிருப்பதை ஏற்றுக் கொள்ளவே செய்கிறேன். எழுப்பப்பட்டுள்ள வாதங்களைக் கருத்தூன்றிப் பரிசீலிக்கவும் வரைவு உறுப்பு 15Aஇல் குறிப்பிட்ட சில அடிப்படைக் கூறுகள் விடப்பட்டுள்ளன என்ற விமர்சனத்தைப் போக்கக்கூடியவை என்று நான் கருதும்படியான திருத்தங்களை அவையில் முன்மொழியவும் அணியமாய் உள்ளேன். விமர்சனத்திற்கு விடையளிக்கையில் உறுப்பின் பொதுப் பகுதியை தடுப்புக்காவல் பற்றிய தனிப் பகுதியிலிருந்து பிரித்து வேறுபடுத்த எண்ணியுள்ளேன்; தடுப்புக் காவலைத் தனியாக எடுத்துக் கொள்வேன்.

இப்போது உறுப்பு 15-A கூறு (1) இன் பக்கம் திரும்புவதானால் மூன்று யோசனைகள் தெரிவிக்கப்பட்டதாகக் கருதுகிறேன்.

ஒன்று 'கூடுமான விரைவில்'' என்ற சொற்கள் தொடர்பானதாகும். இந்தச் சொற்கள் நீக்கப்பட வேண்டுமென்று உறுப்பினர்கள் முன் மொழிந்த திருத்தங்கள் உள்ளன. அந்தச் சொற்களுக்குப் பதிலாக 'பதினைந்து நாட்கள்'' என்றும் சில இடங்களில் 'ஏழுநாட்கள்' என்றும் முன்மொழியப்படுகிறது. 'கூடுமான விரைவில்'' என்ற சொற்கள் இந்த இடத்தில் என்ன பொருளைத் தருகின்றன என்பது அடியோடு தவறாகப் புரிந்து கொள்ளப்பட்டிருப்பதை இந்தத் திருத் தங்கள் காட்டுவதாகக் கருதுகிறேன். இந்தச் சொற்கள் கூறு (2) உடன் இரண்டற இணைந்துள்ளன. இச்சொற்களைக் கூறு (2) இல் அடங்கியுள்ள வழிவகைகளுடன் தொடர்புப்படுத்தி அல்லாமல் வேறுவகையில் புரிந்து கொள்ள முடியாதெனக் கருதுகிறேன். எவ ரொருவரையும் 24 மணிநேரத்திற்கு மேல் காவலில் வைக்கக்கூடாது என்று அந்த வழிவகைகள் திட்டவட்டமாகச் சொல்கின்றன; அப்படி 24 மணி நேரத்திற்கு மேலும் காவலில் வைக்க வேண்டு மானால், அவரைக் கைது செய்து காவலில் வைக்கிற காவல்துறை அதிகாரி அந்த 24 மணிநேரத்தின் முடிவில் குற்றவியல் நடுவரிட மிருந்து ஆணையுரிமை பெற்றாக வேண்டும். இவ்வாறுதான் இந்தப் பரிவைப் படித்துப் புரிந்து கொள்ள வேண்டும். இப்போது காவல்துறை அதிகாரி 24 மணி நேரத்திற்குப் பிறகும் ஒருவரைத் தொடர்ந்து தளைப்படுத்தி வைப்பதானால் குற்றவியல் நடுவரிட மிருந்து நீதியியல் ஆணையுரிமை பெற்றாக வேண்டும் என்றால் எப்படியும் அவர், அந்த ஆளைக் கைது செய்ததற்குக் காரணமான குற்றச்சாட்டைக் குற்றவியல் நடுவருக்குத் தெரிவிக்கவாவது வேண்டியிருக்கும் என்பது கூறாமலே விளங்கும். இதன் பொருள் என்னவென்றால் 'கூடுமான விரைவில்' என்பது 24 மணி நேரத்திற்கு மேல் நீண்டு செல்ல முடியாது. ஆகவே பதினைந்து நாட்கள் என்றோ ஏழு நாட்கள் என்றோ முன்மொழிகிற திருத்தங்கள் எல்லாம் உண்மையில் தனிமனிதனின் தன்னுரிமையைக் குறுக்கிக் கட்டுப் படுத்துகிற திருத்தங்களே. ஆகவே அந்தத் திருத்தங்கள் அறவே தவ றானவை, தேவையற்றவை எனக் கருதுகிறேன்.

இரண்டாவதாக எழுப்பப்பட்டவாதம் என்னவென்றால் உறுப்பு 15-A (1) இல் குற்றம் சாட்டப்பட்ட ஒருவருக்கு அவர் விரும்பித் தெரிவுசெய்யும் வழக்கறிஞரைக் கலந்து பேசும் உரிமையை நாம் வழங்கியுள்ளோம் என்றும் அதே சமயத்தில் அவரைப் பாதுகாத்து வழக்கறிஞர் வழக்காட அனுமதிப்பதற்கான வழிவகை ஏதும் நாம் செய்யவில்லை என்பதாகும். அதாவது கலந்துபேசும் உரிமையும் சட்டப் பாதுகாப்பு பெறும் உரிமையும் வேறுபடுத்திப் பார்க்கப் படுகின்றன. 'கலந்து பேசுதல்' என்ற சொற்களில் சட்டப் பாதுகாப்பு

பெறும் உரிமையும் அடங்கும் என்பது என் சொந்தக்கருத்தாய் இருந்தது; ஏனென்றால் கலந்து பேசுவது சட்டப் பாதுகாப்பு பெறும் நோக்கத்திற்காக அல்லவென்றால் அதனால் பயனேதுமிருக்காது. ஆயினும் பொருள்மயக்கம் ஏதுமிருந்தால் அதனைப் போக்குவதற் காகவும் கலந்து பேசுதல் என்பது ஒரு வரம்புக்குட்பட்ட பொருளில் ஆளப்படுகிறது என்று எவரும் வாதிடுவதை தவிர்ப்பதற்காகவும், 'கலந்து பேசுதல்'' என்ற சொற்களுக்குப் பிறகு 'ஒரு வழக்கறிஞரின் சட்டப் பாதுகாப்பைப் பெறுதல்' என்ற சொற்களைச் சேர்த்துக் கொள்ள நான் அணியமாய் உள்ளேன். இவ்விதம் கலந்து பேசும் உரிமை சட்டப் பாதுகாப்பு பெறும் உரிமை ஆகிய இரண்டுக்குமே இடமிருக்கும்.

இறுதியாகப் பேசியவர் ''அவருக்கு விரும்பி தெரிவு செய்யும் வழக்கறிஞர்'' என்ற சொற்களின் பொருள் குறித்து ஒரு கேள்வி எழுப்பியுள்ளார். அவர் விரும்பி தெரிவுசெய்யும்'' என்ற சொற்கள் முக்கியமானவை என்பதில் ஐயமில்லை. வேண்டுமென்றே அவற்றைப் பயன் படுத்தியுள்ளோம். ஏனென்றால் அன்றைய அர சாங்கம் குற்றம் சாட்டப்பட்ட ஒருவரின் வழக்கில் முன்னிலை யாவதற்கு பொருத்த மானவர் என்று தாங்கள் கருதக்கூடிய ஒரு வழக்கிறஞரை அவர்மீது சுமத்துவதை நாம் விரும்பவில்லை; ஏனென் றால் குற்றம் சாட்டப்பட்டவருக்கு அவரிடத்தில் நம்பிக்கையில்லா திருக்கலாம். ஆகவே நாம் ''அவர் விரும்பித் தெரிவு செய்யும்'' என்ற சொற்களைப் பயன் படுத்தியுள்ளோம். ஆனால் ''அவர் விரும்பித் தெரிவுசெய்யும்'' என்ற சொற்கள் ''வழக்கறிஞர்'' என்ற சொல்லுக்கு உரித்தாக்கப்படுகின்றன. ''வழக்கறிஞர்' என்ற சொல் நாம் வழக்க மாகப் புரிந்து கொள்ளும் பொருளைத் தருவதாகும், அதாவது உயர் நீதிமன்றம் அல்லது சம்மந்தப்பட்ட நீதிமன்றத்தின் விதிகளின்படி சட்டத்தொழில் செய்ய உரிமை படைத்த வழக்கறிஞரைக் குறிப் பதாகும்.

அய்யா, இப்போது நான் கூறு (2) க்கு வருகிறேன். என் நண்பர் திரு. படாஸ்கர் எழுப்பியதே முதன்மையான வாதம். என்னால் புரிந்துகொள்ள முடிந்தவரை அவர் நடுவர் என்ற சொல்லுக்குப் பதிலாக முதல் வகுப்பு நடுவர் என்ற சொற்களை இடம்பெறச் செய்ய வேண்டுமென விரும்பினார். நன்று. அவர் முன்மொழிந்த சொற்களை ஏற்றுக் கொள்வதில் இரண்டு காரணங்களால் சற்றே இடர்ப்பாடு இருக்கக் காண்கிறேன். நாம் கூறு(2) இல் மிக முக்கிய மான சொற்களை அதாவது ''மிக அருகில் உள்ள குற்றவியல் நடுவர்''

என்ற சொற்களைப் பயன்படுத்தியுள்ளோம்; அது பெரிதும் தேவைப் படுவதாக நான் கருதினேன். ஏனென்றால் அவ்வாறு இல்லாவிட் டால் காவல்துறை அதிகாரி குற்றம் சாட்டப்பட்டவரை குறிப்பாக எவரிடம் கொண்டு செல்ல விரும்புகிறாரோ அந்த நடுவர் அல்லது குற்றம்சாட்டப்பட்டவரின் வழக்கை விசாரணை செய்ய இறுதியாக உரிமை பெற்றிருக்கக்கூடிய நடுவர் வெகுதொலைவில் வசிக்கிறார் என்பதால் குற்றம் சாட்டப்பட்டவரை நீண்டகாலத்திற்குக் காவலில் வைத்திட நியாயமான காரணம் உள்ளது என்று சொல்லி அந்தக் காவல்துறை அதிகாரி அவரை அப்படிக்காவலில் வைத்துக்கொள்ள துணைசெய்வதாகிவிடும். இத்தகைய வாதம் எதற்கும் இடமளிக்கக் கூடாது என்பதற்காக ''மிக அருகிலுள்ள நடுவர்'' என்ற சொற்களைப் பயன்படுத்தினோம்.

''இப்போது மிக அருகில் உள்ள முதல் வகுப்பு நடுவர்'' என்று சேர்த்துச் சொல்ல வேண்டுமென வைத்துக் கொண்டால் மிகவும் கடினமாகிவிடும். ''மிக அருகிலுள்ள நடுவர்'' இருக்கலாம்; குற்றம் சாட்டப்பட்டவரின் வழக்கு நீதியியல் ஆய்வுக்கு உட்படும் பொருட்டு அவரது நலனை முன்னிட்டே இந்த நடுவரை அணுக வேண்டும். ஆனால் அவர் முதல் வகுப்பு நடுவராக இல்லாமல் போகலாம். ஆகவே நாம் உண்மையில் இரண்டில் ஒன்றைத் தேர்ந்தெடுக்க வேண்டும். குற்றம் சாட்டப்பட்டவருக்கு அவரது பிரச்சினையை அருகிலுள்ள குற்றவியல் நடுவர் தீர்மானிக்கவும், ஆராயவும் ஆக விரைவில் வாய்ப்பளிக்கப் போகிறோமா? அல்லது நாம் முதல் வகுப்பு நடுவரைத் தேடிச்செல்லப் போறோமா? மிக அருகிலுள்ள குற்றவியல் நடுவர் என்பதே குற்றம் சாட்டப்பட்டவரின் தன்னுரிமை யின் நலன் காக்கும் மிகச் சிறந்த வழிவகை எனக் கருதுகிறேன். என் நண்பர் திரு. படாஸ்கர் கொண்டு வந்துள்ள திருத்தத்தை ''மிக அருகிலுள்ள முதல் வகுப்பு குற்றவியல் நடுவர்'' என்பதை - நான் ஏற்றுக்கொள்வதாக இருந்தாலும்கூட - அன்றைக்கு இருக்கும் அர சாங்கம் குற்றவியல் முதல் நிலை குற்றவியல் நீதிமன்ற நடுவரின் நடைமுறைச் சட்டத்தைத் திருத்தி ஒரு முதல் வகுப்பு நடுவரின் அதிகாரங்களைத் தங்களுக்கு வேண்டிய எந்த நடுவருக்கும் வழங்கி குற்றம் சாட்டப்பட்டவரை இவ்விதம் வஞ்சிப்பது முழுக்க சாத்திய மாகவே இருக்கும். ஆகவே அவரது திருத்தம் விரும்பத்தக்கது என்றோ தேவையானது என்றோ நான் கருதவில்லை; என்னால் அதனை ஏற்றுக்கொள்ள முடியாது. நிற்க இவை உறுப்பு 15(அ) இல்

★ புள்ளிகள் மூலத்தில் காட்டப்பட்டவாறு குறுக்கீட்டைக் காட்டும்.

அடங்கியுள்ளவாறு பொதுவான வழிவகைகளே ஆகும்; நான் உறுதி யாக நம்புகிறேன்....*

**பண்டித தாகூர் தாஸ் பர்கவா:** அன்புகூர்ந்து பரிசீலியுங்கள்...

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** இப்போது என் நண்பர் பண்டித தாகூர் தாஸ் பர்கவா குறுக்கு குறுக்கு விசாரணை உரிமை பற்றிய பிரச்சினையை எழுப்பியுள்ளார்.

**பண்டித தாகூர் தாஸ் பர்கவா:** பதிவு செய்யப்பட்ட காரணங் களுக்காக:

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** நன்று. அது ஒரு பயனுள்ள வழிவகை என்று நான் எண்ணுகிறேன்; ஏனென்றால் குற்றவியல் நடுவர் காரணங்களை எழுத்து வடிவில் பதிவு செய் வதைக் கட்டாயமாக்குகிற பலவழிவகைகள் குற்றவியல் நடைமுறைச் சட்டத்தில் உள்ளன. நடுவருக்குத் தரப்பட்டுள்ள விருப்புரிமை நீதி யியல் முறையில் செலுத்தப்பட்டுள்ளதா என்பதை உயர்நீதிமன்றம் பரிசீலிக்க இந்த வழிவகைகள் துணை செய்கின்றன. மிகவும் பய னுள்ள வழிவகை என்பதை நான் ஏற்றுக்கொள்ளத்தான் செய் கிறேன். ஆனால் இந்தவகையான ஒரு பிரச்சினையில், மேற்கொண்டு குறிப்பிட்டக் காலத்திற்கு காவலில் வைக்க ஆணையிட வேண்டி யிருக்குமிடத்து குற்றம் சாட்டப்பட்டவருக்கெதிராக காவல்துறை கொடுத்துள்ள குற்றச்சாட்டுக்கு முதல்நிலையில் ஆதாரமுள்ளதா என்பதைப் பரிசீலிக்கும் ஆணையுரிமை நடுவருக்கு இருக்குமா, இருக்காதா என்பதை என் நண்பர் கருதிப் பார்க்க வேண்டுமென நான் உண்மையில் விரும்புகிறேன்.

**பண்டித தாகூர் தாஸ் பர்கவா:** இப்போது பிரிவு 167(3)லும் இந்தச் சொற்கள் உள்ளன. ஒவ்வொரு குற்றவியல் நடுவரும் அவரிடம் ஒருவரைக் கொண்டு செல்லும்போது சிறைக்காவல் தொடர அனுமதிப்பாரானால் அதற்கான காரணங்களைப் பதிவு செய்ய வேண்டும் என்பது இன்றைய நிலையில் கட்டாயக் கடமையாகும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அது உண்மைதான். அந்த சொற்கள் அங்குள்ளன. ஆனால் அவை மிகவும் அவசிய மானவைதானா?

**பண்டித தாகூர் தாஸ் பர்கவா:** முழுக்க முழுக்க அவசிய மானவை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** என்னைப் பொறுத்த வரை அவை தேவையானவை என்று கருதவில்லை. படுமோசமான

நேர்வை எடுத்துக்கொள்வோம். ஒரு குற்றவியல் நடுவர் காவல் துறையை மகிழ்விக்க வேண்டுமென்பதற்காகவோ என்னவோ ஒன்றன் பின் ஒன்றாக காவல் ஆணைகள் இடையறாமல் வழங்கு வதை வழக்கமாக்கிக் கொண்டிருப்பதாகவும், குற்றம் சாட்டப்பட்ட வரை தொடர்ந்து காவலில் வைத்துக்கொள்ள இவ்விதம் காவல் துறைக்குத் துணை செய்வதாகவும் கொள்வோம். குற்றம் சாட்டப் பட்டவருக்குப் பரிகாரம் கிடைக்க வழியேயில்லை என்பதுதான் வாதமா? மறுஆய்வுகோரி உயர்நீதிமன்றத்திற்குச் சென்று, நீதிமன்ற நடைமுறை தவறாக பயன்படுத்தப்படுகிறது என்று கூறும் பரிகாரம் குற்றம் சாட்டப்பட்டவருக்கு உள்ளது என்று நான் கருதுகிறேன்.

**பண்டித தாகூர்தாஸ் பர்கவா:** ஏழையால் எப்படி உயர் நீதிமன்றம் செல்ல முடியும்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** இது குறித்து என் மனத்தை மூடிக்கொள்ள நான் விரும்பவில்லை. தேவையிருக்கு மானால் இச்சொற்களைச் சேர்க்க வேண்டுமா என்பதை வரைவுக் குழு பின்னொரு கூட்டத்தில் பரிசீலிக்கும்படி விட்டுவிடலாம் என்று எண்ணுகிறேன். இப்போது சொல்லப்பட்டுள்ள அறிவுரையின்படி அச்சொற்கள் தேவையற்றவை என்று நாம் எண்ணுகிறோம்.

இப்போது நான் தடுப்புக்காவல் பற்றிய உறுப்பு 15(3) இன் இரண்டாவது பகுதிக்கு வருகிறேன். என் நண்பர் திரு. தியாகி உறுப்பின் இந்தப் பகுதிக்கெதிராகக் கடுங்கோபம் காட்டியுள்ளார். இதற்காக என் நண்பர் திரு.தியாகியை என்னால் மன்னிக்கமுடியும் என்று நினைக்கிறேன். ஏனென்றால் எப்படியும் அவர் வழக்கறிஞர் அல்லர், என்ன நடக்கிறது என்று உண்மையில் அவருக்குத் தெரியாது. சாமான்யரின் உள்ளத்திற்கு விளங்கக்கூடிய ஏதோ ஒன்று தலைதூக்கும் போது அவர் திடீரென்று விழித்துக் கொள்கிறார்; ஆனால் தலை தூக்குவதும் தன்னை விழிக்கச் செய்வதும் உண்மையில் வேறொன் றின் தொடர்விளைவு மட்டுமே என்பதை அவர் உணர்வதில்லை. ஆனால் வழக்கறிஞர்களாக இருக்கும் அவை உறுப்பினர்கள் மேற்கொண்டுள்ள போக்கிற்காக அவர்களை என்னால் மன்னிக்க முடியாது.

நாம் செய்து கொண்டிருப்பதென்ன? இப்போது என்ன செய் கிறோம் என்று அவைக்கு நான் விளக்கிச் சொல்வேன். அட்ட வணையில் அடங்கிய மூன்று பட்டியல்கள் நம்முன் இருந்தன. மூன்று பட்டியல்களிலும் தடுப்புக் காவல் பற்றிய இரு பிரிவுகள் சேர்க்கப்

பட்டன. பட்டியல் I இல் ஒன்று, பட்டியல் III இல் மற்றொன்று. இப்போது தடுப்புக்காவல் தொடர்பான உறுப்பின் இப்பகுதியை விட்டுவிடுவதாக வைத்துக் கொள்வோம். அதன் விளைவு என்னவாக இருக்கும்? தடுப்புக் காவலுடன் எவ்வகைச் சட்டம் வேண்டுமானாலும் இயற்ற மாகாணச் சட்டமன்றங்களுக்கும் அதேபோல் மையச் சட்டன்றத்துக்கும் முழு சுதந்திரம் கிடைத்துவிடும். ஏனென்றால் எந்தச் சட்டம் வேண்டுமானாலும் இயற்றிட மைய அரசுக்கும் மாகாணங்களுக்கும் நாம் இப்போது வழங்கியுள்ள அதிகாரத்தைச் செலுத்துவதற்கு இந்த அரசமைப்புச் சட்டம் ஒரு திட்டவட்டமான உறுப்பைக் கொண்டு வரம்புத்தடை விதிக்காவிட்டால் எந்த உரிமையும் மிச்சமிருக்காது; நாடாளுமன்றமும் மாநிலச் சட்டமன்றங்களும் தடுப்புக் காவல் பற்றிய எவ்வகைச் சட்டம் வேண்டுமானாலும் இயற்ற முழு உரிமை பெற்றவையாகிவிடும். இந்த அவையில் உள்ள வழக்கறிஞர்களான உறுப்பினர்கள் நாடாளுமன்றத்திற்கும் மாநில சட்டமன்றங்களுக்கும் அவ்வகையான உரிமை அளிக்கப்பட வேண்டுமென விரும்புகிறீர்களா? இன்று தெரிவிக்கப்பட்டவாறு அவர்களின் போக்கு இத்தகைய வழிவகை ஏதும் நமக்கு வேண்டியதில்லை என்பதாக இருக்குமானால், அவர்கள் என்ன செய்திருக்க வேண்டும் என்றால் பட்டியல் I, III ஆகியவற்றில் அந்தப் பதிவுகளுக்கு எதிர்ப்பு தெரிவித்திருக்க வேண்டும் என்பதைப் பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன். நாம் செய்வது ஒரு மீட்பு முயற்சி. தடுப்புக்காவல் தொடர்பான சட்டங்களை இயற்ற மாநிலச் சட்டமன்றங்களுக்கும் நாடாளுமன்றத்திற்கும் நாம் அதிகாரம் வழங்கியுள்ளோம். அந்த அதிகாரத்தைக் குறுக்கி அதன்மீது ஒரு வரம்புத் தடை விதிக்கவே நான் முயன்று கொண்டிருக்கிறேன். நான் இதை மோசமாக்கவில்லை. நீங்கள் மோசமாக்கி இருக்கிறீர்கள்.

இரண்டாம் பகுதியில் அடங்கியுள்ள திட்டவட்டமான வழிவகைக்கு வருவதானால் நான் முதலில்...*

**பண்டித தாகூர்தாஸ் பர்கவா:** அந்த பட்டியல்களைத் தயாரித்தது யார்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் தயாரித்தேன். நீங்கள் நிறைவேற்றினீர்கள்!

நான் இந்த வரம்புத் தடைகளை மனத்தில் கொண்டிருந்தேன். இப்போது நான் கூறு (3) (ஆ) இன் துணைவிதிக்கு வருகிறேன்.

---

★ புள்ளிகள் மூலத்தில் காட்டப்பட்டவாறு குறுக்கீட்டைக் காட்டும்.

**திரு. மகாவீர் தியாகி:** கூறு (4) இன்படி அறிவுரைக் கழகம் வழக்குகளை மறு ஆய்வு செய்வதற்கு நீங்கள் ஏன் வழிவகை செய்ய வில்லை என்பதைச் சட்டம் பயிலாத சாமான்யர்களுக்கு உதவுவீர்களா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இந்த அவையில் சட்டக்கூறுகளை அவருக்கு விளக்கிச் சொல்ல முடியாது. இந்த அவை ஒரு சட்ட வகுப்பன்று; இப்போது அவ்வகை விளக்கமளிப் பதில் என்னால் இறங்க முடியாது. மாண்புமிகு உறுப்பினர் என் நண்ப ராவார்; அவருக்குப் புரியவில்லை என்றால் பிறகு என்னிடம் வந்து கேட்கலாம்.

இப்போது நான் துணைவிதிக்கு வருகிறேன். அது இரு வகையான விமர்சனங்களுக்கு உள்ளாகியிருக்கிறது. ஒன்று என்ன வென்றால்: தடுப்புக் காவலைப் பற்றிய சட்டம் அல்லாத சாதாரண சட்டத்தின்படி கைது செய்யப்பட்டு காவலில் வைக்கப்படுகிறவர் களைப் பொறுத்தவரை குற்றஞ் சாட்டப்பட்டவரிடம் அவரைக் கைதுசெய்ததற்கான காரணங்கள் தெரிவிக்கப்படும் என்று உறுப்பு 15A கூறு 1இல் வழிவகை செய்துள்ளோம். தடுப்புக் காவலில் சிறை வைக்கப்படுபவரைப் பொறுத்தவரை நாம் இப்படிப்பட்ட எந்த வொரு வழிவகையும் செய்யவில்லை என்று நான் சொன்னேன். அது நியாயமான விமர்சனம் என்று நான் கருதுகிறேன். நிலையைச் சீர்படுத்த நான் அணியமாய் இருக்கிறேன்; ஏனென்றால் தடுப்புக் காவல் தொடர்பாக பல மாகாண அரசுகளாலும் இயற்றப்பட்டு இப்போது நடப்பிலுள்ள சட்டங்களிலேயேகூட, குற்றம் சாட்டப் பட்டவருக்கு அவரைக் காவலில் வைத்து இருப்பதற்கான காரணங் கள் தொடர்பாகதெரி விப்பதற்கு வழிவகை செய்திருக்கக் காண் கிறேன். தடுப்புக்காவல் சட்டங்களை இயற்ற ஆவல் கொண்ட மாகாணங்கள் இந்த வழிவகையை வைத்திருக்கும்போது அரசமைப்புச் சட்டத்தில் அது இடம் பெறாமல் இருப்பதற்குக் காரணம் ஏதும் இருப்பதாக தனிப்பட்ட முறையில் நான் கருதவில்லை. ஆகவே உறுப்பு 15Aஇல் கூறு(3) க்குப் பிறகு பின்வரும் கூறினைச் சேர்க்க நான் அணியமாயிருக்கிறேன்:

> ''3.அ. இந்த உறுப்பின் கூறு (3) இன் உட்கூறு(ஆ) இன் படி எவர் ஒருவர் தொடர்பாகவும் ஓர் ஆணை பிறப்பிக்கப்படும் இடத்தே ஆணையைப் பிறப் பிக்கிற ஆணையம்...''

---

★ புள்ளிகள் மூலத்தில் காட்டப்பட்டவாறு குறுக்கீட்டைக் காட்டும்.

**பாபு ராம் நாராயண் சிங்:** அய்யா, மாகாணங்கள் இந்தக் கூறு சேர்க்கப்படுவதை விரும்புவதாக டாக்டர் அம்பேத்கர் கூறுகிறார்...

**திரு. அவைத் தலைவர்:** அவர் அப்படி எதுவும் சொல்ல வில்லை. தடுப்புக் காவலுக்காக மாகாணங்கள் இயற்றியுள்ள சட்டங் களில் பலவும் குறிப்பிட்ட சில வழிவகைகளைத் தம்மகத்தே கொண் டுள்ளன என்றுதான் அவர் கூறினார். அதேபோன்ற ஒரு வழிவகையை இந்த உறுப்பிலும் சேர்க்க அவர் விரும்புகிறார்.

**பாபு ராம் நாராயண் சிங்:** நாம் மாகாணங்களின் கட்டளைக் கிணங்க சட்டத்தை இயற்றிக் கொண்டிருக்கிறோமா என்பதை அறிய விரும்புகிறேன்.

**திரு. அவைத் தலைவர்:** அப்படி ஒன்றுமில்லை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** திரு.ராம் நாராயண் சிங் தாம் சார்ந்துள்ள மாகாண அரசிடம் சற்றே வருத்தமுற்றிருக்கக் காண்கிறேன்.

இந்த வழிவகை பின்வருபவற்றைச் செய்ய வேண்டும் என்று தான் சொல்லிக் கொண்டிருந்தேன்.

உறுப்பு 15A கூறு(3)க்குப் பிறகு பின்வரும் கூறு நுழைக்கப் படலாம்:

> ''(3அ) இந்த உறுப்பின் கூறு (3) இன் உட்கூறு (ஆ) இன்படி எவரொருவர் தொடர்பாகவும் ஆணை பிறப்பிக்கப்படும் இடத்து ஒரு ஆணை பிறப்பிக் கும் ஆணையமானது ஆணை பிறப்பிக்கப்பட்டதற்கான காரணங்களைக் கூடுமான விரைவில் அவருக்கு தெரிவிக்கும். ஆணைக்கெதிராக முறையீடு செய்துகொள்ள விரைவில் அவருக்கு வாய்ப்பு வழங்கும்.
>
> (ஆ) ''இந்த உறுப்பின் கூறு (3அ) இல் என்ன கூறப்பட்டிருப்பினும், கூறு (3) இன் உட்கூறு (ஆ) இன்படி ஆணை ஏதும் பிறப்பிக்கிற ஆணையம் சில உண்மைகளை வெளியிடுவது பொதுநலனுக்கு எதிரானது என்று கருதினால் அவற்றை வெளியிடத் தேவையில்லை.''

சரியாக இதே சொற்கள்தான் மாகாணங்களின் சட்டங்கள் சிலவற்றிலும் இடம்பெற்றுள்ளன. அவை இங்கு சேர்க்கப்படாமல் இருப்பதற்குக் காரணம் ஏதுமிருப்பதாக நான் கருதவில்லை. ஒருவரின் தடுப்புக்காவலின்கீழ் வருகிறது என்ற காரணத்தால் மட்டுமே, அவரைக் காவலில் வைப்பதற்கான காரணங்களை அவருக்குத் தெரி

விக்காமலேயே கூட அவரைக் காவலில் வைக்கிறோம் என்ற இந்தக் குற்ற விமர்சனத்துக்கு விடையாகவே நான் முன்மொழிந்துள்ள திருத்தம் அமைந்துள்ளது.

*அடுத்த கேள்வியானது ...★*

***மாண்புமிகு திரு.கே.சந்தானம்*** *(சென்னை:பொது): அது கூறு (1) இலிலுள்ள வழிவகையுடன் கூடுதலாகவா? தகவல் தெரிவிக் காமல் எவரொருவரையும் காவலில் வைக்கக்கூடாதென்ற ஒரு வழிவகை ஏற்கனவே இருக்கிறது.*

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** *அது தடுப்புக் காவ லுக்காக கைது செய்யப்படுபவர்கள் பற்றியதன்று.*

***மாண்புமிகு திரு.கே.சந்தானம்:*** *தடுப்பு நோக்கங்களுக்கா கைதுசெய்யப்படுகிறவர் அதில் அடங்க மாட்டாரா? கூறு (1) இல் ஒவ்வொரு வகையான காவலும் அடங்கும் என்று நான் கருதினேன்.*

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** *இல்லை. எப்படி யாயினும் நமது புரிதல் அதுவன்று. வழக்குகள் இரு இனங்களாகப் பிரிக்கப்படுகின்றன.*

***திரு. மகாவீர் தியாகி:*** *அவர் ஒரு வழக்கறிஞர்.*

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** *அது நீதிமன்றத்தில் தானே தவிர இங்கல்ல.*

***திரு. அவைத் தலைவர் :*** *அவர் ஒரு வழக்கறிஞர் அல்ல.*

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** *இப்படிச் சொன் னால் இன்னும் மிக நன்றாய் இருக்கும் என்று நினைக்கிறேன்: கூறுகள் (1), (2) ஆகியவற்றில் கூறப்பட்டுள்ள எதுவும் கூறு (3)க்குப் பொருந்தாது. அதுதான் நோக்கம். ஆகவே நான் அவர்களது குற்ற விமர்சனத்தின் அப்பகுதிக்கு விடையளித்து விட்டேன்.*

*இப்போது நான் வழக்கோ விசாரணையோ வழக்கு விசா ரணையோ இல்லாமல் மூன்று மாதக் காவல் என்ற பிரச்சினைக்கு*

★ புள்ளிகள் குறுக்கீட்டைக் காட்டும்.

வருகிறேன். அது 15 நாள்களுக்கு மேல் போகக்கூடாது என்று சில உறுப்பினர் சொல்லியுள்ளார்கள். மற்றவர்கள் வேறொரு கால அளவை யோசனையாக தெரிவித்துள்ளார்கள். மூன்று மாதங்கள் என்பது சகித்துக் கொள்ளக்கூடிய காலம் என்றும் 15 மாதம் அதிகப்படி யாகவே நீண்டகாலம் என்றும் நாம் கருதியதற்கு எவை சரியான காரணம் என்பதை நான் இந்த அவைக்குச் சொல்ல விரும்பு கிறேன். காவலில் வைக்கப்படுகிறவர்களின் வழக்குகள் கணிசமாய் இருக்கக்கூடும் என்று நம்மிடம் எடுத்துரைக்கப்பட்டது, இந்த நாட்டில் நிலைமை எவ்வாறு வளர்ந்துசெல்லும், அரசமைப்புச் சட்டம் செயலுக்கு வரும்போது என்ன நிலைமைகளுக்கு நாடு முகங் கொடுக்க வேண்டியிருக்கும், இந்த நாட்டில் மக்களும் கட்சிகளும் அதிகாரத்தைக் கைப்பற்றும் பிரச்சினையில் அரசமைப்புச் சட்ட வழியில் நடந்து கொள்ளவார்களா, அல்லது தங்கள் நோக்கங்களை நிறைவேற்றிக் கொள்வதற்காக அரசமைப்புக்குப் புறம்பான வழி முறைகளை நாடுவார்களா என்பது நமக்குத் தெரியாது. நாமனை வரும் நமது நோக்கத்தை அடைவதற்கு அரசமைப்புச்சட்ட வழி முறைகளை மட்டும் பின்பற்றுவோமானால் நிலைமை வேறாக இருந்திருக்கும் என்று நினைக்கிறேன். அனேகமாக தடுப்புக் காவ லுக்குரிய தேவையே இல்லாமற் போயிருக்கலாம்

ஆனால் சட்டத்தை இயற்றுகையில் நாம் கருத்தில் கொள்ள வேண்டியது படுமோசமானதைத் தானே தவிர ஆகச் சிறந்ததை அல்ல. ஆகவே இந்த நிலைமை, அதாவது பல கட்சிகளும் ஆட்களும் அரசமைப்புச் சட்ட வழிமுறைகளைப் பின்பற்றுவதற்குப் போதுமான பொறுமையற்றவர்களாக இருக்கலாம். இவர்கள் தங்கள் நோக் கத்தை அடைவதற்கு அவசரப்படுகிறவர்களாகவும் இதற்காக அர சமைப்புச் சட்டத்திற்குப் புறம்பான வழிமுறைகளை நாடுகிறவர் களாகவும் இருக்கிறார்கள் என்ற நிலையை அடிப்படையாகக் கொண் டால் ஏராளமானவர்களை நிர்வாகத்துறை காவலில் வைக்க வேண்டி யிருக்கலாம். ஏராளமானவர்களை அவர்களின் சட்ட விரோத நட வடிக்கைகளுக்காக காவலில் வைக்க வேண்டியிருக்கும் என்றும், அந்தத் துணைவிதியின் உட்கூறு (அ) இல் அடங்கியுள்ள வழிவகை களுக்கு நாம் செயல்வடிவம் கொடுக்க விரும்புகிறோம் என்றும் வைத்துக்கொண்டால் நிலைமை என்னவாகும்? காவலில் வைக்கப் பட்டிருக்கக்கூடிய ஒரு நூறு பேருக்கும் எதிராக வழக்குகளைத் தயாரிப்பதும், வக்காலத்து அணியமாக்குவதும், தகவல் அனைத்தை யும் திரட்டி அறிவுரைக் கழகத்திடம் சமர்ப்பிப்பதும் நிர்வாகத் துறைக்கு சாத்தியப்படுமா? இது நடைமுறைக்கு ஒத்துவருமா?

அறிவுரைக் கழகம் மூன்று மாதங்களுக்குள் இத்தனை வழக்குகளை யும் தீர்வுசெய்வது நடைமுறையில் சாத்தியமா? ஏனென்றால் துணை விதியின் உட்கூறு (அ) இல் அடங்கிய வழிவகைகள் ஒருவரை மூன்று மாதங்களுக்குமேல் காவலில் வைக்க விரும்பினால் அதற்கென அறிவுரைக் கழகத்திடமிருந்து ஓர் ஆணை பெறவேண்டும் என்ற அளவில் கட்டாயமானவை என்று நான் கூறுவேன்.

ஆகவே, இந்த பிரச்சினையிலுள்ள ஆட்சித்துறை தொடர்பான இடர்ப்பாடுகளைக் கருத்தில் கொண்டு வரைவுக்குழு மூன்று மாதங் கள் என்ற காலவரம்பை விதிப்பதன்மூலம் தேவைகளுக்கு ஈடுக் கொடுக்கப்படும் எனக் கருதியது. வரைவுக்குழு இந்தக் குறிப்பான காலவரம்பைக் குறித்துரைப்பதற்கு வேறு எந்த நோக்கமும் இல்லை; நான் சுட்டிக்காட்டியுள்ள உண்மைகளைக் கருத்தில் கொண்டு நம்மால் செய்யக்கூடிய அறிவுக்குகந்த நல்ல வழிவகை இதுவே என்பதை இந்தப் பேரவை ஏற்றுக்கொள்ளும் என நம்புகிறேன்.

இப்பாது நான் அறிவுரைக்கழகத்திற்கு வருகிறேன். இரு வாதங்கள் எழுப்பப்பட்டுள்ளன. ஒன்று, அறிவுரைக் கழகத்தின் நடை முறை என்ன என்பதாகும். உட்கூறு (அ) அறிவுரைக்கழகம் பின்பற்ற வேண்டிய நடைமுறையைத் திட்டவட்டமாகக் குறிப்பிடவில்லை. உட்கூறு(அ) இன்படி நிர்வாகத்துறை ஒருவரை தடுப்புக் காவலில் வைப்பதற்கு வழிவகுத்துள்ள வழக்குகள் தொடர்பான ஆவணங் களனைத்தையும் அறிவுரைக் கழகத்தின் பார்வைக்கு வைக்க வேண்டி யிருக்குமா என்று குறிப்பான வினாக்கள் கேட்கப்பட்டன.

அறிவுரை கழகத்திடம் முன்னிலையாவதற்கும், சாட்சிகளைக் குறுக்கு விசாரணை செய்வதற்கும், தானே வாக்குமூலம் கொடுப் பதற்கும் குற்றம் சாட்டப்பட்டவருக்கு உரிமையிருக்குமா என்ற குறிப்பான கேள்வியும் கேட்கப்பட்டுள்ளது. அறிவுரைக் கழகம் நடத்தவேண்டிய விசாரணையில் பின்பற்றவேண்டிய நடைமுறை குறித்து இந்த உட்கூறு (அ) மௌனமாயிருப்பது உண்மையே. இந்த உட்கூறு (அ) மேம்படுத்தப்படவில்லை. இப்படி இருந்து வருவ தாக வைத்துக்கொண்டால் என்ன விளைவுகள் ஏற்படும்? நான் படித்துப் புரிந்து கொண்டுள்ளபடி, ஆணைக்கு ஆதரவாக அறிக்கை யைப் பெறுவது ஒரு கட்டாய வழிவகையாகும்: நிர்வாகத்துறை ஒருவரை காவலில் வைத்து மூன்று மாதங்கள் முடிவடையும் நாளில் அறிவுரைக்கழகத்தின் பரிந்துரையைக் கையில் வைத்திருக்கவில்லை

என்றால் அவரை மூன்று மாதங்களுக்கு மேல் காவலில் வைப்பது சட்ட விரோதமாகும். ஆகவே நிர்வாகப் பொறுப்பு வகிக்கும் அரசினர் தங்களுக்குச் சான்றாக உள்ள ஆவணங்களை அறிவுரைக் கழகத்தின் பார்வைக்கு வைக்காதுபோனால் அவர்களுக்குக் கணிசமான இழப்பு ஏற்படும் வாய்ப்புண்டு. அதாவது ஒருவரை மூன்று மாதங்களுக்கு மேல் காவலில் வைக்கும் ஆணையுரிமையை அவர்கள் பறிக்கொடுத்து விடுவார்கள்.

ஆகவே அவர்களின் நலனுக்காகவே அது விரும்பத்தக்க தாகும். அரசாங்கம் சான்றாகக் கொண்டுள்ள ஆவணங்களை அறிவுரைக் கழகத்தின் பார்வைக்கு வைப்பது அவசியமெனக் கருது கிறேன். அவர்கள் அவ்வாறு செய்யாவிட்டால் தடுப்புக்காவல் சட்டத்தின் ஆட்சி பற்றிய பிரச்சினையில் அவர்கள் மிக மோசமான ஆபத்தை வரவழைத்துக் கொள்வார்கள். அறிவுரைக் கழகத்திடம் ஆவணங் களை முன்வைப்பது அதனளவிலேயே போதுமான பாதுகாப்பாகும் என்பது என் கணிப்பு.

என் நண்பர்கள் இத்துடன் மனநிறைவு கொள்ளாவிட்டால் என்னிடம் வேறு ஒரு முன்மொழிவும் உள்ளது. அதாவது, கடைப் பிடிக்க வேண்டிய நடைமுறை தொடர்பாக உட்கூறு(அ) இலேயே திட்டவட்டமான வழிவகைகள் ஏதும் செய்யாமல் உட்கூறு (4) இன் முடிவில் பின்வரும் சொற்களைச் சேர்த்துக் கொள்ளலாம்:

'நாடாளுமன்றம் இந்த உறுப்பின் கூறு (3) க்கான துணைவிதி யின் கூறு (அ) இன்படி நடத்தப்படும் விசாரணையில் அறிவுரைக் கழகம் கடைப்பிடிக்க வேண்டிய நடைமுறையையும் குறித்துரைக் கலாம்.'' அறிவுரைக் கழகத்தால் பின்பற்றப்படக்கூடிய நடைமுறை தொடர்பாக வழிவகை செய்ய நாடாளுமன்றத்திற்கு அதிகாரமளிக்க நான் அணியமாயிருக்கிறேன். இது நிலைமையின் தேவைகளுக்கு ஈடுகொடுத்துவிடும் எனக் கருதுகிறேன்.

அய்யா, இவையே உறுப்பு 15A இன் வெவ்வேறு பகுதிகளுக்கு எதிராகவும் சுமத்தப்பட்டுள்ள குற்ற விமர்சனங்களுக்கு விடை யாக நான் செய்ய அணியமாய் உள்ள அனைத்துத் திருத்தங்களுமாகும்.

நான் இப்போது நானாவிதமான யோசனைகள் சிலவற்றைப் பற்றி விவாதிக்கப் போகிறேன்.

**திரு. ஜஸ்பத் ராய் கபூர்:** அனேகமாக அந்நிலையில் கூறு (2) க்கான துணைவிதியின் உட்பிரிவு (ஆ) ஒழிந்துவிடுமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** எதுவும் ஒழிந்து விடாது.

**டாக்டர் பக்ஷிதேக் சந்த்** (கிழக்கு பஞ்சாப்: பொது): காவலில் வைத்தற்கான காரணங்கள் பாதிக்கப்பட்டவருக்குத் தெரிவிக்கப் படும் என்றும் அவரது விளக்கம் பெறப்படும் என்றும் நீங்கள் ஏற்றுக் கொண்டுள்ளீர்கள்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** எழுத்து வடிவில் வாக்குமூலம் கொடுக்கவும் அவருக்கு வாய்ப்பளிக்கப்படும்.

**டாக்டர் பக்ஷி தேக் சந்த்:** நான் கவனப்படுத்திய மற்றொரு கருத்தையும் அதாவது சென்னை சட்டத்தில் உள்ளதுபோல் விளக்கம் அறிவுரைக் கழகத்தின் பார்வைக்கு வைக்கப்படும் என்பதையும் நீங்கள் ஏற்றுக்கொள்வீர்களா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஆவணங்களனைத்தும் அவர் முன் வைக்கப்படக்கூடும். நான் கூறுவது இதுதான்.

**டாக்டர் பக்ஷி தேக் சந்த்:** ஆவணங்களனைத்தும் அவர் முன் வைக்கப்படாமல் போகலாம். எனக்கு ஓரளவு அனுபவம் உள்ளது. இது சின்னஞ் சிறிய பிரச்சினை என்று அவர்கள் கூறுகிறார்கள். குறிப்பிட்டக் காலத்திற்குள் விளக்கமளிக்கும் வாய்ப்பை நீங்கள் அவருக்குத் தருவதாயிருந்தால் இந்த வழிவகையைச் சேர்க்க நீங்கள் தயங்குவது ஏன்? சென்னை சட்டத்தின் பிரிவு 3 உட்பிரிவு (1) இன் உட்கூறு (2) இல் விளக்கம் அறிவுரைக் கழகத்தின் பார்வைக்கு வைக்கப் படும் என்றொரு வழிவகை உள்ளது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் சொன்னதில் அது உட்கிடையாகவுள்ளது என்று கருதுகிறேன்.

**டாக்டர் பக்ஷி தேக் சந்த்:** ஏன் அதைத் தெளிவுபடுத்த வில்லை? அது பம்பாய் சட்டத்திலோ ஐக்கிய மாகாணங்கள் சட்டத் திலோ இடம்பெறவில்லை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் முன்பே சொன்னதுபோல் உட்கூறு (அ)படி அறிவுரைக் கழகத்திடம் ஆவணங்களைச் சமர்ப்பிப்பது தொடர்பான தேவைப்பாட்டில் குற்றம் சாட்டப்பட்டவரின் வாக்குமூலத்தைச் சமர்ப்பிப்பது உட்கிடையாகப் பொதிந்துள்ளது. அவ்வாறு இல்லாவிட்டால் நாடாளுமன்றம் சட்டம் கொண்டு நடைமுறையைக் குறித்துரைக்கலாம் என்று இப்போது மேலும் ஒரு வழிவகை செய்கிறேன்; அப்படிச் செய்துவிட்டால் இந்த ஆவணங்கள் அறிவுரைக்கழகத்திடம் சமர்ப்பிக்கப் படும் என்று நாடாளுமன்றம் திட்டவட்டமாக சொல்லிவிடலாம். இப்போது நான் இதற்குமேல் எந்தச் சலுகையும் காட்ட அண்ணியமாயில்லை.

**திரு. மகாவீர் தியாகி:** டாக்டர் அம்பேத்கர் தயவுசெய்து எனக்கு ஒரு மணித்துளி நேரம் அளிப்பாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இப்போதில்லை.

**திரு. மகாவீர் தியாகி:** நாடாளுமன்றமோ, மாகாணங்களோ இயற்றும் சட்டம் சொல்கிற முறையில் கூறு (4) இன்படி காவலில் வைக்கப்படுபவர்களுக்கு அவர்களது வழக்கை தீர்ப்பாயம் மறுஆய்வு செய்யும் நன்மை கிடைக்குமா?

அய்யா, கூறு (4) இன்படி நாடாளுமன்றம் இயற்றப்போகும் சட்டத்தின்படி காவலில் வைக்கப்பட இருப்பவர்களுக்கு அவர்களது வழக்கை முன்மொழியப்படும் தீர்ப்பாயம் மறு ஆய்வு செய்யும் உரிமை கிட்டுமா என்பதை நான் அறிந்துகொள்ள விரும்புகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** என்னவோ என் நண்பர் திரு.தியாகி தாமே ஒரு காவல் கைதியாக இருக்கப் போகிறோம் என்ற அச்சத்தில் ஆட்டிப்படைக்கப்படுவது போல் நடிக்கிறார். அதற்கான வாய்ப்பேதும் என் கண்ணில் தெரிவில்லை.

**திரு. மகாவீர் தியாகி:** நான் உங்கள் நிலையைப் பாதுகாக்கவே முயல்கிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இங்கு சொல்லப்பட்ட பலதரப்பட்ட யோசனைகளில் குறிப்பிட்ட சிலவற்றை இப்போது எடுத்துக் கொள்கிறேன்.

**பண்டித தாகூர் தாஸ் பர்கவா:** குறுக்கு விசாரணை மற்றும் சட்டப் பாதுகாப்பு தொடர்பான காப்புக்கூறுகளின் நிலை என்ன?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** குறுக்கு விசாரணைக்கான உரிமை முன்பே குற்றவியல் நடைமுறைச் சட்டத்திலும் சாட்சிய சட்டத்திலும் இருக்கிறது. ஒரு மாகாண அரசு ஒரேடியாக மூர்க்க வெறிகொண்டு இந்த வழிவகைகளை ஒழித்துக் கட்டவில்லை என்றால், அத்தகைய வழிவகை ஏதும் செய்யத் தேவையில்லை. சட்டப் பாதுகாப்பு என்பதில் குறுக்கு விசாரணையும் அடங்கும்.

**பண்டித தாகூர் தாஸ் பர்கவா:** அவர்கள் இந்த அளவுக்கு அதிகாரத்தைத் தட்டிப் பறிக்கவும்கூட முயல்கிறார்கள்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** இந்தியாவில் குறுக்கு விசாரணைக்கான உரிமை பறித்துக் கொள்ளப்பட்டதற்கு இந்தியாவில் ஒரே ஓர் எடுத்துக்காட்டையாவது உங்களால் அளிக்க முடியுமானால் என்னால் அதைப் புரிந்து கொள்ள முடியும். நான் இப்படி எதுவும் நிகழக் கண்டதில்லை.

அய்யா, அதிகப்பட்ச தண்டனை என்ற பிரச்சினை எழுப்பப் பட்டுள்ளது. அதிகப்பட்ச தண்டனை நிர்ணயிக்கப்படுவதை விரும்பு கிறவர்கள் தயவுசெய்து கூறு (4) இன் வழிவகைகளைப் படித்துப் பார்க்கட்டும். இப்படிப்பட்ட ஒரு சட்டத்தை இயற்றுகையில் நாடாளு மன்றம் அதிகப்பட்ச காலத்தையும் நிர்ணயம் செய்யும் என்று அங்கு திட்டவட்டமாகக் கூறப்பட்டுள்ளது.

**பண்டித ஹிருதய் நாத் குன்ஸ்ரு:** நாடாளுமன்றம் அப்படிச் 'செய்யலாம்' என்பதுதான் சொல்லப்பட்டிருக்கும் வார்த்தை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** 'செய்யலாம்' என்றால் செய்யும்.'

**பண்டித ஹிருதய் நாத் குன்ஸ்ரு:** நாடாளுமன்றம் அப்படிச் செய்யலாம் அல்லது செய்யாமற் போகலாம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அது உண்மைதான்; ஆனால், அது செய்யுமானால் அதிகபட்சத்தை நிர்ணயம் செய்யும்.

எழுப்பப்பட்ட மற்றொரு கேள்வி காவல் கைதிகளையும் தம் குடும்பத்தினரையும் பராமரிப்பது தொடர்பானதாகும்.

**திரு.ஜஸ்பத்ராய் கபூர்:** காலவட்ட மறு ஆய்வுகளின் நிலை என்ன?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** நான் அதற்கும் வருகிறேன். அதை நாம் அரசமைப்புச் சட்டத்திலேயே சேர்க்க முடியாது. எடுத்துக்காட்டாக அது சில வழக்குகளில் அதற்குத் தேவைப் படலாம். மற்ற வழக்குகளில் தேவைப்படாமல் போகலாம். மேலும் கூறு (4) ஆனது பராமரிப்பு வழங்கப்படும் என்று வழிவகை செய் வதற்கும் நாடாளுமன்றத்திற்கு அதிகாரமளிக்கிறது.

என்னைப் பொறுத்தவரை பராமரிப்பு வழங்குவதற்கு ஆதர வான வாதம் வலுவற்றதாகும் என்று கருதுகிறேன். ஒருவர் உண்மை யில் அரசின் அடித்தளங்களுக்கே குழிப் பறிக்கிறார் என்றால், அதற்காக கைது செய்யப்படுகிறார் என்றால் அவர் சிறையில் இருக் கும்போது உணவுபெறும் உரிமை அவருக்கு இருக்கலாம்; ஆனால் பராமரிப்பு கேட்க அவருக்கு உரிமையில்லை. ஆயினும் கருணைக் கொடையாக நாடாளுமன்றமும் சட்டமன்றம் வழிவகை செய்ய லாம். கூறு (4) இன்படி நாடாளுமன்றம் இயற்றக்கூடிய எந்தவொரு சட்டத்தின்படியும் இப்படிப்பட்ட ஒரு வழிவகை சாத்தியமே எனக் கருதுகிறேன்.

காவல் கைதிகளின் வழக்குகள் மீதான மறு ஆய்வைப் பொறுத்தவரை, அங்கேயும் மாகாண அரசுகள் தமது சட்டத்திலேயே காலவட்ட மறு ஆய்வுக்கு வழிவகை செய்வதோ அல்லது நாடாளு மன்றமே அதற்கு வழிவகை செய்திட கூறு (4) இன்படி ஒரு சட்டம் இயற்றுவதோ ஏன் சாத்தியமாகக்கூடாது என்று எனக்குத் தெரிய வில்லை. இது முற்ற முழுக்க ஒரு நிர்வாகச் செய்தி, இதனைச் சட்டத் தால் ஒழுங்குபடுத்த முடியும் எனக் கருதுகிறேன்.

நான் ஒரு நாளும் சிறைப்பட்டதில்லை என்பதால் காவல் கைதிகளின்பால் எனக்கு உண்மையில் அதிக பரிவுணர்ச்சி இல்லை என்று என் நண்பர் திரு. அனந்த சயனம் அய்யங்கார் கூறினார்; சென்ற அமைச்சரவையில் யாரேனும் மறுஆய்வு தொடர்பான ஒரு விதியைச் சேர்க்க காரணகர்த்தா என்றால் அது நானேதான் என்று

என்னால் அவருக்குச் சொல்ல முடியும். அமைச்சரவையில் ஒரு பெரும்பகுதியினர் அதை எதிர்த்தனர். நானும் அமைச்சரவையின் ஐரோப்பிய உறுப்பிரனாகிய மற்றொருவரும்தான் அதனைப் போராடிப் பெற்றோம்.

ஆகவே சுதந்திரத்திற்காகவும் தன்னுரிமைக்காகவும் பரிவுணர்ச்சி கொள்ள சிறைக்குச் சொல்ல வேண்டிய அவசியமில்லை.

அடுத்து என் நண்பர் திரு. காமத் எழுப்பிய மற்றொரு கேள்வியும் உள்ளது. தடுப்புக் காவல் வழக்குகளில் குற்றம் சாட்டப்பட்டவரின் நன்மைக்காக உயர்நீதிமன்றங்கள் பேராணைகள் பிறப்பிக்க முடியுமா என்று அவர் என்னைக் கேட்டார். நிலை இதுதான் என்பது கண்கூடு. எந்தவொரு வழக்கிலும் ஆட்கொணர்வு பேராணை கோரப்படலாம், பிறப்பிக்கவும்படலாம். ஆனால் மற்றப்பேராணைகள் வெவ்வேறான ஒவ்வொருவரின் நிலைமைகளையும் பொறுத்தவை. ஏனென்றால் ஆட்கொணர்வுப் பேராணையின் நோக்கம் வரம்புக்குட்பட்ட ஒன்று. எவர் ஒருவரும் சட்டப்படி கைது செய்யப்பட்டுள்ளாரா, அல்லது அவர் நிர்வாகத்துறையின் விருப்பு வெறுப்பால் மட்டுமே கைது செய்யப்பட்டுள்ளாரா என்பதை நீதிமன்றம் கண்டறிவதே அதன் வரம்பாகும். ஒருவர் ஏதோ ஒரு சட்டத்தின்படி கைது செயயப்பட்டிருப்பதாக உயர்நீதிமன்றம் மனநிறைவு அடைந்துவிட்டாலே போதும். ஆட்கொணர்வு வழக்கு முடிவுக்கு வந்துவிடும். அவர் எந்த சட்டத்தின்படியும் கைது செய்யப்படவில்லை என்றால் பாதிக்கப்பட்ட தரப்பினர் அநீதியைச் சரி செய்வதற்குத் தேவையும் பொருத்தமாயிருக்கக் கூடிய வேறு எந்த நீதிப் பேராணையையும் கேட்கலாம். திரு. காமத் அவர்களுக்கு என் விடை இதுவே.

அய்யா, நான் முன்மொழிந்துள்ள திருத்தங்களுடன் உறுப்பு 15Aயை இந்தப் பேரவை ஏற்றுக்கொள்ளும் நிலையில் இருக்கும் என்று நம்புகிறேன்.

**திரு. அவைத் தலைவர்:** நான் இப்போது திருத்தங்களை வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அவை அனைத்தும் விலக்கிக் கொள்ளப்படலாம்.

***திரு.நசிருதீன் அகமது*** *(மேற்கு வங்காளம்: பொது): புதிய கூறுகள் இப்போதுதான் சேர்க்கப்பட்டுள்ளன. அவற்றை இப்போது வாக்கெடுப்புக்கு விடுவீர்களா?*

***திரு. அவைத் தலைவர்:*** *ஆம் இப்போதே.*

★ ★ ★

[1]***திரு. அவைத் தலைவர்:*** *பிரச்சினை இதுதான்:*

*"மேற்கண்ட திருத்த எண் I இல், முன்மொழியப்படும் புதிய உறுப்பு 15A கூறு(1) இல் 'அவர் விரும்பித் தெரிவு செய்யும் வழக்கறிஞர்' என்ற சொற்களுக்குப் பதிலாக 'எல்லா குற்றவியல் சட்ட நடவடிக்கைகளிலும் வழக்கு விசாரணைகளிலும் அவர் விரும்பித் தெரிவுசெய்யும் வழக்கறிஞரின் சட்டப் பாதுகாப்பைப் பெறுதல்' என்ற சொற்களை இடம்பெறச் செய்யலாம்."*

*(திருத்தம் மறுதலிக்கப்பட்டது.)*

***திரு. அவைத் தலைவர்:*** *அடுத்து எண் 7.*

***திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி:*** *டாக்டர் அம்பேத்கர் இத்திருத்தத்தின் ஒரு பகுதியை ஏற்றுக்கொண்டுள்ளார். அதை வாக்கெடுப்புக்கு விடத் தேவையில்லை. அது நிராகரிக்கப்படுமானால் பிறகு டாக்டர் அம்பேத்கரால் அதன் ஒரு பகுதியை ஏற்றுக்கொள்ள இயலாமற் போகும்.*

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:*** *என்னுடையவை பிறவற்றைச் சாராமல் தனித்தியங்கும் திருத்தங்களாகும்.*

★ ★ ★

[2]***திரு. அவைத் தலைவர்:*** *நேற்று நாம் முன்மொழிந்த திருத்தங்கள் எல்லாம் இவ்வளவுதான் என்று நினைக்கிறேன். டாக்டர் அம்பேத்கர் இன்று சில திருத்தங்களை முன்மொழிந்துள்ளார்; நான் அவற்றை இப்போது வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.*

*(ஆறு திருத்தங்கள் நிராகரிக்கப்பட்டன.)*

*(பின்வரும் திருத்தங்கள் ஏற்றுக்கொள்ளப்பட்டன.)*

---

*1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர் 16, பக். 1570.*

*2. மேற்படி அதே நூல், பக். 1570 - 1571.*

''உறுப்பு 15A கூறு (1) இல் 'கலந்த பேச' என்ற சொற்களுக்குப் பிறகு 'மற்றும் சட்டப் பாதுகாப்பு பெற' என்ற சொற்களை நுழைக்கலாம்.''

''உறுப்பு 15A கூறு (3) இல் 'இந்த உறுப்பில் என்ன கூறபட்டிருப்பினும்' என்ற சொற்களுக்குப் பதிலாக இந்த உறுப்பின் கூறுகள் 1, 2 ஆகியவற்றில் என்ன கூறப்பட்டிருப்பினும் என்ற சொற்களையும் அடைப்புக் குறிகளையும் எண்களையும் இடம்பெறச் செய்யலாம்.''

உறுப்பு 15A கூறு (3) க்குப் பிறகு பின்வரும் கூறுகளை நுழைக்கலாம்:

''(3 அ) இந்த உறுப்பின் கூறு (3) உட்கூறு ஆ இன்படி எவரொருவர் தொடர்பாகவும் ஆணை பிறப்பிக்கப்படுகிற இடத்தே ஓர் ஆணையைப் பிறப் பிக்கிற இடத்தே ஓர் ஆணையைப் பிறப்பிக்கற ஆணையமானது ஆணை பிறப்பிக்கப்பட்டதற்கான காரணங்களைக் கூடுமான விரைவில் அவருக்குத் தெரிவித்து, அந்த ஆணைக்கெதிராக முறையீடு செய்துகொள்ள ஆக விரை வில் அவருக்கு வாய்ப்பளிக்க வேண்டும்.

'(3ஆ) இந்த உறுப்பின் கூறு (3 அ) இல் என்ன கூறப்பட்டிருப்பினும் இந்த உறுப்பின் கூறு (3) உட்கூறு (ஆ) இன்படி ஆணையேதும் பிறப்பிக்கும் ஆணைய மானது சில உண்மைகளை வெளியிடுவது பொதுநலனுக்கு எதிரானது என்று கருதுமானால் அந்த உண்மைகளை வெளியிடத் தேவையில்லை.''

''உறுப்பு 15Aஇன் கூறு (4) இன் முடிவில் பின்வருவதைச் சேர்த்துக்கொள்ள லாம்:

''மேலும் இந்த உறுப்பின் கூறு (3) க்கான துணைவிதியின் கூறு (அ) இன்படி நடைபெறும் விசாரணையில் அறிவுரைக் கழகம் பின்பற்ற வேண்டிய நடை முறையையும் நாடாளுமன்றம் சட்டம் கொண்டு குறித்துரைக்கலாம்.''

திருத்தப்பட்ட வடிவத்தில் உறுப்பு 15A அரசமைப்புச் சட்டத்தால் சேர்க்கப்பட்டது.

**திரு. அவைத் தலைவர்:** டாக்டர் பக்ஷி தேக் சந்தின் திருத்தத்தை வாக்கெடுப்புக்கு விட மறந்துவிட்டமைக்காக வருந்துகிறேன். அது தேவையற்றதுதான். டாக்டர் அம்பேத்கரின் திருத்தங்களே அதையும் கவனித்துக் கொள்ளும்.

## உறுப்பு 209A

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அய்யா, நான் முன்மொழிவது:

''உறுப்பு 209க்குப் பிறகு பகுதி VIஇன் அத்தியாயங்கள் VIIக் கும் இடையில் பின்வருவதை நுழைக்கலாம்:

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949, செப். 16, பக்.1570 - 71.

## ''அத்தியாயம் VIII

### கீழமை நீதிமன்றங்கள்

*மாவட்ட நீதிபதிகள் அமர்த்தம்.*

209A. 1. எந்தவொரு மாநிலத்திலும் மாவட்ட நீதிபதிகளை அமர்த்துவதும் அவர்களுக்குப் பணியிடம் குறிப்பதும் பதவி உயர்வு அளிப்பதும்

அந்த மாநிலம் தொடர்பாக மேலுரிமை செலுத்துகிற உயர் நீதிமன்றத்துடன் கலந்துபேசி அம்மாநில ஆளுநரால் செய்யப்படும்.

2. இதற்கு முன்பு ஒன்றியப் பணியிலோ மாநில அரசுப் பணியிலோ இல்லாத ஒருவர் மட்டுமே மாவட்ட நீதிபதியாக அமர்த்தப்படுவதற்குத் தேர்வு தகவு உடையவராக இருப்பார். அவரை இப்பதவியில் அமர்த்த வேண்டுமானால் அவர் ஏழாண்டுக்குக் குறையாமல் வழக்கறிஞராகவோ வழக்குரைஞராகவோ இருந்திருக்கவும் இப்பதவியில் அமர்த்தப்படுவதற்கு உயர்நீதிமன்றத்தால் பரிந்துரைக்கப்படவும் வேண்டும்.

*மாவட்டநீதிபதிகள் அல்லாதவர்களை நீதித்துறைப் பணிக்கு தேர்வு செய்தல்.*

209 B. ஒரு மாநிலத்தின் நீதித்துறைப் பணிக்கு மாவட்ட நீதிபதிகள் அல்லாதவர்களை அமர்த்துவது ஆளுநரால் செய்யப்படும்; அவர் இதற்கெனத் தம்மால் வகுக்கப்பட்ட விதிகளுக்கு ஏற்ப, மாநில அரசுப்பணி தேர்வாணையத்துடனும் உயர்நீதிமன்றத்துடனும் கலந்து பேசிய பிறகு இதைச் செய்வார்.

*கீழமை நீதிமன்றங்கள் மீதான கட்டுப்பாடு*

209 C. ஒரு மாநிலத்தின் நீதித்துறைச் சார்ந்த பணியைச் சேர்ந்தவர்களும் மாவட்ட நீதிபதவிக்குக் கீழான எப்பதவியும் வகிப்பவர்களுமான ஆட்களுக்குப் பணியிடம் குறித்தல், பதவி உயர்வு அளித்தல், விடுப்பு வழங்குதல், கீழமை நீதிமன்றங்கள் மீதான கட்டுப்பாடு உட்பட மாவட்ட நீதிமன்றங்கள் மீதும், அவற்றுக்குக் கீழமைந்த நீதிமன்றங்கள் மீதுமான கட்டுப்பாடு உயர்நீதிமன்றத்தின் பொறுப்பில் இருக்கும்; ஆனால் இந்த உறுப்பில் கூறப்பட்டுள்ள எதுவும் இப்படிப்பட்ட எவரிடமிருந்து அவரது பணி நிலைமைகளை ஒழுங்குமுறைப்படுத்துகிற சட்டத்தின்படி அவருக்கு இருக்கக்கூடிய மேல்முறையீட்டு உரிமையை பறித்துக் கொள்வதாகவோ, அல்லது அச்சட்டத்தின் படி குறித்துரைக் கப்பட்ட அவரது பணிநிலைமைகளுக்கு ஏற்ப அல்லாமல் வேறுவகையில் அவரைக் கையாள உயர்நீதிமன்றத்திற்கு ஆணையுரிமையளிப்பதாகவோ கருதப்படக் கூடாது.

*பொருள் விளக்கங்கள்*

209 D. இந்த அத்தியாயத்தில் (அ) ''மாவட்ட நீதிபதி'' என்ற சொற்றொடரில் மாநகர உரிமையியல் நீதிமன்ற நீதிபதி, கூடுதல் மாவட்ட நீதிபதி, மாவட்ட இணை நீதிபதி, மாவட்ட உதவி நீதிபதி, சிறுதிற வழக்குகளுக்கான நீதிமன்றத்தின் தலைமை நீதிபதி, தலைமை மாநிலக் குற்றவியல் நடுவர், கூடுதல் தலைமை மாநிலக் குற்றவியல் நடுவர், அமர்வு நீதிபதி, கூடுதல் அமர்வு நீதிபதி, உதவி அமர்வு நீதிபதி ஆகியோர் அடங்கும்.

ஆ. நீதித்துறைப் பணி என்ற சொற்றொடர் மாவட்ட நீதிபதி பதவியையும் மாவட்ட நீதிபதி பதவிக்குக் கீழமைந்த ஏனைய உரிமையியல் நீதித்துறைப்

பதவிகளையும் நிரப்ப வேண்டிய ஆட்களை மட்டும் கொண்டமைந்த பணியை குறிப்பதாகும்.

இந்த அத்தியாயத்தின் வழிவகைகளை குறிப்பிட்ட சிலவகை குற்றவியல் நடுவர்களுக்குப் பொருந்தச் செய்தல்

209F. இந்த அத்தியாயத்தின் மேற்கண்ட வழிவகைகளும், அவற்றின்படி விதிகள் ஏதும் வகுக்கப்பட்டிருந்தால் அந்த விதிகளும் மாநிலத்தின் நீதித்துறைப் பணிக்கு அமர்த்தப்படுவோர் தொடர்பாக பொருந்துவது போலவே மாநிலத்தில் எந்த வகை அல்லது வகைகளைச் சேர்ந்த குற்றவியல் நடுவர்கள் தொடர்பாகவும் பொருந்தும் என்று ஆளுநர் பொது அறிவிக்கை கொண்டு கட்டளையிடலாம்; இந்தக் கட்டளை இதற்கென அவர் குறிக்கக்கூடிய நாளிலிருந்து செயலுக்கு வரும்; இதற்கான விதிவிலக்குகளையும், மாற்றங்களையும் அந்த அறிவிக்கையில் அவர் குறித்துரைக்கலாம்.''

அய்யா, இந்த வழிவகைகளின் நோக்கம் இருபடித்தானது; முதலாவது மாவட்ட நீதிபதிகளையும் கீழமை நீதிபதிகளையும் அமர்த்துவதற்கும் அவர்களின் தகுதிகளுக்கும் வழிவகை செய்வதாகும். இரண்டாவது நோக்கம், உரிமையியல் நீதித்துறை முழுவதையும் உயர்நீதிமன்றக் கட்டுப்பாட்டின் கீழ் வைப்பதாகும். உறுப்பு 209A, 209B, 209C ஆகிய உறுப்புகளில் அடங்கியுள்ள பொது வழிவகைகளிலிருந்து தவிர்க்கப்பட்டுள்ள ஒன்றே ஒன்று ஒரு குற்றவியல் நடுவர் பதவி தொடர்பானதாகும். இது உறுப்பு 209E இல் கையாளப்படுகிறது. உரிமையியல் நீதித்துறையில் உயர்நீதிமன்றம் பதவியமர்த்தம் செய்யவும் கட்டுப்பாடு செலுத்தவும் தொடர்பான வழிவகைகள் இந்த அரசமைப்புச் சட்டம் தொடங்கியவுடனேயே குற்றவியல் நடுவர் பதவிக்கும் பொருந்துமாறு செய்யப்படலாம் என்று இந்தப் பேரவைக்கு வரைவுக்குழு பரிந்துரைக்கும் நிலையில் இருக்குமானால் பெரிதும் மகிழ்ந்திருக்கும். ஆனால் குற்றவியல் நடுவர் பதவியானது ஆட்சியமைப்புடன் நெருங்கிய தொடர்புடையது என்பது உணரப்பட்டுள்ளது; உணரப்பட வேண்டும். நிர்வாகத் துறையிலிருந்து நீதித்துறையை பிரித்து வேறுபடுத்துவதற்காக இப்போது சில மாகாணங்கள் பரிசீலித்துவரும் முன்மொழிவுகள் ஏனைய மாகாணங்களாலும் ஏற்றுக்கொள்ளப் படுமென நாம் நம்புகிறோம். இதனால் உறுப்பு 209Eஇன் வழிவகைகளை நாம் உரிமையியல் நீதித்துறைக்கு பொருந்தச் செய்ய எண்ணியிருப்பது போலவே, குற்றவியல் நடுவர்களுக்கும் பொருந்தச் செய்யலாம். ஆனால் நீதித்துறையையும், நிர்வாகத் துறையையும் பிரித்து வேறுபடுத்தவதற்கான முன்மொழிவுகளைச் செயலாக்குவதற்கு சிறிது காலம் கழிந்திட அனுமதித்தாக வேண்டும். நீதித்துறையையும் நிர்வாகத் துறையையும் பிரித்து வேறுபடுத்துவதற்குப் பொருத்தமான மாற்றங்களை எந்த ஒரு மாகாணத்

திலும் செய்து முடித்தவுடனயே இந்தக் காரியத்தை ஆளுநர் பொது அறிவிக்கை கொண்டு செய்யட்டும் என்று விட்டுவிடுவதே சாலச் சிறந்தது என்று கருதப்பட்டது. இவ்வளவுதான் நான் சொல்ல வேண்டியதெனக் கருதுகிறேன். இதில் புரட்சி ஒன்றுமில்லை. 1935 ஆம் ஆண்டின் சட்டத்திலேயே கூட உரிமையியல் நீதித்துறையின் பதவி யமர்த்தமும், கட்டுப்பாடும் உயர் நீதிமன்றத்தின் பொறுப்பில் விடப் பட்டது. நாம் இந்த வரைவிலும் அதையே தொடருகிறோம் என்ப தற்கு மேல் ஒன்றுமில்லை.

[1]**திரு. ஆர்.கே. சித்வா:** (மத்திய மாகாணங்கள் மற்றும் பேரார்: பொது): அய்யா, தயவு கூர்ந்து நீங்கள் என்னை மீண்டும் அழைக்கக் கூடுமா? என் பெயரை அழைத்தபோது நான் கொஞ்சம் அலுவலகப் பணிக்காக வெளியே சென்றிருந்தேன். ஆனால் நான் முக்கியமான ஒரு திருத்தத்தை முன்மொழிய வேண்டியுள்ளது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அவையில் இல்லை என்பது சமாதானமாக முடியாது.

**திரு. அவைத் தலைவர்:** இப்போது காலம் கடந்துவிட்டதோ என்று அஞ்சுகிறேன்.

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** கடைசியாகப் பேசியவர் சொன்ன கருத்துக்களைப் பொறுத்தவரை, இந்த அத்தி யாயம் மாகாண அரசமைப்பின் பகுதியாக இருக்கும் என்று நான் கூற விரும்புகிறேன். பின் ஒரு கட்டத்தில் தனிவகை தகவமைத் தலின் வாயிலாக பகுதி IIIஇல் மாநிலங்கள் தொடர்பாகவுள்ள அந்தப் பகுதிக்குள் இந்த மொழி நடையைப் பின்ன முயலுவோம்.

இரு திருத்தங்கள் உள்ளன. ஒன்று திரு. சாலிகாவினுடையது; மற்றொன்று பண்டித குன்ஸ்ருவினுடையது. இவை குறித்து கொஞ்சம் விளக்கம் தரவேண்டும்.

திரு. சாலிகா முன்மொழிந்த திருத்தத்தைப் பொறுத்தவரை அதனை ஏற்றுக்கொள்ள முடியாமைக்கு வருந்துகிறேன். காரணங்கள்

---

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப்டெம்பர்16, பக். 1575.
2. மேற்படி அதே நூல், பக். 1578-79.

இரண்டு. முதலாவதாக அவர் தமது திருத்தத்தைக் கொண்டு செய்ய விரும்புவது போன்று நாம் சட்டம் கொண்டு எவ்வகையான மாகாண வாதத்தையும் அறிமுகப்படுத்த விரும்பவில்லை. இரண் டாவதாக அவரது திருத்தத்தை ஏற்றுக்கொள்வது மாகாணத்துக்கே கூட இடர்ப் பாடுகளை உண்டாக்கலாம். ஏனென்றால் தக்க வழக்குரைஞர் கிடைக்காமற் போகலாம். ஒரு வழக்குறைஞர் செய்நுட்ப நோக்கில் தகுதிகள் பெற்றிருக்கலாம். ஆனால் சாரத்தில் உயர்நீதி மன்றத்திற்கு அமர்த்தப்பட பொருந்தாதவராயிருக்கலாம். இவ்விதம் அமர்த்தப் படுகிறவருக்கு தகுதி இருக்க வேண்டும் என்ற ஒரே நிபந்தனையோடு இந்த அமர்த்தத்தை செய்யும் ஆணையத்திற்கு களத்தை முழுமை யாகத் திறந்து வைப்பதே மிகவும் நன்றென கருதுகிறேன். ஆகவே என்னால் அந்த திருத்தத்தை ஏற்றுக்கொள்ள முடியாது.

என் நண்பர் பண்டித குன்ஸ்ருவின் திருத்தம் ஒரு மிகச் சிறிய பிரச்சினையையே எழுப்புகிறது என்பதே என் கணிப்பாகும்; அந்தப் பிரச்சினை இதுதான்: மாவட்ட நீதிபதிகளுக்குப் பணியிடம் குறிப் பதும் பதவி உயர்வு அளிப்பதும் ஆளுநரிடம், அதாவது அன்றைய அரசாங்கத்திடம் இருக்க வேண்டுமா? அல்லது 209C இன்படி உயர் நீதிமன்றத்திற்கு மாற்றப்படவேண்டுமா? நிற்க, 1935 ஆம் ஆண்டின் இந்திய அரசாங்கச் சட்டத்தில் நீதிபதியை அமர்த்துவதும், அவருக்கு பணியிடம் குறிப்பதும்,பதவிஉயர்வு அளிப்பதும் முழுக்க முழுக்க ஆளுநரின் கையில் இருந்தது. மாவட்ட நீதிபதியை அமர்த்துவதிலும், அவருக்குப் பணியிடம் குறிப்பதிலும், உயர்வு அளிப்பதிலும், உயர் நீதிமன்றத்திற்கு இடமே இல்லாதிருந்தது. இந்திய அரசாங்கச் சட் டத்தின் அந்த வழிவகையை நாம் கணிசமாக மாற்றியமைத்திருப் பதை என் நண்பர் திரு.குன்ஸ்ரு காண்பார்; ஏனென்றால் மாவட்ட நீதிபதிகளை அமர்த்துவதும் அவர்களுக்குப் பணியிடம் குறிப்பதும், பதவி உயர்வு அளிப்பதுமான பிரச்சினையில் உயர்நீதிமன்றங்களைக் கலந்து கொள்ள வேண்டும் என்ற நிபந்தனையை நாம் சேர்த்துள் ளோம். ஆகவே ஒரே ஒரு வேறுபாடு இதுதான்: மாவட்ட நீதிபதி அல்லாத சார்நிலை நீதித்துறைப் பணியின் பணியிடக் குறிப்பு, பதவிஉயர்வு, விடுப்பு முதலானவற்றில் நாம் தர எண்ணியுள்ள முற்றான மேலுரிமை உயர்நீதிமன்றத்திற்கு இருக்கவேண்டுமா? அல்லது இந்த பிரச்சினைகளில் மாவட்ட நீதிபதி உள்பட சார்நிலை நீதிபதிகள் அனைவர் மீதும் உயர்நீதிமன்றத்திற்கு மேலுரிமை இருக்க வேண்டுமா? நாம் செய்துள்ள சமரசம் சாலப்பொருத்தமானது என்று எனக்குத் தோன்றுகிறது. இறுதியாகப் பார்த்தால் ஒரே

வேறுபாடு இப்படி இருக்கும்: சார்நிலை நீதிபதிகளைப் பொறுத்த வரை பணியிடக் குறிப்பு, பதவி உயர்வு, விடுப்பு வழங்கல் தொடர்பான எந்த அறிவிப்பும் உயர்நீதிமன்றத்திலிருந்து வரும் அதேபோது மாவட்ட நீதிபதியைப் பொறுத்தவரை இப்படிப்பட்ட எந்த அறிவிப்பும் தலைமைச் செயலகத்திலிருந்து வெளியிடப்படும். அடிப் படையிலும் சாரத்திலும் வேறுபாடே இல்லை. கலந்து பேசுவது கட்டாயமாக் கப்பட்டிருப்பதால் மாவட்ட நீதிபதிக்கு உயர்நீதிமன்றத் தின் பாதுகாப்பு இருக்கும்; அதுவே நிலைமையின் தேவைகளை நிறைவு செய்திட வேண்டும் எனக் கருதுகிறேன்.

## உறுப்பு 215

[1]***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** நான் சொல் வதற்கு ஒன்றுமில்லை, அய்யா.

***சர்தார் ஹுக்கம் சிங்:*** அய்யா, நான் முன்மொழிவதற்கு திருத்தம் ஒன்றுமில்லை. இந்த உறுப்பின் கூறு(2) குறித்து எனக்கு ஒரு மறுப்புள்ளது. இதனை வரைவுக்குழுத் தலைவரின் கவனத் திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். இதன் சொல்லாட்சி நாடாளு மன்றத்தின் இறையாண்மைக்கு இழுக்கு தேடுவதாக எனக்குத் தோன்றுகிறது. முடிந்தால் சொற்களை மாற்றும்படி அவரைக் கேட்டுக்கொள்வேன்.

... நான் வரைவுக்குழுத் தலைவரின் கவனத்திற்கு இதைக் கொண்டுவர விரும்புகிறேன், அவ்வளவுதான்.

***திரு. அவைத் தலைவர்:*** பத்தி 2 தொடர்பாக சர்தார் ஹுக்கம் சிங் சில யோசனைகள் தெரிவித்துள்ளார். நாடாளுமன்றம் இயற்றிய எந்த சட்டத்தையும் குடியரசுத் தலைவர் நீக்கம் அல்லது திருத்தம் செய்வார் என்று கூறுவது நாடாளுமன்றத்தின் ஆணையுரிமைக்கு இழுக்காகும் என்றும், நாடாளுமன்றத்தின் அதிகாரத்தை எவ்வகை யிலும் கீழ்ப்படுத்தவில்லை என்று காட்டும் முகத்தான் சொற்களைத் திருத்தியமைக்க வேண்டுமென்றும் அவர் கூறுகிறார்.

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** அது அப்படித் தான். இது ஒரு வகை தகவமைத்தலாகும். அசாமின் தன்னாட்சி

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, பக். 1581 - 82.

மாவட்டங்களைப் பொறுத்தவரை அசாமின் ஆளுநர் பொருந்தும் எனக் கருதுகின்றபோது நாடாளுமன்றம் இயற்றிடும் சட்டங்களைத் தகவமைக்க இதுபோன்ற அதிகாரம் பெற்றுள்ளார். நாடாளுமன்றம் இற்றிய முழு சட்டத்தையும் தனிச்சிறப்பாக அமைக்கப்பட்ட சில ஆட்சிப் பரப்புகளுக்கேற்ப தகவமைக்கவில்லை என்றால் அதனை அந்த பரப்புகளுக்குப் பொருந்தச் செய்ய முடியாது.

**சர்தார் ஹுக்கம் சிங்:** இதுபோதுமான விடைதானா அய்யா? நாடாளுமன்றம் இயற்றிய ஒரு சட்டத்தைக் குடியரசுத் தலைவர் நீக்கம் செய்வார் என்று சொல்வது நாடாளுமன்றத்தின் இறையாண்மைக்கு இழுக்காகும் என்பதே நான் தெரிவித்த கருத்து.

**திரு. அவைத் தலைவர்:** இந்தக் கருத்து ஒரு சொல் பற்றியதே தவிர அதிகாரம் பற்றியதல்லவே?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** குடியரசுத் தலைவர் நாடாளுமன்றத்தின் அங்கமே ஆவார். இடர்ப்பாடு ஒன்றுமே இல்லை.

**திரு. அவைத் தலைவர்:** நான் இப்போது திரு.பிரஜேஷ்வர் பிரசாத்தின் திருத்தத்தை வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

*(திருத்தம் மறுதலிக்கப்பட்டது. உறுப்பு 215 அரசமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.)*

## உறுப்பு 303

[1]**திரு. அவைத் தலைவர்:** உறுப்பு 303 . நாம் இப்போது உறுப்பு 303 இன் இலக்கண வரையறையை எடுத்துக்கொள்வோம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தலைவர் அவர்களே நான் முன்மொழிவது:

''உறுப்பு 303 கூறு (1) இன் உட்கூறு (இ) யை விட்டுவிடலாம்.''

* * *

முன்மொழிவு ஏற்றுக்கொள்ளப்பட்டது.

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, பக். 1583.

[1]***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** *(ஆ) தொடர்பாக நான் ஒன்றுமட்டும் சொல்ல விரும்புகிறேன். நாம் முதலில் முன்மொழிந்த இரு பகுதிகளை அரமைப்புச் சட்டத்திலிருந்து விட்டுவிட எண்ணியுள்ளோம். ஏனென்றால் இந்த இரு பகுதிகளிலும் குறிப்பிட்ட சில வகுப்புகளை அட்டவணைச் சாதிகள் என்றும், குறிப்பிட்ட அட்டவணை பழங்குடிகள் என்றும் பட்டியலிடப்பட்டிருந்ததானது, அரசமைப்புச் சட்டத்தை அதிகப்படியாகவே வில்லங்கப்படுத்துவதாகும் என்றும், இதனைக் குடியரசுத் தலைவரே ஆணைகொண்டு செய்யட்டும் என்று விட்டுவிடலாம் என்றும் நினைத்தோம். அதுவே நமது இப்போதைய முன்மொழிவு. இந்நிலையில் அட்டவணைச் சாதிகள் மற்றும் அட்டவணைப் பழங்குடிகள் பற்றிய இலக்கண வரையறை கூறுகளை அரசமைப்புச் சட்டத்தின் வேறொரு பகுதிக்கு மாற்றி, ஒரு திட்டவட்டமான உறுப்பில் அவர்களுக்கு வழிவகை செய்வது அவசியமாயிருக்கும் என்று எனக்குத் தோன்றுகிறது. அட்டவணைச் சாதியினர் யார், அட்டவணைப் பழங்குடியினர் யார் என்பதைக் குடியரசுத் தலைவர் வரையறுப்பார் என்று சொல்லிவிடலாம். இப்போது நிறுத்தி வைத்துக் கொள்ளப்பட்ட உறுப்பு 296, 299 தொடர்பாக பிரச்சினை எழுப்பப்பட்டிருப்பதாக எனக்குத் தோன்றுகிறது. (ஆ), (இ) கூறுகளில் குறிப்பிடப்படும் 'ஆங்லோ இந்தியர்' 'இந்திய கிருத்தவர்' ஆகியோர்களுக்கான இலக்கண வரையறையை அந்தக் கருத்துடன் கூடவே மறுபரிசீலனை செய்ய வேண்டியிருக்கலாம். இப்போதைக்கு அவற்றை நிறுத்தி வைத்துக் கொள்ளும்படி உங்களை வேண்டிக் கொள்கிறேன்.*

***திரு.வி.ஐ. முனிசாமிப் பிள்ளை*** *(சென்னை: பொது): அட்டவணைச் சாதிகள் இன்னப் பிறவற்றைப் பற்றிய பிரச்சினை முழுவதையும் நிறுத்தி வைத்துக் கொள்ளலாம்.*

***திரு. அவைத் தலைவர்:*** *கூறுகள் (ஆ), (இ) ஆகியவற்றின் பரிசீலனையை நிறுத்தி வைத்துக்கொள்ள அவை ஒப்புக்கொள்வதாக புரிந்து கொள்கிறேன்.*

*(ஆ, இ, ஆகிய உட்கூறுகள் நிறுத்தி வைத்துக்கொள்ளப் பட்டன.)*

---

*1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப். 16, பக் 1583 - 84.*

**திரு. அவைத் தலைவர்:** கூறு (ஈ)க்குத் திருத்தங்கள் ஒன்றுமில்லை.

பிரச்சினை இதுதான்:

'உட்கூறு ஈ ஏற்றுக்கொள்ளப்படலாம்.''

முன்மொழிவு ஏற்றுக்கொள்ளப்பட்டது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அய்யா, நான் முன்மொழிவது:

'உறுப்பு 305 கூறு(1) உட்கூறு (உ) நீக்கப்படலாம்.

**திரு. அவைத் தலைவர்:** இப்போது தலைமை நீதிபதி யாருமில்லை. சார்நிலை உயர்நீதிமன்றங்கள் இருப்பது வழக்கமாயிருந்தது. இவை தலைமை நீதிதமன்றங்கள் என்று அழைக்கப்பட்டன. இவற்றிற்குத் தலைமை நீதிபதிகள் இருப்பார்கள்.

* * *

திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

உறுப்பு 303 இலிருந்து கூறு (1) இன் உட்கூறு(உ) நீக்கப்பட்டது.

(திருத்தம் எண் 3219 முன்மொழிப்படவில்லை.)

**திரு. அவைத் தலைவர்:** அடுத்து (ஊ). இதற்குத் திருத்தம் ஒன்றுமில்லை. பிரச்சினை இதுதான்:

''கூறு (1) உட்கூறு (ஊ) உறுப்பு 303 இன் பகுதியாகவே இருந்து வரலாம்.''

முன்மொழிவு ஏற்றுக்கொள்ளப்பட்டது.

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அய்யா, நான் முன்மொழிவது:

''உறுப்பு 303 கூறு(1) உட்கூறு (அ)க்குப் பதிலாக பின்வரும் உட்கூறினை இடம்பெறச் செய்யலாம். அதாவது:-

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப். 16, பக் 1585 - 86.

''(எ)' 'உரிய மாகாணம்', 'உரிய இந்திய மாநிலம்' அல்லது 'உரிய மாநிலம்' என்பது அய்யம் எழக்கூடிய நேர்வுகளில் பிரச்சினைக்குரிய குறிப்பிட்ட நோக்கத்திற்கு நேர்வைப் பொறுத்து உரிய மாகாணம், உரிய இந்திய மாநிலம் அல்லது உரிய மாநிலம் என்று குடியரசுத் தலைவரால் நிர்ணயிக்கப்படக் கூடிய மாகாணம், இந்திய மாநிலம் அல்லது மாநிலத்தைக் குறிப்பதாகும்.''

நாம் இந்திய மாநிலங்களை மட்டுமே சேர்த்துள்ளோம்.

**திரு. எச்.வி. காமத்:** 'மாநிலம்' என்பதற்கும் 'இந்திய மாநிலம்' என்பதற்கும் இடையிலான வேறுபாட்டை இன்னமும் நாம் தக்க வைத்துக் கொள்ளப் போகிறோமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** வேறுபாடு இது தான்: மாநிலம் என்பது இப்போது ஒன்றியத்தின் அங்கமாக உள்ள ஒரு பகுதியைக் குறிப்பதாகும். இந்திய மாநிலம் என்பது ஒன்றியத் துக்கு வெளியே இருந்தாலும் ஒன்றியத்தின் மேலாதிக்கம் அல்லது கட்டுப்பாட்டின் கீழ் இருக்கிற மாநிலத்தைக் குறிப்பதாகும்.

**திரு. ஆர்.கே. சித்வா:** இப்போது மைய அரசால் நிர்வகிக்கப் படும் கட்ச் மாநிலம் ஓர் 'இந்திய மாநிலமா'? இதேபோல் போபாலும்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** இந்திய மாநிலம் என்பது பின்னொரு கட்டத்தில் வரையறுக்கப்படுகிறது.

**திரு. அவைத் தலைவர்:** இந்திய மாநிலம் என்பதற்கு ஓர் இலக்கண வரையறை பிற்பாடு திருத்தம் எண் 140இல் தரப்படுகிறது.

**திரு.டி.டி.கிருஷ்ணமாச்சாரி:** உறுப்பினர்களின் உள்ளத் தில் கொஞ்சம் குழப்பமிருப்பதாகத் தெரிகிறது. ''உரிய மாகாணம்'', ''உரிய இந்திய மாநிலம்'' என்ற சொற்றொடர்கள் அரசமைப்புச் சட்டம் தொடங்குவதற்கு முற்பட்ட காலத்துக்குரிய தொடர்களாகும். ''உரிய மாநிலம்'' என்ற தொடர் அரசமைப்புச் சட்டத்தின் தொடக் கத்திற்குப் பின் முளைக்கிறது. இரண்டுக்குமிடையிலான வேறுபாடு இது மட்டுமே. இது குறித்து இனி எவ்விதக் குழப்பமும் இருக்காது என்று நம்புகிறேன்.

*(டாக்டர் அம்பேத்கரின் திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது. திருத்தப்பட்ட வடிவில் கூறு (1) உட்கூறு(எ) உறுப்பு 303 உடன் சேர்க்கப்பட்டது.)*

**திரு. அவைத் தலைவர்:** அடுத்து (ஏ). இதற்குத் திருத்தம் ஒன்றுமில்லை.

*(கூறு (1) உட்கூறு (ஏ) உறுப்பு 303 உடன் சேர்க்கப்பட்டது.)*

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அய்யா நான் முன்மொழிவது:

> "உறுப்பு 303 கூறு(1) உட்கூறு (I) இல் 'ஆனால் ஐக்கிய முடியரசின் நாடாளு மன்றச் சட்டம் எதுவும் அல்லது இத்தகைய எந்தச் சட்டத்தின்படியும் பிறப்பிக்கப்படும் எந்த ஆணையும் இதில் அடங்காது' என்ற சொற்களை விட்டுவிடலாம்."

வணிகக் கப்பல் போக்குவரத்துச் சட்டம் போன்ற சட்டங்களை நாடாளுமன்றம் வேறுவிதமாக வழிவகை செய்யும் வரை தக்கவைத்துக் கொள்ள வேண்டியிருக்கக் கூடும்.

**திரு.எச்.வி.காமத்:** இந்த (1) என்பதைப் பொறுத்தவரை இலேசானதோர் இடைவெளி இருப்பது தெளிவாகத் தெரிகிறது. அது சட்டங்களையும் துணைச் சட்டங்களையும் பற்றிப் பேசுகிறது. ஆனால் 'விதி' மட்டுமே குறிப்பிடப்படுகிறது. 'துணைவிதி'யும் குறிப்பிடப்படவில்லையே, ஏன்?

**மாண்புமிகு திரு.கே.சந்தானம்:** இதற்கு நான் ஒரு திருத்தம் வைத்துள்ளேன்...

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஒரு சட்டம் செயலில் இருக்கிறதா இல்லையா என்பது பல்வேறு காரணங்களைப் பொறுத்தது. முதலாவதாக குறிப்பிட்ட சிலச் சட்டங்கள் செயல்படமாட்டா என்று இணைப்பே வழிவகை செய்திருக்கலாம். பரோடா என்று அறியப்படும் அந்தக் குறிப்பிட்ட ஆட்சிப் பரப்பு இணைக்கப்பட்டப் பிறகு பம்பாய் அரசு அப்பகுதிக்குரிய சட்டங்களைத் தக்கவைத்துக் கொள்ளலாம் அல்லது தன் சொந்தச் சட்டத்தால் அதனை ஒழித்துவிடக்கூடும். ஆகவே நடப்பிலுள்ள எந்தவொரு சட்டமும் என்றால் அரசமைப்புச் சட்டம் தொடங்கும் நாளில் செயலிலுள்ள சட்டம் என்று பொருள்.

**மாண்புமிகு திரு. கே. சந்தானம்:** நான் என் திருத்தத்தை வலியுறுத்தவில்லை.

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப். 26, பக். 1585 - 1586.

*(டாக்டர் அம்பேத்கரின் மேற்கண்ட திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது. திருத்தப்பட்ட வடிவில் கூறு(1) உட்கூறு (ஐ) உறுப்பு 303 உடன் சேர்க்கப்பட்டது.)*

**திரு. அவைத் தலைவர்:** அடுத்த (ஒ) இதற்கு திருத்தம் ஒன்று மில்லை. பிரச்சினை இதுதான்:

''கூறு(1) உட்கூறு (ஒ) உறுப்பு 303 இன் பகுதியாக இருக்கலாம்.''

''முன்மொழிவு ஏற்றுக்கொள்ளப்பட்டது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்;** அய்யா, நான் முன்மொழிவது:

''உறுப்பு 303 கூறு(1) உட்கூறு (ஒ) என்பதற்குப் பிறகு பின்வரும் உட்கூறு நுழைக்கப்படலாம்:

''(ஒ)(ஒ) 'அயல் அரசு' என்பது இந்தியா அல்லாத வேறு எந்த அரசையும் குறிப்பதாகும்; ஆனால் குடியரசுத்தலைவர் இதற்கென்று அறிவிக்கை செய்யும் அரசு இதில் அடங்காது''

**மாண்புமிகு திரு.கே. சந்தானம்:** இந்த உட்கூறு(ஒ, ஒ) என்பதன் பிற்பகுதிக்கு என்ன பொருள் என்பதை டாக்டர் அம்பேத்கர் அன்புடன் விளக்குவாரா? அதற்கு அவர் எடுத்துக்காட்டு தருவாரா?

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அய்யா, நிலை இதுதான்: 'இந்தியா'' என்ற சொல்லோடு நின்றுவிட்டால் சாதாரணமாக ஓர் அயல் அரசு என்ன குறிக்குமோ அதைக் குறிக்கும். ஒவ்வோர் அரசும் மற்றோர் அரசுக்கு அயல் அரசே. இலக்கண வரையறையின் முதல் பகுதியிலிருந்து இது தெட்டத் தெளிவாகிறது. ஆகவே இணக்கண வரையறையின் அந்தப் பகுதியோடு எந்தச் சச்சரவுமிருக்க முடியாது. உண்மையில் அந்த இலக்கண வரையறை தேவையில் லாமலே கூட போகலாம். ஆனால் நமது அரசமைப்புச் சட்டத்தின் ஏதோவொரு பகுதியில் 'அயல் அரசு'' என்ற சொற்களை நாம் பயன் படுத்தியிருக்கிறோம் என்ற உண்மையையும், ஓர் அயல் அரசு சொல் லுக்குரிய பொருளில் அயல் அரசாக இருந்தாலும் குறிப்பிட்ட சில நோக்கங்களுக்காக அயலரசு அல்லவென்று அறிவிக்க வேண்டிய அவசியம் ஏற்படலாம் என்ற உண்மையையும் கருத்தில் கொண்டு இந்த இலக்கண வரையறையை வைத்துக்கொள்வதும் குறிப்பிட்ட

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப். 16, பக். 1586.

சில நோக்கங்களுக்கு அவ்வகை அரசு அயலரசாக இருக்காது என்று அறிவித்திட குடியரசுத் தலைவருக்கு அதிகாரமளிப்பதும் அவசிய மாகும். மலேயாவை சிறந்த எடுத்துக்காட்டாகக் குறிப்பிடலாம் எனத் தெரிகிறது. ஆகவே ஓர் அரசு இந்தியாவுக்கு வெளியே இருக்கிறது என்ற பொருளில் அயலரசாக இருந்தபோதிலும் குறிப்பிட்ட சில நோக்கங்களுக்கு அயலரசாக கருதப்படாது என்று குடியரசுத் தலைவர் அறிவிக்கலாம் என்பதே உண்மையில் இதன் பொருளாகும். இதற் காகவே இந்த இலக்கண வரையறையைச் சேர்க்க முயலுகிறோம்.

**மாண்புமிகு திரு. சந்தானம்:** இந்த உட்கூறு குறிப்பிட்ட சில நோக்கங்களுக்காக அறிவிக்கை செய்திட குடியரசுத் தலைவருக்கு அதிகாரம் அளிக்கவில்லை. அது ஓர் இலக்கண வரையறை தருகிறது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** குடியரசுத் தலைவர் அறிவிக்கை வெளியிடும்போது இதைத் தக்கமுறையில் நினைவில் வைத்துக்கொள்வார் என்பதில் ஐயமில்லை.

***(மேலே காட்டிய வடிவில் டாக்டர் அம்பேத்கரின் திருத்தம் ஏற்றுக் கொள்ளப்பட்டது.)***



# சிறப்புப் பெயரகராதி

★ ★ ★

